**RAHMATH RAJAKUMARAN**







சூஃபியாக்கள்
இஸ்லாமும்ஜென்னும்
சற்குரு
சூஃபியாக்கள் பரிபாஷை
ஞானம்
சூஃபி வழித்தடம்
சற்குரு சகவாசம்
சூஃபிகளின் உலகம்
கராமத்
சூஃபி பார்வை

ரஹ்மத் ராஜகுமாரன்

بِسْمِ اللهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ


1. சூஃபியாக்கள் (2017) -------------------------- **14 - 33**

2. இஸ்லாமும் ஜென்னும் (2017) -------------------------- **34 -45**

3. சற்குரு (2018-1) -------------------------- **46 - 58**

4. சூஃபியாக்கள் பரிபாஷை(2019-3) -------------------------- **59 - 72**

5. ஞானம் (2020-2) -------------------------- **73 - 106**

6. சற்குரு சகவாசம் (2021-1) -------------------------- **107 -173**

7. சூஃபி வழித்தடம் (2021-2) -------------------------- **174 – 186**

8. சூஃபிகளின் உலகம் (2021-4) -------------------------- **187 -220**

9. கராமத் (2021-4) -------------------------- **221 - 280**

10. சூஃபி பார்வை (2022-3) -------------------------- **281 - 312**



சூஃபி : " என்னை நானே தேடிக் கொண்டிருக்கிறேன் "

---

"சூஃபி" என்ற வார்த்தை அரபி மொழியில் உள்ளது. இது, "சூஃபிஸம்" என்ற ஆங்கில வார்த்தையாகி உலகமெங்கும் பரவலாக பயன்படுத்தப்படுகிறது. அரபியில் "தஸவ்வுஃப்" என்ற சொல்லிலும் "சூஃப்" இருக்கிறது.

சூஃபித்துவத்தை பயிற்சிசெய்பவர்கள் 'சூஃபி' என்று அறியப்படுகின்றனர். சூஃபி என்ற அரபுச் சொல், ஆரம்பகால இஸ்லாமிய இறைநிலையாளர்கள் அணிந்த கம்பளி ஆடைகள்("சூப்") அல்லது கடினமான கருப்பு ஆடை என்பதிலிருந்து பெறப்பட்டிருக்கும் என வரலாற்று ஆசிரியர்கள் நம்புகின்றனர்

சூஃபிகளைப் பற்றி.." என் உம்மத்திலே உள்ள அறிஞர்கள் பனீ இஸ்ராயீல்களிடையே தோன்றிய நபிமார்களுக்கு இணையானவர்கள் " என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் .

"நீங்களெல்லாம் இறக்கக் கூடிய மனிதர்களிடமிருந்து அறிவை பெறுகின்றீர்கள். நாங்களோ பிறப்பு, இறப்பு இல்லா இறைவனிடமிருந்து அறிவை பெறுகின்றோம் " என்று
அபூ யாஸித் பிஸ்தாமீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள் .

இதன் காரணமாகவே பள்ளி சென்று ஒழுங்காகப் பயிலாத பலர் இறைவனால் 'இல்ஹாம் ' என்னும் உள்மனத் தூண்டல் என்னும் இறை உதிப்பு மூலம் அறிவு போதிக்கப்பட்டு, ஆன்மீகப் பேரரசர்களாக விளங்கினார்கள்.

இல்ஹாம் - உள்மனத்தூண்டல். இல்ஹாம் உள்ள ஒருவன் அறிவை வைத்துக் கொண்டு செயல்பட்டால் (அது தொடர்பான) புரியாத அறிவுகளையும் அல்லாஹ் சொல்லிக்கொடுப்பான் _ இது நபிகளாரின் வாக்கு.

ஒருவன் எதைப்பற்றி சிந்திக்கிறானோ, அந்த சிந்தனை அடிமனத்தில் இறங்கி, அவனுக்குத் தேவையான செய்தியை தேடிக்கொண்டிருக்கும். எப்போது accurate thought ஏற்படுகிறதோ அப்போது divine force அங்கு கலக்கும்,

அப்படி கலந்த பிறகு எதற்கான விடையைத் அவனுக்குள்ளேயே தேடிக் கொண்டிருக்கிறானோ அந்த விடை அவன் உள்ளத்திலிருந்து வெளிவரும். இதற்கு "இல்ஹாம்" – 'இறை உதிப்பு' என்றும் கூறப்படுகிறது.

"நான் ஞானத்தின் பட்டணம். அலீ அதன் தலைவாயில் " என்று நவின்று அலீ (ரலி) அவர்களை " தஸ்கியத்" என்ற கலையின் ஆசானாக அறிமுகம் செய்து வைத்தார்கள் நபிகளார்

அலீ (ரலி) அவர்களின் வழித் தோன்றல்கள் குறிப்பாக அசன் (ரலி) , ஹுஸைன் (ரலி) மற்றும் அவர்களின் சந்ததிகளின் வாயிலாக தஸ்கியத் என்னும் சூஃபிஸம் போதிக்கப்பட்டு வந்துள்ளது.

சூஃபிஸம் இஸ்லாத்தில் இல்லாததா ?
இந்தப் புத்தகத்தைப் படித்தப் பின் நீங்கள் சொல்லுங்கள்

சூஃபிஸம் என்பது ஒரு புதுமைக்குப் பெயரல்ல,
ஒதுங்கி நிற்பதற்கு

சூஃபிஸம் என்பது ஒரு பாவகாரியத்துக்குப் பெயரல்ல.
அதை விட்டும் விலகி ஓடுவதற்கு

சூஃபிஸம் என்பது எட்டாக்கனி அல்ல:
சீச்சீ இந்தப் பழம் புளிக்கும் என்று கூறுவதற்கு

சூஃபிஸம் என்பது அனைவரும் அவசியம் செயல்படுத்த வேண்டிய ஒரு அரும்பெரும் தவம்

சூஃபி வாழ்வு என்பது நீங்கள் வாழும் வாழ்க்கை அல்ல ; இனி நீங்கள் வாழப்போகும் வாழ்க்கை அது !

சூஃபித்துவம் என்பது மதம், இனம், மொழி கடந்த ஒரு வித பரிபாஷை என்றுதான் சொல்ல வேண்டும். அதை விளக்க முடியாது. கூடாது.

சுவாங்சு சொல்கிறார் : "தாவோவைப் பற்றி ஒருவர் கேள்வி எழுப்பவும், மற்றொருவர் பதில் அளிக்கவும் செய்வார்களேயானால், இருவருமே அதனை அறிந்தவர் இல்லை"

"நீங்கள் சாய்ந்து கொண்டிருப்பது நாற்காலி என்று நினைக்கிறீர்கள். ஆனால் அது இறைவனின் முதுகு என்பது உங்களுக்குத் தெரியவில்லை " - என்கிறார் அப்துல் வஹ்ஹாப் (ரஹ்) அவர்கள்..

மேற்கூறப்பட்ட தாவோவின் குறிப்புகளும், அப்துல் வஹ்ஹாப் (ரஹ்) அவர்களின் நாற்காலியும், ஒன்று ஹிந்து மதத்தின் அத்வைதத்துக்கும், பவுத்தத்தின் ஜென்னு மிக நெருக்கமாக வந்து சூஃபித்துவத்தை விவரிக்கிறது .

கடவுளை நெருங்க, கரைந்துருகிக் காணாமல் போகக் கணக்கற்ற பாதைகள் உள்ளன. சூஃபி வழி அவற்றுள் ஒன்று என்பது மட்டும் சூஃபித்துவம் போதிக்கிறது.

சூஃபித்துவத்தை பொட்டில் அடித்த மாதிரி சொல்ல முடியுமா என்றால் முடியாது .இது நம்பிக்கையின் ஆழம் சார்ந்த விஷயம்.

நம்பிக்கை என்பது நகர்ந்து கொண்டே இருப்பதாக ஜே.கிருஷ்ணமூர்த்தி குறிப்பிடுகிறார்.

' மரம் ' என்கிற வார்த்தை மரத்தைக் குறிப்பதுதானே தவிர அதுவே மரம் அல்ல என்கிறார் அதே ஜே. கிருஷ்ணமூர்த்தி

"நான் உள்ளே போனேன். என்னை வெளியே விட்டு விட்டு " -என்கிறார் ஒரு பாரசீக சூஃபி

சூஃபி அபூ பயாஸித் யஸீத் பிஸ்தாமி, ( கிபி 777 - 874 ) அவர்கள் கூறும்போது ,30 ஆண்டுகள் மௌனமாகவும் , நாற்பது ஆண்டுகள் ஒரு பள்ளிவாசலில் தங்கியும் ஆன்மீகப் பயிற்சி மேற்கொண்டேன் ,

"நான் 30 வருஷமாக இறைவனைத் தேடிக் கொண்டிருந்தேன். கடைசியில்தான் தெரிந்தது , தேடியது நானல்ல ; அவன்தான் என்று. தேடப்பட்டவன்தான் நான் "

இரவில் ஒருவர் பிஸ்தாமியின் வீட்டுக் கதவை தட்டினார் .

" யார் வேண்டும்?" - வீட்டுக்குள்ளிருந்து குரல் கொடுத்தார் பிஸ்தாமி.

" நான் பயாஸித் பிஸ்தாமியைத் தேடி வந்திருக்கிறேன் "

"கடந்த 30 வருஷமாக நானும் அவரைத்தான் தேடிக் கொண்டிருக்கிறேன் " என்றார் பிஸ்தாமி.

நண்பர்களே, உங்களுக்குள்ளேயே உங்களைத் தேடி கண்டெடுக்க இந்த சூஃபியாக்கள் பயிற்சியளிப்பார்கள் என்று நம்புகிறேன். அதுவரை என்னை நானே தேடிக் கொண்டிருக்கிறேன்.

ரஹ்மத் ராஜகுமாரன்

+919486909903 /// +919443446903

# சூஃபியிஸமும் ஓஷோவும்



சூஃபியாக்களின் வரலாற்றை பதிவுக்காக அதிகம் படிக்கும் போது அவர்கள் சொன்ன வாழ்வியல் தத்துவங்களை தனியாக டைரியில் குறிப்பெடுத்து எழுதி வருகிறேன் .

இன்று தற்செயலாக ஓஸோவை படிக்கும் போது நிறைய தத்துவங்களை சரளமாக சொல்லிக் கொண்டே போகிறார் .எனக்கு ஒரே ஆச்சரியம் அவர் சொன்ன தத்துவங்களில் அநேகம் இஸ்லாமிய சூஃபிகள் சொன்ன தத்துவங்களும் , ஜென் துறவிகள் மற்றும் இந்து ஞானிகள் சொன்னது என விரிந்து கொண்டே போகிறது .

இவரே சூஃபியிஸம் பற்றி நிறைய புத்தகம் வெளியிட்டிருக்கிறார் . இஸ்லாமியர் செய்ய வேண்டியதை ஓஸோ தனியாளாக செய்து முடித்திருக்கிறார் .

ஓஸோ பார்வையில் எல்லோரையும் ஞானிகளாகவே பார்த்தாரே அன்றி அவர்களை மதவாதிகளாக சித்தரிக்கவில்லை . இதனால் வாழ்வியல் தத்துவங்கள் இவருக்கு வலிய வந்து வசப்பட்டது .

நாம் சூஃபியாக்களின் நடத்தையில் ஷரீயத்தை தேடினோம் . சம்சாரிய வாழ்க்கையை விசாரணை செய்தோம்.

அவர்களின் அரை நிர்வாணத்தைப் பற்றி அவதூறாக பேசி தீர்த்தோம் இதனால் அவர்களுக்குள் ஒளிந்திருக்கும் இறைநேசத்தையும் அதனால் விளைந்த வாழ்வியல் தத்துவத்தையும் விளங்க தவறிவிட்டோம் .

நாம் பெற வேண்டிய தத்துவ விசாரணையை ஓஷோ போன்றவர்களால் மேன்மைப்படுத்தப்படுகிறது . நாம் இன்னும் சூஃபியாக்களை சந்தேகத்துடனே பார்த்துக் கொண்டிருக்கிறோம் .

ஓஷோவின் தத்துவங்கள்

"நான் இயற்கையிடம் முழுமையாக நம்பிக்கையுணர்வு கொண்டிருக்கிறேன். நான் கூறியதில் ஏதாவது உண்மை இருக்குமானால் அது அழியாமல் நிலைத்திருக்கும்." என்று சொன்னவர் தத்துவஞானி ஓஷோ. ஓஷோ சொன்ன சொற்கள் அழியாமல் கல்வெட்டுகள் பதிந்துவிட்டது. கடல் அலைகள் ஓயாமல் கரையை தொடுவதுபோல... ஓஷோவின் தத்துவங்கள் கோடிக்கணக்கான மக்களிடம் சென்று சேர்ந்து கொண்டே இருக்கின்றன.

1931-ம் ஆண்டு டிசம்பர் 11-ம் தேதி மத்தியப் பிரதேசத்தில் உள்ள குச்வாடா என்ற சிறிய கிராமத்தில் பிறந்தவர் ஓஷோ. சுதந்திரமாக வளர்ந்தவர். எதையும் எளிதில் கற்றார். பல தியான முறைகளை அறிந்தார். கல்லூரியில் சேர்ந்து தத்துவம் பயின்றார். பலரது எடக்கு மடக்கான கேள்விக்கும், புதிர்களுக்கும், வாழ்க்கையின் இன்ப துன்பங்களுக்கும் எளிமையான விளக்கம் கொடுத்தார். இன்று அவரது பிறந்தநாள்.

வாழ்வில் நீங்கள் எந்த நிலையிலும் இருக்கலாம், சந்தோஷமாக இருந்தாலும் சரி, ஏதாவது ஒரு பிரச்னையில் இருந்தாலும் சரி.... உங்களுக்கான ஒரு ஆரம்பமோ, தீர்வோ, முடிவோ, நம்பிக்கையோ ஓஷோவின் இந்த தத்துவ வார்த்தைகளில் அடங்கி இருக்கலாம். படியுங்கள். வாழ்வை கொண்டாடுங்கள்.

* 'நீங்கள் எந்த அளவு உயிர்ப்புடன் இருக்கிறீர்களோ, அந்த அளவுக்குத் தன்னை அறிய முடியும். நீங்கள் உயிர்ப்புடன் இல்லாவிடில், வாழ்க்கையை அறியவே முடியாது

* இதுவரை கேட்டது அனைத்தையும் மறந்துவிடு. உனது கோப்பையைக் காலியாக வைத்திரு!

* இருள் என்ற ஒன்று இல்லை. வெளிச்சத்தை எடுத்துச் செல், இருள் மறைந்துவிடும். இருள் இருக்கிறதா?

* மரத்துக்கு அருகில் செல்லுங்கள். யாரும் பார்க்காதபோது அதனுடன் பேசுங்கள்.மரத்தை தழுவிக் கொள்ளுங்கள். உங்களை நல்லவர் என்று அந்த மரம் உணரட்டும்!

* சிலவற்றைப் பார்க்கும்போது உங்களுக்கு அழகாய் தெரிகிறது. அப்படியானால் உங்களுக்குள் அழகு இருக்கிறது!

* ஒருவரது கண்ணைப் பார்க்கும்போது உங்கள் இதயத்தை உங்கள் கண்ணுக்குக் கொண்டு வாருங்கள்!

* அனைத்தையும் குழந்தையின் பார்வையில் பாருங்கள்- குழப்பம் இருக்காது!

* வாழ்க்கை தருவது யாவும் சரியானதே! வாழ்க்கை பறித்துக் கொள்வது யாவும் சரியானதே!

* அன்பு வெறுப்பு இல்லாமல் அமைந்திராது! நீ விரும்புகிற நபரையே தான் வெறுக்கவும் செய்வாய்.

* செருப்பு பொருந்தியதும் கால்களை மறந்துவிடுகிறோம்!

* என்ன செய்வது என்பது கேள்வி அல்ல! எதையும் எப்படிப் பார்ப்பது என்பதுதான் கேள்வி!

* எல்லா ஆணுக்குள்ளும் ஒரு பெண் இருக்கிறாள். எல்லா பெண்ணுக்குள்ளும் ஒரு ஆண் இருக்கிறான். ஏனென்றால் ஆணும் பெண்ணும் சேர்ந்து உருவாக்கியது தான் ஆணும் பெண்ணும்! இதில் ஆண் யார்? பெண் யார்?

* நண்பன் என்பவன் குறைந்த அளவு பகைமை கொண்டவன். பகைவன் என்பவன் குறைந்த அளவு நட்பு கொண்டவன்.

* பேசும்போது பயப்படாதீர்கள்! பயப்படும்போது பேசாதீர்கள்!

* எல்லாவித ஆனந்தங்களும் தற்காலிகமானதாக இருக்கும் போது தண்டனை மட்டும் எப்படி நிரந்தரமாக இருக்க முடியும்?

* ரசித்ததைப் பாராட்டாதவன் கலைக் கொலைகாரன்!

* உனக்காகப் பொய் சொல்பவன், உனக்கு எதிராகவும் பொய் சொல்வான்.

* நேராக வளரும் மரம் தான் முதலில் வெட்டப்படும்.

* உன்னை விட உயர்ந்தவர்கள் யாரும் இல்லை, அதேபோல உன்னை விட தாழ்ந்தவர்கள் யாரும் இல்லை என்பதை நீ ஏற்றுக் கொள்ளுதலே உண்மையான எழுச்சியாகும்.

* புத்திசாலியான மனிதன் மாறிக் கொண்டும், நகர்ந்து கொண்டும், ஆடிக் கொண்டும், வளர்ந்து கொண்டும் இருப்பான். அவனுக்கு வானம் கூட எல்லையாக முடியாது.

* தியானம் உன்னை உன்னுடைய உள்ளே இருக்கும் புனிதத்தலத்திற்கு கூட்டிச்செல்லும். நீ அங்கே கடவுளை காணலாம், வேறு எங்கும் காண முடியாது.

* பக்குவம் என்பது யாரையும் சாராதிருப்பது.

* குழந்தைகள் உங்களுடையவர்களல்ல, உங்கள் மூலம் வந்துள்ளவர்கள் அவ்வளவே.

* சமூகம், வாழ்வின் மூன்று முக்கிய விஷயங்களை அமுக்கப் பார்க்கிறது – அவை செக்ஸ், மரணம், வாழ்வின் பயனற்ற தன்மை.

* பாதுகாப்பாக இருப்பதாக நினைத்துக்கொள்ளும் மக்கள், அதிகம் உளறுகிறார்கள் – எந்தப் பயனுமற்ற இரைச்சல் இது.

* குடும்பம், நண்பர்கள், மகன், மகள் போன்ற எல்லாமே வெறும் வசதிகளே, பழக்கங்களே, ஊட்டப்பட்ட நம்பிக்கைகளே.

* நட்சத்திரங்கள், பாறைகள், நதிகள் என இவையாவும் உணர்வின்றி இருக்க முடியாது. உணர்வுதான் அவற்றின் வாழ்க்கையே. மனிதன் தலைகீழாகி விட்டான். மூளை முக்கியத்துவம் பெற்றுவிட்டது. மேலும் மூளை உணர்வை அடக்கிவைக்கிறது.

* உண்மையான சுதந்திரம் உன்னிடமிருந்து சுதந்திரமடைவதுதான்.

* நீங்கள் விழித்திருக்கிறீர்களா? வெற்றி உங்களுடையதே!

* கடவுளுக்குப் பிடித்தமானது சிரிப்பு! கடவுள் மகிழ்ச்சியாக இருப்பவர்களை நேசிக்கிறார்!

* நீங்கள் உறங்கி எழுந்த பின்னால் தான் தூங்கியதையே உணர்வீர்கள்

* நாக்கில் சொற்களின் சுவையை உணருங்கள்

* நீந்தப் பழகாதீர்கள்! மிதக்கப் பழகுங்கள்!

* துளி கடலில் இருக்கிறது! கடல் துளியில் இருக்கிறது!

* இரண்டு முயல்களை விரட்டினால் ஒன்றைக்கூடப் பிடிக்கமுடியாது!

* கொந்தளிப்பு இல்லாத கடல் திறமையான மாலுமியை உருவாக்குவது இல்லை!

* எப்போதும் வயிற்றைப் பற்றி மட்டுமே கவலைப்படுபவர்கள் தலையைப் பட்டினி போடுகிறார்கள்!

* திறமையான தச்சன் மரச்சாமான்கள் செய்யும் போது குறைந்த வெட்டுகளையே வெட்டுவான்

* இருவருக்கும் விருப்பம் இல்லாமல் சண்டை நடக்காது!

* சொல்லாதவற்றின் பாடலே கண்ணீர்!

* கணவனாக இரு; எப்போதும் கணவனாகவே இருக்காதே! தாயாக இரு; ஆனால் எப்போதும் தாயாகவே இருந்துவிடாதே!

* சிரித்த முகம் இல்லாதவன் சொந்தமாகக் கடை வைக்கக்கூடாது

* ஒரு மலை உச்சியில் ஏறி நின்றால்தான் இன்னொரு மலை உச்சியைப் பார்க்க முடியும்

* வாள் உறையை வெட்டாது

* நீ என்ன பூவாக வேண்டுமானாலும் இரு; ஆனால் பூக்க மறக்காதே!

கோவில் என்பது உண்மையில் ஒன்றே ஒன்றுதான். அது நீதான். நீ உனக்குள் செல்ல வேண்டும்.

* ஆசைப்பட்டால் இழப்பீர்கள்; ஆசைப்படாவிட்டால், அது உங்களுடையதே!

* எல்லாவற்றையும் ஓய்வாக எடுத்துக்கொள்ளுங்கள்.

* எல்லா நம்பிக்கைகளும் விஷம்போன்றது.

* உங்கள் சக்தி அனைத்துமே பாலுணர்வு சக்தியே. வெளிப்பாடுதான் வெவ்வேறு விதமாக இருக்கிறது.

* என்றாவது ஒருநாள் உன்னுள் அணு வெடித்து வெளிப்படல் நிகழ்ந்தே தீரும்.

ரஹ்மத் ராஜகுமாரன்

நந்தவனத்தில் ஓர் ஆண்டி...."




கடுவளி சித்தர் என்று ஒரு சித்தர் இருந்தார். அவர் பாடிய பாடல் இது.

"நந்தவனத்தில் ஓர் ஆண்டி - அவன்

நாலாறு மாதமாய்க் குயவனை வேண்டி

கொண்டு வந்தான் ஒரு தோண்டி - மெத்தக்

கூத்தாடிக் கூத்தாடிப் போட்டுடைத்தாண்டி"

இதற்குரிய விளக்கம் ?

மனித ஜீவன் ஓர் ஆண்டியாக இந்த பாடலில் உவமிக்கப் பட்டு இருக்கிறது. இங்கே படைப்புக்குரியவன் குயவன் என்று சொல்லப்பட்டு இருக்கிறான்.

ஜீவன் என்கின்ற ஆண்டி படைப்பிற்குரிய குயவனிடம் சென்று "நா + லாறு மாதமாய்க்" அதாவது பத்து மாதமாய் வேண்டிக்கொண்டதன் விளைவாக, படைப்பிற்குரிய குயவன் ஆண்டியிடம் உடல் என்கிற தோண்டியை ஒப்படைக்கிறான்.

நன்றாகப் புரிந்து கொள்ளுங்கள். ஜீவன் இறைவனிடம் வேண்டிக் கொண்டதன் விளைவாக, அதற்கு ஒரு உடலை இறைவன் உருவாக்கிக் கொடுக்கிறான். ஜீவன் இறைவனிடம் வேண்டிப்பெற்ற உடலுடன் மனிதனாக உலகத்தில் நடமாடத் தொடங்கிவிட்டது. இந்தத் தோண்டியை சரியான காரணத்திற்கு பயன்படுத்த வேண்டும் என்ற எண்ணத்தில் தான் குயவன் செய்து கொடுத்தான்.

தோண்டி கிடைத்தவுடன் ஆண்டி என்ன செய்தான்? கண் மண் தெரியாமல் கூத்தாடினான், தோண்டியை போட்டும் உடைத்தான், ஆகவே தோண்டி கொடுக்கப்பட்டதன் நோக்கம் நிறைவேற வில்லை, தோண்டியை தவறாக பயன்படுத்தி உடைத்து விடுகிறான் ஆண்டி.

ஆகவே, ஜீவாத்மா இறைவனிடம் வேண்டித்தான் இந்த உடலைப் பெற்று இருக்கிறது. அப்படிப் பெற்ற உடலை தவறான வழிகளில் பயன்படுத்தி விடுகிறார்களே என்ற கவலையினை வெளிப்படுத்துகின்றார் கடுவளி சித்தர் இந்தப்பாடலில்...!!

## ஆன்மா என்னும் புத்தகம் 06: மகிழ்ச்சியின் ரசவாதம்

என். கௌரி     Published: 31 May 2018 10:49 IST     Updated: 31 May 2018 10:49 IST




கஸாலி

கஸாலியின் முழுப்பெயர் அபூ ஹமித் முகம்மது இப்னு முகம்மது அல்-கஸாலி. இவர் 1058-ம் ஆண்டு தூஸ் நகரத்தில் (தற்போதைய வடக்கு ஈரான்) பிறந்தார். இவர் இஸ்லாமிய மார்க்கத்தின் தலைசிறந்த பாரசீக இறையியல் வல்லுநராகவும், சட்டவியல் வல்லுநராகவும், தத்துவ அறிஞராகவும் விளங்கினார். இவர் தனது சுயசரிதையான 'The Deliverance from Error' புத்தகத்தில் தான் சந்தித்த ஆன்மிக நெருக்கடிகளைப் பற்றி மனம் திறந்து பேசியிருக்கிறார். இஸ்லாம் மார்க்கத்தின் செல்வாக்கு மிகுந்த ஆளுமையாக அறியப்படுகிறார். 'இஸ்லாமின் சாட்சி' என்ற தனித்துவமான பட்டம் இவருக்கு வழங்கப்பட்டிருக்கிறது.

அல் கஸாலி, பாரசீகத்தைச் சேர்ந்த சிறந்த இஸ்லாமிய சிந்தனையாளர். பதினோராம் நூற்றாண்டில் வாழ்ந்த இவர், பாக்தாத்தின் நிஸாமையா கல்லூரியில் இஸ்லாமிய நீதி பரிபாலனத் துறையில் பேராசிரியராகப் பணியாற்றியவர். வாழ்வின் ஆழ்ந்த உண்மைகளைத் தேடுவதிலேயே அவர் தன் வாழ்க்கையின் பெரும்பாலான காலத்தைச் செலவிட்டார். "மனிதர்கள் நித்திரையில் இருக்கிறார்கள். இறப்பிலேயே அவர்கள் விழிப்படைகிறார்கள்" என்ற முகம்மது நபியின் வாக்கின்படி, அவர் தன் வாழ்வை அமைத்துகொண்டார்.

மதம், தத்துவம், உள்ளுணர்வு போன்ற அம்சங்களை அடிப்படையாக வைத்து அவர் வாழ்வின் ஆழ்ந்த உண்மைகளைத் தேடினார். தீவிரமான இந்தத் தேடல் அவருக்கு நரம்புத் தளர்ச்சியை அளித்தது. சில காலம் பேராசிரியர் பணியிலிருந்து விலகியிருந்தார். கிட்டத்தட்ட பத்து ஆண்டுகள் சிரியாவில் மெய்ஞானத்தைத் தேடித் தெளிந்தபிறகே மீண்டும் பேராசிரியர் பணிக்குத் திரும்பினார்.

இறைவனை நேரடியாக உணர்வதற்கான பாதையை அவர் தன் படைப்புகளின் வழியாகப் பதிவு செய்தார். அந்த வகையில் '**The Revival of the Religious Sciences'** என்ற அவரது ஆய்வுப் படைப்பு இஸ்லாமின் அரிய சொத்தாகக் கருதப்படுகிறது. இந்தப் படைப்பின் சுருக்கமான வடிவத்தைத் தான் பாரசீக மொழியில் 1105-ம் ஆண்டு, 'கிமியா-இ-சாதத்' **('The Alchemy of Happiness')** என்று எழுதி அவர் வெளியிட்டார்.

## இறையே மகிழ்ச்சி

'தி அல்கெமி ஆஃப் ஹேப்பினெஸ்' என்ற இந்தப் புத்தகத்தின் முதல் நான்கு அத்தியாயங்கள் முகம்மது நபிகளின் போதனைகளை விளக்குகிறது. இறையின் அருகில் இல்லாமல் உண்மையான மகிழ்ச்சியை அடைய முடியாது என்ற கருத்தை இந்தப் புத்தகம் வலியுறுத்துகிறது. இந்தப் புத்தகம் ஒன்பது நூற்றாண்டுகளாக இஸ்லாமிய மார்க்கத்தின் சிறந்த விழுமியங்களை அறிந்துகொள்வதற்கு உதவிவருகிறது. ஒரு சாமானிய மனிதனை 'விலங்கிலிருந்து தேவதை நிலைக்கு' உருமாற்றும் நான்கு அம்சங்களை கஸாலி இந்தப் புத்தகத்தில் விரிவாக அலசியிருக்கிறார். அவற்றை 'சுய அறிவு', 'இறை அறிவு', 'உலக அறிவு', 'மறுமை உலக அறிவு' என்று அவர் வகைப்படுத்துகிறார்.

## சுயத்தை அறிவதற்கான பாதை

நம்மைப் பற்றி சரியாகத் தெரிந்துகொள்ளாமல் நம்மால் எதையும் இந்த உலகத்தில் அடைய முடியாது என்ற எளிய உண்மையை இந்தப் புத்தகம் புரியவைக்கிறது. சுயத்தை அறிந்துகொள்வதற்கான திறவுகோலாக இதயம்தான் செயல்படுகிறது. அது வெறுமனே உடலின் இதயம் அல்ல. இறைவனால் வழங்கப் பட்ட இதயம் அது. "அது ஒரு யாத்ரீகன் அந்நிய நிலத்துக்குச் செல்வதைப்போல இந்த உலகுக்கு வருகிறது. மீண்டும் அது வந்த இடத்துக்கே திரும்பச் சென்றுவிடுகிறது" என்று சொல்கிறார் கஸாலி. ஆன்மாவின்மீது போதிய கவனம் செலுத்தாதவன் இந்த உலகம், அந்த உலகம் என இரண்டிலும் தோற்றுப்போகிறான். சுயத்தை அறிந்து விலங்கின் நிலையிலிருந்து உயர் விழிப்பு நிலைக்குத் தன்னை உயர்த்திக்கொள்பவன் மகிழ்ச்சியின் சுய ரசவாதத்தை அனுபவிக்கிறான்.

## இறை அறிவுக்கான பாதை

மனிதர்கள் இந்தப் பூமியில் தாங்கள் படைக்கப்பட்டதற்கான காரணத்தைத் தேடுவதற்கு மறுக்கிறார்கள். "மனிதன் வெறுமனே இருந்த காலம் அவனுக்கு ஒருபோதும் நினைவுக்கே வராதா?" திரு குர் ஆனின் வரிகளை மேற்கோள்காட்டுகிறார் கஸாலி. மனிதர்கள் வாழ்க்கையில் சந்திக்கும் மனக்குறைகள் அவர்களை இறைவனின் அருகில் அழைத்துவருவதாக விளக்குகிறார் அவர்.

## உலக அறிவுக்கான பாதை

மனித உடலை குதிரையுடனும், ஒட்டகத்துடனும் ஒப்பிடுகிறார் கஸாலி. ஆன்மா தன் வாழ்க்கைப் பாதையை உடலைப் பயன்படுத்திக் கடப்பதாகத் தெரிவிக்கிறார். மெக்கா புனித யாத்திரைக்குச் செல்லும் பயணி எப்படித் தன் ஒட்டகத்தைப் பாதுகாப்பானோ, அப்படி ஆன்மா தன் உடலைப் பாதுகாக்க வேண்டும். அதேநேரத்தில், அந்தப் பயணி ஒட்டகத்தையே கவனித்துகொண்டிருந்தால், அந்தப் பயணம் தோல்வியில்தான் முடியும். இறைவனைவிட்டு விலகும் பெரிய முடிவைப் பெரும்பாலான மக்கள் எடுப்பதில்லை. ஆனால், அற்பமான விஷயங்களில் அவர்களுக்கு இருக்கும் நாட்டம், கொஞ்சம் கொஞ்சமாக அவர்களை இறைவனைவிட்டு விலகச் செய்கிறது.

## மறுமை உலக அறிவுக்கான பாதை

குர்ஆனின் கூற்றுபடி, ஆன்மாக்களின் விருப்பத்தை மீறி சிறந்த அறிவையும் அனுபவத்தையும் பெறுவதற்காக பூமிக்கு அனுப்பிவைக்கப்படுகின்றன. அவை பூமிக்கு வருவதற்கு அச்சப்படவோ, பீதியடையவோ தேவையில்லை என்று அதற்குச் சொல்லப்படுகிறது. எப்படி வாழ வேண்டும் என்ற இறைவனின் வழிகாட்டுதலுக்காக ஆன்மாக்கள் காத்திருந்தாலே போதுமானது. "நம்பிக்கையற்றவர்களையே நரகம் சூழ்கிறது" என்ற குர் ஆன் வரிகளை நினைவில் வைக்கச் சொல்கிறார் கஸாலி.

1909-ம் ஆண்டு இந்துஸ்தானி மொழிபெயர்ப்பாளர் கிளவுட் ஃபீல்ட் இந்தப் புத்தகத்தை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார். அப்படித்தான் இந்தப் புத்தகம் மேற்கு உலகத்துக்கு அறிமுகமானது. பிரபல சூபி கவிஞர் ரூமி, கஸாலியின் 'The Revival of the Religious Sciences' படைப்பிலிருந்து பல நீதிக்கதைகளைத் தன் 'மஸ்னவி' படைப்பில் பயன்படுத்தியிருக்கிறார்.

"ஓர் அந்நிய நிலத்துக்கு வந்திருக்கும் யாத்ரீகர்கள்" என்பதை நாம் அறிந்துகொள்வது அவசியம். அனைத்து பொருட்களும் பிறக்கும் நித்தியமான இயல் கடந்த நிலைக்குத் திரும்பும் நீண்ட பயணத்துக்கான விருப்பும் இருந்தால் போதும்; மனித வாழ்க்கையில் அமைதியைக் கண்டடையலாம் என்று இந்தப் புத்தகத்தில் அழுத்தமாகப் பதிவு செய்திருக்கிறார் கஸாலி.

**Jawber Sadhik**

தமிழ் மொழிபெயர்ப்பு உண்டா

**Rahmath Rajakumaran**

இருக்கிறது "கிமியா

இ_ சாதத் " பேரின்ப ரஸவாதம்

(ஆர். பி .எம் கனி) என்று நினைக்கிறேன்

## இரவு என்பது ஆன்மீகத்தின் நேரம்



இரவு என்பது ஆன்மீகத்தின் நேரம்
இரவு முழு வளிமண்டலத்திலும் ஒரு மாற்றத்தைக் குறிக்கிறது.
பகலை விட இரவில் தியானம் செய்வது எளிது. தியானம் வேறு எந்த செயலையும் விட தூக்கத்திற்கு மிக நெருக்கமாக உள்ளது, ஒரே ஒரு வித்தியாசம்: தூக்கத்தில் நீங்கள் மயக்கமடைகிறீர்கள், தியானத்தில் நீங்கள் விழிப்புடன் இருக்கிறீர்கள்,
ஆனால் அதே தளர்வுடன். பகலில் தூங்குவது கடினம்; பகலில் நீங்கள் தூங்க விரும்பினால், நீங்கள் கதவுகளையும் ஜன்னல்களையும் மூடிவிட்டு அனைத்து திரைகளையும் இழுக்க வேண்டும், அதனால் அது இருட்டாகிவிடும். சூரிய உதயங்கள் வந்தால் அவை உங்களை தூங்க அனுமதிக்காது; சூரிய உதயங்கள் உங்கள் ஆற்றலை செயல்படுத்துகின்றன. இரவு ஓய்வெடுக்க உங்களுக்கு உதவுகிறது. இது ஆன்மீகத்தின் நேரம்.
இறை நேசர்கள்,ஞானிகள் தியானத்திற்கு இரவு நேரத்தை அதிகமாக பயன்படுத்த வேண்டும். நீங்கள் ஆழமாகவும் எளிதாகவும் செல்லலாம், ஏனென்றால் காற்று அந்த வழியில் வீசுகிறது; நீங்கள் குறைந்த முயற்சியுடன் காற்றோடு நகரலாம்.
பகலில் நீங்கள் காற்றுக்கு எதிராக நகர்கிறீர்கள். பகலில் செயல் தியானம் நல்லது; டைனமிக் தியானம் பகலில் நல்லது, நடனதியானம் பகலில் நல்லது. ஆனால் இரவு விபாசனத்தில், அமைதியான தியானங்கள், உட்கார்ந்து ஒன்றும் செய்யாமல், நிதானமாக இருப்பதால் முழு வளிமண்டலமும் ஓய்வெடுக்கிறது .... சூரியன் மறைந்துவிட்டது, மரங்கள் தூங்கிவிட்டன; இது இரவில் உங்களைச் சுற்றியுள்ள ஆற்றலின் முற்றிலும் மாறுபட்ட தரம். தியானம் செய்வது எளிது.

மாறி மாறி வரும் பகலையும் இரவையும் மாறா இறைவன் படைத்த காரணத்தைப் பகர்கிறது இகபர வழிகாட்டி குர்ஆனின் 25- 62 ஆவது வசனம். "அல்லாஹ் நல்லுபதேசம் பெறுவதற்கும் அல்லது நன்றி செலுத்துவதை நாடுபவர்களுக்கும் இரவையும் பகலையும் ஒன்றன் பின் ஒன்றாக வருமாறு ஆக்கினான்''
இறைவன் இரவையும் பகலையும் ஒன்றன்பின் ஒன்றாக வருமாறு ஏற்படுத்தியதற்கு எத்தனையோ காரணங்கள் உண்டு. ஆனால் ஒருவர் பகலில் செய்வதாக உறுதி செய்த செயலைச் செய்ய தவறினால் அதனை இரவில் நிறைவேற்றவும், இரவில் தவறினால் பகலில் நிறைவேற்ற வசதியாக இந்த ஏற்பாடு என்று இந்த வசனத்திற்கு விளக்கம் அளிக்கின்றனர் விரிவுரையாளர்கள்.
நபி தோழர் உமர் (ரலி) அவர்கள் ஓரிரவில் திருக்குர்ஆன் ஓதுவது தடைபட்டது. இனிய நபி (ஸல்) அவர்கள் இறைமறை குர்ஆனின் இவ்வசனத்தை ஓதி, உமர் (ரலி) அவர்களை இரவில் விடுபட்ட வணக்க வழிபாடுகளைப் பகலிலும், பகலில் தவறியதை இரவிலும் நிறைவேற்ற பணித்தார்கள்.
அல்லாஹ் இரவை உங்களுக்கு ஆடையாகவும் தூக்கத்தைச் சுகமாகவும் ஆக்கினான். பகலை உழைப்பதற்கு எழுவதற்காக ஆக்கினான்'' என்ற திருக்குர்ஆனின் 25-47 ஆவது வசனம் இரவு சுகமாக உறங்குவதற்குரியது என்று கூற இரவில் சுகமான தூக்கத்தைத் துறந்து இறை வணக்கத்தில் ஈடுபடுபவர்கள் இறை நேசர்களாகின்றனர் என்பதை எழில்மறை குர்ஆனின் 25-64 ஆவது வசனம் ""தங்களின் இறைவனுக்கு சஜ்தா (தொழுகை) செய்தவர்களாகவும் அல்லாஹ்வின் வழிபாட்டில் நின்றவர்களாகவும் இரவைக் கழிப்பவர்கள்'' என்று கூறுகிறது.
ஸமீதுப்னு முசய்யப், புலைல் இப்னு இயால், அபூ சுலைமான் தாராணி, ஹபீபுல் அஜ்மி, மாலிக் இப்னு தீனார், ராபியத்துல் அதபியா போன்ற இறை நேசர்கள் இரவில் தூங்காமல் முன்னிரவு இஷா தொழுகைக்கு ஒலு (சுத்தம்) செய்து வைகறை சுபுஹு தொழுகை வரை இரவு முழுவதும் இறை வணக்கத்தில் ஈடுபடுவார்கள்.
பஸராவில் வாழ்ந்த இமாம் முஹம்மது இப்னு சிரீன் (ரஹ்) அவர்களின் சகோதரி ஹம்ஸ் குர்ஆனில் பாதியை ஓரிரவில் ஓதி தொழுவார்கள். சில சமயங்களில் விளக்கு அணைந்தாலும், அவர்கள் தொழுது முடிக்கும் வரை அதாவது விடியும் வரை வீட்டில் ஒளி வீசும். அப் பெண்மணி இளைஞர்களுக்கு இரவில் ஆட்டுப்பால் கறக்கும் அளவிற்குரிய சில நிமிடங்களேனும் எழுந்து வணங்குங்கள் என்று அறிவுறுத்தினார்கள்.
தாவூது நபி அவர்களின் மகன் சுலைமான் நபி அவர்களுக்கு இரவில் தூக்கத்தை அதிகமாக்குவது மறுமையில் மனிதனை ஏழையாக்கிவிடும் என்று எச்சரித்தார்கள். இரவில் குறைவாக தூங்குபவர்கள் இரவை அழகாக்குவதாக அறிவிக்கிறது அருமறை குர்ஆனின் 51- 17 வசனம்.
மதீனாவிலுள்ள மஸ்ஜிதுன் நபவியிலிருந்து இரண்டு மைல் தொலைவில் உள்ள கூபா பகுதிக்கு ஒரு மணி நேரம் நடக்க வேண்டும். இரவு தொழுகையை முடித்து கூபாவிற்குச் சென்றவர்கள் வைகறை சுபுஹு தொழுகைக்கு தொழுகை அழைப்பிற்கு (பாங்கு) ஒரு மணி நேரம் முன்னதாகவே நடந்து வந்ததையும் இந்த வசனம் குறிப்பிடுகிறது.
கண்ணிய குர்ஆன் இவ்வுலகிற்கு முதன் முதலாக இறக்கப்பட்டது புண்ணிய லைலத்துல் கத்ர் இரவில் என்பதை இறைமறை குர்ஆனின் 44-3 ஆவது 97-1 ஆவது வசனங்கள் உறுதிபடுத்த 97- 3 ஆவது வசனம் அந்த இரவு ஆயிரம் மாதங்களை விட மேலானது என்று மேன்மைப்படுத்துகிறது.
ஒவ்வோர் இரவிலும் கடைசி மூன்றிலொரு பாகத்தில் என்னிடம் கேட்பவரின் வேண்டலை ஏற்கிறேன் என்று அல்லாஹ் அறிவிப்பதாக அண்ணல் நபி (ஸல்) அவர்கள் மொழிந்ததை வழி மொழிபவர்- அபூஹீரைரா (ரலி) நூல்- புகாரி. மாநபி (ஸல்) அவர்களின் இம்மணிமொழி இறை வணக்கத்திற்கும் இறை வேட்டலுக்கும் முறையான நேரம் இரவின் பிற்பகுதி என்பதைத் தெளிவாக்குகிறது.
முஹம்மது நபி (ஸல்) அவர்கள் முன்னிரவில் தூங்கி பின்னிரவில் எழுந்து தொழுததையும் இருகால் பாதங்கள் வீங்கும் வரை இரவில் நின்று தொழுததையும் அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிப்பது புகாரி, முஸ்லிம் நூற்களில் பதிவாகியுள்ளது.
ஒருமுறை இரவில் மகள் பாத்திமா (ரலி) அவர்களின் வீட்டிற்கு வந்த வள்ளல் நபி (ஸல்) அவர்கள் மகளையும் மருமகன் அலி (ரலி) அவர்களையும் இரவில் நபில் (கூடுதல்) தொழுகையை தொழுமாறு பணித்ததைப் பகர்கிறார்கள் அலி (ரலி) நூல் -புகாரி, முஸ்லிம்.
அண்ணல் நபி (ஸல்) அவர்களின் அறிவுரைப்படி அபிதுல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் இரவில் குறைவாக தூங்கி அதிகமாக நபில் தொழுததை அவர்களின் மகன் ஸம்லிம் (ரலி) அறிவிப்பது புகாரி முஸ்லிம் நூற்களில் உள்ளது.
சில இரவுகளில் மட்டும் தொழுது பின் விட்டு விடுவது கூடாது என்றும் விட்டு விடாது தொடர்ந்து தொழ வேண்டும் என்று ஏந்தல் நபி (ஸல்) அவர்கள் ஏவியதை எடுத்துரைப்பவர் அப்துல்லாஹ் பின் அம்ரிப்னில் ஆஸ் (ரலி) நூல்- புகாரி, முஸ்லிம்.

**மாமறை குர்ஆன் கூறுகிறபடியும் மாநபி (ஸல்) அவர்களின் வழியிலும் இரவில் இயன்றவரை இறைவனின் வணக்க வழிபாடுகளில் ஈடுபட்டு இருலோகத்திலும் இனிய வாழ்வு வாழ்வோம்**

## சூஃபியாக்கள் 1

"சூஃபி " என்ற வார்த்தை அரபி மொழியில் உள்ளது. இது "சூஃபிஸம்" என்ற ஆங்கில வார்த்தையாகி உலகமெங்கும் பரவலாக பயன்படுத்தப்படுகிறது அரபியில் "தஸவ்வுஃப்" என்ற சொல்லிலும் "சூஃப்" இருக்கிறது.
ஒரு நபிமொழியில்

"சூஃபி களுடைய குரலைக் கேட்டும் அவர்களுடைய பிரார்த்தனைகளுக்கு "ஆமீன்" (அப்படியே ஆகட்டும் இறைவா) என்று சொல்லாதவர்கள் இறைவன் முன்னிலையில் கவனக்குறைவானவர்களாக பதிவு செய்யப்படுவார்கள்" என்பதாக 11 ம் நூற்றாண்டைச் சேர்ந்த அல் ஹுஜ் வீரி என்ற மாபெரும் சூஃபி தன்னுடைய கிதாபான
° கஷ்ஃபுல் மஹ்ஜூப் "(திரைக்குப் பின்னால் தெரியும் காட்சி) யில் குறிப்பிட்டுள்ளார்கள்
சூஃபித்துவத்தின் அடிப்படையும் இஸ்லாத்தின் அடிப்படையும் ஒன்றுதான் அதன் பெயர் "தவ்ஹீது "ஏகத்துவம் என்றும், இறைவனின் ஒருமை என்றும் இது மொழி பெயர்க்கப்படுகிறது . இஸ்லாத்தின் உயிரான விஷயமும் இதுதான்
ஒன்று என்று பொருள்படும் "வாஹிது " "அஹது " ஆகிய வேர்ச்சொற்களில் இருந்து "தவ்ஹீது " வருகிறது "அஹது " என்ற சொல்லுக்கு "ஒன்று" என்ற பொருள் சரிதான் என்றாலும் "பிரிக்க முடியாத ஒன்றே ஒன்று " என்பது தான் மிகச் சரி.
தவ்ஹீத்தின் அடிப்படையில் பார்த்தால் எல்லாமே மாயைதான், ஏனெனில் தனியாக வும் எல்லையுள்ளதாகவும் தெரிவதெல்லாமே எல்லையற்ற ஒன்றின் இருப்பில் தெரிபவைதான்.
"எங்கு திருப்பினாலும் தெரிவது இறைவனின் திருமுகமே. நிச்சயமாக இறைவன் எல்லையற்றவன், மிகப் பெரியவன், எல்லாம் அறிந்தவன் என்கிறது திருமறை (2:115)
இந்த மாய முகம் நமக்குத் தெரியவில்லை ஆனால் அதனை சூஃபியாக்கள் கண்டும் பேசியும் ,ஈசல்கள் போல் அதில் வெந்தும் சுகிக்கிறார்கள் இதை விட வேறு என்ன சொல்ல அவர்களைப் பற்றி ..,,
இறைவா ..
"எனக்கு நீ வெளிப்படுத்திக் காட்டிய உண்மையை இந்த மக்களுக்கும் வெளிப்படுத்தியிருந்தால் எனக்கு இந்த நிலை ஏற்பட்டிருக்காது "
இறைவா....
"இந்த மக்களுக்கு எந்த உண்மையை நீ மறைத்தாயோ அந்த உண்மையை எனக்கு நீ மறைத்திருந்தாலும் எனக்கு இந்த நிலை ஏற்பட்டிருக்காது" என்று
"அனல் ஹக் " (நானே உண்மை) என்றுரைத்து மரண தண்டனைப் பெற்ற மன்சூர் ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்

## சூஃபியாக்கள் 2



ஒரு நாள் ஜலாலுதீன் ரூமி (ரஹ் ) அவர்கள் பள்ளியில் மாணவர்களுக்கு கல்வி போதித்துக் கொண்டிருந்தார்கள்
அங்கு காட்டு வாழ் மனிதரைப் போன்று ஒருவர் வந்து , " இஃது என்ன ? " என்று வினவினார்.
"இதைப் பற்றியெல்லாம் உமக்கு ஒன்றும் தெரியாது சும்மா இரும்" என்றார் மௌலானா ரூமி சற்று வெறுப்போடு
அவ்வளவுதான் ,வந்த மனிதர் அங்கிருந்த நூல்களெல்லாம் அள்ளி பக்கத்திலுள்ள தண்ணீர் தொட்டியில் போட்டு தண்ணீரில் முழ்கடித்துவிட்டார்கள்
அது கண்ட ரூமி அவர்களும் அவர்களின் மாணவர்களும் அலறி துடித்து விட்டனர். அந்த நூல்களெல்லாம் பல வருடம் ரூமி ஆய்வு செய்து எழுதிய கிதாபுகள்
அப்பொழுது அந்த மனிதர் அமைதியாக அந்த தண்ணீர் தொட்டிக்குள் கையை விட்டு அத்தனை நூல்களையும் வெளியே எடுத்தார் என்ன வியப்பு "அந் நூல்களெல்லாம் தண்ணீரில் நனையாது எப்படி இருந்தோ அப்படியே இருந்தன அதைப் பார்த்த ரூமி அவர்கள் அவரிடம் "இது என்ன? என்று வினவ,
" இதைப் பற்றியெல்லாம் உமக்கு ஒன்றும் தெரியாது சும்மா இரும்" என்று கூறிவிட்டு அவ்விடத்தை விட்டு வெருண்டோடினார் அந்த மனிதர்.

இப்பொழுதுதான் " வந்த மனிதர் சாமான்யரல்லர் .தாம் கற்ற கல்வி வேறு, அவர் கற்ற கல்வி வேறு " என்ற உண்மையை மௌலானா ரூமி ( ரஹ்) அவர்கள் உணர்ந்து வந்த மனிதர் ஷம்சுத் தப்ரேஸ்(ரஹ்) அவர்கள் என்பதை தெரிந்து கொண்டு, அவரை பின் தொடர்ந்து ரூமி அவர்கள் ஓடிக் கண்டு பிடித்து அவர்களிடம் பிழை பொறுத்தருளுமாறு வேண்டி அவர்களின் ஆன்மீக மாணவராகி அதற்குப் பிறகே ரூமி அவர்கள் உலகப் பிரசித்துப் பெற்ற மாபெரும் கருத்துப் பெட்டகமான "மஸ்னவி " யை உலகுக்கு தந்தார்கள்

தண்ணீரில் ஒரு பொருளைப் போட்டால் நனையும் அதெப்படி நனையாமல் இருந்தது என்றெல்லாம் நம் மனம் எண்ணத் தோன்றும் ஆனால் இந்த உலகினில் எதிரும் புதிருமான விஷயங்களில் சூஃபியாக்கள் மிக அழகாக கையாளுகிறார்கள் என்பதை ,ஜென் கவிதை ஒன்று சொல்லித் தருகிறது

"அந்திப் பொழுதினிலே
சேவல் அறிவிக்கின்றது
வைகறையை -
நடு நிசியினிலே -
பளிச்சிடும் சூரியனை "

கவிதை புரிகிறதா ? .......

இதை சூஃபியாக்களால் தான் உணர முடியும் ,
நாம் கவிதையை படிக்கத்தான் முடியும்

ரஹ்மத் ராஜகுமாரன்

ஆதார நூல்கள்
அப்துற் றஹீம் எழுதிய "வலிமார்கள் வரலாறு"
ஜென் கவிதைத் தொகுப்பு

எவ்வாறு நபிமார்கள் " வஹீ " மூலம் இறைவனிடமிருந்து ஆன்மீக அறிவைப் பெற்றனரோ , அதே போன்று சூஃபியாக்கள்" இல்ஹாம் " மூலம் இறைவனிடமிருந்து ஆன்மீக அறிவைப் பெறுகிறார்கள்

இதனையே பாயஸீத் பிஸ்தாமீ (ரஹ்) அவர்கள் "நீங்களெல்லாம் இறக்கக்கூடிய மனிதர்களிடமிருந்து அறிவைப் பெறுகின்றீர்கள் நாங்களோ பிறப்பில்லா இறைவனிடமிருந்து அறிவைப் பெறுகின்றோம் " என்று கூறியுள்ளார்கள்

## சூஃபியாக்கள் 3



நபிமார்கள் ஆரம்பத்தில் ஆடு மேய்ப்பவர்களாக இருந்திருக்கின்றனர் ஈஸா (அலை) அவர்களுக்கு "நல்ல மேய்ப்பாளர் " என்ற பட்டம் உண்டு

ஆதம் (அலை) உழவுத் தொழிலும் இத்ரீஸ் (அலை) தையல் தொழிலும் செய்துள்ளனர்

நபித்தோழர்களில் அபூபக்கர் (ரலி) அவர்கள் துணி வியாபாரியாகவும் ஜைது (ரலி) ,பிலால் (ரலி) போன்றவர்கள் அடிமைகளாக இருந்தனர் அபூதர் (ரலி) ஆரம்பத்தில் வழிபறி கொள்ளைக்காரர்களாக இருந்தார்கள்

சூஃபி ஜுனைதுல் Bக்தாதி அரசாங்க மல்யுத்த வீரராக இருந்தார்கள். சூஃபி ஷெய்கு அஹ்மது இப்னு ஷாபாத் திருடராக இருந்தார் சூஃபி இப்றாஹீம் இப்னு அத்ஹம் பல்க் நாட்டின் மன்னராக இருந்தார்கள் பத்திரகிரியாரும் குறுநில மன்னராக இருந்தார்கள்

உலகப் புகழ்பெற்ற சூஃபி ஞானி முஹ்யித்தீன் அப்துல் காதிர் ஜீலானியின் ஞானகுருவான ஹம்மாத் ஷெய்கு (ரஹ் ) அவர்கள் தள்ளுவண்டியில் குளிர்பானங்களை வைத்து விற்கும் வியாபாரியாக இருந்தார்கள் "அதெப்படி உங்கள் குளிர்பானங்களில் மட்டும் ஈக்கள் மொய்க்கவில்லையே ? "என்று கேட்க

" நெருப்பில் ஈ மொய்க்குமா ?
அனுமதிக்கப்பட்ட வழியில் சம்பாதித்த பணத்தில் வாங்கப்பட்ட பொருள்களையே "நெருப்பு " என்று சொன்னார்கள்
உலகப் புகழ் பெற்ற இஸ்லாமிய பெண் சூஃபியான ராபியா பஸ்ரி (ரஹ்) பஸ்ரா நகரின் ஒரு விபச்சார விடுதியில் தான் பணியாற்றிக் கொண்டிருந்தார்கள்
இவர்களை சந்திக்கும் ஆண்களின் மனங்களில் மிகப் பெரிய தொரு மாற்றத்தை ஏற்படுத்தினார்கள் விபச்சாரம் புரிய உள்ளே சென்றவர்கள் மானிடப் பிறப்பின் சாரத்தை புரிந்து கொண்டவர்களாக ஞானிகளாகவே வெளியேறினார்கள்
பின்பு அந்த விடுதியை விட்டு வெளியேறி மார்க்கப் பணியாற்றினார்கள்
ஒரு நாள் யூப்ரடீஸ் நதிக்கரையில் உட்கார்ந்திருந்தார்கள் அங்கு ஹஸன் பஸ்ரி (ரஹ்) அவர்கள் ஆற்றுத் தண்ணீரில் தொழுகை விரிப்பை விரித்து ,அம்மையாரை நோக்கி " வாருங்கள் நதியின் மீது இரண்டு ரக்அத் தொழுகை தொழுங்கள்" என்றார்கள்
ஆனால் , அம்மையார் தமது தொழுகை விரிப்பை ஆகாயத்தில் விரித்து .ஹஸன் பஸ்ரியை நோக்கி "வாருங்கள் ஆகாயத்தில் இரண்டு ரத்அத் தொழுது கொள்ளுங்கள்
என்றார்கள்
தொடர்ந்து அவர்கள் "நீங்கள நதியில் செய்த வேலையை ஒரு சிறு மீன் நதியில் செய்யும்
நான் ஆகாயத்தில் செய்த வேலையை அற்பமான ஓர் ஈ ஆகாயத்தில் செய்யும் ஆனால் உண்மையான அசல் வேலை இந்த இரண்டு வேலைகளுக்கும் புறம்பானது என்பதை நீங்கள் அறிவீர்களா ?
சூஃபி களின் சாரம் எப்போதுமே வெளித்தோற்றத்தில் இருந்ததில்லை .அவர்கள் இந்த உலகில் இருந்துகொண்டே இந்த உலகை சேராதவர்களாக வாழ்கிறார்கள் இவர்களின் பக்தி வைதீக பக்தி அல்ல; பிரேம Bக்தி அதாவது திரைகளை விலக்கி விட்டு நேரடியாக பார்ப்பவர்கள் சூஃபியாக்கள்

**Rahmath Rajakumaran**
'ரையோகான் என்னும் ஜென் குரு மலையடிவாரத்தில் ஒரு சின்ன குடிசையில் ரொம்பவும் எளிய வாழ்க்கை வாழ்ந்து கொண்டிருந்தார்.
ஒரு நாள் சாயங்காலம் அவர் வெளியே போயிருந்த போது குடிசைக்கு திருடன் வந்தான்
திருடத்தான் எதுவும் இல்லை. ரையோகான் வீடு திரும்பிய போது திருடனைப் பார்த்தார்.
"நீ ரொம்ப தூரம் கடந்து இங்கே திருட வந்திருக்கிறாய். வெறுங் கையோடு நீ போகக் கூடாது இதோ என் ஆடைகளை என் பரிசாகவே நீ எடுத்துச் செல் " என்றார்
திருடன் சற்றே ஆச்சரியப்பட்டு அவர் ஆடைகளை எடுத்துக் கொண்டு நழுவி ஓடினான்.
குரு, உடம்பில் ஒட்டு உடை ஏதும் இல்லாமல் மேலே வானத்தில் முழு நிலவைப் பார்த்துக் கொண்டிருந்தார் . "
"பாவம் அவன் : இந்த அழகான நிலவை அவனுக்குக் கொடுத்திருக்கலாம் " என்றார்

## சூஃபியாக்கள் 4

சூஃபிஸம் இஸ்லாத்தில் இல்லாததா ? இந்தப் பதிவைப் படித்தப் பின் நீங்கள் சொல்லுங்கள்
சூஃபிஸம் என்பது ஒரு புதுமைக்குப் பெயரல்ல, ஒதுங்கி நிற்பதற்கு i
சூஃபிஸம் என்பது ஒரு பாவகாரியத்துக்குப் பெயரல்ல. அதை விட்டும் விலகி ஓடுவதற்கு |
சூஃபிஸம் என்பது எட்டாக்கனி அல்ல: சீச்சீ இந்தப் Bழம் புளிக்கும் என்று கூறுவதற்கு '
சூஃபிஸம் என்பது அனைவரும் அவசியம் செயல்படுத்த வேண்டிய ஒரு அரும் தவம்
பத்து கட்டளைக் கொடுத்து நபி மூஸா (அலை) அவர்களை யூத சமுதாயத்திற்கு அனுப்பி வைத்தான்
அதைப் போன்று 4 கட்டளைக் கொண்டு நபி (ஸல்) அவர்களை இஸ்லாமிய சமுதாயத்திற்கு அனுப்பி வைத்திருக்கிறான்
முதல் கட்டளை அல்குர்ஆனை பொருள் அறிந்தோ அறியாமலோ ஒத வைப்பது
2 - வது கட்டளை அவர்களை தூய்மைப்படுத்துவது
3-வது கட்டளை அல்குர்ஆனின் பதவுரை தெளிவுரையை அவர்களுக்குக் கற்றுத் தருவது
4-வது கட்டளை நபிமொழி என்ற ஹிக்மத்தைக் கற்றுத் தருவது.
இந்த 4 கட்டளைகளை 2 : 129 , 2 : 151 , 62 : 2
இந்த மூன்று வசனங்களும் ஊர்ஜிதம் செய்கின்றன (வசனங்களை நீங்களே பார்வையிட்டுக் கொள்ளுங்கள் )

இந்த 4 கட்டளைகளில் இடம்பெற்றுள்ள " "தஸ்கியத் " என்பதுதான் காலப்போக்கில் சூஃபிஸம் என்று பெயர் கொண்டு சூட்டப்படுகிறது
இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் சிறு வயதில் நபி(ஸல்) அவர்களுக்கு சேவகம் செய்த போது அவர்களை துஆ செய்தார்கள் இதனால் திருககுர்ஆனின் விளக்கவுரையை பரப்பும் பணியை மேற்கொண்டார்கள்
அபூஹுரைரா (ரலி) அவர்களை மேலாடையை விரிக்கச் சொல்லி அதில் தனது இரு கரங்களினால் மானசீகமாக எதையோ மூன்று முறை அள்ளிப் போட்டு அதை நெஞ்சோடு அணைத்துக் கொள்ளச் சொன்னார்கள் அவ்வாறு செய்திலிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் நபிமொழியின் நினைவு பெட்டகமாகவே மாறிவிட்டார்கள்

ஸைது பின் தாபித் (ரலி) அவர்களுக்கு பத்ரு கைதிகளில் ஒருவரைக் கொண்டு அரபி எழுதப் படிக்கக் கற்றுக் கொடுத்து அல்குர்ஆனை பதிவு செய்து வைக்கும் பணியை அவர்களிடம் ஒப்படைத்தார்கள்
"நான் ஞானத்தின் பட்டணம் அலி அதன் தலைவாயில் " என்று நவின்று அலி (ரலி) அவர்களை " தஸ்கியத்" என்ற கலையின் ஆசானாக அறிமுகம் செய்து வைத்தார்கள் அலி (ரலி) அவர்களின் வழித் தோன்றல்கள் குறிப்பாக அசன் (ரலி) , ஹுஸைன் (ரலி) மற்றும் அவர்களின் சந்ததிகளின் வாயிலாக தஸ்கியத் என்னும் சூஃபிஸம் போதிக்கப்பட்டு வந்துள்ளது இறை நேசர்களில் பெருவாரியானவர்கள் அசன் (ரலி) ஹுஸைன் (ரலி) இவர்களின் வழித்தோன்றல்களாகவே இருக்கிறர்கள்
இப்போது நீங்கள் சொல்லுங்தள் "சூஃபிஸம் எங்கிருந்து ஆரம்பிக்கிறது ? சூஃபிஸம் இஸ்லாத்தில் இல்லாததா
நாம் பஸ்ஸில் ஏறியவுடன் சன்னல் சீட்டை தான் தேடி உர்க்காருவோம் எதற்காக என்றால் அப்போதுதான் நாம் வெளியே பார்க்க முடியும். நாம் பஸ்ஸில் எப்போதுமே உள்ளே பார்ப்பேதே இல்லை.
இதுபோலத்தான் நாம் நம் உள் முகம் பார்ப்பேதே இல்லை அப்படி பார்த்தால் பார்க்க தெரிந்தால் நம் உயிரின் ஓசை கேட்கும், நம் மனதின் வெளிச்சம் இருல் தெரியும், நமது ஆன்மாவின் அகமியம் புரியும். அகத்தில் ஞானம் பிரகாசிக்கும்.
இதுவே சூட்சுமத்தை உணர்த்தும் சூஃபி ஞானிகளின் வழியாகும். இந்த வழியே எழுதி படிக்க முடியாத திரை மறை சூட்சும .

## சூஃபியாக்கள் 5



ஹஜரத் புஹ்லூல் தானா (ரஹ்) அவர்கள் ஒரு நிறைவான (மஜ் தூப்) தீவிர இறை நேசராக இருந்தார்கள் கலீஃபா ஹாரூன் ரஷீத் காலத்தில் பாக்தாத்தில் இருந்து வந்தார்கள்
ஒரு நாள் மாலை அந்தி சாயும் நேரத்தில் கலீஃபா ஹாரூன் ரஷீத் தன் மனைவி ஜுபைதா காத்தானுடன் டைகரீஸ் நதி (தஜ்லா நதி) நதிக்கரையோரம் உலாவச் சென்றார் அங்கு புஹ்லூல் தானா (ரஹ்) அவர்கள் ஈரமான ஆற்று மண்ணில் மணல் வீடுகள் கட்டிக் கொண்டு இருந்தார்கள்
அதைப் பார்த்த ஜூபைதா "பாபா , தாங்கள் என்ன செய்து கொண்டிடுக்கிறீர்கள் ? "
"நான் சுவனத்தில் வீடு கட்டிக் கொண்டிருக்கிறேன்."
" இந்த வீடுகளைத் தாங்கள் விற்பனை செய்வீர்களா? "
. "ஆமாம் ' ஒரு வீட்டின் விலை உமது கழுத்தில் கிடக்கும் முத்துமாலை "
உடனே ஜூபைதா முத்துமாலையை கழற்றிக் பாபாவிடம் கொடுத்து விட்டார்.
புஹ்லூல் மாலையை வாங்கிக் கொண்டு "செல்லுங்கள் இதுதான் உம்முடைய சுவனமாளிகை' " என்றார்கள்
இதைப் பார்த்துக் கொண்டிருந்த கணவர் ஹாரூன் ரஷீத் தன் மனைவியிடம் "ஒரு மஜ்தூபிடம் விலை மதிப்பற்ற உன்னுடைய முத்து மாயையை கொடுத்து விட்டாயே நீ ஒரு சரியான முட்டாளாக இருக்கிறாய் " என்று சற்று கோபப்பட்டார்

அன்று இரவு உறக்கத்தில் கலீஃபா ஹாருன் ஒரு கனவு கண்டார் சொர்க்கத்தில் அவர் உலாவிக் கொண்டிருக்கும் போது மிக உயரமான அழகான முத்துக்களால் ஆன ஒரு மாளிகையைக் கண்டார் அதன் அழகில் அவர் அப்படியே சொக்கி நின்று விட்டார் அதன் வாயிலில் "ஜுபைதா காத்தூன் " என்று பொறிக்கப்பட்டிருந்தது

ஹாரூன் , அட நம்ம மனைவியின் மாளிகைதானே என்று உள்ளே நுழைய முயற்சிக்கும் போது ஒரு வானவர் அவரைத் தடுத்து " இது ஜுபைதா காத்தூனுடைய மாளிகை நேற்றுதான் தம்முடைய முத்துமாலையை விலையாகக் கொடுத்து வாங்கிக்கிறார் அவர் இதனுள் நுழையாதவரை வேறு யாருக்கும் நுழைய அனுமதி இல்லை" என்றார்

ஹாரூன் ரஷீத் திடுக்கிட்டு எழுந்து டைக்ரீஸ் நதிக் கரைக்கு விரைந்தார் அங்கு புஹ்லூல் தானா அவர்கள் நிறைய வீடுகளைக் கட்டிக் கொண்டிருந்தார் ஹாரூன் அவரிடம் "பாபா எனக்கும் ஒரு வீடு தாருங்கள் அதற்குரிய தொகையைக் கொண்டு வந்திருக்கிறேன் என்றார்.

புஹ்லூல் புன்னகைத்தபடி "சுவனத்தில் எவர்கள் முத்து மாளிகையைக் காணவில்லையோ அவர்களுக்கே நாம் இந்த வீடுகளை விற்பனை செய்வோம் எவர்கள் சுவனத்து முத்து மாளிகையைக் கனவில் கண்டார்களோ அவர்களுக்கு நாம் ஒருபோதும் இந்த வீடுகளை விற்பதில்லை எனக் கூறி விட்டு சென்று விட்டார்.

"விண்ணிலும் மண்ணிலும் வலிமார்களுக்கு எந்த தடையும் கிடையாது .அவர்கள் விரும்பினால் (மரணத்திற்குப் பின்னரும்) தம் சொந்த உடலுடன் இப்பூமிக்கு வர முடியும்

- கௌதுல் அஃலம் அப்துல் காதிர் ஜிலானி.

## சூஃபியாக்கள் 6



தஸ்தகீர் (ரஹ்) இவர்களது இயற்பெயர் "சையது ஷாஹ் குலாம் தஸ்தகீர் சாவி " ஈரானிலுள்ள "சவா '' என்ற ஊரில் பிறந்தார்கள் அதனால் சாவி

இவர்களை சென்னை திருவல்லிக்கேணியில் உள்ள வாலாஜா மஸ்ஜிதைத் திறந்து வைப்பதற்காக "நவாப் முஹம்மது அலி வாலாஜா அழைத்து வந்த போது, கிப்லா சரியாக அமையவில்லை என்று தஸ்தகீர் அவர்கள் கூறினார்கள்

ஆனால் நவாப் அதை மறுத்து சரியாகத்தான் உள்ளது என்று கூறிய போது இவர்கள் தனது தலைப்பாகையை கழற்றி நவாப் தலையில் வைத்தபோது கிப்லா தவறாக இருப்பதை நவாப் தெளிவாக உணர்ந்தார்

ஒரு முறை இவர்களின் மாணவர்கள் 4 பேர் இவர்களிடம் வந்து மனிதனின் நிலை பற்றி கேட்டார்கள்

அதற்கு "நான் மரணித்த பின் எனக்கு ஜனாஸா தொழுகை யார் தொழ வைக்கிறாரோ அவர்களிடம இந்த கேள்வியை கேளுங்கள் என்று கூறினார்கள்

அவ்வாறே சில காலம் சென்ற பின் இவர்கள் மரணித்த பின் ஜனாஸா வாலாஜா பள்ளிக்கு கொண்டு வரப்பட்டு யார் தொழ வைப்பது என்று பிரச்சனையாக இருந்தது

அப்போது திடீரென்று ஒரு மனிதர் தனது முகத்தை மறைத்தவாறு முக்காடு போட்டு வந்து தொழவைத்து , துஆ ஓதி முடித்த பின்பு மேற்கு பக்கம் சென்றார்கள்

அப்போது மாணவர்கள் அந்த மனிதரிடம்

அந்த கேள்வியை கேட்க சென்ற போது அங்கு இருந்த அதே தஸ்தகீர் (ரஹ்) அவர்களைப் பார்த்து மயக்க முற்று விழுந்தார்கள்

இவர்களுடைய அடக்கஸ்தலம் கிருஷ்ணாம் பேட்டையில் டாக்டர் .நடேசன் சாலையில் உள்ளது

மாணவர்கள் கேடக நினைத்த கேள்வி "மனிதனின் நிலை"

"விண்ணிலும் மண்ணிலும் வலிமார்களுக்குத் தடை என்பது கிடையாது

அவர்கள் விரும்பினால் மரணத்திற்குப் பின்னரும் தம் சொந்த உடம்புடன் இப்பூமிக்கு வர முடியும் "

- தௌதுல் அஃலம் அப்துல் காதிர் ஜிலானி

## சூஃபியாக்கள் 7



சையிது மூஸா ஷா காதிரி (ரஹ்)
இவர்கள் எந்தக் காலத்தைச் சேர்ந்தவர்கள் ,எங்கிருந்து வந்தவர்கள் என்பது சரியாக யாருக்கும் தெரியவில்லை ..
பின்னே எப்படி இவ்வுலகிற்கு அறிமுகமானார்கள் ?
சொல்றேன். ரொம்பவும் விசித்திரமான சேதி அது.
கிழக்கிந்திய கம்பெனி ஆட்சியின் போது இப்பகுதியில் கட்டாந் தரையில் சாலை அமைக்கத் தோண்டப்பட்ட போது இவர்களின் உடல் தென்பட்டது. ஆங்கிலேயர்கள் ஆச்சர்யப்பட்டுப் போனார்கள்
அவர்களது உடல் எத்தனையோ வருடங்களுக்கு முன் அடக்கப் பெற்றிருந்தாலும் அவர்களது உடலில் நாடித்துடிப்பு ரொம்பவும் சீராக இயங்கிக் கொண்டிருந்தது இந்தச் செய்திக் குறிப்பு செயின்ட் ஜார்ஜ் கோட்டையில் உள்ளது என்று கூறப்படுகிறது
1911 ல் இப்பகுதியில் ட்ராம்வே போடப்பட்ட போது, இவர்களின் அடக்கவிடத்தை அப்புறப்படுத்த கோடாரியால் உடைத்தபோது இரத்தம் பீரிட்டு வந்தது அதுவும் சூடான இளம் ரத்தம் . உடனே அடக்கஸ்தலத்தை மேலும் உடைக்காமல் அப்படியே மூடிவிட்டார்கள் காலையில் உயர் அதிகாரி கள் பார்வையிட வந்த போது மொத்த அடக்கஸ்தலமே சற்று சாய்வாக இடம் மாறிக் கொண்டது .
"ரோடு போட இடம் போதுமா ?"
" நமது சாலிஹான மூமின்களுக்கு நமது பரிசுத்த ஜீவனைக் கொண்டு திட்டமாக நாம் ஜீவிக்கச் செய்கிறோம் "
- அல் குர்ஆன்
" அடங்கிய நிலையில் அடக்கம் என்பது உண்மையான அடக்கமாகாது: இயக்க நிலையிலும் அடக்கமாக இருக்கும்போதுதான் விண்ணையும், மண்ணையும் நிறைக்கின்ற ஆன்மீகலயம் தோன்றும் "
ஆதார நூல் :
Ts' ai - Ken t'an T. Leggett "A First zen Reader page 229

## சூஃபியாக்கள் 8

நபிமார்களுக்கு "நுபுவத் " எப்படியோ அதைப் போன்றே வலிமார்களுக்கு " விலாயத் " என்னும் பட்டத்தை இறைவன்வழங்குகிறான். இந்த விலாயத் இறையச்சத்துடன் மிகச் சாதாரணமாக வாழ்ந்த மனிதர்களுக்கும் இறைவன் வழங்கி இருக்கின்றான் என்பதற்கு அத்தாட்சியாக ஒரு சம்பவம்
வங்கதேசம் ரங்க்பூர் மாவட்டம் கஷ்மார்கா என்ற கிராமத்தைச் சேர்ந்த 105 வயது மூதாட்டி ஆயிஷா காத்தூன் அவர்கள் மிகச் சாதாரண எளிய வாழ்க்கை வாழ்ந்தவர்கள் 1997 ஆம் ஆண்டு இறந்து போனார்கள்
6 வருடம் கழித்து அதாவது 2003 ஆம் ஆண்டு மீண்டும் உடல் தோண்டியெடுக்கப்பட்டு மீண்டும் இறுதிச் சடங்குகள் செய்து ஊர்வலமாய் கொண்டு போய் வேறொரு இடத்தில் நல்லடக்கம் செய்யப்பட்டது
காரணம் ? சொல்றேன் .
அந்த மூதாட்டியின் மூத்த மகனுக்கு 6 வருடங்கள் கழித்து (2003-ல்) ஓர் இரவில் கனவு வந்தது. கனவில் அம்மா . "மகனே நான் அடங்கப் பெற்றிருக்கும் இடத்தில் ஆறு உடைப்பெடுத்து ஓடப் போகிறது அதனால் என்னை உடனே மாற்று என்று உத்தரவு போட்டுவிட்டு மறைந்தார்கள் .
தன் இரண்டு தம்பிகளிடம் கனவு பற்றிச் சொல்ல ஓடோடி போனார் அண்ணன். தம்பி களுக்கு ஒரே ஆச்சரியம் "அண்ணே ...... சொன்னால் நம்ப மாட்டீர்கள் எங்கள் கனவிலும் அம்மா வந்து இதையேச் சொன்னார்கள் நாங்கள் இருவரும் இது பற்றி உங்களிடம் சொல்வதற்காக வந்து கொண்டிருக்கிறோம் " என்றனர்
மூவருமே ஆச்சரியப்பட்டு போனார்கள் அந்த உடனே அம்மா அடங்கப்பட்ட மசூதிக்குச் சென்று அங்கிருந்த தலைவர்களிடமும் மற்றும் ஊர்த் தலைவர்களிடமும் விஷயத்தைக் கூறினார்கள் விஷயம் ஊரெங்கும் பரவியது தலைவர்களும் அவர்களது விருப்பத்திற்கு ஒப்புக் கொண்டனர்

நாள் குறிக்கப்பட்டது

ஆற்றோரமாக இருந்த மூதாட்டியின் மண்ணறையை மதச் சம்பிரதாய சடங்கு களுடன் 30.08.2003 சனிக்கிழமை தோண்டப்பட்டது மொத்த கூட்டமும் அந்தக் சின்னக் கிராமத்தைச் சுற்றி வளைத்தது
கபரைத் தோண்டிப் பார்த்த போது மிகப்பெரும் ஆச்சரியம் மூதாட்டியின் உடலில் எந்த மாற்றமும் இல்லை 6 ஆண்டுகளுக்கு முன்பு எப்படி புதைக்கப்பட்ட போது இருந்ததோ, அதைப் போலவே இருந்தது
அவரது மகன்கள், மதத்தலைவர்கள் , மக்கள் முன்னிலையில் உடல் வெளியே எடுக்கப்பட்டது. மீண்டும் இறுதிச் சடங்கு நடைபெற்றது இரண்டாவது முறையாக இறுதி ஊர்வலம் (மெதுவாக அட ,மெதுவாக போங்கப்பா ) நடந்தது.
பாதுகாப்பான இடத்தில் உள்ள கல்லறையில் அவரது உடல் இரண்டாவது முறையாக புதைக்கப்பட்டது
ஆதாரம் 04 -09-2003 தினமலர் நகர்வலம் என்ற பதிவில் இச்செய்தி வெளியாகி உள்ளது.
"முஷ்ரிக்குடன் போர் செய்து வெட்டப்பட்டு ஷஹீதானாலும் சரி , தம்முடைய நப்ஸுடன் ஆத்மார்த்தமாகப் போர் செய்து அதை வெட்டி வீழ்த்தினாலும் சரி இரண்டுமே பீஸபீல்தான் "
என்று முஹ்யித்தீன் இப்னு அரபி (ரஹ்) அவர்கள் எழுதிய மெய்ஞ்ஞான சொரூபர் பாகம் 1 ல் பக்கம் 137-ல் பதிவு செய்யப்பட்டுள்ளது.

## சூஃபியாக்கள் 9



பக்காதிலிருந்து 40 மைல் தொலைவில் ஸல்மான் ஃபார்ஸி | ரலி) அவர்களின் அடக்கஸ்தலம் உள்ளது இதன் காரணமாக அந்த ஊருக்கே "ஸல்மான் பாக்" என்றழைக்கப்படுகிறது இதன் பழைய பெயர் மதாயின்
அங்கிருந்து இரண்டு பர்லாங்கு தொலைவில் "ஹஜ்ரத் ஹூதைபதுல் யமான் (ரலி) , " "ஹஜரத் ஜாபிர் பின் அப்துல்லாஹ் (ரலி) " ஆகிய இரு நபித்தோழர்களின் கபறு தஜ்லா நதி யின் கரையில அடக்கப்பட்டுள்ளது் பக்கத்தில் தஜ்லாந்தி ஓடுவதால் வெள்ளம் வரும் போது தண்ணீர் இரு கறுகளிலும் ஊடுருவி வெளியாகிறது.
இந்நிலையில் முதலாம் பைசல் மன்னர் மற்றும் இராக் தலைமை முஃப்தீ (நீதிபதி) ஆகியோர் தனித்தனியாக கண்ட கனவில் மேற்படி இருநபித் தோழர்கள் தோன்றி "எங்களின் கப்றுகளை இடம் மாற்றுங்கள் " என்று கூறினார்கள்
தேதி குறிக்கப்பட்டு எல்லா நாட்டு மதத்தினர் கள் வெளிநாட்டு தூதுவர்கள் என சுமார் 5 இலட்சத்திற்கும் அதிகமானோர் கூடினார்கள்
ஹிஜ்ரி 1350 துல்ஹஜ் கடைசியில் 1932 வருஷம் ஏப்ரல் மாதம் ஒரு திங்கட் கிழமை பகல் 12 மணிக்கு மேற்கண்ட எல்லோர் முன்னிலையிலும் புனித உடல்கள் கிரேன் மூலம் வெளியே கொண்டு வரப்பட்டது
மன்னர் பைசல், தலைமை முஃப்தி, துருக்கி அமைச்சர் முக்தார் பட்டத்து இளவரசர் பாரூக் ஆகியோர் புனித உடல்களை மிக மரியாதையுடன் சுமந்து வந்து கண்ணாடி பேழைகளில் வைத்தார்கள்
கஃபன் துணி மட்டுமல்ல அவர்களின் தாடி முடி உட்பட நல்ல நிலையில் இருந்தது
பொதுவாக இறந்ததும் 6 மணி நேரத்திற்குள் கண் பார்க்கும் சக்தியை முழுமையாக இழக்கும் ஆனால் இருவரின் கண்களும் ஒளி வீசிக்கொண்டிருந்ததைக் கண்ட ஜெர்மன் கண் டாக்டர் அந்த உடனே தலைமை முஃப்தியின் கரம் பற்றி இஸ்லாத்திற்கு ஏற்கிறார் இவரைத் தொடர்ந்து நிறைய பேர்கள் நபித்தோழர்களின் உடலின் முன்பு இஸ்லாத்தில் கூட்டம் கூட்டமாக நுழைகிறார்கள்
மக்களின் பார்வைக்காக உடல்களின் கபனை விலக்கி பொதுமக்கள் பார்வைக்கு திறந்து வைக்கப்பட்டது பெண்களும் ஜியாரத்திற்கு அனுமதி அளித்தனர்

உலக நாட்டு தூதுவர்கள் மன்னர்கள் உலமாக்கள் தங்களின் தோளின் மீது சுமந்து செல்ல ... -விமானங்கள் மூலம் பூக்களை வழி நெடுக வாரி இறைத்தன
சுமார் 4 மணி நேரம் நடந்தே புனித உடலை சுமந்து கொண்டு செல்ல லட்சபோ லட்சம் மக்கள் பார்வையிட "சல்மான் பாக்" இடத்தை அடைந்தது "அல்லாஹு அக்பர் அல்லாஹு அக்பர் தக்பீர" முழக்கம் விண்ணை பிளந்தது
உயிருள்ள இரு தியாகிகளின் புனித உடல்கள் ஹஜரத் சல்மான் பார்ஸி (ரலி) அவர்களின் பக்கத்தில் நல்லடக்கம் செய்யப்பட்டது
பக்தாத் திரையரங்ககுகளில் இந்த நிகழ்வுகள் தொடர்ந்து காட்டப்பட்டு ....வெளியில் வரும் யாத்திரிகர்கள் பார்த்து செல்ல அனுமதிக்கப்பட்டது
இந்த நிகழ்ச்சியைப் பார்த்த அநேகர் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டே இருந்தனர்
தகவல் : மஆரிஃப் மாத இதழ் ஜனவரி 1979 ஆஜம்கட் உ.பி
ஆதாரம : ஏக் - ஆலம் - தாரீக் (ஓர் உலக வரலாறு)

## சூஃபியாக்கள் 10

ஒரு நாள் அன்னை உம்மு பர்வா அடுப்பினில் பெரும் விறகுக்கட்டை களோடு சிறு சிறு சுள்ளிகளையும் வைத்து நெருப்பு மூட்டியதைக் கண்ட 6 வயது பாலகர் கண்களிலிருந்து கண்ணீர் தாரை தாரையாக வழிந்தோடியதைக் கண்ட தாயார் பதறிப் போய் பசியால் வடிகிறானோ என்றெண்ணி வாரி முத்தமிட்டு "மகனே , . இன்னும் சொற்ப நேரத்தில் சமையல் முடிந்துவிடும் அழாதே " என்ற போது ,
"பசிக்காக அழவில்லையம்மா ..... தாங்கள் அடுப்பிலே பெரும் விறகுக்கட்டைகளோடு சிறு சிறு சுள்ளிகளையும் வைத்து நெருப்பு மூட்டியதைக் கண்டதும் மறுமையில் இவ்வாறுதானே பாவம் புரிந்த பெரிய மனிதர்களுடன் பாவமிழைத்த சின்னஞ் சிறார்களையும் இறைவன் நரக நெருப்பில் தள்ளுவான் என்ற எண்ணம் என் உள்ளத்தில் மிகைத்துவிட்டது நானும் அச்சிறுவர்களில் ஒருவனாக ஆகிவிடக் கூடாதே என் என் குலையெல்லாம் நடுங்கியது அதன் காரணமாக என்னை அறியாமல் என் கண்கள் அழுதன என்றனர்
உடனே அந்த தாய் "மகனே அழாதே அளப்பெரும் அருளாளனாகிய அல்லாஹ் உன்னை கவனம் புகச் செய்வான்' என்றார்
அந்த சிறுவர்தான் இமாம் ஜாபர் சாதிக் (ரஹ்) அவர்கள்

## சூஃபியாக்கள் 11



(ராபியாத்துல் பஸரீயா)
கி.பி. 717 ல் ஹ்ஜ்ரி 95ல ஈராக் பஸராவில்
"கைஸ்பின் அதீ " என்ற குடும்பத்தில் பிறந்ததால் ராபியத்துல் அதவியா என்றும், ராபியத்துல் கைஸியா என்றும் பஸராவில் வாழ்ந்து வந்ததால் ராபியத்துல் பஸ்ரியா என்றும் அழைக்கப்படுகிறார்கள் குடும்பத்தில் நான்காவது பிறந்ததால் "ராபியா " என்று பெயர் சூட்டினார்கள்
மரியம் (அலை) போன்று அதிகமான வணக்க வழிபாடுகளில் ஈடுபட்டதன் காரணமாக "இரண்டாவது மர்யம் சித்திகா" என்றும் அழைக்கப்பட்டார்கள்
இவர்களிடம் உறங்க பாயொன்று இருந்தது. ஒரு செங்கல்தான் இவர்களின் தலையணை
தொழும் போது கப்ன் துணி இவர்களுடனே இருக்கும் .கப்ன் துணியை எப்போதும் சுமந்து கொண்டே இருப்பார்கள்
ராபியத்துல் பஸ்ரி தமது இளமைக் காலம் முதல் இறைக் காதலிலேயே கழித்தனர்

குடும்ப வாழ்க்கையில் இச்சை இல்லாது இருந்தனர் பார்க்க ரொம்பவும் அழகாக இருப்பார்கள்." பஸ்ரா நகரின் ஆபரணம்" என்று வர்ணிக்கப்பட்ட அழகு அவரின் அழகு
இதனை அறிந்த பஸ்ரா ஆளுநர் தம்மை மணந்து கொள்ளும் படி கேட்டுக் கொண்டார்
அதற்கு ராபியாத்துல் பஸ்ரி அவரிடம் :
"உலகினை விரும்புவோன் ஆணும் பெண்ணுமல்லாத அலி ஆவான்
மறு உலகில் சுவர்க்கத்தை விரும்புவோன் பெண்ணாவான்.
அல்லாஹ்வையே விரும்புவன் ஆணாவான்
என்னை விரும்பி வந்த நீர் உலகினை விரும்புவோரானால், நீர் அலி , நான் பெண் அலியும் பெண்ணும் திருமணம் செய்ய முடியாது
நீர் மறு உலகை விரும்புவோராயின் நீரும் பெண். நானும் பெண் .பெண்ணுடன் பெண் திருமணம் செய்ய முடியாது
நீர் அல்லாஹ்வையே விரும்புவீராயின் நீரும் ஆண் தெய்வீகக் காதலிலே இருந்து அல்லாஹ்வை மட்டுமே விரும்புகின்றேன்
ஆதலினால் நானும் ஆண் ஒரு ஆடவன் இன்னொரு ஆடவனை எவ்வாறு திருமணம் செய்ய முடியும் ?
மணம் முடிக்கவந்தவர் மனம் மாறிப் போனார்
ராபியத்துல பஸ்ரி யாரையுமே வாழ்நாளில் திருமணம் செய்தது இல்லை'
பெண் சூஃபி கவிஞர்களில் இவரே முதன்மையானவர்
இறைக் காதலில் இவர்கள் பாடிய கவிதைகள் நம்மை மெய்சிலிர்க்கச் செய்கிறது
இந்த கவிதையின் வார்த்தை பிரயேகத்தை இவர்களைத் தவிர யாராலும் உச்சரிக்க ஏன் நினைத்துக் கூட பார்க்க முடியாது
"விழிகள் அமைதியை நாடுகின்றன
நட்சத்திரங்கள் மூடிக் கொள்ளுன்றன
சன்னமாக இருக்கிறது.
அதனதன் கூடுகளில் இருக்கும்
பறவைகளின் ஒலிகள்.
அலைகளின் வாழும் அசுரர்களின்
சப்தங்களும்.
மாற்றங்கள் அறியாத மிகப் பெரியவன் நீ
நிலை மாறாத சமன் நீ
மறைந்து விடாத அழிவின்மையும் நீ .
அரசர்களின் கதவுகள் இப்போது
தாழிடப்பட்டி டுக்கின்றன,
அவற்றைப் படையினர்
பாதுகாத்துக் கொண்டிருக்கின்றார்கள்
உன்னத் தேடி வருபவர்களுக்காக
உனது கதவுகள் திறந்தே இருக்கின்றன
எனது இறைவா
இப்போது எல்லோரும் அவரவர்
காதலர்களுடன் தனித்து இருக்கிறார்கள்
நானும் உன்னுடன் தனித்திருக்கிறேன்
நரகம் பற்றிய பயத்தில்
உன்னை வணங்கினால்
என்னை நரகத்தில் தீயிலிடு .
சுவர்க்கத்தின் ஆசையில்
உன்னை வணங்கினால்
சுவர்க்கத்தில் வைத்து என்னைப்
பூட்டி விடு.
உன்னை உனக்காக மட்டுமே
வணங்குவேனென்றால்
உனது முடிவில்லாத அழகை
எனக்கு மறைத்து விடாதே..
ஒரு கையில் விளக்கையும்
மற்றொரு கையில் ஒரு
வாளித் தண்ணீரையும்
வைத்துக் கொண்டிருக்கிறேன்
சுவர்க்கத்தைத் தீயிலிட்டு,
நரகத்தின் தீயை

அணைக்கப் போகிறேன்
இறைவனை நோக்கிப் பயணிப்பவர்கள்
திரை விலக்கி
உண்மையைப் பார்க்கட்டும்
நான் இறைவனை
நேசித்துக் கொண்டிருக்கிறேன்
சாத்தானை வெறுக்கும் அளவுக்கு
என்னிடம் நேரம் இல்லை
யாரையாவது திறக்கச் சொல்லி மன்றாடி
எவ்வளவு காலம்தான் திறந்த கதவை
தட்டிக் கொண்டிருப்பாய் ?

## ஸூஃபியாக்கள் 12



(ஜுபைதா ஹாத்தூன்)

பாக்தாத்தின் அப்பாஸிய கலீபாக்களின் வரலாற்றில் ஹாரூன் ரஷீதின் மனைவி ஜுபைதா ஹாத்தூன் அவர்கள் இறைநேச செல்வர்கள் மீது மிகுந்த மரியாதை கொண்டவராக திகழ்ந்தார் புஹ்லூல் தானா (ரஹ்) அவர்களை சுத்தித்து சுவனத்தின் மாளிகையை விலைக்கு வாங்கியவர்

ஜுபைதா அம்மையார் ஹஜ்ஜுக்காக இஹ்ராம் கட்டிக்செல்லும் போது மாதவிடாய் வருகிற நாளாய் இருந்தது இதனால் மிகுந்த கவலையடைந்த ஜுபைதா அவர்கள் , நாயனே... என்னுடைய கர்ப்பப்பையில் இருக்கிற இரத்தத்தை இச் சமயத்தில் நீ தடை செய்திடுவாயானால் உன்னுடைய கஃபாவை நாடி ஹஜ்ஜு செய்ய வருகிறவர்களுக்கு உதவியாக பாக்தாத் டைக்கிரிஸ் நதி (தஜ்லா நதி) தண்ணீரை நான் கொண்டு வந்து சேர்ப்பேன்" என்று நிய்யத்து செய்தார்கள்

அக்காலத்திய பொறியியல் நிபுணர்களைக் கலந்தாலோசித்து ஏறத்தாழ 1600 மைல் பூமியை தோண்டி கால்வாய் அமைத்து கால்வாயைக் கொண்டு வந்தார் "ஐனு ஜுபைதா " "ஜூபைதா கால்வாய் " என்றே பெயரிடப்பட்டு அழைத்து வந்தனர்.

இப்போது சவூதி அரசாங்கத்தினர் தண்ணீருக்கு ஏராளமான வசதிகளை செய்து விட்டதால் அன் கால்வாய் மூடப்பட்டுவிட்டது ஜூபைதா ஹாத்தூன் மரணமான பிறகு ஒரு பெரிய ஸூஃபி அம்மையாரைக் கனவில் கண்டார்.

அம்மையார் சுவனபதியில் உலாவிக் கொண்டிருந்தார் அவரிடம் அந்த ஸூஃபி "ஜுபைதா அவர்களே. - கால்வாய் அமைத்தற்காக இறைவன் உமக்கு இந்த உயர்பதவியைத் தந்தானோ ? என்று கேட்டார்

அதற்கு ஜுபைதா " இல்லை - கால்வாயை அமைத்தற்காக எனக்கு இங்கு எந்தப் பலனையும் தரவில்லை ' நிலையான புகழ் பெற வேண்டும் என்பதற்காக கால்வாயை அமைத்தாய் அவ்வாறே உலகத்தில் நீ புகழ் பெற்று விட்டாய்" என என்னிடம் தெரிவிக்கப்பட்டது

மிகச் சாதாரண ஒரு நற்செயலுக்காக இறைவன் என்னை மன்னித்து இவ்வுயர் பதவியை வழங்கினான் அந்த மிகச் சாதாரண நல் வினை எது தெரியுமா ?

ஒரு முறை நாய் ஒன்று காயம் அடைந்து கடும் வெய்யில் தாகத்தால் தவித்துக் கொண்டிருந்தது கடும் நாவறட்சியால் அதன் நாக்கு வெளியே தொங்கிக் கொண்டிருந்தது

அந்நாய் தண்ணீரைத் தேடிச் செல்ல முடியாத நிலையில் அதன் காயம் இருந்தது

நான் அதற்குத் தண்ணீர் புகட்டினேன் .இறைவனின் திருப்பதிக்காகவே தூய எண்ணத்துடன் செய்தேன் என்றார்கள்

## ஞூஃபியாக்கள் 13



அடர்ந்த காட்டின் நடுவே ஒரு கூடாரம் அதில் அழுக்கடைந்த முரட்டு கம்பளியை சுற்றிக் கொண்டு கழுத்தில் பெரிய ஜபமாலை, கையில் மற்றொரு ஜபமாலை விரல்களுக்கு இடையே நகர்ந்து கொண்டு உதடு முணுமுணுக்க அரை கண்ணறக்கத்தில் பெரிய தவஞானி கோலம்
"அடடே, கள்வர்கள் நிறைந்த காடாமே ., தெரியாம இந்த வியாபாரிகள் கூட்டத்தில் வந்து மாட்டிக் கொண்டேமே அதோ வழிப்பறி கொள்ளையர்கள் வந்து விட்டார்களே" என்று பெரும் பொருளுடைய வியாபாரி ஒருவர் பெரும் பொருளை எடுத்துக் கொண்டு கொள்யையர் கூட்டத்திற்கு தெரியாமல் தப்பி ஓடி மேற்கண்ட கூடாரத்திறகுள் நுழைகிறார்
அதே தவஞானி அதே ஜப மாலை உச்சாடனமாக உதடுகள் முணுமுணுக்கிறது
"பெரியவரே - நான் ஒரு வியாபாரி இந்த காட்டில் கொள்ளையர்கள் எங்கள் வியாபாரி கூட்டத்தினரை குழ்ந்து கொண்டனர் அவர்களுக்குத் தெரியாமல் தப்பி வந்திருக்கி றேன் என் பெரும் பொருளை தாங்கள்தான் அவர்களிடமிருந்து காப்பாற்றி தரணும். "
"அதே அந்த மூலையில் போட்டுப் போ" என்ற சப்தம்
"சரி இந்த தவஞானி பார்த்துக் கொள்வார்"
கூடாரத்தை விட்டு வெளியேறியதும் , அதே கொள்ளையர் கூட்டம் கூடாரத்தை நோக்கி வந்ததும் பதறி அடித்து கூடாரத்தின் பின் பக்கம் வியாபாரி மறைந்து கொள்ள கொள்ளையர்கள் தாங்கள் கொள்ளையடித்த பொருட்களை அதே தவஞானியின் முன்னே குவிக்கிறார்கள்
அவர் தரம் பார்த்து பிரிக்கிறார் இதைக் கண்ட வியாபாரி ,அட டா கொள்ளையர் கூட்டத்திலிருந்து தப்பி அதன் தலைவனிடம் அல்லவா மாட்டிக் கொண்டோம் பொருள் போனால் போகுது உயிர் பிழைத்தால் போதும் என்று தப்பியோட நினைக்கையில் - ...
"வியாபாரியே உள்ளே வா "என்றதும் நெஞ்சம் படப் படக்க வியாபாரி உள்ளே செல்ல "அதோ இருக்கிற உன் பொருளை சரி பார்த்து விட்டு கொண்டு செல் , இனி இந்தக் காட்டில் எங்களைத் தவிர வேறு எந்த கொள்ளை கூட்டமும் இல்லை தாங்கள் தாரா மாக பயமில்லாமல் போகலாம் " என்றார் கொள்ளைக் கூட்டத்தின் தலைவரான அந்த வேடம் தறித்த தவஞானி
இந்த தவ ஞானி வேடம் தறித்தவ இவர் ஒரு நாள் , தன் காதலியைப் பார்ப்பதற்காக மதிலின் மீது ஏறிய பொழுது அவ்வழியே சென்ற வியாபாரி கூட்டத்தில் உள்ள காரி ஒருவர் குர்ஆனை எப்போதுமே சப்தமாக ஓதிக் கொண்டு பயணம் செய்பவர்.
பொய் தவ வேடம் அணிந்த கொள்ளையர் தலைவரின் காதில் காரி
அவர் ஓதிய குர்ஆன் வசனமான

"நம்பிக்கை கொண்டவர்களின் உள்ளங்கள் அல்லாஹ்வை நினைத்தும், அவன் இறக்கி வைத்த சத்திய (வசன)ங்களைக் கவனித்தும் பயப்படக் கூடிய நேரம் (இன்னும்) வரவில்லையா? " குர்ஆன(57 : 16 )
என்றதும் கொள்ளையர் தலைவரின் உச்சியைப் பிடித்து ஒரு குலுக்குக் குலுக்கியது .
"யா அல்லாஹ் அந்த நேரம் இதோ இப்போதே வந்துவிட்டது" என்று அலறினார்
அந்த நிமிடமே மிகப் பெரிய உண்மையான ஞூஃபி ஞானி இந்த உலகத்திற்குக் கிடைத்தார் அவர் பெயர்தான்
" புலைல் இப்னு இயால் (ரஹ்) அவர்கள்

## சூஃபியாக்கள் 14



அடர்ந்த காடு ,நடுவில் சின்ன குடில் ,அதில் ஓர் இளைஞர் சதா இறைவனின் படைப்புகளிலிருந்து அவனை விளங்க முற்படும் தவத்தில் கரைந்து கொண்டிருந்தார்

ஓர் அசாரீ ... "நபி (ஸல்) அவர்களின் வழிமுறையைப் பின்பற்றி இல்லறத்தை தொடர வேண்டாமா ?"

உடனே அந்த இளைஞர் காடு விட்டு நாட்டின் உள்ளே நுழைகிறார்

எதிரே ஒரு பல்லக்கு அதன் திரைச் சீலை விலக, அதிலிருந்த அரசிளங்குமரியை நம்ம இளைஞர் கண்ணில் பட அந்த அழகில் தன்னை மறந்து பல்லக்கு பின் செல்ல அது அரண்மனைக்குள் செல்கிறது

வாயிற் காவலன் இவரைத் தடுத்து நிறுத்த இளைஞர் எத்தனிக்க ,அரசருக்கு விஷயம் தெரிய ,அரண்மனைக்குள்ளே பயங்கர தாக்குததால் சுய நினைவை இழக்கிறார் இளைஞர், விழித்ததும் மறுபடி அரண்மனை நோக்கி புறப்பட பின் தாக்கப்பட இப்படியே தொடர்கிறது

தான் பார்த்த அந்த ராஜ குமரியை நான் மணந்தாக வேண்டும் என்று இறைவனிடம் மன்றாட அவளைப் பார்த்த இடத்திலே அமர்ந்து இறைவனோடு தர்க்கம் செய்ய...

கொஞ்ச நேரத்தில் அரண்மனை காவலர்கள் ஒரு பிணத்தை புதைப்பதற்கு எடுத்துச் செல்ல , விசாரித்ததில் அரசிளங் குமரி சற்று முன் இறந்து போனாள் "

அவளை அடக்கம் செய்த பின் அரண்மனை காவலர்களிடம் அவள் மரணம் பற்றி விசாரிக்கிறார் நம்ம இளைஞர், "ராஜகுமரியை ஓர் இளைஞன் நேசித்ததையும் மன்னர் கண்டிக்கும் போது அந்த இளைஞர் இறந்து போனதாக இளவரசி கேள்விப்பட்டதும் ,தன் அழகால் ஓர் உயிர் பறிபோனது குறித்து அதிர்ச்சியடைந்து மரணித்தாள் " என்பதாக கூறுகிறான் காவலாளி

உடனே இருட்டும் வேளையில் அந்த கப்ரை தோண்டி அவளது உடலை வெளியே எடுத்து விட்டு கபரை முன்போல் அமைத்து விட்டு அவளது உடலோடு காட்டிலுள்ள தன் குடிலில் உடலை சாத்தி விட்டு அதன் முன் ஒரு விளக்கை எரியவிடுகிறார்

இருட்டில் காட்டுவழியில்பயணிப்பவர்களுக்கு குடிதண்ணீர் தேவை ஏற்பட விளக்கு எறிந்த குடிலுக்குள் வருகிறார்கள்

அந்த இளைஞரோ அரண்மனைக் காவலாளிகள் தன்னைத் தேடி வந்து விட்டதாக எண்ணி குடியலை விட்டு வெளியே வந்து அதன் இடுக்கு வழியே பார்க்கிறார்

வந்த பயணிகளில் ஒருவர் மருத்துவர் பெண்ணின் கை நாடிப் பார்த்ததும்

"இந்தப் பெண் இறக்கவில்லை அதிர்ச்சியில் தான் மயக்கமுற்றிக்கிறார"ெ என்று அவளது நெஞ்சை தட்டி பின் பச்சிலை சாற்றை வாயில் ஊற்ற பெண் மயக்கம் தெளிகிறாள்

அந்த இளைஞர் குடிலுககுள் வந்து அத்தனை விபரம் சொல்ல அரசிளங் குமரி அப்போதுதான் அந்த இளைஞரை முதன்முதலாக பார்க்கிறாள் தன்னை விரும்பி தனக்காகவே வாழ்ந்து தனக்காக உயிரை பணயமாக்கி பாடுபட்டதையும் பின் மண்ணோடு மண்ணாக மக்கவிடாமல் தனக்கு உயிர் பிச்சை கொடுத்த அந்த இளைஞரையே வந்த பயணிகள் சாட்சியாக்கி திருமணம் செய்து கொள்கிறாள்

அரண்மனை குடும்பத்தார்களுக்கு தன் மகள் இறந்ததாகவே இருக்கட்டும் என்று தானே அத்தனை பேர் களுக்கும் சொல்லி விடுகிறாள்

காட்டில் வாழ்வு தொடர்கிறது

இல்லற வாழ்க்கையில் முத்து ஒன்று அவளுக்குள் விளைய ஆரம்பிக்கிறது
ஹஜ்ஜுப்பயணம் மேற்கொண்டு கஃபா வந்து சேர அவர்களுக்கு ஓர் ஆண் குழந்தை பிறக்கிறது நபி இப்ராஹீம் (அலை) ஞாபகமாக குழந்தைக்கு " இப்ராஹீம் " பெயர் சூட்டப்படுகிறது
மறுபடியும் இல்வாழ்க்கை காட்டிலே தொடர்ந்தாலும் தன் அன்பு மகனுக்கு குர்ஆன் போதிக்க நாட்டினுள்ள மதரஸாவில் காலையில் விட்டு விட்டு மாலையில் காட்டிற்கு கூட்டிச் செல்ல இப்படியே தொடர்கிறது
மதரஸா உஸ்தாத் ஒரு முறை அரசரை சந்தித்து "உங்கள் மகளுக்கு அரண்மனையில் வைத்து குர்ஆன் போதித்தேன் .அவள் மரணமடைந்தாள். மிகுந்த வருத்தம். இருப்பினும் உங்கள் மகள் சாயலில் அச்சு அசலாக ஒரு ஆண் குழந்தை என்னிடம் குர்ஆன் ஓத வருகிறது அக்குழந்தையைப் பார்க்கும் பொழுதெல்லாம் ராஜகுமாரியின் நினைவு வருகிறது என்றதும்
அரசர் குழநதையை மதரஸாவில் பார்த்ததும் தன் அரண்மனைக்கு தூக்கி வருகிறார்
மாலையில் அந்த இளைஞருக்கு சேதி சொல்லப்படுகிறது அரண்மனைக்கு ஓடோடி வருகிறார் அரசர் இளைஞரைப் பார்த்ததும் "எங்கோ உங்களைப் பார்த்து இருக்கிறேனே" என்று சொல்ல ,
ஆமாம் உங்கள் மகளை மணம் முடிகக வந்த அதே இளைஞன்தான் நான் " என்கிறார்
உடனே அரசர் தன் மகள் மரணத்ததைப் பற்றி சொல்ல ,
இளைஞர் "இல்லை அவள் இறக்கவில்லை , நான் அவளைத் தோண்டி எடுத்து திருமணம் செய்து கொண்டேன் இதோ உங்கள் பேரன்"
என்றதும்
அரசரும் குடும்பத்தாரும் காட்டிற்கு ஓடோடி வருகிறரர்கள் அங்கே மகள் ஏகப்பட்ட கிளிசலும் ஒட்டுமாய் ஆடை உடுத்தி இறைவனை சதா வணங்கி வருபவளாக காண்கிறார்கள்
அரசர் அரண்மனைக்கு அழைக்க, " நான் உங்களைப் பொறுத்தவரை இறந்து போன மகள் என் கணவரைப் பொறுத்தவரை அவரே மீட்டெடுத்த மனைவி இந்த தவ வாழ்வு இந்த காட்டில் நிம்மதியாக இருக்கிறது என்று வர மறுத்து விடுகிறாள்
அரசர் தன் பேரனை அரண்மனைக்கு கொண்டு செல்ல அழுது அழுது அனுமதி கேட்க " நீங்கள் எப்போது வேண்டுமானாலும் அரண்மனையில் உங்கள் பிள்ளையைப் பார்க்கலாம் " என்று உறுதி மொழி கொடுத்து தன் பேரனை அரண்மனைக்கு கொண்டு வந்து ராஜகுமரானாக வளர்க்கிறார்
அந்த தவ இளைஞர் தன் குழந்தைப் பார்க்கும் பொழுதெல்லாம் " யா அல்லாஹ் என் குழந்தை அரண்மனையிலேயே வளர்ந்தாலும் இறுதியில் உன்னுடைய ராஜரிஷியாக ஆக்கி விடுவாயாக " என்று துஆ செய்யாத நாளே இல்லை
அந்த தவ இளைஞர் பெயர்
."அத்ஹம் இப்னு மன்சூர் (ரஹ்) இவர் உமர் (ரலி) அவர்களின் வழித்தோன்றல்
அந்த குழந்தையின் பெயர்
" இப்ராஹீம் இப்னு அத்ஹம் (ரஹ்)
ரஹ்மத் ராஜகுமாரன்

## **சூஃபியாக்கள்15**

இப்ராஹீம் இப்னு அத்ஹம் (ரஹ்) 15

பல்க் நாட்டின் அரியாசனத்தில் அரசோச்சிக் கொண்டிருந்தார்கள் சுல்தான் இப்ராஹீம் இப்னு அத்ஹம்
ஒருவர் கையில்பெட்டிபடுக்கையுடன்திடீரென அரண்மனைக்குள் நுழைந்து எதையோ தேட அப்போது சுல்தான் இப்ராஹீம் அவர்கள் : "யார் நீ ? எங்கே வந்தாய் ? இங்கு என்ன தேடுகிறாய் ?"
."இந்தச் சத்திரத்தில் ஒரு நாள் தங்கி விட்டு செல்லாமென்று வந்தேன்."
இந்த அங்குள்ளவர்களையும் சுல்தான் அவர்களையும் கோபப்பட வைத்தது வந்தவர் சொன்ன வார்த்தை .
" என்ன சத்திரமா இது ? இது என் அரண்மனை . தெரியாதா உனக்கு ?"
" என்ன இது சத்திரமில்லையா ? அவ்விதமாயின் இங்கு உமக்கு முன் எவர் வாழ்ந்தார் ? "
" என் பாட்டனார் "
"அவருக்கு முன் ? "
" என் பாட்டானாரின் தந்தை "
"அவருகக முன் ? "
சுல்தான் இப்ராஹீம் சற்று சிந்திக்க ஆரம்பித்தார்
" இப்படி வந்தவரெல்லாம் தங்கிவிட்டு போனால் இது சத்திரமில்லாமல் என்ன இது ?"
சுல்தான் இப்ராஹீம் நிலை குலைந்து போனார்
ஓரிரவு சுல்தான் படுத்து தூங்கிக் கொண்டிருந்தார் உப்பரிக்க மேல் தளத்தில்
ஆள் நடமாடுவதுப் போன்று சத்தம் கேட்க சுல்தான்அதட்டிக் கேட்டார்
"யார் அங்கே ? "

" எல்லாம் உமக்கு அறிமுகமானவர்தான் வேறு யாருமில்லை "
"யாராக இருந்தால் என்ன அர்த்த ராத்தியில் உப்பரிகை மொட்டை மாடியில் என்ன வேலை ? " .
" என் ஒட்டகம் காணாமற் போய்விட்டது அதனை இங்குத் தேடிக் கொண்டுள்ளேன்"
அக்கேட்டு சுல்தான் இப்ராஹீம் அவர்களுக்கு கடும் கோபம்
" காணாமல் போன உன் ஒட்டகம் என் உப்பரிகையின் மேல் முகட்டிலா மேய வந்தது, நீர் இங்கு வந்து தேடுவதற்கு ?"
"மறதியாளரே ! நீர் என்ன பொற் கட்டிலின் மேல் விரிக்கப்பட்ட மலர் மஞ்சத்தின் மீது படுத்துக் கொண்டு இறைவனைத் தேடிக் கொண்டிருக்கும் பொழுது நான் மட்டும் என் காணாமற் போன ஒட்டகையை இங்கு வந்து தேடக்கூடாதா ? "
சுல்தான் இப்ராஹீம் அவர்கள் ஒப்பரிகைப் பார்த்த போது ஒரு ஆள் இறங்கிப் போய் வதைக் கண்டு பின்னால் ஓடி சென்று அவரை எட்டிப் பிடித்து ..... நீங்கள் யார் ? என்றுக் கேட்டார்
" கிள்று என் பெயர் கிள்று " கூறிவிட்டு போய்க் கொண்டிருந்தார்
சுல்தானுக்கு ஒரு வித மயக்கம் வந்தது
இன்னொரு நாள் இரவு சுல்தான் தூக்கம் ஆட்கொள்ள சோர்வுற்று மஞ்சம் வர, ,, மஞ்சத்தை விரித்து, அதன் மீது மலர் தூவி வைத்த பணிப் பெண் அதன் மீது ஒய்யாரமாக தூங்கிக் கொண்டிருந்தாள்
அன்றைக்கு அவளுக்கு ஓர் ஆசை எத்தனையோ வருடம் மலர் தூவும் இந்த மஞ்சத்தில் இன்று சொற்ப நேரம் படுத்தால் என்ன எண்ணி படுத்த போது மஞ்சத்தின் சுகம் அவளை மயக்கி விட்டது.
சுல்தான் இப்ராஹிம்க்கு அடங்காச்சினம் சவுக்கையால அவளை அடிக்க ஆரம்பித்தார் அவள் முதலில் அலறி அடித்து அழ, பின் சிரிக்க ஆரம்பித்தாள் காரணம் கேட்க
"சிறிது நேரம் இந்த மலர் மஞ்சத்தில் படுத்தறக்கு இத்தனை சவுக்கு அடி என்றால் எத்தனையோ காலம் படுத்தற்கு இறைவன் தாங்களுக்கு இறைவன் எத்தனை பெரிய தண்டனை வழங்குவான் ? என்றெண்ணினேன்.
இந்த வாாத்தைகள் சுல்தான் மனதில் பெரும் மாற்றத்தை ஏற்படுத்தியது
இந்த மாற்றம் அரச பதவியை துறந்து சாதாரண வழிப்போக்கனாய் காட்டிற்குள்ளே போகச் செய்தது
அவர் இப்போது " இப்ராஹீம் இப்னு அத்ஹம் (ரஹ் ) பல்க் நாட்டின் சுல்தானாக இல்லை
இவருடைய தகப்பனார் அத்ஹம் இப்னு மன்சூருடைய துஆ கபூலானது
ஆம் இப்போது சுல்தான் இப்ராஹீம் ராஜரிஷி
இப்ராஹீம் இப்னு அத்ஹம் (ரஹ்)

RAHMATH RAJAKUMARAN இப்ராஹீம் இப்னு அத்ஹம் ஒரு தோட்டக் காவலாளியாக பணியாற்றினார்
ஒரு நாள் தோட்டத்தை பார்வையிட வந்த தோட்டத்தின் எசமான் அவர்களை நோக்கி, "நல்ல இனிப்பான மாதுளையைப் பறித்து கொண்டு வா " என்று கூறினார்
மாதுளம் பழம் பறித்து வர அது புளிப்பாக இருக்கிறது மற்றொன்று பறித்து வா
இப்படியாக 10 பழத்திற்கு மேல் பறித்து கொடுத்தும் ஒன்று கூட இனிப்பாக இல்லை
நீ இந்த தோட்டத்தில் எத்தனை வருடங்கள் காவல்காரனாக இருக்கிறாய் ? எது புளிமாதுளை ? எது இனிப்பு மாதுளை என்பது கூட உனக்குத் தெரியவில்லையே ? என்று எரிச்சலுடன் கூற
அதற்கு அமைதியாக " தாங்கள் என்னை நியமித்திருப்பது தோட்டத்தைக் காவற் காக்கவே யன்றி இங்குப் பழுக்கும் பழங்களை ஒவ்வொன்றாகப் பறித்துத் தின்று ருசி பார்க்கவல்லவே, " என்று கூறினார்
அது கேட்ட தோட்ட எசமான்
"நீ என்ன பெரிய இப்ராஹீம் இப்னு அத்ஹம் மாதிரி பேசுற?
அதற்கு எந்த பதிலும் கூறவில்லை... இதற்கு மேல் இங்கிருந்தால் தன்னை கண்டு கொள்வார் என்றெண்ணி , தாம் வேலையிலிருந்து விலகிக் கொள்வதாகக் கூறியதும்
"இல்லை நீரே தொடர்ந்து இங்கு வேலை பாரும் சம்பளம் உயர்வாக தருகிறேன" என்றார்
"எதற்காக சம்பள உயர்வு?
"உம்முடைய நேர்மைக்காக "
" உழைப்புக்கு ஊதியம் பெறுவதே நியாயம். நேர்மைக்காக ஊதியம் பெறுவது நியாயமன்று . நேர்மையை ஒருபோதும் விலை பேசாதீர்"
மறுகணமே அந்த வேலையை விட்டுப் பிரிந்தார்கள்
பின்புதான் தெரிந்து தோட்ட எசமானுக்கு தம்மிடம் வேலை பார்த்தது இப்ராஹீம் இப்னு அத்ஹம் என்று

## சூஃபியாக்கள் 16




ஸர்மத் ஷஹீது (ரஹ்)

இவர் ஈரானில் யூதராக பிறந்தார்கள் பின் கிறிஸ்தவர்களாக மாறினார்கள் இறை சிந்தனையில் ஆழ்ந்தவர்களாக தாரா ஷிகோவின் நட்பு கிடைத்தது பின் இஸ்லாத்தை தழுவினார்கள்

தொடக்கத்தில் யூதர்களாகவும் கிறிஸ்தவர்களாகவும் இருந்ததால் அந்த நண்பர்களையெல்லாம் சந்தித்து இஸ்லாத்தின் உன்னதம் பற்றி பேச ஆரம்பித்தார்கள் அவர்களிடம் திருக்கலிமா தான் மூல மந்திரம் என்பதையும் அதன் உள்ளார்ந்த பொருள் ரகசியத்தையும் யூத கிற்ஸ்தவ நண்பர்களுக்கு எடுத்துச் சொன்னதை அவர்களில் சிலர் ஸர்மத் (ரஹ்) சொல்லாததையும் சொன்னதாக இட்டுக்கட்டி முஸ்லீம்களிடம் பரப்பினர்கள்

இதற்கிடையில் தாரா ஷிகோவை கொலை செய்தனர் இதனால் இவர்கள் தன்னிலை மறந்து சிறிய ஓட்டுக் கோமனத்துடன் சுற்றித் திரிய ஆரம்பித்தார்கள் சில நேரங்களில் அதுவும் இல்லாமல் இருந்தார்கள்

எவரும் துணிக் கொடுத்தால் அதனை சற்று நேரம் அணிந்து விட்டு தூக்கி எறிந்து விடுவார்கள் சில நேரங்களில் திருக்கலிமாவின் சீரிய ரகசியத்தை வெளிப்படுத்தி பகிரங்கமாக பேச ஆரம்பித்தார்கள்

இவர்களுக்கு கலிமாவே தெரியாது என்று இவர்களின் விரோதிகள் செய்த புகார் மீது இவரைக் திருக்கலிமாவைச் சொல்லுமாறு மார்க்க விற்பன்னர்கள் மற்றும் ஆலீம்கள் வற்புறுத்த அவர்கள் " லாயிலாஹ " என்று கூறி இதற்குரிய விஷயத்தை மட்டும்தான் உங்களிடம் சொல்லி வந்திருக்கிறேன இதற்கே இத்தனை வருடங்கள் ஆகி விட்டது மேற்கொண்டு நான் என்ன சொல்ல வேண்டியது இருக்கிறது என்று அவர்கள் வாய் முணுமுணுத்தார்கள்

மார்க்க விற்பன்னர் இவர்களிடம் "இதற்கு மேற்கொண்டு நீங்கள் கலிமா சொல்ல முடியாதா ?" என்று மிரட்டினர் ஆனால் " இல்லல்லாஹ்" கூறவில்லை ஏனென்றால் இவர்கள் " வாயிலாஹ " என்ற ஆரம்ப பாடத்தில்தான் தான் இருப்பதாக கூறுகிறார்கள் என்பதை கூடியிருந்த சபையோர் முன்னிலையில் ஆலீம்கள் கூறினார்கள்

அதற்கு ஸர்மத் (ரஹ்) அவர்களும் ஒத்துக் கொண்டார்கள் எனவே இவர்களை கொலை செய்ய "பத்வா " கொடுத்தார்கள் அப்போது ஸர்மத் (ரஹ்) அவர்களின் முகத்தில்

புன்முறுவல் பூத்தது கூடவே மணமும் கமிழ்ந்தது

எனவே இவர்களை கண்டம் துண்டமாக வெட்ட வேண்டும் என்று வெட்டிய போது "இல்லல்லாஹ்" மூன்று முறை மொழிந்து விட்டு திருக் கலிமா "லாயிலாஹ இல்லல்லாஹு முஹம்மரஸுல்லாஹ் " என்று கூறியவாறு தனது வலது கையின் கலிமா விரலை உயர்த்தி சொன்னபோது , அந்த வலக்கரத்தை துண்டாக்கினார்கள்

ஸர்மத் (ரஹ்) அவர்களின் அடக்கஸ்தலம் டில்லி ஜாமிஆ மஸ்ஜிதின் வாசலில் உள்ளது

## சூஃபியாக்கள் 17



ஷைகு அலீ அரபி முர்ஸிய்யாயில் 50 வயதில் குழந்தை இல்லையே என்ற கவலையில் இருந்தார்கள்
மஜ்தூப் நிலையில் உள்ள ஒரு சூஃபி "முர்ஸிய்யாவில் உட்கார்ந்து கொண்டு குழந்தை தேட வேண்டாம் பக்தாத்தில் கௌதுல் ஆலம் முஹ்யீத்தீன் அப்துல் காதரிடம் குழந்தையை வாங்கிக் கொள்ளவும், " என்ற கூற
பாக்தாத் பயணம் அவர்களை சந்தித்து குழந்தை பாக்கியம் கேட்க, அவர்கள் " உம் விதிப் பலகையில் மகப் பேறு எழுதப்படவில்லையே " என்று கூற
" இதை கேட்கவா இத்தனை தூரம் பயணம் செய்து வந்தேன். என்று வருத்தப்பட ,
"கவலைப்படாதீர். என்னுடைய விதியில் எனக்கு ஒரு குழந்தை என் முகுகந்தண்டில் இன்னும் பாக்கியுள்ளது அதனை நாம் உமக் குத் தருகிறோம் நீர் என் பின்னே வந்து என் முதுகோடு உம் முதுகை வைத்து உரசுவீராக " என்று கூறினார்
அவ்விதம் செய்து, "பிறக்கும் குழந்தைக்கு முஹம்மது முஹ்யித்தீன் எனப் பெயரிடுவீராக! அவர் தம் காலத்தில் குத்புஸ் ஸமானாக விளங்குவார்

ஹிஜ்ரி 560 ரமலான் பிறை 27 திங்கள் இரவு கி பி 1165 ஆகஸ்ட் 7 ல் பிறந்தார்கள் முஹ்யித்தீன் இப்னு அரபி (ரஹ்) அவர்கள்.
இவர்கள் கணக்கற்ற கராமத் களை செதுள்ளார்கள் அதை குறிப்பிட இத்தளம் போதாது.
முஹ்யித்தீன் இப்னு அரபி (ரஹ்) அவர்கள் எழுதிய 'புத்தூஹாத்துல் மக்கிய்யா" வில் தாம் ஆன்மீக முறையில் நபி இப்ராஹீம் (அலை) அவர்களைச் சந்தித்து
திருக்குர்ஆனை அவர்களிடம் ஓதிக் காட்டியதையும், நபி மூஸா (அலை) அவர்களைச் சாதித்து அவர்களின் கரங்களில் பாவ மன்னிப்பு செய்ததையும், நபி (ஸல்) அவர்களை சந்தித்ததையும் குறிப்பிட்டுள்ளார்கள்
560 அத்தியாயங்கள் அடங்கிய இந்நூல் "இது நான் சுயமாக சிந்தித்து எழுதியதில்லை தெய்வீக உதிப்பின் மூலமே எழுதியுள்ளேன் எழுதப்பட்டுள்ள அனைத்தையும், இறைவன், உதிப்பின் அமரர்கள் மூலம் எனக்குத் தெரியப்படுத்தி அதன் மூலம் எழுதியுள்ளதாகவும் குறிப்பிடுகிறார்கள்

"புத்தூஹாத்துல் மக்கிய்யா" வை மட்டும் எழுதாதிருந்திருப்பின், நெருப்பில் இட்டுக் கொளுத்தப்பட்டிருப்பேன் என்றும் அக்கிதா பில் குறிப்பிடுகிறார்கள்
கிபி 1229 ல் "புஸூஸுல் ஹிகம் " என்ற நூலை எழுதி முடித்தார்கள் . இந்நூல் எழுதுவதற்கு நபி (ஸல் ) அவர்கள் தம் கையிலே ஒரு நூலை வைத்துக் கொண்டு , " நான் கூறுவதை எழுதுக : அதனை உலகிற்கு வெளிப்படுத்துக ' அதனால் மக்கள் பயனடையட்டும் என்று கூறி அதிலுள்ள செய்திகளைத் தமக்குக் கனவில் எடுத்துரைத்தாக அதன் முகவுரையில் குறிப்பிடுகிறார்கள்
இவற்றைத் தவிர "புத்தூஹாத்துல் மதனிய்யா ,கீமியா அல் ஸஆதத் முதலான 300க்கும் மேற்பட்ட நூல்களை எழுதியுள்ளார்கள்
"ஹில்யத்துல் அப்தால் " என்ற நூலை ஒரு மணி நேரத்தில் அவர்கள் எழுதியுள்ளார்கள்
இவர்களுடைய ஆன்மீக மாணவர் ஸத்ருதீன் அவர்கள் இவர்களைப் பற்றி குறிப்பிடும் போது , " எங்கள் ஷைகு, நபிமார்களுடையவும், முற்காலத்து இறை நேசச் செல்வர்களுடைய ஆன்மாக்களுடன் தொடர்பு கொண்டிருந்தனர் இதனை மூன்று வழியில் பெற்றனர்

1 ) இவ்வுலகிற்கு அவர்களின் ஆன்மாக்களை வரவழைத்து, அவர்கள் இவ்வுலகில் வாழ்ந்த உருவில் அவர்களைக் காண்பர்
2) அவர்களைக் கனவில் தரிசிப்பார்கள்
3) தாங்கள், தங்களின் சட உடலை நீத்து அந்த ஆத்மாக்களை சந்திபார்கள்
திருக்குர்ஆனுக்கு விளக்கவுரை 15 பாகங்களுக்கு எழுதிய முடிக்கவும் அவர்களுக்கு உடல் நலக் குறைவு ஏற்பட்டது
இதனால் தன் மாணவரை வைத்து தான் சொல்ல சொல்ல மாணவர் எழுதிக் கொண்டு இருந்தார்
சூரா கஃபு - வில் 65 வசனத்திற்கு விளக்கம் சொல்லிக் கொண்டு இருக்கும் போது

" இவ்விருவரும் அங்கு வந்த போது அவ்விடத்தில் நம் அடியாரில் ஒருவரைக் கண்டார்கள் அவர் மீது நாம் அருள் புரிந்து நமக்குச் சொந்தமானதொரு ஞானத்தையும் நாம் அவருக்குக் கற்பித்திருந்தோம் "
திருக்குர்ஆன் 18 : 65
இவ் வசனத்திற்கு விளக்கம் சொல்லிக் கொண்டு இருக்கும் போதே உயிர் பிரிந்தது
கி.பி 1240 நவம்பர் 16 வெள்ளிக்கிழமை
ஹிஜ்ரி 638 ரபீஉல் ஆகிர் பிறை 28

## சூஃபியாக்கள் 18



உஸ்மான் ஹாரூனி (ரஹ்)
இவர்கள் குராஸான் நாட்டில் ஹாரூன் ஊரில் ஹிஜ்ரி 530-ல் பிறந்தார்கள்
இவர்கள் பகல் ஒரு குர்ஆனையும் இரவில் ஒரு குர்ஆனையும் ஓதி முடிப்பார்கள்
வயது நிரம்ப ஒரு போதும் உணவு உண்ட தில்லை
இவர்களின் ஆன்மீக சற்குரு ஹாஜி ஷரீஃப் ஸிந்தனி ( ரஹ்) ஆவார்கள்
உஸ்மான் ஹாரூனி (ரஹ்) தொடர்ந்து 70 ஆண்டுகளாக நோன்பு நோற்றார்கள் ஐந்து நாட்கள் ஆன போதிலும் நோன்பு திறக்காது இருப்பார்கள்
பக்தாத் அருகில் " ரே "என்ற ஊரில் தீ வணங்குபவர்கள் பெரிய நெருப்பு குண்டம் வளர்த்து தீயை வணங்கிக் கொண்டிருந்தனர் அவர்களிடம் சென்று
' தீயை ஏன் வணங்குகின்றீர்கள்? என்று கேட்க ,
"அது எங்களுக்கு மோட்ச சாம்ராஜ்ஜியத்தைத் தரும் " என்றனர்
மோட்ச சாம்ராஜ்ஜியத்தை பெற்றுத் தரக்கூடியது உங்களது கையை சுட்டெரிக்குமா?
"அது எப்படி சுட்டெரிக்காமல் இருக்கும் நெருப்பின் இயல்பே சுட்டெரிப்பது தானே"
உஸ்மான் ஹாரூனி யக் ஷா என்னுபவரின் கையிலுள்ள குழந்தையைப் பிடிங்கிக் கொண்டு நெருப்பினுள் புகுந்தார்கள் இதனைக் கண்ணுற்ற மக்கள் பதறியடித்து கூப்பாடு போட்டார்கள்
நான்கு மணி நேரத்திற்குப் பிறகு குழந்தையுடன் வெளியில் வந்தார்கள்
குழந்தையை வாரி முத்தமிட்டு "என்ன நடந்தது என்று கேட்க "அப்பெரியாருடன் சுவனப் பூங்காவில் சுற்றித் திரிந்தேன் என்றது. அத்தனை பேரும் இஸ்லாத்தைத் தழுவினர்
"எவனிடத்தில் மூன்று குணங்கள் இருக்கிறதோ அவனை அல்லாஹ் நேசிக்கின்றான்.
1 ) கடல் போன்ற கொடை
2) கதிரவன் போன்ற கருணை
3 ) பூமியைப் போன்ற பணிவு
இயற்கை வஸ்துக்களில் பொதிந்து உள்ள இறைவனின் குணங்களை சொல்லி சொல்லிக் காட்டுவார்கள்
உஸ்மான் ஹாரூனி (ரஹ்) அவர்களுக்கு ஏராளமான ஆன்மீக மாணவர்கள் இருந்தாலும் 4 பேருக்கு மட்டுமே "கிலாபத் "கொடுத்தார்கள்
1) காஜா முயீனுத்தீன் சிஷ்தி (ரஹ்)
2) நஜ்மூத்தீன் ஸக்ரா (ரஹ்)
3) ஷைகு ஸஃ தி லங்கோச்சி (ரஹ்)
4) ஷைகு முஹம்மது துர்க் (ரஹ்)

இதில் காஜா முயீனுத்தீன் (ரஹ்) அவர்கள் மட்டும் 20 வருட காலம் இவர்களுடன் இருந்தார்கள்
பாக்தாத்தில் ஒரு முறை தனியாக தியானத்தில் ஈடுபட்டிருந்தார்கள்
விடிந்ததும் காஜா முயீனத்தின் (ரஹ்) அவர்களை அழைத்து "இதோ எழுதிக் கொள்" என்று மள மள என்று சொல்ல அது 18 அத்தியாயங்கள் வந்தது அதுவே
"அனீசு அர்வாஹ் " என்ற மெஞ்ஞான ரகசியங்கள் பொதிந்த புனித நாலாகும்
இறை இல்லமான கஃபாவை விட்டு பிரியாமல் அங்கேயே இருந்து ஹிஜ்ரி 607 ஆம் ஆண்டு ஷவ்வால் பிறை 6ல் இயற்கை எய்தினார்கள் அவர்களை "ஜன்னத்துல் முஅல்லா" வில் நல்லடக்கம் செய்யப்பட்டது

## சூஃபியாக்கள் 19



ஒரு பயணக் குழு "ரே " நாட்டின் பாலைவனத்தை கடந்து செல்கிறது அக்குழுவில் இளவல் பார்ப்பதற்கு மிக அழகு இல்லை இல்லை பேரழகு வாய்ந்த இளைஞர் பெயர் "யூசுப் இப்னு ஹுசைன் (ரஹ்) " இவரது பேரழகுப் பற்றிஅந்நாட்டு இளவரசிக்கு சேதி கிடைக்க சந்திக்க ஓடோடி வருகிறாள்
இளவரசியை கண்ணுற்ற இளைஞர் விபரம் கேட்கிறார் தங்களை விரும்புவதாகவும் திருமணம் செய்து கொள்ள வந்ததாகவும் கூற , அடுத்த கணம் அவளிட மிருந்து தப்பி இறைவனே .. என்னைக் காப்பாற்று என்று அலறிக் கொண்டு ஓடுகிறார்
அன்று இரவு கனவில் அரசரென ஒருவர் வீற்றிருக்க அவரைச் சுற்றி வானவர்கள் இருக்க . வானவர்களிடம் விபரம் கேட்க வந்திருப்பது நபி யூசுப் (அலை) அவர்கள் யூசுப் இப்னு ஹுசைனை காண வந்திருப்பதாக சொல்லப்படுகிறது
நபி யூசுப் (அலை) அவர்கள் இவர்களைக் கட்டி தழுவி "நீங்கள் இளவரசியிடமிருந்து தப்பியதை .நான் ஜூலைகாவிடம் இருந்து தப்பியதைப் போன்று இருந்தது . இதனால் இறைவன் பெருமைபட்டு உங்களை இறை நேசராக தேர்ந்தெடுத்துள்ளான் நீர் இக்காலத்தின் குத்பான "துன்னூன் மிஸ்ரி (ரஹ்) அவரிடம் சென்று இஸ்முல் அஃலத்தை தெரிந்து கொள்ளுங்கள் " என்று கனவு வந்தது
எகிப்திற்கு வந்து கன்னூன் மிஸ்ரி(ரஹ்) அவர்களைச் சந்தித்து விபரம் சொல்ல அவர்கள் ஒரு பெட்டியைக் கொடுத்து இன்ன இடத்தில் பெரியவர் ஒருவரிடம் கொடுக்கச் சொல்ல , கொண்டு செல்லும் வழியில் , பெட்டிக்குள் ஏதோ ஒன்று ஆடுவது போன்றும் நடமாடுவது போன்றும் இருந்தது

அந்தப் பெரியாரை சந்திக்கும் இடமும் பக்கத்தில் வந்தது பெட்டியை திறக்கவா வேண்டாமா என்ற மனப் பேராட்டத்தின் இறுதியில் பெட்டியை திறந்து விடுகிறார்கள்
பெட்டியில் இருந்து ஒரு சுண்டெலி துள்ளிக் குதித்து தப்பி ஓடியது . "ஆஹா பெரிய தப்பை செய்து விட்டோமோ என்றெண்ணி அந்தப் பெயரியவரிடம் பெட்டியைக் கொடுத்து விபரம் சொல்ல .....
"உம்முடைய மனம் உம்மிடம் கட்டுப்படாமல் இருப்பதால் உம் பொறுமையை சோதிக்கவே துன்னூன் ஒரு சுண்டெலியைத் தந்தார் 'ஒரு சுண்டெலியைப் பத்திரமாகப் பாதுகாக்கத் தெரியாத நீர் எவ்வாறு இஸ்முல் அஃலத்தை பத்திரமாகப் பாதுகாப்பீர்? "அந்த பெரியார் திருப்பி துன்னூன் (ரஹ்) அவர்களிடம் அனுப்பி வைத்தார்
யூசுப் இப்னு ஹுசைன் (ரஹ்) அவர்கள் திரும்ப துன்னூன்(ரஹ்) அவர்களைச் சந்திக்க அவர்கள் 3 உபதேசங்களைச் செய்தார்கள்
1) படித்ததை மறந்து விடு , எழுதி வைத்ததை அழித்து விடு (ஓஸோ தன் " வெற்றுக் கோப்பை " என்கிற தத்துவத்தை இங்கிருந்துதான் கற்றுக் கொண்டாரோ என்னவோ ) இதனால் உம் அகப்பார்வையில் உள்ள திரை அகற்றப்பட்டு விடும்
2) என்னையும் என் பெயரையும் மறந்து விட வேண்டும் என் ஆசான் இவ்வாறு என்னிடம் கூறினார் எனப் பிறரிடம் எடுத்துரைப்பதே ஒரு விதத் தற்புகழ்ச்சியாகும்.
3) நீர் மக்களுக்கு தொண்டு செய்து அவர்களிடமிருந்து ஞானத்தைக் கற்றுக் கொள் . இது இறைப் பொறுத்தைப் பெற்றுத் தரும்
யூசுப் இப்னு ஹுசைன் (ரஹ்) அவர்கள் நெடுங்காலமாக இத்தனையும் செயலாற்றி வெற்றிப் பெற்றார்கள்

## சூஃபியாக்கள் 20



"வலி " என்னும் பதம்"'வலா" என்ற மூலத்திலிருந்து பிறந்தமையால் அப்பதத்திற்கு சமீபம், சாட்சியம் என்று பொருள்படும்
" மனிதன் எனது இரகசியம். நான் அவனது இரகசியம் "
சூஃபியாக்களுக்கு சில அபிர்தமான சக்திகள் எவ்வாறு கிடைக்கப்பெற்றனர் ?
மனிதனை தன்னுடைய பிரதிநிதியாக்கி உலகிலுள்ள எல்லாக் காரியங்களையும் அவன் வசம் ஒப்படைத்து அவனைத் தனக்கும் தன்னுடைய சிருஷ்டிக்களுக்கும் இடையே நடுமையாய் நிறுத்தி, சிருஷ்டிகள் இறைவனுடைய தஜல்லியைக் கொண்டு கரிந்து போகாமல் காப்பாற்றக் கூடிய திரையாக ஆக்கி இருப்பதால், மானிடன் இறைவனுடைய உலூஹிய்யத்துடைய தஜல்லியில் வெளியாகி விட்டான்.
உலூஹிய்யதுடைய தஜல்லியில் வெளியான மனிதன் இறைவனிடத்தில் சொந்தமான சில பதவிகளை மனிதன் கேட்காமலே அல்லாஹ் கொடுத்து விடுகிறான் அவனும் பெறுக் கொள்கிறான
சில சூஃபியாக்களுக்கு தனகது " வலி " தன்மை இருப்பது தெரியாமல் கூட இருந்திருக்கிறது
நாம் பார்த்த வங்காளத்தைச் சேர்ந்தஆயிஷா காத்தூன் அப்படித்தான் இருந்திருக்கிறார்
(சூஃபியாக்கள் 8 பதிவைப் பார்க்கவும்)
இப்பதவியை பெற்ற மனிதன் உலகத்தார் அனைவருக்கும் " ரஹ்மத் "தாகி விடுவான் இப்படிபட்ட மனிதனே "அவுலிய்யா "அல்லது "சூஃபியாகி" என்றும் இறைவனது " கலீபா " என்றுமாகி விடுகிறான்
" என்னுடைய உம்மத்துகளில் நாற்பது நபர்கள் நபி இப்ராஹீம் (அலை) அவர்களுடைய இருதயத்தை உடையவர்களாய் என்றும் இருந்தே வருவர் இறைவன் இந்த நபர்களைக் கொண்டே பூலோகத்தில் வாழ்பவர்களுக்கு பிணிகளைப் போக்குவான் அவர்களுக்காக மழையைப் பொழியச் செய்வான் அவர்களைக் கொண்டுதான் பூலோகத்தில் உள்ளவர்களுக்கு உதவிகள் புரியப்படும் " என்பதாய் நபி (ஸல்) கூறியுள்ளதாக ஹதீஸ் தபறானீயில் காணக் கிடைக்கிறது
" (நபியே) உங்கள் இறைவன் நிழலை எவ்வாறு நீட்டுகிறான் என்பதை நீங்கள் கவனிக்கவில்லையா.? அவன் நாடியிருந்தால் அதனை ஒரே நிலையில் வைத்திருக்க முடியும் குரியனை நிழலுக்கு வழிகாட்டியாக நாம்தான். ஆக்கினோம்
திருக்குர்ஆன் 25 : 45
" 'இவ்வளவு பெரிய ) பூமியை நாம் உங்களுக்கு விரிப்பாக அமைக்கவில்லையா?
அதில் மலைகளை முளைகளாக ஆக்க வில்லையா ?
திருக்குர்ஆன் 78 : 6, 7
இவை அவுலியாக்களைப் பற்றி குறிப்பே ஆகும் இத்தகைய மெய்யடியார்களையே இறைவன் "நிழல்" (ளில்லு) என்றும் .மலை (ஜிபால் ) என்றும் வருணித்துள்ளான்
ஆதாரம் :
(ரூஹுல் பயான் 4 வது பாகம் 199 வது பக்கத்திலும், 10வது பாகம் 293 வது பக்கத்திலும் பார்க்க)
"அவுலியாக்களுடைய முந்தானையைப் பற்றிப் பிடிப்பதில் பயம் வேண்டாம் ஏனெனில் நபி நூஹ் (அலை) அவர்களோடிருக்கையில் வெள்ளத்தைப் Uற்றிய பயம் எதற்கு ? "
ஆகவே அல்லாஹ் அன்பியாக்களைக் கொண்டு அன்று நடத்தியவற்றை இன்று அவுலியா க்களைக் கொண்டு நடத்துகின்றான் அவர்களை முன்னிட்டே உலகமும் நிலை பெற்றிருக்கின்றது
ஆகையால் "அவுலியாக்களை அறிவது - அல்லாஹ்வை அறிவதை விட மிகக் கடினமானது

ரூஹுல் பயான் பாகம் 9 Uக்கம் 531
ரூஹுல் பயான் பாகம் 10 பக்கம் 9
"நிச்சயமாக அல்லாஹ் உடைய அவுலியாக்களுக்கு பயமென்பதும் இல்லை கவலையென்பதுமில்லை"
திருக்குர்ஆன் 10 : 62

## இஸ்லாமும் ஜென்னும்-1

(நிரம்பி வழியும் தேநீர் கோப்பை)



ஜப்பான் மெய்ஜி காலத்தில் ஜென் துறவி " நான் -இன் " என்பவரிடம், பல்கலைக்கழக பேராசிரியர் ஒருவர் ஜென்னைப் பற்றிய சந்தேகத்தை தீர்த்துக் கொள்வதற்காக வந்தார்.
பேராசிரியரை வரவேற்று அமரச் செய்து ஜென் துறவி நான் - இன் கோப்பையில் தேநீரை ஊற்றினார் . கோப்பையின் விளிம்பைத் தாண்டி தேநீர் நிரம்பி வழிந்தது .ஆனாலும் ஊற்றுவதை துறவி நிறுத்தவே இல்லை. பேராசிரியரால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை .
"கோப்பை நிரம்பி விட்டது. மேலதிக தேநீர் அதற்குள் நிரம்பாது "
ஜென் துறவி புன்னகை வழியச் சொன்னார்.
"இந்தக் கோப்பையைப் போலவே , உங்களுக்குள்ளிலும் கருத்துக்களும் , ஊகங்களும் நிரம்பி வழிகின்றன. நீங்கள் உங்கள் கோப்பையை காலி செய்யாத வரையில் நான் எப்படி உங்களுக்கு ஜென்னைப் போதிக்க முடியும் ?
கௌது நாயகம் முகையதீன் அப்துல் காதிர் ஜிலானி அவர்கள் பக்தாத் நகருக்கு வர இருப்பதை அறிந்ததும் பாக்தாத்தின் இஸ்லாமிய பேரறிஞர்கள் ஒன்று கூடி, "பாக்தாத்தில் '"தீன் "என்னும் இஸ்லாம் சிறப்புற்று இருக்க, தாங்களும் பாக்தாத்திற்கு வருகை தர வேண்டுமா ? என்பதை சூசகமாக கௌது நாயகத்திற்கு உணர்த்த தண்ணீர் நிரம்பி வழியும் ஒரு பாத்திரத்தில் தண்ணீர் தளும்ப தளும்ப கொண்டு வந்து வைத்தனர்.
பாக்தாத் அறிஞர்களின் சூசகத்தைப் புரிந்து கொண்டு, தளும்பும் பாத்திர நீரில் பூக்களை அள்ளி போட்டார்கள் .அதாவது நிரம்பி வழியும் தீனை நான் வாசனை (மணக்க ) செய்யவே பாக்தாத் வருகிறேன் என்பதை சூசகமாக உணர்த்தினார்கள் .

**Rahmath Rajakumaran**
ஜென் பாடம் எதையும் நடத்துவது இல்லை .ஏற்கனவே உள்ளதை, உள்ளபடி சுட்டிக் காட்டுவதுதான் ஜென்
"" (இஸ்லாம் மார்க்கம்) மனிதர்களுக்காக அல்லாஹ் ஏற்படுத்திய இயற்கை மார்க்கமாகும். அவன் படைத்த மார்க்கத்தை எவராலும் மாற்றிவிட முடியாது. இதுதான் நிலையான மார்க்கமாகும். எனினும், மனிதரில் பெரும்பாலானவர்கள் இதனை அறிந்து கொள்ளவே இல்லை"
குர்ஆன் ( 30 : 30 )
**Rahmath Rajakumaran**
இஸ்லாத்தில் உலகப் புகழ் பெற்ற அத்தனை தத்துவங்களும் அமைந்து இருக்கிறது என்பதைச் சுட்டிக் காட்டவே ஜென் தத்துவத்தை இப்போதைய ஆய்வுக்கு எடுத்தேன் .

**இஸ்லாமும் , ஜென்னும்-2**

(சந்தேகச் சுமை )



தான்சேன் என்கிற ஜென் துறவி தன் சீடருடன் பயணம் மேற்கொண்டார். வழியில் ஒரு நதி குறுக்கிட்டது .அதில் இடுப்பளவு நீர் இரு கரைகளிலும் மோதி, புரண்டு புரண்டு பாய்ந்து கொண்டிருந்தது .

நதி நீரைக் கவலையுடன் பார்த்தபடி கரையில் அமர்ந்திருந்த ஓர் இளம் பெண், "என்னை தூக்கி கொண்டு அக்கரையில் கொண்டு விட முடியுமா ? என்று

தான்சேனிடம் கேட்டாள்.

அவர் அவளைச் சுமந்து நதியின் மறுகரையில் இறக்கி விட்டார்.

மீண்டும் சீடருடன் தமது பயணத்தைத் தொடர்ந்தார்.

சில மணி நேரங்கள் கழித்து சீடர்

தான்சேனிடம் திடீரென்று கேட்டார் :

"துறவிகள் பெண்களைத் தீண்டக்கூடாது என்றல்லவா எண்ணியிருந்தேன்? "

தான்சேன் பலமாக சிரித்தார் : "அவளை

நான் எப்போதோ இறக்கி விட்டேனே ? இன்னமும் நீ ஏன் அவளை சுமக்கிறாய் ?"

அன்னை ஸஃபிய்யா (ரலி அன்ஹா) அறிவித்தார் :

" நபி (ஸல்) அவர்கள் ரமலானில் கடைசிப் பத்து நாட்களில் இஃதிகாப் இருக்கும் போது அவர்களை சந்திக்க நான் செல்வேன் . சற்று நேரம் அவர்களுடன் பேசிவிட்டு எழுவேன்.

அப்போது நபி (ஸல்) அவர்களும் என்னுடன் எழுந்து பள்ளியின் வாசல் வரை வருவார்கள் .நான் கிளம்பி , உம்மு ஸலமா (ரலி அன்ஹா) அவர்களின் வீட்டு வாசலை அடைந்த போது, அன்ஸாரிகள் இருவர் நடந்து சென்றனர்.

நபி (ஸல்) அவர்கள் அவர்களுக்கு ஸலாம் கூறிவிட்டு , " நில்லுங்கள் , இவர் என் மனைவி ஸஃபிய்யா பின்த் ஹுயை ஆவார் " எனறு சற்று உரைத்த குரலில் கூறினார்கள்.

அவ்விருவரும் ஆச்சரியத்துடன் , "ஸுப்ஹானல்லாஹ் " என்றனர்.

இவ்வாறு நபி (ஸல்) அவர்கள் கூறியது அவ்விருவருக்கும் உறுத்தியது.

அப்போது நபி (ஸல்) அவர்கள் . "நிச்சயமாக ஷைத்தான் மனிதனின் ரத்த நாளங்களில் ஊடுருவி இருக்கிறான் .உங்கள் உள்ளங்களில் தவறான எண்ணத்தை அவன் போட்டு விடுவான் என நான் அஞ்சுகிறேன் எனக் கூறினார்கள் . (புகாரி 2035 )

**இஸ்லாமும் , ஜென்னும்-3**

(மிகச் சாதாரணம்)

"பொக்கோஜு " என்ற ஒரு பெரிய ஜென் துறவியிடம் , " நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள் ?" என்று கேட்டபோது,

"நான் மிகச் சாதாரண வாழ்க்கை வாழ்கிறேன். என் கொள்கை இயற்கையைச் சார்ந்தது. அதாவது பசி எடுத்தால் சாப்பிடுவது , தூக்கம் வந்தால் தூங்குவது. அவ்வளவுதான்..!" என்றார் அந்த ஜென் துறவி .

" இவ்வளவு பெரிய துறவி , இவ்வளவு சாதாரணமாகச் சொல்கிறாரே , உண்மை இதுதானா..? அல்லது எதையாவது மூடி மறைக்கிறாரா...? என்று கேள்வி கேட்டவர் நினைத்தார். அதனால்,

" நீங்கள் செய்யும் காரியங்களில் எந்தத் தனித்தன்மையும் காணப்படவில்லையே நீ எப்படி பெரிய துறவி...?"' என்றார்.

"ஆமாம் , எந்தத் தனித்தன்மையும் கிடையாது .அதுதான் ரொம்ப முக்கியம் " என்றார் துறவி

"பசித்தால் புசிப்பது, உறக்கம் வந்தால் உறங்குவது இதைதான் எல்லோரும்தானே செய்கிறார்களே...? "

ஜென் துறவி சிரித்தார் .

"அப்படியல்ல. அவர்களுக்கும் எனக்கும் வேறுபாடு உண்டு. நீங்கள் சாப்பிடும் போது உங்கள் மனம் சாப்பிட்டில் இருக்காது. அங்கும் இங்குமாக அலை பாயும் . எதை எதையோ நினைத்துக் கொண்டும், பேசிக் கொண்டும் சாப்பிடுவீர்கள். நீங்கள் சாப்பிடும் போது நீங்கள் அங்கே இருப்பதில்லை . நான் அங்கே இருக்கிறேன். நான் சாப்பிடும் போது சாப்பிட மட்டுமே செய்கிறேன். வேறு சிந்தனை எதுவும் எனக்குக் கிடையாது.
நீங்கள் தூங்கும் போது கூட தூக்கத்தில் நீங்கள் இல்லை. கவலையில், சிந்தனையில் , குழப்பத்தில், கனவுகளில் அலைகிறீர்கள் . நான் அப்படி அல்ல. தூக்கத்தின் போது நான் தூங்க மட்டுமே செய்கிறேன். சாப்பிடும் போது நான் சாப்பாடாகி விடுகிறேன். நான் நடக்கும் போது நடத்தல் மட்டுமே. அங்கு பொக்கோஜு இல்லை. எதைச் செய்கிறேனோ , அதுவாகி விடுவதுதான் என் இயல்பு. இதுதான் மற்றவர்களுக்கும் எனக்கும் உள்ள வித்தியாசம்.... என்றார் பொக்கோஜு துறவி.
அண்ணலெம் பெருமானார் நபி (ஸல்) அவர்களைப் பார்த்து அக்கால மக்கள்...
"இந்த தூதருக்கு என்ன நேர்ந்தது ? அவர் (நம்மைப் போலவே) உணவு உண்ணுகிறார். கடைகளுக்கும் செல்கிறார் , (அவர் இறைவனுடைய தூதராக இருந்தால்) அவருக்காக ஒரு வானவர் இறக்கப்பட்டிருக்க வேண்டாமா ? அவ்வாறாயின் அவர் அவருடன் இருந்து கொண்டு அவரும் அச்சமூட்டி எச்சரிக்கை செய்து கொண்டிருப்பாரே..!
அல்லது அவருக்கு யாதொரு புதையல் கொடுக்கப்பட வேண்டாமா ? அல்லது அவர் உணவு உண்ண வேண்டிய யாதொரு சோலை அவருக்கு இருக்க வேண்டாமா ..? ( என்று கூறுகின்றனர் )
அன்றி, இவ்வக்கிரமக்காரர்கள் (நம்பிக்கையாளர்களை நோக்கி ) "நீங்கள் சூனியம் செய்யப்பட்ட ஒரு மனிதரையே பின்பற்றுகின்றீர்கள்." என்றும் கூறுகின்றனர்.
திருக்குர்ஆன் : ( 25 : 07, 08 )
நபி (ஸல்) அவர்கள் நம்மைப் போன்றே மனிதர்தான். ஆனால் அவரைப் போல் நாம் இல்லை .
மேலும் அவர்களுக்கு இறைவன் புறத்திலிருந்து "வஹி " என்னும் இறைக்கட்டளை வந்து கொண்டு இருக்கிறது என்பதை அக்கிரமக்காரர்கள் அறிவார்களா...?

**Rahmath Rajakumaran**
ஜென் எதையும் கற்பிப்பது இல்லை.
அதன் பணி நம்மைத் தட்டி எழுப்பி . "விழிப்புடன் இரு" எனச் சொல்வது மட்டுமே..
**M M Deen**
அற்புத பதிவு. கௌதும் ஆலத்திடம் நீங்கள் செய்த அற்புதமான செயல் என்ன வென்று கேட்டார்கள். ஒன்றுமில்லை 40 வருடங்களாக முதல் வரிசையில் நின்று தொழுகிறேன். அதுதான் என்றார்கள்.
நினைத்துப் பார்க்கும் போது இதைவிட பெரிய அற்புதம் வேறு என்ன வேண்டியதிருக்கிறது.
**Abdul Hakeem Chinthamani**
முஹ்யித்தீன் அப்துல் காதர் ஜெய்லானி அவர்களிடம் ஒரு சீடர் கேட்டார் 'நீங்கள் நபிகளாரின் சுன்னத்துகளை சரிவர பேணுவதற்கு என்ன ஆதாரம்' எனக் கேட்க அவர் கூறினார்.'இத்தனை ஆண்டுகளாக நான் தொழுகையில் தக்பீர் தஹ்ரீமாவைத் தவறவிட்டதுண்டா எனக்கூற சீடர் :இல்லை கவ்துல் அஃலம் அவர்களே என்று கூற இது ஒன்று போதாதா புனித நபிகளாரின் சுன்னத்துகளைப் பேண எனப் பதிலளித்தார் ஜீலானி அவர்கள்.

## இஸ்லாமும், ஜென்னும்-4

(தாயின் காலடி)



யாங் ஃபு என்ற இளைஞன் தன் பெற்றோரை நீங்கி, குருவைத் தேடிப் புறப்பட்டான். வழியில் ஒரு ஜென் துறவிவைச் சந்தித்தான். ஆன்மீகத்தில் சிறக்க விரும்புவதாக அவரிடம் தெரிவித்தான் .

"வேறு யாரோ ஒரு குருவைத் தேடிப் போவதை விட புத்தரையே நீ சந்திக்கலாமே...! " என்றார் அவர்.

"புத்தரா... அவரை எங்கே காண முடியும்....?" என்று யாங் ஃபு பரபரத்தான்.

"நீ வீட்டுக்குத் திரும்பும் போது , தோளில் போர்வை போர்த்தி, காலணிகளை மாற்றிப் போட்டுக் கொண்டு ஒரு நபர் உன்னை எதிர்கொள்வார். அவரே புத்தர் " என்றார் அந்த ஜென் துறவி .

யாங்ஃபு அவசரம் அவசரமாக வீடு திரும்பினான்.

தன் மகனை வரவேற்கும் பரபரப்பில் .அவன் தாய் காலணிகளை மாற்றிப் போட்டுக் கொண்டபடி தோளில் அவசரமாக போர்த்திய போர்வையுடன் கதவைத் திறந்தார் .

தன் தாயை அந்த கோலத்தில் பார்த்த யாங்ஃபு ஞானம் பெற்றான்.

நபிகளாரிடம், நபித்தோழர் ஜாஹிமா (ரலி) அவர்கள் :

"இறைத்தூதர் அவர்களே..... அறப்போரில் கலந்து கொள்ள விரும்புகிறேன்.. இது குறித்து தங்களிடம் ஆலோசிக்கவே வந்தேன்" என்றார்

அதற்கு நபிகளார் : " உமக்கு அன்னை இருக்கிறாரா ?" என்று வினவ,

"ஆம் இருக்கிறார்கள்"

"தாயை முதலில் கவனி -சொர்க்கம் தாயின் காலுக்கு அடியில் இருக்கிறது.

ஆதாரம் - நஸயீ

## இஸ்லாமும் ஜென்னும் -5

(கபாலமும் , ஊசியின் காதும் )

ஜப்பானில் லிபோ என்ற ஒருவன் இளமையிலிருந்தே புத்தகங்கள் படிப்பதில் பேரார்வம் கொண்டவன் ."பத்தாயிரம் நூல் படிந்த புத்திசாலி " என்ற பட்டம் கூட அவனுக்கு உண்டு.அதில் அவனுக்கு தற்பெருமையாகவும் இருந்தது .

லிபோ, ஒரு ஜென் குருவைச் சந்தித்தான்.

"குருவே... , எனக்கு ஒரு சந்தேகம். விமல கீர்த்த நிர்த்தேச சூத்திரத்தில் .மேரு மலையைக் கூட ஒரு கடுகுக்குள் அடைத்து விடலாம் " என்று எழுதப்பட்டுள்ளதே ... இது பெரிய உளறல் இல்லையா..? இது எப்படி சாத்தியம் ? என்று கேட்டான்.

"நீ இதுவரை எத்தனை புத்தகங்கள் படித்திருப்பாய்..?"

" பத்தாயிரத்தைத் தாண்டி விட்டது குருவே "

"இன்னும் எத்தனை புத்தகங்கள் உன்னால் படிக்க முடியும்..?"

"உடல் தளர்ந்து படுத்து விட்டாலும், என் இறுதி மூச்சு வரைக்கும் படுத்தபடியே படிக்க வேண்டும் என்று எண்ணியிருக்கிறேன் குருவே...''

" இப்படிப் படிக்கும் பல்லாயிரக்கணக்கான புத்தகங்களை அடைத்து வைக்கும் அளவுக்கு உன் சிறிய கபாலத்தில் இடம் இருக்கிறதா, ..?
என்று ஜென் குரு சிரித்தபடியே கேட்டு விட்டு நடையைத் தொடர்ந்தார்.
"நிச்சயமாக எவர்கள் நம்முடைய வசனங்களைப் பொய்யாக்கி, அதனைப் புறக்கணிப்பதைப் பெருமையாகக் கொண்டார்களே, அவர்களுக்கு வானத்தின் வாயில்கள் திறக்கப்பட மாட்டாது. ஊசியின் காதில் ஒட்டகம் நுழையும் வரையில் அவர்கள் சுவனபதியை அடையவே மாட்டார்கள். குற்றவாளியை இவ்வாறே நாம் தண்டிப்போம் "
குர்ஆன் ( 7 : 40 )

**Rahmath Rajakumaran**
மேற்கண்ட குர்ஆன் வசனத்தில் " அல்ஜமல் " என்று வாசித்தால் ஒட்டகம் என்ற பொருளில் ."ஊசியின் துவாரத்தில் ஒட்டகம் நுழையும் வரை " என்று அர்த்தம் வரும் என்பதாகஇப்னு மஸ்ஊத் (ரலி) .அபுல் ஆலியா .ளஹ்ஹாக் (ரஹ்) , ஹசன் பஸ்ரி(ரஹ்) ஆகியோரின் கருத்து
ஆனால் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் இதை
"அல் ஜும்மல் " என்று வாசித்திருக்கிறார்கள் இதன் படி "ஊசி துவாரத்தில் கெட்டியான கயிறு நுழையும் வரை " என்று பொருள் விரியும்.
கப்பலைக் கரையில் கட்டி வைக்கப் பயன்படும் உறுதிமிக்கக் கயிறுகளைக் குறிக்கும் என்கிறார்கள்
இக் கருத்தை சயீத் பின் ஜுபைர் (ரஹ்) போன்றவர் கள் ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள்
" அல்ஜமல் " _ ஒட்டகம்
" அல்ஜும்மல் "- கெட்டியான கயிறு
உங்களுக்கு எது சௌகரியமோ அதை எடுத்துக் கொள்ளுங்கள்
இதுதான் குர்ஆனின் அற்புதம்

## இஸ்லாமும் , ஜென்னும்-6
( புத்தமும் , இஸ்லாமும் )

ஜப்பானில் மெத்த படித்த ஒருவன் புத்த துறவியிடம், "புத்தம் என்றால் என்ன ?"
"சணல் கயிறைக் காட்டி, இதுதான்
புத்தம் "
அவன் குழப்பத்துடன் வேறு ஒரு புத்த துறவியிடம் போய், அதே கேள்வியைக் கேட்டான் .
அரளிப் பூவைக் காட்டி, "இதுதான் புத்தம் "
மேலும் குழப்பம் அடைந்து , அதே அந்த கேள்வியை மூன்றாவது புத்த துறவியிடம் கேட்டான்.
அந்த துறவி தான் அணிந்திருக்கும் நீளமான அங்கியைக் காட்டி , "இதுதான் புத்தம் "
கடைசியாக ரொம்பவும் குறைவாக பேசக் கூடிய பெரிய புத்தத் துறவியிடம் ,
" ஐயா .... நான் பல புத்த துறவிகளிடம் புத்தம் பற்றி கேட்டேன் .ஒருவர் சணல் கயிறு , இன்னொருவர் அரளிப் பூ மற்றொருவர் அங்கி என்கிறார்கள் .
நீங்கள் சொல்லுங்கள் புத்தம் என்றால் என்ன ?
பெரிய புத்த துறவி சிரித்தார்,
" வார்த்தைகளில் ஏது புத்தம் ? அது வாழ்க்கையில் இருக்கிறது."
நஜ்த் பகுதியைச் சேர்ந்த ஒருவர் பரட்டை தலையுடன் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "இஸ்லாம் என்றால் என்ன ?"
"இஸ்லாம் என்பது இரவிலும் , பகலிலும் ஐவேளைத் தொழுகைகள்"
"அத் தொழுகையைத் தவிர வேறு ஏதாவது உண்டா ?"
"நீர் விரும்பிச் செய்தாலே ஒழிய வேறு இல்லை அடுத்து ரமலான் மாதம் நோன்பு நோற்பதாகும்"
" அந் நோன்பு தவிர வேறு ஏதாவது உண்டா ?"
"நீர் விரும்பிச் செய்தாலே ஒழிய வேறு இல்லை .அடுத்து ஸகாத் (தர்மம்) கொடுப்பதாகும் "
"அத் தர்மம் தவிர வேறு ஏதாவது உண்டா ?"
" நீர் விரும்பிச் செய்தாலே ஒழிய வேறு இல்லை .
உடனே கேள்வி கேட்டவர், "அல்லாஹ்வின் மீது ஆணையாக நான் இவற்றை விட கூட்டவும் மாட்டேன், குறைக்கவும் மாட்டேன்."
என்று கூறி சென்று விட்டார்.
"இவர் கூறியதை செயல்படுத்திக் கொண்டால், வெற்றி அடைந்து விட்டார் .
புகாரி 46
புத்தமோ . இஸ்லாமோ வார்த்தையில் இல்லை ; வாழ்க்கையில் இருக்கிறது.

## இஸ்லாமும் , ஜென்னும்-7

(விரலும், நிலவும்) 31-12-2017



ஜென் குரு ஹூனெங் தம் ஆசிரமத்தில் அமர்த்திருந்தார் .அவரை தரிசிக்க பிரம்மசாரிணி வந்தாள் .
"குருவே...! நான் புத்தரின் "நிப்பாணா" என்னும் நிர்வாண சூத்திரத்தைப் பல ஆண்டுகளாகத் திரும்பத் திரும்ப படித்து வருகிறேன் .இன்னும் சில இடங்கள் எனக்கு விளங்கவில்லை. அவற்றுக்கு நீங்கள் விளக்கம் அளிப்பீர்களா குருவே..?"
"அடடா... எனக்கு எழுதப் படிக்கத் தெரியாதேம்மா.. உனக்கு புரியாத பகுதிகளைப் படித்துக் காட்டு .என்னால் உதவ முடிகிறதா என்று பார்க்கிறேன்" என்று குரு கூறினார்.
சிஷ்யை அதிர்ச்சியடைந்தாள்....!
"என்னது.... உங்களுக்கு எழுதப் படிக்கத் தெரியாதா ...? எழுத்தறிவில்லாத நீங்கள் எவ்வாறு அந்த வேத ஞான நூலுக்கு உங்களால் விளக்கம் அளிக்க முடிந்தது ..? என்று கேட்டாள் அவள்
குரு நிலவை ஆள்காட்டி விரலால் சுட்டிக் காட்டினார் . " இந்த விரல் இல்லையென்றாலும் அந்த நிலவை நீ பார்க்க முடியும் அல்லவா...?
"எவர்கள் எழுதப் படிக்கத் தெரியாத நம் தூதராகிய இந்த நபியைப் பின்பற்றுகிறார்களோ அவர்கள் தங்களிடமுள்ள தவ்ராத்திலும் இன்ஜீலிலும் இவருடைய பெயர் எழுதப்பட்டிருப்பதைக் காண்பார்கள் .
இத்தூதரோ அவர்களை நன்மையான காரியங்களை செய்யும்படி ஏவி, பாவமான காரியங்களிலிருந்து விலக்குவார்.
நல்லவைகளையே அவர்களுக்கு ஆகுமாக்கி வைப்பார். கெட்டவற்றை அவர்களுக்குத் தடுத்து விடுவார். .... குர்ஆன் ( 7 : 157 )
நபி (ஸல்) அவர்கள் நபிமொழியின் படி வாழ்ந்து காட்டியவர்கள் அவர்களின் நபிமொழியை மனப்பாடம் செய்தவர்கள் சுமார் 5 லட்சத்திற்கு மேலானவர்கள்.இந்த 5 லட்சம் பேர்களின் பெயர்கள் நபிமொழி ஹதீஸ்களில் பதிவு செய்தது மட்டும் அல்லாமல், அவர்களின் வாழ்க்கை வரலாறும் பதிவு செய்யப்பட்டிருக்கிறது. புகழுக்குரியவரான நபியவர்களின் வார்த்தையும் வாழ்வையும் பேணி காத்தவர்களின் வாழ்க்கையும் பாதுகாக்கப்பட்டு புகழுக்குரியவர்களாக கருதப்படுகிறார்கள் .
எழுதப் படிக்கத் தெரியாதவர்தான் நபியவர்கள் இருப்பினும் ,குர்ஆனின் ஒவ்வொரு எழுத்தின் அகமியமும் தெரிந்தவர்கள் .

## இஸ்லாமும் , ஜென்னும்-9

(கற்ற அறிவு)
அந்த மடாலயத்தின் தலைமை ஜென் குருவுக்கு வயதாகிவிட்டது. தனக்குப் பின் மடாலயத்தின் தலைமைப் பொறுப்பை ஒப்படைப்பதற்காகத் தமது தலைமைச் சீடனை அழைத்து வருமாறு ஆள் அனுப்பினார்.
தலைமைச் சீடனோ் ஊர் ஊராகச் சென்று குருவிடம் தான் கற்றதை மக்களுக்கு எடுத்துச் சொல்லிக் கொண்டிருந்தான்.
ஏதோ ஓர் ஊரில் இருந்தவனிடம் குரு அழைக்கிறார் என்ற செய்தி சென்றது. உடனேயே மடாலயத்துக்குத் திரும்பினான். குருவின் முன்னால் சென்று பணிவாக அமர்ந்தான்.
"எனக்கு வயதாகிவிட்டது . எனது ஆன்மீக வாரிசாக உன்னை அறிவிக்கிறேன். எனக்குப் பின் மடத்தின் தலைமைப் பொறுப்பை ஏற்றுக் கொள்ளப் போகிற உனக்கு இந்த ஞான புத்தகத்தை அளிக்கிறேன். இது எல்லா பிரச்சனைகளையும் தீர்க்க வழி சொல்லப்பட்டிருக்கிறது."
என்று குரு அவனிடம் ஒரு பழமையான நூலை நீட்டினார்.
"குருவே.. உங்களிடமிருந்து இதுவரை நான் கற்றுக் கொண்டவையே எனக்குப் போதுமானது. இந்த பழமையான நூலில் வெறும் வார்த்தைகள் தானே இருக்கின்றன. எனக்கு வேண்டாம்" . என்று சீடன் புத்தகத்தை வாங்க மறுத்தான்
"மறுக்காதே இது பல தலைமுறை தலைமுறையாக ஒவ்வொரு குருவும் தன் வாரிசாகக் கருதப்படும் சீடனுக்கு வழக்கப்படும் புனித புத்தகம்.. ஏற்றுக் கொள்"
"வெறும் வார்த்தைகளானது அல்ல வாழ்க்கை . வாழ்க்கை முழுவதும் நற்செயல்களால் நிரப்பப்பட வேண்டும் .அதற்குரிய மனப்பக்குவத்தை என் குரு எனக்களித்திருக்கிறார் ." என்று கூறி , குருவுக்கு எதிரில் எரிந்து கொண்டிருந்த மடாலயத்தில் நெருப்புக் குண்டத்தில் அந்த புத்தகத்தை வீசி எறிந்தான்.

முஆத் இப்னு ஜபல் (ரலி) அவர்களை ஏமனுக்கு கவனராகவும் .தலைமை நீதிபதியாகவும் நபி(ஸல்) அவர்கள் அனுப்ப வைக்க முடிவு செய்து அவர்களின் திறமையை சோதிக்க,
"ஒரு பிரச்சனைக்கு தீர்வு எப்படி எடுப்பீர்கள் ?"
" குர்ஆனிலிருந்து அப் பிரச்சனைக்குரிய தீர்வை எடுப்பேன் "
"குர்ஆனிலிருப்பதை நீர் பெற்றுக் கொள்ள முடியாவிட்டால் என்ன செய்வீர் ? "
நபி (ஸல் ) அவர்களின் வாழ்வும் வாக்கும் ஒரு சேர அமையப் பெற்ற ஹதீஸ்களில் இருந்து அப் பிரச்சனைக்குரிய தீர்வை எடுப்பேன்"
"ஹதீஸ்களில் இருப்பதை நீர் பெற்றுக் கொள்ள முடியாவிட்டால் என்ன செய்வீர் ?"
"அப்பிரச்சனைக்குரிய தீர்வை முழு மூச்சாக தீவிரமாக ஆராய்ந்து கற்ற அறிவைக் கொண்டு தீர்வு செய்வேன்"
நபி (ஸல்) அவர்கள் முஅஃது இப்னு ஜலல் (ரலி) அவர்களின் நெஞ்சைத் தட்டிக் கொடுத்து துஆ செய்தார்கள்.
மிஷ்காத் பக்கம் 324 .
மேலும் திர்மீதி ,அபூ தாவூத் ,

## இஸ்லாமும் , ஜென்னும் -10 (அவரவர் பெறுதல்)

புகழ் பெற்ற ஜென் தத்துவங்களையும் கவிதைகளையும் படித்திருந்த சீடனுக்கு ஜென்னைப் பற்றி முழுமையாகத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவல்.
தகுந்த குருவைத் தேடி நாடெங்கும் அலைந்து இறுதியில் பலரும் உயர்வாகக் கூறிய ஒரு ஜென் குரு வாழும் மடாலயத்திற்கு வந்து சேர்ந்தான் .
அங்கே ஜென் குரு கட்டிலில் ஓய்வாகப் படுத்தப்படி , ஜன்னலுக்கு வெளியே தெரிந்த மரங்களை ஒன்றில் பின்னங்கால்களில் அமர்ந்திருந்த அணில் ஒன்று, ஒரு கொட்டையை லாவகமாக உடைத்து வெகு சுவாரசியமாக உண்டு கொண்டிருந்ததைக் கூர்ந்து கவனித்து ரசித்துக் கொண்டிருந்தார்.
குருவை நெருங்கிய சீடன் , " ஐயா எனக் கொரு ஐயம். அதைத் தாங்கள்தான் தீர்த்து வைக்க வேண்டும்." என்று பணிவுடன் கூறினான்.
அவனது வருகையால் கவனம் கலைந்த குரு " கேள்" என்றார்.
அந்த சீடனும் மகிழ்ச்சியுடன் , "குருவே ஜென் என்றால் என்ன ...? என்று அவரிடம் கேட்டான்.
" சொல்றேன் . அதற்கு முன் அவசரமாக எனக்குச் சிறுநீர் கழிக்க வேண்டும் . அந்த அற்ப வேலையை மட்டும் எனக்காக நீ செய்து விட்டு வந்து , அப்புறமா கேள் .... என்றார் ஜென் குரு.
"(நாம் பிரார்த்தனை செய்து) உண்மையாக அழைக்கத் தகுதி உடையவன் அவனே, எவர்கள் அவனையன்றி (மற்ற பொய்யான தெய்வங்களைப் பிரார்த்தனை செய்து) அழைக்கின்றார்களோ அவர்களுக்கு அவை யாதொன்றையும் கொடுத்து விடாது.
(அல்லாஹ்வையன்றி மற்றவற்றை அழைப்பவர்களின் உதாரணம்) தண்ணீர் தானாகவே தன் வாயில் சென்று விட வேண்டுமென்று கருதி, தன் இரு கைகளையும் ( நீட்டி அள்ளிக் தானாக குடிக்காமல் ) விரித்துக் கொண்டே இருப்பவனைப் போல் இருக்கிறது.
(அதனை அவன் தன் கையைக் கொண்டு அள்ளிக் குடிக்காத வரையில் அவனுடைய) வாயை அது அடைந்து விடாது .
நிராகரிப்பவர்கள் செய்யும் பிரார்த்தனை இத்தகைய வழிகேடாகவே இருக்கிறது.
குர்ஆன் : ( 13 : 14 )

## இஸ்லாமும், ஜென்னும்11

(கொள்ளளவு)
அன்று மடலாயத்தில் ஒரே பரபரப்பு . ஜென் குருவிடம் பல வருடங்கள் பயிற்சிப் பெற்ற சீடர்கள் இன்று துறவிகளாக வெளியேறப் போகிறார்கள் .
வெளியே மழை கொட்டோ கொட்டென்று கொட்டி தீர்க்கிறது.
ஜென் குரு அமைதியாக இருந்து விட்டு, சீடர்களைப் பார்த்து , "உங்களுக்கு ஏதேனும் சந்தேகம் இருக்கிறதா ?" என்று வினவுகிறார்.
சீடர்கள் அமைதியாக இருக்கிறார்கள் .
அதில் ஒரு சீடன் எழுந்து, "குருவே எனக்கொரு சந்தேகம் . நீங்கள் எங்கள் அனைவருக்கும் ஒரே மாதிரியாகத்தான் ஜென்னைக் கற்றுக் கொடுத்தீர்கள் .
ஆனால் சீடர்களாகிய நாங்கள் புரிதல்களில் ஒவ்வொருவரும் ஒவ்வொரு அளவுகளில் புரிந்து கொண்டோம் . அதெப்படி....?"
" மழையில் நனைந்து , பூமியில் நடந்து பார்" என்றார் குரு.
" அவன்தான் வானத்திலிருந்து மழையை இறக்கினான் ; அது பொழிகின்ற நீருக்குத் தக்கவாறு ஓடைகள் அவற்றின் அளவுக்குத் தக்கப்படி நீரைக் கொண்டு ஓடுகின்றன".
குர்ஆன் : ( 13 : 17 )

## இஸ்லாமும் , ஜென்னும் 12

(மன ஓர்மைப்பாடு)

அவர் நிறைய ஓவியங்களைப் பார்த்தும் , அவைகளை வரைந்தும் அதிலிருந்தே ஞானம் பெற்று ஜென் குருவானார்.
ஒரு நாள் குரு ஓவியம் தீட்டிக் கொண்டிருந்தார். பக்கத்தில் அவரது பிரதம சீடர் அமர்ந்து பார்த்துக் கொண்டிருந்தார். அவ்வப்போது ஓவியத்தை விமர்சித்துக் கொண்டும் இருந்தார்.
ஓவியம் எப்படியோ ஒரு மாதிரியாக உருவாகிக் கொண்டிருந்தது .இரண்டு பேருக்குமே கவலை. "ஓவியம் சரியாக வரவில்லையே " .
" இப்படி மோசமாக குரு ஓவியம் வரைவதை சீடர் அதுவரை பார்த்ததே இல்லை . எதையுமே மிகச் சரியாகச் செய்யக் கூடியவர் குரு.அன்று அவருக்கு என்ன ஆயிற்று...? "
குருவும் என்னென்னவோ செய்துப் பார்த்தார். ஓவியம் சரியாக வரவே இல்லை. மேலும் மேலும் அது கெட்டுக் கொண்டே வந்தது.
சீடரும் , "குருவே அந்த பக்கம் நீல நிறம் அடர்த்தி ,இந்த பக்கம் பச்சை நிறம் குறைவு " என்ற விமர்சனம் மட்டும் தொடர்ந்து கொண்டே வந்தது.
கடைசியில் வண்ணங்களும் தீர்ந்து விட்டன. "போய்க் கொஞ்சம் வண்ணங்கள் தயாரித்துக் கொண்டு வா" , என்று சீடருக்கு உத்தரவிட்டார் குரு.
சீடர், எழுந்து சென்றார். குரு இருக்கும் ஓவியத்தின் அமைப்பைத், தூரிகை கொண்டு மாற்றிக் கொண்டிருந்தார் .
சற்று நேரம் கழித்துச் சீடர் வந்தார். அவருக்கு ஒரே வியப்பு.. ஓவியம் மிக அற்புதமாக வரையப்பட்டிருந்தது.
"குருவே, எப்படி இவ்வளவு அழகாக ஓவியம் அமைந்து விட்டது... என்ன செய்தீர்கள் ? என்ன ஆயிற்று ?" என்று கேட்டார் சீடர்.
குரு சிரித்து விட்டு சொன்னார் :
ஓவியம் என்னால் மட்டுமே வரையப்பட்டது. மன ஓர்மைப்பாடு, தூரிகையை ஆங்காங்கே சரி செய்ய சொன்னது. ஓர்மைப்பட்ட மனமும் தூரிகையும் ஒன்றாக இணைந்து கொண்டன. ஓவியம் அழகானது.
ஒரு நாள் அலி (ரலி) அவர்களின் உடலில் அம்பு தைத்தது. இதனால் அலி (ரலி) அவர்கள் வேதனையால் துடித்தார்கள். சகாக்கள் அனைவரும் அந்த அம்மை எடுப்பதற்கு அவரவர்கள் முயற்சித்தார்கள் .இதனால் அலி (ரலி) அவர்களுக்கு வலி கூடியதே தவிர அம்பை எடுக்க முடியவில்லை.
பின்பு அலி (ரலி) அவர்கள், "நான் அல்லாஹ்வை வணங்கும் போது, நீங்கள் அந்த அம்பை எளிதாக எடுத்து விடலாம்" என்று கூறினார்கள்.
அலி (ரலி) அவர்கள் .இறைவனோடு தனித்து, மன ஒருமித்த நிலையில் தொழுது கொண்டிருந்த போது சகாக்கள் அந்த அம்பை அங்கும் இங்குமா ஆட்டி அசைத்து , எடுத்து விட்டனர்.
தொழுது முடித்ததும் . "அம்பை உருவி விட்டீர்களா ... ? எனக் கேட்டார்கள் .

## இஸ்லாமும் , ஜென்னும் 13

(மரணம் ஏன் ? )

"மரணம் ஏன் ? " என்று ஜென் குருவிடம் சீடன் கேட்டான். அதற்கு குரு ஒரு கதை மூலம் விளக்கினார்.
"ஒரு குளக்கரையில் ஒரு தவளை குடும்பம் மகிழ்ச்சியாக வாழ்ந்து கொண்டிருந்தது .
தண்ணீர் இருந்தது. பசுமை இருந்தது. சாப்பிட புழுக்கள் , பூச்சிகள் ஏராளமாக இருந்தன.
"இதெல்லாம் நமக்காகத்தானே அம்மா..?" என்று குட்டி தவளை, தாயிடம் கேட்டது.
"ஆமாம் .. எல்லாப் புழுப் பூச்சிகளும் நமக்காகத்தான் " என்றது தாய்த் தவளை
"ஆஹா " என்று அவற்றைப் பிடித்துத் தின்று விட்டுப் பாட்டுப் பாடின, குட்டித் தவளைகள் கொண்டாட்டத்தில் குதித்தன.
எல்லாம் சேர்த்து கச்சேரி செய்து கொண்டிருந்த போது ஒரு பாம்பு மொதுவாக வந்தது.
ஒரு தவளைக் குஞ்சை லபக்கென்று பிடித்து விழுங்கி விட்டது.
அதைப் பார்த்துக் கொண்டிருந்த மற்ற குட்டித் தவளைகள் அலறியடித்துக் கொண்டு தம் தாயிடம் ஓடின. ஆபத்து அதுவும் பக்கத்திலேயே இருப்பதை அப்போதுதான் உணர்ந்தன.
"அம்மா .. தம்பியை பாம்பு பிடித்து சாப்பிட்டு விட்டது" என்று பயந்த குரலில் கூறியது ஒரு குட்டித் தவளை
பயந்து போன குட்டித் தவளையிடம் அம்மா தவளை சொன்னது:
"பாம்புகள் இருப்பதும் தவளைக்களுக்காகத்தான் "
.....என்று குரு சீடனுக்கு இக்கதையைச் சொல்லி, சரிதானே பாம்புகள் இருப்பதும் தவளைகளுக்காகத்தானே ? என்று கேட்டார்
சீடனுக்கு புரியவில்லை . அதெப்படி பாம்புகளால் தவளைகள் செத்து அல்லவா போகிறது ?
குரு விளக்கினார் :
மரணம் என்ற முடிவை ஏற்க முடிந்தவர்களால்தான் வாழ்க்கையை முழுமையாக ரசிக்க முடியும் .
எந்நேரம் வேண்டுமானாலும் நிறுத்தம் வரலாம் என்பது தெரிந்திருந்தால்தான் , ஒவ்வொரு சுவாசத்தின் மதிப்பை உணர்ந்து அனுபவிக்க முடியும்.
உண்ணும் ஒவ்வொரு கவளத்தையும் சுவைத்து உண்ண முடியும் . அருந்தும் ஒவ்வொரு துளி நீரையும் ரசித்து அடுத்த முடியும்.

நீங்கள் நடக்கும் மண், உங்களைத் தழுவிச் செல்லும் தென்றல், உங்கள் மீது விழும் மழைத்துளி, உங்களை வெளிச்சமிட்டுக் காட்டும் சூரியன் எல்லாமே உங்களைப் பொறுத்தவரை தற்காலிகமானவைதான் என்பதை அறிந்திருந்தால் மட்டுமே அவற்றின் மதிப்பை நீங்கள் பூரணமாக உணர முடியும்.ஆனந்தமாக அனுபவிக்க முடியும். அதற்கு மரணம் அவசியம்.
"இறை நேசர்களுக்கு மரணம் அன்பளிப்புப் போன்றதாகும். மனிதன் மரணத்தை வெறுக்கிறான் .ஆனால் உலகில் உண்டாகும் சோதனைகளிலிருந்து தன்னை காப்பாற்றிக் கொள்ள மரணம் துணை நிற்கிறது என்பதை உணர்ந்தால் மனிதன் மரணத்தைக் கண்டு மருளவும் மாட்டான் .வெறுக்கவும் மாட்டான் "
நபி (ஸல்)
"இறைவனைச் சந்திக்க எவர் அதிருப்தி கொள்கின்றாரோ , அவரை இறைவனும் சந்திக்க அதிருப்தி கொள்கிறான்
ஹதீஸ்
அடுத்த பொழுது மரணம் என்றால் தற்போதைய உங்கள் வணக்கம் எப்படி இருக்கும் ? அப்படி உங்கள் செயல்கள் எல்லாம் பதிவானால் உங்கள் வாழ்க்கை எப்படி இருக்கும்.?
அதற்கு மரணம் தேவையாக இருக்கிறது

## இஸ்லாமும் , ஜென்னும் 14

(உலக அலங்காரம்)

பல போர்களை வென்ற கிரேக்க ராணுவ தளபதிக்கு அழகிய வேலைபாடுகள் கொண்ட கண்ணாடி கோப்பை ஒன்று அன்பளிப்பாகக் கொடுக்கப்பட்டது.
அவர் அதைத் தன் மேஜை மேல் வைத்து அழகு பார்த்து ரசித்துக் கொண்டிருந்தார்.
பிறகு அதைக் கையில் எடுத்துத் தடவிப் பார்த்தார். கைகளில் உருட்டிப் பார்த்தார்.
பிறகு மெல்லத் தூக்கிப் போட்டுப் பிடித்துப் பார்த்தார் .பின் அந்தக் கோப்பையைத் தேய்த்துச் சுத்தம் செய்யத் தொடங்கினார் . முத்தம் கொடுத்தார்.
அப்போது அந்தக் கண்ணாடிக் கோப்பை சட்டெனக் கைநழுவிக் கீழே விழப் பார்த்தது. அந்த ஒரு கணம் தவித்துப் போன அவர் அது தரையைத் தொடும் முன்னே எப்படியோ பிடித்து விட்டார் .
குப்பென்று வியர்த்து விட்டது. அவரிடமிருந்து பெருமூச்சு ஒன்று வெளிப்பட்டது.
அது அவருக்கே பெரும் வியப்பாக இருந்தது.
"எத்தனை போர் களங்களில் பகைவர் படை நடுவே ஆயுதங்கள் இல்லாமல் கூட அஞ்சாமல் பாய்ந்திருக்கிறோம். பாய்ந்து வரும் வாள் கண்டு நடுங்காமல் எதிர்த்துத் தாக்கி இருக்கிறோம். அப்போதெல்லாம் திடுக்கிடாத என் மனம், இந்த சின்னக் கோப்பை கை நழுவும் போது என்னை திடுக்கிட வைத்து விட்டதே.. என்ன அதிசயம் இது...." என்று வியந்தார் தளபதி
சற்று ஆற அமர சிந்தித்துப் பார்த்த போது, உண்மை புலனாயிற்று அவர் முகத்தில் திடீரென்று ஒரு புன்னகை பூத்தது.
உடனே அந்தக் கண்ணாடிக் கோப்பையைத் தூக்கி எறிந்து உடைத்து நிம்மதியடைந்தார்..
" ( யுத்தத்திற்காகச் சித்தப்படுத்தப்பட்டிருந்த) உயர்ந்த குதிரைகள் (ஒரு நாளன்று) மாலை நேரத்தில், அவர் (சுலைமான் ) முன் கொண்டு வரப்பட்ட பொழுது (அதனையைப் பார்த்துக் கொண்டிருந்ததனால் சூரியன் அஸ்தமித்து அவருடைய அஸர் தொழுகை தவறிவிட்டது அதற்கவர்)
"நிச்சயமாக நான் (சூரியன்) திரைக்குள் மறைந்து விடும் வரையில் அல்லாஹ்வின் திருப்பெயரை நினைவு கூர்வதை விட்டுப் பொருளை அதிகமாக அன்பு கொண்டு விட்டேன் (என்று மனம் வருந்தி.... )
" அவைகளை என்னிடம் கொண்டு வாருங்கள் " எனக் கூறி அவைகளின் பின்னங்கால்களையும் , கழுத்துக்களையும் (கையினால் நீவி தடவிக் கொடுத்தார்.
திருக்குர்ஆன் ( 38 : 31 லிருந்து 33வரை )
இப்ராஹீம் அத்-தைமீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது :
நபி சுலைமான் (அலை) அவர்களின் கவனத்தைத் திசை திருப்பிய குதிரைகள் இருபதாயிரம் ஆகும் . எனவே, அவற்றை அவர்கள் அறுத்துப் பலியிட்டு விட்டார்கள். நிம்மதி அடைந்தார்கள் .
நூல் : தஃப்சீர் இப்னு அபீ ஹாத்திம்

## இஸ்லாமும் , ஜென்னும் 15

(எதிரும் புதிரும்)

கடலோரக் கிராமத்திற்கு ஒரு ஜென் குரு தன் சீடர்களுடன் வருகை தந்தார்.கிராம மக்கள் குருவிடம் ,
"எங்களுக்கு கடலில் மீன்பாடு அதிகம் வேண்டும் .
"அது கடலில் இல்லை ; கரையில் இருக்கிறது."
"கரையில் உள்ள எங்க குடிசையெல்லாம் கோபுரமாக வேண்டும்"

"அது கரையில் இல்லை ; கடலில் இருக்கிறது"
"எங்கள் தென்னை மரத்தில் காய்கள் செழிக்க வேண்டும். "
"அது மரத்தில் இல்லை ; வேரில் இருக்கிறது."
குருவின் எதிரும் புதிருமான எகத்தாளமான பதில்களால் கிராமத்தார்கள் குழம்பினர்கள்
தலைமைச் சீடன் "குரு சரியாகத் தானே சொன்னார் .
"எப்படிய்யா சரியாகச் சொன்னார்?"
"கடலில் மீன்பாடு கேட்டீர்கள் ;அது கரையிலுள்ள நீங்கள் உயர்ந்த இலட்சியத்தோடு கடலில் மீன் பிடிக்க வேண்டும்"
"கரையிலுள்ள உங்க குடிசை கோபுரமாகக் கேட்டீர்கள் அதற்கு நீங்கள் கடலில் நன்கு உழைக்க வேண்டும்"
"தென்னையில் காய் செழிக்க கேட்டீர்கள் அது வேரில் உரமிட்டு நன்கு பேண வேண்டும்"
மூஸா (அலை) அவர்கள் இறைஞானம் பெற கிழ்று (அலை) அவர்களை அடைகிறார்கள் .
உங்களுக்கு கற்பிக்கப்பட்ட ஞானத்தை நீங்கள் எனக்கு கற்பிக்க வேண்டி உங்களைப் பின்பற்றலாமா?
அதற்கவர் "உங்களுடைய அறிவுக்கு அப்பாற்பட்டவைகளை நான் செய்யும்போது எவ்வாறு சகித்துக் கொண்டு இருப்பீர்கள் ?"
அதற்கு, மூஸா "இறைவன் அருளால் சகித்திருப்பவனாக என்னைக் காண்பீர்கள் ." .
பயணம் தொடர்ந்தது .
கடலை கடக்க கப்பலில் ஏறி கிழ்று (அலை) ஒரு பலகையைப் பெயர்த்து ஓட்டையாக்கி விட்டார் .இதைக் கண்டு மூஸா (அலை) பதறினார்.
அடுத்து கப்பலை விட்டு இறங்கி நடந்தனர் ஒரு சிறுவனை கிழ்று கொலை செய்து விட்டார். மூஸா (அலை) ரொம்பவும் பதறினார்கள்
பின்னர் இருவரும் நடந்து ஓர் ஊராரிம் வரவே தங்களுக்கு உணவளிக்க வேண்டினர். அவ்வூரர் மறுத்தனர். அந்த ஊரில் சரிந்து விழக்கூடிய சுவற்றை செப்பனிட்டு சரி செய்ய கிள்று (அலை) ஆய்த்தமானார்கள்.
கிள்று (அலை) அவர்கள் எதிரும் புதிருமான செய்கைக்கு விளக்கம் அளித்தார்கள்
அந்த கப்பல் சில ஏழைகளுக்குரியது. நல்ல கப்பலை கொடுங்கோல் அரசன் அபகரிக்காமல் இருக்க கப்பலை சேதப்படுத்தினேன் .
நல்ல நம்பிக்கையாளர்களுக்கு பிறந்த சிறுவன் வாலிபத்தில் தன் பெற்றோர்களுக்கு அநியாயம் செய்யாமல் இருக்க சிறுவனை கொலை செய்தேன் .
நல்ல நம்பிக்கையாளர்கள் சேமித்த புதையல் தன் இரு அனாதை குழந்தைகள் வாலிபனாகி பெறும் பொருட்டு சுவரை செப்பனிடம் போது புதையல் மேலே வந்து அவ்விருவருக்கும் கிடைக்கும் .
குர்ஆன் ( 18 : 66 - 82 )
ஞானம் என்பது எதிரும் புதிருமானது .

## இஸ்லாமும் , ஜென்னும் 16

(நிலாவும், வானமும்)

ஒரு ஜென் துறவியின் குடிலுக்குள் புகுந்து விட்ட திருடனை சீடர்கள் பிடித்து இழுத்து வந்தனர். தங்கமோ, வெள்ளியோ, பணமோ திருடுவதற்கு எதுவும் கிடைக்காமல் .அவன் அவருடைய தண்ணீர் குவளையைத் திருட முயன்று மாட்டிக் கொண்டான் .
"திருட வந்து விட்டு வெறும் கையுடன் போகாதே. இந்தா... " என்று துறவி தன் அங்கியைக் கழற்றிக் கொடுத்தார். அவன் அதைப் பறித்துக் கொண்டு ஓடிப் போனான்.
தாங்கள் பிடித்து வந்தவனைத் துறவி தப்பிக்க விட்டு விட்டாரே என்று சீடர்கள் வெகுண்டு பார்த்தனர் .
துறவி வானத்தை அண்ணாந்துப் பார்த்தார். "ஐயோ பாவம்! அந்த நிலவை மட்டும் என்னால் அவனுக்கு வழங்க முடிந்திருந்தால், எவ்வளவு நன்றாயிருந்திருக்கும்....." என்றார்.
அதாவது இதன் விளக்கமானது ...... வாழ்க்கையின் மாபெரும் அற்புதங்கள் எப்போதுமே மனிதனுக்குக் கைக்கெட்டும் தூரத்தில் இருக்கின்றன ஆனால், அவற்றை விட அவனுக்கு அற்பமானதில்தான் ஆர்வமாக இருக்கிறான் .
திருடனுக்கு வானத்து நிலாவை பிடித்து கொடுக்க நினைக்கும் ஜென் துறவியிடம் அற்பமானதை திருடிக் கொண்டு ஓடும் திருடனை என்ன சொல்வது ?
செங்கடலைப் பிளந்து 6 லட்சம் பனீ இஸ்ரவேலர்களை பிர்அவ்னிடம் இருந்து காப்பாற்றி நபி மூஸா (அலை) அவர்கள் தீஹ் பாலைவனத்தில் அவர்களை தங்கி வைக்கிறார்கள்.
அத்தனை பேருக்கும் உணவை இறைவன் "மன்னு " என்ற ஒரு வகை தித்தித்திப்பான வெண்பனி பழம் போன்ற ஒன்றை வானத்திலிருந்து பரவலாக பூமியில் விழச் செய்கிறான் .அதை உணவாக உட்கொண்டு வருகிறார்கள் பின் நாளடைவில் அந்த ஒரே மாதிரியான சைவ உணவில் சலிப்படைகிறார்கள் .
அடுத்து மன்னுடன் ஸல்வா என்ற காடைக் குருவி போன்ற ஒரு வகை அசைவ உணவான குருவியை சூரிய வெப்பத்தால் சுட்டு வானத்திலிருந்து அதனையும் பரவலாக விழச் செய்கிறான் .

இந்த இரண்டு உணவிலும் நாளடைவில் சலிப்படைகிறார்கள் .
"மூஸாவே... ஒரேவிதமான உணவை உட்கொண்டிருக்க எங்களால் முடியாது. பூமியில் முளைக்கக் கூடிய கீரை, வெள்ளரிக்காய் , கோதுமை, பருப்பு, வெங்காயம் ஆகியவைகளை வெளிப்படுத்தித் தரும்படி உங்களுடைய இறைவனிடம் எங்களுக்காக கேளுங்கள்" என அவரிடம் கேட்டார்கள்.
அதற்கு (மூஸா) " மேலானதற்குப் பதிலாகத் தாழ்ந்ததை மாற்றிக் கொள்ள விரும்புகின்றீர்களா ? (அவ்வாறாயின்) நீங்கள் ஏதேனும் ஒரு பட்டணத்தில் இறங்கி விடுங்கள் நீங்கள் கேட்பது நிச்சயமாக அங்குதான் கிடைக்கும்.
குர்ஆன் ( 2 : 61 )

## இஸ்லாமும் , ஜென்னும் 17

(இல்லாததாக இருப்பதும் இருப்புதான்)

ஜென் துறவியிடம்
"கடவுள் இருக்கிறாறா...?" என்று ஒருவர் கேட்டார்
அதற்கு துறவி " நீ இருக்கிறாயா ..?" என்று திருப்பி கேட்டார்.
" ஆம் . நான் இருக்கிறேன் " என்றார் கேட்டவர்.
துறவி சிரித்துக் கொண்டே குடிலுக்குள் போய் விட்டார் .
வந்தவர் குழம்பி போய் இருப்பதை அறிந்த தலைமை சீடர்,
"நீங்கள் இப்போது என் கூட்டத்தில் என் முன்னே இருக்கிறீர்கள். உங்களுடைய நண்பர் ஒருவர் உங்களுடைய வீட்டிற்குப் போகிறார். உங்கள் வீட்டுக் கதவை தட்டுகிறார். நீங்கள் வீட்டில் இல்லை என்று பதில் வருகிறது. சரி என உங்கள் நண்பர் கிளம்பி போகிறார். நீங்கள் இருப்பதைக் கண்டது போல நீங்கள் இல்லாததை அவர் எப்படி உணர்ந்து கொண்டார் ?
இல்லாமையை இருப்பைப்போல ஏற்றுக் கொள்வது அவ்வளவு எளிதானதா ?
"நான் குடிலில் இருக்கிறேன். இப்போது வீட்டில் இல்லாமல் இருக்கிறேன். இங்கு இருக்கும் போது .நான் என்னுடைய பத்து வயதில் இல்லை. இருபது வயதில் இல்லை .என் கிராமத்தில் இல்லை. என்னுடைய பள்ளிக்கூடத்தில் இல்லை.
பெற்றோருடன் இல்லை. பிள்ளைகளுடன் இல்லை......இப்படி இல்லை என சொல்லிக் கொண்டே போகலாம் .சரியா ?
நான் உலகம் முழுமையிலும் என் இல்லாமைகளால் நிரம்பி இருக்கிறேன்.
கவனிக்கவும் இல்லாமைகளால் நிரம்பி
" இருக்கிறேன் "
நான் ஓரிடத்தில் இருப்பது எவ்வளவு நிஜமோ அவ்வளவிற்கு என் இல்லாமையும் நிஜம்தானே....?
எல்லோருக்கும் இல்லாமையை இருப்போடு சேர்த்து வாழவும் பழகவும் தெரிந்திருக்கிறது. ஆதலால்தான் யாருடைய மரணமும் எந்த பெரிய துயரத்தையும் தரவே இல்லை. தந்தால் கூட நாம் அதிலிருந்து நீங்கி விடுகிறோம். ஏனென்றால் இல்லாமையும் இருப்பினுடைய ஒரு பகுதிதான். இருப்பை உணரும்போது இல்லாமையையும் உணர முடியும் .
ஆதலால்தான் நம்மால் அதை கடந்து போவது எளிமையாக இருக்கிறது.
ஆதலால் நம்முன் இல்லாமல் இருக்கும் கடவுள் இருந்து கொண்டே இருக்கிறார். சரிதானே ?
அலி (ரலி) அவர்களிடம் ஒருவர்
"கடவுள் இல்லை என்பது சரிதானே ?"
"இல்லாமல் இருந்தால் நீயும் நானும் தப்பித்துக் கொள்ளலாம்தான். கடவுள் இருந்து விட்டால் , நான் தப்பித்துக் கொள்வேன் .நீ மாட்டிக் கொள்வாய் "
இறைவன் தன் இருப்பை குர்ஆனில்
(நபியே... மனிதர்களை நோக்கி ) நீங்கள் கூறுங்கள் : அல்லாஹ் ஒருவன்தான்.
(அந்த) அல்லாஹ் (எவருடைய) தேவையும் இல்லாதவன்.
அவன் (எவரையும் ) பெறவும் இல்லை.(எவராலும்) பெறப்படவும் இல்லை.
(தவிர) அவனுக்கு ஒப்பாகவும் ஒன்றும் இல்லை.
திருக்குர்ஆன் ( 112 : 1 - 4 )
கவனித்தீர்களா.....? எத்தனை "இல்லை" இத்தனை இல்லாமல் அவன் "இருக்கின்றான்"
இல்லாததாக இருப்பதும் இருப்புதான்.
சரியா ?

## இஸ்லாமும் , ஜென்னும் 18

(மழையும் , மரமும் )
குரு கேட்டார்: "இரண்டு பேர் மழையில் நடந்தனர் .ஒருவர் நனையவில்லை . ஏன் ?
சீடர்கள் ஆளாளுக்கு ஒவ்வொரு காரணம் சொல்லினர் .

"குடை"
"மழை கோட்"
"மரங்களின் கீழ் "
குரு எல்லாவற்றையும் "தவறு " " தவறு " என்றார்.
"என் வார்த்தையில் கவனம் வைத்தீர்களே தவிர, உண்மையை நீங்கள் உணர்த் தலப்படவில்லை. ஒருவர் நனயைவில்லை என்றால் ஒருவர் மட்டுமே நனைந்திருக்கவில்லை. இருவரும்தான் நனைந்தனர்.
(ஒரு புதிர் போல் தோன்றினாலும், இது ஒரு புதிர் இல்லை. இவற்றை "ஜென்கோன்கள் " என்று அழைப்பர்.
இவை ஏதோ ஒரு கருத்தை சொல்வதற்காக உருவாக்கப்படவில்லை. ஒரே விதமாக சிந்தக்கப் பழகிய மனதை மாற்றியும் யோசிப்பதற்காக உருவாக்கப்பட்டவை.)
ஆனால் ... இஸ்லாம் புதிர் போட்டாலும் அதில் ஒரு கருத்தை சொல்வதற்காக உருவாக்கப்பட்டவை. .இதுவும் சிந்தனையை மாற்றியும் யோசிப்பதற்காக உருவாக்கப்பட்டவை. அப்படி ஒரு புதிரை ......
"ஒரு மரம் உள்ளது. அம்மரத்தின் இலைகள் உதிர்வதில்லை. அம்மரம் இறைநம்பிக்கையாளனுக்கு உவமையாகும் அது என்ன மரம் என்று கூறுங்கள் ...? " என்று நபி (ஸல் ) அவர்கள் கேட்டனர்.
நபித்தோழர்களின் சிந்தனை கிராம புறத்தில் உள்ள மரங்களின்பால் சென்றது. ஆளாளுக்கு ஒவ்வொரு மரமாக கூறினார்கள். தவறு , தவறு என்று சொல்லப்பட்டது.
அது பேரீச்சை மரம்தான் என்று எனக்குத் தோன்றியது .நான் சிறுவனாக இருந்தததால், அதைக் கூற வெட்கமடைந்தேன்.
அப்போது நபித்தோழர்கள் , "இறைத்தூதர் அவர்களே...! நீங்களே கூறுங்கள் " என்றனர்
"அது பேரீச்சை மரம்தான்." என்று
நபி (ஸல்) கூறினார்கள். ..... என அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவித்தார்.
பின்னர் என் தந்தையிடம் ," என் மனதில் தோன்றிய விஷயத்தைச் சொன்னேன் .அதைக் கேட்ட அவர்கள், "நீ அதைச் சொல்லி இருந்தால், இன்னின்ன எனக்குக் கிடைப்பதை விட அது எனக்கு மிகவும் விருப்பமானதாக
இருந்திருக்கும் " என்றார். என்று அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) கூறினார்கள்
புகாரி 131

## இஸ்லாமும், ஜென்னும் 19

(சொர்க்கம் / நரகம்)

ஜென் குரு ஹக்குயின் ஆசிரமம் திடீரென்று அரசாங்க தொழிலாளிகள் சிலரால் நிலத்தைக் கூட்டிப் பெருக்கிக் கொண்டிருந்தனர் .வேறு சிலர் ஆசிரம பாதையை சரி செய்தனர் . வேறு சிலர் கொடிகளை நாட்டிக் கொண்டிருந்தனர் .மற்றும் சிலர் தோரணங்களைக் கட்டிக் கொண்டிருந்தனர் .
ஆயுதம் தாங்கிய சிப்பாய்கள் பலர் இந்த ஏற்பாடுகளை எல்லாம் மேற்பார்வை பார்த்துக் கொண்டிருந்தனர்.
கடைசியில் ஒரு வழியாக விஷயம் வெளி தெரிந்தது. 'அந்த நாட்டின் பிரதம தளபதி ஜென் குருவைப் பார்க்க வரப்போகிறார் .அவரது விஜயத்திற்காக இத்தனை ஏற்பாடுகள் .
ராணுவ அதிகாரிகளும், வாகனங்களும் அணிவகுத்து வர, கடைசியில் தளபதி அவ்விடத்துக்கு வந்து சேர்ந்தார்.
அவர் நேராக ஜென் குரு ஹக்குயினிடம் ,
"குருவே ...சொர்க்கம் நரகம் என்பதெல்லாம் உண்மையிலேயே இருக்கிறதா ?" என்று கேட்டார்
" நீ யார் ? " என்று குரு கேட்டார் .
"நான் ஒரு சாமுராய் .இந்த நாட்டின் பிரதம தளபதி " என்று பெருமிதத்தோடு பதிலளித்தார்.
"எந்த மடையன் உன்னைத் தளபதியாக வைத்தது ? உன்னைப் பார்த்தால் இறைச்சி வெட்டுபவன் மாதிரி தோன்றுகிறது... என்று கூறிவிட்டு , வாய் விட்டு சிரிக்கவும் சிரித்தார் குரு.
தளபதிக்கு கோபம் கொந்தளித்தது .சட்டெனத் தன் உடைவாளை உருவினார். "உங்களை ஒரே வெட்டாக வெட்டி விடப் போகிறேன் " என்று வாளை ஓங்கினார்.
"நரகத்தின் கதவுகள் திறந்து விட்டன" என்றார் குரு.
தளபதி புத்திசாலி. புரிந்து கொண்டார் .
உடனே சினம் தணிந்தார் .தலைபணிந்து குருவை வணங்கி மன்னிப்பு கேட்டார் .
"சொர்கத்தின் நுழைவாயில் தெரிகிறது" என்றார் குரு.
சொர்க்கம் , நரகம் இருப்பது உண்மைதான் என்றார் தளபதி.
குரு , புன்முறுவல் பூத்தார்.
ஒரு முறை மக்கள் ஒரு ஜனாஸாவைக் கடந்து சென்ற போது, இறந்தவரின் நற்பண்புகளைப் பற்றி புகழ்ந்து பேசினார்கள்.
அப்போது நபி (ஸல் ) அவர்கள் " "உறுதியாகிவிட்டது" என்றார்கள்.
மற்றொரு முறை வேறொரு ஜனாஸாவைக் கடந்து சென்ற போது மக்கள் அதன் தீய பண்புகளைப் பற்றி இகழ்ந்து பேசலாயினர்.

அப்போதும் நபி (ஸல்) அவர்கள்
"உறுதியாகிவிட்டது" என்று கூறினார்கள்.
உமர் (ரலி) அவர்கள்
"எது உறுதியாகிவிட்டது ? " எனக் கேட்டதும்,
நபி (ஸல்) அவர்கள் ." இவர் விஷயத்தில் நல்லதைக் கூறியப் புகழ்ந்தீர்கள் . எனவே அவர்க்கு சொர்க்கம் உறுதியாகிவிட்டது. இவர் விஷயத்தில் தீயதைக் கூறினீர்கள் , எனவே இவருக்கு நரகம் உறுதியாகிவிட்டது.
ஆக நீங்களே பூமியில் அல்லாஹ்வின் சாட்சிகளாகவீர்கள் " எனக் கூறினார்கள்
அனஸ் (ரலி)
புகாரி : 1367

## இஸ்லாமும் ஜென்னும் 20

(கடமை)

மருத்துவர் ஒருவர் இராணுவத்தில் பணியாற்றிக் கொண்டிருந்தார் . அவருடைய வேலை போரில் காயம் பட்டவர்களுக்கு சிகிச்சை அளிப்பது தான் .
அவரும் மிகுந்த ஈடுபாட்டுடனும் , அன்புடனும் தன்னிடம் அழைத்து வரப்படும் காயமடைந்த போர் வீரர்களைக் கவனித்து சிகிச்சை அளித்து வந்தார்
குண்டடிப்பட்டு , கை, கால்கள் சிதைத்து , குற்றுயிரும் .குலை உயிருமாக அழைத்து வரப்பட்ட வீரர்களுக்கு சிகிச்சை அளித்து, குணப்படுத்தி , பலருடைய உயிரையும் காத்து வந்த அவருக்கு மனதில் ஒரு சங்கடம் இருந்து கொண்டே இருந்தது
இதற்கு தீர்வு காண ஜென் குருவை தேடி வந்து சேர்ந்தார்.
"குருவே இராணுவத்தில் மருத்துவம் செய்பவன் நான். போர் களத்தில் வீரர்களுக்கு சிகிச்சை அளிப்பதே என் வேலையின் கடமை . உயிருக்கு போராடிய பல வீரர்களை என் மருத்துவம் காப்பாற்றி இருக்கிறது .
ஆனால் அந்தச் சிப்பாய்கள் மறுபடி போருக்குப் போவதும் , அங்கே உயிரை விடுவதும் என்னை மிகவும் துக்கப்படுத்துகின்றன. சாகத்தான் போகிறார்கள் என்றால், அவர்களை எதற்காகப் போராடிக் காப்பாற்ற வேண்டும் ?"
ஜென் குரு புன்னகைத்துச் சொன்னார் :
" நீ செய்ய வேண்டிய உன் கடமையைச் செய் .அவர்கள் செய்ய வேண்டிய கடமையைச் செய்யட்டும் "
6022. அபூ மூஸா அல்அஷ்அரீ(ரலி) அறிவித்தார்
'தர்மம் செய்வது எல்லா முஸ்லிமின் மீதும் கடமையாகும்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.
மக்கள், '(தர்மம் செய்ய ஏதும்) கிடைக்கவில்லையானால்?' என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள், 'தம் இரண்டு கைகளால் உழைத்துத் தாமும் பயனடைவார்; தர்மம் செய்(து பிறரையும் பயனடையச் செய்)வார்' என்று கூறினார்கள்.
மக்கள், 'அவருக்கு (உழைக்க உடலில்) தெம்பு இல்லையானால்' அல்லது 'அதை அவர் செய்யாவிட்டால்' (என்ன செய்வது?)' என்று கேட்டனர். நபி(ஸல்) அவர்கள், 'பாதிக்கப்பட்ட தேவையாளிக்கு அவர் உதவட்டும்' என்றார்கள்.
மக்கள், '(இதை இயலாமையாலோ சோம்பலினாலோ) அவர் செய்யவில்லையானால் (என்ன செய்வது?)' என்று கேட்டார்கள்.
நபி(ஸல்) அவர்கள், 'அப்போது அவர் 'நல்லதை' அல்லது நற்செயலை'(ச் செய்யும்படி பிறரை) அவர் ஏவட்டும்' என்றார்கள்.
'(இதையும்) அவர் செய்யாவிட்டால்?' என்று கேட்டதற்கு, நபி(ஸல்) அவர்கள், 'அவர் தீங்கு செய்யாமல் இருக்கட்டும். அதுவே அவருக்கு தர்மம் ஆகும்' என்றார்கள்.39
ஸஹீஹ் புகாரி அத்தியாயம் : 78. நற்பண்புகள்

## சற்குரு.1

சற்குரு என்பவர் அவசியமா ?

ஒவ்வொரு உயிரினமும் தன் வாழ்க்கைப் பற்றிய அறிவை தன்னை ஈன்ற உயிரினங்களிடமிருந்து பெறுகின்றது.

மனிதன் , உடை உடுத்துதலை , உண்ணுதலை .உறங்குதலை , கூடிப் புணர்தலை , இயற்கை ஊந்துதலை சக மனிதர்கள் சொல்லிக் கொடுக்க அதைக் பற்றிக் கொண்ட வாழ்க்கைக்கு நாகரீகம் என்று பெயர் .

எல்லா செயல்களையும் நீங்கள் பிறரிடம் இருந்து அறியாது வேறு எதையும் நீங்களாக அறிந்துகொள்ளவில்லை. அறிந்து கொண்டதை நேர்த்தியாக செய்கிறீர்கள் என்று வேண்டுமானால் சொல்லலாம் .

ஆனால் வாழ்வின் அறிவு என்பது சக உயிரினங்களிடத்திலிருந்தே வருகிறது.

தலை வாருதலில் இருந்து காலணி அணிவது வரை நபிகள் (ஸல்) அவர்கள் சொல்லி ,அவர்கள் சொல்லியதை செய்தவர்கள் சொல்லி நீங்களும் நானும் செய்கிறோம். இந்த செய்தியை அடுத்த தலைமுறைக்கும் நாமே கடத்துகிறோம்.

இப்படி ஒவ்வொரு சொல்லையும் , செயலையும் , மற்றவர்கள்

சொல்லித்தந்து தான் அறிந்து கொள்கிறோம் என்கிற போது வாழ்வின் ஆதாரமாக உள்ள ஆத்ம தாகத்தை உயிரின் தவிப்பை தன் இருப்பை அறிவது என்பதை எவரும் சொல்லித் தராமல் நீங்களாக உணர்ந்து கொள்ள முடியுமா ? இல்லை இல்லை நானாகவே தெரிந்து கொள்வேன் என்று இறுமார்போடு திரிவது நல்லதா ?

இறைவனை அறிதல் அல்லது

தன்னைத் தான் அறிதல் என்கிற விஷயத்திற்கு வெகு நிச்சயம் ஒரு வழிகாட்டி தேவைப்படுகிறார் .அந்த வழிகாட்டிக்கு "சற்குரு " என்று பெயர் .

குரு இல்லாதவனுக்கு சைத்தானே சற்குருவாகி விடுவான் .

தக்கலை பீர் முஹம்மது அப்பா (ரஹ்) அவர்கள் சொன்னது

" கரு இல்லாத உயிர் இல்லை

குரு இல்லாத ஞானம் இல்லை "

குரு என்பவர் உங்களுக்கு சில திக்ரு தியானங்களை செய்யச் சொல்லி மெல்ல மெல்ல இஸ்முல் ஆஃலத்தை உபதேசிப்பார் என்று சொல்லப்படுகின்றது. இருக்கட்டும்.

தன்னை அறிதல் அல்லது இறைவனை அறிதல் எதற்காக என்ற கேள்வி வருமெனில் வாழ்வு பூரணமாகவில்லை என்றே அர்த்தம் .

அதை உங்களுக்கு சொல்லிக் கொடுத்தவரே சற்குரு . இந்த சற்குரு தன்னை அறிந்தவராக இருக்கிற போது உங்களுடைய ஆத்ம தவிப்பை

முற்றிலுமாய் உணர்ந்து உங்களை அறியாமல் உங்களுக்குள் உங்களை உணரச் செய்யும் ஆற்றலையும் பெற்றிருப்பார் .

அந்த ஆற்றல் மிக ரகசியமாய் உங்களில் பாய்ந்து உங்களுக்குள் உங்களை அறிவிக்கும் . இது ஒன்றும் விஞ்ஞானப் பாடமல்ல , அடிப்படையாய் புரிந்து கொள்வதற்கும் ,பேசித் தெரிந்து கொள்வதற்கும் , தடித்த புத்தகங்களிலிருந்து கறந்து கொள்வதற்கும் உண்டான விஷயமல்ல.

இது ரகசியமானது.

ரகசியம் என்றதும் வேறு ஒருவருக்கு சொல்லக் கூடாது என்ற அர்த்தம் இல்லை . நீங்கள் எப்படி மாறினீர்கள் என்றே உங்களுக்குத் தெரியாத

ரகசியம் இது.

இந்த ரகசிய பரிணாமத்தை உங்களுக்குள் நிகழ்த்த தன்னை அறிந்த சற்குருவால் வெகு நிச்சயமாக இயலும் .

( ..... இன்னும் குருவைத் தேடி தொடரும்)

-

## சற்குரு 2

எனக்கும் இறைவனுக்கும் இடையே இன்னொருவர் எதற்கு ? என்று கேள்வி வருவது மிகப் பெரிய அறியாமை . தான் எல்லாம் அறிந்து விட்டோம் , தன்னால் சகலமும் அறிய முடியும் என்கிற அறியாமை எவ்வளவு பெரிய கைசேதத்தில் விட்டு விடும். சில சமயம் சற்குருக்களை சாமானியரகளாக சித்திரிக்கப்படும் போது அவர்கள் தங்களை மறைத்துக் கொள்ளவே விரும்புகிறார்கள்.

சற்குருவின் தொடர்பு என்பது உலக ரீதியில் பொருளாதாரம் ,செல்வாக்கு , அந்தஸ்து குறித்த விஷயம் அல்ல. அது ஆன்மீக உலகில் நம் ஆத்மாவின் பிரவேசம் குறித்த விஷயம் .

அதற்காக சற்குருவும் சற்றும் சளைத்தவர்கள் அல்ல . உலகாளாய விஷயத்தில் தன்னை விளம்பரப்படுத்தி தன் மெஞ்ஞானத்தை பறைசாற்றிக் கொள்ள விரும்பாதவர்கள் .

நிஜாமுத்தீன் ஔலியாவின் தரிசனத்தைப் பெறுவதற்காக இந்தியாவை ஆண்ட அலாவுத்தீன் கில்ஜி வருவதாக எத்தனையோ முறை சொல்லி அனுப்பியும் ஔலியா அனுமதி வழங்க மறுத்து விட்டார்கள் . "அவ்விதமாயின் நான் வன்முறையில் அவர்களின் தவ மடத்தில் நுழைந்து அவர்களைத் தரிசிப்பேன் " என்று சொல்லி அனுப்பினார்கள் .

" கில்ஜி தலைவாயில் வழியாக நுழையின் நான் அதன் கடைவாயில் வழியாக வெளியேறி விடுவேன் " என்று வந்த ஆளிடம் சொல்லி அனுப்பினார்கள். இறுதி வரை தன்னை பார்க்க அவர்கள் அனுமதிக்கவே இல்லை.

ஷைகு அலீ (ரஹ்) அவர்களை கலீபா ஒருவர் தன் அமைச்சருடன் சந்திக்க வந்த போது தங்களின் இரண்டு கால்களை நீட்டிக் கொண்டே இருந்தார்கள் .

" கால்களைச் சற்று மடங்கிக் கொள்ளுங்கள் கலீபா அவர்கள் வந்திருக்கிறார்கள் " என்று அமைச்சர் அவர்களின் காதோடு காதாகக் கூறிய பொழுதும் அவர்கள் தம் கால்களை மடக்கிக் கொள்ளவில்லை.

பின்னர் கலீபாவும், அமைச்சரும் விடைபெற்ற பொழுது , அவர்கள் அவ்விருவரின் கைகளையும் பிடித்துக் கொண்டு " நான் என் கைகளை மடக்கிக் கொண்டேன். எனவே என் கால்களை நீட்டிக் கொண்டேன் " என்று கூறினார்கள் .

இமாம் அபுஹனீபா(ரஹ்) அவர்களிடம் உங்கள் வயது என்ன? என ஒருவர் கேட்க, அவர்கள், "இரண்டு வயது" என்றார்களாம். "என்ன இந்த முதிய வயதில் இரண்டு வயது என்கின்றீர்களே?" என்ற போது, " இமாம் ஜாஃபர் சாதிக்(ரஹ்)அவர்களிடம் இரண்டு வருடம் கால் மடங்கி அமர்ந்து பற்பல கல்விகளையும் கற்றுத் தேர்ந்தேன். அதை மட்டுமே நான் வாழ்ந்த வருடங்களாக கருதுகின்றேன்" என்று பதில் கூறினார்களாம் அவர்கள்.

**சற்குரு 3**



ஜப்பானிய புத்த மதத்தில் ஒரு கேள்வி - பதில் நிகழ்ச்சி உண்டு .

" சாலையில் நீ நடக்கும் போது உனக்கு எதிரே புத்தர் நடந்து வந்தால் நீ என்ன செய்வாய் ?"

" விழுந்து வணங்குவேன் "

" சுற்றி சுற்றி வந்து கொண்டாடுவேன் "

" வீட்டிற்கு அழைத்துப் போவேன் "

" எல்லோரையும் கூட்டிக் கொண்டு போய் புத்தரை அறிமுகப்படுத்துவேன் " - என்றெல்லாம் பதில்கள் சொல்லப்படும்.

.... ஆனால் உண்மையான பதில்கள் அவை அல்ல ; புத்தர் எப்படி இருப்பார் என்று யாருக்குத் தெரியும் ?

ஏதோ ஓவியத்தைப் பார்த்து, சித்திரம் சிலதைப் பார்த்து புத்தர் இப்படித்தான் இருப்பார் என்று நினைத்துக் கொள்கிறார்கள் . புத்தர் என்ன விதமாக இருந்தார் என்று இதுவரை உலகில் யாருக்குமே தெரியாது.

புத்தர் அவர்களின் முன்பு விதவிதமாகத் தோன்றுவார் என்பதும் அவர்களுக்குத் தெரியாது. புத்தரை தேட வேண்டும் என்ற ஆவல் வந்து விட்டால் எதிர்படுகின்ற ஒவ்வொருவரையும் இவர் புத்தரா ? அவர் புத்தரா ? என்று தேடுவது போல் நீங்கள் உங்கள் குருவைத் தேட வேண்டும் .

எல்லா இடத்திலும் , எப்பொழுதும் இடையுறாது தேட வேண்டும் .உங்கள் தேடல் உக்கிரமடைந்தால் , ஒரு

முகப்பட்டால் குருவே உங்களை தேடி நேரில் வந்து , "என்னைத் தானே நீ தேடிக் கொண்டிருந்தாய் இதோ " என்று எதிரே வந்து நிற்பார் என்று சொல்லப்படுகிறது. இதற்கு நல்ல உதாரணமாக ...

ஒரு நாள் ஜலாலூதீன் ரூமி (ரஹ் ) அவர்கள் பள்ளியில் மாணவர்களுக்கு கல்வி போதித்துக் கொண்டிருந்தார்கள்

அங்கு காட்டு வாழ் மனிதரைப் போன்று ஒருவர் வந்து , " இஃது என்ன ? " என்று வினவினார்.

"இதைப் பற்றியெல்லாம் உமக்கு ஒன்றும் தெரியாது சும்மா இரும்" என்றார் மௌலானா ரூமி சற்று வெறுப்போடு

அவ்வளவுதான் ,வந்த மனிதர் அங்கிருந்த நூல்களெல்லாம் அள்ளி பக்கத்திலுள்ள தண்ணீர் தொட்டியில் போட்டு தண்ணீரில் முழ்கடித்துவிட்டார்கள்

அது கண்ட ரூமி அவர்களும் அவர்களின் மாணவர்களும் அலறி துடித்து விட்டனர். அந்த நூல்களெல்லாம் பல வருடம் ரூமி ஆய்வு செய்து எழுதிய கிதாபுகள்

அப்பொழுது அந்த மனிதர் அமைதியாக அந்த தண்ணீர் தொட்டிக்குள் கையை விட்டு அத்தனை நூல்களையும் வெளியே எடுத்தார்

என்ன வியப்பு "அந் நூல்களெல்லாம் தண்ணீரில் நனையாது எப்படி இருந்தோ அப்படியே இருந்தன அதைப் பார்த்த ரூமி அவர்கள் அவரிடம் "இது என்ன? என்று வினவ,

" இதைப் பற்றியெல்லாம் உமக்கு ஒன்றும் தெரியாது சும்மா இரும்" என்று கூறிவிட்டு அவ்விடத்தை விட்டு வெருண்டோடினார் அந்த மனிதர்.

இப்பொழுதுதான் " வந்த மனிதர் சாமான்யரல்லர் .தாம் கற்ற கல்வி வேறு, அவர் கற்ற கல்வி வேறு " என்ற உண்மையை மௌலானா ரூமி ( ரஹ்) அவர்கள் உணர்ந்து வந்த மனிதர் ஷம்சுத் தப்ரேஸ்(ரஹ்) அவர்கள் என்பதை தெரிந்து கொண்டு,

அவரை பின் தொடர்ந்து ரூமி அவர்கள் ஓடுகிறார்கள் . அங்கு நிற்பது போல் இருக்கும் மூச்சு இறைக்க இறைக்க அருகில் போனால் காணொமல் போவார்கள் ஷம்சுத் தப்ரேஸ் (ரஹ்) அவர்கள்.

சற்குருவை எண்ணி எண்ணி கவலை கொண்டு அழ ஆரம்பித்து விடுவார்கள் மௌலானா ரூமிஅவர்கள் . எப்படியேனும் கண்டு பிடித்து அவர்களிடம் பிழை பொறுத்தருளுமாறு வேண்ட ஆவல் கொண்டார்கள் ரூமி .

ஒரு நாள் திடீரென்று முன்னே நின்று ஒரு சின்ன புன்முறுவல் . ரூமி அவர்கள் ஓடோடி போய் கட்டி பிடித்து அழுது கொண்டினார்கள் .

ஆமாம் தாகத்தை நோக்கியே தண்ணீர் பிரவாகம் எடுக்கும் .

அதன் பிறகு சற்குருவே மௌலானா ரூமிக்கு சகலமுமானார்கள் . சற்குருவின் ஆன்மீக மாணவராகி அதற்குப் பிறகே ரூமி அவர்கள் உலகப் பிரசித்துப் பெற்ற மாபெரும் கருத்துப் பெட்டகமான "மஸ்னவி " யை உலகுக்கு தந்தார்கள்

தண்ணீரில் ஒரு பொருளைப் போட்டால் நனையும் அதெப்படி நனையாமல் இருந்தது என்றெல்லாம் நம் மனம் எண்ணத் தோன்றும் ...ஆனால் இந்த உலகினில் எதிரும் புதிருமான விஷயங்களில் சற்குருமார்கள் தன் ஆன்மீக பிள்ளைகளின் பகுத்தறிவோடு ஒன்றிய மனதை தனியே பிரித்து மனமற்ற நிலையை சுளுவாகப் போதிக்க மிக அழகாக சில நிகழ்வுகளை கையாளுகிறார்கள் .

இந்த கொடுப்பினை எல்லோருக்குமே வாய்க்க வேண்டும் .

## சற்குரு 4



சில சற்குருமார்கள் தன் ஆன்மீக சீடர்களுக்கு தன்னடக்கத்தை மட்டுமே பெரிதாக போதிப்பார்கள் . " உன்னை விட மற்றவர்கள் சிறந்தவர்களாக நீ பாவித்தால் உனக்கு எல்லா ஞானமும் வாய்க்கப் பெறும் "

இது தன்னை அறிதலின் இன்னொரு படித்தரம் . இந்த ஞான உபதேசம் ஆறறிவுப் படைத்த மனிதனையும் தாண்டி மற்ற எல்லா ஜீவராசிகளையும், ஏன் அஃறிணை பொருட்களையும் கூட தன்னை விட பெரிதன பாவிக்கும் மனப்பான்மையை வளர்த்து விடுகிறது.

சிலருக்கு காற்றின் இரைச்சலில் , இலை உதிர்தலில் ஞானம் கிடைத்திருக்கிறது .

கதவின் "கிறீச்" என்ற சத்தத்தில் ஞானம் கிடைத்திருக்கிறது .

அசோக சக்கரவர்த்திக்கு யுத்த களத்தில் மரண ஓலத்தில் ஞானம் கிடைத்திருக்கிறது.

புத்தருக்கு மனித சமூகத்தின் பிணி , மூப்பு , சாக்காடில் ஞானம் கிடைத்கிருக்கிறது .

ஹஸன் பஸரீ (ரஹ்) அவர்கள் நபி (ஸல்) அவர்களின் பேரர் இமாம் ஹஸன் (ரலி) அவர்களின் திருக்கரம் தொட்டு தீட்சைப் பெற்றவர்கள் . அவர்கள் போதித்தது " தன்னடக்கம் " தன்னடக்கம் இறைஞானத்தை போதிக்கும் என்று நம்பினார்கள் .

தப்பும், தவறுமாக ஒலு செய்தவரிடம் இமாம் ஹசன் (ரலி) அவர்கள், " நான் செய்யும் ஒலு கில் ஏதேனும் தவறிருந்தால் தாங்கள் சுட்டிக் காட்டினால் நான் திருத்திக் கொள்வேன்" என்று தான் ஒலு செய்ய , அந்த நபர் தான் செய்த ஒலுகில் தவறு இருப்பதாக இமாம் அவர்களிடம் "இனிமேல் தவறான முறையில் ஒலு செய்ய மாட்டேன்" . என்று கூறி,திருத்திக் கொண்டார் .இது எந்த மாதிரியான ஞான உபதேசம் என்பது புரிகிறதா ?

ஹசன் பஸரீ (ரஹ்) அவர்கள் ஒரு சமயம்

நாயைப் பார்த்து " இறைவா ...! இந்த நாயின் பொருட்டு என் இறைஞ்சுதலை ஏற்று என்னை ஆட்கொள்வாயாக .! " இதைக் கேட்ட ஒருவர் , "தாங்கள் மேலானவர்களா ? அந்த நாய் மேலானதா ?" என்று வினவ ,

"இறை தண்டனையிலிருந்து நான் ஈடேற்றம் பெற்றால் நானே அந்நாயினும் மேலானவன் . இல்லையெனில், அல்லாஹ்வின் மீது ஆணையாகக்

கூறுகிறேன். என்னைப் போன்ற நூறு ஹஸன்களை விட அந்த நாயே மேலானது " என்றார்கள்.

நாயிடம் பத்து நற்பண்புகள் இருக்கிறது .இந்த நற்பண்புகள் இறைநம்பிக்கையாளனிடம் இருக்க வேண்டும் .

1 ) அது பசித்திருக்கும் . பசித்திருத்தல் நல்லோர்களின் (ஸாலிஹீன்களின் ) நற்பண்பு .

2) அதற்குத் தங்குவதற்கு ஒரு குறிப்பிட்ட இடம் இராது. இது இறை ஆதரவு (தவக்குல்) வைத்தவர்களின் அடையாளம்.

3) அது இரவில் சிறிது நேரமே தூங்கும் .இது இறைக் காதலர்களின் நற்பண்பு .

4) அது செத்தால் அனந்தரம் கொள்ளும் பொருள் அதனிடம் கிடையாது .இது துறவிகளின் அடையாளம்.

5) அதன் எஜமான் எத்தனை தடவை அடித்த போதிலும் அவனை விட்டு அது அகலாது. இது உண்மை முரீது (ஆன்மீக மாணவரின்) அடையாளம்

6) பூமியில் தாழ்ந்த இடத்தைப் பொருந்திக் கொண்டு அதில் படுத்துக் கொள்ளும் . இது தாழ்மையுடையோரின் நல்லியல்பு

7) அது இடத்தை வேறொன்று வந்து ஆக்கிரமித்தால் வேறு இடம் போய்ப் படுத்துக் கொள்ளும் .இது இறை நாட்டத்தைப் பொருந்திக் கொள்வோரின் நற்பண்பு

8 ) அதனை நாம் எத்தனை தடவை விரட்டியடித்த பின்னும் அதன் முன் ஒரு ரொட்டித் துண்டை காட்டின் அது நம்பால் வருமே தவிர வினயத்துடன் வராமல் இராது. இது பக்திமான்களின் நற்பண்பு

9) உணவைக் கண்டால் அது தொலைவில் அமர்ந்து வழிபார்த்துக் கொண்டிருக்கும் .இது ஏழை (மிஸ்கீன்)களுடைய நல்லியல்பு .

10) அது ஓரிடத்தை விட்டுக் கிளம்பி விட்டால் மீண்டும் அவ்விடத்தைத் திரும்பிப் பாராது. இது விசாரமுடையவர்களின் குணமாகும். என்று ஹஸன் பஸரீ (ரஹ்) அவர்கள் கூறினார்கள் .

இந்த மாதிரி ஞானத்தைத்தான் நபிகளின் பேரர் சற்குரு இமாம் ஹஸன் (ரலி) அவர்கள் ஹஸன் பஸரீ (ரஹ்) அவர்களுக்கு போதித்தது .

## சற்குரு 5



தேடுதல் என்பது ஞானத்தை மட்டும் அல்ல ; குருவையும் சேர்த்துதான் தேட வேண்டியது உள்ளது சீடனுக்கு.

மஹாபாரத்தில் ...

துரோணோச்சாரியாராகிய நான் அரச குடும்பத்தில் பிறந்தவர்களுக்கு மட்டும் ஆய கலைகளான வில்வித்தையும் கற்றுக் கொடுத்து வந்தேன் .

என்னைப் பார்ப்பதற்காக ஏகலைவன் என்ற சத்ரிய சாதகன் , பாண்டவர்கள் பாடம் கற்கும் இடத்திற்கு வந்த பொழுது, பாண்டவர்களுடைய நாய் அவனைப் பார்த்துக் குரைத்து விட்டது. எனவே அதன் வாயைச் சுற்றிலும் தைக்கும்படியான ஒரு அஸ்திரத்தை அதன் மீது அவன் ஏவி விட்டான்.

அதைக் கண்ட அர்ஜுனன் இது என்ன அஸ்திரம் குருவே, எனக்கு இந்த வித்தையை நீங்கள் கற்றுத் தரவில்லையே என்று கேட்டான்.

நான் சொன்னேன் எனக்கு இது தெரியாது. இது யாருக்கும் நான் கற்றுத் தந்த வித்தையல்ல என்று.

பிறகு அனைவரும் நாயை முன்னே அனுப்பி பின் தொடர்ந்து அது யார் அந்த வில் வித்தகன் என்று தேடிப் போனோம். அங்கேதான் ஏகலைவன் என் சிலையை வைத்து மானசீகமாக வித்தைகளைக் கற்றுக் கொண்டிருந்தான்.

அவன் ஏற்கனவே என்னிடம் வித்தை கற்றுத் தரும்படி கேட்டு வந்திருந்தான். நான் தம்பி ஒரு வேடனுக்குத் தேவையான அனைத்து வில் வித்தைகளும் உனக்கு நன்றாகவே தெரிந்திருக்கிறது. அது போதும். நான் அரச குமாரர்களுக்கு மட்டுமே கற்றுத் தருவேன் என்று சொல்லி அனுப்பி வைத்தேன்.

அதற்குப் பிறகே அவன் என் சிலையை வைத்து மானசீகமாக குருவாக ஏற்றுக் கொண்டு எல்லா வித்தைகளையும் கற்று தேர்ச்சி அடைந்திருக்கிறான். அவன் குரு பக்திக்கு நிகர் எவருமேயில்லை.

குரு தொடர்பு இல்லாமல் கூட குரு மீது கொண்ட அளப்பரிய பிரியம் குரு சொல்லித் தராத ஞானத்தைப் பெற்றுத் தரும் என்பதற்கு நிகழ்வாக மஹாபாரதத்தில் இது சொல்லப் பட்டிருக்கிறது.

அகிலத்திற்கோர் அருட்கொடையாக அனுப்பப் பெற்ற நபிகள் கோமான் (ஸல்) அவர்கள் ஒரு நாள் மதினாவின் பள்ளிவாயிலிலே அமர்ந்து மக்களுக்கு அறபோதம் நல்கிக் கொண்டிருந்தார்கள்.

அப்பொழுது அவர்கள் திடீரெனத் தங்களின் செங்கமலத் திருமுகத்தை எமன் நாட்டின் பக்கம் திருப்பிப் புன்முறுவல் பூத்தவர்களாய்,

"திட்டமாக எமன் நாட்டிலிருந்து வரும் ஆழிய அன்புத் தென்றலின் சுகத்தை நுகர்கிறேன் .என்னை பின் தொடரும் அந்த ஒரு மனிதரின் பரிவுரை காரணமாக, ராபி ஆ, முலறு ஆகிய இரு கூட்டத்தினரின் ஆடுகளின் மீதுள்ள உரோமத்தின் எண்ணிக்கை அளவுள்ள மக்கள் சுவனம் புகுவர் என்று திருவாய் மலர்ந்தனர் .

அண்ணலாரின் இச்சொற்கள் அவர்களின் தோழர்களுக்கு அளவற்ற வியப்பை அளித்தது.

"நாயகமே அந் நல்லவர் யார்?"

"நலமெல்லாம் திரண்ட அந்தப் புனிதர் யார்?" என்று அவர்கள் பெரிதும் ஆவலுடன் வினவினார்கள். அதற்கு அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள் ,

"அவர் அல்லாஹ்வின் நல்லடியார். எமன் நாட்டிலுள்ள கரன் என்னும் ஊரில் வாழ்ந்து வருகிறார் "என்று பதிலிறுத்தனர்.

"அவர் தங்களைவந்து தரிசித்துள்ளாரா?"

"இல்லை; அவர் என்னைத் தம் புறக்கண்ணால் தரிசிக்காத போதினும் அகக்கண்ணால் தரிசித்துள்ளார்"

"அவர் ஏன் தங்களை தரிசிக்க வரவில்லை?"

"அவர் இறை வணக்கத்தில் தம்மை மறந்து, தம் சுற்றம் மறந்து, தம் சூழல் மறந்து மூழ்கி இருப்பதன் காரணமாகவும் , என்னுடைய வழிமுறையை (ஷரீஅத்தை) பேணுதலுடன் பின்பற்றி வருவதன் காரணமாகவும் அவர் என்னை தரிசிக்க வரவில்லை. கண்ணிழந்த அவரின் வயோதிக அன்னைக்குப் பணிவிடை செய்த பின் ஆடு மேய்த்து , அதிலிருந்து கிடைக்கும் சிறிதளவு வருவாயைக் கொண்டு அவர் தம் அன்னைக்கு உணவளித்து வருகிறார்"

ஸஹாபா பெருமக்கள் மாநபிகளார் ﷺ அன்னவர்களிடம் கேட்டார்கள், “எங்களுக்கு அவர்களை காணக்கிடைக்குமா நாயகமே?”

நபிகள் கோமான் முஹம்மத் ﷺ அன்னவர்கள் ஸையிதுனா அபூபக்ர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களைப் பார்த்துக் கூறினார்கள், “நீங்கள் அவர்களைக் காணமாட்டீர்கள். உமரும் அலியும் (ரலியல்லாஹு அன்ஹும்) அவர்களைக் காணுவார்கள்.”

பின் அவர்கள் இருவரையும் பார்த்துக் கூறினார்கள், “(அவர்களின் அடையாளம்) அவர்களின் உடலெங்கும் ரோமம் நிறைந்திருக்கும். அவர்களின் இடது கை உள்ளங்கையில் ஒரு திர்ஹத்தின் அளவு வெள்ளை அடையாளம் இருக்கும். அது வெண்குஷ்டத்தின் அடையாளம் அல்ல. அவர்களைக் கண்டவுடன் என்னுடைய சலாத்தை அவர்களுக்கு எடுத்துச் சொல்லுங்கள். என்னுடைய உம்மத்தவர்களான என் சமூகத்துக்கு அவர்களை துஆ செய்யச் சொல்லுங்கள்.

ஏமனில் கரன் நகர் முழுவதும் தேடி ரொம்பவும் சிரமத்திற்கு இடையில் உவைஸுல் கரனி (ரஹ்) அவர்களை உமர் (ரலி ) , அலி (ரலி) இருவரும் கண்டுபிடித்தனர்.

உமர் (ரலி) அவர்கள் , உவைஸுல்கரனி (ரஹ்) அவர்களிடம் ,

" தாங்கள் ஏன் பெருமானார் (ஸல்) அவர்கள் உயிரோடிருக்கும் போது அவர்களை வந்து தரிசிக்கவில்லை?"

"தாங்கள் அவர்களைத் தரிசித்துள்ளீர்களா?" என்று திருப்பி கேட்டார்கள் உவைஸ் .

"ஆம் . அவர்களுடனேயே இருந்திருக்கிறோமே ?

"நல்லது . பெருமானாரின் அழகு திருமுகத்தில் அவர்களின் புருவங்கள் ஒன்று சேர்ந்திருந்தனவா , பிரிந்திருந்தனவா ?" என்று கேட்டார் உவைஸுல் கரனி ,

உமர் (ரலி) அலி (ரலி) யாது கூறுவதென தெரியவில்லை .

"இஃதென்ன புதுமை ! தாங்கள் இருவருமே பெருமானாரின் அன்புத் தோழர்கள் அல்லவா அவர்களைப் பற்றி இது கூடத் தெரியவில்லை .நல்லது .

"அடுத்து உஹது யுத்தத்தில் நபி(ஸல்) அவர்களுக்கு ஒரு பல் உடைந்த போது உண்மைத் தோழர்களாக இருப்பின் அது போன்று உங்களின் ஒரு பல்லை விழச் செய்ய வில்லையா ? நட்பு என்றால்

அதுதானே உண்மை நட்பு ! என்னைப் பாருங்கள் ... நான் என் பற்கள் அனைத்தையும் பிடுங்கி விட்டேன். நான் ஒரு பல்லைப் பிடுங்க , அது நபி (ஸல்) அவர்களுக்கு வீழ்ந்த பல்லாக ஒரு சமயம் இல்லாதிருக்குமோ என்ற ஐயம் எனக்கு ஏற்பட அத்தனை பல்லையும் பிடுங்கி விட்டேன் " , என்று தன் பொக்கை வாயைத் திறந்து காட்டினார்.

தோழர்கள் இருவரும் வியந்து போயினர்.
பிரிதொரு சமயம் உவைஸுல் கரனி (ரஹ்) அவர்கள் நபி (ஸல்) அவர்களை ஜியாரத் செய்ய மதீனா வர இருந்தார்கள்
பூமான்நபிமீது பேரின்ப காதல்
நபி-ஸல் அவர்கள் ரவ்ளா ஷரீப் வாட்ச்மேனிடம் .
"நாளை என்னை ஒருவர் ஜியாரத்
செய்ய வருவார் அவரை உள்ளே விடாதே..! என
கனவில் தோன்றி சொன்னார்கள்
அதே போல் உள்ளே விடவில்லை...
2வது நாள் நபி-ஸல் அவர்கள் கனவில் தோன்றி "நாளை அவர் இன்ன
மாறுவேடத்தில் வருவார் விடாதே...!" என்றார்கள்
அதேபோல் வாட்ச்மேன்அவரை விடவில்லை...!
3வது நாள் கனவில்..நபி-ஸல்
சொன்னார்கள் "அவர் பழக்கூடையில்
ஒழிந்து கொண்டு வருவார் விடாதே...!"
அதேபோல் அவரை உள்ளே விடவில்லை....
4வது கனவில் வாட்ச்மேன் கேட்டார்...
"யாரசூலல்லாஹ்..!ஏன் அவரை தடுத்தீர்கள்...?
"என் ரவ்ளா வுக்கு முன் நின்று
"அஸ்ஸலாமு அலைக்கும் யாரசூலல்லாஹ்" என்று அவர் சொன்னால்..நான் கப்ரை பிளந்து எழுந்து வந்து பதில் ஸலாம் சொல்லும் வரை போக மாட்டார்..அந்த அளவு
அவர் என்மேல் பிரியம் வைத்து இருக்கிறார்..!"
"அவர்கள்தான் உவைஸுல் கர்னைன்

ஆவார்கள்."

இது என்ன மாதிரியான குருபக்தின்னு அளவிட முடியுமா ?

## சற்குரு 6



" சற்குரு , சற்குரு என்று நீங்கள் போட்டுக் கொண்டிருக்கும் பதிவு நம்மில் கூட சிலருக்கு பிடிக்கிறது இல்லை .அந்த அளவிற்கு சற்குரு அவசியம் என்றால் , அவரின் பிரதானத்தைப் பற்றி நீங்கள் ஆதாரத்தோடு சொல்லுங்களேன் " என்று நண்பர் ஒருவர் அஸர் தொழுகைக்குப் பிறகு பேசிக் கொண்டே போனார் .

பொதுவாக நான் நோன்பில் அதிகம் பேசுவது இல்லை . அதனால் சிரித்துக் கொண்டே மௌனித்திருந்தேன் .

" எங்கே பதிலைக் காணோம் ? " என்று சற்று நக்கலாகவும் கூறினார் .

அந்த நண்பருக்காக ......

வர்த்தகக் கூட்டமொன்று வியாபாரத்தை முன்னிட்டுப் பிரயாணப்படுவதற்கு முன்பு சற்குரு ஷைகு அபுல்ஹஸன் கிர்கானீ (ரஹ்) அவர்களிடம் சென்று ,

" நாங்கள் போகும் பாதை பயங்கரமான ஆபத்துக்கள் நிறைந்த இடம் .ஆகையால் பாத்திரமாகப் போய் வர துஆ செய்து அனுப்பும் படி சற்குருவிடம் பைஅத் வாங்கிய முரீது வேண்டினார் .

" உங்களுக்கு ஆபத்து நேரிடின் இந்த

அபுல்ஹஸனை ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள் " என்று கூறிப் பயணம் அனுப்பி வைத்தார்கள் .

சற்குருவின் இந்த வார்த்தை அவரது முரீது தவிர வர்த்தக கூட்டத்தின் மற்றையோருக்கு ஒரு மாதிரியாக , பெருத்தக் கேடாக நினைத்தனர் .

பல நாள் பிரயாணத்தில் ஒரு நாள் கொள்ளைக் கூட்டத்தினர் அவர்களை வழிமறித்துப் பொருள்களைச் சூறையாடினர் .

முரீது மட்டும் , ஷைகு அபுல்ஹஸன் கிர்கானி (ரஹ்) அவர்களை விளித்து உதவி தேடினார் . பொருளுடன் அவர் கொள்ளைக் கூட்டத்தாரின் பார்வையை விட்டும் தப்பினார் . மற்றவர்கள் இறைவனை விளித்து உதவி தேடினர் . அவர்களுடைய பொருள்கள் ஒன்று விடாமல் சூரையாடப்பட்டன .

எல்லோருடைய பொருளும் கொள்ளை போயிருக்க ஒரேவொருவருடைய பொருள் மாத்திரம் தப்பிப் பத்திரமாக இருப்பதையெண்ணி வர்த்தகர்கள் பேராச்சரியப்பட்டு , சற்குருவிடம் வந்தனர்.

" நாங்கள் அல்லாஹ்வைக் கூப்பிட்டு உதவி தேடினோம். பொருளை இழந்தோம் . ஒருவர் மட்டும் உங்களைக் கூப்பிட்டு உதவி தேடினார் . அவருடைய பொருள்கள் பாதுகாக்கப்பட்டது .இதன் காரணம் என்னவென்று நீங்கள் கூறுங்கள் " என்றனர்.

" உங்களை நீங்களே அறியாத போது , நீங்கள் அல்லாஹ்வையும் அறியாது ,

வாக்கு மனம் வேறுபட்டு வெறுமனே அவன் பால் உதவி தேடினீர்கள் . இந்த அபுல்ஹஸனோ தன்னை அறிந்து அதன் மூலம் தன் இறைவனை அறிந்து , வாக்கு மனம் ஒன்றுபட்டு அவன்பால் உதவி தேடினார் . அபுல்ஹஸனை ஞானப்படுத்தி உதவி தேடினால் உங்களுக்காக அபுல்ஹஸன் அல்லாஹ்வின் உதவி தேடுவார் .அவ்வமயம் உங்கள் காரியம் நிறைவேறும் . நீங்கள் அல்லாஹ்வை அறியாத புறத்தில் , என்றும் அவனைக் கூப்பிடும் வழக்கம் போல் ஆயிரம் முறை அழைத்தாலும் யாதொரு பயனுமில்லை"

என்பதாக சற்குரு ஷைகு அபுல்ஹஸன் கிர்கானீ (ரஹ்) அவர்கள் அறிவுறுத்தினார்கள் .

ஆதாரம் : மிர் அத்துல் கவுனைன்

பக்கம் 244

اَلَّذِىْ خَلَقَ السَّمٰوٰتِ وَالْاَرْضَ وَمَا بَيْنَهُمَا فِىْ سِتَّةِ اَيَّامٍ ثُمَّ اسْتَوٰى عَلَى الْعَرْشِ ۛ اَلرَّحْمٰنُ فَسْـــَٔـــلْ بِهٖ خَبِيْرًا

அவனே வானங்களையும், பூமியையும், அவற்றிற்கிடையிலுள்ளவற்றையும் ஆறு நாட்களில் படைத்தான்; பின்னர் அவன் அர்ஷின் மீது அமைந்தான்; (அவன் தான் அருள் மிக்க) அர்ரஹ்மான்; ஆகவே, அறிந்தவர்களிடம் அவனைப் பற்றிக் கேட்பீராக.

(அல்குர்ஆன்: 25:59)

## சற்குரு 7



ஹஜ்ரத் தக்கலை மீர் முஹம்மது அப்பா அவர்கள் காலத்தில் திருவனந்தபுரத்தை ஆண்டு வந்த முத்துச்சாமி தம்பிரான் அப்பா அவர்கள் சகவாசத்தில் சிறிது காலம் இருந்து பெரிய ஞானி மகானாகி விட்டர் . தன் சற்குரு அப்பா அவர்களை அரச குடும்பத்தினர் பெரிதும் கண்ணியப்படுத்தி மரியாதையோடு உபசரிப்பதை பெரிதும் விரும்பினார்.
அந்தச் சந்தர்ப்பத்தில் அரண்மனயில் அடுத்த வாரத்தில் இளவரசராக பட்டம் சூட்டுவதற்கு நியமிக்கப்பட்ட அரச குமாரனுக்கு திடீரென நோய் உண்டாயிற்று . ராஜ வைத்தியம் செய்தும் பலனில்லாமல் இளவரசன் உயிர் துறந்தான் .

அரச அவையும் சமஸ்தானம் துக்கத்தில் ஆழ்ந்தன. முத்துச்சாமி தம்பிரானோ " "என் சற்குரு அப்பா அவர்கள் அருகில் இருந்திருந்தால் , என் மகன் நோயில் இருந்து காப்பாற்றபட்டிருக்கலாம் " என்று புலம்ப ஆரம்பித்து விட்டார் .
தகனக் கிரியைக்கான ஏற்பாடுகள் நடைபெற்றுக் கொண்டிருந்தன. இந்தச் சமயத்தில் பீர் முஹம்மது அப்பா அவர்கள் ஆரண்மனைக்குள் திடும் பிரவேசமாக நுழைந்தார்கள் .அரச குடும்பத்தாரின் பரிதாப நிலையைக் கண்டு மனமிரங்கினார்கள் .
"முத்துச்சாமி தம்பிரானே , ஞானியான உமக்கு விசனம் வேண்டாம்" என்று அவர்களுக்கு ஆறுதல் கூறினார்கள் .
பின்பு இளவரசன் பிணமாகக் கிடந்த மாடத்திற்குள்ளே சென்று எல்லோரையும் வெளியே போகச் செய்து , கதவை அடைத்துக் கொண்டு பிணத்துடன் தனிமையாக இருந்தார்கள் . சற்று நேரத்திற்குள் அப்பா அவர்கள் சரீரம் முழுவதும் வியர்த்து வடிந்தவர்தளாய் , இறந்து போன இளவரசனை உயிர் பெற்றெழச் செய்து , தன்னுடன் ஒன்றாக அழைத்து வந்து , அரசனது கையில் ஒப்புவித்து ,
"இனி நீர் எம்மைப் பார்ப்பது அரிது " என்று கூறி மறைந்தும் விட்டார்கள் .
அரசர் தம்பிரான் , அப்பா அவர்களைக் கண்டு கொள்வதறகு எவ்வளவோ பிரயாசை எடுத்துத் தேடியும் அப்பா அவர்கள் கிடைக்கவே இல்லை.
அதன் பின் சற்றேறக்குறைய நூறு வருடங்களுக்குப் பிறகு அப்பா அவர்கள் வந்து சேர்ந்தார்கள் .
அப்பா அவர்கள் முந்நூறு வருட காலம், ஜீவித்திருந்ததாய் சரித்திரம் கூறுகின்றது.
ஆதாரம் :- இவ் வரலாற்றை உரையுடன் அப்பா அவர்கள் எழுதிய "ஞானமணிமாலை " யில் ஜீவி சரிதைப் பகுதியில் காணலாம்.

6502. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்'

அல்லாஹ் கூறினான்:

எவன் என் நேசரை பகைத்துக் கொண்டானோ அவனுடன் நான் போர் பிரகடனம் செய்கிறேன்.

எனக்கு விருப்பமான செயல்களில் நான் கடமையாக்கிய ஒன்றை விட வேறு எதன் மூலமும் என் அடியான் என்னுடன் நெருக்கத்தை ஏற்படுத்திக் கொள்வதில்லை.

என் அடியான் கூடுதலான (நஃபிலான) வணக்கங்களால் என் பக்கம் நெருங்கி வந்து கொண்டேயிருப்பான். இறுதியில் அவனை நேசித்துவிடும்போது அவன் கேட்கிற செவியாக, அவன் பார்க்கிற கண்ணாக, அவன் பற்றுகிற கையாக, அவன் நடக்கிற காலாக நான் ஆகிவிடுவேன். அவன் என்னிடம் கேட்டால் நான் நிச்சயம் தருவேன். என்னிடம் அவன் பாதுகாப்புக் கோரினால் நிச்சயம் நான் அவனுக்குப் பாதுகாப்பு அளிப்பேன்.

ஓர் இறைநம்பிக்கையாளனின் உயிரைக் கைப்பற்றுவதில் நான் தயக்கம் காட்டுவதைப் போன்று, நான் செய்யும் எச்செயலிலும் தயக்கம் காட்டுவதில்லை. அவனோ மரணத்தை வெறுக்கிறான். நானும் (மரணத்தின் மூலம்) அவனுக்குக் கஷ்டம் தருவதை வெறுக்கிறேன். 91

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

**Rahmath Rajakumaran**

தக்கலை பீர் முகமது அப்பா அவர்களின் நூல்கள் .

திருமெய்ஞானச் சர நூல்

ஞான மலை வளம்,

ஞான ரத்தினக் குறவஞ்சி,

ஞான மணிமாலை

ஞானப் புகழ்ச்சி

ஞானப்பால்

ஞானப்பூட்டுத் திறப்பு

ஞானக்குறம்

ஞான ஆனந்தகளிப்பு

ஞான நடனம்

ஞான மூச்சுடர் பதிகங்கள்

ஞான விகட சமர்த்து

ஞானத் திறவு கோல்

ஞான தித்தி

ஞான உலக உருளை ,

மஃரிபத் பாமாலை ,

பிஸ்மில்குறம்

ஆகியஅவரின் படைப்புக்களை வைத்து அவர் கிபி 17ம்நூற்றாண்டைச் சேர்ந்தவர் எனவும் கருதுகின்றனர்.

## சற்குரு 8

உங்களோடு கீழே கொடுக்கப்பட்ட விஷயங்களைப் பற்றி பேச வேண்டும் என்றால் ஒவ்வொன்றும் மிகப் பெரிய பதிவாகி விடும் என்பதால் மேலோட்டமாக அங்கொன்றும் இங்கொன்றுமாக எடுத்து தந்துள்ளேன் இன்னும் நிறையவே உள்ளது அவ்வப்போது தருகிறேன்.

பகுத்தறிவுக்கு உட்பட்டு சிந்திப்பவர்கள் நவீனத்துவ வாதிகளின் வார்ப்பெடுப்புகள் , ஆடியோவைக் கேட்டே மார்க்கத்தை தெரிந்து கொண்டவர்கள் , என் பதிவுகளை தவிர்க்கவும். அந்தபுறமாக அப்புறப்படவும் .

நபி (ஸல்) அவர்கள் :

1)"நான் கல்வியின் பட்டணம்; அலி அதன் தலைவாயில் "

2) " அறிஞர்களே நபிமார்களின் வாரிசு "

3) "என்னுடைய சமூகத்தார் களிலுள்ள அறிஞர்கள் பனீ இஸ்ரவேலர்களிலுள்ள நபிமார்களைப் போன்றவர்கள் "

4) "எனது ஸஹாபாத் தோழர்கள் நட்சத்திரங்களைப் போன்றுள்ளார்கள் அவர்களுள் எவரைப் பின்பற்றினாலும் நீங்கள் நேர்வழி பெற்றவர்களாவீர்கள்."

(மிஷ்காத்து)

5) உமது இறைவன் புவியில் நிழலை எவ்வாறு பரப்பியிருக்கின்றான் என்பதை நீர் பார்க்கவில்லையா? குர்ஆன் (25:45 )

6) பூமியை நாம் விரிப்பாக்கி அதில் மலைகளை முளைகளாய் ஆக்கவில்லையா? குர்ஆன் (78 : 6, 7)

நிழல் (ளில்லு ) , என்றும் மலை (ஜிபால்) என்று வர்ணித்த குறிப்பு தன் இறைநேசர்களாகிய அவுலியாக்காளப் பற்றிய குறிப்பாகும்.

(ருஹுல் பயான்)

6502. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்'

அல்லாஹ் கூறினான்:

எவன் என் நேசரை பகைத்துக் கொண்டானோ அவனுடன் நான் போர் பிரகடனம் செய்கிறேன். எனக்கு விருப்பமான செயல்களில் நான் கடமையாக்கிய ஒன்றை விட வேறு எதன் மூலமும் என் அடியான் என்னுடன் நெருக்கத்தை ஏற்படுத்திக் கொள்வதில்லை. என் அடியான் கூடுதலான (நஃபிலான) வணக்கங்களால் என் பக்கம் நெருங்கி வந்து கொண்டேயிருப்பான். இறுதியில் அவனை நேசித்துவிடும்போது அவன் கேட்கிற செவியாக, அவன் பார்க்கிற கண்ணாக, அவன் பற்றுகிற கையாக, அவன் நடக்கிற காலாக நான் ஆகிவிடுவேன். அவன் என்னிடம் கேட்டால் நான் நிச்சயம் தருவேன். என்னிடம் அவன் பாதுகாப்புக் கோரினால் நிச்சயம் நான் அவனுக்குப் பாதுகாப்பு அளிப்பேன். ஓர் இறைநம்பிக்கையாளனின் உயிரைக் கைப்பற்றுவதில் நான் தயக்கம் காட்டுவதைப் போன்று, நான் செய்யும் எச்செயலிலும் தயக்கம் காட்டுவதில்லை. அவனோ மரணத்தை வெறுக்கிறான். நானும் (மரணத்தின் மூலம்) அவனுக்குக் கஷ்டம் தருவதை வெறுக்கிறேன். 91

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஸஹீஹ் புகாரி அத்தியாயம் : 82. (தலை)விதி.

مَنْ يُّطِعِ الرَّسُوْلَ فَقَدْ اَطَاعَ اللّٰهَ ۚ وَمَنْ تَوَلّٰى فَمَاۤ اَرْسَلْنٰكَ عَلَيْهِمْ حَفِيْظًا

எவர் (அல்லாஹ்வுடைய) தூதருக்கு (முற்றிலும்) கட்டுப்ப(ட்)டு (நடக்)கின்றாரோ அவர் நிச்சயமாக அல்லாஹ்வுக்கே வழிப்பட்டார். ஆகவே (நபியே! உங்களை) எவனும் புறக்கணித்தால் (அதற்காக நீங்கள் கவலைப்பட வேண்டாம்.) அவர்களை கண்காணிப்பவராக உங்களை நாம் அனுப்பவில்லை.

(அல்குர்ஆன் : 4:80)

" என்னுடைய உம்மத்துகளில் நாற்பது நபர்கள் நபி இப்ராஹீம் (அலை) அவர்களுடைய இருதயத்தை உடையவர்களாய் என்றும் இருந்தே வருவர்.

அல்லாஹ்தஆலா அந்த நல்லடியர்களைக் கொண்டே பூலோகத்தில் வாழ்பவர்களை விட்டும் பிணிகளைப் போக்குவான்.

அவர்களுக்காக மழையைப் பொழியச் செய்வான்.

அன்னவர்களைக் கொண்டுதான் பூலோகத்திலுள்ளவர்களுக்கு உதவி புரியப்படும் .

ஆதாரம் : ஹதீது தபறானீ.

## சற்குரு 10

சற்குருவின் கடைசியான பதிவுகள் சற்குருவின் தனிப்பட்ட ஆளுமை சொல்வதற்கு பதிலாக " இஸ்லாத்தின் அடிப்படை சிந்தாந்தங்கள் " பற்றி சொல்ல வேண்டியதாகி விட்டது.

இ.அ. சித்தாந்தங்கள் தனியாக பல பதிவுகளில் சொல்ல வேண்டிய கடல் . அதை எழுதினால் கனத்த புஸ்தமாக பரிணமிக்கும் அந்த அளவுள்ளதை அளந்து அளந்து சொல்ல வேண்டியதாயிற்று. இன்னுமோரு விஷயத்தை சொல்ல வேண்டும் .அதையும் சொல்லி விடுகிறேன் .

ஒரு சமயம் நபி (ஸல்) அவர்கள் தபூக்கு யுத்தத்தில் வெற்றி பெற்று ஜெயபேரிகையுடன் நபித்தோழர்கள் சகிதம் மதீனா நகருக்குள் நுழைகிற போது, " சிறிய போரிலிருந்து பெரிய போர் அளவில் மீண்டுள்ளோம் " என்றார்கள் .

உடனே , நபித்தோழர்கள் , யா ரசூல்லாஹ் .. ! இப்போது போர் (பீஸபீல்) செய்துதானே திரும்பினோம். இதைவிட பெரிய போர் யாது ? என வினவ,

"நபுஸுடன் போராடுவதுதான் பெரிய போராட்டம்" என்றார்கள்.

"அல்லாஹ்வுக்கு வழிபட்டு தன்னுடைய நபுஸுடன் போர் புரிபவர் எவரோ அவரே வீரர் . - மிஷ்காத் .

"முஷ்ரிக்குடன் யுத்தஞ் செய்து வெட்டப்பட்டு ஷஹீதானாலும் சரி;

தம்முடைய நப்ஸுடன் ஆத்மார்த்தமாகப் போர் செய்து அதை வெட்டி வீழ்த்தினாலும் சரி, இரண்டுமே யுத்தம்தான் . - முஹ்யித்தீன் இபுனு அறபி தப்ஸீர் 1-வது பாகம் பக் 137

இவ்வாறாக அல்லாஹ்வின் பாதையில் ஷஹீதானவர்கள் தத்துவாதிகளைப் பொதிந்து ஜோதி ஒளியில் ஐக்கியமாகி விடுகிறபடியால் இறந்தும் உயிர் உள்ளவர்களாகி இறைவனிடம் உணவு பெறுகிறார்கள். ஒரு இல்லத்தில் இருந்து மறு இல்லத்திற்கு மாறுகிறார்கள் . தன் நப்ஸோடு போர் செய்து அதைக் கொன்றொழித்தவர்களின் ஹயாத்தானது மவுத்தில் ஹயாத்தாய் , ஒளியோடு ஒளியாய் சேர்ந்துக் கொள்வதாய் சொல்லப்படுகிறது.

"இறந்த மையத்துக்கள் செவியேற்காது" என்று கூறுகிறவன் வழி கெட்டவனும் மடையனும் ஆவான் . காரணம் ,

பத்ரு போர் முடிந்த பிறகு யுத்தத்தில் மரணித்த இறை மறுப்பாளர்களுடைய பிணங்களை குவிக்கப்பட்டிருந்த இடத்திற்கு நபி (ஸல்) சென்று அப் பிரேதங்களைப் பார்த்து " எங்கள் இறைவன் கூறிய வாக்குறுதியை நாங்கள் உண்மையாகப் பெற்றுக் கொண்டோம். உங்கள் இறைவன் கூறிய வாக்குறுதியை நீங்கள் உண்மையாகப் பெற்றுக் கொண்டீர்களா ? " என்று கேட்டபோது அங்கு அவர்களுடனிருந்த உமர் (ரலி) அவர்கள் :

"யா ரசூலுல்லாஹ்! மரணமடைந்தார் எங்ஙனம் தாங்கள் பேசிய வார்த்தைகளைக் கேட்பார்கள் ? "

" உங்களை விட அவர்கள் நன்றாகக் கேட்பார்கள். உங்களுக்கு வெளிக்காது உண்டு . அவர்களுக்கு ஆன்மார்த்தச் செவி உண்டு. அதனால் அவர்கள் எல்லாவற்றையும் கேட்கிறார்கள் "

- ஸஹீஹ் முஸ்லீம்

"மையித்து உனது பாதரட்சையின் சப்தத்தையும் கூட கேட்கின்றது " என்பதாக புகாரி , முஸ்லீம் , அபூதாவூது , நஸயீ ஆகிய கிரந்தங்களில் சொல்லப்பட்டிருக்கிறது .

உடனே நவீனத்துவவாதிகள் கீழ்க்கண்ட குர்ஆன் வசனங்களை காட்டி எது உண்மை என்று விபரம் கேட்கிறார்கள் .

إِنَّكَ لَا تُسْمِعُ الْمَوْتٰى وَلَا تُسْمِعُ الصُّمَّ الدُّعَآءَ اِذَا وَلَّوْا مُدْبِرِيْنَ

(நபியே!) மரணித்தவர்களுக்குக் கேட்கும்படிச் செய்ய நிச்சயமாக உங்களால் முடியாது. (அவ்வாறே உங்களுக்குப்) புறங்காட்டிச் செல்லும் செவிடர்களுக்கு நீங்கள் அழைக்கும் (உங்களுடைய) சப்தத்தைக் கேட்கும்படிச் செய்யவும் முடியாது.

(அல்குர்ஆன் : 27:80)

இதற்குரிய தக்க பதிலை ஆலீம் பெருமக்கள் மற்றும் பெரியோர்கள் விளக்கம் சொல்வார்கள் என நினைக்கிறேன் .

இன்ஷா அல்லாஹ் விளக்கம் சொல்வார்கள்.

செத்த மையத்துக்கள் செவி ஏற்பதாக நவீன விஞ்ஞானத்தால் ஏற்பாடு செய்வதாக வைத்துக் கொண்டாலும் நீங்கள் மையத்துக்களிடம் பேசினால் அவற்றிற்கு பதில் சொன்னால் செத்த மையம் சாகவில்லை என்ற ஒரு நிலை வரும் அல்லவா ?

இறைவன் செத்துப் போன மையத்துக்களை அவன் நாடினால் செவியேற்க முடியும் .

உதாரணமாக சூர் ஊதப்படும் போது சமாதிகளிலிருந்து வெளிப்பாடுவார்கள் என்று

குர்ஆன் (20 : 102 )

(27 : 87)கூறுகிறது

அடுத்து இறைவன் நாடினால் ....

وَمَا يَسْتَوِى الْاَحْيَآءُ وَلَا الْاَمْوَاتُ اِنَّ اللّٰهَ يُسْمِعُ مَنْ يَّشَآءُ وَمَاۤ اَنْتَ بِمُسْمِعٍ مَّنْ فِى الْقُبُوْرِ

உயிருள்ளவர்களும் மரணித்தவர்களும் சமமாக மாட்டார்கள். நிச்சயமாக அல்லாஹ் தான் விரும்பியவர்களைச் செவியுறும்படிச் செய்கின்றான். (நபியே!) சமாதிகளில் உள்ளவர்களை செவியுறும்படிச் செய்ய உங்களால் முடியாது.

(அல்குர்ஆன் : 35:22)

இந்த வசனத்தின்படி பத்ரு யுத்தத்தில் இறந்த இறை மறுப்பார்களின் பிணங்களிடம் நபிகளார் பேசினார்கள்

## சூஃபியாக்களின் பரிபாஷை 01

அபூ யஸீத் பிஸ்தாமி, ( கிபி 777 - 874 )

30 ஆண்டுகள் மௌனமாகவும் , நாற்பது ஆண்டுகள் ஒரு பள்ளிவாசலில் தங்கியும் ஆன்மீகப் பயிற்சி மேற்கொண்ட பிஸ்தாமி ,

" நான் 30 வருஷமாக இறைவனைத் தேடிக் கொண்டிருந்தேன். கடைசியில்தான் தெரிந்தது , தேடியது நானல்ல ; அவன்தான் என்று. தேடப்பட்டவன்தான் நான் "

' நிசப்தத்தின் விளக்கைப்போல ஒளி கொடுக்கும் விளக்கை நான் பார்த்ததில்லை " - என்றார் பிஸ்தாமி.

இரவில் ஒருவர் பிஸ்தாமியின் வீட்டுக் கதவை தட்டினார் .

" யார் வேண்டும்? - வீட்டுக்குள்ளிருந்து குரல் கொடுத்தார் பிஸ்தாமி.

" நான் பயாஸித் பிஸ்தாமியைத் தேடி வந்திருக்கிறேன் "

" கடந்த 30 வருஷமாக நானும் அவரைத் தேடிக் கொண்டிருக்கிறேன் " என்றார் பிஸ்தாமி.

## சூஃபியாக்களின் பரிபாஷை 02

ஃபரீதுத்தீன் அத்தார் ( கி.பி 1120 - 1230 )

சூஃபியான அத்தார் அவர்களை மங்கோலிய தளபதி கைது செய்து கூட்டிச் சென்றான்.

வாசனை திரவிய அத்தார் தயாரிப்பதில் நுட்பம் தெரிந்தவர் . எனவே ஆயிரம் பொற்காசுகளுக்கு விற்க முடிவு செய்து ,

" அத்தார்! ஆயிரம் பொற்காசுகளுக்கு உம்மை விற்க முடிவு செய்துள்ளேன் "

" பொறுத்திரும். எனக்குரிய விலை இதுவல்ல "

மறுநாள் ஒருவன் அத்தாரை,

" ஒரு மூட்டை குதிரைக் கொள்ளுக்குத் தருகிறாயா? "

" சரியான விலை. விற்று விடும்" என்றார் அத்தார் .

மங்கோலிய தளபதி ஆத்திரமுற்று , அவரை வெட்டிக் கொல்லும் போது அவரது வாய் முணுமுணுத்தது :

" உடலுக்குள் ஆன்மா மறைந்துள்ளது.

ஆன்மாவுக்குள் நீ மறைந்துள்ளாய் .

மறைந்திருப்பதில் மறைந்திருப்பவனே,

நீயே எல்லாம் "

## சூஃபியாக்களின் பரிபாஷை 03

(சிறைப்பறவை)

'அப்துல் கரீம் ஜீலீ ' என்ற சூஃபி. ஆட்சியாளர்களின் கருத்துக்கு மதிப்பு கொடுக்காததால் அதிக வருடங்கள் சிறையில் கழித்ததால் ' ஜீலீ ' (கைதி ) இவர் பெயருடன் சேர்ந்து கொண்டது .

ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் குளித்து விட்டு நல்ல உடையைப் உடுத்திக் கொண்டு ஜும்மா கூட்டுத் தொழுகைக்காக ஜெயில் கதவு வரை போவார் . அனுமதியும் கேட்பார் . மறுக்கப்படும் திரும்பி போய்விடுவார்.

இப்படி ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் செய்வார் . அனுமதியும் கேட்பார் . மறுக்கப்படும் திரும்பி போய்விடுவார்..

" ஏன் இப்படி செய்கிறீர்கள்? உங்களைத்தான் வெளியே விட மாட்டார்களே " என்று கேட்கப்பட்டது .

" தெரியும். என் சக்திக்கு அப்பாற்பட்டதை நிறைவேற்றாததைப் பற்றி என்னை குறை சொல்ல முடியாது . ஜெயில் கதவுகளை திறப்பது என் கையில் இல்லை ; என்றாலும் , ஜும்மாவுக்காக கதவு வரை போவது என் கையில்தானே உள்ளது ? என்னால் முடிந்ததை மட்டுமாவது நான் நிறைவேற்ற வேண்டும் அல்லவா ? "

ஏழு வானம் தாண்டிய பெரு வெளி எல்லையின் ஆரம்பம் இவரின் சிறைக் கதவின் வாசலிருந்துதான் ஆரம்பிக்கிறது என்பதை இங்கு யார் அறிவர் ?

## சூஃபியாக்களின் பரிபாஷை 04

(மன ஓர்மை )

ஜுனைதுல் பக்தாதி (ரஹ்)

(கிபி 830 - 910)

ஒரு நாள் ஜுனைதுல் பக்தாதி (ரஹ்) தெருவில் போய் கொண்டிருந்தார். தூக்கிலிடப் போகும் திருடனைப் பார்த்தார். அந்த உடனே அவனருகில் சென்று அவனது பாதங்களை முத்தமிட்டார் .

அந்த வினோத செயல் பார்த்தவர் அனைவரையும் வியப்பில் ஆழ்த்தியது.

" ஏன் இப்படி செய்தீர்கள் ? "

" அவன் தன் தொழிலில் தன் முழுக் கவனத்தையும் செலுத்தி திறம்படச் செய்தான் . அதற்காகவே தன் இன்னுயிரையும் விட்டிருக்கிறான்

ஒரு திருடனுக்கு திருடும்போது இருக்கும் மன ஓர்மை ஒரு பக்தனுக்கு ஆன்மீகத்தில் இருந்தால் நிச்சயம் வெற்றி கிடைக்கும் . அதனால்தான் அப்படிச் செய்தேன் " என்றார்

## சூஃபியாக்களின் பரிபாஷை 05

(இறைவனோடு மட்டுமே நட்புறவு )

இப்ராஹீம் இப்னு அத்ஹம் (ரஹ் ) அவர்கள் தம் தோழர்களுடன் அமர்ந்திருக்கும் போது ,சிற்றரசன் ஒருவன் தன் ஊழியன் மூலம் ' பலக் நாட்டு மன்னராக இருந்தவரே ' என்றெண்ணி, பதினாயிரம் திர்ஹங்களை அன்பளிப்பாக அனுப்பி வைத்தான். அவற்றை அவர்கள் ஏற்றுக் கொள்ளாது ,

" இவற்றை உம் அரசனிடமே கொண்டு போய்க் கொடுத்துவிடு. இவை அவரிடம் இல்லையெனில் அவரின் கூட்டத்தினர் ஒருவரும் அவரோடு அண்டி இருக்க மாட்டார்கள் .

அவை என்னிடம் இருப்பின் என்னுடைய கூட்டத்தினர் ஒருவரும் என்னோடு அண்டி இருக்க மாட்டார்கள் " என்று கூறித் திருப்பி அனுப்பி விட்டார்கள்.

" தாங்கள் ஏன் எவருடனும் நட்புறவாடாது ஒதுங்கி வாழ்கிறீர்கள் ? "

" நான் என்னை விடத் தாழ்ந்தவர்களுடன் நட்புறவாடினால் அவர்கள் தங்களின் மடமையினால் என்னைத் துன்பத்திற்கு உள்ளாக்குவார்கள் .

எனக்குச் சமமானவர்களுடன் நட்புறவாடினால் அவர்கள் என் மீது பொறாமையுறுவார்கள் .

என்னை விட உயர்ந்தவர்களுடன் நட்புறவாடினால் அவர்கள் என்னை இழிவுக் கண்களுடன் நோக்குவார்கள் .

எனவே மனிதர்களுடன் நட்புறவாடுவதை விட்டொழித்து இறைவனுடன் நட்புறவாடுவதில் என் நேரத்தை கழிக்கிறேன். அதிலே எனக்கு இன்பமேயன்றி துன்பம் ஏற்படுவதில்லை "

## சூஃபியாக்களின் பரிபாஷை 06

(அற்புதத்தை எதிர்ப்பார்க்காதீர் )

அப்துல் வாஹித் இப்னு ஸைத் (ரஹ்) அவர்கள் கூறுவது :

"ஒரு நாள் நானும் ஐயுப் ஸஹத்தியானியும் காட்டு வழியே சென்று கொண்டிருந்தோம் . வழியில் ஒரு நீக்ரோ அடிமை தலையிலே விறகு கட்டு ஒன்றை மிகுந்த சிரமத்தோடு சுமந்த வண்ணம் எதிர்ப்பட்டார் . நாங்கள் அவரை எதையாவது கேட்டு சோதிப்போம் என்றெண்ணி ,
" உம் இறைவன் யார் ? "
" என்னிடமா இந்தக் கேள்வி கேட்கிறீர் ?"
" ஆம் . உம் இறைவன் யார் ? "
அந்த நீக்ரோ அடிமை விறகு கட்டை கீழே இறக்கி வைத்து விண்ணை நோக்கி,
" படைப்பவனே ! (காலிக்கே ! ) இந்த விறகு கட்டுகளை தங்க கட்டியாக ஆக்கு"
அத்தனையும் தங்க கட்டிகளாக மின்னியது . உடனே மீண்டும் விண்ணை நோக்கி ,
"படைப்பவனே ! (காலிக்கே ! ) இந்த தங்க கட்டிகளை மீண்டும் விறகாக ஆக்கு"
மீண்டும் விறகானது .ஒரு புன்முறுவல் பூத்து விட்டு , " இதைச் செய்ய ஆற்றலுடையவன்தான் என் ரப்பு "
" எங்களுக்குப் பசியாக இருக்கிறது . தங்களிடம் ஏதாவது உணவு இருக்கிறதா ? "
உடனே அவர் தம் கையால் சமிக்ஞை செய்தார் . ஒரு தட்டில் தேன் இருந்தது அந்தத் தேன் பனிக்கட்டியை விட வெண்மையாகவும் , கஸ்தூரியை விட மணமுற்றதாகவும் இருந்தது .
அப்போது அந்த நீக்ரோ அடிமை
." இதனை நன்றாக புசியுங்கள் .இது ஈக்களின் வயிற்றிலிருந்து கிடைக்கும் தேன் அல்ல "
நாங்கள் உண்டோம் . அதைப் போன்று இனிமையான உணவை இதற்கு முன் உண்டதே இல்லை. எங்களின் வியப்பை எங்களின் முகக்குறியால் உணர்ந்த அவர் ,
" இத்தகு அற்புதச் செயல்களைக் கண்டு வியப்புறுவோர் மெய்ஞ்ஞானிகளாக மாட்டார்கள் . ஒருவர் இவற்றைக் கண்டு வியப்புற்றால் அவர் இறைவனை விட்டும் தொலைவிலாகி விடுவார். ஒருவர் இவற்றைக் கண்டு இறைவனை வணங்கின் அவர் அறிவீனராகி விடுவார் " என்று கூறி விறகு கட்டை சிரமத்தோடு தலையில் வைத்து மீண்டும் புன்முறுவல் பூத்து அவர் வழியே போனார் அந்த நீக்ரோ அடிமை .
"இப்போ நீங்கள் சொல்லுங்கள் , அவரது இறைவன் யார் ?

## சூஃபியாக்களின் பரிபாஷை 07

(மறைத்த உண்மை)
"சூஃபி " என்ற வார்த்தை அரபி மொழியில் உள்ளது. இது "சூஃபிஸம்" என்ற ஆங்கில வார்த்தையாகி உலகமெங்கும் பரவலாக பயன்படுத்தப்படுகிறது அரபியில் "தஸவ்வுஃப்" என்ற சொல்லிலும் "சூஃப்" இருக்கிறது.
சூஃபித்துவத்தின் அடிப்படையும் இஸ்லாத்தின் அடிப்படையும் ஒன்றுதான் அதன் பெயர் "தவ்ஹீது "ஏகத்துவம் என்றும், இறைவனின் ஒருமை என்றும் இது மொழி பெயர்க்கப்படுகிறது . இஸ்லாத்தின் உயிரான விஷயமும் இதுதான்
தவ்ஹீத்தின் அடிப்படையில் பார்த்தால் எல்லாமே மாயைதான், ஏனெனில் தனியாக வும் எல்லையுள்ளதாகவும் தெரிவதெல்லாமே எல்லையற்ற ஒன்றின் இருப்பில் தெரிபவைதான்.
"எங்கு திருப்பினாலும் தெரிவது இறைவனின் திருமுகமே. நிச்சயமாக இறைவன் எல்லையற்றவன், மிகப் பெரியவன், எல்லாம் அறிந்தவன் என்கிறது திருமறை (2:115)
இந்த மாய முகம் நமக்குத் தெரியவில்லை ஆனால் அதனை சூஃபியாக்கள் கண்டும் பேசியும் ,ஈசல்கள் போல் அதில் வெந்தும் சுகிக்கிறார்கள் இதை விட வேறு என்ன சொல்ல அவர்களைப் பற்றி ..,,
இறைவா ..
"எனக்கு நீ வெளிப்படுத்திக் காட்டிய உண்மையை இந்த மக்களுக்கும் வெளிப்படுத்தியிருந்தால் எனக்கு இந்த நிலை ஏற்பட்டிருக்காது "
இறைவா....
"இந்த மக்களுக்கு எந்த உண்மையை நீ மறைத்தாயோ அந்த உண்மையை எனக்கு நீ மறைத்திருந்தாலும் எனக்கு இந்த நிலை ஏற்பட்டிருக்காது" என்று
"அனல் ஹக் " (நானே உண்மை) என்றுரைத்து மரண தண்டனைப் பெற்ற மன்சூர் ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்

## சூஃபியாக்களின் பரிபாஷை 08

(தஸவ்வுஃப் என்றால் என்ன ? )

இக் கேள்வியை ஜுனைதுல் பக்தாதி (ரஹ்) அவர்களிடம் கேட்டதற்கு, தஸவ்வுஃப் என்றால் " எதிலும் தொடர்பின்றி அல்லாஹ்வுடன் ஒன்றித்து இருத்தல் "

" செயல்முறை விளக்கம் ஏதாவது சொல்ல முடியுமா? "

" தஸவ்வுஃப் எட்டு நபிமார்களின் நற்பண்புகளின் மீது எழுப்பபட்டதாகும் "

1) தம் அன்புத் திருமகனார் இஸ்மாயீல் (அலை) அவர்களை இறைவனுக்காகப் பலியிட முன்வந்த இப்ராஹீம் (அலை) அவர்களின் #தியாகம்

2) தம் இன்னுயிரை இறை கட்டளைக்குக் கீழ்படிந்து இழக்க முன் வந்த இஸ்மாயீல் (அலை) அவர்களின் #இணக்கம்.

3) துன்பத்தை இன்பமாகக் கருதி எவ்வித முணக்கமும் இன்றி நோயை சகித்துக் கொண்ட ஐயூப் (அலை)
அவர்களின் #பொறுமை

4) ஜகரிய்யா (அலை) அவர்களை நோக்கி இறைவன் , "நீர் மூன்று நாட்கள் வரைச் சாடையாகவன்றி மனிதர்களுடன் பேசமாட்டீர் குர்ஆன் 3:41 என்று கூறியதற்கேற்ப ஜகரிய்யா (அலை) மேற் கொண்ட #மௌனம்

5) தம்முடைய நாட்டிலேயே ஓர் அந்நிய நாட்டான் போன்றும், தம்முடைய உறவினர்களிடையே அயலான் போன்றும் வாழ்ந்த யஹ்யா (அலை) அவர்களின் #பற்றற்ற-தன்மை .

6) உலகப் பொருள்களை வெறுக்கத் தொடங்கி , தம்மிடம் ஒரு சீப்பையும், ஒரு குவளையுமே வைத்திருந்து , ஒருவர் தம் கையால் தண்ணீர் அள்ளி பருகுவதைக் கண்டு குவளையையும் , ஒருவர் தம் விரல்களால் தம் தலைமுடியை ஒழுங்கு செய்வதைக் கண்டு தம்மிடமிருந்த சீப்பையும் தூக்கி எறிந்த ஈஸா (அலை) அவர்களின் #துறவு

7) கம்பளி உடையணிந்து தம்மை வருத்திக் கொள்ளும் நபி மூஸா (அலை) அவர்களின் #இயல்பு

8) உலகக் கருவூலங்களின் திறவுகோலை அவர்களுக்கு இறைவன் அனுப்ப , " இறைவனே ! அவற்றை நான் விரும்பவில்லை .ஒரு நாளைக்கு எனக்கு உணவைத் தா ; அடுத்த நாளைக்கு என்னைப் பசித்திருக்கச் செய் " என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் விரும்பிய #ஏழ்மை

## சூஃபியாக்களின் பரிபாஷை 09

(நல்லதொரு அறிவுரை)

பலக் தேச சூஃபி ஷகீக் பல்கி (ரஹ்) அவர்கள் மாணவர்களோடு உரையாடிக் கொண்டிருக்கும் பொழுது,
"நான் இறைவன் பேரில் ' தவக்கல்' வைத்து ஹஜ்ஜுச் செய்யக் கிளம்பினேன். அப்போது என் சட்டைப் பையில் ஒரு சிறு நாணயம் மட்டும் இருந்தது . நான் ஹஜ்ஜுச் செய்து விட்டுத் திரும்பிய பொழுதும் அந்த நாணயம் என் சட்டைப் பையிலேயே உள்ளது "
அப்பொழுது ஒரு மாணவர் , " ஷைகு அவர்களே ! தங்களின் சட்டைப் பையில் ஒரு சிறு நாணயம் இருக்கும்பொழுது தாங்கள் எவ்வாறு இறைவன் மீது தவக்கல் (இறை ஆதரவு ) ஹஜ்ஜுப் பயணத்தை மேற்கொண்டதாகக் கூற இயலும் ? "
அது கேட்ட ஷைகு ஷகீக் பல்கி (ரஹ்) அவர்கள் , " நீர் கூறுவது நிரம்பச் சரி , ஒருவன் இறைவன் மீது முழு ஆதரவு வைக்கும்பொழுது சட்டைப் பையில் ஒரு சிறு நாணயத்தையும் தன் உணவுச் செலவுக்காக வைத்து கொள்வதற்கு இடமில்லை தான் "
ஷகீக் பல்கி (ரஹ்) அவர்கள் மாணவர்களுக்கு அறிவுரை வழங்கிக் கொண்டிருக்கும் போது , ஒரு இறை மறுப்பாளன் அவர்களிடம் ...
" நீங்கள் உருவமற்ற ஓரிறைவனை வணங்குவதாகக் கூறுகின்றீர்கள் ஆனால் நீங்கள் உண்மையில் நீங்கள் உணவையே வணங்கிக் கொண்டுள்ளீர்கள் "
ஷகீக் பல்கி (ரஹ்) அவர்கள் சிறிது கூட கோபப்படாமல் தம் மாணவர்களை நோக்கி , " இது நல்லதொரு அறிவுரையாக உள்ளது .இதனையும் எழுதிக் கொள்ளுங்கள் "
இதைக் கண்ட இறை மறுப்பாளன் ,
" ஐய ! தாங்கள் உண்மைக்கு உயரிய இடம் கொடுத்து அதனை இறை மறுப்பாளனாகிய நான் கூறியபோதினும் தாங்கள் ஏற்றுக் கொண்டதோடு தங்களின் மாணவர்களையும் எழுதிக் கொள்ளுமாறு பணித்தீர்கள் . தங்களின் மார்க்கத்தின் மேன்மையை இப்போது நான் உணர்ந்து கொண்டேன் . அந்த மேதகு மார்க்கத்தில் நானும் இப்போதே இணைந்து விடுகிறேன் "
ஷகீக் பல்கி (ரஹ்) அவர்கள் அவருக்கு கலிமாவைப் போதித்து இஸ்லாத்தில் இணைந்தபின் அவரை நோக்கி ,
" உண்மை எங்குக் கிடைப்பினும் அதனை ஏற்றுச் செயலாற்ற வேண்டும் என்பதே இஸ்லாம் கற்பிக்கும் பாடமாகும். மேலும் ,
" நபி(ஸல்) அவர்களும் , " அறிவு என்பது இறை நம்பிக்கையாளரின் மேலான பொருளாகும் . அது ஓர் இறை மறுப்பவனிடமிருந்து கிடைத்த போதினும் அதனை ஒரு முஸ்லிம் ஏற்றுக்கொள்ளத் தயங்கக் கூடாது "

## சூஃபியாக்களின் பரிபாஷை 10

(கிள்ரு (அலை) அவர்கள் அறியாத சூஃபி )

அபூபக்ர் அல் கத்தானி (ரஹ்) பக்காத்திலிருந்து வந்து மக்கா முக்கரமாவின் அருலேயே தங்கி வாழ்ந்தார்கள் .

ஒரு நாள் பனூ ஷைபா வாசலின் அருகே தலை குனிந்த வண்ணம் ரொம்ப நேரமாக நின்று கொண்டிருந்த பொழுது அவ்வழியே வந்த பெரியவர் ஒருவர் , ஸலாம் சொல்லிவிட்டு , அவரிடம்

" மகாமெ இப்ராஹீமு க்கு நீர் வரவில்லையா? அங்கு ஒருவர் நபிமொழிகளை விளக்கம் செய்கிறாரே " என்றார் பெரியவர் .

" எவர் எவர் வாயிலாக அவர் நபிமொழிகளை அறிந்து விளக்கம் செய்கிறார்? " என்று கேட்டார் கத்தானி(ரஹ்) அவர்கள்

" அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா, ஸுஹ்ரி, அப்துல்லா இப்னு மஃமர்... இப்படி வழியாக வந்த நபிமொழிகளை அவர் விளக்கம் செய்கிறார் " என்றார் பெரியவர் .

" அப்படியா! அவர் சங்கிலித் தொடர் போன்று பலர் வாயிலாகக் கேட்டறிந்தவைகளை வைத்துதான் விளக்கம் செய்கிறார் .ஆனால் நாமோ எவ்விதத் தொடர்பு மூலமாக இல்லாமல் நேரடியாகவே கேட்டறிகிறோம் " என்றார் கத்தானி (ரஹ்) அவர்கள்

" நீர் எவரிடமிருந்து கேட்டறிகிறீர்? "

" இறைவனிடமிருந்து நேரடியாக என் உள்ளம் கேட்டு, எனக்குத் தெரிவிக்கிறது "

அது கேட்டு அந்த பெரியவர் விடவில்லை.

" நீர் கூறுவது உண்மை என்பதற்கு என்ன ஆதாரம்? " என்று மடக்கினார் பெரியவர்.

சற்று புன்முறுவல் பூத்து கத்தானி (ரஹ்) அவர்கள் , "ஆதாரமா ? இப்பொழுது என் மனம் , தாங்கள் கிள்ரு (அலை) என்று கூறுகிறது . இதைத் தாங்கள் மறுக்க முடியாது "

அது கேட்டு, அப்பெரியவருக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவேயில்லை .

இதைப் பற்றி கிள்ரு (அலை) அவர்கள் , பின்னர் ஒருவரிடம் , " நான் அபூபக்ர் அல் கத்தானியைச் சந்திக்கும் வரையில் நான் அறியாத இறைநேசர் செல்வர்கள் ஒருவருமில்லை என்று எண்ணிக் கொண்டிருந்தேன் . நான் அவரை யார் என அறியாதபொழுது அவர் என்னை எவரென அறிந்திருந்தார் . அதன் பின் தான் நான் அறியாத ஆனால் என்னை அறிந்த பல நண்பர்களை இறைவன் பெற்றுள்ளான் என்ற உண்மை இன்று எனக்குத் தெரிய வந்தது " என்றார்கள் .

## சூஃபியாக்களின் பரிபாஷை 11

(ஞானப் பாட்டையின் படித்தரங்கள்)

கௌதுல் அஃலம் முஹ்யித்தீன் அப்துல் காதிர் ஜீலானி (ரஹ்) அவர்கள் , ஈராக் காட்டினில் கடும் தவம் புரிந்து கொண்டிருக்கும் வேளையில் ஞானக் கொந்தளிப்பின் காரணமாக காட்டினில் தலைதெறிக்க ஓடுவார்கள் . வெருண்டோடிய அவர்கள் ஓரிடத்தில் மயக்கமுற்றுக் கீழே விழுவர்.

அப்படி ஒரு தடவை ஓடி மயக்கமுற்று எழுந்த போது அவ்விடம் , பாக்தாதிலிருந்து பன்னிரண்டு நாட்கள் பயணத் தொலைவிலுள்ள " துஸ்தர் " நகரில் அவர்கள் நின்று கொண்டிருந்தார்கள் .

" நாம் சற்றுத் தொலைதானே ஓடினோம், அதற்குள் இவ்வளவு தூரம் வந்து விட்டோமே ! "

' ஷரியத் நிலையில் செய்யப்படும் சிறு செயல்கள் மஃரிபத் நிலையில் மிகப் பெரிய பலனை கொடுக்க வல்லது ' என ஞானாசிரியர்கள் இச்செயலைக் குறித்து கருத்து தெரிவிக்கிறார்கள்.

"யா கௌதே! ஞானப்பட்டையின் படித்தரங்கள் என்னென்ன ? "

முதலில் " #தவக்குல் " என்ற வாயிலை வந்தடைந்தேன் . அங்கே அல்லாஹ்வே தஞ்சம் என்று கொண்ட ஞானவான்கள் நிரம்பி வழிந்து கொண்டிருப்பதைக் கண்டேன். பின்னர் அதை விட்டும் நீங்கி அடியெடுத்து நடந்த போது ....

அல்லாஹ்வையன்றி வேறொன்றும் தேவையற்ற " #கினாஃ " என்னும் வாயிலை அடைந்தேன். அங்கும். ஞானவான்கள் நிரம்பி வழிந்து கொண்டிருப்பதைக் கண்டேன். பின்னர் அதை விட்டும் நீங்கி அடியெடுத்து நடந்த போது ....

அல்லாஹ்வை அண்மித்தல் என்ற "#க்ரூப் " என்ற வாயிலை வந்தடைந்தேன் . அங்கும் ஞானவான்கள் நிரம்பி வழிந்து கொண்டிருப்பதைக் கண்டேன். பின்னர் அதை விட்டும் நீங்கி அடியெடுத்து நடந்த போது ....

நான் " #ஷுக்ர் " என்ற வாயிலை அடைந்தேன் , அங்கும் ஞானவான்கள் நிரம்பி வழிந்து கொண்டிருப்பதைக் கண்டேன். பின்னர் அதை விட்டும் நீங்கி அடியெடுத்து நடந்த போது ....

இறைவனின் அற்புதக் காட்சிகள் நிரம்பிய " #முஷாஹதா " என்ற வாயில் என் கண்களில் பட்டது. அங்கும் ஞானவான்கள் நிரம்பி வழிந்து கொண்டிருப்பதைக் கண்டேன். பின்னர் அதை விட்டும் நீங்கி அடியெடுத்து நடந்த போது ....

இறுதியாக அல்லாஹ்வின் மாண்புமிகு திருவாயிலாகிய " #ஃபக்ரு " என்ற வாயிலை அடைந்தேன் .அங்கு எவ்விதமான நெரிசலோ, கூச்சலோ இல்லை . எங்கும் நிசப்தம் , எங்கும் அமைதி ...அமைதி ... அமைதி மட்டுமே நிலவியது . என் குறிக்கோள் அங்குதான் நிறைவேறியது . மாபெரும் சாயுச்சிய ஞானப் பேற்றினை நான் கிடைக்கப் பெற்றேன் " .

**சூஃபியாக்களின் பரிபாஷை 12**

(இறைக்காதல் எனும் பெருந் தீ )



ஷைகு அலீ (ரஹ்) அவர்களின் தவ மடத்தில் பெருந் தீயும் , அதையும் தாண்டி ஒரு கொப்பரையில் வெந்நீர் கொதித்திக் கொண்டே இருக்க வெந்தழல் நெருப்பு பற்றி எரிந்து கொண்டே இருக்கும்.

ஷைகு அலீ (ரஹ்) அவர்களிடம் தீட்சை பெற வருபவர்களிடம் , " எவர் வரினும் அந்த நெருப்புக் குண்டத்தைத் தாண்டி கொதி நீர் கொப்பறையில் குதித்து முழ்கி உடல் தூய்மை பெற்று வாரும் பின்னர் அகத்தூய்மை , ஆன்மீகத் தூய்மை பெற்றுக் கொள்ளலாம் " இதனால் யாருமே அவர்களிடம் தீட்சை கேட்டு வருவதில்லை .

ஓர் இளவல் முதஹ்ஹருத்தீன் (ரஹ்) அவர்கள் முன் வர ஷைகு அலீ (ரஹ்) அவர்கள் " எவர் வரினும் அந்த நெருப்புக் குண்டத்தைத் தாண்டி கொதி நீர் கொப்பறையில் குதித்து முழ்கி உடல் தூய்மை பெற்று வாரும் பின்னர் அகத்தூய்மை , ஆன்மீகத் தூய்மை பெற்றுக் கொள்ளலாம் " என்று சொல்லி முடிப்பதற்குள் ,

வெந்தழல் நெருப்பில் குளித்து , கொதிக்கும் வெந்நீரில் முழ்கி வெளி வந்தார்கள் அந்த இளவல் முதஹ்ஹருத்தீன் (ரஹ்) அவர்கள் ஷைகின் கரம் பிடித்து , தீட்சை நல்கி தம் ஞானப் பாட்டையில் இணைத்து அந்த இளவலுக்கு " நத்ஹர் " என்று பெயர் சூட்டினார்கள் ஷைகு அலீ (ரஹ்)

இது பற்றி நத்ஹர் (ரஹ்) அவர்களிடம் கேட்ட போது, " இறைவனின் நல்லடியார்களின் உள்ளத்தில் இறைக் காதல் என்ற வெந்தழல் எப்பொழுதுமே தகித்துக் கொண்டே இருக்கும் . அதன் உக்கிரத்தைக் கண்டு நரகம் கூட நடுங்கும். அத்தகு காதல் நெருப்பை தன்னுடைய அமானிதமாக ஏற்றுக் கொள்ளுமாறு வானம் , பூமி ,சுவனம் , நரகம், ஜின் , வானவர் ஆகிய அடங்கலிடமும் இறைவன் கூறினான் என்று குர்ஆன் வசனத்தை ஓதி

إِنَّا عَرَضْنَا الْأَمَانَةَ عَلَى السَّمٰوٰتِ وَالْأَرْضِ وَالْجِبَالِ فَأَبَيْنَ أَنْ يَّحْمِلْنَهَا وَأَشْفَقْنَ مِنْهَا وَ حَمَلَهَا الْإِنْسَانُ إِنَّهٗ كَانَ ظَلُوْمًا جَهُوْلًا ۙ

நிச்சயமாக "(நம்முடைய) பொறுப்பைச் சுமந்து கொள்வீர்களா?" என்று நாம் வானங்கள், பூமி, மலைகள் ஆகியவற்றிடம் வினவினோம். அதற்கு அவை அதனைப் பற்றிப் பயந்து, அதனைச் சுமந்து கொள்ளாது விலகிவிட்டன. அத்தகைய பொறுப்பைத்தான் மனிதன் சுமந்துகொண்டான். (ஆகவே) நிச்சயமாக அவன் அறியாமையால் தனக்குத்தானே தீங்கிழைத்துக் கொண்டான். (குர்ஆன் : 33:72)

.... ஆனால் அந்த அமானிதத்தின் சுமையைத் தங்களால் தாங்க இயலாது என்று அனைத்தும் ஒருமித்துக் கூறி விட்டன. அத்தகைய அமானிதத்தை மனிதனே ஏற்றுக்கொள்ள முன் வந்தான்.

இது " இஷ்கெ இலாஹி " என்ற இறைக் காதல் என்ற பெருந் தீ , இது எவனுடைய உள்ளத்தில் தக தக வென தகித்துக் கொண்டிருக்கின்றதோ , அவன் அந்த பொசுக்கும் தீக் குழம்பில் குதித்து , கொதிக்கும் நீரில் முழ்கி வெளிவர முடியும் . உள்ளத்தின் அந்தீக் குழம்பு அதனை எதனாலும் எதிர்த்து நிற்க முடியும் ? " என்று கூறினார்.

இதனை சற்று உதாரணத்துடன் சொல்றேன் .

விளக்கு-வெளிச்சம் நோக்கி விட்டில் பூச்சிகள் ஈர்க்கப்படுவதை காதல், தன்னிலை மாற்றம் அல்லது உண்மையை நோக்கிய பெருந்தேடல் ஆகியவற்றுக்கு உருவகமாக கவிஞர்கள், ஓவியர்கள், தத்துவச் சிந்தனையாளர்கள் காலம்காலமாகக் கூறி வந்துள்ளனர்.

ஃபரித் உத் தின் அத்தர் எழுதிய 'மகாமத் உத் துயுர்' (பறவைகளின் மாநாடு) என்ற பெர்சிய உரைநடை காவியத்தில் விட்டில்

பூச்சிகளைப் பற்றிய கீழ்க்கண்ட கதை உள்ளது:

ஓர் இரவில் மெழுகுவர்த்தியின் உண்மையைக் கண்டறிய விட்டில் பூச்சிகள் ஒன்றுகூடின. தங்களில் ஒருவர் அந்த விளக்கொளி குறித்து தீர ஆராய வேண்டும் என்று முடிவு செய்தன.
ஓர் இளம் விட்டில் பூச்சி அதற்காகப் பறந்து சென்றது. தொலைவில் ஓர் அரண்மனையில் ஒரு மெழுகுவர்த்தி எரிவதைத் தொலைவில் இருந்து பார்த்தது. தான் கண்டதைச் சொல்வதற்காக அது திரும்ப வந்தது. ஆனால், அது கண்டறிந்ததில் எந்த மதிப்பும் இல்லை என்று விட்டில் பூச்சிகளின் வழிகாட்டியான ஒரு மூத்த விட்டில் பூச்சிகள் கூறிவிட்டது.
பிறகு மற்ற விட்டில் பூச்சிகள் மெழுகுவர்த்தி தீபத்தைக் காணச் சென்றன . அது தீபத்தைக் கண்டறிந்தவுடன் ஒளிவட்டத்தைச் சுற்றி வந்தது , பிறகு தனது அனுபவத்தைக் கூறுவதற்காக அது திரும்பியது. அதைக் கேட்ட வழிகாட்டி விட்டில் பூச்சிகள் தலையை ஆட்டி, தீபத்தினுடைய பிரகாசத்தின் ஆழத்தையும் உண்மையையும் அறிந்து கொண்டதற்கான எந்த அறிகுறியும் அதனிடம் தென்படவில்லை என்றது.
மூன்றாவதாக மற்றொரு விட்டில் பூச்சிகள் பறக்கத் தொடங்கியது. தீபத்தைச் சுற்றிப் பித்துப் பிடித்தது போல அது நடனமாடத் தொடங்கியது. எந்த அளவுக்குச் சென்றது அது என்றால், சீக்கிரத்திலேயே அதன் மொத்த உடலையும் அந்த தீப ஒளி சூழ்ந்து எரிக்கும் அளவுக்கு.
மெழுகுவர்த்தியின் சுடர் சட்டென்று கூடுதலாகப் பிரகாசித்ததைக் கண்ட வழிகாட்டி விட்டில் பூச்சிகள் அந்த தீபத்துக்கு தன்னையே கொடுத்துவிட்டதன் மூலம், அவர்கள் தேடிய உண்மையை மூன்றாவது விட்டில் பூச்சிகள் கண்டடைந்துவிட்டது என்று கூறியது.

## சூஃபியாக்களின் பரிபாஷை 13

(அரபியை வென்ற அஜமி)

காயல்பட்டினத்தில் ஹிஜ்ரி 1042 ஆம் ஆண்டில் ஷைகு சுலைமான் (வலி) அவர்களின் மூன்றாவது மகனாக ஷைகு சதகத்துல்லாஹ் அப்பா அவர்கள் பிறந்தார்கள்.
ஏழு வயதிற்குள்ளேயே குர்ஆனை மனனம் செய்து தம் தந்தையாரிடமே மார்க்கத்தின் அடிப்படைச் சட்ட திட்டங்கள் பற்றிய நூல்களை அரபு இலக்கண சுத்தமாகப் பயின்றும் மாமேதையானார்கள் .
பொன்னாணியில் தோன்றி மறைந்த ஷைகு ஜைனுத்தீன் (ரஹ்) அவர்களைக் கனவில் கண்டு, " தாங்கள் எழுதிய 'ஹிதாயத்துல் அத்கியா ' என்ற நூலில் இன்ன இடத்தில் இன்ன அடியில் அரபு இலக்கண வழு உள்ளதே . 'அர்ளு ' என்ற யாப்பிலக்கணச் சட்டப்படி , அது இன்ன விதமாக அல்லவா அமையப் பெற்றிருக்க வேண்டும் " என்று கூற , அது கேட்ட அப் பெரியார் , "அவ்விதமானால் அதனைத் தாங்களே திருத்தி விடும் ! " என்று கனவிலே கூறினார்கள் .
விடிந்தெழுந்ததும் அவ்விதமே திருத்த , திருத்தப்பட்ட பிரதி எங்கும் இப்பொழுதும் உள்ளது .
உம்ரா செய்வதற்கு மக்கா சென்றிருந்த போது , ஹரம் ஷரீஃபில் ஷைகுல் இஸ்லாம் அவர்கள் மாணவர்களுக்கு ஒரு நூலை பாடம் எடுத்துக் கொண்டிருந்தார்கள் . அந்நூலில் ஒரெழுத்து தவறாக எழுதப்பட்டிருந்ததனால் , அதற்குப் பொருள் விரிக்க ஷைகுல் இஸ்லாம் அவர்கள் இயலவில்லை .
அப்பொழுது தொழுகைக்கு பாங்கு சொல்லப்படவே , எல்லோரும் தொழுகைக்குச் செல்ல, அப்பா அவர்கள் அதனை திருத்தியமைத்து தாமும் தொழுது விட்டு அங்கு வந்தார்கள் .
ஷைகுல் இஸ்லாம் அவர்கள், அந்நூல் திருத்தப்பட்டிருப்பதையும் , இப்போது பொருள் மிக தெளிவாக விளங்க வருவதையும் கண்டு , " எவர் இதைத் திருத்தினார்கள் ? " மாணவர்கள் ஒருவரும் பதில் கூறாமலிருக்க, அங்கு
மூலையில் இருந்த அப்பா அவர்களிடம் ,
"தாங்கள் தாமா இதனைத் திருத்தியவர்?"
" ஆம் "
"தங்களின் ஊர் எது ? பெயர் என்ன ? "
" நான் இந்தியாவைச் சேர்ந்தவன்; பெயர் ஸதக்காஹ் "
" அப்படியா ! தங்களின் பெயர் ஸதக்காவா ? அந்தப் பெயர் மிகப் பொருத்தமாகத்தான் உள்ளது.தங்களை அல்லாஹ்வே இத் தருணத்தில் எங்களுக்கொரு ஸதக்காஹ்வாக (அருட்கொடை )த்தான் அனுப்பி உள்ளான் .இனி நீங்கள் ஸதக்கத்துல்லாஹ் ( அல்லாஹ்வின் அருட்கொடை) என்று ஷைகுல் இஸ்லாம் அழைக்க அதுவே அப்பா அவர்களுக்கு முழுப் பெயராகி விட்டது .
மக்கா ஹரத்தில் ஓர் அரபி குர்ஆனை ஓதிக் கொண்டிருந்தார் .அதில் ஒரு வாக்கியத்தை அவர் தவறாக ஓத அதனை அப்பா அவர்கள் திருத்தினார்கள் . மீண்டும் அவர் தவறாக ஓத மீண்டும் அப்பா திருத்தினார்கள் . மீண்டும் தவறுதலாக ஓதும்போது அப்பா மீண்டும் திருத்த , அந்த அரபி ,

"நீங்கள் ஓர் அஜமி .நான் அரபி . அரபி திருத்தம் என்னிடமா ? "
அப்பா அவர்கள் அவர் ஓதிய குர்ஆனை வாங்கிப் பார்க்க அதில் அந்த வாக்கியப் பிழை இருந்தது . அதை அப்பா திருத்த, உடனே கலீபா உஸ்மான் (ரலி) அவர்கள் கைப்பட எழுதிய குர்ஆன் பிரதியை எடுத்துப் பார்க்க , அதில் அப்பா அவர்கள் சொன்ன மாதிரியே இருந்தது .
அந்த அரபி , " நீர் அஜமியே ஆயினும் திறமையாளர் " என்றார் .

முஹம்மது இப்னு அபூபக்ருல் பக்தாதி (ரஹ்) அவர்கள் ஹிஜ்ரி 652 -ல் ஓர் இரவு உந்தலூஸில் வைத்து அரபியில் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் மீது வித்ரிய்யாவை எழுதினார்கள் . அன்றிரவு நபி (ஸல்) அவர்கள் கனவில் வித்ரிய்யாவைத் தம் கையில் பிடித்த வண்ணம் " எவ்வளவு அழகாக இதில் என்னைப் புகழ்ந்திருக்கிறார் ! " என்று தம் தோழர்களிடம் அதனைக் காட்டிக் கொண்டிருந்தார்கள் .
இக் கனவினைக் கண்டு விழித்தெழுந்த முஹம்மது இப்னு அபூபக்ருல் பக்தாதி (ரஹ்) அவர்கள் தம் எழுதிய வித்ரிய்யா நபி (ஸல்) அவர்களின் ஒப்புதலைப் பெற்று விட்டதாக அக மகிழ்தார்கள் .
அப்பா அவர்கள் பெரிதும் விருப்பி இந்த வித்ரிய்யாவை தினமும் ஓதி வந்தார்கள் .
அப்பா அவர்கள் ஹஜ்ஜுப் போக கப்பல் ஏறுவதற்கு கேரளா போனபோது , அங்கு 'தரபிய்யா ' என்னும் நூல் ஐந்தடிப் பாக்களாக (தக்மீஸ்) செய்யப்பட்டிருப்பதைக் கண்டதும் , அதே போன்று வித்ரிய்யாவையும் நாம் ஆக்கினால் என்ன ? என்ற எண்ணம் அப்பா மனதில் உதயமானது .

மக்காவில் வைத்து அப்பா அவர்கள் கனவில் , ஒரு ஜனஸாப் பெட்டி வர ,அது அண்ணல் நபி (ஸல்) அவர்களுடையது என்று பேசப்படுகிறது. சுமந்தவர்கள் கஃபாவை ' தவாப் ' செய்து விட்டு ,
பனூஷைபா வாயில் வைத்தபோது நபி (ஸல்) அவர்கள் பெட்டியிலிருந்து வெளியே வருகிறார்கள். அப்பொழுது அண்ணலார் உளூச் செய்வதற்கு வித்ரிய்யா எழுதிய முஹம்மது இப்னு அபூபக்ருல் பக்தாதி (ரஹ்) அவர்கள் தண்ணீர் ஊற்ற , அப்பா அவர்களும் ஒரு கேத்தலில் ஜம் ஜம் நீரை கொண்டு அண்ணலாரின் உளூக்கு தண்ணீர் ஊற்ற கனவு கலைகிறது .
தாம் வித்ரிய்யாவுக்கு 'தக்மீஸ்' செய்ய எண்ணியுள்ளதை அண்ணல் நபி (ஸல் ) அவர்கள் ஏற்றுக் கொண்டார்கள் என்று அப்பா அந்த கனவிற்கு விளக்கம் தமக்கு தாமே கூறிக் கொண்டார்கள் .
அப்பா அவர்கள் தாங்கள் எண்ணியபடியே வித்ரிய்யாவை'தக்மீஸ்'
செய்தார்கள் .இப்போதும் வித்ரிய்யா அப்பா தக்மீஸ் செய்த மாதிரியே இன்றும் ஓதப்பட்டு வருகிறது .

## சூஃபியாக்களின் பரிபாஷை 14

( போக்கிரி ஆடும் , பொல்லாத சிங்கமும் )
ஒரு சீடர் அபுல் ஹஸன் ஹர்கானி (ரஹ்) அவர்களிடம் ,
" ஹதீதுக் கலையைப் போதிக்க வல்ல ஆசான் கிடைக்காததால் இராக் செல்ல இருக்கிறேன் "
"நீர் இங்கேயே இரும் .நான் உமக்கு அண்ணல் நபி (ஸல்) அவர்களிடமிருந்து,
நான் கேட்டறிந்து ஹதீதுகளை உங்களுக்கு போதிக்கிறேன் "
சீடருக்கு வியப்பும், ஐயம் ஏற்பட்டது .
"எப்படி இது சாத்தியம் ? "
அன்றிரவு சீடரின் கனவில் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தோன்றி , " நீர் அபுல் ஹஸன் ஹர்கானி கூறியதைப் பற்றி ஐயுற வேண்டாம் .அவர் கூறியது முழுக்க முழுக்க உண்மையாகும் "
சீடர் திடுக்குற்று விழித்தெழுந்து அவருக்கு முன்னை விட அதிக வியப்பேற்பட்டது.
வைகறைத் தொழுததும் ஆசான் அபுல் ஹஸன் ஹர்கானி (ரஹ்) அவர்கள் முன்னாடி ஹதீது கிதாபுகளுடன் சீடர் இருக்க, ஒவ்வொரு ஹதீதாகக் கூறி விளக்கம் அளித்தார்கள்.
ஒரு நாள் ஒரு ஹதீதுப் பற்றி விளக்கம் சொல்ல , "அது தவறானது " என்று கூறினார்கள்
" எவ்வாறு அது தவறானது எப்படி தாங்கள் அறிந்தீர்கள் ? "
" நான் உமக்கு ஹதீதுக்களைப் போதிக்கும் போதெல்லாம், அண்ணல் நபி (ஸல்) அவர்கள் என்முன்னே வீற்றிருந்து, நான் கூறுவதைக் கவனமாகக் கேட்டுக் கொண்டிக்கிறார்கள் ; அவர்களைப் பற்றி ஒரு தவறான ஹதீது வரும் பொழுது அவர்களின் முகத்தில் ஒரு வித அதிருப்தியை நான் கவனிக்கிறேன் . அதிலிருந்து அது தவறானது என்பதை விளங்கிக் கொள்கிறேன் "
இச்செய்தி ஊரெங்கும் பரவியது .இது பற்றி அறிவியல் விற்பன்னரும் தேசாந்திரியுமான அபூ அலீ சீனா , அபுல் ஹஸன் ஹர்கானி (ரஹ்) அவர்களை தேடி ஹர்க்கான் வந்து , அவர்களின் வீட்டுக் கதவை தட்ட , கதவைத் திறந்த அவரது மனைவி ,
" அந்தக் காஃபீரைத் தேடியா வந்துள்ளீர். இனிமேல் அவரைக் காண்பதற்காக இங்கு வரவேண்டாம் . அவர் விறகு வெட்டி அதனை சேகரிப்பதற்காகக் கானகம் சென்றுள்ளார் "
அதன் பின் அவர்களைத் தேடி கானகம் சென்றார் அபூ அலீ சீனா . ஹர்க்கானி (ரஹ்) அவர்களோ , தாம் சேகரித்த விறகுகளை ஒரு பெரிய சிங்கத்தின் முதுகில் ஏற்றிக் கொண்டு வீடு வந்து கொண்டிருந்தார்கள் . இதைக் கண்ட அபூ அலீ சீனா அவர்களுக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை.
அபூ அலீ சீனா , தம்மை எவரென
ஹர்க்கானி (ரஹ்) அவர்களுக்கு அறிமுகப்படுத்திக் கொண்டார் . இருவரும் பற்பல விஷயங்கள் மற்றும் ஹதீஸ் போதித்த விபரங்களை எல்லாம் பேசிவிட்டு, தாம் அவர்களின் இல்லம் சென்று அவர்களைப் பற்றி விசாரித்ததையும் , அவர்களின் மனவி கூறிய பதிலையும் கூறுகினார் .
அது கேட்ட அபுல் ஹஸன் ஹர்கானி (ரஹ்) அவர்கள் சிரித்துக் கொண்டு ,

" அந்தப் போக்கிரி ஆட்டுடன் நான் பொறுமையாக இத்தனை காலம் வாழ்க்கை நடத்தாவிட்டால் , இந்தப் பொல்லாத சிங்கம் நான் இட்ட ஆணைக்குக் கீழ்படிந்து நடக்காது " என்று வருத்தம் இல்லாமல் கூறி சிரித்தார்கள்

## சூஃபியாக்களின் பரிபாஷை 15

(ஆசையே எல்லா துன்பங்களுக்கும் காரணம்)
அபூ பக்ர் ஷிப்லீ (ரஹ்) அவர்கள் அறிவுரை எதையுமே உவமான உவமயத்தோடு சிறுகதைகளாகவே ஞானத்தைச் சொல்லிக் கொடுப்பார்கள் .
மக்கள் அநேகர் வந்து , "எங்களுக்கு துன்பங்கள் அடுத்தடுத்து வந்து கொண்டே இருக்கின்றனவே ஏன் ? "
வேடன் ஒருவன் ஒரு பறவையை வலை வைத்துப் பிடித்து , அதனக்கறி சமைத்துத் தின்பதற்காக அறுக்கப் போனான். அப்பொழுது அப்பறவை அவனை நோக்கி ,
" வேடா , என்னை நீர் அறுத்துக் கறி சமைத்துச் சாப்பிட்டால், உம் வயிறும் நிரம்பப் போவதில்லை . உம் மனம் நிறைவுறப்போவதில்லை . ஆனால் உமக்கு முத்தான மூன்று செய்திகளைக் கற்றுத் தருகிறேன் . அவை நீர் என்னைக் கறி சமைத்து உண்பதை விட , உன் வாழ்க்கைக்கு ஆயிரம் மடங்கு தேவையானதாகும் "
" அவற்றை எனக்குக் கற்றுத் தா "
" இப்படியெல்லாம் நீர் கேட்டால் அவற்றை நான் கற்றுத் தருவேனா, என்ன ? அவை படிப்பினை மிக்க மாண்பார்ந்த செய்திகள் ஒன்றை வேண்டுமானால் நான் உம் கையில் இருக்கும் பொழுது கூறுகின்றேன் .மற்றொன்றை நீர் என்னை விடுதலை செய்த பொழுது கூறுவேன். வேறொன்றை நான் பள்ளத்தாக்கில் வீற்றிருக்கும் பொழுது சொல்வேன் "
" நல்லது .இப்பொழுது கையில் இருக்கும் போது பிடியை தளர்த்தி விட்டேன் ; முதலாவதைக் கூறு "
உடனே பறவை பறந்து போய் " உம் கையை விட்டு நழுவியதைப் பற்றிக் கவலையுறாதீர் " என்று கூறி மரக்கிளையில் போய் அமர்ந்தது .
இப்போது வேடனுக்கு பறவை கையை விட்டு நழுவி ஏமாற்றியதை சமாளித்துக் கொண்டு , " நல்லது. நீ சொன்ன மாதிரி என் கையை விட்டு நீ நழுவியதைப் பற்றிக் கவலைப்படவில்லை . இப்பொழுது அந்த இரண்டாவதைக் கூறு"
" சாத்தியமில்லாத ஒன்றை நம்பாதீர் " என்று கூறிவிட்டு , நீர் என்ன இத்தனை துர் அதிர்ஷ்டசாலியாக இருக்கிறீர் .நீர் என்னை அறுத்து வயிற்றைப் பிளந்திருப்பின் என் வயிற்றுக்குள் ஒவ்வொன்றும் இருபது தோலோ எடையுள்ள இரண்டு தங்காபரணங்களை கண்டிருப்பீர் .என்ன கைதேசம் இது " என்றது பறவை.
அது கேட்ட வேடனுக்கு ஏற்பட்ட வருத்தத்திற்கு அளவே இல்லை. தன் விதியை நொந்து கொண்டான் .
இப்பொழுது பறவை பறந்து பள்ளத்தாக்கில் அமர்ந்தது .
" நல்லது . பறவையே நீ இப்பொழுது அந்த மூன்றாவதைக் கூறு "
" வேடா ! முதல் அறிவுரை , கையை விட்டு நழுவியதைப் பற்றிக் கவலைப்படக்
கூடாது என்றேன் . இரண்டாம் அறிவுரை சாத்தியமில்லாத ஒன்றை நம்பக்கூடாது என்றேன் . கொஞ்சம் யோசிப்பீர் . என் இறைச்சி , என் இரத்தம், என் இறக்கைகள் , சிறகுகள் ஆகியவை அனைத்தையும் நிறுத்துப் பார்த்தாலும் , இருபது தோலோவுக்கு மேல் வராதே . அவ்வாறிருக்க , எவ்வாறு என் வயிற்றுக்குள் ஒவ்வொன்றும் இருபது தோலோ எடையுள்ள இரண்டு தங்காபரணங்கள் எப்படி இருக்க சாத்தியம் . இதனை நீர் நம்பலாமா ? மூன்றாவதாக 'இதற்கெல்லாம் காரணம் என் விதி ' என்று நொந்து கொண்டது மிகவும் முட்டாள்தனமானது . என்று கூறி பறந்து சென்றது அப்பறவை.
" ஆசையே எல்லா துன்பங்களுக்கும் காரணம் . அது மனிதனை அறிவுக்கண் குருடனாக ஆக்கி விடுகிறது " என்றார்
அபூ பக்ர் ஷிப்லீ (ரஹ்) அவர்கள் .

## சூஃபியாக்களின் பரிபாஷை 16

( ' நான் ' )
அபூ பக்ர் ஷிப்லீ (ரஹ்) அவர்களிடம் ,
" உங்களது ஆசான் குரு யார் ? "
" என் குரு ஆசான் ஒரு நாய் . ஒரு நாள் குளக்கரையோரமாக சென்றேன் .ஒரு நாய் பெரிதும் தாகத்துடன் , நீர் அருந்தத் தண்ணீர் அருகே சென்று , தன் வாயை கொண்டு சென்றதும் , தண்ணீருக்குள் ஒரு நாய் நிற்பதைக் கண்டு , அது தன் பிரதிபலிப்பு என்பதை அறியாது
திடுக்குற்று தன் வாயை எடுத்துக் கொண்டு கரையேறியது . இவ்வாறு தண்ணீர் அருகே செல்வதும் பின் திடுக்குற்று கரையேறுவதுமாக இருந்தது .
சிறு நேரம் கழிந்தது. அதற்கோ தாகம் தாங்க முடியவில்லை .' என்னவானாலும் ஆகட்டும் ' என்று அது துணிச்சலை வரவழைத்துக் கொண்டு தண்ணீருக்குள் பாய்ந்தது .

அடுத்த கணம் தண்ணீருக்குள் இருந்த ' ' மற்றொருநாய் ' மாயமாய் மறைந்து விட்டது. தனக்கும் தண்ணீருக்கும் இடையே குறுக்கீடாக நின்றது தானே (நான்) என்பதையும் , அது இப்பொழுது மறைந்துவிட்டது என்பதையும் இப்பொழுதுதான் நாய் உணர்ந்தது .
" இதிலிருந்து நான் ஒரு பாடத்தைக் கற்றுக் கொண்டேன் .எனக்கும் இறைவனுக்கும் இடையே குறுக்கீடாக உள்ளது நானே என்பதை உணர்ந்தேன் .
அந்த ' நான் ' என்பதை அழித்துவிடின் இறைவனை எய்தப் பெறலாம் என்ற உண்மையும் எனக்கு வெளிச்சமாகியது .
எனவே ஆன்மீகப் பாதையில் எனக்கு வழிகாட்டிச் சென்ற ஆசான் , அந்த நாயேயன்றி வேறில்லை

## ஸூஃபியாக்களின் பரிபாஷை 17

(இஸ்முல் அஃலம்)



அருள்மறையாம் திருக்குர்ஆனில் 'அல் அஃராஃப்' (சிகரங்கள்) என்ற அத்தியாயத்தில் சில வரலாற்றுச் செய்திகள் இடம்பெற்றுள்ளன. அதில் ஒரு வசனத்தில் 'பல் ஆம் இப்னு பாஊர்' என்ற அறிஞரைப்பற்றிய தகவல் இடம்பெற்றுள்ளது.
கொடுங்கோல் அரசன் பிரவுன், மூஸா நபிகளையும், அவரது கூட்டத்தாரையும் பல்வேறு கொடுமைகளுக்கு ஆளாக்கி துன்புறுத்தினான். அல்லாஹ்வின் வல்லமையால் பிரவுனும், அவனது படைகளும் கடலில் மூழ்கடிக்கப்பட்டு அழிக்கப்பட்டனர்.
அதன்பின்னர் நபி மூஸா (அலை) அவர்கள் தலைமையில் மக்கள் அமைதியாய் வாழ்ந்திருந்த காலம் அது.
அப்போது எகிப்தை சுற்றியிருந்த மற்ற நாடுகளில் உள்ளவர்கள் நபி மூஸா (அலை) அவர்ககள் கொண்டு வந்த தவ்ராத் வேதத்தையும், ஏக இறைவன் அல்லாஹ் மட்டுமே என்ற கொள்கையையும் ஏற்றுக்கொள்ள மறுத்தார்கள். அதோடு நபி மூஸா (அலை) அவர்ககளை பின்தொடர்ந்த மக்களுக்கும் தொல்லைகள் கொடுத்தனர்.
அந்த மக்களின் அட்டூழியத்தை அடக்குவதற்காக அவர்கள் மேல் போர் தொடுக்க வேண்டும் என்ற கட்டளையை மூஸா நபிக்கு இறைவன் பிறப்பித்தான். இதன்படி முதலில் அவர் மிஸ்ரு என்ற நாட்டின் மீது படையெடுத்துச்சென்று போர் புரிந்து வெற்றி கொண்டார். அடுத்து, மூஸா நபிகள் போர் தொடுக்க திட்டமிட்ட நாடுகளில் ஒன்று 'கன்ஆன்'.
நபி மூஸா (அலை) அவர்கள் தன் நாட்டின் மீது படையெடுத்து வந்தால் தன்னை சிறை பிடிப்பதோடு, தன் நாட்டையும் கைப்பற்றிக் கொள்வார் என்று அந்த நாட்டு மன்னன் பயந்தான்.
இதையடுத்து கன்ஆன் நாட்டு மன்னன் சதி ஆலோசனை செய்தான். அவன் மந்திரிகளை அழைத்துப்பேசினான். அப்போது மந்திரிகள், தங்கள் ஊரில் வசிக்கும் பல்ஆம் இப்னு பஊரா என்ற இஸ்லாமிய மார்க்க அறிஞரும் ஞானியுமான அவரைப்பற்றி மன்னனிடம் தெரிவித்தனர்.

வேதத்தை தெளிவு பெற கற்றறிந்த மார்க்க மேதையாகவும், வழிபாடுகளை தவறாது நிறைவேற்றும் பக்திமானாகவும் பல்ஆம் விளங்கினார். இவரது பக்தியை மெச்சிய அல்லாஹ், அவருக்கு 'இஸ்முல் அஹ்லம்' என்ற உயர்ந்த அந்தஸ்த்தை வழங்கி கவுரவப்படுத்தியிருந்தான்.
இதன்மூலம், தனக்கு எது தேவை என்றாலும் அதைத்தருமாறு இறைவனிடம் அவர் இஸ்முல் அஹ்லத்தை சொல்லி பிரார்த்தனை செய்தால் போதும், உடனே அவருக்கு அது கிடைத்துவிடும். அத்தகைய உயர்ந்த அந்தஸ்த்துதான் இஸ்முல் அஹ்லம் என்பது.
பல்ஆம் இதை பயன்படுத்தி இறைவனிடம் தனது தேவை மட்டுமின்றி பிற மக்களின் கோரிக்கைகளையும் நிறைவேற்றினார்.
இவரது ஆற்றலைப் பற்றி கேள்விப்பட்ட அந்த ஊரைச் சுற்றி வாழும் மக்கள் அவரை சந்திக்க திரண்டு வந்தனர். பலர் அங்கேயே தங்கியிருந்து அவரிடம் மார்க்க கல்வியும் கற்று வந்தனர். அந்த அளவிற்கு சிறந்த அறிஞராக அந்தஸ்த்தோடு வாழ்ந்து வந்தார்.
இத்தனை சிறப்பு மிக்க அவரைப்பற்றி மந்திரிகள், மன்னனிடம் எடுத்துக் கூறினார்கள். மேலும், இஸ்முல் அஹ்லம் என்ற சிறப்புத்தன்மை பல்ஆம்மிடம் உள்ளது. இதனால், நபி மூஸா (அலை) அவர்களுக்கு எதிராக அல்லாஹ்விடம் பிரார்த்தனை செய்யுமாறு அவரிடம் சொல்ல வேண்டும். அதை ஏற்று அவர் பிரார்த்தனை செய்தால்தான் நபி மூஸா (அலை) அவர்களின் படைகளிடம் இருந்து நாம் தப்பிக்க முடியும் என்று மந்திரிகள் மன்னனிடம் தெரிவித்தனர்.

இதையடுத்து, மன்னனும் மந்திரிகளும் அறிஞர் பல் ஆம் வீட்டுக்குச் சென்றனர். அவரிடம், நபி மூஸா (அலை) அவர்கள் மூலம் தன் ஆட்சிக்கு வர இருக்கிற ஆபத்தை எடுத்துச் சொன்னார்கள். இந்த ஆபத்திலிருந்து கன்ஆன் நாடு காப்பாற்றப்பட வேண்டும் என்றால்,நபி மூஸா (அலை) அவர்களுக்கு எதிராக நீங்கள் இஸ்முல் அஹ்லத்தை பயன்படுத்தி இறைவனிடம் துஆச் செய்ய வேண்டும்' என்று தெரிவித்தனர்.

ஆனால், பல்ஆம் இதை ஏற்க மறுத்து இவ்வாறு கூறினார்:

" நபி மூஸா (அலை) அவர்கள் அல்லாஹ்வால் அனுப்பப்பட்ட நபி. அவர் தந்ததுதான் தவ்ராத் வேதம். அதனை ஓதி செயல்படுத்தி வந்ததால்தான் எனக்கு இஸ்முல் அஹ்லம் என்ற சக்தியே இறைவனால் கொடுக்கப்பட்டது. அப்படி இருக்க நான் எப்படி ஒரு நபிக்கு எதிராக துஆச் செய்ய முடியும் ? மேலும் அது எப்படி அல்லாஹ்வால் ஏற்றுக் கொள்ளப்படும் ? எல்லோருக்கும் நன்மை செய்கின்ற நல்ல துஆக்கள் தான் அல்லாஹ்வால் ஏற்றுக்கொள்ளப்படும். ஜின்கள், சைத்தான் போன்று கெட்ட விஷயங்களில் என்னை ஈடு படுத்திக் கொள்ளவோ, கெடுதல், சூனியம் செய்யவோ மாட்டேன் என்று மறுத்துவிட்டார்".
மன்னனும் அவரை தன் வழிக்கு கொண்டு வர எவ்வளவோ முயற்சி செய்தும் பலன் கிடைக்கவில்லை. எனவே குறுக்கு வழியில் அவரை வீழ்த்த திட்டமிட்டனர்.

பல்ஆம் சிறந்த ஞானியாக இருந்த போதிலும் தனது அழகான மனைவி மீது அவருக்கு மோகம் அதிகமாக இருந்தது. அந்த பலவீனத்தைப் பயன்படுத்திக் கொள்ள விரும்பினான் மன்னன். இதையடுத்து அந்தப்பெண்ணை அழைத்து தனது திட்டத்தை விவரித்தான். அந்தப்பெண்ணுக்கு, அவள் விரும்பிய அத்தனை பரிசுப் பொருட்களையும் அளவில்லாமல் கொடுத்து 'பல்ஆமை,நபி மூஸா (அலை) அவர்களுக்கு எதிராக துஆச் செய்ய சம்மதிக்க வைக்க வேண்டும்' என்று கேட்டுக்கொண்டான்.
அந்தப்பெண்ணும், பரிசுப் பொருட்களுக்கு மயங்கி, தன் கணவனின் பலவீனத்தை பயன்படுத்தி அவரின் உறுதியை குலைத்தாள், மனதை கலைத்தாள். பெண்ணாசையில் மதிமயங்கிய பல்ஆம், மூஸா நபிகளுக்கு எதிராக இறைவனிடம் பிரார்த்தனை செய்ய முன்வந்தார்.
நல்ல செயலுக்காக கொடுக்கப்பட்ட ஒரு சக்தியை தவறாக பயன்படுத்த முன்வந்ததால் அது இறைவனுக்கு கோபம் மூட்டியது. உடனே பல்ஆம்முக்கு அளித்த சிறப்புத்தன்மையை அவரிடம் இருந்து இறைவன் அகற்றினான்.
அது மட்டுமல்லாமல், நபி மூஸா (அலை) அவர்களுக்கு எதிராக பிரார்த்தனை செய்ய ஒப்புக்கொண்ட அவரது நாக்கு மிக நீளமாக வளர்ந்தது. நாயின் நாக்கு எப்படி நீளமாக வெளியே தொங்கிக்கொண்டு இருக்குமோ, அப்படி அவரது நாக்கு வாய்க்கு வெளியே தொங்கியது. இந்த நிகழ்வு குறித்து திருக்குர்ஆனில் இவ்வாறு பதிவு செய்யப்பட்டுள்ளது:

"(நபியே!) நீங்கள் அவர்களுக்கு ("பல்ஆம் இப்னு பாஊர்" என்னும்) ஒருவனுடைய சரித்திரத்தை ஓதிக்காண்பியுங்கள். அவனுக்கு நாம் நம்முடைய அத்தாட்சிகளைக் கொடுத்(து கண்ணியமாக்கி வைத்)திருந்தோம். எனினும் அவன் (பாம்பு தன் சட்டையை விட்டு வெளியேறுவதைப் போல) அதிலிருந்து முற்றிலும் வெளியேறிவிட்டான். ஆகவே, சைத்தான் அவனைப் பின்தொடர்ந்து சென்றான்; (அவனுடைய சூழ்ச்சிக்குள் சிக்கி) அவன் வழிதவறி விட்டான்".
(திருக்குர்ஆன் 7:175)

'நாம் எண்ணியிருந்தால் நம் அத்தாட்சிகளின் காரணமாக அவனை நாம் உயர்த்தியிருப்போம். எனினும் அவன் இவ்வுலக வாழ்க்கையை நிரந்தரம் என எண்ணி தன் சரீர இச்சையை பின்பற்றிவிட்டான். அவனுடைய உதாரணம் ஒரு நாயின் உதாரணத்தை ஒத்திருக்கிறது'
(திருக்குர் ஆன் 7:176).

இந்த வசனங்களின் மூலம் அல்லாஹ் கோடிட்டு காட்டுவது என்னவென்றால், மார்க்க அறிவில் சிறந்தவர்களும், மேதைகளும் கூட உலக இன்பங்களில் குறிப்பாக மண்ணாசை, பெண்ணாசை போன்றவற்றில் சிக்கி தங்கள் கவனத்தை சிதறடித்தால் நிச்சயமாக அது அவர்களுக்கு வழிகேடாகவே அமையும்.
தங்களுடைய சிறப்பு தன்மையை, ஞானத்தை, காத்துக்கொள்ள வேண்டும் என்றால் சிற்றின்பம் என்ற சிந்தனையைக் களைந்து மிக கவனத்துடன் வாழ்க்கையை அமைத்துக்கொள்ள வேண்டும். அப்போது தான் வெற்றிகரமான வாழ்க்கை இவ்வுலகிலும், மறுவுலகிலும் கிடைக்கும்.

## சூஃபியாக்களின் பரிபாஷை 18

(இஸ்முல் அஃலமும், மனக் கட்டுப்பாடும்)



ஒவ்வொரு காலத்திலும் ஒரு குத்பு உண்டு . " ரை " நாட்டில் யூசுப் இப்னு ஹுஸைன் (ரஹ்) அவர்கள் வாலிபராக இருந்த காலத்தில் எகிப்து நாட்டில் துன்னூன் மிஸ்ரி (ரஹ்) அவர்கள் குத்பு ஸமானாக இருந்தார்கள்.

யூசுப் இப்னு ஹுஸைன் (ரஹ்) அவர்கள் எகிப்தை அடைந்து ,துன்னூன் மிஸ்ரி (ரஹ்) அவர்களை பள்ளியில் சந்தித்து , ஸலாம் சொல்ல , அவர்களும் பதில் ஸலாம் சொல்வார்கள் .எதுவும பேசாமல் இப்படியே ஓராண்டு .

பின் அவர்களின் தவமடத்தில் வைத்து, பெயரையும் , ஊரையும் கேட்டதோடு சரி . இப்படியே அடுத்த ஓராண்டு . இறுதியில் 'ரை ' யிலிருந்து வந்த குறிகோள் என்ன ? "

" தங்களிடமிருந்து இஸ்முல் அஃலத்தை அறிந்து கொள்ள வந்தேன் ".

ஒரு நாள் யூசுப் இப்னு ஹுஸைன் (ரஹ்) அவர்களிடம் மரப் பேழையை கொடுத்து , " இதனை , இன்ன இடத்தில் பெரியாரிடம் கொடுத்து, அவர் என்ன கூறுகிறரோ, அதனை நினவில் வைத்துக் கொள்ளும் ''

மரப் பேழையை பெற்றதும் அந்த மரப் பேழையினுள் ஏதோ நடமாடுவது போல் தோன்றவே , அது என்னவாக இருக்கும் ? என்ற பேரவா தூண்டியது .

" அது என்னவாகவாவது இருந்து விட்டுப் போகட்டும். அதைப் பற்றி நமக்கேன் கவலை ? என்றது அவர்களின் உள்மனம்

அப்போது அந்த மரப்பேழை மெதுவாக நகர்வது மாதிரி இருந்தது .

"அதனை திறந்து பார்த்து உடனே மூடிவிடுவோம் இது என்ன தவறு ? பார். பார் .திறந்து பார் " என்றது வெளிமனம்

யூசுப் இப்னு ஹுஸைன் (ரஹ்) அவர்கள் மெதுவாக அப்பேழை மெல்ல திறக்க , என்ன வியப்பு ! ஒரு சுண்டெலி அதிலிருந்து தப்பி வெளியே பாய்ந்தோடி ஒரு பொந்தில் நுழைந்து மறைந்தது.

"என்ன காரியம் செய்து விட்டோம் இப்போது திரும்ப சென்று துன்னூன் மிஸ்ரி (ரஹ்) அவர்களை சந்தித்து நடந்ததைக் கூறி மன்னிப்புக்கு கேட்கலாமா ? இல்லை ....இல்லை... கோபப்பட்டால் என்ன செய்வது ?"

இறுதியாக அந்த காலி மரப்பேழையுடன் அப்பெரியாரை சந்திக்க, பெரியார் புன்முறுவல் பூத்து , " நீர் அவரிடம் இஸ்முல் அஃலத்தைச் சொல்லித் தருமாறு வேண்டீனீரல்லவா ? "

"ஆம் . அதெப்படி உங்களுக்குத் தெரியும் ? " மீண்டும் அதே புன்முறுவல் .

"உம்முடைய பொறுமையின்மையைக் கண்டே , துன்னூன் ஒரு சுண்டெலியைப் பேழையில் அடைத்து தந்தார் .ஒரு சுண்டெலியைப் பத்திரமாகப் பாதுகாக்கத் தெரியாத நீர் , எவ்வாறு இஸ்முல் அஃலத்தைப் பத்திரமாகப் பாதுகாப்பீர் ? "

அது கேட்டு தலை குனிந்து, யூசுப் இப்னு ஹுஸைன் (ரஹ்) அவர்கள் மீண்டும் எகிப்து வந்து ,துன்னூன் மிஸ்ரி (ரஹ்) அவர்களை சந்திக்கிறார்கள் .

" உமக்கு இஸ்முல் அஃலத்தைக் கற்று தருவது பற்றி நான் நேற்று ஏழு தடவை இறைவனிடம் மன்றாடினேன் . அதற்கு அவன் ஒற்றை சுண்டெலியைக் கொண்டு அவரைச் சோதித்துப் பார் " என்றான் . " சரி , இப்போது உன் நாட்டிற்கு நீர் போகலாம் "

" நல்லது. இஸ்முல் அஃலத்தைப் பெற எனக்கு இறுதி அறிவுரை நல்குங்கள் "

" முதலாவது நீர் பயின்றவை அனைத்தையும் மறந்து விட வேண்டும் . எழுதியவை அனைத்தையும் அழித்து விட வேண்டும். அவ்விதம் செய்வீராயின் உம் அகப்பார்வையில் இடப்பட்டுள்ள திரை அகற்றப்பட்டு விடும் "

" அவ்விதம் செய்ய என்னால் இயலாது "

" இரண்டாவது நீர் என்னை மறந்து விட வேண்டும் .என் பெயரை எவரிடமும் எடுத்துரைக்கக் கூடாது .என்னுடைய ஆசான் இவ்வாறு என்னிடம் கூறினார் எனப் பிறரிடம் எடுத்துரைப்பதே ஒரு விதத் தற்புகழ்ச்சியாகும் "

"அவ்விதமும் என்னால் செய்ய இயலாது"

" மூன்றாவது மிகச் சிறிய அறிவுரை , 'யூசுபே ! நீர் மக்களுக்கு அறிவுரை நல்குவீராக ! அவர்களை இறைவன்பால் நெருங்கச் செய்வீராக !

அது கேட்டு யூசுப் (ரஹ்) அவர்கள் மகிழ்ச்சியுற்று . " இதனை என்னால் செய்ய இயலும் "

" ஆனால் ஓர் எச்சரிக்கை ! அறிவுரை ஆற்றும் பொழுது , உம் உள்ளத்தில் "தான் " என்ற அகந்தை ஏற்பட்டு விடக் கூடாது .
அல்லாஹ்வுக்காகவே செய்வதாக எண்ணிக் கொள்ள வேண்டும் .
" நல்லது .அப்படியே செய்கிறேன் "
" மூன்றாவது அறிவுரையில் இருந்து இரண்டாவது அறிவுரை பின் முதலாவது அறிவுரைக்கு நீர் கடந்து போகும் போது இஸ்முல் அஃலம் நீர் கிடைக்க பெறலாம்

## சூஃபியாக்களின் பரிபாஷை 19

(இல்ஹாம் – இறைவன் அளிக்கும் உள்ளுணர்வுக்கும்,
வஸ்வஸா - ஷைத்தானின் ஊசலாட்டத்திற்கும் வேற்றுமை என்ன? )



இல்ஹாம் - உள்மனத்தூண்டல் இல்ஹாம் ஒருவன் உள்ள அறிவை வைத்துக் கொண்டு செயல்பட்டால் (அது தொடர்பான) புரியாத அறிவுகளையும் அல்லாஹ் சொல்லிக்கொடுப்பான்.
இது நபிகளாரின் வாக்கு.

ஒருவன் எதைப்பற்றி சிந்திக்கிறானோ, அந்த சிந்தனை அடிமனத்தில் இறங்கி அவனுக்குத் தேவையான செய்தியை தேடிக்கொண்டிருக்கும். எப்போது accurate thought ஏற்படுகிறதோ அப்போது divine force அங்கு கலக்கும்,
அப்படி கலந்த பிறகு எதற்கான விடையைத் தேடிக் கொண்டிருக்கிறானோ அந்த விடை அவன் உள்ளத்திலிருந்து வெளிவரும்.
இதற்கு “இல்ஹாம்” – இறை உதிப்பு என்று பெயர்.
மேலும் அவன் எந்த மொழியில் சிந்திக்கிறானோ அந்த மொழியிலேயே வரும், மாறுபட்ட மொழியில் வராது. எதைப் பற்றி சிந்திக்கிறானோ அதைப் பற்றிய செய்தி வரும். அதற்கு மாறுபட்ட வேறொன்று வராது.
அடுத்து ,
நில் ' என்றால் நிற்காமல் பரந்து விரிந்து பறந்தோடும் மனதை உண்டாக்குவது யார் ?
“யுவஸ்விஸு ஃபீ ஸுதூரின்னாஸ்” – “அவன் (ஷைத்தான்) மனிதர்களின் நெஞ்சங்களில் ஊசலாட்டத்தை உண்டாக்குகிறான்” என்கிறது
குர்ஆன் (114:5)
அவன் எங்கே இருக்கிறான் ?
“மினல் ஜின்னத்தி வன் நாஸ்” – ”ஜின்களிலும் மனிதர்களிலும் இருக்கிறான் . (114 : 6)
மனிதர்களில் எங்கே இருக்கிறான் ?
“அன்னஷ் ஷைத்தான யஜ்ரீ நஜ்ரத் தமி ஃபிப்னி ஆதம் - ஆதமுடைய மகனின் (மனிதனின்) ரத்த நாளங்களில் எல்லாம் ஷைத்தான் ஓடிக் கொண்டிருக்கிறான்” என்றது நபிமொழி

குர்ஆனில் இன்னொரு இடத்தில்
“வ லகத் ஃகலக்னல் இன்சான – நிச்சயமாக மனிதனை நாம்தான் படைத்தோம்,
வ நஃலமு மா யுவஸ்விசு பிஹீ நஃப்சுஹு – அவன் மனம் அவனிடம் என்ன பேசுகிறது என்பதையும் நாம் அறிகிறோம் –
வ நஹ்னு அக்ரபு இலைஹி மின் ஹப்லில் வரீத் – அவனிடம் நாம் பிடரி நரம்பைவிட மிக நெருக்கமாக இருக்கிறோம்” (50:16).
இந்த வசனத்தை, மேற்குறிப்பிட்ட (114:5)-ஆம் வசனத்துடன் ஒப்பிட்டுப் பாருங்கள். வஸ்வாஸ்- ஊசாட்டத்தைப் போடுபவன் ஷைத்தான் என்று அந்த வசனம் சொல்கிறது, நஃப்ஸ்- மனம் என்று இந்த வசனம் சொல்கிறது.
மேலும், மனம் மனிதனிடம் ஊசலாடுகிறது என்று இந்த (50:16) வசனம் காட்டுவதால்
மனம் வேறு ; நான் வேறு என்பதும் தெளிவாகிறது.
இது பற்றி சூஃபி ஒருவர் சற்று விளக்கமாக ....

அபூ ஸயீது (ரஹ் ) அவர்கள் 'தூஸ் ' என்னும் ஊருக்கு ஒரு தர்வேஷ் ஒருவருடன் மலைச் சாரலில் நடந்து கொண்டிருந்தபொழுது , கடுமையான குளிரின் காரணமாக அவர்களின் பாதங்கள் விரைத்துப் போயின.
இதைக் கண்ட தர்வேஷ், தம் மேலங்கியைக் கிழித்து , அவர்களின் பாதங்களுக்கு உறைபோன்று மாட்டலாமென்று எண்ணினார் .
ஆனால் அந்த மேலங்கியோ உயர்தரமானதாக இருந்ததால் , அதனை கிழிக்க தர்வேஷ்க்கு மனம் வரவில்லை.
பின்னர் அவர்கள் இருவரும் தூஸ் நகர் வந்து , அங்கு அபூ ஸயீது (ரஹ் ) அவர்கள் மார்க்க சொற்பொழிவாற்றினர்கள் .
கூட்டத்தின் முன் வரிசையில் அமர்ந்திருந்த அந்தத் தர்வேஷ் ,
"இல்ஹாம் – இறைவன் அளிக்கும் உள்ளுணர்வுக்கும் ,
வஸ்வஸா - ஷைத்தானின் ஊசலாட்டத்திற்கும் வேற்றுமை என்ன? " என்று கேள்வி கேட்டார் .
உடனே அபூ ஸயீது (ரஹ் ) அவர்கள், "உம்முடைய மேலங்கியைக் கிழித்து என் பாதங்களுக்கு உரை போன்று மாட்டலாமென்று உம் உள்ளத்தில் முதலில் உதித்தது . இது இல்ஹாம் .
அவ்விதம் செய்ய வேண்டாமென்று உம் உள்ளத்தில் இரண்டாவதாகத் தோன்றியதே அது வஸ் வஸா ஆகும் " என்று பதிலுரைத்தார்கள் .
அது கேட்டு, அந்த தர்வேஷுக்கு ஏற்பட்ட திடுக்கத்திற்கும் , வியப்பிற்கும்.அளவே இல்லை.

**Nasoordeen Cassim**

இல்ஹாம் என்பது இறைவன் புறத்தில் இருந்து ஒருவருக்குக் கிடைக்கும் கல்வியாகும். இதை இறை அருள், ஞானம் என்று கூறலாம். ஒரு செய்தி, ஒரு கருத்து, ஓர் உண்மை உள்ளத்தில் படித்தல் கற்றல் என்ற இயல்பான வழியில்லாமல் உள்ளத்தில் ஏற்படும் ஒரு உதிப்பால் ஆன்மீகப் பயிற்சியின் விளைவாக வரலாம் அது அல்லாஹ்வால் கொடுக்கப்படும் ஒன்றே தவிர தேடிப் படிக்கும் அறிவு அல்ல; அதே நேரம் இந்த அறிவினைக் குறிப்பிட்ட நபர் ஆன்மீகப் பயிற்ச்சியின் ஊடாக தமது நப்ஸுடன் மாபெரும் யுத்தம் செய்து கல்பை பரிசுத்தப்படுத்தியும் தன்னைத் தானே சுயவிசாரணை செய்தும், அல்லது இதற்காக உழைத்தும் அல்லாஹ்வினால் விஷேடமான இந்த அறிவைப் பெறும் வாய்ப்பும் உண்டு.

**Rahmath Rajakumaran**

1. இஸ்லாமும் ஜென்னும்
(நிரம்பி வழியும் தேநீர் கோப்பை )
ஜப்பான் மெய்ஜி காலத்தில் ஜென் துறவி " நான் -இன் " என்பவரிடம், பல்கலைக்கழக பேராசிரியர் ஒருவர் ஜென்னைப் பற்றிய சந்தேகத்தை தீர்த்துக் கொள்வதற்காக வந்தார்.
பேராசிரியரை வரவேற்று அமரச் செய்து ஜென் துறவி நான் - இன் கோப்பையில் தேநீரை ஊற்றினார் . கோப்பையின் விளிம்பைத் தாண்டி தேநீர் நிரம்பி வழிந்தது .ஆனாலும் ஊற்றுவதை துறவி நிறுத்தவே இல்லை. பேராசிரியரால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை .
"கோப்பை நிரம்பி விட்டது .மேலதிக தேநீர் அதற்குள் நிரம்பாது "
ஜென் துறவி புன்னகை வழியச் சொன்னார்.
"இந்தக் கோப்பையைப் போலவே , உங்களுக்குள்ளிலும் கருத்துக்களும் , ஊகங்களும் நிரம்பி வழிகின்றன. நீங்கள் உங்கள் கோப்பையை காலி செய்யாத வரையில் நான் எப்படி உங்களுக்கு ஜென்னைப் போதிக்க முடியும் ?
கௌது நாயகம் முகையதீன் அப்துல் காதிர் ஜிலானி அவர்கள் பக்தாத் நகருக்கு வர இருப்பதை அறிந்ததும் பாக்தாத்தின் இஸ்லாமிய பேரறிஞர்கள் ஒன்று கூடி, "பாக்தாத்தில் '"தீன் "என்னும் இஸ்லாம் சிறப்புற்று இருக்க, தாங்களும் பாக்தாத்திற்கு வருகை தர வேண்டுமா ? என்பதை சூசகமாக கௌது நாயகத்திற்கு உணர்த்த தண்ணீர் நிரம்பி வழியும் ஒரு பாத்திரத்தில் தண்ணீர் தளும்ப தளும்ப கொண்டு வந்து வைத்தனர்.
பாக்தாத் அறிஞர்களின் சூசகத்தைப் புரிந்து கொண்டு, தளும்பும் பாத்திர நீரில் பூக்களை அள்ளி போட்டார்கள் .அதாவது நிரம்பி வழியும் தீனை நான் வாசனை (மணக்க ) செய்யவே பாக்தாத் வருகிறேன் என்பதை சூசகமாக உணர்த்தினார்கள் .

## சூஃபியாக்களின் பரிபாஷை 20

(சூஃபியாக்கள் எனும் ஆன்மீக அரசர்கள்)

" என் உம்மத்திலே உள்ள அறிஞர்கள் பனீ இஸ்ராயீல்களிடையே தோன்றிய நபிமார்களுக்கு இணையானவர்கள் " என்று அண்ணலெம் பெருமானார் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
இஸ்லாமிய அறிஞர்கள் ஆன்மீக அறிஞர்கள் , என்றும் மார்க்க அறிஞர்கள் இருவகைப் பட்டனர். ஆன்மீக அறிஞர்களின் பரம்பரை அலீ (ரலி) அவர்கள் முதல் துவங்குகிறது .
தாயிஃப் போரிலிருந்து திரும்புகையில் அலீ (ரலி) அவர்களை மட்டும் தனியே அழைத்து ஆன்மீக இரகசியங்களை நபி (ஸல்) அவர்கள் எடுத்தோதினார்கள் .

அப்பொழுது உமர் (ரலி) அவர்கள் , நபிகளாரை அணுகி, "யா ரசூல்லாஹ் ! தாங்கள் அலீக்கு மட்டும் ஏதோ இரகசியத்தைக் கூறுகின்றீர்களா ? என்று வினவியபோது, "நான் அவருக்கு யாதொரு இரகசியத்தையும் போதிக்க வில்லை. அல்லாஹ்தான் போதித்தான் " இதன் பொருள் : "அல்லாஹ்வின் ஆணை மீதுதான் நான் அதனை அவருக்கு போதித்தேனே யன்றி நானாகவே அதனைப் போதிக்க வில்லை " என்பதாகும்.

" நீங்களெல்லாம் இறக்கக் கூடிய மனிதர்களிடமிருந்து மனிதர்களிடமிருந்து அறிவை பெறுகின்றீர்கள் .நாங்களோ பிறப்பு இறப்பு இல்லா இறைவனிடமிருந்து அறிவை பெறுகின்றோம் " என்று அபூ யாஸித் பிஸ்தாமீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள் .
இதன் காரணமாகவே பள்ளி சென்று ஒழுங்காகப் பயிலாத பலர் இறைவனால் 'இல்ஹாம் ' மூலம் அறிவு போதிக்கப்பட்டு ,ஆன்மீகப் பேரரசர்களாக விளங்கினார்கள்.
ஆன்மீகப் பெருங்கடலில் முழ்கி அவர்கள் கொண்டு வந்த முத்து முத்தான கருத்துக்கள் சிலபொழுது மார்க்கத்திற்கு முரண் போன்று தோன்றியதன் காரணமாக , அவர்கள் இறைவனளவில் தங்களை அழித்துக் கொண்ட ஃபனா நிலையில் கூறிய சொற்கள் ஷரீதத்திற்கு மாறுபட்டதாகத் தோன்றியதன் காரணமாக , மார்க்கம் கற்ற அறிஞர்கள் அவர்களைக் காஃபிர் என்றும் ஸிந்தீக் என்று கூறி ஒதுக்கி தள்ளினர் . ஆனால் அத்தகையோரை குர்ஆனில் ....
وَلَا تَطْرُدِ الَّذِيْنَ يَدْعُوْنَ رَبَّهُمْ بِالْغَدٰوةِ وَالْعَشِىِّ يُرِيْدُوْنَ وَجْهَهٗ مَا عَلَيْكَ مِنْ حِسَابِهِمْ مِّنْ شَىْءٍ وَّمَا مِنْ حِسَابِكَ عَلَيْهِمْ مِّنْ شَىْءٍ فَتَطْرُدَهُمْ فَتَكُوْنَ مِنَ الظّٰلِمِيْنَ
(நபியே!) தங்கள் இறைவனின் திருப்பொருத்தத்தை விரும்பி காலையிலும் மாலையிலும் பிரார்த்தித்துக் கொண்டிருப்பவர்களை நீங்கள் விரட்டி விடாதீர்கள்! அவர்களுடைய கணக்கிலிருந்து எதுவும் உங்களுடைய பொறுப்பாகாது. உங்களுடைய கணக்கிலிருந்து எதுவும் அவர்களுடைய பொறுப்பாகாது. ஆகவே, நீங்கள் அவர்களை விரட்டினால் அநியாயக்காரர்களில் நீங்களும் ஒருவராகி விடுவீர்கள்! (குர்ஆன் : 6:52)

இந்த ஆன்மீக அரசர்கள் இவ்வுலகில் பற்பல காலங்களில் மக்களிடையே அறிவொளியை ,ஆன்மீக ஒளியை பரத்திச் சென்றார்கள் .
அவர்களின் முன் மன்னாதி மன்னர்கள் எல்லாம் தவம் கிடைந்தார்கள் .
இவ்வுலகில் ஆன்மீக இன்னும் ஆட்சிதான் நடந்து கொண்டிருகிறது .

## ஞானம் 01



அறிவும் , ஞானமும் ஒன்றா என்றால்

இல்லை .

ஞானம் என்பதை ( **wisdom**) என்றும் அறிவை **(Knowledge )** என்கிறார்கள்

இது விஷயமாக உள்ள தத்துவங்களை தத்துவஞானிகள் , தத்துவவாதிகளிடம் விசாரிக்கும் போது நமக்கு ஒரு வித 'ஞானம் ' கிடைக்கிறது .

அது சரிதானோ என்று ஒரு மனம் அறிவுக் கொண்டு யோசிக்கிறது .மற்றொரு மனம் அதே அறிவுக் கொண்டு "..ச்சே ... ச்சே " அதுவல்ல 'ஞானம்' என்கிறது .

இப்படி வித்தியாசமான ஞானங்களை தொகுத்து வழங்கினால் நம்ம ஞான நண்பர் சந்தோஷப்படலாம் என்று என் சிற்றறிவுக்கு தென்பட்ட ஞானத்தை எண்ணி முதல்ல தேர்ந்தெடுத்த ஆள் ஓஷோ....அவரிடம் ஞானத்தைப் பற்றி விசாரித்த போது, சொன்ன விஷயங்கள் சற்று வித்தியாசமாக இருக்கிறது. கேளுங்கள்.

" ஞானம் என்பது ... ஒரு பிரமாண்டமான அனுபவம் அல்ல. ஞானம் என்பது ஒரு எளிய அறிவுப் பூர்வமான புரிதல் மட்டுமே.

ஞானம் பெறுவதற்கு பயிற்சியும் தேவை இல்லை, முயற்சியும் தேவை இல்லை. ஒரு நொடிபொழுது போதும் இதனை புரிந்து கொள்வதற்கு.

ஞானம் என்பது ... நம் அறிவு தன் எல்லையை புரிந்து கொள்ளுவது .... நம் அறிவு ... தனக்கு எங்கே வேலை இருக்கிறது... தனக்கு எங்கே வேலை இல்லை என்று புரிந்து கொள்ளுவதுதான் ஞானம்.

நாம் நமது மனோ இயக்கம் சம்பந்தமாக, நாமாகச் செயல்படுவதற்கு எதுவும் இல்லை என்பதைக் கண்டுகொள்வதே 'ஞானம்'.

'நம்முடைய மன உணர்வுகளைச் சீரமைக்கும் வல்லமை நமக்கு கிடையாது' என்ற நமது இயலாமையை நாம் அறிவுப்பூர்வமாகப் புரிந்துக் கொள்வதுதான் 'ஞானம்'.

நம் அறிவு புறச்செயல்களை நிர்வாகம் செய்யலாம். மனதையும் நிர்வாகம் செய்ய முயலுவதுதான் நம் எல்லா மன பிரச்சனைகளுக்கும் காரணம். நம் அறிவு நம் மனதை நிர்வாகம் செய்ய முடியாது என்று புரிந்து கொள்வது தான்..'ஞானம்'.

மனதில் எண்ணங்கள் ... அதன் போக்கில்தான் வரும்... அவை நம் அறிவின் கட்டுபாட்டுக்குள் இல்லை என்று புரிந்து கொள்வதுதான் 'ஞானம்'.

நாம் தூங்குவதற்கு செல்கிறோம் ... எண்ணங்கள் வந்து கொண்டே இருக்கின்றன..." எண்ணங்களே! நான் தூங்க போகிறேன்.. நாளை வாருங்கள் " என்று சொன்னால் கேட்குமா?...

"மனசே, இன்று முழுவதும் மகிழ்ச்சியான எண்ணங்கள் மட்டுமே வர வேண்டும் ... கோபம், துக்க எண்ணங்கள் வர கூடாது" என்று நம் மனதிடம் நம் அறிவு ஒரு கோரிக்கை வைத்தால் ... நம் மனது கேட்குமா?

'நம் மனம் நம் அறிவின் கைகளில் இல்லை ' என்று அறிவுபூர்வமாக புரிந்து கொள்வதுதான் 'ஞானம்'.

புறத்தில் நடப்பவற்றை எல்லாம் பிரதிபலிப்பது நம் மனதின் இயற்கை. நம் அறிவு முயற்சி செய்துதான் விரும்பியதை நம் மனம் பிரதிபலிக்க வேண்டும் என்று ஒவ்வொரு கணமும் போராடுகிறது.

இந்த முடிவில்லா போராட்டம், ஒரு வீண்முயற்சி என்று நம் அறிவு புரிந்து கொள்ளும் பொழுது தன் முயற்சியை முழுமையாக கைவிடுவது தான் ஞானம். இதுவே அகசரணாகதி. ஞானம் என்பது ஒரு 'அறிவுபூர்வமான புரிதல்' (Intellectual Understanding) மட்டுமே.

எல்லாம் அவன் செயல் - நம் மனதில் தோன்றும் இன்ப துன்பங்கள் எல்லாம் அவன் செயல் என்று பக்தி மார்க்கம் போதிக்கும் சரணாகதியும், இந்த அகசரணாகதிதான்.

சும்மா இருப்பது என்பது நம் முயற்சியால் வருவதன்று...

முயற்சியை கை விடுவதால் வருவது...

இந்த உண்மையை எவரும் கடை பிடித்து புரிந்து கொள்ள முடியும் ... இது நம் மனதிற்கானது.

இந்த 'ஞான புரிதலின்' விளைவு?

ஞானப் புரிதலுக்கு பின் ... நம் மனம் விடுதலையுடன் இயங்க தொடங்கி விடுகிறது.

சதா மகிழ்ச்சியையும் நிம்மதியையும், மனதிடம் தேடி கொண்டு இருந்த நம்அறிவு, தேடுதலை நிறுத்தி விடுகிறது. மனதில் ஓடும் உணர்வுகளுடன் போராடி புதுப்பித்துக்கொள்வதை நிறுத்தி விடுகிறது.

அறிவின் குறுக்கீடோடு இல்லாத நம் மனம் நின்று விடுவதில்லை ... அது விடுதலையுடன் இயங்க தொடங்கி விடுகிறது.

இதுவே விடுதலை ... இதுவே ஆன்மீகத்தில் உயர்வாக கருதப்படும் ... முக்தி ... இதுவே ஞான விடுதலை.

இந்த விடுதலை ஒரு அனுபவம் அன்று. எல்லா அனுபவங்களும் சுதந்திரமாக வந்து போவதுதான் விடுதலை.

ஒரு குழந்தையானது இந்த விடுதலையுடன்தான் இருக்கின்றது. எல்லா ஞானிகளும் இந்த மன விடுதலையுடன்தான் வாழ்கின்றார்கள்

ர.ரா

Vali Poakkan Parathesi இந்த எழுத்தின் வடிவங்களையும் புரிந்துகொள்வதற்கு சராசரியாக 40 வயதை கடந்து இருக்க வேண்டும் என்று தோன்றுகிறது.... இதற்கு முன் தாங்கள் போட்ட பதிவுகள் குறிப்பாக கவிக்கோ அப்துல் ரகுமானின் பதிவுகள் எனக்கு ஒன்றுமே புரியவில்லை நானும் திரும்பத் திரும்ப வாசித்து பார்க்கிறேன் எனக்கு புரியவே இல்லை அதை புரிந்து கொள்வதற்கு என்றே தனி ஞானம் வேண்டும் போல் தோன்றுகிறது....தங்களின் புரிதல்கள் பிரமிக்க வைக்கிறதுஅதை புரிந்துகொண்டு அடுத்தவர்களுக்கும் தெரியவேண்டும் என்று எழுதும் முறைகள் அல்ஹம்துலில்லாஹ் அல்லாஹ் தங்களுக்கு உடல் ஆரோக்கியத்தையும் மன பலத்தையும் தரவேண்டும் துஆ செய்கிறேன்

## ஞானம் 02



அறிவு என்றால் என்ன ?

ஞானம் என்றால் என்ன?

இரண்டுக்கும் வித்தியாசம் என்ன ?

பகவான் ராமகிருஷ்ணனிடம் பாடம் படிப்பதில் நிறைய பயன்கள் உண்டு. அவர் எந்த ஒரு விஷயத்தையும் மிக மிக எளிமையாக விளக்குவார் புரியாததை புரிய வைப்பார். அன்றாட வாழ்க்கையில் உள்ள எளிய உதாரணங்களைக் கூறி தெளிவடையச் செய்வார் அவற்றில் ஒன்றுதான் இந்த சம்பவம் .

பகவான் ராமகிருஷ்ணனிடம் மூன்று மாணவர்கள் படித்துக் கொண்டிருந்தனர் . அவர்களுக்கு அறிவு, ஞானம் பற்றி ஐயம் இருந்தது . அறிவு என்றால் என்ன ? ஞானம் என்றால் என்ன ?

என்று குருவிடம் கேட்டார் .

அவர் அறிவு , ஞானம் பற்றி பல நாள்கள் பாடம் எடுத்தும் அவர்கள் மூவருக்கும் அது முழுமையாக விளங்கவில்லை . இரண்டுக்கும் உள்ள வேறுபாட்டை உணர முடியவில்லை .

பகவான் ராமகிருஷ்ணர் 3 மாணவர்களையும் அழைத்து "உங்களுக்கு ஞானம் என்பது எது ? என்பதை ஒரு செயல்முறை விளக்கப் போகிறேன் "என்று சொல்லிவிட்டு மூவரையும் ஒரு அறையில் உட்கார வைத்தார் .

அவர் மற்றொரு அறைக்குச் சென்று சிறிது நேரத்தில் வெளியே வந்தார் அறையின் கதவுகளை மூடிவிட்டு அம்மூவரின் அருகில் வந்து அமர்ந்தார் .

முதல் மாணவனை பார்த்து , '' நான் போய் வந்த அறையினுள் மூன்று தம்ளர் பால் உள்ளது . அதில் நீ ஒரு தம்ளர் பாலை பருகிவிட்டு வா ! என்றார் .

அவன் உள்ளே சென்றான் தங்கம் ,வெள்ளி, வெண்கலம் ஆகிய மூன்று தடம்ளர்களில் பால் இருந்தது .

தங்கத் தம்ளரிலுள்ள பாலை எடுத்து மிகுந்த சந்தோஷத்தோடு பருகினான் . பிறகு வெளியே வந்தான் .

அடுத்து இரண்டாவது மாணவன் உள்ளே சென்றான் தங்கத் தம்ளரில் பால் இல்லாததைப் பார்த்து அவன் அதிலிருந்த பால் தனக்கு கிடைக்கவில்லையே என்ற ஆதங்கமுற்றான் . ஆயினும் அதற்கடுத்த மதிப்பினை கொண்ட வெள்ளி தம்ளரில் இருந்த பாலை எடுத்து குடித்து விட்டு ஓரளவு நிறைவோடு வெளியே வந்தான்.

மூன்றாவது மாணவன் உள்ளே சென்றதும் காலியாக கிடந்த தங்க, வெள்ளி தம்ளர்களைப் பார்த்ததும் கோபம் தலைக்கேறியது.

" எனக்கு வெண்கல தம்ளர் பாலா? யாருக்கு வேண்டும் இது ?

நான் என்ன அவ்வளவு இளப்பமானவனா ? எந்த விதத்தில் நான் தாழ்ந்தவனாகி விட்டேன் ? என்று அவன் மனதில் எண்ணங்கள் ஓடின . ஆயினும் குரு பாலை குடித்து வா என்றதை நினைவில் கொண்டு வருத்தத்தோடு குடித்து விட்டு வெளியே வந்தான். அவன் முகத்தில் சுரத்தே இல்லை !

பகவான் ராமகிருஷ்ணர் மூவரையும் பார்த்து , "பாலை குடித்தீர்களா ? " என்றார்.

முதல் மாணவன் மகிழ்ச்சி பூரிப்புடன் தங்கத் தடம்ளரில் பால் குடித்தேன் நான் மிகவும் கொடுத்து வைத்தவன் குருவே ! என்றான்

இரண்டாவது மாணவன் , "எனக்கு தங்கத் தம்ளர் பால் கிடைக்கவில்லை என்கிற வருத்தம் இருந்தாலும் , வெள்ளித் தம்ளரிலாவது கிடைத்ததே என்று மகிழ்ச்சி ஓரளவு இருக்கிறது குருஜி ! " என்றான் .

அவன், மூன்று பேர்களில் மிகவும் துரதிர்ஷ்டக்காரன் நானே குருஜி . எனக்கு வெண்கல தம்ளரில்தான் பால் கிடைத்தது " என்றான் .

பகவான் ராமகிருஷ்ணர் அமைதியாக எல்லாவற்றையும் கேட்ட பின் பேச ஆரம்பித்தார். " மாணவர்களே ! தங்கம் வெள்ளி வெண்கலம் ஆகிய மூன்று தம்ளர்களிலும் ஏலக்காய், குங்குமப்பூ சேர்த்து சுண்டக் காய்ச்சிய சுவையான பால்தான் ஒரே அளவில் இருந்தது இதில் எந்த வேறுபாடும் இல்லை பாலைப் பருக போகிற மூவருக்குமே அதில் இருந்த ஒரே மாதிரியான சுவையும் சத்துவ குணமும்தான் கிடைக்கப் போகிறது . அதில் வேறுபாடு இல்லை ஆனால் நீங்கள் மூவருமே நினைத்தது வேறு .

பால் ஊற்றி வைத்திருக்கும் தம்ளர்களின் மதிப்பைப் பற்றியே உங்கள் மனம் யோசித்தது . பாலின் அளவு ,குணம், சுவை , ஆகிய அனைத்தும் ஒரே மாதிரிதான் இருக்கும் என்பதை யோசிக்கவே இல்லை.

ஆகவே நீங்கள் பானத்தை விட்டுவிட்டு பாத்திரத்தையே பார்த்துள்ளீர்கள்! பாத்திரத்தை பார்த்து சந்தோஷப்படுவது அறிவு. அதில் உள்ள பண்டத்தைப் பார்த்து இன்புறுவது ஞானம் .

ஞானிகள் பண்டத்தைப் பற்றியும் அதன் பயன் பற்றியுமே பார்ப்பார்கள்.

பாத்திரங்களுக்கு மதிப்புத் தரமாட்டார்கள். மண் சட்டியில் ஊற்றி கொடுத்தால் கூட ஆனந்தமாக பருகிச் செல்வார்கள்

நீங்கள் அறிவு கொண்டு பார்க்காமல் ஞானம் கொண்டு பார்த்திருந்தால் மூவருமே ஒரே மாதிரியான மன நிலையை எட்டியிருப்பீர்கள் ! "

பகவான் ராமகிருஷ்ணர் சொல்லி முடித்ததும் மூன்று பேர்களுக்கும் அறிவிற்கும், ஞானத்திற்கும் உள்ள வேறுபாடு தெளிவாக விளங்கியது.

## குர்ஆன் கூறும் ஞானம் ஞானம் 03




மூசா (அலை) அவர்கள் தம் (பனூ இஸ்ராயீல் சமுதாய) மக்களுக்கு அல்லாஹ் வழங்கிய அருட்கொடைகளையும் சோதனைகளையும் நினைவூட்டி (அறிவுரை கூறி)க் கொண்டிருந்தார்கள்.

அப்போது "இந்தப் பூமியில் என்னைவிடச் "சிறந்த" அல்லது "நன்கறிந்த" மனிதர் வேறெவரும் இல்லை" என்று கூறினார்கள். அப்போது அல்லாஹ், "உம்மைவிடச் சிறந்தவரை, அல்லது உம்மை விட அதிக ஞானம் உள்ளவரை நான் அறிவேன்" என அறிவித்தான்; "இந்தப் பூமியில் ஒரு மனிதர் இருக்கிறார். அவர் உம்மைவிட அதிகம் அறிந்தவர்" என்று கூறினான்.

மூசா (அலை) அவர்கள் "இறைவா! அவரை எனக்கு அறிவித்துக்கொடு" என்று கேட்டார்கள்.

அப்போது அவர்களிடம், "உப்பிட்ட மீனொன்றைப் பயண உணவாக எடுத்துக்கொண்டு (கடலோரமாகச்) செல்வீராக. அந்த மீனை எந்த இடத்தில் நீங்கள் தவறவிடுவீர்களோ அங்கு அவர் இருப்பார்" என்று கூறப்பட்டது.

அவ்வாறே மூசா (அலை) அவர்களும் அவர்களுடைய உதவியாளரும் (கடலோரமாக) நடந்து சென்று அந்தப் பாறையை அடைந்தனர். மூசா (அலை) அவர்கள் பாதை மாறி (தம் உதவியாளரை) விட்டுச் சென்றுவிட்டார்கள்.

அப்போது (உதவியாளரின் கூடையிலிருந்த) மீன் குதித்துத் தண்ணீரில் விழுந்துவிட்டது. அது சென்ற நீர்த்தடம் இணையாமல் வளையம் போன்று மாறிவிட்டது.

அப்போது அவர்களுடைய உதவியாளர், "நான் இறைத்தூதரிடம் சென்று, இதைப் பற்றி தெரிவிக்க வேண்டாமா?" என்று கூறிக்கொண்டு, (மூசா (அலை) அவர்களிடம்) சென்றார்.

ஆனால், (அதைக் கூறவிடாமல்) அவருக்கு மறதி ஏற்படுத்தப்பட்டது.

அந்த இடத்தைவிட்டு அவர்கள் இருவரும் கடந்து சென்றதும், மூசா (அலை) அவர்கள் "நமது காலை உணவைக் கொண்டுவாரும்! இந்தப் பயணத்தில் நாம் களைப்படைந்து விட்டோம்" என்று கூறினார்கள்.

அந்த இடத்தைக் கடக்கும்வரை அவர்கள் இருவருக்கும் களைப்பு ஏற்படவில்லை. அந்த இடத்தைக் கடந்ததும் உதவியாளர் (மீன் தப்பிச் சென்றுவிட்டதைப் பற்றி) நினைத்தார்.

"கவனித்தீர்களா? நாம் அந்தப் பாறை அருகில் ஒதுங்கியபோது அந்த மீனை நான் மறந்து விட்டேன். அதைப் பற்றிக் கூறவிடாமல் ஷைத்தான் என்னை மறக்கவைத்துவிட்டான். அது கடலில் ஆச்சரியமான முறையில் தனது வழித்தடத்தை அமைத்துச் சென்றது" என்று கூறினார்.

மூசா (அலை) அவர்கள், "அதுதான் நாம் தேடிவந்த இடம்" என்று கூறியபடி, தம் அடிச் சுவடுகளைப் பின்பற்றி வந்த வழியே அவ்விருவரும் திரும்பினர். அப்போது அந்த மீன் குதித்தோடிய இடத்தை உதவியாளர் காண்பித்தார். மூசா (அலை) அவர்கள், "இதுதான் எனக்குச் சொல்லப்பட்ட இடமாகும்" என்று கூறிவிட்டு, அவரைத் தேடிக்கொண்டு சென்றார்கள்.

.

அங்கு ஆடையால் போர்த்தியபடி "பிடரியின் மீது" அல்லது "நடுப் பிடரியின் மீது" மல்லாந்து களிர் (அலை) அவர்கள் படுத்திருந்தார்கள்.

மூசா (அலை) அவர்கள் "உங்களுக்குச் சாந்தி உண்டாகட்டும்" என்று சொன்னார்கள். உடனே களிர் அவர்கள் தமது முகத்திலிருந்து ஆடையை விலக்கி "வ அலைக்குமுஸ் ஸலாம்" என்று பதில் சலாம் சொல்லிவிட்டு, "நீங்கள் யார்?" என்று கேட்டார்கள்.

அதற்கு மூசா (அலை) "நான்தான் மூசா" என்றார்கள்.

களிர் அவர்கள், "எந்த மூசா?" என்று கேட்டார்கள்.

மூசா (அலை) அவர்கள், "பனூ இஸ்ராயீல் (சமுதாய மக்களுக்கு இறைத்தூதராக நியமிக்கப்பெற்ற) மூசா" என்று பதிலளித்தார்கள்.

"எதற்காக வந்துள்ளீர்கள்?" என்று களிர் அவர்கள் கேட்க,

"உங்களுக்குக் கற்றுத் தரப்பட்டுள்ள அறிவிலிருந்து எனக்கும் (சிறிது) நீங்கள் கற்றுத் தருவதற்காக நான் (உங்களிடம்) வந்துள்ளேன்" என்று மூசா (அலை) அவர்கள் கூறினார்கள்.

அதற்கு களிர் (அலை) அவர்கள், "என்னுடன் உங்களால் பொறுமையாக இருக்க இயலாது. உங்களுக்கு ஞானமில்லாத ஒரு விஷயத்தில் உங்களால் எவ்வாறு பொறுமையாக இருக்க முடியும்? எதைச் செய்ய வேண்டுமென எனக்குக் கட்டளையிடப்பட்டுள்ளதோ அதை நான் செய்வதை நீங்கள் கண்டால், உங்களால் பொறுமையாக இருக்க முடியாது"என்று கூறினார்.

அதற்கு மூசா (அலை) அவர்கள், "அல்லாஹ் நாடினால் என்னைப் பொறுமையாளனாக நீங்கள் காண்பீர்கள். உங்களின் எந்தக் கட்டளைக்கும் நான் மாறுசெய்யமாட்டேன்" என்று கூறினார்கள்.

"நீங்கள் என்னைப் பின்தொடர்ந்து வருவதாயிருந்தால், எதைப் பற்றியும் நானாக (விளக்கம்) சொல்லாத வரை அதைப் பற்றி என்னிடம் நீங்கள் (விளக்கம்) கேட்கக் கூடாது" என்று களிர் (அலை) அவர்கள் சொன்னார்கள்.

பிறகு இருவரும் (கடலோரமாக) நடந்து சென்று ஒரு மரக்கலத்தில் ஏறினர். அப்போது களிர் (அலை) அவர்கள் வேண்டுமென்றே அந்த மரக்கலத்தில் ஓட்டை போட்டார்கள். உடனே மூசா (அலை) அவர்கள், "இதில் உள்ளவர்களை மூழ்கடிக்கவா ஓட்டை போடுகிறீர்? நீங்கள் மாபெரும் (அபாயமான) செயலையன்றோ செய்து விட்டீர்கள்?" என்று களிரிடம் கேட்டார்கள்.

அதற்கு களிர் அவர்கள், "உங்களால் என்னுடன் பொறுமையாக இருக்க இயலாது என்று நான் சொல்லவில்லையா?"என்று கேட்டார்கள்.

மூசா (அலை) அவர்கள், "நான் மறந்துவிட்டதை வைத்து என்னைத் தண்டித்துவிடாதீர்கள். என் விஷயத்தில் சிரமத்தைக் கொடுத்துவிடாதீர்கள்" என்று கூறினார்கள்.

தொடர்ந்து இருவரும் நடந்தார்கள்; விளையாடிக்கொண்டிருந்த சிறுவர்களைச் சந்தித்தார்கள். உடனே களிர் அவர்கள் யோசிக்காமல் சென்று, அவர்களில் ஒரு சிறுவனைக் கொன்று விட்டார்கள். அதைக் கண்டு மூசா (அலை) அவர்கள்,பெரிதும் திடுக்குற்றார்கள்; வெறுப்படைந்தார்கள். எந்தப் பாவமும் அறியாத, எந்த உயிரையும் கொல்லாத உயிரைக் கொன்றுவிட்டீர்களே? தகாத காரியத்தைச் செய்துவிட்டீர்களே?" என்று கேட்டார்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (நிகழ்ச்சியைச் சொல்லிக்கொண்டே) இந்த இடத்திற்கு வந்தபோது "நம் மீதும் மூசா அவர்கள் மீதும் அல்லாஹ்வின் கருணை பொழியட்டும். மூசா (அலை) அவர்கள் மட்டும் அவசரப்பட்(டுக் கேள்வி கேட்)டிருக்காவிட்டால் இன்னும் (அரிய) விந்தை(யான பல காட்சி)களைக் கண்டிருப்பார். ஆயினும், (இவ்வாறு கேட்ட) மூசா (அலை) அவர்களை, தம் தோழர் (களிர்) முன்பாக நாணம் கவ்விக்கொண்டது" என்றார்கள்.

மூசா (அலை) அவர்கள் "இதற்குப் பிறகு ஏதேனும் உங்களிடம் நான் கேட்டால் உங்களுடன் என்னைச் சேர்த்துக்கொள்ளாதீர். என்னிடமிருந்து (இரு முறை) சமாதானத்தை ஏற்றுக் கொண்டீர்" என்று கூறினார்கள்.

மூசா (அலை) அவர்கள் பொறுமையாக இருந்திருந்தால், ஆச்சரியமானவற்றைக் கண்டிருப்பார்கள். -(பொதுவாகவே) நபி (ஸல்) அவர்கள் நபிமார்கள் எவரைப் பற்றியாவது பேச்செடுத்தால் "நம்மீதும் என்னுடைய இன்ன சகோதரர் மீதும் அல்லாஹ்வின் கருணை பொழியட்டும்" என்று முதலில் தமக்காகவும் பிறகு அந்த நபிக்காகவும் பிரார்த்திப்பார்கள்- நம் மீதும் அல்லாஹ்வின் கருணை பொழியட்டும்.

தொடர்ந்து அவர்கள் இருவரும் நடந்து, அற்பக் குணமுடைய ஒரு கிராமவாசிகளிடம் வந்தனர். அந்த மக்கள் கூடும் இடங்களுக்குச் சென்று உணவு கேட்டுச் சுற்றிவந்தனர். அவ்விருவருக்கும் விருந்தளிக்க அவர்கள் மறுத்து விட்டனர்.

அப்போது அங்கு விழுந்துவிடலாமா என்று யோசித்துக்கொண்டிருந்த ஒரு சுவரைக் கண்டனர். உடனே களிர் அதைத் தூக்கி நிறுத்தினார்கள். அதைக் கண்ட மூசா (அலை) அவர்கள், "நீர் நினைத்திருந்தால் இதற்குக் கூலியைப் பெற்றிருக்கலாமே?" என்று கூறினார்கள்.

களிர், "இதுவே எனக்கும் உமக்குமிடையே பிரியும் நேரமாகும்" என்று கூறி, மூசாவின் ஆடையைப் பிடித்தார். மேலும்,உம்மால் பொறுமையாக இருக்க முடியாதவற்றுக்கான விளக்கத்தை உமக்குக் கூறுகிறேன். அந்த மரக்கலம் கடலில் தொழில் செய்யும் ஏழைகள் சிலருக்குரியது..." என்று தொடங்கி, வசனத்தின் (18:79) இறுதிவரை சொல்லிக்காட்டினார்கள்.

அந்த மரக்கலத்தை அபகரித்துக்கொள்பவன் வந்து, ஓட்டையான நிலையில் மரக்கலத்தைக் கண்டால் அதை விட்டுவிடுவான். பிறகு அவர்கள் மூங்கில் கழியால் (ஓட்டையை அடைத்து) அதைப் பழுது பார்த்துவிடுவார்கள்.

அந்தச் சிறுவனோ, படைக்கும்போதே "இறைமறுப்பாளன்" என (இறைவனால்) தீர்மானிக்கப்பட்டு படைக்கப்பட்டான். அவனுடைய பெற்றோர் அவன்மீது மிகுந்த பாசம் வைத்திருந்தனர். அவன் பருவ வயதை அடைந்தால் அவ்விருவரையும் தவறான வழியிலும் இறைமறுப்பிலும் தள்ளிவிடுவான். (இறைவன் கூறுகிறான்:)

"அவ்விருவரின் இறைவன் அவனுக்குப் பதிலாக அவனைவிடச் சிறந்த தூய்மையான நெருங்கி உறவாடக்கூடிய குழந்தையை மாற்றாக வழங்குவான்" என நினைத்தோம். (18:81)

அந்தச் சுவர், அந்நகரத்தில் உள்ள இரண்டு அநாதைச் சிறுவர்களுக்கு உரியதாகும். அதற்குக் கீழே அவ்விருவருக்கும் உரிய புதையல் இருந்தது என்று அந்த வசனத்தின் (18:82) இறுதிவரை சொல்லிக்காட்டினார்கள்.

இதை உபை பின் கஅப் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

ஸஹீஹ் முஸ்லிம்

**ஞானம் 4**

மறைவான ஞானம்



மறைவான ஞானம் பற்றி நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், சஹாபாக்கள், வலிமார்கள் மறைவான விஷயங்களை அறிந்து கொள்வார்கள் என குர்ஆன், ஹதீஸ் பின்வருமாறு கூறி உள்ளது.

நவீனத்துவ கொள்கைவாதிகள் " நபிகளார் மற்றும் இறைநேசர்கள் யாருக்குமே மறைவான ஞானம் இல்லை என்பதாக போலியான ஆதாரங்களை காட்டுகிறார்கள் ஆனால் குர்ஆன் , மற்றும் ஹதீஸ் மறைவான ஞானம் உண்டென்கிறது .

(நபியே!) நீர் கூறும்: "என்னிடத்தில் அல்லாஹ்வின் பொக்கிஷங்கள் இருக்கின்றன என்று நான் உங்களிடம் கூறவில்லை. மறைவானவற்றை நான் அறியமாட்டேன்; நிச்சயமாக நான் ஒரு மலக்காக இருக்கின்றேன் என்றும் நான் உங்களிடம் சொல்லவில்லை; எனக்கு (வஹீயாக) அறிவிக்கப்பட்டதைத் தவிர (வேறு எதையும்) நான் பின்பற்றவில்லை." இன்னும் நீர் கூறும்: "குருடனும் பார்வையுடையவனும் சமமாவாரா? நீங்கள் சிந்திக்க வேண்டாமா?" (அல்குர்ஆன் : 6:50)

இறைவன் சகலவற்றையும் அறிந்தவன் இறைவனுக்கு தெரியாத எந்த ஒன்றும் இல்லை அந்த வசனத்தில் மறைவானவற்றை அறிய மாட்டேன் என்றால் அதன் விளக்கம் நானாக அறிந்து கொள்ள முடியாது மாறாக அல்லாஹ் எனக்கு பிரத்தியேகமாக அறிவித்து தந்தே அந்த மறைவான விஷயத்தை அறிந்து கொள்வேன் என்று இந்த வசனத்தில் தெளிவுபடுத்தித்தான்

மற்றொரு இடத்தில் பின்வருமாறு அல்லாஹ் கூறுகிறான்

"(அவன் தான்) மறைவானாவற்றை அறிந்தவன்; எனவே, தான் மறைத்திருப்பவற்றை அவன் எவருக்கும் வெளியாக்கமாட்டான். (அல்குர்ஆன் : 72:26)

"தான் பொருந்திக் கொண்ட தூதருக்குத் தவிர - எனவே அவருக்கு முன்னும், அவருக்குப் பின்னும் பாதுகாவலர்க(ளான மலக்குக)ளை நிச்சயமாக நடத்தாட்டுகிறான்.

(அல்குர்ஆன்: 72:27)

நபி ஸல்லல்லாஹு அலைஹிஸ்ஸலாம் அவர்கள் கூறினார்கள் " மண்ணறையின் வேதனை குரலை நான் என் செவிகளால் கேட்பது போன்று நீங்களும் கேட்பீர்களாயின் இனிமேல் எந்த ஜனாசா நல்லடக்கம் செய்யாதிருந்து விடுவீர்களோ என நான் அஞ்சுகிறேன் . அத்தகைய அச்சம் எனக்கு இல்லையாயின் உங்களுக்கும் புதைகுழியில் இருப்பவர்களின் அவலக் குரலைச் செவியேற்க வைக்குமாறு பிரார்த்தனை செய்திருப்பேன் " என நபி ஸல் அவர்கள் கூறியுள்ளார்கள் சையத் பின் ஸாபித் (ரலி) முஸ்லிம் மிஷ்காத்

ஒருசமயம் நபிஸல் அவர்கள் எங்களுக்கு அறிவுரை பகர்ந்து கொண்டிருக்கும்போது, " சிருஷ்டிகளின் உற்பத்தியிலிருந்து சுவர்க்கவாசிகள் சுவர்க்கத்திலும் நரகவாசிகள் நரகத்திலும் நுழைவது வரையிலான சகல விஷயங்களையும் கூறிக் காட்டினார்கள் . அவற்றை பாடமிட்டவர்கள் பாடமிட்டுக் பெற்றுக்கொண்டனர் ஏனையோர் மறந்துவிட்டனர்"

உமர் (ரலி) புகாரி , மிஷ்காத்

அனஸ் (ரலி ) அவர்கள் அறிவிப்பதாவது: "ஒரு முறை நபி ஸல் அவர்களும் , அபூபக்கர் , உமர் , உஸ்மான் (ரலி ) ஆகியோரும் உஹது மலை மீது ஏறினார்கள் .அது அவர்களுடன் நடுங்கியது . அப்போது நபி (ஸல்) அவர்கள், "உஹதே ..! அசையாமல் இரு ! ஏனெனில் உன் மீது ஓர் இறைத் தூதரும் (நானும் ) , ஒரு சித்தீக்கும் , இரண்டு உயிர் தியாகிகளும் உள்ளனர் என்று கூறினர்கள் .ஷஹீஹ் புகாரி

நபி (ஸல் ) அவர்களின் மறைவிற்குப் பின்னர் இரு ஸஹாபாக்களும் ஷஹீதாக்கப்படுவார்கள் என்று உயிருடன் இருக்கும்போதே அறிவித்துவிட்டார்கள் .

வலிமார்களின் மறைவான ஞானம்

மரணத்தருவாயில் இருந்த அபூபக்கர் சித்திக் (ரலி) அவர்கள் என்னிடம் கூறினார்கள்." ஆயிஷாவே ! நான் விட்டுச் செல்கின்ற வராஃஸத் சொத்துக்களை நீயும் உனது இரு சகோதரர்களும் மற்றும் இரு சகோதரிகளும் இறைவன் குர்ஆனில் கூறியபடி பங்கு பிரித்துக் கொள்ளுங்கள் " .

நான் கேட்டேன் . " எனது அருமைத் தந்தையாரே ! இரு சகோதரிகள் என்கிறீர்களே ! அஸ்மா என்ற ஒரு சகோதரி தானே எனக்கு உள்ளார் இன்னொரு சகோதரி யார் ? ஆயிஷாவே ! எனது மனைவியர் பின்து காரிஜா கர்ப்பமாக உள்ளார் .அவர் ஒரு பெண் குழந்தையை ஈன்றெடுப்பார் . எனவேதான் உனக்கு இரு சகோதரிகள் என்றேன். அவர்கள் கூறியது போன்று பின்து காரிஜா அவர்கள் "உம்மு குல்தூம்" என்ற பெண் குழந்தையை ஈன்றெடுத்தாள் .

ஆயிஷா (ரலி ) அவர்கள் முஅத்தா , பைஹகீ

திண்ணமாக உமர் (ரலி) அவர்கள் ஒரு படையை அனுப்பி வைத்தார்கள். சாரியா (ரலி ) அவர்களை படைக்குத் தளபதியாக நியமித்தார்கள் . மதீனாவில் சொற்பொழிவாற்றிக் கொண்டிருந்த உமர் (ரலி) அவர்கள்

"யா சாரியா அல் ஜபல் " சாரியாவே ! மலையைக் கவனித்து சண்டையிடுங்கள் என சப்தமிட்டார்கள் .

பிறகு படையிலிருந்து ஒரு தூதர் வந்து சொன்னார் . அமீருல் முஃமினீன் அவர்களே ! எங்கள் எதிரிகளோடு நாங்கள் போர் புரிந்தபோது அவர்கள் எங்களை விரட்டியடித்தார்கள் " அப்போது " யா சாரியா அல் ஜபல் " என்ற ஒரு சத்தம் கேட்டது பின்னர் மலையை எங்களுக்கு பின்புறமாக ஆக்கிக் கொண்டு போர் செய்தோம் அல்லாஹ் அவர்களை விரட்டி அடித்தான் இப்னு உமர் (ரலி) பைஹகீ (தலாயிலுந் நுபுவ்வா )

## ஞானம் 5

அறிவிற்கும் ஞானத்திற்குமுள்ள வித்தியாசத்தை நண்பர்

Alaudin Muthalief

எழுதிய பின்னூட்டத்தை பதிவாக முன்னூட்டமாக உங்களுக்கு தருகிறேன் .

அறிவிற்கும் ஞானத்திற்குமுள்ள வித்தியாசத்தை அறிந்து கொள்ள ஓர் உதாரணம்.

ஷைத்தான் அல்லாஹுக்கு இணைவைக்கக்கூடாது என்றத் தெளிவான *அறிவாற்றல் உடையவன்.* ஆனால் அல்லாஹ்வின் கட்டளைக்கு அடிபணிய வேண்டும் என்ற *ஞானம் இல்லாததால்* அவன் அல்லாஹுவின் லஃனத்தைப் பெற்றான்.

அல்லாஹுவைத் தவிர வணக்கத்திற்குரிய வேறு நாயன் இல்லை என்பது குர்ஆன் தெளிவுபடுத்தும் அறிவு. ஆனால் அல்லாஹ் கண்ணியப்படுத்த சொல்பவர்களைக் கண்ணியப்படுத்த வேண்டும் என்பது ஞானம்.

ஸஹாபாக்கள் வெறும் குர்ஆனின் *அறிவை* மட்டும் கொண்டு வெற்றி பெறவில்லை. நபியவர்களிடமிருந்து குர்ஆனின் *ஞானத்தைப்* பெற்றார்கள். அதன் மூலம் வெற்றியடைந்தார்கள்.

அல்லாஹ் தன் திருமறையில் *நபியவர்கள் ஸஹாபாக்களுக்கு குர்ஆனை ஓதிக்காட்டினார்கள், அவர்களின் உள்ளத்தைத் தூய்மைப் படுத்தினார்கள்*. அவர்களுக்கு குர்ஆனின் *ஞானத்தை (ஹிக்மா)* வழங்கினார்கள் என்றுக் குறிப்பிடுகிறான்.

## ஞானம் 6

மெய்ஞானம் மெய் ஞானம் என்பது என்ன?

ஞானம் என்பது என்ன? அதை எவ்வாறு அடைவது? என்று பலருக்கு கேள்விகள் இருக்கலாம்.

ஞானம் அடைவதற்கு பல வகையான முயற்சிகளையும், பயிற்சிகளையும், பலர் மேற்கொண்டு வந்துள்ளனர். இதில் எத்தனை பேர் வெற்றி பெற்றார்கள் என்பதை பார்த்தால், மிக சொற்பமான நபர்கள் மட்டுமே ஞானம் அடைந்துள்ளனர்.

அப்போ , ஞானம் என்பது அடைவதற்கு மிக கடுமையான விஷயமா என்றால் நிச்சயமாக கிடையாது.

ஞானமடைய முயற்சி செய்த பலர் இறுதி வரையில் எதையுமே அடையாமல் மரணித்ததற்கு காரணம், பலர் ஞானம் என்பது ஏதோ ஒரு 'வித்தை' அல்லது ஒரு 'சக்தி' என்று எண்ணுகிறார்கள்.

ஞானம் என்பது அடையக்கூடிய ஒரு விஷயம் அல்ல. ஞானம் என்பது ஒரு 'தெளிவு நிலை ' மட்டுமே என்பது உணராததால், அவர்கள் ஞானத்தை தேடிக்கொண்டே இருந்துவிட்டார்கள் கடைசி வரை .

ஒரு பெண் ரொம்ப நாள் " ஜென் " பற்றி ஒரு குருவிடம் பயின்று கொண்டிருந்தாள். அவளுக்கு ஞானம் கிடைக்கவில்லை .

அந்த பெண் : " ஒரு நாள் ராத்திரி நல்ல நிலா . நான் மூங்கில் போட்டுக் கட்டிய பழைய பக்கெட்டில் தண்ணீர் எடுத்துச் சென்று கொண்டிருந்தேன் .அப்போது மூங்கில் உடைந்து , பக்கெட்டின் அடிப்பாகம் சட்டென்று விழுந்துவிட்டது .

குரு ...." என்ன...? "என்று சைகையால் அவளிடம் கேட்டார் .

" இப்படியும் , அப்படியும் நான் பழைய பக்கெட்டைக் காப்பாற்ற முயற்சித்தேன் . திடீர் என்று அடிப்பாகம் விழுந்து விட்டது.

" ..பாத்திரத்தில் இனி தண்ணீரும் இல்லை . தண்ணீரில் இனி நிலவும் இல்லை " _ என்றாள் அவள் .

குரு சொன்னார் : " அவள் ஞானம் பெற்று விட்டாள். "

உண்மையான ஞானம் என்பது என்னவென்று சொல்லட்டுமா? “அடைவதற்கு இந்த உலகில் எதுவுமே கிடையாது” என்பதை உணரும் தெளிவு நிலைதான் ஞானம் என்று ஞானிகள் கூறுகின்றனர்.

இந்த உலக ஆசைகளுக்கு அடிமையாகி, மன இச்சைகளை, தீர்த்துக் கொள்ள, இந்த வாழ்க்கையை பயன்படுத்தாமல். இந்த வாழ்க்கையில் பற்று வைக்காமல், மிக உயரிய ஞானமாக இருப்பதால்; அந்த ஞானத்தை அடைந்த ஞானிகளை இந்த சமுதாயம் மிகவும் மதித்துப் பாராட்டியது.

மீண்டும் ஞானத்துக்கு வருவோம். ஞானம் என்பது அடையக்கூடிய ஒரு பொருளோ பயிற்சி செய்ய வேண்டிய ஒரு விஷயமோ கிடையாது. ஞானம் அடைவது எவ்வாறு என்று பார்த்தால், ஞானம் அடைவது முதலில் நம்மில் இருந்துதான் தொடங்க வேண்டும்.

இறைவன் நம் உடலை எவ்வாறு படைத்திருக்கிறார், என்பதை முதலில் கவனிக்க வேண்டும். உணர வேண்டும், ஆராய்ச்சி செய்ய வேண்டும். மனம், புத்தி, மற்றும் உயிர் எவ்வாறு செயல்படுகிறது என்பதை கவனிக்க வேண்டும்.

அடுத்ததாக நம்மை சுற்றி இருக்கும் மனிதர்கள், நம் குடும்பத்தார்கள், உறவினர்கள், நண்பர்களை ஆராய வேண்டும். அவர்கள் எவ்வாறு படைக்கப்பட்டிருக்கிறார்கள்? என்னென்ன குணாதிசயங்களுடன் படைக்கப்பட்டிருக்கிறார்கள்? அவர்கள் எப்படி வாழ்கிறார்கள்? அவர்களுக்கும் நமக்கும் என்ன உறவுகள் ஏற்படுகின்றன? எப்படி ஏற்படுகின்றன? என்ன உணர்வுகள் ஏற்படுகின்றன? ஏன் அந்த உணர்வுகள் ஏற்படுகின்றன? இவையெல்லாம் ஏன் ஏற்படுகின்றன என்பதை சிந்திக்க வேண்டும், ஆராய வேண்டும்.

அடுத்ததாக நம்மை சுற்றி இருக்கும் விலங்குகள். அவை எவ்வாறு படைக்கப்பட்டிருக்கின்றன? அவை எவ்வாறு வாழ்கின்றன? எவ்வாறு அன்பு கொள்கின்றன? என்பன போன்ற விஷயங்களை ஆராய வேண்டும்.

அடுத்ததாக இயற்கை. மரம், செடி, கொடி, தாவரங்கள், பூச்செடி போன்றவற்றை கவனிக்க வேண்டும். பூக்கள் எவ்வாறு மலர்கின்றன? இலைகள் எவ்வாறு காய்கின்றன? காய்ந்த இலைகள் எவ்வாறு உதிர்கின்றன? அதன் வேர்கள் எவ்வாறு ஆழமாகச் செல்கின்றன? போன்றவற்றை கவனிக்க வேண்டும், ஆராயவேண்டும்.

அடுத்ததாக வானம், பூமி, நிலா, சூரியன், கோள்கள், நட்சத்திரங்கள், போன்றவை, எவ்வாறு படைக்கப்பட்டு இருக்கின்றன? அவை எவ்வாறு இயங்குகின்றன? என்பதை உன்னிப்பாக கவனிக்க வேண்டும்.

ஞானம் அடைய ஒரே வழி, நம்மை சுற்றி இருக்கும் அத்தனை உயிர்களும், அத்தனை படைப்புகளும், எவ்வாறு படைக்கப்பட்டன, என்பதை உணர்ந்து கொள்வதுதான்! அறிந்து கொள்வதில்லை. மீண்டும் சொல்கிறேன் அறிந்துகொள்வது அனைவராலும் முடியும், உணர்ந்து கொள்ளும் உணர்வுதான் ஞானம்.

இதைத்தான் குர்ஆனில் இறைவன் .

اَفَلَا يَنْظُرُوْنَ اِلَى الْاِ بِلِ كَيْفَ خُلِقَتْ

(நபியே!) ஒட்டகத்தை அவர்கள் கவனிக்க வேண்டாமா? அது எவ்வாறு படைக்கப்பட்டிருக்கிறது என்று-

(அல்குர்ஆன்: 88:17)

وَاِلَى السَّمَآءِ كَيْفَ رُفِعَتْ

மேலும் வானத்தை அது எவ்வாறு உயர்த்தப்பட்டிருக்கிறது? என்றும்,

(அல்குர்ஆன்: 88:18)

وَاِلَى الْجِبَالِ كَيْفَ نُصِبَتْ

இன்னும் மலைகளையும் அவை எப்படி நாட்டப்பட்டிருக்கின்றன? என்றும்,

(அல்குர்ஆன்: 88:19)

وَاِلَى الْاَرْضِ كَيْفَ سُطِحَتْ

இன்னும் பூமி அது எப்படி விரிக்கப்பட்டிருக்கிறது? (என்றும் அவர்கள் கவனிக்க வேண்டாமா?)

(அல்குர்ஆன்: 88:20)

فَذَكِّرْ اِنَّمَاۤ اَنْتَ مُذَكِّرٌ

ஆகவே, (நபியே! இவற்றைக் கொண்டு) நீர் நல்லுபதேசம் செய்வீராக; நிச்சயமாக நீர் நல்லுபதேசம் செய்பவர் தாம்.

(அல்குர்ஆன் : 88:21)

இதுதான் ஞான உபதேசமாகும் ; இதைத்தான் நபிகளார் செய்தார்கள்

அறிந்து கொள்வதற்கும் உணர்ந்து கொள்வதற்கும் என்ன வித்தியாசம் என்றால் உடலுக்கும் உயிருக்கும் உள்ள வித்தியாசம்

ஒரு பூனை எவ்வாறு வாழ்கிறது என்பதை யார் வேண்டுமானாலும் பார்த்து அல்லது படித்து தெரிந்து கொள்ளலாம் . ஆனால் பூனையாக பிறப்பு எடுத்தால் மட்டுமே பூனை என்றால் என்ன என்பதை ஒரு உயிரால் உணர்ந்து கொள்ள முடியும்.

எதையாவது அடைவதல்ல ஞானம் "அடைவதற்கு இந்த உலகில் எதுவுமே இல்லை என்ற தெளிவுதான் ஞானம்". அறிந்து கொள்வது அறிவு , உணர்ந்து கொள்வது ஞானம்.

## ஞானம் 7

ஞானம் அடைதல்

செயலில் செயலின்மையையும், செயலின்மையில் செயலையும் யார் காண்கிறானோ அவனே மனிதருள் ஞானி, அவனே யோகி. அவன் எதைச் செய்தாலும் அதை தவம் போல் செய்து முடிக்கிறான்.

நாம் அடைவதற்கு எதுவும் இல்லை என்று கண்டுபிடித்த நிலையிலயே நமது அனுபவங்கள் எல்லாம் பலம் இழந்து விடுகின்றன,

நமது அனுபவங்கள் எல்லம் பலம் இழந்த நிலையில் , 'நான் ' என்னும் அனுபவிப்பவனும் பலம் இழந்து விடுகின்றான்,

இங்கு தன்னை இழந்த நலம் செயலுக்கு வருகிறது. மெய்பொருள் இயக்கத்தின் ஒரு பகுதியாக நமது இயக்கமும் கலந்து விடுகின்றது .

இப்படிப்பட்ட ஞானியால் பிரபஞ்சத்திலிருந்து எளிதாக எதையும் பெற முடிகிறது. பிறருக்கு யாரிடமும் கேளாமல் அதை கொடுக்கவும் முடிகிறது .இவர்தான் ஞானம் அடைந்தவராகிறார் .

' ரையோகான் ' இன்னும் ஜென் குரு மலையடிவாரத்தில் ஒரு சின்ன குடிசையில் ரொம்ப எளிய வாழ்க்கை வாழ்ந்து வந்தார் .

ஒருநாள் சாயங்காலம் அவர் வெளியே போயிருந்த போது குடிசைக்கு ஒரு திருடன் வந்தான் . திருடத்தான் எதுவுமில்லை ரையோகான் வீடு திரும்பிய போது , திருடனை பார்த்தார் .

"நீ ரொம்ப தூரம் கடந்து இங்கே திருட வந்து இருக்கிறாய் . வெறும் கையோடு நீ போகக்கூடாது . இதோ என் ஆடைகளை என் பரிசாக எடுத்துச் செல் என்றார் .

திருடன் சற்றே ஆச்சரியப்பட்டு அவர் ஆடைகளை எடுத்துக்கொண்டு நழுவிப்போனான்.

குரு உடம்பில் ஒரு ஆடை எதுவும் இல்லாமல் மேலே வானத்தில் முழு நிலவைப் பார்த்துக் கொண்டிருந்தார் . "பாவம் அவன் ! இந்த அழகான நிலவை அவனுக்குக் கொடுத்திருக்கலாமே" என்றார் .

## ஞானம் 8

ஆத்ம ஞானம்



ஒரு மனிதனுடைய பிறப்பும் அவனது இறப்பும் ஆத்மாவைச் சுற்றியே நடக்கின்றது. மனிதனுக்கு ஆத்மாவைப் பற்றிய ஞானம் குறைவாக இருந்தாலும் அதனைப் பற்றி சிந்தித்து அறிந்துக் கொள்ளத் தயங்கும் மூர்க்கனாகவே வாழ்ந்து மரணிக்கிறான் .இதற்கு மிக முக்கிய காரணம் மரண பயம்தான்.
ஆத்மா என்பதற்கு மற்றொரு பெயர் உயிர் (ரூஹ்) எனப்படுவதாகும் .

காற்றை நாம் எவ்வாறு காண இயலாதே அதுபோன்றே ஆத்மா என்கிற உயிரையும் நம் கண்களால் காண இயலாது.
உலகில் உள்ள ஒவ்வொரு படைப்பும் இறைவன் படைத்ததே அப்படிப்பட்ட வகையில் ஆத்மாவும் அவனது படைப்புகளில் அடங்குகிறது.
“பூமிக்குள் மறைந்த பின் புதுப்படைப்பை நாங்கள் பெறுவோமா?” என்று அவர்கள் கேட்கின்றனர். உண்மையில் அவர்கள் தமது இறைவனின் சந்திப்பை மறுக்கின்றனர். (குர்ஆன் 32:10)
“உங்களுக்கென நியமிக்கப்பட்ட மரணத்திற்குரிய வானவர் உங்களைக் கைப்பற்றுவார். பின்னர் உங்கள் இறைவனிடம் திரும்பக் கொண்டு வரப்படுவீர்கள்” என்று கூறுவீராக! (குர்ஆன் 32:11)
ஆத்மாவிற்குள் என்ன உள்ளது?
ஆத்மா இலேசானது!
ஆத்மா அலறக்கூடியது!
ஆத்மா துன்பப்படக்கூடியது!
ஆத்மா இன்பப்படக்கூடியது!
ஆத்மாவுக்கு உடை இல்லை!
ஆத்மாவுக்கு பயம் உள்ளது!
ஆத்மாவுக்கு சுகம் உள்ளது!
ஆத்மாவுக்கு உறுப்புகள் இல்லை!
ஆத்மாவுக்கு நிர்வாணம் இல்லை!
ஆத்மாவுக்கு சோதனைகள் உள்ளது!
ஆத்மா எவ்வாறு தோன்றியது!
முதல் மனிதர் ஆதம் (அலை) அவர்களை அல்லாஹ் களிமண்ணால் படைத்தான் பின்னர் அந்த களிமண்ணால் படைக்கப்பட்ட உடலுக்குள் தாம் விரும்பியவாறு உடல் உறுப்புக்களை படைத்தான்.
பின்னர் மனித சமுதாயத்தில் அவருடைய வழித் தோன்றல்கள் அனைவரையும் ஒருவித நீரில் (விந்துத்துளியில்) படைத்து அவருடைய உடலுக்குள் வைத்தான்.
பின்னர் தன் உயிரை ஊதினான் உயிர் ஊதப்பட்டவுடன் அந்த களிமண்ணால் ஆன மனிதர் உயிருள்ள படைப்பாக மாறினார் அவரே ஆதாம் என்றழைக்கப்படும் முதல் மனிதரும் இறைத்தூதருமாகிய நபி ஆதம் (அலைஹிஸ்ஸலாம்) ஆவார்.
அவன் ஒவ்வொரு பொருளின் படைப்பையும் அழகுபடுத்தினான். மனிதனின் படைப்பைக் களிமண்ணிலிருந்து துவக்கினான் .(குர்ஆன் 32:7)
பிறகு அவனது சந்ததிகளை அற்பமான நீரின் சத்திலிருந்து உருவாக்கினான். (குர்ஆன் 32:8)
பின்னர் அவனைச் சீரமைத்து தனது உயிரை அவனிடம் ஊதினான். உங்களுக்குச் செவியையும், பார்வைகளையும், உள்ளங்களையும் ஏற்படுத்தினான். நீங்கள் குறைவாகவே நன்றி செலுத்துகின்றீர்கள்.
(குர்ஆன் 32:9)

மேற்கண்ட அருள்மறை வசனத்தின் மூலம் நாம் அறியக்கூடிய செய்தி நமது ஆதிபிதா நபி ஆதம் (அலை) அவர்களின் ஆத்மா தனது சரீரத்தில் இணைக்கப்படுவதற்கு முன் அது அல்லாஹ்வின் உயிர் (ரூஹ்) என்ற அந்தஸ்த்தில் இருந்தது அந்த உயிரைத்தான் (ரூஹைத்தான் ) அவன் அவருக்குள் ஊதினான்!
“ஆதமுக்குப் பணியுங்கள்!” என்று வானவர்களுக்கு நாம் கூறியபோது இப்லீஸைத் தவிர அனைவரும் பணிந்தனர். அவன் ஜின் இனத்தைச் சேர்ந்தவனாக இருந்தான். தனது இறைவனின் கட்டளையை மீறினான். என்னையன்றி அவனையும், அவனது சந்ததிகளையும் பொறுப்பாளர்களாக்கிக் கொள்கிறீர்களா? அவர்கள் உங்களுக்கு எதிரிகள். அநீதி இழைத்தோர் (ஏகத்துவத்துக்கு இணைவைப்பைப்) பகரமாக்கியது மிகவும் கெட்டது. (குர்ஆன் 18:50)
மேற்கண்ட ஆத்ம ஞான தேடலில் முதல் மனிதராகிய ஆதாம் எனப்படும் நபி ஆதம் (அலை) அவர்களின் படைப்பிலிருந்து ஆத்மா தோன்றியது என்ற உண்மை தெளிவாக உணர முடிகிறது.
இனி அவருக்குப் பின் உள்ள உயிர்கள் எவ்வாறு தோன்றுகின்றன ?
பிறகு அவனது சந்ததிகளை அற்பமான நீரின் சத்திலிருந்து உருவாக்கினான்.(குர்ஆன் 32:8)
மேற்கண்ட இந்த வசனத்தின் மூலம் நாம் அறியக்கூடிய ஆத்மீக இரகசியம் இதுதான் அற்பமான நீரின் சத்து அதாவது மரபணு ஜீன்கள் என்பதே!
எனவே ஆதம் நபி படைக்கப்பட்ட போதே உலக அழிவு நாள் வரை பிறக்கப்போகும் அனைத்து உயிர்களும் மரபணு ஜீன்கள் முதல் மனிதர் படைக்கப்படும் போதே அல்லாஹ் படைத்துவிட்டான்.
இன்று ஒரு குழந்தை பிறக்கும் போது அதற்குரிய உயிரை வானவர்கள் மூலமாக கர்ப்பக் கோளரைகளில் வந்து சேர்ந்து விடுகிறது ஆதாரம் இதோ!
உங்களில் ஒருவரின் கரு தம் தாயின் வயிற்றில் நாற்பது (40 நாட்கள்) பகல் அல்லது இரவு சேமிக்கப்படுகிறது.
பிறகு அதைப் போன்றே (40 நாட்கள்) அது (அட்டை போன்று கருப்பையின் சுவரைப் பற்றிப் பிடித்துக் தொங்கும்) ஒரு கருக் கட்டியாக மாறுகிறது.
பிறகு அதைப் போன்றே (மேலும் 40 நாட்கள் மெல்லப்பட்ட சக்கை போன்று) ஒரு சதைப் பிண்டமாக மாறுகிறது.

பிறகு அதனிடம் ஒரு வானவர் அனுப்பப்படுகிறார். அந்த வானவரும் நான்கு கட்டளைகள் பிறப்பிக்கப்படுகின்றன.
அவர் (கருவாக இருக்கும்) அந்த மனிதனின் வாழ்வாதாரத்தையும், அவனுடைய வாழ்நாளையும், செயல்பாட்டையும். அவன் (இறுதிக் கட்டத்தில்) துர்பாக்கியசாலியா அல்லது நற்பாக்கியசாலியா என்பதையும் (இறைவனின் கட்டளைப்படி) பதிவு செய்கிறார்.
பிறகு அவனுள் உயிர் ஊதப்படுகிறது. இதனால்தான் உங்களில் ஒருவர் சொர்க்கவாசிகளின் (நற்செயல்களைப் புரிந்துக் கொண்டே செல்வார். இறுதியில் சொர்க்கத்திற்கும் அவருக்குமிடையே ஒரு முழம் (இடைவெளி)தான் இருக்கும் அதற்குள் அவரின் விதி அவரை முந்திக் கொள்ள அவர் நரகவாசிகளின் செயலைச் செய்து அதன் விளைவாக நரகம் புகுந்துவிடுவார்.
(இதைப் போன்றே) உங்களில் ஒருவர் நரகவாசிகளின் செயலைப் புரிந்து கொண்டே செல்வார். இறுதியில் நரகத்திற்கும் அவருக்குமிடையே ஒரு முழம் இடைவெளிதான் இருக்கும் அதற்குள் அவரின் விதி அவரை முந்திக்கொள்ளும். அவர் சொர்க்கத்திற்குரியவர்களின் (நற்) செயல்களைச் செய்து அதன் விளைவாக சொர்க்கம் புகுவார்.
அறிவிப்பவர்: அப்துல்லாஹ் இப்னு மஸ்வுத் (ரலி) நூல்: புகாரி 7454)

ஆத்மா சரீரத்தை இயக்கும் கருவி
ஒரு மனிதனது உடல் அவனது தாயின் கருவரையில் படிப்படியாக பல நிலைகளாக உருவாக்கப்படுகிறது
அந்த உடலுக்குள் வானவர்களான மலக்குமார்களைக் கொண்டு உடலுக்குரிய ஆத்மா ஊதப்படுகிறது பின்னர் படிப்படியாக அந்த உடல் என்னும் சரீரத்தை அந்த ஆத்மா தன் கட்டுப்பாட்டில் கொண்டுவருகிறது நாளடைவில் சரீரம் ஆத்மாவின் முழுகட்டுப்பாட்டுக்குள் வந்துவிடுகிறது. உடல் வளர வளர ஆத்மா நன்மை தீமைகளை சம்பாதிக்க முற்படுகிறது.
இறுதியாக உடல் சோர்வடைந்து முதுமையை அடையும் போதோ அல்லது தற்கொலை, விபத்து போன்ற காரணங்களால் சரீரத்திற்கு பேரிழப்பு ஏற்பட்டு சரீரம் இயங்காத சூழல் ஏற்படும்போதோ ஆத்மா சரீரத்தை விட்டு வெளியேறுகிறது இதன் காரணமாக சரீரத்திற்கு மரணம் ஏற்பட்டுவிடுகிறது ஆனால் ஆத்மா மரணிப்பதில்லை!
இதை நீங்கள் சிந்தித்தது உண்டா?
ஆத்மா – சிந்தனையும் மூளையும்
“முன்னர் எந்தப் பொருளாகவும் இல்லாதிருந்த நிலையில் அவனைப் படைத்தோம்” என்பதை மனிதன் சிந்திக்க வேண்டாமா? (குர்ஆன் 19:67)

ஆத்மாவுக்கென்று எந்த திறமைகளும் கிடையாது அது ஒருவகையான கண்ணிற்கு புலப்படாத நிழல் போன்ற மனித கண்களுக்கு புலப்படாத அல்லாஹ்வுக்கும் அவனது மலக்குமார்களுக்கும் புலப்படக்கூடிய ஒருவகை உருவமே தவிர வேறோன்றுமில்லை.
ஆத்மாவின் ஆசைகளும் உடலின் சோதனையும்
எந்த ஒரு ஆத்மாவும் ஆசைகள் இன்றி வாழ இயலாது வாழ்க்கை வாழ்வதே ஒருவகையான ஆசைதான்
கேள்வி: உலகில் எத்தனை வருடங்கள் வாழ ஆசைப்படுகிறீர்கள் என்றால் குறைந்தது 1000 வருடங்கள் என்றுதான் ஆசைப்படுவீர்கள் இதுதான் வாழ்வின் மிகப் பெரிய ஆசை!
மேற்கண்ட கேள்வி உண்மை என்பதற்கு நாம் முற்படுத்தும் ஆதாரம் இதோ கீழ்கண்ட அருள்மறை வசனம்தான்!
அவரிடம் ஷைத்தான் தீய எண்ணத்தை ஏற்படுத்தினான். ஆதமே! நிலையான (வாழ்வளிக்கும்) மரத்தைப் பற்றியும், அழிவில்லா ஆட்சியைப் பற்றியும் நான் உமக்கு அறிவிக்கட்டுமா? (என்றான்.) (குர்ஆன் 20:120)
"அன்றி, (நபியே! அந்த யூதர்கள்) மற்ற மனிதர்களை விடவும் (குறிப்பாக இணைவைத்து வணங்கும்) முஷ்ரிக்குகளை விடவும் (நீண்ட நாள்) உயிர்வாழ மிகவும் பேராசை உடையவர்களாக இருப்பதை நிச்சயமாக நீங்கள் காண்பீர்கள்! அவர்களில் ஒவ்வொருவனும் "நான் ஆயிரம் ஆண்டுகள் உயிர்வாழ வேண்டுமே?" என்று விரும்புவான். (அவ்வாறு நீண்ட நாள்) யிருடன் இருக்க அவனை விட்டு வைத்தாலும் அது வேதனையிலிருந்து ஒரு சிறிதும் அவனைத் தப்பிக்க வைத்துவிட மாட்டாது. அல்லாஹ் அவர்கள் செய்வதை உற்று நோக்குபவனாக இருக்கின்றான்.
(அல்குர்ஆன்: 2:96)
ஒவ்வொரு ஆத்மாவுக்கும் அதற்கே உரிய சரீரம் என்னும் உடல் கிடைக்கிறது அந்த உடல் அந்த ஆத்மாவின் ஆசைகளுக்காகவே படைக்கப்பட்டுள்ளது!

## ஞானம் 9

(சற்று நெடிய பதிவு இருந்தாலும் நீங்கள் அவசியம் தெரிய வேண்டிய பதிவு)



வஹ்ததுல் வுஜூத் ஞானத்தை பகிரங்கமாக பேசலாமா?
மௌலவி S.L. அப்துர்ரஹ்மான் (கௌஸி) கல்முனை.
வஹ்ததுல் வுஜூத் ஞானம் என்றால் என்ன?
அதற்கு குர்ஆன், ஹதீஸ்களில் ஆதாரங்கள் உள்ளதா?
அதை மக்கள் மத்தியில் பகிரங்கப்படுத்தி பேசலாமா?
வஹ்ததுல் வுஜூத் என்பதற்கு மெய்ப்பொருள் ஒன்று அல்லது உள்ளமை ஒன்று என்று பொருள் கொள்ளலாம். ஆயினும் மெஞ்ஞானிகள் என்ற ஸுபியாக்கள் "வஹ்ததுல் வுஜூத்" என்பதற்கு ஒரு உள்ளமையின் வெளிப்பாடு என்று கூறுவார்கள்.

"வஹ்தத்" என்றால் ஒன்று. வுஜூத் என்றால் உள்ளமை அல்லது மெய்ப்பொருள் என்று பொருள் வரும்.
ஒரு உள்ளமையின் வெளிப்பாடு என்ற இந்த ஞானத்தை போதிக்கவே இஸ்லாமிய ஆன்மீக கல்லூரிகளான தரீக்காக்கள் உருவாகின. ஆயினும் இந்த ஞானம் பேசுகின்றவர்கள் "வஹ்ததுல் வுஜூத்" என்பதற்கு (அல்லாஹ் எல்லாமாயும் உள்ளான்) அல்லாஹ் எல்லா வஸ்த்துக்களாயும் "தஜல்லீ" - வெளியாகியுள்ளான்"
('உள்ளது ஒன்று மற்றது அன்று') என்றும் இக்கொள்கையை "தவ்ஹீத்" இஸ்லாமிய வடித்தெடுக்கப்பட்ட இறைஞானம் என்று கருத்துக் கொள்வார்கள்.
மேலும் "வஹ்தத்" என்றால் ஒன்று. வுஜூத் என்றால் உள்ளமை என்று பொருள். இவ்விரு சொற்களையும் சேர்த்துப் பொருள் கொண்டால் "உள்ளமை ஒன்று" அல்லது "மெய்ப்பொருள் ஒன்று" என்று பொருள் வரும்.
இதன் சுருக்கமான விளக்கம் என்னவெனில், அல்லாஹ் மட்டுமே உள்ளான் சிருஷ்டி இல்லாதது. அது ஒரு மாயை இல்லாதது இருப்பதுபோல் தோற்றும் மாயை அது கானல் நீர் போன்றது. கண்ணுக்குத் தெரியுமேயன்றி எதார்த்தத்தில் இருக்காது.
அல்லாஹ்தான் "வஹ்மு" பேதமை என்ற திரையுள்ளவர்களுக்கு அவனல்லாதவையாக சிருஷ்டி என்ற உடையில் தோற்றுகின்றான்.
இதுவே "வஹ்ததுல் வுஜூத்" என்ற கொள்கையின் மிகச்சுருக்கமான விளக்கம்.
வஹ்ததுல் வுஜூத் ஞானம் பற்றிக் கருத்துக்கள் கூறும் மார்க்க அறிஞர்களில் மூன்று பிரிவினர்கள் காணப்படுகின்றனர்.
1) ஒரு பிரிவினர் இப்படியொரு ஞானம் இஸ்லாத்தில் இல்லை என்றும், இது திருக்குர்ஆனுக்கு முரணானதென்றும், இந்துமத ஞானமென்றும், பாரசீக, கிரேக்க தத்துவம் என்றும் கூறுவர். (அதாவது Pantheism எனும் "இயற்கையே இறைவன் – இறைவனே இயற்கை" எனும் அல்லாஹ்வை இயற்கைக்குள் கட்டுப்படுத்திய-தஷ்பீஹைக் கொண்டு மட்டும் அவனை மட்டுப்படுத்திய கொள்கையே வஹ்ததுல் வுஜூத் என தவறாக விளங்கிக் கொண்டுவிட்டனர்)
2) இன்னொரு பிரிவினர் இந்த ஞானம்தான் இஸ்லாமிய ஞானமென்றும் இதற்குத் திருக்குர்ஆனிலும் "ஹதீஸ்" நபிமொழிகளிலும் ஆதாரம் உண்டு என்றும் இந்த ஞானம்தான் நபிமார்கள், வலிமார்கள் பேசிவந்த ஞானம் என்றும் இதை நம்பியவர்கள் மட்டுமே "முஃமினூன்" விசுவாசிகள் என்றும் கூறுவர். அத்தோடு இந் ஞானம் பகிரங்கமாகப் பேசப்பட வேண்டியதென்றும் கூறுவர்.
3) மற்றொரு பிரிவினர் இந்த ஞானத்தை சரிகண்டு ஏற்றுக்கொள்வதுடன் இது பகிரங்கப்படுத்தக்கூடாத ஞானமென்றும், வயது வந்த இறைஞானத்துறையில் அறிவுள்ளவர்களுக்கு மட்டுமே சொல்லிக்கொடுத்தல் அவசியமென்றும் சொல்வர்.
மேற்கண்ட மூன்றுபிரிவினரில் இரண்டாம் பிரிவினர் பற்றி இங்கு ஒன்றும் எழுதத்தேவையில்லை. ஏனெனில் நானும் அவர்களில் ஒருவர். எனினும் முதலாம் பிரிவினர் பற்றி சுருக்கமாகவும் மூன்றாம் பிரிவினர் பற்றி எனக்கு தெரிந்த சில விடயங்களை விரிவாகவும் எழுதுகிறேன்.

முதலாவது பிரிவினர் பற்றி சுருக்கமாகச் சொல்வதாயின் அவர்கள் அல் குர்ஆனையும் ஹதீஸ்களையும், இமாம்கள், இறைஞானிகள், வலிமார்கள் கூறியுள்ள தத்துவங்களை சரியாக புரிந்து கொள்ளவில்லை என்றே சொல்லவேண்டும். அவர்கள் உண்மையைக் கண்டறிந்து கொள்ளும் என்ற ஒரே நோக்கில் கௌரவம், வெட்கம், வீண் பிடிவாதம், வீண் குதர்க்கம் போன்றவற்றை

துறந்து இந்த ஞானத்துறையில் நல்ல அறிவும் அனுபவமும் உள்ள அறிஞர்களை, ஞானிகளை அணுகினால் அவர்களுக்கு உண்மை தெளிவாகும். எண்ணத்திற்கேற்ற நற்பயன் கிடைக்கும்.
அவர்களுக்கு உண்மையைக் கண்டறியும் நோக்கம் இருந்தால் மட்டும் போதாது. இந்த ஞானத்துறையில் விளக்க உள்ளவர்களிடம் சென்று இந்த ஞானத்துறையில் கையாளப்படுகின்ற, தாத், ஸிபாத், அஸ்மாஉ, அப்ஆலு, தஜல்லீ, மஹ்வு, ஸஹ்வு, ளாஹிர், மழ்ஹர், பனாஉ, பகாஉ, கஷ்பு, இல்ஹாம், முறாக்கபஹ், முஷாஹதஹ், ஹுலூல், இத்திஹாத், தன்ஸீஹ், தஷ்பீஹ், நுசூல், ஸுஊத் போன்ற ஞானக்கலைச் சொற்களுக்கான பொருள் விளக்கத்தை அவர்களிடம் கற்றுக்கொள்ளுதல் பர்ளு ஐன் அவசியம் ஆகும்.
தவிர, வெளிநாட்டுப் பல்கலைக்கழகங்களில் படித்து கலாநிதி பட்டம் பெற்றதினாலோ அறபுமொழியில் நிபுணத்துவம் பெற்றதினாலோ மேற்கண்ட ஞானக்கலைச் சொற்களின் விளக்கத்தை தெரிந்து கொள்ளவும் முடியாது .இத்துறையில் எழுதப்பட்ட நூல்களைப் பார்த்து விளங்கி கொள்ளவும் முடியாது.

“வஹ்ததுல் வுஜூத்” ஞானத்தை மறுப்பவர்கள் மேற்கண்டவாறு செயல்படாமல் (அல்லாஹ் எல்லாமாயும் உள்ளான்) அல்லாஹ் எல்லா வஸ்த்துக்களாயும் “தஜல்லீ” வெளியாகியுள்ளான்” (‘உள்ளது ஒன்று மற்றது அன்று’) என்றால் நாயும் பன்றியும் அல்லாஹ்தானா?
மலமும் சலமும் அவன்தானா?
நவூது பில்லாஹ்! இது என்ன விந்தையாக இருக்கிறது? என வியந்து வியர்த்து விடுகிறார்கள். அவர்கள் இவ்வாறே சொல்லிக் கொண்டிருந்தால் அவர்களின் கண் ஒருபோதும் திறக்காது. இந்நிலையிலேயே அவர்கள் மரணித்துவிட்டால்.....? (மஆதல்லாஹ்) நபிகள் நாயகம் (ﷺ) அவர்கள் நபிபட்டம் வெளியாக்கப்பட்டு வஹ்ததுல் வுஜூத் ஞானம் தருகின்ற தத்துவத்தை முதன்முதலாக ‘லா இலாஹ இல்லல்லாஹ்’ என்ற திருவசனம் மூலம் மக்கத்து முஷ்ரிகீன் - இணைவைத்தோரிடம் சொன்னபோது அவர்களும் இவர்கள்போல் வியந்து வியர்த்து...

اَجَعَلَ الْاٰلِهَةَ اِلٰهًا وَّاحِدًا ۖ اِنَّ هٰذَا لَشَىْءٌ عُجَابٌ
“இவர் (எல்லாத்) தெய்வங்களையும் ஒரே நாயனாக ஆக்கிவிட்டாரா? நிச்சயமாக இது ஓர் ஆச்சரியமான விஷயமே! (என்றும் கூறினர்). (அல் குர்ஆன் 38:5)
ஆகவே வஹ்ததுல் வுஜூத் ஞானத்தை மறுப்பவர்கள் அந்த ஞானம் தெரிந்தவர்களுடன் நேரில் தொடர்பு கொண்டு அவர்கள் மூலம் இந்த ஞானத்தின் அடிப்படை அம்சங்களை அறிந்தபின் ஞான நூற்களைப் பார்த்து தெளிவு பெற்றுக் கொள்ளுதலும் அந்த ஞானத்தின் வாடையை கூட நுகராமல் இருந்து கொண்டு அதை எதிர்ப்பதை நிறுத்திக் கொள்ளுதலும் அவசியமாகும்.
மூன்றாவது பிரிவினர்
“வஹ்ததுல் வுஜூத்” ஞானத்தை ஏற்றுக்கொண்டு அதை வெளிப்படுத்துவது கூடாது என்று கூறும் மூன்றாம் பிரிவினர் பற்றி ஆராய்ந்து பார்ப்போம். இவர்கள் தமது வாதத்துக்கு முன் வைக்கும் ஆதாரங்களில் மிக பிரதானமானவை இரண்டு
1) كَلِّمِ النَّاسَ عَلَ قَدْرِ عُقُوْلِهِم
நபிகள் நாயகம் (ﷺ) அவர்கள் கூறினார்கள்: மனிதர்களுடன் அவர்களின் புத்திக்கு ஏற்றவாறு பேசவும். நூல்: தைலமீ 592
“வஹ்ததுல் வுஜூத்” ஞானத்தைப் பகிரங்கமாகப் பேசக்கூடாது என்பதற்கு மேற்கண்ட ஹதீஸை ஆதாரமாகக் கூறுவது பொருத்தமற்றதாகும் ஏனெனில் மேற்கண்ட ஹதீஸ் வஹ்ததுல் வுஜூத் என்ற ஞானம் மட்டுமன்றி மனிதர்களுடன் எதை பேசுவதாயிருந்தாலும் அவர்களின் புத்திக்கேற்றவாறு பேசவேண்டும் என்ற கருத்தை தருகிறதேயன்றி “வஹ்ததுல் வுஜூத்” ஞானத்தைப் பேசுவதை மட்டும் அது குறிக்கவில்லை.
மேற்கண்ட இந்த ஞானமாயினும், மார்க்கத்தோடு சம்பந்தப்பட்ட வேறெந்த விடயமாயினும் அல்லது உலக விவகாரத்தோடு சம்பந்தப்பட்ட விடயமாயினும் பேசுகின்றவன் கேட்போரின் புத்திக்கேற்றவாறு பேச வேண்டும் என்ற கருத்தை மேற்கண்ட ஹதீஸ் தருகிறதேயன்றி பொதுவாக பேசக்கூடாது என்ற கருத்தை அது தரவில்லை. மனிதர்களின் புத்திக்கேற்றவாறு பேசவும் என்ற ஹதீஸ், கேட்போருக்கு விளங்கும் வகையில் பேசவும் என்ற கருத்தை மட்டும் தருகிறதேயன்றி மறுப்பவர்கள் சொல்வதுபோல் பேசவே கூடாது என்ற கருத்தை தரவில்லை.

“வஹ்ததுல் வுஜூத்” ஞானமாயினும் அல்லது வேறெந்த விடயமாயினும் படித்தவனிடம் அதைச் சொல்லும் போது அவன் விளங்கிக் கொள்ளும் பாணியிலும் படிப்பறிவில்லாத ஓர் “அவாம்” - சாமானியனிடம் அதைச்சொல்லும் போது அவன் விளங்கிக் கொள்ளும் பாணியிலும், ஒரு சிறுவனிடம் சொல்லும் போது அவன் விளங்கிக் கொள்ளும் பாணியிலும் சொல்லுதல் வேண்டும். தவிர பொதுவாகச் சொல்லவே கூடாது என்பது கருத்தல்ல. இந்த விபரத்தை தெரிந்து கொள்ளாதவர்களே வஹ்த்துல் வுஜூத் ஞானத்தை பகிரங்கமாகப் பேசுதல் கூடாது என்கின்றனர்.
ஒரு சபையில் படித்தவர்களும் படிப்பறிவில்லாத சாமனிய மக்களும் சிறுவர்களும் இருந்தால் அவர்கள் மத்தியில் இந்த ஞானத்தை பகிரங்கமாகவும் பொதுவாகவும் சொல்வது பிழையாகி விடாது. படித்தவர்கள் புரிந்து கொள்வார்கள், படிக்காதவர்களும், சிறுவர்களும் தமக்கு புரியாத விடயத்தை அறிவுள்ளவர்களிடம் கேட்டு அறிந்துகொள்வார்கள். அவ்வாறு அறிந்து கொள்ளுதல் அவர்களின் கடமையுமாகும்.

فَسْـــَٔلُوْٓا اَهْلَ الذِّكْرِ اِنْ كُنْتُمْ لَا تَعْلَمُوْنَۙ

நீங்கள் அறியாதவர்களாயிருந்தால் அறிவுள்ளவர்களிடம் கேளுங்கள். (அல்குர்ஆன் 16: 43)
ومن منع الجهال علما أظاعه
ومن صنح المستم جبين مقد ظلم

மடையர்களுக்கு அறிவைக் கொடுத்தவன் அதை வீணாக்கி விட்டான். உரியவர்களுக்கு அதைக் கொடுக்காதவன் அநீதி செய்துவிட்டான். ஒரு கவிஞர் இவ்வாறு பாடியுள்ளார்.
எனவே, வஹ்ததுல் வுஜூத் ஞானத்தை பகிரங்கமாகப் பேசக்கூடாது என்று சொல்வோர் தமது வாதத்துக்கு மேற்கண்ட ஹதீஸை ஆதாரமாகக் கூறுவது பொருத்தமற்றது என்பது தெளிவாகி விட்டது.

2) اِفْشَاءُ سِرِّ الرُّبُوْبِيَّةِ كُفْرٌ

இறை இரகசியத்தை பகிரங்கப்படுத்துவது குப்ர் ஆகும். இவ்வாறு ஞான மகான்களில் பலர் சொல்லியுள்ளார்கள்.
ஞான மகான்கள் இவ்வாறு சொல்லியிருப்பது உண்மைதான். ஆயினும் அவர்களின் இக்கூற்றை ஆதாரமாகக் கொண்டு வஹ்ததுல் வுஜூத் ஞானத்தைப் பகிரங்கப்படுத்துவது கூடாது என்று வாதிடுவது அறியாமையாகும். இவ்வாறு வாதிடுவோர் "வஹ்ததுல் வுஜூத்" இறை இரகசியமா? அல்லது இறை இரகசியம் என்பது வேறு விஷயமா? என்பதை அறிந்து கொள்ளுதல் வேண்டும். அவர்கள் இஞ்ஞானத்தை இறை இரகசியம் என்று கருதியதினால் தான் அவர்களுக்கு இந்த குழப்பம் ஏற்பட்டுள்ளது. இது இறை இரகசியம் என்று அவர்கள் தாமாகவே கற்பனை செய்து கொண்டார்களேயன்றி ஞான மகான்களில் எவரும் இது இறை ரகசியமென்று சொன்னதாக எந்த ஓர் ஆதாரமுமில்லை. இருந்தால் அவர்கள் எமக்கு அறிவிக்கட்டும்.
இறை இரகசியம் என்பது வேறு, வஹ்ததுல் வுஜூத் என்பது வேறு. இந்த ஞானம் பகிரங்கப் படுத்தக்கூடாத இறை ரகசியமாயிருந்தால் ஷரீஅத், தரீக்கத், ஹகீகத், மஃரிபத் என்று சொல்லப்படுகின்ற நாற்பெரும் கடல்களிலும் மூழ்கிய அஷ்ஷெய்ஹுல் அக்பர் முஹ்யித்தீன் இப்னு அறபீ றழியல்லாஹு அன்ஹு, அப்துல் கரீம் ஜீலி றழியல்லாஹு அன்ஹு போன்ற ஞானமேதைகள் இந்த ஞானத்தைப் பகிரங்கப்படுத்திருக்க மாட்டார்கள்.

இந்த ஞானத்துக்கென்றே தனியானதும் விரிவானதுமான நூற்களை எழுதித்தந்திருக்க மாட்டார்கள். அஷ்ஷெய்ஹுல் அக்பர் முஹ்யித்தீன் இப்னு அறபீ றழியல்லாஹு அன்ஹு அவர்கள் திரு மக்காஹ் நகரில் இருந்து கொண்டு அல் புதுஹாத்துல் மக்கிய்யஹ் என்ற அதியுயர் ஞானக்களஞ்சியத்தை எழுதினார்கள்.
அது இறைவனால் ஏற்றுக்கொள்ளப்பட்டால் மட்டுமே அதை வெளியிடுவதென முடிவுசெய்து கொண்டு கோர்த்துக்கட்டப்படாமல் தனித்தனித் தாள்களாயிருந்த கையெழுத்துப் பிரதியை கஃபாஹ்வின் முகட்டில் வைத்து விட்டு "இறைவா! மூன்று மாதங்கள் வரை இதை இங்கு விட்டு வைப்பேன். மழையினால் ஒரு தாளாவது நனைந்து விடுமாயின் அல்லது காற்றினால் ஒரு தாளாவது பறந்து விடுமாயின் இந்நூலை நீ ஏற்றுக்கொள்ளவில்லை என்று முடிவுசெய்து இதை நான் எரித்துவிடுவேன்.

மழை, காற்றினால் ஒரு பாதிப்பும் ஏற்படவில்லையாயின் இதை நீ ஏற்றுக்கொண்டாய் என்று நான் முடிவுசெய்து இதை நான் வெளியிடுவேன்" என்று பிரார்த்தனை செய்தார்கள். தொடராக மூன்று மாதங்கள் அந்நூல் அங்கேயே இருந்தது. அந்த மூன்று மாதங்களும் தொடராக கடும் மழைபெய்தும் கடும் காற்று வீசியும் கூட அந்நூலுக்கு ஒரு பாதிப்பும் ஏற்படாத்தை கண்ட இப்னு அறபீ ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அதை மக்கள் மத்தியில் வெளியிட்டார்கள்.
வஹ்ததுல் வுஜூத் ஞானம் பகிரங்கமாகச் சொல்லக்கூடாத ஞானமாயும், இறை ரகசியமாகாவும் இருந்தால் இப்படியொரு அற்புதம் அந்நூலுக்கு நடந்திருக்க முடியாதல்லவா? அந்த நூல் வஹ்ததுல் வுஜூத் ஞானத்தை பகிரங்கமாகவும் மிகத்தெளிவாகவும் கூறும் நூல் என்பது குறிப்பிடத்தக்கது.

இந்த ஞானம் பகிரங்கமாகவும் மலையுச்சியில் நின்றும் பல்லாயிரம் ஒலிபெருக்கிகள் மூலமும் இன்டர்னெட் மூலமும் சொல்லப்படவேண்டிய ஞானமேயன்றி இது இறை இரகசியமல்ல.
இறை இரகசியமென்று ஒன்றிருப்பது உண்மைதான். அது இல்ஹாம், கஷ்பு என்ற அறிவு வழங்கப்பட்டவர்களுக்கு மட்டுமே தெரியும். அவர்கள் அதை பேச்சின் மூலமோ எழுத்தின் மூலமோ வெளிப்படுத்த மாட்டார்கள். அது அவர்களோடு மட்டும் இருந்து விடும். அவர்கள் அந்த ரகசியத்தை தம்முள் அடக்கி வைத்திருக்க முடியாத நிலை ஏற்பட்டால், தமது தாகத்தைத் தீர்த்துக்கொள்வதற்காக அதை தமக்கே சொல்லிக் கொள்வார்கள்.

ஹழ்ரத் அலீ றழியல்லாஹு அன்ஹு அவர்கள் நபிகள் நாயகம் (ﷺ) அவர்களிடமிருந்து பெற்ற இறை ரகசியத்தை தம்முள் அடக்கி வைத்திருக்க முடியாத நிலை ஏற்பட்ட போது ஒரு கிணற்றடிக்குச் சென்று அதனுள் எட்டிப்பார்த்து அங்கே நீரில் தெரிந்த தன் நிழலுக்கு அதைச்சொல்லி நிம்மதி பெற்றதாக அவர்களின் வரலாறு ஒன்று கூறுகிறது. இது இரகசியம். அது அலி (ரலியல்லாஹு அன்ஹு) அவர்களோடு நின்று விட்டது.
ஒரு நாள் நபி ﷺ அவர்கள் தம் தோழர்களுடன் மதீனா நகர் வழியாக நடந்துசென்று கொண்டிருந்தார்கள். வழியில் ஒரு குடிசை இருந்தது. அதன் வாசலில் நின்றுகொண்டிருந்த ஒரு மாது, அல்லாஹ்வின் திருத்தூதரே! என்குடிசைக்குள் வந்து தங்களின் திருப்பாதம் பதித்து செல்லுங்கள் என்று வேண்டினாள்.
நபி ﷺ அவர்கள் தோழர்களுடன் குடிசையுள் நுழைந்தார்கள். அங்கு அவளின் குழந்தைகள் உறங்கிக் கொண்டிருந்தன. அடுப்பில் நெருப்பு எரிந்து கொண்டிருந்தது.

அந்த பெண்மணி, நபிகள் நாயகம் (ﷺ) அவர்களிடம், அல்லாஹ்வின் தூதரே! நான் எனது குழந்தைகள் மேல் வைத்துள்ள அன்பிலும், அல்லாஹ் தனது அடியார்மேல் வைத்துள்ள அன்பிலும் எதுமேலானது? என்று கேட்டாள்.
அதற்கு நபிகள் நாயகம் (ﷺ) அவர்கள் இறைவன் தனது அடியார் மேல் வைத்துள்ள அன்புதான் மேலானது என்றார்கள். அப்போது அந்த மாது அல்லாஹ்வின் தூதரே! நான் எனது குழந்தைகளை இதோ எரிந்துகொண்டிருக்கும் நெருப்பில் போட்டு வேதனை செய்வேனா? என்று கேட்டாள்.

அதற்கு நபிகள் நாயகம் (ﷺ) அவர்கள் "இல்லை" என்றார்கள். அவ்வாறாயின் அல்லாஹ் தனது அடியாரை நெருப்பில் போட்டு வேதனை செய்வானா? என்று கேட்டாள். நபிகள் நாயகம் (ﷺ) அவர்கள் அழுதார்களேயன்றி பதில் ஒன்றும் சொல்லவில்லை.
நபிகள் நாயகம் (ﷺ) அவர்கள் விடைசொல்லாமல் அழுததிலிருந்து அந்தக் கேள்விக்கான விடை இரகசியமென்பது தெளிவாகிறது.
எனவே, இறை இரகசியம் என்று ஒன்றிருப்பது உண்மை என்றும் அது இல்ஹாம், கஷ்பு போன்ற இறைஞானம் வழங்கப்பட்டவர்களுக்கு மட்டுமே தெரிந்த விடயம் என்றும், "வஹ்ததுல் வுஜூத்" ஞானம் எந்த வகையிலும் இறை ரகசியத்தை சேராது என்றும் நம்புதல் அவசியமாகும்.
ஆகவே இந்த ஞானத்தை சரிகண்டு ஏற்றுக்கொண்டு அதைப் பகிரங்கப்படுத்துவது பிழை என்போர் தமது வாதத்துக்கு ஆதாரமாகக் கூறிவரும் மேற்கண்ட இரண்டு ஆதாரங்களும் பொருத்தமற்றவை என்பது தெளிவாகிவிட்டது.

வஹ்ததுல் வுஜூத் ஞானம் பகிரங்கமாகப் பேசப்பட வேண்டும் என்பதற்கான ஆதாரங்கள்
هُوَ الَّذِي أَرْسَلَ رَسُولَهُ بِالْهُدَىٰ وَدِينِ الْحَقِّ لِيُظْهِرَهُ عَلَى الدِّينِ كُلِّهِ وَلَوْ كَرِهَ الْمُشْرِكُونَ
அவனே தன் தூதரை நேர் வழியுடனும், சத்திய மார்க்கத்துடனும் அனுப்பி வைத்தான் - முஷ்ரிக்குகள் (இணை வைப்பவர்கள், இம்மார்க்கத்தை) வெறுத்த போதிலும், எல்லா மார்க்கங்களையும் இது மிகைக்குமாறு செய்யவே (அவ்வாறு தன் தூதரை அனுப்பினான்) (அல் குர்ஆன் 9:33)
மேற்கண்ட திருவசனத்தில் வந்துள்ள "தீனுல் ஹக்", "லியுழ்ஹிரஹூ" என்பன கருத்திற்கொண்டு ஆராய்ந்து பார்த்தால். சத்திய மார்க்கத்தை வெளிப்படுத்துவதுவதற்காக.
"இழ்ஹார்" என்ற சொல்லுக்கு வெளிப்படுத்துதல், பகிரங்கப்படுத்துதல் என்று பொருள் வரும். இச்சொல்லின் எதிர்ச்சொல் "இஸ்றார்" இரகசியமாக்குதல் என்று வரும்.
மேற்கண்ட வசனத்திற்கு மார்க்கத்தை "இழ்ஹார்" வெளிப்படையாக - பகிரங்கமாகச் சொல்வதற்காகவே அல்லாஹ் நபிகள் நாயகம் (ﷺ) அவர்களை அனுப்பி வைத்தான் என்று கூறப்பட்டிருப்பதால் தீன்-மார்க்கம் பகிரங்கமாக சொல்லப்பட வேண்டும் என்பது தெளிவாகிவிட்டது.
♦ وَأَنزَلْنَا إِلَيْكَ الذِّكْرَ لِتُبَيِّنَ لِلنَّاسِ مَا نُزِّلَ إِلَيْهِمْ
மனிதர்களுக்கு இறக்கி வைக்கப்பட்டதை அவர்களுக்கு விபரிப்பதற்காக உங்களுக்கு திருக்குர்ஆனை இறக்கினோம். (ஸூறத்துன் நஹ்ல் : 44)
இத்திருவசனத்திலுள்ள "லிதபய்யின" – நீங்கள் விபரிப்பதற்காக என்பது கவனத்திற்கொண்டு ஆராய்ந்து பார்த்தால். "தப்யீன்" என்ற சொல்லுக்கு விபரித்தல், விபரமாக கூறுதல் என்று பொருள் வரும். மேற்கண்ட திருவசனத்தின் படி திருக்குர் ஆனில் கூறப்பட்ட விடயங்கள் மக்களுக்கு ஜாடையாகவே அன்றி விபரமாக சொல்லப்பட வேண்டுமென்பது தெளிவாகி விட்டது.
♦ நபிகள் நாயகம் (ﷺ) அவர்கள் "லா இலாஹ இல்லல்லாஹ்" என்ற திருக்கலிமாவை - திருவசனத்தை படித்தவர்கள், பாமரர்கள், ஆண்கள், பெண்கள், சிறுவர்கள், பெரியவர்கள் என அனைவர் மத்தியிலும் பகிரங்கமாகச் சொன்னதேயாகும். ஒருநாள் நபிகள் நாயகம் (ﷺ) அவர்கள் அபூகுபைஸ் மலைமேல் ஏறி நின்று மக்காஹ்வில் வாழ்ந்த மக்களின் குடும்ப பெயர்களைக் கொண்டு அவர்களை அழைத்தார்கள்.
அவர்களின் அழைப்பைச் செவியேற்ற கற்றவர்கள், பாமரர்கள், ஆண்கள்,பெண்கள் அனைவரும் மலையடிக்குச் சென்றார்கள். நபிகள் நாயகம் (ﷺ) அவர்கள் அந்த அனைவரிடமும் "லா இலாஹ இல்லல்லாஹ்" என்ற திருக்கலிமாவை பகிரங்கமாகமாக பறை சாற்றினார்கள். அங்கு சென்றவர்களில் ஹழ்ரத் அபூபக்கர் சித்தீக் றழியல்லாஹு அன்ஹு போன்றவர்கள் நபிகள் (ﷺ) அவர்களை உண்மைப்படுத்தி "லா இலாஹ இல்லல்லாஹ்" என்று சொல்லி ஈமான் - விசுவாசம் கொண்டார்கள். அபூஜஹ்ல், அபூலஹ்ப் போன்ற இன்னும் சிலர், "உமக்கு நாசமுண்டாகட்டும்! இதற்காகவா எங்களை அழைத்தீர்!" என்று கேட்டார்கள்.
அவர்களில் வேறு சிலர், "முஹம்மத் எல்லா தெய்வங்களையும் ஒரு தெய்வமாக ஆக்கிவிட்டாரா! இது விந்தையான விஷயம்" என்று சொன்னார்கள். (அல்குர்ஆன் 38 :05) நபிகள் நாயகம் (ﷺ) அவர்கள் "லா இலாஹ இல்லல்லாஹ்" என்ற வசனம் மூலம் அந்த மக்கள் மத்தியில் முன்வைத்த கருத்து என்ன?
வணக்கத்துக்குரிய நாயன் (தெய்வம்) அல்லாஹ்வை தவிர வேறு யாருமில்லை என்ற கருத்தா? அல்லாஹ் அல்லாத எந்த நாயனும் (தெய்வமும்) இல்லை என்ற கருத்தா? இவ்விரு கருத்துக்களிலும் எந்தக் கருத்துச் சரியானது என்று பதில் தரவேண்டும்.
ஆகவே திர்குர்ஆன் ஆதாரங்கள் மூலமும் நபிகள் நாயகம் (ﷺ) அவர்களின் "ஹதீஸ்கள்" மூலமும் நபிகள் நாயகம் (ﷺ) அவர்கள் மேற்கண்ட திருவசனத்தை (கலிமாவை) சொன்ன போது மக்காஹ்வில் வாழ்ந்துகொண்டிருந்த மக்கள் கொண்டிருந்த இறை நம்பிக்கையின் மூலமும் "லா இலாஹ இல்லல்லாஹ்" என்ற திருவசனத்துக்கான "தர்கீப்" அல்லது "இஃறாப்" மூலமும் மேற்கண்ட திருவசனத்தின் கருத்து "அல்லாஹ் அல்லாத எந்த தெய்வமும் இல்லை" அல்லது (அல்லாஹ் எல்லாமாயும் உள்ளான்)" அல்லாஹ் எல்லா வஸ்த்துக்களாயும் "தஜல்லீ" வெளியாகியுள்ளான்" ('உள்ளது ஒன்று மற்றது அன்று') என்பதே இறுதியானதும், தீர்க்கமானதுமான முடிவாகும்.

இவ்வதாதாரங்களை அடிப்படையாக்க் கொண்டே வஹ்ததுல் வுஜூத் பேசுகின்றவர்கள் (அல்லாஹ் எல்லாமாயும் உள்ளான்) அல்லாஹ் எல்லா வஸ்த்துக்களாயும் "தஜல்லீ" வெளியாகியுள்ளான்" ('உள்ளது ஒன்று மற்றது அன்று') என்ற வஹ்ததுல் வுஜூத் ஞானக் கருத்தைத் தருகின்றனர். "லா இலாஹ இல்லல்லாஹ்" என்ற திருவசனத்தை நபிகள் நாயகம் (ﷺ) அவர்கள் பகிரங்கமாக மலையுச்சியில் நின்று கூறியது இந்த ஞானம் பகிரங்கமாகப் பகிரங்கமாகப் பேசப்படவேண்டிய ஞானம் என்பதற்கு வலுவான ஆதாரமாகும்.

எனவே, வஹ்ததுல் வுஜூத் ஞானத்தை சரியென்று ஏற்றுக்கொண்டு அதை வெளிப்படையாக்கப் பேசுவதுதான் கூடாதென்பவர்கள் மேலே நாம் எழுதிய ஆதாரங்களைச் சிந்தனைகெடுத்து செயல்படுவது அவசியமாகும்.

வஹ்ததுல் வுஜூத் ஞானம் உண்டு என்பதற்கு குர்ஆனிலிருந்து ஆதாரங்கள்

வஹ்ததுல் வுஜூத் ஞானம் திருக்

குர் ஆனில் அதிக இடங்களில் கூறப்பட்டுள்ளது இங்கு குறிப்பிடத்தக்கது.

வஹ்ததுல் வுஜூத் வேறு, தவ்ஹீத் வேறு என்று நினைப்பவர்கள்தாம் திருக்குர்ஆனில் தவ்ஹீத் கூறப்பட்டிருக்கிறது என ஏற்றுக்கொண்டு வஹ்ததுல் வுஜூத் கூறப்படவில்லை என்று வாதிடுகிறார்கள். அது அவர்களின் அறியாமையேய தவிர வேறில்லை. இவ்விரண்டும் சொல்லளவில் வேறுபட்டதேயன்றி இரண்டும் தருகின்ற சாரம் – கருத்து ஒன்றுதான் என்பதை அவர்கள் தெரிந்து கொண்டார்களாயின் குழப்பத்துக்கு வழியே இருக்காது.

அதோடு தவ்ஹீத் எவ்வாறு பகிரங்கமாகச் சொல்லப்படுவது அவசியமோ அவ்வாறே வஹ்ததுல் வுஜூத் பகிரங்கமாகச் சொல்லப்பட வேண்டும் என்பதையும் ஏற்றுக்கொள்வார்கள். வஹ்த்துல் வுஜூத் ஞானத்தை சரிகண்டு ஏற்றுக் கொண்டதுடன் அதை பகிரங்கமாகப் பேசுவது கூடாது என்று சொல்வோர் தமது வாதத்துக்கு ஆதாரமாகக் கூறியுள்ள இரண்டு ஆதாரங்களையும் அவற்றுக்கான விளக்கங்களையும், வஹ்ததுல் வுஜூத் ஞானம் பகிரங்கமாகப் பேசப்படவேண்டிய ஞானம் என்பதற்கு திருக்குர் ஆனிலிருந்து ஆதாரங்களை தருகின்றேன்.

♦ இன்னும் வானங்களிலும் பூமியிலும் அவனே (ஏக நாயகனாகிய) அல்லாஹ் இருக்கிறான். (அல் குர்ஆன் 6:3)

♦ (யாவற்றுக்கும்) முந்தியவனும் அவனே, பிந்தியவனும் அவனே, பகிரங்கமானவனும் அவனே, அந்தரங்கமானவனும் அவனே, மேலும், அவன் அனைத்துப் பொருள்களையும் நன்கறிந்தவன். (அல் குர்ஆன் 57:3)

♦ குகையில் இருவரில் ஒருவராக இருந்தபோது, (நம் தூதர்) தம் தோழரிடம், "கவலைப்படாதீர்கள், நிச்சயமாக அல்லாஹ் நம்முடன் இருக்கின்றான்" என்று கூறினார். (அல் குர்ஆன் 9:40)

♦ (நபியே!) என் அடியார்கள் என்னைப்பற்றி உம்மிடம் கேட்டால், "நிச்சயமாக நான் சமீபமாகவே இருக்கிறேன் என்று கூறுவீராக. (அல் குர்ஆன் : 2:186)

♦ நீங்கள் எங்கிருந்து போதிலும் அவன் உங்களுடனே இருக்கிறான் - அன்றியும் அல்லாஹ் நீங்கள் செய்வதை உற்று நோக்கியவனாக இருக்கிறான். (அல்குர்ஆன் : 57:4)

♦ (முஃமின்களே! போரில்) நீங்கள் தளர்ச்சியடைந்து, தைரியமிழந்து சமாதானத்தைக் கோராதீர்கள், (ஏனென்றால்) நீங்கள் தாம் மேலோங்குபவர்கள், அல்லாஹ் உங்களுடனேயே இருக்கின்றான் - மேலும், அவன் உங்கள் (நற்) செய்கைகளை உங்களுக்கு (ஒரு போதும்) குறைத்து விடமாட்டான். (அல்குர்ஆன் : 47:35)

♦ கிழக்கும், மேற்கும் அல்லாஹ்வுக்கே (சொந்தம்). நீங்கள் எந்தப் பக்கம் திரும்பினாலும் அங்கே அல்லாஹ்வின் முகம் இருக்கிறது. நிச்சயமாக அல்லாஹ் விசாலமானவன், எல்லாம் அறிந்தவன். (அல்குர்ஆன் : 2:115)

♦ மேலும் நிச்சயமாக நாம் மனிதனைப் படைத்தோம், அவன் மனம் அவனிடம் என்ன பேசுகிறது என்பதையும் நாம் அறிவோம், அன்றியும், (அவன்) பிடரி(யிலுள்ள உயிர்) நரம்பை விட நாம் அவனுக்கு சமீபமாகவே இருக்கின்றோம். (அல் குர்ஆன் 50:16)

♦ (பத்ரு போரில்) எதிரிகளை வெட்டியவர்கள் நீங்கள் அல்ல - அல்லாஹ் தான் அவர்களை வெட்டினான், (பகைவர்கள் மீது மண்ணை) நீர் எறிந்தபோது அதனை நீர் எறியவில்லை, அல்லாஹ்தான் எறிந்தான், முஃமின்களை அழகான முறையில் சோதிப்பதற்காகவே அல்லாஹ் இவ்வாறு செய்தான், நிச்சயமாக அல்லாஹ் (எல்லாவற்றையும்) செவி ஏற்பவனாகவும், (எல்லாம்) அறிபவனாகவும் இருக்கின்றான்.

(அல் குர்ஆன் 8:17)

♦ அன்றியும், எவர்கள் காஃபிராக இருக்கிறார்களோ, அவர்களுடைய செயல்கள் பாலைவனத்தில் (தோற்றமளிக்கும்) கானல் நீரைப் போலாகும், தாகித்தவன் அதைத் தண்ணீரென்றே எண்ணுகிறான் - (எது வரையெனில்) அதற்கு (அருகில்) அவன் வரும் பொழுது ஒரு பொருளையும் (அங்கே) காணமாட்டானே (அது வரை), ஆனால், அங்கு அவன் அல்லாஹ் (அவனுக்கு விதித்திருக்கும் முடி)வை(யே) காண்கின்றான், (அதன் படி அல்லாஹ்) அவன் கணக்கைத் தீர்க்கிறான், மேலும், அல்லாஹ் கணக்குத் தீர்ப்பதில் துரிதமானவன். (அல் குர்ஆன் 24:39)

எனவே (அல்லாஹ் எல்லாமாயும் உள்ளான்) "அல்லாஹ் எல்லா வஸ்த்துக்களாயும் "தஜல்லீ" வெளியாகியுள்ளான்" என்ற கொள்கை "தவ்ஹீத்" ஏகத்துவம் என்றும், "வஹ்ததுல் வுஜூத்" மெய்ப் பொருள் ஒன்று என்றும் சொல்லப்படுகின்றது.

இக்கொள்கை எந்த வகையிலும் திருக்குர்ஆனுக்கோ, திரு நபியின் நிறைமொழிகளுக்கோ ஒரு மண்ணளவும் முரணானதல்ல. அதேபோல் ஸுன்னத் வல் ஜமாஅத் கொள்கையை பின்பற்றுகின்ற அல் இமாம் அபுல் ஹஸன் அல் அஷ்அரீ றஹிமஹுல்லாஹ் அவர்களின் "அகீதா" கொள்கைக்கும் முரணானதல்ல.

இக்கொள்கையே (روح الإسلام) இஸ்லாமின் உயிர் என்று அறிஞர்களால் சொல்லப்படுகிறது. இக்கொள்கையே றஸூல்மார்கள், நபீமார்கள், வலீமார்கள், மஷாயிகுமார்கள் சொன்ன கொள்கை. இக்கொள்கையே சரியான கொள்கை என்பதற்கு திருக்குர்ஆனிலும், ஹதீஸ்களிலும் இறை ஞானிகளான ஆரிபீன்களின் நூல்களிலும் பரந்து விரிந்த ஆதாரங்கள் உள்ளன. அல்லாஹ் எங்கே உள்ளான் என்று சரியான கொள்கை என்று நான் இப்பிரசுரத்தில் குறிப்பிடும் "வஹ்ததுல் வுஜூத்" ஞானம் (அல்லாஹ் எல்லாமாயும் உள்ளான்) அல்லாஹ் எல்லா வஸ்த்துக்களாயும் "தஜல்லீ" வெளியாகியுள்ளான்" என்ற கொள்கை "தவ்ஹீத்" இஸ்லாமிய, வடித்தெடுக்கப்பட்ட இறைஞானம்தான் என்பதை புரிந்து கொள்ள எல்லாம் வல்ல கிருபையாளன் நல்லுதவி புரிவானாக! ஆமீன் ஆமீன் யாரப்பல் ஆலமீன்

## ஞானம் 10

ஞானமும் , விஞ்ஞானமும் .
ஞானத்திற்கும் விஞ்ஞானத்திற்கும் அப்படி என்ன தொடர்பு ?
(மிக உரத்த சிந்தனை)



விஞ்ஞானம் வெளியுலகத்தில் நடப்பதை ஆராய்ந்து சொல்கிறது .
ஞானம் என்பது மனத்தில் உணர்வது , புலன்களால் உண்மையை அறிவது . இவை இரண்டும் வேறு வேறா ? இல்லை .
விஞ்ஞானத்தில் அத்தனை உண்மைகளுக்கும் கடைசியில் நம் புலன் உணர்வுகள்தாம் இருக்கின்றன என்பதை யோசித்துப் பார்த்தால் புரியும் .
என்னதான் வினோதமாக கணக்குப் போட்டு அடிப்படை சித்தாந்தங்களை அமைத்தாலும் இறுதியில் நம் உணர்வின் ஏதாவது ஒரு பகுதியில் தான் அதை நம்மால் அறிந்து கொள்ள முடிகிறது .நாம் அறிவு அத்தனையுமே ஏதாவது ஒரு புலன் உணர்வைச் சார்ந்திருக்கிறது. அத்தனையும் நம் மனதில் ஏற்படும் பிம்பங்களே அல்லது மாறுதல்களே அல்லது பாதிப்பே .
உண்மை என்பது என்ன ?
நம் புலன்களுக்கு தோன்றுவதுதான் உண்மையா ?
நாம் எல்லோரும் உண்மையின் வடிவங்கள் அல்லது அங்கங்கள் . நான் , நீங்கள், இந்த செல்போன் , இந்த மேஜை , அதோ தூரத்து நட்சத்திரம் எல்லாமே உண்மையின் அங்கங்கள் .
ஆனால் உண்மையான உண்மை என்பது என்ன ? அது இருக்கிறதா , அதை நாம் அறிய முடியுமா ? இந்தக் கேள்வி எதற்காக எழுகிறது ? நாம் 'உண்மை' என்று சொல்வது எல்லாம் நாம் நினைவின் வார்த்தைகளே . எண்ணங்கள் உணர்வுகள் எல்லாமே நம்மை சார்ந்தவை .இவையெல்லாமே குறியீடுகள் (Symbols) இந்தக் குறியீடுகள்தாம் உண்மை என்று நாம் நினைக்க கூடாது .
விஞ்ஞானமே ஒரு குறியீடுதான் ஒரு பாஷைதான். இவைகளுக்கெல்லாம் அப்பால் இருக்கிறது ஓர் உண்மை . குறியீடுகளில் சிறைப்படாத அந்த உண்மையை தேடச் சொல்கிறது நம் நாட்டு வேதங்கள் .

ரமண மகரிஷி அடிக்கடி கூறுவதுபோல், இவ்வுலகில் எதற்காவது நிரூபணம் தேவை இல்லை என்றால் அது "நான் இருக்கின்றேனா?" என்ற ஒரே ஒரு கேள்விக்குத்தான். அதை யாரும் கேட்பதில்லை என்பது வேறு விஷயம்.
எவருக்கும் எந்த விஷயத்திலும் சந்தேகம் என்றால் உடனே அதற்கு நிரூபணம் கேட்பார்கள். தான் இருப்பதை யாரும் சந்தேகப்படாததால் அந்தக் கேள்வியும் எழுவதில்லை. கேள்வி எழாதது மட்டும் அல்ல, அப்படி யாராவது கேட்டாலும் அவர்களை

‘இது என்ன பைத்தியக்காரன் போல கேட்கிறானே?” என்று கூட சந்தேகமாகப் பார்ப்பார்கள். அதாவது 'தான் ' இருப்பதில் யாருக்கும் எள்ளளவு கூட சந்தேகம் கிடையாது !
இதை மாதிரி விஞ்ஞானத் தத்துவத்திலும் சிந்திக்கப்பட்டது. 17 ம் நூற்றாண்டில் டெஸ்கார்ட்டெஸ்ஸின் கோட்பாடுகள் மேற்கத்திய சிந்தனைகளைத் தீவிரமாகப் பாதித்தன.
" நான் சிந்திக்கிறேன், அதனால் நான் இருக்கிறேன் " _ என்கிற அவருடைய பிரசித்தமான வாக்கியம் மேற்கத்திய மனிதன் தன்னை புறப் பொருளிலிருந்து முழுவதும் பிரித்துக்கொண்டு சிந்திக்க உதவியது .
" தான் " என்பது தன் உடலில் இருந்து வேறுபட்ட சிந்திக்கும் பகுதி. இந்த சிந்திக்கும் பகுதிக்கு வெளிப்பட்டவை அத்தனையும் இயங்கும் விதம் அவர்களுக்கு தெளிவாகத் தெரிந்துவிட்டது . நியூட்டனின் விதிகள் மூலம் மிகச் சரியான கணிதக் கோட்பாடுகள் மூலம் நம்மைச் சுற்றியுள்ள இயக்கங்கள் அத்தனையும் தெளிவாக புரிந்து கொள்ள முடிந்தது

ஆனாலும் “நான் யார்?” என்ற உளவியல் ரீதியான கேள்வி நல்ல மன நிலையில் இருப்பவர்கள் எவர் கேட்டாலும், அது அவர் தம் வாழ்வின் அர்த்தங்களையும், நோக்கங்களையும் புரிந்து கொள்ள உதவும். அப்படி ஒருவன் கேள்வி கேட்பது அவனது மனமும் புத்தியும் இயங்கும் சாதாரண மன நிலையில் தான். அதற்கு பதிலும் அந்த நிலையிலேயே வருவதைவிட, அதனினும் சூட்சமமான அனுபவ நிலையில் வருவது விசேஷமானதுதான். அது ஏன் என்பதைத்தான் இக்கட்டுரையில் பார்த்துக் கொண்டிருக்கிறோம் .
“நான் யார்?” என்ற கேள்வியைக் கேட்கும் முன், நாம் என்ன நிலையில் இருந்துகொண்டு கேட்கிறோம் என்று பார்க்க வேண்டும். நம் தினசரி அனுபவங்களை மட்டும் கருத்தில் கொண்டு வேறு எந்த விதமான யூகங்களும் இல்லாது நம் நிலையை அலசிப் பார்ப்போம்.
நாம் உலகில் உள்ள எதையுமே நமது ஐம்புலன்களின் உதவியால்தான் அறிகிறோம். அதன்பின் நமது ஆறாவது அறிவையும் கொண்டு அவைகளை அலசிப் பார்த்து சில பல எண்ணங்களையும் உணர்வுகளையும் வளர்த்துக் கொள்கிறோம்; அவைகளை மனதளவிலும் நிறுத்திக் கொள்கிறோம். இப்படியாகச் செய்து உலகில் உள்ள அனைத்து விஷயங்களிலும் ஈடுபடுகிறோம்.
இந்தக் கட்டுரையைப் படிக்கும் போதும், அவை அனைத்தும் நடந்து கொண்டிருக்கிறதல்லவா? அப்படி இல்லையென்றால் மனது ஒரு பக்கமும் பார்வை ஒரு பக்கமும் இருக்கிறது என்று தானே அர்த்தம்? அப்படி மனது குவிந்திருந்தாலும் சிதறியிருந்தாலும் அது நம் விழிப்பு நிலையில் தான் நடந்து கொண்டிருக்கிறது.

இது நமக்கு உணர்த்துவது என்ன? நாம் விழித்திருக்கும்போதும் நினைவிருக்கும்போதும், உலகத்தைக் காண்கிறோம்; உலகத்தில் உள்ளவைகளுடன் விதவிதமான அனுபவங்கள் அடைகிறோம். அப்படியாக நமது வாழ்க்கை அனுபவங்கள் ஒரு தொடர் நிகழ்ச்சியாக வந்து கொண்டிருக்கின்றன.
இதில் கூர்ந்து கவனிக்க வேண்டியது என்னவென்றால், என் உலகத்தில் நீங்கள் உண்டு, மற்றவைகள் உண்டு, ஆனால் நான் இல்லை. நான் பார்ப்பவனாக, அனுபவிப்பவனாக மட்டும் தான் இருக்கிறேன்.
அதே போல் உங்கள் உலகத்தில் நான் உண்டு, மற்றவைகள் உண்டு, ஆனால் நீங்கள் இல்லை. அதாவது ஒவ்வொருவரும் தம் தம் உலகத்தை சிருஷ்டித்துக் கொள்கின்றனர். காணும் தன்னை விட்டு உலகம் என்று தனியாக எதுவும் கிடையாது. தனது எண்ணங்களுக்கும், ஆசை அபிலாஷைகளுக்கும் ஏற்ப ஒவ்வொருவரும் உலகத்தில் நடந்து கொள்கின்றனர். பொதுவாக மற்றவர்களும் அப்படியே நடக்க வேண்டும் என்றும் எதிர்பார்க்கின்றனர். முடியாத போது மற்றவர்களிடம் அனுசரித்துப் போகின்றனர். ஆக இவை அனைத்தும் சம்பந்தப்பட்டவர்கள் விழித்துக் கொண்டிருக்கும் போது நடக்கின்றது என்பதைத் தவிர இதில் வேறு ஏதும் ஒற்றுமை கிடையாது. நம் விழிப்பு நிலை தவிர வேறு நிலைகளும் நம் அனுபவத்தில் உண்டு. அவை என்ன? விழிப்பு நிலையிலேயே நம்மால் எப்போதும் இருக்க முடிகிறது என்றால், நம் அனுபவங்கள் அனைத்தையும் உண்மை என்று கொள்ளலாம். அப்படி இல்லையே! நம்மால் ஒரு நாளோ இரண்டு நாளோ விழித்திருக்க முடியும் என்று வைத்துக்கொள்வோம். அப்புறம் கண்ணயர்ந்து தூங்கப் போய்விடுவோம் அல்லவா? அப்போது நமக்கு எங்கே உலகம் தெரிகிறது? ஏன் நம்மைப் பற்றியே அப்போது நமக்கு உணர்வு இல்லையே. தூக்க நிலையிலிருந்து விழித்தபின் தன்னை உணர்கிறோம், அப்புறம்தானே உலகத்தையும் உணர்கிறோம்? அதாவது தானும் உலகும் ஒன்றாகத் தான் உதிக்கிறது;

விழித்திருக்கும்போது தான் உலகம் தெரிகிறது, ஆனாலும் அந்த நிலையில் நம்மால் தொடர்ந்து இருக்க முடியாது. உலகமே தெரியாத ஆழ்தூக்க நிலைக்கு நாம் தினம் தினம் சென்றால் தான் உலகம் பற்றிய அனுபவங்களைப் பெறமுடிகிறது. அப்படி இருந்தும் நமது விழிப்பு நிலை அனுபவங்களுக்கே நாம் மிகுந்த முக்கியம் கொடுக்கிறோம். இதிலிருந்து புரிந்துகொள்ள வேண்டிய முக்கியமான அம்சம் என்னவென்றால், நாம் ஒவ்வொருவரும் நமது தனித்தனி உலகத்தை சிருஷ்டித்துக் கொள்கிறோம் ; அது மட்டுமன்றி அவ்வுலகம் எப்போதும் உள்ளதாகவும் நினைத்துக் கொள்கிறோம். உண்மை என்றால் அது எப்போதும் உள்ளதாக இருக்க வேண்டும் அல்லவா? 'இப்போது உள்ளது, அப்புறம் இல்லாதது’ என்ற தன்மை கொண்ட உலகத்தையும் அதன் அனுபவங்களையும் 'உண்மை ' என்று எப்படிக் கொள்ள முடியும்?
சிலர் ‘இல்லையே நீ தூங்கும்போதும் உலகம் இருக்கிறதே’ என்று சொல்வார்கள். உண்மையில் அது தூங்கும் எனக்கு இல்லை, வேறு யார் விழித்துக்கொண்டு இருக்கிறார்களோ அவர்களுக்குத் தான் இருக்கிறது. ஆனாலும் தூக்கத்தில் நாம் இல்லாது போய்விட்டோமா என்று கேட்டால், இல்லை என்றுதான் சொல்லுவோம்.
ஏனென்றால் நமக்கு தூக்கத்திலும் ஒரு அனுபவம் இருப்பதால் தான், விழித்ததும் ‘நன்கு தூங்கினோம்’ என்று சொல்கிறோம். அப்போது நம்மை நாம் உணர்வதில்லை, உலகம் இருப்பதையும் அறிவதில்லை, ஆனாலும் ஆழ்ந்த தூக்கத்தில் அனுபவம் உண்டு என்றால் நாம் இருக்கிறோம் என்றுதானே அர்த்தம்? அது மட்டுமல்ல; அப்படி நன்கு தூங்கிய பின் நமக்கு ஒரு ஆனந்த மயமான

உணர்ச்சி வருகிறதல்லவா? அந்த உணர்ச்சியை நாம் விழித்திருக்கும் போதும் அனுபவிக்க முடியும் என்றால் நன்றாக இருக்கும் அல்லவா? இதை நாம் இவ்விரண்டு நிலைகளுக்கும் இடைப்பட்ட கனவு நிலை (ஸ்வப்னம்) மூலம் மேலும் அறிந்து கொள்ளலாம். உணர்வுகளுக்கும் புலன்களுக்கும் வார்த்தைகளுக்கும் நியாயங்களும் இலக்கணங்களும் விழிப்புக்கும் சிந்தனைக்கும் தோற்றங்களும் அப்பால் பரிபூரண ஞானம் ஒன்று கண்ணாமூச்சி காட்டுகிறது.
அதை அடைய முயற்சிக்கும் பாதையில் விஞ்ஞானமும் வேதாந்தமும் ஒன்று சேர்ந்து கொண்டுவிட்டன

## ஞானம் 11

படைப்பெல்லாம் முரண் .

நம்மாழ்வார். பாண்டி நாட்டில் எங்களுடைய நெல்லை மாவட்டத்தில் ஆழ்வார்திருநகரிக்காரர் ஒன்பதாம் நூற்றாண்டவர் . இயற்பெயர் மாறன் மற்றொரு பெயர் சடகோபன் . 35 ஆண்டுகள் வாழ்ந்தவர் திருவிருத்தம் , திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி என்ற நான்கு பிரபந்தங்கள் செய்தவர் . இவர் முரண்பாட்டில் கடவுளை ரொம்ப அழகாக வர்ணிக்கிறார் .
"ஆணல்லன் பெண் அல்லன் ; அல்லாது அலியுமல்லன் காணலும் ஆகான் .
உளன் அல்லன் ; இல்லையல்லன் பேணுங்கால் பேணும் உருவும் ஆகும்.
அல்லனுமாம் .கோனை பெரிதுடைத்து எம் பொம்மானைக் கூறுதலே !
" என் கடவுளை கூறுவது ரொம்ப கடினமானது " என்று பாடலை முடிக்கிறார் .
பத்து பாடல்களிலும் நம்மாழ்வார் கடவுளை எதிர்மறை தொடர்களாலேயே வர்ணிக்கிறார் .

நரகம் Xசொர்க்கம் .பகை Xநட்பு .
விஷம் Xஅமுதம்.இன்பம் X துன்பம்
கலக்கம் Xதேற்றம். தழல் X நிழல்
நகரம் X நாடு ஞானம் X மூடம்
சுடர் x இருள்.நிலம் X விசும்பு
புண்ணியம் X பாவம் .புணர்ச்சி X பிரிவு
எண்ணம் X மறப்பு . உண்மை X இன்மை கருமை X வெளுமை .மெய் X பொய்
இளமை X முதுமை.புதுமை X பழமை

என்று சரம்சரமாக முரணான எதிர்மறைகளால் விவரிக்கிறார் .
எளிய நெசவாளி கவிஞர் கபீரும் கடவுளை எதிர்மறையாகவே பாடி இருக்கிறார்.
" ஓ ! எப்படி என்னால் அந்த ரகசிய வார்த்தையை உணர்த்த முடியும் ?அவன் இப்படி இருக்கிறான் .இப்படி இல்லை என்று எப்படி என்னால் சொல்ல முடியும் ? அவன் என்னுள் இருக்கிறான் என்றால் பிரபஞ்சமே வெட்கப்படும். அவன் எனக்கு வெளியே இருக்கிறான் என்றால், அது முழுப் பொய் .
அவன் அவன் உள் உலகத்தையும் வெளி உலகத்தையும் பிரிக்க முடியாமல் ஒன்றாக்குகிறான் . உணர்வதும் உணரப்படாததும் அவன் இரு பாதங்கள். அவன் எங்கும் விரவியும் இல்லை. மறைந்தும் இல்லை. அவன் வெளிப்பட்டதும் இல்லை வெளிபடாமலும் இல்லை . அவனை எது என்று சொல்ல வார்த்தைகள் இல்லை .
திருக்குர்ஆனில் அல்லாஹ்வும் ஜோடி ஜோடி என்று முரணான விஷயங்களையெல்லாம் ஜோடியாக்கி இருப்பது நம்மை வியக்க வைக்கிறது .

மேகத்தில் இருந்து மழையையும் பொழியச் செய்கிறான்." (மேலும் என் இறைவன் கூறுகிறான்:) "நாம் இறக்கி வைக்கும் (ஒரே வித) மழை நீரைக் கொண்டு (குணத்திலும், ரசனையிலும்) பற்பல விதமான புற்பூண்டுகளை (ஆண், பெண்) ஜோடி ஜோடிகளாக நாம் வெளிப் படுத்துகின்றோம். (குர்ஆன் : 20:53)

அல்லாஹ்தான் உங்களை (ஆரம்பத்தில்) மண்ணால் உற்பத்தி செய்தான். பின்னர் ஒரு துளி இந்திரியத்திலிருந்து, பின்னர் (ஆண், பெண் ஜோடி) ஜோடியாக உங்களை ஆக்கினான். (குர்ஆன் : 35:11)

இதில் 'ஜோடி ஜோடியாக ' என்று வரக்கூடியதெல்லாம் முரண் குறித்தே குறிப்பிடுகிறான் என்பதை கவனிக்கவும்
குர்ஆனில் நேர் வார்த்தைகளையும் அதற்குரிய எதிர் வார்த்தைகளையும் எண்ணிக்கையிலும் அதனை ஜோடியாக்கி சமமாகப் பயன்படுத்தி இருப்பதன் மூலமும் குர்ஆன் பாதுகாக்கப்படுகிறது .
இது மனிதசக்திக்கு அப்பாற்பட்ட தேர்ந்தெடுத்த விஷயம் என்பதை சான்றோர்கள் வியக்குகிறார்கள் .
வானவர்கள் 68 X சைத்தான் 68
இப்லீஸ் 11 X இறை உதவி 11
செயல்(ஃபஅல) 108 X கூலி(அஜ்ரு) 108
துன்பம் (ஷித்தத்)102 X
ஸப்ரு(பொறுமை) 102
ரஹ்மான் (கருணை) 57 X ரஹீம்(அன்பு)57 x 2=114
கருணையை விட இறைவனின் அன்பு இரு மடங்கு
தண்டனை (ஜஸா) 117 X மன்னிப்பு(மஃபிரத்)234
தண்டனையைக் காட்டிலும் இறை மன்னிப்பு இரு மடங்கு
பயன்படுபாடு (நஃபா) 50 Xகுழப்பம்(ஃபசாத்)50
வெப்பம் (ஹர்)14 X தட்பம்(பர்த்)14
துன்யா115 X மறுமை 115
களிமண்(தீன்)12 X இந்திரியம்12
தீயவர்கள்(புஜ்ஜார்) 3 X நல்லோர் (அப்ரார்)6 (3x 2)தீயவர்களைக் காட்டிலும் நல்லவர்கள் இரு மடங்கு
வாழ்வு(ஹயாத்)145 X
இறப்பு (மௌத்) 145
நன்மை(ஸாலிஹாத்) 167 X தீமை(ஸய்யீஅத்)167
துன்பம் (முஸீபத்)75 X நன்றி(ஷுக்ரு) 75
பகிரங்கம்(ஜஹ்ரு) 16 X இரகசியம்(ஸிர்ரு) 32
பகிரங்கத்தைக் காட்டிலும் இரகசியம் இரு மடங்கு
..இப்படி எத்தனையோ வார்த்தைகளின் எதிர்மறை முரண் கொண்டும் குர்ஆன் பாதுகாக்கப் படுகின்றது
اَ لْحَمْدُ لِلّٰهِ الَّذِىْۤ اَنْزَلَ عَلٰى عَبْدِهِ الْكِتٰبَ وَلَمْ يَجْعَلْ لَّهٗ عِوَجًا ۜ

புகழ் அனைத்தும் அல்லாஹ்வுக்குரியதே! அவன்தான் தன் அடியார் (நபி முஹம்மது) மீது இவ்வேதத்தை இறக்கி வைத்தான். அதில் எத்தகைய (குறைபாட்டையும்) கோணலையும் அவன் வைக்கவில்லை. (குர்ஆன்: 18:1)
இறைவனை எதிர்மறைத் தொடராக புகழ்ந்து கவிதை பாடிய நம்மாழ்வாரும் , கபீரும் நம் நினைவில் வந்து போகிறார்கள் .

# ஞானம் 12

மெஞ்ஞானம் பற்றி விஞ்ஞானம்



விஞ்ஞானம் திடப்பொருள் , சக்தி இரண்டையும் முழுமையாக ஒருமையாக பார்க்கிறது . இறுதியாக அறுதியாக அது ' பிரபஞ்சத்தின் உண்மை ' என்று சொல்வது கீழ்வரும் இரண்டு விஷயங்களைதான்

1) பௌதிக இயற்பியல் விதிகள் . ஆதாரமாக இந்த விதிகளின்படித்தான் பிரபஞ்சத்தின் அத்தனை பொருட்களும் சக்தி வடிவங்களும் இயங்குகின்றன . இந்த விதிகளை அவர்கள் சில கணித சமன்பாடுகளாக விவரிக்கிறார்கள்.
2) இந்த விதிகள் செயல்படத் தொடங்கியபோது இருந்த ஆரம்ப நிலை, இனிஷியல் கண்டிஷன் என்கிறார்கள். அதை வர்ணித்துவிட்டால் அதற்கு அடுத்த நிலையை விதிகளை பயன்படுத்தி சொல்ல முடியும் . அதற்கு அடுத்த நிலை ,அதற்கு அடுத்த நிலை இப்படி இன்றைய தினம் வரை எல்லாவற்றையும் விளக்கி விட முடியும் .
சில அறிஞர்கள் விஞ்ஞானம் விதிகளை மட்டும் ஆராய்ந்தால் போதும் . ஆரம்ப நிலை என்பது வேதாந்தம் தத்துவ சாஸ்திரம் மதம் போன்றவற்றின் கவலைகளாக இருக்கட்டும் என்கிறார்கள் .
ஸ்டீபன் ஹாக்கிங் போன்றவர்கள் இந்த ஆரம்ப நிலையையும் அறிவியல் விளக்க முற்பட வேண்டும் என்கின்றனர்.
சென்ற நூற்றாண்டுகளில் இயற்கை நிகழ்வுகள் எல்லாம் கடவுள் செயல் அதனால் அவைகளை அறிவியல் விளக்க தேவையில்லை என்று எதிர்ப்பு தெரிவித்தார்கள் .
எதிர்ப்பை தாண்டி தைரியமாக இயற்கையின் உண்மையை அறிய விஞ்ஞானிகள் உள்ளே புகுந்தார்கள் .
பிரபஞ்சம் ஏன் இப்படி இருக்கிறது என்பதற்கு "நேற்று இப்படி இருந்தது அதனால் இன்று இப்படி இருக்கிறது " என்கிற எளிதான பதிலை அவர்கள் நிராகரித்தார்கள்.
இந்த ஆரம்ப நிலையையும் விதைகளையும் உன்னிப்பாக நோக்கும்போது அவைகளில் ஒரு தேர்ந்தெடுப்பும், ஒழுங்கும் இருப்பதை குறிப்பிடுகிறார்கள்.
எத்தனையோ விதத்தில் பிரபஞ்சம் ஆரம்பிக்கலாம் எத்தனையோ விதத்தில் இதன் விதிகளும் அமையலாம் ஏனிந்த ஆரம்பமும் இந்த விதிகளும் ?
இவை எப்படி தீர்மானிக்கப்பட்டன?
ஏன் இவை மட்டும் தேர்ந்தெடுக்கப்பட்டன ? என்பதற்கு பதில் கிடைத்தால் கடவுள் கிடைத்து விடுவார் என்று எதிர்பார்க்கலாம் என்கிறது விஞ்ஞானம்
" அல்லாஹ்தான் உங்களுக்கு பூமியை (நீங்கள்) வசித்திருக்கும் இடமாகவும், வானத்தை ஒரு முகடாகவும் அமைத்து, உங்களைச் சித்தரித்து, அழகான கோலத்திலும் உங்களை அமைத்தான். அன்றி, அவனே உங்களுக்கு மேலான உணவுகளையும் அளிக்கின்றான். அதே அல்லாஹ்தான் உங்கள் இறைவன். அகிலத்தார்களின் இறைவனாகிய அல்லாஹ் மிக பாக்கியம் உடையவன் "

(அல்குர்ஆன்: 40:64)
உதாரணமாக புரோட்டான் நியூட்ரான் களுக்கு இடையே உள்ள எடை வித்தியாசம் இரண்டு எலக்ட்ரான்களின் எடைக்குச் சமமாக ஒரு நியூட்ரான் இருக்கிறது . இது இப்படி இல்லாமல் வேறுவிதமாக இருந்திருந்தால் இன்று நாம் காணும் நூற்றுக்கணக்கான நியூக்ளியைடுகள் உண்டாயிருக்க முடியாது . அதாவது உயிர்கள் உருவாகியிருக்க முடியாது .
அதேபோல புரோட்டானின் ஈர்ப்பு எடை ( Gravitational mass ) என்று ஒரு சமாச்சாரம் இருக்கிறது . இது சற்று வேறாக இருந்திருந்தால் காலக்ஸி இல்லை. நட்சத்திரங்கள் இல்லை. சூரியன் இல்லை .அதிலிருந்து பிரிந்த பூமி இல்லை .உயிர் இல்லை . பரிணாமம் இல்லை . மனிதன் இல்லை இந்த செல்போன் இல்லை . இந்த கட்டுரை இல்லை. படிக்க நீங்களும் இல்லை .

பிரபஞ்சத்தின் ஆரம்ப காலத்தில் அதன் விரிவு வேகம் சற்று குறைவாக இருந்திருந்தால் அது தனக்குள்ளே சுருங்கி மறைந்து போயிருக்கும் .

சற்று அதிகமாக இருந்திருந்தால் நட்சத்திரங்கள் உருவாகியிருக்க முடியாது . இந்த வேகம் இந்த விதிகள் எல்லாவற்றிற்கும் ஏன் இந்த தனித்தன்மை என்பதுதான் அவர்கள் கேள்வி.
அன்த்ராபிக் (anthropic ) தத்துவம் என்று ஒன்று இருக்கிறது இதன்படி விதிகள், ஆரம்ப நிலைகள் எல்லாமே கடைசியில் மனிதன் தோன்றி இந்த கேள்வியை கேட்பதற்காகத்தான் ஏற்பட்டது என்கிறார்கள் .எத்தனையோ பிரபஞ்சம் உருவாவதற்கு எண்ணில்லாத சாத்தியக் கூறுகள் உள்ளன .எத்தனையோ ஆரம்பம் நிலைகளும் எத்தனையோ விதிகளும் ஆனால் இந்த ஆரம்ப நிலைகளும் விதிகளும் வேறு ஏதாவது இருந்திருந்தால் புத்திசாலி மனிதன் தோன்றி இருக்க மாட்டான் . இந்த கேள்வி கேட்டிருக்க மாட்டான் .
என்ன கேள்வி ? பிரபஞ்சம் ஏன் இப்படி இருக்கிறது என்ற கேள்வி
இதற்கு பதில் : பிரபஞ்சம் இப்படி இல்லை என்றால் இந்த கேள்வியே வராது என்பதே.
இந்த வசீகரமான வாதம் பிரபஞ்சத்தில் காணப்படும் ஒழுங்கையும் சீரான அமைப்பையும் விளக்கினாலும் இது எப்படி என்கிற நிரூபணம் விஞ்ஞானத்திற்கு தேவையாக இருக்கிறது .
" தங்களுக்கு மேலிருக்கும் வானத்தை அவர்கள் கவனித்துப் பார்க்கவில்லையா? நாம் அதனை எவ்வாறு ஒரு கட்டுக்கோப்பாக அமைத்து, அதனை (நட்சத்திரங்களைக் கொண்டு) அலங்காரமாக்கி வைத்திருக்கின்றோம். அதில் எவ்வித வெடிப்புமில்லை. (ஓட்டை உடைசலும் இல்லை!) " (குர்ஆன் : 50:6)

## ஞானம் 13

கேள்விகளால் பெற்ற ஞானம்



பாபல் நாட்டை (இன்றைய ஈராக் ) கிமு 2230 வாக்கில் மன்னன் நம்ரூது ஆண்டுவந்தான். அவனுடைய அரசவையில் நட்சத்திர கலை வல்லுனர் காலித் பின் ஆஸ் , நம்ரூதை நோக்கி, "மன்னா ! ஜென்ம நட்சத்திரம் ஒன்று தோன்ற இருக்கிறது . அது உச்சம் ஆகும்போது ஜனிக்கும் குழந்தையால் உம் ஆட்சிக்கும், உம் மார்க்கத்திற்கும் சாவு மணி அடிக்கும் "
அமைச்சர்களை நோக்கி "இன்றிலிருந்து எவரும் தம் மனைவியரை மறுவாதிருக்க ஆண் காவலர்களையும் , காவல் மகளிரையும் நியமியுங்கள் ! இவ்வாண்டு பிறக்கும் எல்லா ஆண் குழந்தைகளையும் கொன்றொழியுங்கள்"
ஆண் காவலரும், அரசனின் மெய்க்காப்பாளருமான ஆஸர் இரவு காவல் நேரத்தின் போது தன் வீடு சென்று மனைவி உஷாவைப் பார்த்த போது விரத தாபத்தல் வீடு கூடினார் .

கிமு 2160-ல் முஹர்ரம் மாதம் 10 நாள் வெள்ளி இரவு நபி இப்ராஹீம் (அலை) அவர்கள் பிறந்தார்கள் .
உஷா தன் இல்லத்தின் அடியில் சுரங்கம் தோண்டி , அச் சுரங்கம் வழியே மலைக்குகையை அடைந்தார் .அங்கு குழந்தையை பாதுகாப்பாக வைத்தார் .
பல நாட்கள் சென்றபின் ஆஸர் இல்லம் வந்து, குழந்தையைப் பற்றி விசாரிக்க "பிறந்ததும் இறந்தது . புதைத்து விட்டேன்"
அன்னை உஷா வழக்கம் போல் சுரங்க நிலவறையில் குழந்தைக்கு அமுதூட்டி வர, அன்று தாமதமாகி விட்டது .குழந்தை தம் பிஞ்சு பெரு விரலை வாயில் வைத்து சுவைத்து கொண்டிருக்க ,
"மகனே ! ஏன் பெருவிரலை வாயில் வைத்துள்ளாய் ? பசிக்கிறதோ ? என்று கூறி பெருவிரலை எடுத்த போது, அதிலிருந்து தேன் ஒழுகி ஓடியது. மற்ற விரல்களை நோக்கும் போது கலிமா விரலில் பாலும், நடுவிரலில் பாகும் , மோதிர விரலில் நெய்யும் , சுண்டு விரலில் சுவன நீரும் வழிந்தோடக் கண்டார் .

வான சாஸ்திரிகள் முன்னறிவிப்புச் செய்த திருமகன் என்பது நன்கு தெரிய வந்தது .
குழந்தை " அன்னையே எனக்கு உணவு அளிப்பது யார் ? "
" நான் "
" உமக்கு உணவளிப்பவன் யார்?" "உன்னுடைய தந்தை "
"என்னுடைய தந்தைக்கு உணவளிப்பது யார்? "
"அரசர் "
"அரசருக்கு உணவளிப்பவன் யார் ?
" மகனே இவ்வாறெல்லாம் வினவாதே அரசரை விட மேலானவர் எவரும் இல்லை. அவரை எல்லாவற்றுக்கும் அதிபதி " என்று கூறி மைந்தனின் பேச்சுக்கு முற்றுப்புள்ளி வைத்தார் அன்னை.
மைந்தர் தம் பேச்சை விடவில்லை " "அம்மா தாங்கள் அழகானவரா ? நான் அழகானவனா ?
"என் செல்லமே நீ தான் அழகிலும் அழகு" என்று கூறினார்
"தாங்கள் அழகானவரா? தந்தை அழகானவராக ? "
"நான்தான் அழகானவள் "
தந்தை அழகானவரா ? அரசர் அழகானவரா ?
" தந்தை "
" அரசர் தாம் என் தந்தைக்கு உணவளிப்பவர் எனில் ஏன் அவர் தன் தந்தையைத் தம்மிலும் அழகானவராக படைத்தார் ? என்னுடைய தந்தை ஆஸர் தான் தங்களுக்கு உணவளிப்பவர் எனில் ஏன் அவர் தங்களைத் தம்மினும் அழகானவராக ஏன் படைத்தார் ? தாங்கள் தான் எனக்கு உணவளிப்பவர் எனில், என்னைத் தங்களினும் அழகாக ஏன் படைத்தீர் ? "
குழந்தை வளர்ப்பை தன் கணவர் ஆஸரிடம் மறைக்காமல் உண்மையை கூறினார் அன்னை உஷா .
ஆஸர் நிலவறையில் தன் குழந்தை அழகே உருவெடுத்தாற்போல் இருந்தது .
"அப்பா ! " என்றதும் பாசம் பொங்கி வழிந்தது .
அப்பா..! தங்களின் இறைவன் யார் ? " "நம்ரூத் "
"நம்ரூத்தின் இறைவன் யார் ? "
" வாயை மூடு "
சிறுவர் நிலவறையில் இருந்து வெளியே வந்து , இந்த அகண்ட பாருலகைப் பார்த்தார் . விரிந்த வானை பார்த்தார். இறைவனின் படைப்புகளைப் பார்த்தார் மனிதர்களைப் பார்த்தார் .மக்களைப் பார்த்தார் .பறவைகளைப் பார்த்தார். புழுக்களை பார்த்தார். எல்லாம் அவருக்கு ஒரே வியப்பாக இருந்தது இவற்றையெல்லாம் படைத்தவன் யார் ? இவற்றை ஏன் அவன் படைத்தான்? என்ற வினாக்கள் அவரை முற்றுகையிடத் தொடங்கின .
காரிருள் சூழ்ந்த அவ்விரவில் அவர் வானத்தை உற்று நோக்கிக் கொண்டிருந்தார்.அப்போது திடீரென ஒரு பெரும் விண்மீன் தோன்றி நாலா பக்கங்களிலும் ஒளி சிந்தியது . மக்களில் சிலர் அதை வணங்கினர் .
"இதுதான் என்னுடைய இறைவனாக இருக்குமோ ? என்று அவர் தன்னைத்தானே கேட்டுக் கொண்டார்
சற்று நேரத்தில் விண்ணில் மறைந்தது அது வீற்றிருந்த சுடர் வீசி அவ்விடத்தில் அதன் அடையாளமே இன்றி இருள் மங்கியது .
"இது அல்ல என் இறைவன் ." என்று அவர் தமக்குத்தாமே அறிவுரை கூறிக் கொண்டார். குர்ஆன் (6: 76 )
பின்னர் வெண்ணிலா புன்னகை பூத்த வண்ணம் விசும்பின் அடியில் வெளிவருவதை கண்டு "இதுதான். அகிலங்களையெல்லாம் படைத்த இறைவன் ஆக இருக்குமோ ? "
அதுவும் மறைய , " இதுவும் என் இறைவன் அல்ல. இறைவன் எனக்கு நேர்வழி காட்ட வில்லை எனில் நானும் வழி தவறியவர்களில் ஒருவனாகவே ஆகிவிடுவேன் " என்று அவர் கூறினார்
குர்ஆன் (6: 77 )
விடிந்தது . பொழுதும் தன் பொற்கிரணங்களை அள்ளி வீசிய வண்ணம் சூரியன் வெளியே வந்தது. அதனை கண்டதும் அவருடைய உள்ளம்
فَلَمَّا رَاَ الشَّمْسَ بَازِغَةً قَالَ هٰذَا رَبِّىْ هٰذَاۤ اَكْبَرُ فَلَمَّاۤ اَفَلَتْ قَالَ يٰقَوْمِ اِنِّىْ بَرِىْٓءٌ مِّمَّا تُشْرِكُوْنَ
பின் சூரியன் (மிக்க ஒளியுடன்) உதயமாவதைக் கண்டபோது : “இதுவே என் இறைவன்; இது எல்லாவற்றிலும் பெரியது” என்று அவர் கூறினார். அதுவும் அஸ்தமிக்கவே, அவர், “என் சமூகத்தாரே! நீங்கள் (ஆண்டவனுக்கு) இணைவைக்கும் (ஒவ்வொன்றையும்) விட்டு நிச்சயமாக நான் விலகி விட்டேன்” என்று கூறினார்.
(அல்குர்ஆன் : 6:78)

اِنِّىْ وَجَّهْتُ وَجْهِىَ لِلَّذِىْ فَطَرَ السَّمٰوٰتِ وَالْاَرْضَ حَنِيْفًا وَّمَاۤ اَنَا مِنَ الْمُشْرِكِيْنَ
“வானங்களையும் பூமியையும் படைத்தவன் பக்கமே நான் உறுதியாக என் முகத்தைத் திருப்பிக் கொண்டேன்; நான் முஷ்ரிக்கானவனாக - (இணைவைப்போரில் ஒருவனாக) இருக்க மாட்டேன்” (என்று கூறினார்).
(அல்குர்ஆன் : 6:79)
இப்படியாக பகுத்தறிவால் கேள்விகள் பல கேட்டு தன் ஞானத்தை வளர்த்து கொண்டவர்கள்தாம் கேள்வியின் நாயகம் நபி இப்ராஹீம் (அலை) அவர்கள்

## ஞானம் 14

ஞானவான்கள்..



நபிமார்கள் ஆரம்பத்தில் ஆடு மேய்ப்பவர்களாக இருந்திருக்கின்றனர்.
ஈஸா (அலை) அவர்களுக்கு "நல்ல மேய்ப்பாளர் " என்ற பட்டம் கூட உண்டு
ஆதம் (அலை) உழவுத் தொழிலும் , இத்ரீஸ் (அலை) தையல் தொழிலும் செய்துள்ளனர்.
நபித்தோழர்களில் அபூபக்கர் (ரலி) அவர்கள் துணி வியாபாரியாகவும் , ஜைது (ரலி) , பிலால் (ரலி) போன்றவர்கள் அடிமைகளாகவும் இருந்தனர் .

அபூதர் (ரலி) ஆரம்பத்தில் வழிபறி கொள்ளைக்காரர்களாக இருந்தார்கள்.
சூஃபி ஜூனைதுல் பக்தாதி அரசாங்க மல்யுத்த வீரராக இருந்தார்கள்.
சூஃபி ஷெய்கு அஹ்மது இப்னு ஷாபாத் திருடராக இருந்தார்.
சூஃபி இப்ராஹீம் இப்னு அத்ஹம் பல்க் நாட்டின் மன்னராக இருந்தார்கள்
பத்திரகிரியாரும் குறுநில மன்னராக இருந்தார்கள்
உலகப் புகழ்பெற்ற சூஃபி ஞானி முஹ்யித்தீன் அப்துல் காதிர் ஜீலானியின் ஞானகுருவான ஹம்மாத் ஷெய்கு (ரஹ் ) அவர்கள் தள்ளுவண்டியில் குளிர்பானங்களை வைத்து விற்கும் வியாபாரியாக இருந்தார்கள் "அதெப்படி உங்கள் குளிர்பானங்களில் மட்டும் ஈக்கள் மொய்க்கவில்லையே ? "என்று கேட்க
" நெருப்பில் ஈ மொய்க்குமா ?

அனுமதிக்கப்பட்ட வழியில் சம்பாதித்த பணத்தில் வாங்கப்பட்ட பொருள்களையே "நெருப்பு " என்று சொன்னார்கள்
உலகப் புகழ் பெற்ற இஸ்லாமிய பெண் சூஃபியான ராபியா பஸ்ரி (ரஹ்) பஸ்ரா நகரின் ஒரு விபச்சார விடுதியில் தான் பணியாற்றிக் கொண்டிருந்தார்கள்.
இவர்களை சந்திக்கும் ஆண்களின் மனங்களில் மிகப் பெரியதொரு மாற்றத்தை ஏற்படுத்தினார்கள் . விபச்சாரம் புரிய உள்ளே சென்றவர்கள் மானிடப் பிறப்பின் சாரத்தை புரிந்து கொண்டவர்களாக ஞானிகளாகவே வெளியேறினார்கள் பின்பு அந்த விடுதியை விட்டு வெளியேறி மார்க்கப் பணியாற்றினார்கள்
ஆதாரம் : நாகூர் ரூமி எழுதிய சூஃபி வழி (ஓர் எளிய அறிமுகம் ) பக்கம் 31
ஒரு நாள் யூப்ரடீஸ் நதிக்கரையில் உட்கார்ந்திருந்தார்கள் அங்கு ஹஸன் பஸ்ரி (ரஹ்) அவர்கள் ஆற்றுத் தண்ணீரில் தொழுகை விரிப்பை விரித்து ,அம்மையாரை நோக்கி
"வாருங்கள் நதியின் மீது இரண்டு ரக்அத் தொழுகை தொழுங்கள்" என்றார்கள்.
ஆனால் , அம்மையார் தமது தொழுகை விரிப்பை ஆகாயத்தில் விரித்து .ஹஸன் பஸ்ரியை நோக்கி "வாருங்கள் ஆகாயத்தில் இரண்டு ரத்அத் தொழுது கொள்ளுங்கள் என்றார்கள்.
தொடர்ந்து அவர்கள் "நீங்கள் நதியில் செய்த வேலையை ஒரு சிறு மீன் நதியில் செய்யும்.
நான் ஆகாயத்தில் செய்த வேலையை அற்பமான ஓர் ஈ ஆகாயத்தில் செய்யும் ஆனால் உண்மையான அசல் வேலை இந்த இரண்டு வேலைகளுக்கும் புறம்பானது என்பதை நீங்கள் அறிவீர்களா ?
சூஃபிக்களின் சாரம் எப்போதுமே வெளித்தோற்றத்தில் இருந்ததில்லை .அவர்கள் இந்த உலகில் இருந்துகொண்டே இந்த உலகை சேராதவர்களாக வாழ்கிறார்கள். இவர்களின் பக்தி வைதீக பக்தி அல்ல; பிரேம பக்தி அதாவது திரைகளை விலக்கி விட்டு நேரடியாக பார்ப்பவர்கள் சூஃபியாக்கள்

## ஞானம் 15

இறை காதலர்கள்



சூஃபிஸம் இஸ்லாத்தின் உள்ளம் சார்ந்த பரிமாணம் என்று சில அறிஞர்கள் கருதுகிறார்கள்.. இன்று பல முஸ்லிம்களும், முஸ்லிம் அல்லாதவர்களும் 'சூஃபிக் கருத்துக்கள் இஸ்லாத்துக்கு வெளிப்பட்டது !' என்று சொன்னாலும் இஸ்லாத்தின் மிகப் பெரிய அறிஞர்களில் ஒருவரான சையத் உசேன் நஸீர் , சூஃபிஸம் இஸ்லாத்துக்கு உட்பட்டதுதான் ! என்று கருதுகிறார்
சூஃபியின் ஆதார கருத்து மிக எளிமையானது .' இறைவனிடம் சரணடைவது. கணத்துக்குக் கணம் இறைவனின் மேல் காதலாகி கசிந்துருகுவது . நமது எண்ணங்கள் உணர்வுகள், உணர்ச்சிகள் , நம்முடைய "நான் " எல்லாமே இறைவனின் பரிசு அல்லது இறைவனின் அம்சம் என்பதே .
மேலும் ' சூஃபியாக்கள் இறைவனை அணுக இறந்துபட்டு , இறுதித்தீர்ப்பு தினத்திற்குக் காத்திருந்து , சொர்க்கம் போக வேண்டியதில்லை அன்றாட வாழ்விலேயே இறைவனை
அணுகலாம் !' என்கிறார்கள் .
' இறைவனின் அருகில் கிடைக்கும் ஆனந்தம் - பரவசம்தான் சிருஷ்டியின் காரணம் ' என்கிறார்கள். சிந்திக்க வேண்டிய வரிகள் .
இறைவன் " நான் புதையல் போல் மறைந்து இருந்தேன் என்னை அறிவிக்க விரும்பினேன் எனவே மற்றவர்கள் அறிந்து கொள்வதற்காக படைப்புகளைப் படைத்தேன் !" ஹதீஸ் குத்ஸி .
சூஃபியாக்களின் இதயங்கள் எப்போதும் இறைவன்பால் ஈர்க்கப்படுகின்றன . இந்தப் பரவச சங்கமத்துக்கு தடைகள் ஏற்படுகின்றன.
முதல் தடை நம் ஈகோ எனும் நஃப்ஸ் நம்மால் இறைவனின் நெருக்கத்தை உணர முடியவில்லை எனில் அதற்கு நாமே காரணம் .
' நான் ' என்னும் அகங்காரம், கோபம், விருப்பம் , காமம் , பழக்கங்கள் போன்றவற்றுக்கு வித்திடுகிறது. கவலை, வருத்தம் தன்னிரக்கம் போன்றவற்றால் நம்மை நம் மனம் அடிமைப்படுத்துகிறது .
'எங்கு திரும்பினாலும் இறைவனின் திருமுகம் இருக்கிறது என்கிறது திருக்குர்ஆன். அப்படி பார்க்க இயலாமல் தடுப்பவை நம் மனமும் , சந்தேகங்களும். இதனால்தான் நாம் இறைவனுடன் ஐக்கியமாக தவறுகிறோம்
சூஃபியின் முதல் குறிக்கோள் இந்த நஃப்ஸ் - ஸின் ஆக்கிரமிப்பைச் சமாளிப்பது . ஒவ்வொரு கணமும் இறைவனை நினைப்பதும் சதாசரணடைவதுமே .
ரூமி சொன்னதுபோல் ' நான் அவன் கருணையும் தண்டனையும் நேசிக்கிறேன் . இந்த எதிரெதிர் குணங்களை நேசிப்பது வினோதம்.

இமாம் கஸ்ஸாலி (ரஹ்)
12ம் நூற்றாண்டில் வாழ்ந்த மிகப்பெரிய இஸ்லாமிய அறிஞர் .' சூஃபி பாதையில் செல்லும்போது எந்த கணத்திலும் இறைவனின் அருகில் ஈர்க்கப்படலாம் . இந்த ஈர்ப்பை ' ஜத்மா ' என்கிறார்கள் வாசித் (பரவசம்) கண்டுபிடிப்பது என்கிறார்கள் . கண்ணுக்குப் புலப்படாதை (அல் காயப் ) தெளிவற்றதை உணர்வது அது.
திருக்குர்ஆன் எப்போதும் இறைவனை நினைக்க சொல்கிறது . அவனுடைய வல்லமை கண்ணுக்கு தெரிந்த தெரியாத அனைத்து விஷயங்களிலும் பரவி இருக்கிறது சூஃபியாக்கள் எப்போதும் இறைவனை நினைத்தலை ( திக்ர்) , இதன் சாரமாக 'ஸமா ' என்னும் நடனத்தில் திளைக்கிறார்கள் .
எப்போதும் இறைவனை நேசிக்கும் பாதையை அவர்கள் தேர்ந்தெடுக்கிறார்கள் . அந்த நேசத்தின் காதலின் தீவிரம் , அதன் அக்கினி, ரூமி போன்ற சூஃபிக்களை முழுவதுமாக ஆட்கொண்டு விடுகிறது . மற்றவர்களுக்கு இடி, நடுங்கும் ஒரு நெருப்பு அவ்வப்போது அணைந்து விடும் நெருப்பு .

இறைவனின் அழகையும் , உண்மையும் திரும்பத் திரும்ப எண்ணிப் பார்த்து அந்த தீயைத் தூண்டி விட்டுக் கொண்டே இருக்கவேண்டும் . "தீக்குள் விரலை வைத்தால்...... நின்னைத் தீண்டும் இன்பம் தோன்று ' வதாக சொன்ன மகாகவி பாரதியின் வரிகளில் சூஃபிஸம் மிளிர்கிறது
சூஃபிக் கவிதைகளில் ஒன்று...
"நள்ளிரவில் ஒரு சூஃபி கண்ணீர்விட்டு அழுதார் . உலகே ஒரு சவப்பெட்டி . அதில் அடைந்திருக்கிறோம் ..
அறியாமையால் வாழ்வில் தவறுகள் செய்கிறோம். இறுதியில் சாவு வந்து மூடியைத் திறக்கும்போது , இறக்கை இருப்பவர்கள் சாஸ்வதம் நோக்கி பறந்து செல்வார்கள் . இல்லாதவர்கள் பெட்டிக்குள்ளேயே அடைபட்டுக் கிடப்பார்கள் .
நண்பர்களே ! பறவையாகி இறைவனை நோக்கி பறந்து செல்ல ஆவன செய்யுங்கள். சிறகுகளும் இறகுகளும் பெறுங்கள் . _ அத்தர் உடலுக்குள் ஆன்மா மறைந்துள்ளது .
ஆன்மாவுக்குள் நீ மறைந்து உள்ளாய்.
மறைந்திருப்பதில் மறைந்திருப்பவனே, நீயே எல்லாம்
ஃபரீதுத்தீன் அத்தார்

**Leyna Salahudeen**
அருமையான பதிவு...
"இறைவனை அறிவதே மார்க்கத்தின் ஆரம்பம்" என்றும், "தன்னை அறிந்தவன் தன் இறைவனை அடைவான்" என இறைவனை அடையக் கூடிய வழியையும் தந்து சூஃபியிசத்தின் ஆரம்பமும் முடிவுமாக நம் கண்மணி நாயகம் முஹம்மது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் திகழ்கின்றார்கள்

## ஞானம் 16

_ ஓஷோ

ஒரு ஞானம் அடைந்த மனிதன் மாயைக்குள் மீண்டும் இழுக்கப்பட்டால் என்ன நிகழும்?
தரையில் விழுந்த மலர்கள் மீண்டும் கிளைகளுக்கு எம்பி செல்வதில்லை. அது சாத்தியமற்றது.
ஞானம் அடைந்த ஒரு மனிதன் மீண்டும் மாயைக்குள் செல்ல முடியாது. அதற்கு எந்த வழியும் இல்லை. எந்த வழியும் இல்லை என்பதற்கு பல காரணங்கள் உண்டு.
முதல் காரணம் ஒரு மனிதன் ஞானம் அடைந்த பிறகு அவன் இருப்பதில்லை. பிறகு திரும்புவது யார்?
அங்கே ஞானம் இருக்கிறது. ஆனால், ஞானம் அடைந்த மனிதன் என்று எதுவும் இல்லை.
ஞானம் என்பது அங்கே மிக தெளிவாக இருக்கிறது. அது ' வெறுமனே அடைந்தவன் ' என்று அங்கே எவனும் இருப்பதில்லை.
அது வெறுமனே ஒரு வாய்மொழி பிரயோகம்தான், ஒரு ஏமாற்று பேச்சுதான். திரும்புவது யார்?
திரும்ப கூடியவர் மறைந்து விட்டார். அதன் பிறகு, மாயைக்கு மீண்டும் திரும்புவதற்கு யார் இருக்கிறார்கள் ?
அது மாயை என்பதை எப்போது நீங்கள் உணர்ந்து கொள்கிறீர்களோ, அதற்கு பிறகு அது அங்கே இருப்பதில்லை.
அது இல்லை என்பதை எப்போது நீங்கள் தெரிந்து கொள்கிறீர்களோ, அப்போதே அது முடிந்து விடுகிறது. உங்களால் மீண்டும் எங்கே போக முடியும்? அதற்கு வாய்ப்பே இல்லை.
இந்த எண்னம் நம் மனதில் எழுவதற்கு காரணம் என்னவென்றால், அது போன்ற விஷயத்தை நம் வாழ்க்கையில் எப்போதும் பார்த்ததில்லை.
ஒரு விஷயத்தை நாம் அடைந்தவுடன் கீழே விழுந்து விடுகிறோம். நாம் காதல் வசப்படுகிறோம். பிறகு அதிலிருந்து கீழே விழுந்து விடுகிறோம். நாம் காதலில் விழுகிறோம், பிறகு அதிலிருந்து வெளியே விழுந்து விடுகிறோம்.
நாம் மகிழ்ச்சியாக இருக்கிறோம். அதற்கு பிறகு கவலைப்படுகிறோம், நல்ல விதமாக நாம் உணர்கிறோம். பிறகு கெட்ட விதமாக உணர தொடங்குகிறோம். இரட்டை தன்மையை நாம் அறிகிறோம். அந்த இரட்டை தன்மை எப்போதும் மறைவதில்லை.
அதைப் போன்று தான் ஞானம் அடைந்தவரும் மீண்டும் மாயைக்கு திரும்பி விடுவார்கள் என்கிற எண்ணம் நமக்கு யதார்த்தமாக ஏற்பட்டுவிடுகிறது.
இரட்டை தன்மை இல்லாத நிலையை உணர்வதுதான் ஞானம் என்பது. அதனால் தான், ஜென் குருமார்கள் சம்சாரத்தை நிர்வாணம் என்று சொல்கிறார்கள். இந்த உலகமே நிர்வாணம், மாயை என்பதும் உண்மை.
அங்கே எந்த விதமான வித்தியாசமும் இல்லை. இது உண்மை என்பதோ, அது மாயை என்பதோ எதுவுமில்லை. எல்லாமே உண்மைதான். உண்மை மட்டும்தான். அங்கே நீங்கள் மீண்டும் திரும்ப முடியும்.
திரும்ப முடியாத மையத்திற்கு அப்பால் நீங்கள் சென்று விட்டீர்கள். எவருமே, எப்போதுமே திரும்ப விழுந்ததில்லை.
இந்த மக்களை பற்றி நீங்கள் கவலை படாதீர்கள். உங்களை பற்றி மட்டுமே கவலைப்படுங்கள். முதலில் ஞானம் அடையுங்கள். அதன் பிறகு சறுக்கி விழ முயற்சி செய்யுங்கள். அதன் பிறகு நீங்கள் தெரிந்து கொள்வீர்கள். ஞானம் அடைவது எளிதானது. சறுக்கி விழுவது மிக கடினமானது.
நான் முயற்சி செய்திருக்கிறேன். ஆனால் எப்போதுமே எனக்கு வெற்றி கிட்டியதில்லை

## ஞானம் 17

சித்தார்த்தன் புத்தர் ஆனார்

கி.மு. 623-ம் ஆண்டு மே மாதம் பௌர்ணமி தினத்தன்று 'சித்தாத்த கௌதமர் ' என்ற பெயர் கொண்ட இந்திய இளவரசர் நேப்பாளம் மாவட்டத்தில் சாளுக்கிய வம்சத்தில் பிறந்தார்.
ராஜா சுத்தோதனன் அவரது தந்தை; ராணி மகா மாயா அவரது தாய். குழந்தையை ஈன்றெடுத்த சில நாட்களில் அவள் உயிர் நீத்தாள். மகா பிரஜாபதி கௌதமி அவரின் செவிலித் தாயானாள்.
அவர் பதினாறு வயதில் யசோதரை என்ற அழகிய இளவரசியை சொந்தத்தில் திருமணம் செய்துகொண்டார்.
சித்தார்த்த கௌதமருக்கு எல்லாம் கிடைத்திருந்தது . இமயமலை அடிவாரத்தில் ஒரு சிறிய ராஜ்யம் .
அரண்மனைக்கு வெளியே இருந்த வாழ்க்கையின் துயரங்களை அறியாதவராக சுமார் பதிமூன்று ஆண்டுகள் இல்லற வாழ்வில் இன்பமாகவும் செல்வச் செழிப்போடும் வாழ்ந்து வந்தார்.

காலம் செல்லச் செல்ல, படிப்படியாக அவருக்கு உண்மை புரிய ஆரம்பித்தது.
29-வது வயதில் அவருக்கு இராகுலன் என்ற மகன் பிறந்தபோது அவரது வாழ்க்கையில் ஒரு பெரிய திருப்புக்கட்டம் ஏற்பட்டது.
அவர் தமது மகனை ஓர் இடையூறாக கருதினார், ஏனென்றால் பிறப்புக்கும் பிணிக்கும் மரணத்துக்கும் யாருமே நீங்கலாக இல்லை என்ற உண்மை அவருக்கு விளங்கியது.
இவ்வாறு, உலகெங்கிலும் துயரங்கள் காணப்படுவதை உணர்ந்து, மரணத்திலிருந்து உலகை உய்விப்பதற்காக ஒரு சர்வரோக நிவாரணியைக் கண்டுபிடிக்க உறுதிபூண்டார்.
ஆகையால் அரண்மனை இன்பங்களைத் துறந்து, ஓர் இரவு . . . தன் தலைமுடியை சிரைத்து, காவியுடை அணிந்து, வீட்டைவிட்டு வெளியேறி, மெய்யறிவைத் தேடி அலைய ஆரம்பித்தார்.
ஞானோதயம்—அது கிடைத்த விதம்
மேற்கூறப்பட்டபடி, எது 'அவரது வாழ்க்கையில் பெரிய திருப்புக்கட்டமாய்' அமைந்தது?
நோயுற்றிருந்த ஒரு மனிதனையும், ஒரு கிழவனையும், ஒரு சடலத்தையும் முதன்முறையாக கண்ட சமயம்தான் வாழ்க்கையில் அவருக்கு ஒரு திருப்புக்கட்டமாய் அமைந்தது.
துன்பங்களை அனுபவித்து, மூப்படைந்து செத்துப்போகவே மனிதன் பிறக்கிறானா, இதுதான் வாழ்க்கையின் அர்த்தமா? என்று அச்சம்பவங்கள் அவரை சிந்திக்க வைத்தன; மனவேதனை அடையச் செய்தன.
பிற்பாடு, மெய்யறிவை நாடி உலக வாழ்வைத் துறந்த ஒரு சன்னியாசியை அவர் கண்டதாக சொல்லப்படுகிறது. அதன் பிறகுதான், தன் குடும்பத்தையும் செல்வங்களையும் இளவரசர் பட்டத்தையும் துறந்து, தன் மனதில் எழுந்த கேள்விக்கான பதிலைத் தேடி இந்து மத ஆசான்களிடமும் குருக்களிடமும் செல்ல தூண்டப்பட்டார்.
அடுத்த ஆறு ஆண்டுகளுக்கு இப்படி அலைந்து திரிந்தபோதிலும் அவருக்கு பதில் கிடைக்கவே இல்லை. தியானம், விரதம், யோகாசனம், கடும் சன்னியாசம் போன்ற பல வழிகளை அவர் முயன்றதாக பதிவுகள் சொல்கின்றன. ஆனாலும் அவருக்கு ஆன்மீக அமைதி கிட்டவில்லை, ஞானோதயமும் பிறக்கவில்லை.
முன்பு அனுபவித்த ராஜபோக வாழ்க்கை எப்படி பயனற்றதோ அதே விதமாக கடும் சன்னியாச வாழ்க்கையும் பயனற்றது என்பதை இறுதியில் உணரத் தொடங்கினார்.
ஆகவே, இந்த இரண்டு வாழ்க்கையையும் விட்டுவிட்டு மத்திப மார்க்கம் என்ற ஒன்றை கடைப்பிடிக்க ஆரம்பித்தார்.
கேள்விகளுக்கான பதில் தன் சொந்த உணர்வில் உண்டு என நினைத்து, ஒரு போதி மரத்தடியில் அமர்ந்து தியானம் செய்தார்.
மாறன் என்ற பிசாசின் தாக்குதல்களையும் சோதனைகளையும் சமாளித்து நான்கு வாரங்களுக்கு (சிலர் ஏழு வாரங்களுக்கு என்று சொல்கின்றனர்) கடும் தியானம் செய்தார். அதன் பிறகு எல்லா அறிவுக்கும் புரிந்துகொள்ளுதலுக்கும் மேலான ஞானோதயத்தை அவர் பெற்றார் என சொல்லப்படுகிறது.
இவ்வாறு, புத்த மதத்தின் சொல் வழக்குப்படி, கௌதமர் புத்தரானார்—அறிவொளி, அதாவது ஞானோதயம் பெற்றவரானார்.
கடைசியாக நிர்வாணம் என்ற நிலையை அடைந்தார், அதாவது ஆசாபாசங்களிலிருந்தும் துயரங்களிலிருந்தும் விடுபட்டு பூரண அமைதியையும் ஞானோதயத்தையும் அடைந்தார்.

சாளுக்கியமுனி (சாளுக்கியர் குலத்து முனிவர்) என்றும்கூட அவர் அறியப்பட்டார். அடிக்கடி தன்னை ததாகதர் ([போதிக்க] வந்தவர்) என அழைத்துக்கொண்டார்.
ஆனால் இந்த விஷயத்தைப் பற்றி பல்வேறு புத்தமத பிரிவுகளிலும் பல்வேறு கருத்துகள் நிலவுகின்றன. தானாகவே ஞானோதயம் பெற்று அதை தன் சீடர்களுக்குக் கற்பித்த ஒரு மனிதராக மட்டுமே அவரை சிலர் கருதுகின்றனர். மற்றவர்களோ, புத்தரின் உபதேசத்தை அல்லது அவரது மார்க்கமாகிய தர்மத்தை (பாலி மொழியில், தம்மா) போதிக்கவும் புதுப்பிக்கவும் உலகிற்கு வந்த புத்தர்களில் கடைசியானவராக அவரை கருதுகின்றனர்.

இன்னும் சிலர் அவரை போதிசத்வர், அதாவது தான் ஞானோதயம் பெற்றாலும் மற்றவர்கள் ஞானோதயம் பெற உதவ வேண்டும் என்பதற்காக நிர்வாணம் எனும் நிலைக்குள் பிரவேசிப்பதைத் தள்ளிப்போட்டவர் என்று கருதுகின்றனர்.
அந்த நிர்வாணம் எப்படிப்பட்டது ?
' எதையும் விரும்பாமல் இருக்கும்போது, ஒருவன் எதையும் கைப்பற்றுவதில்லை . எதையும் கைப்பற்றுவதில்லை என்றால் , அவனுக்கு கவலை ஏதுமில்லை ; பரபரப்பு இல்லை.மனதுக்கு அமைதி கிடைக்கிறது '
(மஜ்ஜின் நிக்காயா என்னும் பாலி மொழிப் பிரதியிலிருந்து...)
எது உண்மையாயிருந்தாலும், அவர் ஞானோதயம் பெற்றது அதிமுக்கியமான ஒரு நிகழ்ச்சியென்று புத்த மதத்தின் அனைத்துப் பிரிவினருமே கருதுகின்றனர்.

(1) வாழ்க்கையே துன்ப மயமானது.

(2) ஆசை அல்லது அவாவே துன்பத்திற்குக் காரணம்.

(3) ஆசைகளை ஒழித்தால் துன்பம் தீரும்.

(4) ஒருவருடைய நடத்தை, சிந்தனை, நம்பிக்கை ஆகியவற்றைக் கட்டுப்படுத்தி, அஷ்டாங்கிக மார்க்கத்தை கடைப்பிடிப்பதன் மூலம் ஆசைகளை ஒழித்திடலாம்.

மத்திப மார்க்கமும், நான்கு உயரிய சத்தியங்களும் பற்றிய உபதேசம் ஞானோதயத்தின் சாராம்சமாகும்.
இந்த உபதேசமே புத்தரின் அனைத்து போதனைகளின் இரத்தின சுருக்கம் என்பதாக கருதப்படுகிறது.
இந்த உபதேசம் கடவுளிடமிருந்து வந்ததாக கௌதமர் சொல்லவில்லை. ஆனால் இது “ததாகதர் கண்டறிந்தது” என கூறுவதன் மூலம் தானே அந்த உபதேசத்தை தோற்றுவித்தவர் என்பதை வெளிப்படுத்தினார்.
மரணப் படுக்கையில் புத்தர் தன் சீடர்களுக்கு இவ்விதமாக சொன்னதாக கூறப்படுகிறது: “எவருடைய உதவியையும் நாடாமல் சத்தியத்திலே தன்னந்தனியாக நின்று முக்தியை நாடித் தேடுங்கள்.” ஆக, ஞானோதயம் தெய்வத்திடமிருந்து வருவது இல்லை, ஆனால் நல்ல சிந்தனை, நல்ல செயல்கள் ஆகியவற்றை வளர்த்துக்கொள்ள ஒருவர் எடுக்கும் சொந்த முயற்சியிலிருந்துதான் வருகிறது என்பது புத்தரின் கருத்தாகும்.

## ஞானம் 18

சூஃப்யான் தௌரீ ( கிபி 715 - 778)

தௌரீ என்பது இட்ட பெயரல்ல , திட்டிய பெயர் . ஆமாம், ஒருநாள் பள்ளிவாசலுக்குள் மறதியாக இவர் இடது காலை முன் வைத்து உள்ளே போக, " மாடே ( யா..தௌரீ ) என்று ஒரு அசரீரி கேட்டது.

உடனே சூஃப்யான் மயங்கி கீழே விழுந்து விட்டார் .பின் எழுந்த இவர் தன்னைத் தானே தௌரீ ...தௌரீ ...(ஓ.. மாடே ., .மாடே ) என்ன காரியம் செய்து விட்டாய் என்று தன்னைத் தானே கடிந்து கொண்டார். அன்றிலிருந்து இவருக்கு "தௌரீ " என்ற பெயர் புகழ்பட ஆயிற்று

ஒரு நள்ளிரவு கொஞ்சம் அதிகமாக சாப்பிட்டுவிட்ட தௌரீ, 'கழுதைக்கு அதிகமாக தீனி போட்டால் அதனிடமிருந்து அதிகமாக வேலை வாங்க வேண்டும் என்று சொல்லி தன்னையே தான் திட்டி விட்டு ,அன்று இரவு முழுதும் தொழுது கொண்டே இருந்தார் .

ஒரு நாள் ஒருவர் வந்து தௌரீயிடம் " அந்த ஆண்டு தனக்கு புனித யாத்திரை செய்யும் வாய்ப்புக் கிட்டவில்லை என்று சொல்லி பெருமூச்சு விட்டார் . அதை பார்த்த தௌரீ ,

" நான் 40 முறை ஹஜ் செய்து இருக்கிறேன் அவை அத்தனையின் நன்மைகளையும் நான் உமக்கு கொடுத்துவிடுகிறேன் . நீங்கள் இப்போது விட்ட பெருமூச்சின் நன்மைகளை எனக்கு கொடுப்பீர்களா ? " என்று கேட்டார் .

செய்த செயல் அல்லது செய்ய நினைத்த ஒன்று... இவற்றின் பின்னால் இருக்கும் ஆழமான உணர்ச்சிகள் என்பவை எத்தனை முக்கியமானவை என்பதை சூஃபிகள் நன்கு அறிந்து வைத்திருந்தார்கள்,

கூஃபா நகரில் நீதிபதி பதவிக்கான ஆணையை கலீபா

அல்மஹதி தவ்ரீயின் கையில் வழங்கியபோது , அதை பெற்றுக் கொண்டு வெளியில் வந்த தௌரீ அதை தஜ்லா நதியில் வீசி எறிந்து விட்டு ஓட்டம் பிடித்தார்.

பதவிகள் பின்னால் ஓடுபவர்கள் சாதாரண மனிதர்கள். பதவியை கண்டு ஓடியவர்கள் சூஃபிகள்.

## ஞானம் 19

விலாயத்து

لَهُمُ الْبُشْرٰى فِى الْحَيٰوةِ الدُّنْيَا وَفِى الْاٰخِرَةِ لَا تَبْدِيْلَ لِكَلِمٰتِ اللّٰهِ ذٰلِكَ هُوَ الْفَوْزُ الْعَظِيْمُ



"அவர்களுக்கு இவ்வுலக வாழ்க்கையிலும், மறுமையிலும் நன்மாராயமுண்டு; அல்லாஹ்வின் வாக்கு(றுதி)களில் எவ்வித மாற்றமுமில்லை - இதுவே மகத்தான பெரும் வெற்றி ஆகும்" (குர்ஆன்: 10:64)
அல்லாஹுத் தஆலா தனது வலிமார்களுக்கு இம்மையிலும் மறுமையிலும் அளித்துள்ள பாக்கியங்களை பற்றி இந்த வசனம் விவரிக்கிறது
ஒலித்தனம் என்பது இரண்டு வகை . எல்லா மூமின்களுக்கும் பொதுவானது . ஒன்று இதனை குறித்து இறைவன் தன் திருமறையில் " அல்லாஹ் மூமின்களுக்கு ஒளியாக இருக்கிறான் இருள்களிலிருந்து பிரகாசத்தின்பால் அவர்களை வெளியாக்குகிறான் என்று கூறி இருக்கிறான்
மற்றொன்று அவனது நல்லடியார்களுக்கு மட்டும் சொந்தமானது. ஹக்கில் அடியான் அழிந்து , அவனுடன் ஸ்திரமாகுவதற்கு விலாயத்து என்று பெயர் . அற்புத செய்கைகள் இதற்குத் தேவை இல்லை
இவ்வாறான அற்புத செய்கைகள் அதாவது "கராமத்தே கவ்னியா"
(இப்பிரபஞ்சத்தை சேர்ந்த அற்புதச் செய்கைகள்) முஸ்லீம் அல்லாத சமூகத்தினரும் நிகழ்த்துவர்
ஆனால் பிரபஞ்சத்தில் கராமத்தே கல்பிய்யா அதாவது இருதய சம்பந்தமான அற்புதங்கள் இறைஞானம், வேதத்தின் ரகசியங்கள் போன்றவை இருக்க வேண்டியது அவசியமாகும். எனவே கராமத்தே கவ்னிய்யாவும் , கராமத்தே கல்பிய்யாவும் சிலரிடம் ஒன்று சேர்ந்து இருக்கவும் கூடும் .

ஹளரத் ஷெயகுனா செய்யிதுனா அப்துல் காதிர் ஜீலானி ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களிடம், ஷெய்கு அபூ மத்யனில் மகுரிபிய்யி ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களிடம் இரண்டும் பொதிந்திருந்தன .
கீழ் நாட்டிலுள்ளவர்களில் ஷெய்குனா அப்துல் காதிர் ஜீலானி ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களைப் போன்றும் ,
மேல் நாட்டில் ஷெய்கு அபூ மத்யனில் மகுரிபிய்யி ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களைப் போன்றும் அற்புதங்களை வேறு எவரும் செய்யவில்லை இவ்விருவருக்கும் இவ்விரு வகையான அற்புதங்களும் இருந்தன .
சிலருக்கு கராமத்தே கவ்னிய்யா இல்லாமல் இருக்கும் .கராமத்தே கல்பிய்யா அவர்களுக்கு நிறம்ப இருக்கலாம் . ஆனால் கராமத்தே கவ்னிய்யா இல்லாமல் இருக்கவும் கூடும் . இவ்வாறுதான் ஒலிமார்களில் "அஹுலுல் பனா " வைச் சேர்ந்தவர்களில் பெரும்பாலானவர்களுக்கு இருந்துவருகிறது .

தண்ணீரின் மீது நடத்தல் , வானத்தில் பறத்தல் , மிகவும் தூரமான இடத்தை ஒரு சொற்ப நேரத்தில் கடத்தல் போன்ற கராமத்தே கவ்னிய்யாவை ராஹிப்களுக்கும் (கிறிஸ்துவ பாதிரி மார்களுக்கும்) பல்ஸஃபீ (தத்துவ சாஸ்திரி) களுக்கும் கூட நடந்திருக்கின்றன இவ்விதமான கராமத்துகளை இவர்களுக்கு அளித்து இவர்களை இறைவன் கொஞ்சம் கொஞ்சமாக பிடித்து விடுவான்.
ரிஸாலத்து ( நுபுவ்வத்து)ம் , விலாயத்து (ஒலித்தன்மையு )ம் ஒரு அரசாங்கத்தை போல் உள்ளவை . இவை இறைவனுக்குச் சொந்தமானவை .இதில் அடியானுடைய முயற்சிக்கு கொஞ்சமும் சம்பந்தம் இல்லை . விலாயத் என்பது அமைச்சர் பதவியை போன்றது.
"(நபியே!) உம்முடைய இறைவன் நிழலை எப்படி நீட்டுகின்றான் என்பதை நீர் பார்க்கவில்லையா? (குர்ஆன் : 25:45)
"நாம் இப்பூமியை விரிப்பாக ஆக்கவில்லையா?
இன்னும், மலைகளை முளைகளாக ஆக்கவில்லையா? " (குர்ஆன் : 78:6,7)

அல்லாஹ் தன் பரிசுத்த திருமறையில் அவ்லியாக்களை பற்றி " நிழல் (ளில்லூ ) என்றும் மலை (ஜிபால் ) என்றும் வர்ணித்து உள்ளான் (ரூஹுல் பயான் )

'' என்னுடைய உம்மத்துகளில் 40 பேர்கள் நபி இப்ராஹிம் (அலை ) அவர்களுடைய இருதயத்தை உடையவர்களாக என்றும் வலம் வந்து கொண்டே இருப்பார்கள்

وَلَا تَطْرُدِ الَّذِيْنَ يَدْعُوْنَ رَبَّهُمْ بِالْغَدٰوةِ وَالْعَشِىِّ يُرِيْدُوْنَ وَجْهَهٗ مَا عَلَيْكَ مِنْ حِسَابِهِمْ مِّنْ شَىْءٍ وَّمَا مِنْ حِسَابِكَ عَلَيْهِمْ مِّنْ شَىْءٍ فَتَطْرُدَهُمْ فَتَكُوْنَ مِنَ الظّٰلِمِيْنَ

(நபியே!) தங்கள் இறைவனின் திருப்பொருத்தத்தை விரும்பி காலையிலும் மாலையிலும் பிரார்த்தித்துக் கொண்டிருப்பவர்களை நீங்கள் விரட்டி விடாதீர்கள்! அவர்களுடைய கணக்கிலிருந்து எதுவும் உங்களுடைய பொறுப்பாகாது. உங்களுடைய கணக்கிலிருந்து எதுவும் அவர்களுடைய பொறுப்பாகாது. ஆகவே, நீங்கள் அவர்களை விரட்டினால் அநியாயக்காரர்களில் நீங்களும் ஒருவராகி விடுவீர்கள்!
(அல்குர்ஆன்: 6:52)

அல்லாஹுத்தஆலா அந்த நபர்களை கொண்டுதான் பூலோகத்தில் வாழ்பவர்களின் பிணிகளைப் போக்குவான் . அவர்களுக்காக மழையை பொழியச் செய்வான் அவர்களைக் கொண்டே தான் பூலோகத்திலுள்ளவர்களுக்கு உதவி புரியப்படும் என்பதாய் நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் திருவாய் மலர்ந்தருளிய ஹதீஸ் தபறானீயில் காணக் கிடைக்கின்றது.

## ஞானம் 20

துன்னூன் மிஸ்ரி (கிபி 796 - 861) 19-10-2020

எகிப்து நாட்டுக்கு அரேபிய பெயர் மிஸ்ர் .மிஸ்ர் நாட்டுக்காரர்களை 'மிஸ்ரி' என்று அழைப்பார்கள் . துன்னூன் என்பதும் அவர் சொந்தப் பெயர் அல்ல.

'தௌபான்' என்பதுதான் இயற்பெயர்.

துன்னூன் என்றால் 'மீனின் மனிதர் ' என்று பொருள்.

ஒரு கப்பல் பிரயாணம் செய்து கொண்டிருக்கும்போது ஒருவரின் விலை உயர்ந்த கல் ஒன்று காணாமல் போய்விட்டது . இவரும் இறையச்சத்தால் பயந்த சுபாவம் உடையவர் . யார் பார்த்தாலும் இவர்தான் எடுத்திருப்பார் என்று எண்ணத் தோன்றும். எனவே சந்தேகப்பட்டு அனைவரும் இவரை அடிக்கவும் . இவர் இறைவனிடம் இறைஞ்சினார் .

உடனே கடலில் நூற்றுக்கணக்கான மீன்கள் மேலே வந்து தலையை நீட்டின .அதில் ஒன்றின் வாயில் காணாமல் போன அந்தக் கல் இருந்தது. அன்றிலிருந்து இவருக்கு இப்பெயர் வந்ததாக கூறப்படுகிறது.

'தவ்பா என்றால் என்ன? '

என்று ஒருவர் துன்னூனிடம் கேட்டார்

" செய்த பாவத்துக்கு வருந்தி இறைவனிடம் மன்னிப்பு கேட்பது பொதுமக்களுக்கான தவ்பா. இறைவனை ஒரு கண நேரமேனும் மறந்தால் அதற்காக இறைவனிடம் மன்னிப்புக் கோருவது சூஃபியாக்களின் தவ்பா என்றார் துன்னூன்

ஒருமுறை மக்காவுக்கு புனித யாத்திரை செய்தபோது அது நடந்தது .

அரபாத் பெருவெளியில் மிஸ்ரி தங்கியிருந்தார் . அங்கு தங்குவது ஹஜ்ஜின் முக்கிய கடமைகளில் ஒன்றாகும். அங்கு தங்காமல் ஹஜ் நிறைவேறாது.

அங்கு தங்கிய மிஸ்ரி இரவு முழுவதும் இறை வணக்கத்தில் ஈடுபட்டு இருந்தார். அப்போது அவருக்கு ஒரு காட்சி காண்பிக்கப்பட்டது

அதில் சிரியாவின் தலை நகரான டமாஸ்கஸைச் சேர்ந்த அஹமது என்ற ஒரு செருப்பு வணிகரின் முகம் காட்டப்பட்டது .அதைத் தொடர்ந்து அவருடைய ஹஜ்தான் அந்த ஆண்டு இறைவனால் ஏற்றுக் கொள்ளப்பட்ட முதல் ஹஜ் ஆகும் என்றும் எனினும் அஹ்மது அந்த ஆண்டு ஆட்சி செய்ய மக்காவுக்கு வரமுடியவில்லை என்றும் சொல்லப்பட்டது .

மிஸ்ரிக்கு ஒன்றும் புரியவில்லை. ஹஜ் உடைய காலத்தில் மக்காவுக்கு வந்து எல்லா சடங்குகளையும் நிறைவேற்றி அரஃபாத் பெருவெளியில் தங்காமல் போனால் ஹஜ் நிறைவேறாது அப்படியிருக்க மக்காவுக்கு வராமல் ஒருவரால் அதுவும் செருப்பு செய்து விற்றுக் கொண்டிருக்கும் இந்த ஒருவரால் எப்படி ஹஜ்ஜை நிறைவேற்ற முடியும் அதுவும் அவருடைய ஹஜ்தான் முதலில் இறைவனால் ஏற்றுக் கொள்ளப்பட்டது என்று வேறு அசரீரி !

ரொம்ப குழம்பிப் போன மிஸ்ரி ஹஜ்ஜை முடித்துக்கொண்டு டமாஸ்கஸ் சென்று அந்த செருப்பு வியாபாரி அஹமதைச் சந்தித்தார் .யாரோ ஒரு சூஃபி தன்னை தேடி வந்திருப்பது கண்ட அந்த ஏழை மிஸ்ரியை வரவேற்று உபசரித்து உணவு அளித்தார் . பின்பு இரவு நேரத்தில்...

"இந்த வருடம் நீங்கள் ஹஜ் செய்தீர்களா ? என்று லேசாக கேள்வி போட்டார் மிஸ்ரி .

"செய்யலாம் என்று ரொம்ப

ஆசையாகதான் இருந்தேன் ஆனால் முடியவில்லை " என்று அஹமது பதில் சொன்னார் .

அந்த பதிலை கேட்டு புன்னகைத்த மிஸ்ரி தனக்கு தோன்றிய காட்சியும் கேட்ட குரலும் ஷைத்தானின் வேலையாகத்தான் இருக்கும் என்று நினைத்தார் . பின் ஏன் ஹஜ் செய்யவில்லை ? என்று அவரிடம் கேட்டார் .

" அது ஒரு பெரிய கதை "

" என்ன கதை ?

"நான் ஹஜ்க்கு போகவேண்டும் என்று ரொம்ப காலமாக ஆசைப்பட்டு வந்தேன். அதற்கான பணம் என்னிடம் இல்லை அதனால் கொஞ்சம் கொஞ்சமாக அதற்காக பணம் சேர்க்க ஆரம்பித்தேன் கடைசியில் ஹஜ் செய்வதற்கான பணம் சேர்வதற்கு எனக்கு 40 வருடங்கள் ஆகிவிட்டன . இந்த வருஷம்தான் ஹஜ் செய்யலாம் என்று நினைத்தேன் இதுதான் 40 வருஷம் .

"இப்படி நான் ஆசைப்பட்டு கொண்டிருந்தபோது ஒரு நிகழ்ச்சி நடந்தது .பக்கத்து வீட்டுக்கு போன என் மகன் திரும்பி வந்து அழுதான் ஏன் என்று கேட்டேன் .

"பக்கத்து வீட்டில் இறைச்சி சமைத்து சாப்பிட்டுக் கொண்டிருந்தார்களாம் . இவன் கொஞ்சம் கேட்டிருக்கிறான் அவர்கள் இவனுக்கு தராமல் என் மகனை விரட்டி விட்டார்கள் . அதனால் தான் அழுது கொண்டே என்னிடம் வந்து சொன்னான் .

ச்சே ...என்ன மனிதர்கள் ஒரு சின்ன குழந்தைக்கு கொஞ்சம் கூட கொடுக்காமல் இப்படி விரட்டி விட்டார்களே என்று வருத்தப்பட்டேன்

' என் வார்த்தைகளைக் கேட்டு என் பக்கத்து வீட்டுக்காரர் என்னிடம் வந்தார் நாங்கள் கடந்த ஐந்து நாட்களாக சாப்பிடுவதற்கு எதுவும் இல்லாமல் கொலை பட்டினியாக இருந்தோம். தெருவில் ஒரு செத்த ஆடு கிடந்தது. அதை எடுத்து வந்து அறுத்து சமைத்து சாப்பிட்டோம் .அதைத்தான் உங்கள் மகன் கேட்டான் அந்த கறியை நாங்கள் சாப்பிடாவிட்டால் செத்துப் போய் இருப்போம் . அது எங்களுக்கு ஆகுமானது ஏனெனில் எங்கள் உயிரை காப்பாற்றிக் கொள்ளத்தான் செத்துப்போன ஆட்டை சமைத்தோம் ஆனால் உங்கள் மகனுக்கு அது ஆகுமானது அல்ல அதனால்தான் கொடுக்கவில்லை என்று சொன்னார்கள் .

பக்கத்து வீட்டில் இப்படி கொலை பட்டினியாக இருக்கும்போது நாம் ஹஜ் செய்வதா ..என்று நான் 40 ஆண்டுகளாக சிறுகச்சிறுக சேர்த்த பணத்தை எல்லாம் அவர்களிடம் கொடுத்து பிழைத்துக் கொள்ள சொல்லி விட்டேன் .அதனால் தான் இந்த வருஷம் என்னால் ஹஜ் செய்ய முடியவில்லை" என்று சொன்னார்

இதைக் கேட்டதும் துன்னூன் கதறி அழு ஆரம்பித்தார் . செருப்பு வியாபாரி சொன்ன கதை அவரை செருப்பால் அடித்த மாதிரி இருந்தது .

துன்னூன் மிஸ்ரிக்கு ஒரு உண்மையை இறைவன் விளங்க வைத்தான் அது அவருக்கு ஹஜ்யைப் பற்றிய தெளிவை ஏற்படுத்தியது . ஏன் அழுதார் என்று செருப்பு வியாபாரி அஹமது வேண்டுமானால் புரியாமல் இருந்திருக்கலாம் நமக்கு நிச்சயம் புரியும் .

இத்துடன் " ஞானம் " தொடர் நிறைவு பெறுகிறது . இத்தொடரைப் பற்றி உங்களின் மேலான கருத்துக்களை பதியவும் .

## சற்குருவின் சகவாசம் 1



குரு என்பவர் தேடிக் கண்டறிய வேண்டிய விந்தை விஷயமல்ல. அவர் உங்களுக்குள் இருக்கிறார். அதனால்தான் சீடராக மாறுவதற்கு தயார் நிலையில் இருப்பது, வேட்கையுடன் இருப்பது ,ஆசையுடன் இருப்பது, உண்மையைத் தேடும் பெருவிருப்பம் கொண்டிருப்பது... போன்ற விஷயங்கள் தேவைப்படுகின்றன. ஆனால் அவை பற்றாக்குறையாக இருக்கின்றன.

ஜனங்கள் குருவைத் தேடுகிறார்கள்.அவர்களால் கண்டு கொள்ள முடியாது அவர்களால் கண்டுகொள்ள முடியாது போனால் ஆச்சரியப்பட ஏதுமில்லை. அவர்களால் கண்டுபிடிக்க முடியாது. பல குருநாதர்களிடம் செல்வார்கள். சரியானவரைத் தவறவிட்டு விடுவார்கள். நீங்கள் குறைபாடு உள்ளவராக இருக்கும்போது சரியான குருவை எப்படி கண்டறிய முடியும் ? சீடராக இருப்பது எப்படி என்று உங்களுக்குத் தெரியாதபோது குருவை எவ்வாறு உங்களால் கண்டறிய இயலும் ?

குருவைத் தேடுவது என்பது நல்ல சீடராக இருப்பதில் துவங்குகிறது. நல்ல சீடர் குருவை பற்றி கவலை கொள்ளமாட்டார். சீடனாக இருக்கும் பண்பை தன்னுள் உருவாக்கிக்கொள்வது எப்படி என்பதில்தான் கவனம் செலுத்துவார். கற்றுக் கொள்பவராக எப்படி மாறுவது , களங்கமற்ற எப்படி செயலில் ஈடுபடுவது , அறிவு என்ற தளத்தில் இல்லாமல் எவ்வாறு செயல்படுவது என்பன குறித்து அவர் யோசிக்கிறார்.

நீங்கள் அறிவின் துணையோடு செயல்பட்டால் , பல ஆசிரியர்களை கண்டறியலாம். ஆனால் ஒரு குருவை பெற்றிட உங்களால் இயலாது . அறிந்து கொள்ளுதல் என்ற நிலையிலிருந்து செயல்படும்போது, பல ஆசிரியர்களைக் நீங்கள் காண்பீர்கள், பல விஷயங்களை கற்றுக் கொள்வீர்கள் ஆனால் குருவை கண்டறிய அவரால் முடியாது .

குருவை கண்டறிய வேண்டுமானால் , நீங்கள் குழந்தையாக சூது வாது தெரியாத வெள்ளந்தியாக மாற வேண்டும். குரு கிடைக்க வேண்டுமென்றால், முழுமையாக களங்கமற்ற இருக்க வேண்டும். எதையும் தெரிந்து கொள்ளாமல் மனம் வெறுமையாக இருக்க வேண்டும். உண்மையை கண்டு உணரும் ஆவல் மட்டும் இருக்க வேண்டும்; அதைப் பற்றி எவ்வித தீர்மானங்களும் உங்களுக்குள், உங்கள் மனதில் உருவாகாமல் இருக்க வேண்டும். இதுவே உண்மையான கற்றுக்கொள்ளும் நிலையாகும். அதன் பிறகு எங்கும் போக வேண்டாம் . குரு உங்களிடம் வந்து சேர்வார்.

நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலா முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நபித்தோழர்களிடம் எது பற்றியாவது கேள்வி கேட்டால் , அதற்குரிய பதில் தெரிந்தாலும் ,

நபித்தோழர்கள் : "அல்லாஹ்வும் , ரசூலும் அறிவார்கள்" என்றே பதில் கூறுவார்கள் .

மதீனாவில் நபித்தோழர்களுடன் நபியவர்கள் நடந்து வரும் போது ஓர் ஓடைக் குறித்து கேட்டபோது , மதீனாவை பூர்வீகமாகக் கொண்ட மதீனாவாசிகளான அன்சாரிகள் கூட

"அல்லாஹ்வும், ரசூலும் அறிவார்கள் " என்றே கூறினார்கள் .

அபூதர் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள் :

"நான் மஸ்ஜிதுக்குள் நுழைந்தேன். நபி (ஸல்) அவர்கள் அங்கு

உட்கார்ந்திருந்தார்கள் . அப்பொழுது சூரியன் மறைந்து கொண்டிருந்தது .

" அபூதர்ரே...! இந்த சூரியன் எங்கே செல்கிறது என்பதை நீர் அறிவீரா ?"

"அல்லாஹ்வும் ரசூலும் அதிகம் அறிவார்கள் "

" அல்லாஹ்வின் அர்ஷுக்கு கீழில் சுஜூது செய்வதற்காகச் சூரியன் செல்கிறது. அங்கு அது உத்தரவு கேட்கிறது . அதற்குத் திரும்ப செல்ல உத்தரவு கொடுக்கப்படுகிறது .இன்னும் அது அதிகமாக சுஜுது செய்ய நெருங்கும் .ஆனால் அது அங்கீகரிக்கப்பட மாட்டாது. "வந்த வழியே திரும்பச் செல் " என்று கூறப்படும் .

## சற்குருவின் சகவாசம் 2




சற்குருவின் சொல் ஒன்று போதும் .அச்சொல்லே மந்திரம். அது நிதர்சனம் .அது மறைவான இறைவனோடு மானசீக தொடர்புடையது .சில சமயம் பிரச்னைனயின் விபரம் தெரியாமல் சற்குரு சொல்லி இருப்பார். எனவே இப்பிரச்சனைக்கு தீர்வை அவர்களிடமே கேட்போம் என்ற முடிவுக்கு வருவது கூட ஒரு சோதனையாக இருக்கலாம் .சற்குருவின் சொல்லே மந்திரமாக ஏற்றுக் கொண்டவர்களுக்கு அச்சொல்லே போதும். அது வெற்றியடையச் செய்யும்.

'முஃதா' என்பது ஷாம் நாட்டின் பல்கா மாநிலத்தின் கீழ் பகுதியிலுள்ள ஓர் ஊர். இங்கிருந்து பைத்துல் முகத்தஸ், இரண்டு நாட்கள் நடக்கும் தொலைதூரத்தில் உள்ளது.

நபி (ஸல்) அவர்கள் புஸ்ராவின் மன்னருக்குக் கடிதம் ஒன்றை எழுதி அல்ஹாரிஸ் இப்னு உமைர் அல்அஸ்தி (ரழி) அவர்களிடம் கொடுத்தனுப்பினார்கள். ஆனால், போகும் வழியில் பல்கா மாநிலத்தின் கவர்னராக இருந்த ஷுரஹ்பீல் இப்னு அம்ரு அல்கஸ்ஸானி என்பவன் அவரைக் கைது செய்து கொன்று விட்டான்.

தூதர்களைக் கொலை செய்வது அரசியல் குற்றங்களில் மிகக் கடுமையானதாகும். பகிரங்கமாகப் போருக்கு அழைப்பு விடுப்பதைவிட தூதரைக் கொலை செய்வது மிகக் கொடிய ஒன்றாக கருதப்பட்டது.

தனது தூதர் கொல்லப்பட்ட செய்தியை அறிந்தவுடன் நபி (ஸல்) பெரும் கவலைக்குள்ளானார்கள். 3000 வீரர்கள் கொண்ட பெரும் படை ஒன்றைத் தயார் செய்து அவர்களிடம் போரிட அனுப்பி வைத்தார்கள்.

நபி (ஸல்) அவர்கள் இப்படைக்கு முதலாவதாக ஜைது இப்னு ஹாரிஸாவை (ரழி) தளபதியாக ஆக்கிவிட்டு 'ஜைது கொல்லப்பட்டால், ஜஅஃபர் தளபதியாக இருப்பார். ஜாஃபரும் கொல்லப் பட்டால் , அப்துல்லாஹ் இப்னு ரவாஹா தளபதியாக இருப்பார். அவரும் கொல்லபட்டால் , உங்களுகிடையே ஆலோசனை செய்து அடுத்த தளபதியை தேர்ந்தெடுங்கள் “

என்று கூறி வெள்ளை நிறக் கொடியை ஜைது இப்னு ஹாரிஸா (ரழி) கையில் கொடுத்தார்கள். (ஸஹீஹுல் புகாரி)

இதை பார்த்துக்கொண்டிருந்த நும்மான் என்ற யூதர் "இதற்கு முன் உண்டான நபிமார்கள் யாரேனும் ஒருவர் கொல்லப்படுவார் என்று கூறினால் அவர் கொல்லப்படுவது உறுதி எனவே உங்கள் நபி கூறியவாறு நீங்களும் கொல்லப்படுவது உறுதி " என்று ஹஜ்ரத் ஜைத் பின் ஹாரிஸா (ரலியல்லாஹு தஆலா அன்ஹு) அவர்களிடம் கூறினார் .

அதற்கு ஜைத் (ரலியல்லாஹு தஆலா அன்ஹு) அவர்கள் எப்போது நாயகத்தின் கரத்தை நான் பிடிதேனோ அப்போதே அவர்கள் சொல்லும் அனைத்தும் உண்மை என்பதை நான் நம்பிக்கை கொண்டவன் .நீங்கள் என்ன புதிதாக கண்டுபிடித்துவிட்டீர்கள்? என்றார்கள்

அந்த யூதர், ' கொல்லப்படுவோம் என்று தெரிந்துமா போருக்கு செல்கிறீர்கள் ' என்றார் .

ஜைத் (ரலியல்லாஹு தஆலா அன்ஹு) " இதை விட வேறு என்ன சிறப்பு எமக்கு வேண்டும் ? " என்று சொல்லிக்கொண்டே போருக்கு தயாரானார்கள்.

அனைவர்களும் போருக்கு சென்று விட்டார்கள் .

மறுநாள் வெள்ளிக்கிழமை அண்ணலெம் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஜும்ஆ பேருரை நிகழ்த்துகிறார்கள்.மக்களை பார்க்கும்போது அங்கே அப்துல்லாஹ் பின் ரவாஹா (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் அமர்திருக்கிறார்கள் .

தொழுகை முடிந்தவுடன் அப்துல்லாஹ் பின் ரவாஹா ( ரலியல்லாஹு அன்ஹு) அவர்களை அழைத்து போருக்கு செல்லவில்லையா ? என்று கேட்கிறார்கள்.

" நாயகமே! என்னிடம் வேகமாக செல்லும் குதிரை இருக்கிறது .நான் அவர்களோடு சென்று சேர்ந்துவிடுவேன் .எனக்கு பின் இன்னொரு தளபதி என்று நீங்கள் சொன்னதிலிருந்து இப்போரில் நான் ஷஹீத் ஆகிவிடுவேன் என்று உறுதியாக நம்புகிறேன். எனவே கடைசியாக ஒருமுறை உங்கள் பின் நின்று தொழ வேண்டும் என்ற ஆவலில் இருந்துவிட்டேன் நாயகமே" என்று கூறினார்கள் .

நாயகம் ஸல்லலாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் “என்ன காரியம் செய்து விட்டீர்கள் ரவாஹா..! எப்போது போருக்கு செல்லுங்கள் என்று கூறினேனோ அப்போதே சென்றிருக்க வேண்டாமா? என்று கேட்டு அனுப்பி வைக்கிறார்கள் .

முஸ்லிம்கள் 3 ஆயிரம் பேர் எதிரிகள் 2 லட்சம் பேர் அன்றைய வல்லரசான ரோமானியப் பேரரசு இப்படிப்பட்ட மிகப்பெரும் படையை திரட்டி இருந்தது .

ஸஹாபா பெருமக்கள் ஆலோசனை செய்தார்கள் .
எதிரிகளின் பலம் தெரியாமல் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நம்முடன் குறைந்த வீரர்களை அனுப்பி இருக்கலாம். இன்னும் சில வீரர்களை நாம் கேட்போம் என்று ஆலோசிக்கிறார்கள் .
காலித் பின் வலீத் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் உணர்ச்சிகரமான ஒரு உரையை மக்கள் முன் நிகழ்த்துகிறார்கள் .
" அல்லாஹ்வும் ரசூலும் நம்மை சோதிக்கிறார்கள்.
வெற்றி தோல்வியை பற்றி சிந்திப்பது நமது கடமை அல்ல .
போரிடுங்கள் என்று சொன்னால் போரிட வேண்டும் அதுதான் நமது கடமை . இறைவனுக்காக போரிடுகிறோம். உண்மைக்காக போரிடுகிறோம் .வெற்றியும் தோல்வியும் இறைவனின் கையிலல்லவா இருக்கிறது" என்று கூறினார்கள்
அதன் பிறகு நடந்த போரை மதீனாவில் இருந்து கொண்டு நாயகம் ஸல்லால்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நேரடியாக கண் முன்னே நடப்பதை போல (கிட்டத்தட்ட பல ஆயிரம் மைல்களுக்கு அப்பால் நடக்கும் போரை) வர்ணனை செய்கிறார்கள் )
" இதோ ஜைத் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் கொல்லப்பட்டுவிட்டார்கள். அவர்களின் உயிர் தங்க கட்டிலில் வைத்து வானவர்கள் தூக்கி செல்கிறார்கள் .
இப்போது ஜஅஃபர் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்களின் கரத்தில் இஸ்லாமிய கொடி இருக்கிறது அவர்களும் கொல்லப்பட்டுவிட்டார்கள். அவர்களின் உயிரும் தங்க கட்டிலில் வைத்து வானவர்கள் தூக்கி செல்கிறார்கள் .
அடுத்து இஸ்லாமிய கொடி ரவாஹா (ரலியல்லாஹு அன்ஹு) அவர்களின் கரத்தில் இருக்கிறது அவர்களும் கொல்லப்பட்டு விட்டார்கள் அவர்களின் உயிரும் தங்க கட்டிலில் வைத்து வானவர்கள் தூக்கி செல்கிறார்கள் . ஆனால் அவர்களின் கட்டிலின் ஒரு முனை மட்டும் வளைந்து இருக்கிறது .
அப்துல்லாஹ் பின் ரவாஹா (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் தவறு செய்யவில்லை .கடைசியாக ஒரே ஒரு முறை நாயகத்தின் பின் நின்று தொழ வேண்டும் என்ற ஆசையினால் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சொன்ன உடனே போருக்கு செல்லவில்லை .அதன் காரணத்தினால் அவர்களின் கட்டிலின் ஒரு முனை மட்டும் வளைந்து இருக்கிறது
பிறகு, தளபதியாக நியமிக்கப்படாமலேயே காலித் இப்னு வலீத் அதைக் கையிலெடுத்துள்ளார். அவருக்குவெற்றியளிக்கப்பட்டுவிட்டது. வீர மரணத்தினால் பெரும் பேற்றினைஅடைந்துவிட்டார்கள். ஷஹாதத் எனும் பெரும்பேறு அவர்களுக்குக்கிடைத்துவிட்டது. அதைவிட அவர்கள் நம்முடன் இருப்பது மகிழ்ச்சிக்குரியதல்ல …”
இதைக் கூறியபோது நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் கண்களிலிருந்து கண்ணீர் வழிந்து கொண்டிருந்தது.
சற்குருவின் சொல் ஒன்று போதும் .அச்சொல்லே மந்திரம். அது நிதர்சனம் .அது மறைவான இறைவனோடு மானசீக தொடர்புடையது .

## சற்குருவின் சகவாசம் 3

கடவுளை காட்டுங்கள்…



குருகுலத்தில் பயின்ற மாணவர்களில் சைதன்யனும் ஒருவன். மற்ற மாணவர்களைக் காட்டிலும் மிகவும் புத்திசாலியாக இருந்த சைதன்யனை குருவுக்கு மிகவும் பிடித்திருந்தது.
ஆகவே, தனக்குக் தெரிந்த அனைத்தையும் சைதன்யனுகுக் கற்றுக் கொடுத்தார். குருகுலத்தில் பல ஆண்டுகள் பயின்ற சைதன்யனுக்கு வயது பதினெட்டு ஆயிற்று.

ஒரு நாள் நாமதேவர் அவனை அழைத்து, "மகனே நீ கற்றுக்கொள்ள வேண்டிய அனைத்தையும் தெரிந்து கொண்டுவிட்டாய். இத்துடன் குருகுலவாசம் உனக்கு போதும்.

நீ இனி உன் பெற்றோரிடம் சென்று அவர்களுக்குத் தொண்டு செய்வாய். கடவுள் எப்போதும் உனக்குத் துணை இருப்பார்," என்று வாழ்த்தினார்.

தனது குருவை தரையில் விழுந்து வணங்கிய சைதன்யன் அவரிடம் பணிவாக, "குருவே எனக்கு எவ்வளவோ பாடங்கள் கற்றுக் கொடுத்தீர்கள். ஆனால், எந்தக் கடவுளைப் பற்றி இப்பொழுது குறிப்பிட்டீர்களோ அவரை மட்டும் எனக்குக் காட்டவில்லையே! கண்ணால் காண முடியாத கடவுள் எவ்வாறு எனக்குத் துணை இருப்பார்?" என்று வினவினான்.

"சைதன்யா உன்னுடைய சந்தேகத்திற்கு பிறகு ஒரு நாள் விடை அளிக்கிறேன். நீ இப்போது வடக்கு திசையில் உள்ள காட்டின் வழியே சுசந்த நகர் எனும் நகரத்தைத் தாண்டி பவானிபுரத்திற்கு சென்று அங்குள்ள என் சகோதரனை சந்தித்து அவனுடைய சேமலாபங்களை விசாரித்துக் கொண்டு வா?" என்றார்.

"அப்படியே செய்கிறேன் குருவே", என்று பதிலளித்தான் சைதன்யன். குருவின் மனைவி கொடுத்த உணவுப் பொட்டலங்களுடன், மறுநாள் காலையில் கிளம்பினான் சைதன்யன்.

நண்பகல் நேரம் காட்டு வழியில் பாதியைக் கடந்து விட்டான். அப்போது அவனுக்கு மிகவும் தாகம் உண்டாயிற்று. இந்தக் காட்டில் குடிக்கத் தண்ணீர் எங்கே கிடைக்கும் என்று தேடிய அவன் கண்களில் ஒரு வயதான பார்வையற்ற மனிதன் தென்பட்டான்.

அவன் செடியிலுள்ள இலைகளைக் கைகளால் தடவிப் பார்த்துப் பின் அதை முகர்ந்து பார்த்து சில இலைகளை மட்டும் பையினுள் போட்டுக்கொண்டான்.

"ஐயா, தாங்கள் எதைத் தேடுகிறீர்கள்?" என்று கேட்டான்.

"நான் இந்தக் காட்டில் வசிப்பவன். நான் மூலிகைகளை சேகரித்து பிறருக்கு வழங்குகிறேன். குருடன் என்பதால், முகர்ந்து பார்த்து மூலிகைகளைக் கண்டுபிடிக்கிறேன்," என்றான்.

"இப்போது நீங்கள் பறித்துக் கொண்டிருப்பது என்ன மூலிகை?" என்றான்.

"இது பாம்புக் கடிக்கான மூலிகை. இந்த மூலிகையின் சாறை பாம்பு கடித்தவன் வாயில் விட்டால், விஷம் இறங்கிவிடும். நீ காட்டு வழியில் சுற்றுகிறாயே... இந்த மூலிகையை கொஞ்சம் வைத்துக்கொள்," என்று சில இலைகளைக் கொடுத்தான்.

அவற்றை பத்திரமாக வைத்துக்கொண்ட சைதன்யன், "ஐயா, குடிக்க தண்ணீர் கிடைக்குமா?" என்று கேட்டான்.

"அருகில் ஒரு கிணறு உள்ளது!" என்று கிணறு இருக்கும் இடத்தைக் காட்டினான்.

அந்தக் கிணற்றை அடைந்து தாகம் தீரத் தண்ணீர் குடித்தபின், ஒரு மரத்தடியில் அமர்ந்து உணவு உண்டுவிட்டு அப்படியே உறங்கிவிட்டான்

பின் அங்கிருந்து பயணத்தைத் தொடர்ந்த சைதன்யன் இருட்டும் நேரத்தில் சுசாந்த நகரை அடைந்தான். அங்கு பசியால் வாடிய ஒரு பிச்சைக்கார குடும்பத்திற்கு எஞ்சிய உணவுகளை கொடுத்துவிட்டு அன்று இரவு ஒரு சத்திரத்தில் தங்கினான்.

நடு இரவில் ஏதோ சத்தம் கேட்டு திடுக்கிட்டு எழுந்த சைதன்யன் தன் அருகில் உறங்கிக் கொண்டிருந்த மனிதனின் வாயில் நுரைதள்ள முனகிக் கொண்டிருபதைப் பார்த்தான்.

கொஞ்ச தூரத்தில் ஒரு விஷப்பாம்பு ஓடிக்கொண்டிருப்பதை பார்த்தான். அந்த மனிதனின் அபாய நிலையை உணர்ந்த சைதன்யன் உடனே தன்னிடமிருந்த விஷக்கடி மூலிகைகளை எடுத்து சாறு பிழிந்து அந்த மனிதனின் வாயில் விட்டான். சற்று நேரத்திற்க்கெல்லாம் அவன் சாதாரண நிலையை அடைந்தான்.

அந்த நபர் யாருமல்ல! குடிமக்களின் குறைகளை அறிய மாறுவேடம் பூண்டு இரவில் திரிந்த அந்த நாட்டு மந்திரி.

சைதன்யனுக்குத் தன் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்த மந்திரி, "நீ என் உயிரைக் காப்பாற்றினாய். அதற்க்கு செய் நன்றியாக உனக்கு மன்னரிடம் வேலை வங்கித் தருகிறேன்," என்றார்.

"மிகவும் நன்றி ஐயா. ஆனால், நான் முக்கிய அலுவலகமாக பவானிபுரம் சென்று கொண்டிருக்கிறேன். சில தினங்கள் கழித்து உங்களை சந்திக்கிறேன்," என்று கூறி மந்திரியிடமிருந்து விடைப் பெற்றுக்கொண்டான்.

மறுநாள் காலை பவானிபுரத்தை அடைந்து குருவின் சகோதரரை சந்தித்து சேமலாபங்களை விசாரித்து அறிந்து, பிறகு தன் குருவிடம் திரும்பினான் தான் சென்று வந்த நிகழ்ச்சி விவரங்களையும், அவரது சகோதரனைப் பற்றியும் விளக்கிக் கூறினான்.

"மகனே, நினைவிருக்கிறதா? கண்ணால் காண முடியாத கடவுள் எங்கே என்று வினவினாய் அல்லவா? அந்த சந்தேகக்திற்கு நான் ஏதும் விளக்கம் கூறாமல் உனக்கு விடை கிடைத்து விட்டது. கடவுளைப் பார்த்து விட்டாய் அல்லவா?" என்றார்.

"நானா! நான் எங்கே கடவுளைப் பார்த்தேன்? பார்க்கவில்லையே!" என்றான் ஆச்சரியத்துடன் சைதன்யன்.

"மகனே கடவுள் எப்போதும் எல்லா இடங்களிலும் காணப்படுகிறார். ஆனால், ஒரே உருவத்தில் அவர் உனக்குத் தோன்றவில்லை," என்றார்.

"எந்த குருட்டு முதியவர் உனக்கு பாம்பின் விஷக்கடிக்கான மூலிகை தந்தாரோ, அவர் கடவுள். காட்டிலும் கூட கிணற்றின் தேவை ஏற்ப்படும் என்று எண்ணி, யாரோ ஒருவன் கிணறு தோண்டி இருந்தானே, அவனும் கடவுள் தான்.

எந்த மந்திரியை பாம்புக் கடியிலிருந்து நீ பிழைக்க வைத்தாயோ, அவருக்கு நீ கடவுள். இவ்வளவு உருவங்களில் கடவுளைக் கண்ட பிறகுமா கடவுளை நான் காணவில்லை என்று நீ கூறுகிறாய்?" என்றார்.

குருவின் வார்த்தைகளில் இருந்த உண்மையை அறிந்து உணர்ந்ததும் சைதன்யனுக்கு ஞானோதயம் உண்டாயிற்று. தனக்கு ஞானோதயம் உண்டு பண்ணிய குருவை விழுந்து வணங்கி விட்டு, அவரிடமிருந்து விடை பெற்றான்.

இதற்குப் பிறகு சைதன்யன் தன் பெற்றோரை அழைத்துக்கொண்டு சுசாந்த நகரை அடைந்து மந்திரியை சந்தித்தான். மந்திரியின் உதவியால் அவனுக்கு அரசாங்கத்தில் நல்ல வேலையும் கிடைத்தது.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: கண்ணியமும் மகத்துவமும் மிக்க அல்லாஹ் மறுமை நாளில், "ஆதமுடைய மகனே! நான் நோய்வாய்ப்பட்டிருந்தேன். ஆனால் நீ என்னை நலம் விசாரிக்க வரவில்லை" என்று கூறுவான்.
அதற்கு அவன், "என் இறைவா! நீ அகிலத்தின் இறைவன். உன்னை நான் எப்படி நலம் விசாரிக்க முடியும்?" என்று கேட்பான்.
அதற்கு அல்லாஹ், "என்னுடைய இந்த அடியான் நோய்வாய்ப்பட்டிருந்தான். ஆனால் நீ அவனை நலம் விசாரிக்கச் செல்லவில்லை. அவனை நீ நலம் விசாரித்திருந்தால், அங்கே நீ என்னைக் கண்டிருப்பாய் என்பது உனக்குத் தெரியாதா?
"ஆதமுடைய மகனே! நான் உன்னிடத்தில் உணவு வேண்டினேன். ஆனால் நீ எனக்கு உணவு அளிக்கவில்லை" என்று கூறுவான்.
அதற்கு அவன், "என் இறைவா! நீயோ அகிலத்தின் இறைவனாக இருக்க உனக்கு எப்படி என்னால் உணவளிக்க முடியும்?" என்று கேட்பான்.
அதற்கு அல்லாஹ், "என்னுடைய இந்த அடியான் உன்னிடத்தில் உணவு வேண்டி வந்தான். ஆனால் அவனுக்கு நீ உணவு கொடுக்கவில்லை. அவனுக்கு நீ உணவளித்திருந்தால், எனக்கு இதைச் செய்ததாகக் கண்டிருப்பாய் என்பது உனக்குத் தெரியாதா?"
ஆதமுடைய மகனே! நான் உன்னிடத்தில் தண்ணீர் கேட்டேன். ஆனால் நீ எனக்குத் தண்ணீர் கொடுக்கவில்லை" என்று கூறுவான்.
அதற்கு அவன், "என் இறைவா! நீயோ அகிலத்தின் இறைவனாக இருக்க உனக்கு எப்படி நான் தண்ணீர் கொடுக்க முடியும்? என்று கேட்பான்.
அதற்கு அல்லாஹ், "என்னுடைய இந்த அடியான் உன்னிடத்தில் தண்ணீர் கேட்டான். ஆனால் நீ அவனுக்குத் தண்ணீர் கொடுக்கவில்லை. அவனுக்கு நீ தண்ணீர் கொடுத்திருந்தால், அதை எனக்குக் கொடுத்ததாக நீ கண்டிருப்பாய்" என்று கூறுவான்.
அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) நூல்: முஸ்லிம் (4661)
وَيَبْقَى وَجْهُ رَبِّكَ ذُو الْجَلَالِ وَالْإِكْرَامِ
மிக கண்ணியமும் பெருமையும் தங்கிய உங்களது இறைவனின் திருமுகம் மட்டும் (அழியாது) நிலைத்திருக்கும்.
(அல்குர்ஆன்: 55:27)

## சற்குருவின் சகவாசம் 4

(சற்குருவின் எளிய உவமான போதனைகள்)



மிகச் சிறிய உவமானங்களிலிருந்து வாழ்க்கையின் மிகப் பெரிய தத்துவத்தை போதிப்பவர்தான் சற்குரு .
கண்ணுக்கெட்டிய தூரம் முழுக்க தண்ணீர். கடற்கரையில் நின்று கொண்டிருந்தனர் குருவும் சிஷ்யனும். ஓடிவந்த அலை நீர் இருவரது கால்களையும் நனைத்துச் சென்றது. அதன் அழகு நுரையாக விரிந்தது.
“எத்தனை முறை பார்த்தாலும் அலுக்காதவை கடல், யானை, ரயில் என்று சொல்லி இருக்கிறீர்கள் குருவே. அதன் அர்த்தம் இப்போதுதான் முழுமையாகப் புரிகிறது!” என்றான் சிஷ்யன். கடல் நீரைப் பார்த்துப் பார்த்துப் பிரமித்தான்.
“பிரமிப்புக்கு உரியது மட்டுமல்ல கடல். அது நமக்குச் சொல்லும் பாடங்களும் ஏராளம்! அதன் ஒவ்வொரு குணத்தில் இருந்தும் நம் வாழ்க்கைக்கான பாடங்களை ஒவ்வொருவிதமாகக் கற்றுக்கொள்ளலாம்!” என்றார் குரு.
“பார்க்கும் இடமெல்லாம் நீரே நிறைந்திருக்கிறது. இந்த கடல் நீரை எடுத்துப் பருகி உன் தாகத்தைத் தீர்த்துக்கொள்ள இயலுமா?” என்று கேட்டார் குரு.
“முடியாது குருவே. உப்பு நீர் தாகத்தைப் போக்காது. அதிகரிக்கவே செய்யும்..” என்றான் சிஷ்யன்.
“அள்ள அள்ளக் குறையாத நீர். ஆனாலும், ஒரு வாய்கூட பருக முடியாது..”.
“ஆம் குருவே.” என்றான் சிஷ்யன்.
“வாய் இருக்கிறது என்பதற்காக எவ்வளவு வார்த்தைகள் பேசுகிறோம்! மனம் இருக்கிறது என்பதற்காக எப்படியெல்லாம் சிந்திக்கிறோம்! செய்ய முடியும் என்பதால் எத்தனை செயல்களைச் செய்கிறோம்! சிந்தனைகளாலும் செயல்களாலும் பிறருக்கு

என்ன பயன் என்று நாம் ஒவ்வொருவரும் சீர்தூக்கிப் பார்க்க வேண்டும். அதைத்தான் சொல்லாமல் சொல்கிறது இந்தக் கடல்" - பேசினார் குரு.
குரு பேச.. சிஷ்யன் சிந்திக்க.. அலையின் ஆர்ப்பரிப்பால் கடலும் ஆமோதித்தது.

"ஒருவனின் வார்த்தைகளால் யாருக்கும் பயனில்லை என்றால், அது பருக இயலாத கடல் நீருக்கே சமமாகும்.
ஒருவனின் சிந்தனைகளால் இந்தச் சமுதாயத்துக்கு உபயோகமேதும் இல்லை என்றால், அது உப்புக்கரிக்கும் கடல் நீருக்கே சமமாகும்.
ஒருவனின் செயல்களால் இந்த உலகிற்கு பலனேதும் கிடைப்பதில்லை என்றால், அது அலை தீரா நீர் கொண்டாலும் பருகப் பயன்தராத இந்த கடலுக்கே சமமாகும்!" என்றார் குரு.
மரங்களில் இப்படியும் ஒருவகை மரம் உண்டு. அதன் இலைகள் உதிர்வதில்லை. அது முஸ்லிமுக்கு உவமையாகும். அது என்ன மரம் என்பதை எனக்கு அறிவியுங்கள்' என நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள்.
அப்போது மக்களின் எண்ணங்கள் நாட்டு மரத்தின் பால் திரும்பியது. நான் அதை பேரீச்சை மரம் தான் என்று கூற வெட்கப்பட்டுக் கொண்டு அதைச் சொல்லாமல் இருந்து விட்டேன்.
பின்னர் 'அல்லாஹ்வின் தூதரே! அது என்ன மரம் என்று எங்களுக்கு அறிவியுங்கள்' என தோழர்கள் கேட்டார்கள். அதற்கு 'பேரீச்சை மரம்' என்றார்கள் அறிவிப்பவர்: இப்னு உமர் (ரலி) நூல்கள்: புகாரீ (61), முஸ்லிம் (5028)

துன்பங்கள் வரும் வேளையில் ஒரு முஃமினுடைய உள்ளம் எப்படி இருக்க வேண்டும்? என்பதற்கு நபிகளாரின் உதாரணம் அழகிய சான்றாகும். எல்லா மரங்களுக்கும் கோடை காலத்தில் இலை உதிர் காலம் உண்டு. அந்தக் காலத்தில், தன் இலைகளை உதிரச் செய்கின்றன. ஆனால் பேரீச்ச மரம் மட்டும் எந்தக் காலத்திலும் இலைகளை உதிரச் செய்வதில்லை. இதைப் போன்று தான் எவ்வளவு துன்பமான நேரம் வந்தாலும் துவண்டு விடாமல் மன உறுதியோடு அதை எதிர் கொள்ள வேண்டும்.
இதைப் போன்று இன்னொரு உதாரணத்தையும் நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.
'இறை நம்பிக்கையாளரின் நிலை, இளம் தளிர் பயிருக்கு ஒப்பானதாகும். அதைக் காற்று ஒரு முறை சாய்த்து, மறுமுறை நிமிர்ந்து நிற்கச் செய்யும்.
நயவஞ்சகனின் நிலை தேவதாரு மரத்திற்கு ஒப்பானதாகும். அது ஒரேயடியாக வேரோடு சாயும் வரை (தலை சாயாமல்) நிமிர்ந்து நிற்கும்' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அறிவிப்பவர்: கஅப் பின் மாலிக் (ரலி) நூல்: புகாரீ (5643)
அல்லாஹ்வை நம்பியவன் அவனுக்கு எவ்வளவு பெரிய துன்பம் வந்தாலும் அந்த நேரத்தில் கவலை கொள்வான் ஆனால் அதனால் உள்ளம் தளர்ந்து தவறான முடிவை எடுக்க மாட்டான். எப்படி இளம் தளிர்ப் பயிர், காற்று அடிக்கும் போது சாய்ந்து விட்டுப் பின்னர் எழுந்து விடுகிறதோ இதைப் போன்று இறைநம்பிக்கையாளன் அவனுக்கு வரும் துன்பங்களில் சோர்ந்து இருந்தாலும் சில நாட்களில் சாதாரண நிலைக்கு வந்து விடுவான்.

பெரும் மரங்கள் சாதாரண காற்றுக்கு அசைந்து கொடுக்கா விட்டாலும் பெரும் காற்று அடிக்கும் போது மொத்தமாக சாய்ந்து விடுகிறது. அது திரும்பவும் நிமிர்ந்து நிற்பதில்லை. அத்தோடு அழிந்து விடுகிறது. இது இறைநம்பிக்கை இல்லாதவனுக்கு உதாரணம்.
சின்ன துன்பங்களைச் சகித்துக் கொள்ளும் இவர்கள் பெரும் துன்பங்கள் வரும் போது மொத்தமாக உயிரை மாய்த்துக் கொள்கிறார்கள். இது போன்று இல்லாமல் சிறிய துன்பமாக இருந்தாலும் பெரிய துன்பமாக இருந்தாலும் சரி, அனைத்தையும் சகித்துக் கொண்டு, திரும்பவும் வீறு நடை போடுபவனே உண்மையான இறை நம்பிக்கையாளன்.
இன்பங்கள் வரும் போது இறைவனைப் போற்றி, துன்பங்கள் வரும் போது பொறுமையைக் கடைபிடித்து இரு நிலைகளிலும் நன்மை சம்பாதிக்கும் பாக்கியம் இறை நம்பிக்கையாளனுக்கே தவிர வேறு எவருக்கும் இல்லை.
'முஃமினுடைய காரியம் ஆச்சரியத்தை அளிக்கிறது. அவனுடைய அனைத்துக் காரியங்களும் நல்லதாகவே அமைகின்றன. இந்த நிலை முஃமினைத் தவிர வேறு எவருக்கும் கிடைப்பதில்லை. அவனுக்கு மகிழ்ச்சியான நிலை ஏற்பட்டால் அவன் (இறைவனுக்கு) நன்றி செலுத்துகிறான். அது அவனுக்கு நன்மையாக அமைந்து விடுகிறது. அவனுக்குத் தீங்கு ஏற்பட்டால் பொறுமையைக் கடைபிடிக்கிறான். அதுவும் அவனுக்கு நன்மையாக அமைகிறது' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அறிவிப்பவர்: ஷுஹைப் (ரலி) நூல்: முஸ்லிம் (5318)

'யாருக்கு அல்லாஹ் நன்மையை நாடுகிறானோ அவரை சோதனைக்கு உள்ளாக்குகின்றான்' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி)
நூல்: புகாரீ (5645)
மேலும் நமக்கு ஏற்படும் ஒவ்வொரு துன்பமும் நமது பாவங்களை அழிக்கிறது என்பதை மனதில் கொள்ள வேண்டும்.
'ஒரு முஸ்லிமைத் தைக்கும் முள் உட்பட அவருக்கு நேரிடும் துன்பம், நோய், துக்கம், கவலை, தொல்லை, மனவேதனை ஆகிய எதுவாயினும் அதற்குப் பதிலாக அவருடைய பாவங்களிலிருந்து சிலவற்றை அல்லாஹ் மன்னிக்காமல் இருப்பதில்லை' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அறிவிப்பவர்: அபூஸயீத் (ரலி) நூல்: புகாரீ (5641)

இறைவனால் தேர்தெடுக்கப்பட்ட நபி (ஸல்) அவர்கள் கூட துன்பத்திற்கு ஆளாகியுள்ளார்கள் என்பதைக் கவனத்தில் கொள்ள வேண்டும். அதற்கு ஏற்றது போல் அல்லாஹ் கூலியையும் கொடுக்கிறான்.
நபி (ஸல்) அவர்கள் காய்ச்சல் கண்டு சிரமப்பட்டுக் கொண்டிருந்த போது அவர்களிடம் நான் சென்று அவர்களை(ப் பணிவோடு) தொட்டேன். அப்போது நான் 'தாங்கள் கடும் காய்ச்சலால் சிரமப்படுகிறீர்களே!' என்றேன்.
நபி (ஸல்) அவர்கள் 'ஆம் உங்களில் இருவர் காய்ச்சலால் அடையும் துன்பத்தைப் போன்று (நான் ஒருவனே அடைகிறேன்)' என்றார்கள்.
நான் '(இத்துன்பத்தின் காரணமாக) உங்களுக்கு இரு (மடங்கு) நன்மைகள் கிடைக்குமா?' என்று கேட்டேன்.
நபி (ஸல்) அவர்கள் 'ஆம். ஒரு முஸ்லிமுக்கு ஏற்படும் நோயாயினும் அது அல்லாத வேறு துன்பமாயினும் (அதற்கு ஈடாக) மரம் தன் இலைகளை உதிர்த்து விடுவதைப் போன்று அவருடைய பாவங்களை அல்லாஹ் உதிர்க்காமல் இருப்பதில்லை' என்றார்கள்.
அறிவிப்பவர்: அப்துல்லாஹ் பின் மஸ்வூத்(ரலி)
நூல்: புகாரீ (5667)

எனவே எவ்வளவு பெரிய கஷ்டங்கள் வந்தாலும் இறைவனைப் பற்றி தவறாக நினைக்காமல் பொறுமை மேற்கொண்டு துன்பங்களை ஈமானிய வலிமையுடன் எதிர் கொண்டு இறையருளைப் பெறுவோமாக!

## சற்குருவின் சகவாசம் 5

சற்குரு என்றால் யார் ?



குரு என்ற வார்த்தையின் அர்த்தம்...? குரு என்றால் யார்...? நம் ஆன்மிக வாழ்க்கைக்கு குரு அவசியமா....? குரு இல்லாமல் பயணிக்க முடியாதா...
இந்தியாவைத் தவிர உலகத்தின் எந்த பகுதியிலும் 'குரு' என்கிற விஷயம் பற்றி பெரிய சிலாகிப்பு இருக்கிறதா என்ற கேள்வி எனக்குள் உண்டு. இல்லையோ என்ற எண்ணமும் உண்டு. இந்துமத தத்துவத்தில் குரு என்கிற விஷயத்திற்கு மிக மிக முக்கியத்துவம் கொடுக்கப்பட்டிருக்கிறது.
இந்து மதத்தில் இந்த குரு ஆச்சார்யன் அல்ல, பாடம் சொல்லி கொடுக்கிறவரோ, வித்தை சொல்லிக் கொடுக்கிறவரோ, பழக்க வழக்கங்கள் சொல்லிக் கொடுக்கிறவரோ அல்ல. மதபோதகரும் அல்ல. ஒரு மதத்தின் சட்ட திட்டங்களை, ஆசார அனுஷ்டானங்களைச் சொல்லித் தருபவரும் அல்ல.
ஆனால் இஸ்லாத்தில் ஷேகுமார்கள் என்கிற குருமார்கள் இதையெல்லாம் கற்றுக் கொடுத்து , அதன் படி செயலாற்ற முரீதுகளுக்கு (சீடர்களுக்கு) அறிவுறுத்துகிறார்கள்
ஒரு குருவிற்கு தந்தைக்குண்டான ரத்த பாசம் கிடையாது. 'அவன் என் பிள்ளை. அவன் தவறே செய்யக்கூடாது, தவறு செய்தால் அவனைக் கண்டிப்பதற்குத்தான் நான் இருக்கிறேன்' என்ற முரட்டுத்தனம் ஒரு குரு காட்டுவதில்லை.
நபிகளாரின் மகள் அன்னை பாத்திமா (ரலி) அவர்கள் கூட நபிகளாரைத் " என் தந்தையே !" என்றழைத்தது இல்லை. நபித்தோழர்களைப் போல் " யா ரசூல்லாஹ் !" என்று நுபுவத்தை முன்னிறுத்தி அழைத்தார்கள்.
ஒரு தாயின் வெகுளித்தனமும் குருவிடம் கிடையாது. என் பிள்ளை என்ன செய்தாலும் என் பிள்ளை தானே, அவனை நான் பொறுத்துக் கொள்ளத் தானே வேண்டும். அவன் திருடனாக இருந்தாலும் ஏற்றுக் கொள்ளத்தானே வேண்டும் என்கிற அதீதமான நெகிழ்வும் குருவிடம் கிடையாது.

ஒரு சமயம் மக்ஸூமி குலத்தைச் சேர்ந்த ஒரு பெண் திருடி விட்டாள். இது குரைஷி குல மக்களுக்கு கவலையை ஏற்படுத்தியது. (மக்ஸூமி குலம் என்பது குரைஷி கோத்திரத்தின் ஒரு கிளையாகும்) ஆகவே அவர்கள் ஒன்று கூடி, களவாடிய பெண் குறித்து நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் பரிந்து செய்ய நபிகளாரின் வளர்ப்பு மகனார் உஸாமா இப்னு ஜைத் (ரலி) அவர்களை அனுப்புகிறார்கள்.

இதைத் தொடர்ந்து நபிகளாரிடம் அந்தப் பெண்ணுக்காக உஸாமா பரிந்து பேசினார்.

அப்போது நபி (ஸல்) அவர்கள், 'அல்லாஹ்வின் குற்றவியல் சட்டங்களில் ஒன்றில் நீ பரிந்துரை செய்கிறாயா?' எனக் கோபமாகக் கேட்டு விட்டு, 'உங்களுக்கு முன் இருந்தோர் அழிந்து போனதற்கு காரணம் – அவர்களில் வசதியானவர் திருடினால் அவரை அவர்கள் விட்டு விடுவார்கள். ஏழை திருடினால் அவரை தண்டிக்க முயலுவார்கள். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! முஹம்மதின் மகள் பாத்திமா திருடி இருந்தாலும் அவளுடைய கையையும் நான் துண்டிப்பேன்' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (அறிவிப்பாளர்: ஆயிஷா (ரலி) நூல்: புகாரி: 6788)

ஒரு கணவனுக்கு உண்டான உரிமை போல எந்தவிதமான உபயோகப்படுத்தலும் குருவுக்கு இல்லை. மனைவியைப் போல நீங்கள் பேசுவதற்கெல்லாம் தலையாட்டுகிறவரும் அல்ல.

அப்படியானால் குரு சிநேகிதனா, இல்லை. அதற்கும் மேலே. சிநேகிதனிடம் கூட ஒரு பொறாமை இருக்கும். உங்களோடு ஒரு போட்டி மானசீகமாக இருக்கும். தனக்கு பின் படியில் தன் தோழன் இருக்க வேண்டும் என்ற ஆவல் இருக்கும். நானே கதாநாயகன் என்ற மமதை இருக்கும். அதற்கான முனைப்புகள் இருக்கும். குரு அப்படிப்பட்டவரும் அல்ல.

நபிகளாரின் தோழர்களை "ஸஹாபாக்கள் " என்றழைக்கப்பட்டனர் . "ஸஹாபா " என்றால் நபித்தோழர் என்று அர்த்தம் கொள்ளப்பட்டதே தவிர அது நட்பு ரீதியானது அல்ல .

" ஸஹாபா " என்றால் அது ஒரு தரஜா . நபிகளாரை நேரடியாக கண்களால் பார்த்து, தங்கள் கஃல்புகளால் உளமாற நபியாக ஏற்றுக் கொண்டவர்களுக்கு இறைவன் கொடுத்த கண்ணிய பெயர் ஸஹாபாக்கள் . அது களங்கமில்லா நட்பை விடவும் எவ்வளவோ மேலானது.மேன்மையானது .

இந்த ஸஹாபாக்களை நேரில் கண்டவர்களுக்கு "தாபீன்கள் " என்ற ஒரு தரஜா .தாபீன்களை நேரில் பார்த்தவர்களுக்கு "தபா தாபீன்கள் " என்ற தரஜா. இதெல்லாம் தன் ஹபீபான அண்ணெலெம் பெருமானர் ரசூலே கரீம் ஸல்லல்லாஹு அலா முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு கொடுத்த மாபெரும் கண்ணியம்.

குரு எப்படிப்பட்டவர் என்ற ஒரு கேள்வி வருகிறது.

"கருணை என்றால் ஒரு வரம்புதான் இல்லையோ, குருவின் அருளுக்கொரு உவமைதான் சொல்லவோ" என்று ஒரு பாடல் உண்டு.

நேர்த்தியான மனிதர் என்பதற்கு ஒரு வரைமுறையே இல்லை. எல்லா இடத்திலும் செயல் நேர்த்தியும், சொல் நேர்த்தியும், யோசிப்பு நேர்த்தியும், பழகு நேர்த்தியும் கொண்டவர் குரு. குறையே இல்லாதவர் குரு. உங்களுக்குக் குறையாகத் தென்பட்டதெல்லாம் பிறகு மிகப் பெரிய நிறைவாக வெகு சீக்கிரமே தெரிய ஆரம்பித்து விடும். அவரை மறுத்துப் பேசியதோ, கீழ்ப்படிய மறுத்ததோ எத்தனை பெரிய முட்டாள்தனம் என்று வெகு சீக்கிரத்தில் நிரூபணம் ஆகும்.

குருவுக்கு மட்டும் இப்படிப்பட்ட ஒரு உயர்ந்த இடம் சொல்லக் காரணம் என்ன ?

அவர் உங்களைப் போலவே மிகச் சாதாரணமாக இருப்பார்.

(நபியே!) இன்னும் உமக்கு முன்னர் நாம் அனுப்பிய தூதர்களெல்லாம் நிச்சயமாக உணவருந்துபவர்களாகவும், கடை வீதிகளில் நடமாடுபவர்களாகவும் தாம் இருந்தார்கள்;

(அல்குர்ஆன்: 25:20)

அப்படி அவரிடம் என்ன இருக்கிறது என்ற கேள்விக்கு யார் குருவாக முடியும் என்கிற உபகேள்வியையும் போட்டுக் கொண்டால் பதில் கிடைப்பது எளிதாக முடியும்.

விருப்பு வெறுப்பு இல்லாமல் எவர் நடுநிலையில் இருக்கிறாரோ அவரே நேர்த்தியான மனிதராக முடியும். எது குறித்தும் எப்போதும், எந்த நிலையிலும் விருப்பு வெறுப்பற்று இருத்தல், யோசிக்கும்போதே, பிரச்சனைகளை அணுகுகின்ற போதே, நடு நிலையில் நிற்றல். மொழி சார்ந்தோ, தேசம் சார்ந்தோ, கலாச்சாரம் சார்ந்தோ இல்லாதபோது நடுநிலையில் நிற்றல் என்றால் என்ன என்பது புரியும். இப்படி மொழி, தேசம் சாராது எல்லோராலும் இருக்க முடியாது. அதற்கு மிகப் பெரிய நேசிப்பு தேவை. சகல உயிர்களையும் நேசிக்கிறவர் இவைகளையெல்லாம் கடந்து வந்து நிற்பார்.

பிறப்பால் உயர்வு தாழ்வு காட்டாதீர் !

மக்களே! உங்களது இறைவன் ஒருவனே; அறிந்து கொள்ளுங்கள்: எந்த ஓர் அரபிக்கும் ஓர் அரபி அல்லாதவரை விடவோ, எந்த ஓர் அரபி அல்லாதவருக்கும் ஓர் அரபியை விடவோ எந்த மேன்மையும் சிறப்பும் இல்லை.

எந்த ஒரு வெள்ளையருக்கும் ஒரு கருப்பரை விடவோ, எந்த கருப்பருக்கும் ஒரு வெள்ளையரை விடவோ எந்த மேன்மையும் சிறப்பும் இல்லை.

இறையச்சம் மட்டுமே ஒருவரின் மேன்மையை நிர்ணயிக்கும். நிச்சயமாக அல்லாஹ்விடத்தில் உங்களில் மிகச் சிறந்தவர் உங்களில் அதிகம் இறை அச்சம் உள்ளவர்தான்.

(அஸ்ஸில்ஸலதுல் ஸஹீஹா2700, அத்தர்கீப் வத்தர்ஹீப், அல்பைஹகீ, தஹாவி)

தலைமைக்குக் கீழ்ப்படிவீர்!

மக்களே! அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ளுங்கள் கருப்பு நிற (அபிசீனிய) அடிமை ஒருவர் உங்களுக்குத் தலைவராக ஆக்கப்பட்டாலும், அவர் அல்லாஹ்வின் வேதத்தைக் கொண்டு உங்களை வழி நடத்தி , அதை உங்களுக்கிடையில் நிலைநிறுத்தும் காலமெல்லாம் (அவரது சொல்லைக்) கேட்டு நடங்கள். (அவருக்குக்) கீழ்ப்படியுங்கள்!
(ஸுனன் நஸாயி 4192, ஜாமிவுத் திர்மிதி1706)
இதைத்தான் நபிகளார் தனது இறுதி பேருரையில் போதித்தார் .
எவரும் எதிரியில்லா, எதுவும் எதிரியில்லா ஒரு நிலை வேண்டுமெனில் எதையும் சார்ந்திராத ஒரு தனிமை, ஒரு அமைதி, ஒரு சந்தோஷம் மிக முக்கியம். அந்த சந்தோஷமான அமைதிதான் ஒருவரை குருவாக்குகிறது. சகலமும் அறிந்த சாந்தம் ஒருவரைத் தெளிவாக்குகிறது. தெளிவானவர்தான் குருவாக உருவாக முடியும். ஏனெனில் அவர் எதையும் சாராதவர். எந்த பக்கமும் இல்லாதவர். எப்போதும் நடுநிலையில் நிற்பவர். எந்த பாசப்பிடிப்பிலும் சிக்கித் தவிக்காதவர்.
அவர்தான் அண்ணலெம் பெருமானார் நபி முஸ்தபா ரசூலே கரீம் ஸல்லல்லாஹு அலா முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்தாம்.

## சற்குருவின் சகவாசம் 6

சற்குருவின் வாக்குப் பலித்தது



சற்குரு அமர் இப்னு உதுமான் (ரஹ்) அவர்கள் குர்ஆனிலிருந்து மொழி பெயர்த்து வைத்திருந்த மெஞ்ஞான ரகசிய கருவூலம் பற்றிய ஆய்வு நூலின் ஒரு சிறு பகுதியை தம் தொழுகை விரிப்பின் கீழே வைத்து விட்டு , 'உளூச்' செய்யச் சென்றார்கள் .
அவர்கள் உளூச் செய்து கொண்டிருக்கும் பொழுது , அது பற்றிய நினைவு அவர்களுக்கு வரவே ,தம் ஊழியர் ஒருவரை அழைத்துத் தாம் ,தம் தொழுகைவிரிப்பின் கீழே ஒரு காகிதக் கட்டை வைத்துவிட்டு வந்ததாகவும் , அதனை எவரும் எடுத்துச் சென்று விடா வண்ணம் பாதுகாத்துக் கொண்டு நிற்குமாறும் கூறினர் .
அவ்வாறே ஊழியர் அங்கு சென்று பார்த்தபொழுது , அதனைக் காணவில்லை .இதனை சற்குரு அவர்களிடம் கூறியபொழுது, அவர்களுக்கு ஏற்பட்ட துக்கத்திற்கும், சினத்திற்கும் அளவில்லை.
" மெஞ்ஞான ரகசிய கருவூலத்தின் சிறுபகுதியை எடுத்துச் சென்றவன் எவனாக இருந்தபோதினும், அவனுடைய கைகளும், கால்களும் வெட்டப்பட்டு, கழுவியேற்றப்பட்டு எரித்து சாம்பலாக்கபடுவானாக ! " என்று சபித்தார்கள்.
அப்படி என்ன ரகசியம் அன்றைய தினம் எழுதப்பட்டது ?
மெஞ்ஞான ரகசிய கருவூலத்தில் , "ஆன்மாவானது ஆதத்தின் உடலில் புகுந்த சமயத்தில் இறைவன் வானவர்களை நோக்கி, " ஆதத்திற்குப் பணியுமாறு கூறினான் இப்லீஸைத் தவிர அனைவரும் அவ்விதம் செய்தார்கள் .

وَاِذْ قُلْنَا لِلْمَلٰٓٮِٕكَةِ اسْجُدُوْا لِاٰدَمَ فَسَجَدُوْۤا اِلَّاۤ اِبْلِيْسَ قَالَ ءَاَسْجُدُ لِمَنْ خَلَقْتَ طِيْنًا

இன்னும், (நினைவு கூர்வீராக!) நாம் மலக்குகளிடம் “ஆதமுக்கு நீங்கள் ஸுஜூது செய்யுங்கள்” என்று கூறிய போது, இப்லீஸை தவிர அவர்கள் ஸுஜூது செய்தார்கள்; அவனோ: “களி மண்ணால் நீ படைத்தவருக்கா நான் ஸுஜூது செய்ய வேண்டும்?” என்று கூறினான். (அல்குர்ஆன்: 17:61)
மலக்குகள் எல்லாரும் தலை குனிந்து அடிபணியும் போது , நிமிர்ந்து நின்ற இப்லீஸ் , ஆன்மாவைப் பெற்ற ஆதத்தைப் பார்த்து போது , மனித படைப்பின் சூட்சம ரகசியத்தை கண்டு கொண்டான் .
قَالَ اَرَءَيْتَكَ هٰذَا الَّذِىْ كَرَّمْتَ عَلَىَّ لَٮِٕنْ اَخَّرْتَنِ اِلٰى يَوْمِ الْقِيٰمَةِ لَاَحْتَنِكَنَّ ذُرِّيَّتَهٗۤ اِلَّا قَلِيْلًا

"எனக்கு மேலாக கண்ணியப்படுத்திய இவரைப் பார்த்தாயா? நீ எனக்கு கியாம நாள்வரை அவகாசம் கொடுத்தால், நாம் இவருடைய சந்ததிகளில் சிலரைத் தவிர (மற்றவர்களை) நிச்சயமாக வழிகெடுத்து விடுவேன்" என்று (இப்லீஸ்) கூறினான். (அல்குர்ஆன் : 17:62)
மனிதனின் சூட்சம ரகசியத்தை தன் கண்ணால் பார்த்து விளங்கிக் கொண்ட அவன், இந்த ரகசியத்தை பிறரிடம் வெளியிடாமல் இருக்க, இறைவன் அவனை கொன்றொழிக்க முற்பட்ட பொழுது , அவன் தனக்கு உயிர்ப்பிச்சை அளிக்குமாறு வேண்டினான் .
அவ்வாறு அவனுக்கு உயிர் பிச்சை அளித்த இறைவன், "உன்னை மக்கள் எப்போதும் சந்தேகக்கண் கொண்டே பார்ப்பர். ஒருவனும் உன்னை உண்மை உரைப்பவனாக கருத மாட்டார்கள்" - என்று கூறினான் .

இது போன்ற இன்னும் எத்தனை எத்தனையோ மெஞ்ஞான ரகசிய செய்திகள் அதில் எழுதப்பட்டிருந்தன அவற்றை எடுத்துச்சென்றது யார் ?
தேடுவோம் .
858-ம் வருடம் ஈரான் பெர்சியாவில் ஃபர்ஸ் மகாணத்தின் அல்-பேடா எனும் ஊரில் மன்சூர் ஹல்லாஜ் பிறந்தார். முகம்மது நபி (ஸல்) அவர்களின் தோழரான அபு அயுப் அவர்களின் வம்சாவளியைச் சேர்ந்த அல் ஹலாஜின் புதல்வர் மன்சூர் அல் ஹல்லாஜ் சற்குரு அமர் இப்னு உதுமான் (ரஹ்) அவர்களிடம் சீடராக இருந்தார் .
மெஞ்ஞான கேள்விகளில் தழைத்து சிறந்து சுறுசுறுப்பாக விளங்கிய மன்சூர் ஹல்லாஜ் திடீரென மௌனமானார் .அவருடைய முகத்தில் தேடுதல் மட்டுமே வியாபித்திருந்தது. சற்று காலத்திற்கு பின் அவர்களின் முகம் பிரகாசித்தது.
வீதிகளிலும், தெருக்களிலும், சந்துகளிலும், பொந்துகளிலும் மன்சூர் ஹல்லாஜ் ஒருகணமும் ஓயாது ஆன்மீக ரகசியங்களை அப்பட்டமாக வழங்கிக் கொண்டிருந்தார்கள் அம்முழக்கத்தைக் கேட்டு அவருடன் ஒத்து இசை பாடுவது போன்று வீதிகளும் தெருக்களும் சந்துக்களும் பொந்துகளும் திரும்ப திரும்ப எதிரொலி செய்தன.
அதுகேட்டு மக்கள் வியப்பும் திகைப்பும் அடைந்தார்கள்.
" இவர் என்ன இவ்வாறு திடீரென உளறுகிறார் ? பேசுவதெல்லாம் மார்க்கத்திற்கும் முரணாகவும் அபத்தமாக உள்ளது " என்று அவர்கள் பேசிக் கொண்டார்கள் அவர்கள் அவரின் ஆசான் அமர் இப்னு உதுமான் (ரஹ்) அவர்களிடம் ஒருங்கு திரண்டு சென்று மன்சூர் தங்களுடைய மாணவர்தானே ? அவர் இவ்வாறு இவ்வாறெல்லாம் தெருக்களில் உளறிக் கொண்டிருக்கிறார் . இவ்வாறுதான் தாங்கள் அவருக்கு கல்வியை போதித்து ? என்று கேட்டார்கள்.

மன்சூர் ஹால்லாஜ் அவர்களின் கூற்றை மக்கள் அவரின் சற்குருவான அமர் இப்னு உதுமான் (ரஹ்) அவர்களுக்கு உரைத்ததும், இது என்னவென்றே சற்குருக்கு விளங்கவில்லை .எப்படி மார்க்கத்துக்கு முரணான சிந்தனை அவருக்கு ஏற்பட்டது ? என்று சற்குருவுக்கு தெரியவில்லை
அதன்பின் நிலைமையை ஒருவாறு புரிந்து கொண்டார்கள் அவர்கள் எழுதி வைத்திருந்த ஆன்மீக ரகசியங்கள் அடங்கிய அந்த காகித கட்டை அவர்தான் எடுத்துச் சென்றிருக்க வேண்டும். அதுதான் அவரை இவ்வாறெல்லாம் படுத்துகின்றது என்பதை அவர்கள் உணர்ந்தார்கள். நாம் அதுபற்றி கவனித்து ஆவன செய்வதாக கூறி வந்த அவர்களை வழி அனுப்பி வைத்தார்கள்.
சத்குரு தன் மாணாக்கர் ஒருவரை அழைத்து மன்சூர் ஹல்லாஜை அழைத்து வருமாறு செய்தார் .
மன்சூர் ஹல்லாஜ் வந்ததும் , அவரிடம் தான் கேள்விப்பட்டதே வினவ, " ஆம் . அதில் என்ன தவறு ? தாங்கள் ஒளித்து வைத்திருந்ததை நான் வெளியில் எடுத்துரைத்தேன். உள்ளே இருந்தது வெளியே வந்துதானே ஆகவேண்டும். ரகசியமாக இருந்தது பரகசியம் ஆகிவிட்டது. இறைவன் மனிதத் தன்மையில் தன்னுடைய ஒளிமயமான தெய்வீகத்தன்மையின் ரகசியத்தை அவன்தானே வெளிப்படுத்தினான். அதன்பின் தன் படைப்பினங்களில் முன் உண்ணவும் அருந்துவுமான உருவத்தில் தோற்றம் வழங்கினான். இதையே நாம் ஏன் மக்களுக்கு தெரிவிக்காமல் மறைத்து வைத்திருக்க வேண்டும்? " என்று அமைதியாக பதில் கூறினார்

அதிர்வலையை ஏற்படுத்திய பேச்சு முறையான அங்கீகாரம் இல்லாததால் சூபி வாழ்வு முறைக்கு இயல்பாகவே பெரும் எதிர்ப்பு அப்போது நிலவியது. அந்தக் காலகட்டத்தில், மிகவும் பரவசமடைந்த நிலையில் இவரிடம் இருந்து வெளிப்படும் பேச்சும் எழுத்தும் சமூக, அரசியல், மத, பொருளாதார ரீதியாகப் பெரும் அதிர்வலைகளை ஏற்படுத்தின.
ஆன்மிக அனுபவங்களின் மூலம் தான் கண்டுணர்ந்த ரகசியங்களைத் தன்னைச் சந்திக்கும் அனைவரிடமும் பாகுபாடின்றிப் பகிர்ந்தார். ஆனால், இது சூபி முறையின் கட்டுப்பாட்டை மீறிய செயல் என்று சூபி ஞானிகள் கருதினர். புரிந்துகொள்ள முடியாத விஷயங்களை சாமானியர்களிடம் பேசுவதால் ஏற்படக்கூடிய ஆபத்தை சூபி ஞானிகள் எடுத்துச் சொல்லி வந்தார்கள் ஆனால், அவரோ இதை எல்லாம் ஏற்றுக்கொள்ளும் நிலையை எப்போதோ கடந்துவிட்டிருந்தார்,

கைதுசெய்யப்படுவதற்குச் சில நாட்களுக்கு முன்பாக அந்த மாதிரி ஒரு பரவச நிலையில் 'அனல்-ஹக்' என்று சொல்லி இருக்கிறார். இதன் அர்த்தம் 'நானே உண்மை' என்பதாக எடுத்துக்கொள்ளலாம். ஆனால், ஹக் என்பது இறைவனின் பெயர்களில் ஒன்று என்பதால் அது 'நானே கடவுள்' என்று எடுத்துக்கொள்ளப்பட்டது.
இவ்வாறு சொல்வது இஸ்லாத்தைப் பொறுத்தவரை மன்னிக்கவே முடியாத ஒரு குற்றம். ஆனால், அவரோ அதற்கு விளக்கம் அளிக்கும் மனநிலையில் இல்லை. ஞானிகள் விளக்கம் அளிக்காதவரையில் அவர்களின் வார்த்தைகள் வெறும் ஓசை தானே? வார்த்தைகளில் அர்த்தம் தேடுவதே அபத்தம்தான். ஆனால், ஆட்சியாளர்களோ வெறும் ஓசைகளுக்கு அர்த்தம்

கற்பித்துக்கொண்டனர். அவருக்கு என்ன தண்டனை வழங்கப்படவேண்டும் என்பதில் ஒருமித்த கருத்தை எட்ட முடியாததால் விசாரணை நீண்ட காலம் நீடித்தது.
அவரது கைதுக்குப் பின் பல வருடங்கள் (911-922) பாக்தாத்தில் சிறையில் அடைக்கப்பட்டிருந்தார். நாட்டில் பல்வேறு அரசியல் குழப்பங்கள் உச்சத்தில் இருந்த வருடம் அது. அப்போது அரசனின் செல்வாக்கு குன்றி அரசு தள்ளாடிக் கொண்டிருந்தது. அந்தத் தருணத்தில் மக்களைத் திசை திருப்பும் விதமாக இவருக்கு 922-ம் வருடம் மார்ச் 26 அன்று மரண தண்டனை விதிக்கப்பட்டது.
" மெஞ்ஞான ரகசிய கருவூலத்தின் சிறுபகுதியை எடுத்துச் சென்றவன் எவனாக இருந்தபோதினும், அவனுடைய கைகளும், கால்களும் வெட்டப்பட்டு, கழுவியேற்றப்பட்டு எரித்து சாம்பலாக்கபடுவானாக! " - என்று சபித்த சற்குரு அமர் இப்னு உதுமான் (ரஹ்) அவர்களின் வாக்கு செயலாக்கப்பட்டு
மார்ச் 28 அன்று விண்ணுலகுக்கு அனுப்பிவைக்கப்பட்டார் மன்சூர் ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் .
ஆனால், உயிரற்ற உடலின் ரத்தநாளங்களின் வழியாகப் பீறிட்ட ரத்தமானது மரண மேடையில் "அனல்-ஹக் " என்று எழுதி வழிந்தோடியது. பயம் கொண்ட அரசன், உடம்பை எரிக்கச் சொன்னான்.

தீ ஜுவாலையோ உடலை அன்போடு தழுவி அனல்-ஹக் என்று ஓசை எழுப்பியபடி பெரும் புகையால் பாக்தாத்தை இருளாக்கியது. நெருப்பு அணைந்த பின், காற்றில் பயணித்த சாம்பலானது டைகிரிஸ் நதியின் மேல் அனல்-ஹக் என்ற வடிவில் படர்ந்து பாக்தாத்தையே விழுங்கும் வண்ணம் வீறுகொண்டு உயர்ந்தது.
மன்சூர் ஹல்லாஜ் சொல்லியிருந்தபடி, அவரது மேலாடையை நதியின் மேல் உதவியாளர் விரித்தார். அதன் பின்பு சீற்றம் குறைந்து இயல்பு நிலைக்குத் திரும்பிய நதியானது, தன்னுள் கரைந்த பேருண்மையை மெய்ஞான சமுத்திரத்தில் கலக்கும் முனைப்புடன் விரைந்து சென்றது...
சற்குரு அமர் இப்னு உதுமான் (ரஹ்) அவர்கள் எழுதிய மெஞ்ஞான ரகசிய கருவூலத்தின் பெரும் பகுதி இவ்வுலகில் மறைக்கப்பட்டு விட்டதாக மெஞ்ஞானிகள் கருதுகிறார்கள்.
ரஹ்மத் ராஜகுமாரன்

## சற்குருவின் சகவாசம் 7

சற்குருவும் , சதா சோதனையும் .



பாக்தாத் மாநகரின் முனஃப்பரியாப் பகுதியில் இளவல் அப்துல்காதிர் நடந்து சென்றனர் . அப்பொழுது ஒரு வீட்டின் கதவு படாரென்று திறந்தது. வயோதிக பெரியார் ஒருவர் தம் தலையை வெளியே நீட்டி, " அப்துல்காதிரே...! நீர் நேற்று இறைவனிடம் எதை வேண்டினீர் ? " என்று வினவினார்.
பெரியாரின் எதிர்பாராத இக்கேள்வி இளவல் அப்துல் காதிரை திணறச் செய்தது. எதுவும் மறுமொழி கூற இயலா நிலையில் அவர்களும் அங்கிருந்து அடி எடுத்து வைத்தனர். கதவும் படாரென்று மூடிக்கொண்டது.

சற்று தொலைவு சென்றதும் இளவல் அப்துல்காதிர் தன்னுணர்வு ஏற்பட்டது. தம்மிடம் அக்கேள்வியை விடுத்தவர் இறைவனின் அருள் பெற்ற இறைநேசராகத்தான் இருக்க வேண்டும். நாம் இறைவனிடம் மனமுருகி வேண்டியது இவருக்கு எப்படி தெரியும் ? எனவே வந்த வழியே மீண்டும் திரும்பிச் சென்று அன்னாரின் வீட்டை தேடினர். கிடைக்கவில்லை. அக்கணத்திலிருந்து எவ்வாறாவது அப்பெரியாரைக் கண்டுபிடித்து ,அவர்களின் காலடியிலடியில் அமர்ந்து ,ஆத்மீக ஞானம் பெற வேண்டும் என்று நாடினார் .

பாக்தாத் நகரின் தெருக் கோடியில் ஒருவர் நின்று குளிர் பானம் விற்றுக் கொண்டிருப்பதை கண்டார்கள். மற்றவர்களின் குளிர் பானங்களிலெல்லாம் ஈக்கள் மொய்த்துக் கொண்டிருக்க , இவர் விற்கும் பானத்தில் மட்டும் ஈக்கள் மொய்க்காதிருப்பதைக் கண்டதும் இவரும் இறையருள் பெற்றவராகத்தான் இருக்க வேண்டும் என்று எண்ணினார்கள். மறுகணம் அவருடைய முகத்தை ஏறிட்டுப் பார்த்தார்கள் . என்ன வியப்பு ! அன்று கண்ட அதே வயோதிக இறைநேசர்தான் அவர்.

அவர்களை அணுகி ஸலாம் உரைத்து, " நலமா ? "என்று அப்துல் காதிர் விசாரித்தார்கள். யார் நீ..? என்று மறு கேள்வி கேட்டார் அப்பெரியவர் .

"தங்களின் இல்லம் முனஃப்பரிய்யா பகுதியில்தானே உள்ளது? ஒருநாள் நான் அவ்வழியே வந்த போது என்னை பெயர் சொல்லி அழைத்தவர் தாங்கள்தானே ? "

அதற்கு அவர் பதில் கூறவில்லை .

" நல்லது. தங்களின் குளிர்ந்த பானத்தில் மட்டும் ஈக்கள் மொய்க்கவில்லையே ஏன் ? என்று அப்துல் காதிர் கேட்க, "நெருப்பில் கூட ஈக்கள் மொய்க்குமா , என்ன ? " இது அவரின் பதில்.

நெருப்பு என்பது ஹலால் என்பதை இளவல் கற்ற கல்வியிலிருந்து விளங்கிக் கொண்டார்கள் .

பெரியவர் கடையை மூடிவிட்டு வீடு சேர்ந்ததும் , அவருக்கு பின்னே இளவல் போய் , "எனக்கு ஆத்ம ஞானத்தை அருள்கூர்ந்து போதியுங்கள் !

"குளிர்பானம் விற்பனை செய்பவரிடம் வந்து ஆத்ம ஞானத்தை போதிக்குமாறு கேட்கிறீரே. இதுவென்ன வேடிக்கை ? " என்று கூறிவிட்டு கதவை 'படார்' என்று சாத்திக் கொண்டார் .

இரவெல்லாம் தூக்கம் வராமல் புரண்ட அப்துல் காதிர் மறு நாள் காலை அப்பெரியவரின் கடையை கடைக் கண்ணால் கூட பார்க்காமல் தள்ளி இருக்க .

" மார்க்க கல்வி கற்பதற்காக நெடுந்தொலைவுப் பயணத்தை மேற்கொண்ட இளவலுக்கு , வழிப்பறியே தங்களுங்களுக்கு வளம் சேர்க்கும் தொழிலாகக் கொண்டிருக்கும் கொள்ளையருக்கும் தொடர்பு உண்டென்றால், ரொட்டிக் கடை காரனுக்கும் செலுத்தவேண்டிய பாக்கிக்கும் பாழ் மண்டபத்தில் கிடக்கும் பத்தரை மாற்றுத் தங்க நாணயத்திற்கும் தொடர்பு உண்டென்றால், விண்ணுக்கும் மண்ணுக்கும் ஏன் தொடர்பு இருக்கக்கூடாது ? " என்று எங்கேயோ பார்த்த வண்ணம் பெரியார் உரக்கக் கூறினார் .

இளவல் அப்துல்காதரிக்கு எல்லாம் விளங்கிவிட்டது. தம் பெயரையும், தம் வாழ்க்கையில் நடந்த அத்தனை நிகழ்வு சம்பவங்களையும் மிகத் தெள்ளத்தெளிவாக அறிந்த இவர் , நம்மை சோதிக்கவே இவ்வாறு நடக்கிறார் என்பதையும் நன்கு விளங்கிக் கொண்டார்கள்.

இளவல் அப்துல்காதிர் அவர்கள் முன் சென்று அடக்கத்துடன், தனக்கு ஆத்மஞானம் கற்று கொடுக்க வேண்டினார்கள்.

"நீர் மார்க்க ஞானம் கற்றவராயிற்றே ... உமக்கு ஆத்மஞானம் எதற்கு ? " கேட்டு பின் தம் மாணவராக ஏற்றுக் கொண்டார் அப்பெரியார். அவர்தான் "அபுல் கைர் ஹம்மாது அல் தப்பாஸ்".

இத்துடன் சோதனை முடியவில்லை.அது இன்னும் தொடர்ந்தது.

பெரியவருக்கு நல்ல தின்பண்டங்கள் காணிக்கையாக வரும்போதெல்லாம் , அவற்றில் சிறிதளவுகூட இளவல் அப்துல் காதிருக்கு கொடுப்பதில்லை. அது மட்டுமல்லாது அவர்களை நோக்கி, இன்று இன்ன இன்ன தின்பண்டங்களெல்லாம் காணிக்கையாக வந்தன. அவற்றை நானும் ஏனைய மாணவர்களும் தின்று முடித்து விட்டோம்" என்று கூறுவார் . அது கேட்டு அவர்கள் சிறிதளவும் வருத்தப்படுதில்லை .

ஒரு வெள்ளிக்கிழமை ஜும்மா தொழுக்கை சத்குரு ஹம்மாது மாணவர்களுடன் ரலாபா ஆற்றின் கரையோரமாக சென்றிருந்தபோது, இளவல் அப்துல் காதிரை அவ்வாற்றில் பிடித்து தள்ளிவிட்டனர். இது கண்டு இளவல் அப்துல் காதிர் சினமோ, வருத்தமோ கொள்ளவில்லை . நடுநடுங்கும் குளிரில் அவர்கள் அவ்வாற்று குளிர்நீரில் குளித்து வெளியேறினர். தான் நீரில் முழ்கும் போது தன் சட்டையில் இருந்த குர்ஆனின் சில பகுதிகள் நனைந்து விடாமல் உயர்த்திப் பிடித்துக் கொண்டனர். பின்னர் ஓடோடிச் சென்று தன் சற்குருவையையும்,அவர்களின் குழுவினருடனும் சேர்ந்து கொண்டனர்.

தவறெதும் செய்யாமல் சற்குரு என்னை ஆற்றில் தள்ளிவிட்டது என்பது சற்குரு எனக்கு கொடுத்தது நிச்சயமாக அது தண்டனை அல்ல ..அது கொடுப்பினை . அது எனக்கு மட்டும்தான் கிடைத்திருக்கிறது " என்பதாக சக மாணவர்கள் கேட்ட கேள்விக்கு இதேயே பதிலாக சொன்னார்கள் இளவல் அப்துல் காதிர்.

ஹிஜ்ரி 499 ஆம் ஆண்டு ஷவ்வால் மாதம் 15 ஆம் நாள் வெள்ளிக்கிழமை அன்று சற்குரு ஹம்மாது அவர்கள் தன்னைக் காண வந்த தோழர் ஒருவர் இளவல் அப்துல்காதிர் அவர்களை இலேசாக கண்டு இழுந்துரைத்து விட்டார். இது சத்குருவின் காதில் பட்டதும் அவருக்கு ஏற்பட்ட வருத்தத்திற்கு அளவே இல்லை.

உடனே அவர் தம்மை காண வந்த தோழர் மற்றும் மற்றவர் முன்னிலையில் " நான் அவரை புடம்போட்ட தங்கமாக்குவதற்காக பல்வேறு சோதனைகளுக்கும் ஆளாக்குகின்றோம் இது கண்டு நீர் அவரை தவறாக மதிப்பிட்டு இழிந்துரைப்பதா என்ன ? என்று கடுமையாக எச்சரித்துவிட்டு ,

இறைவனிடத்தில் அவரின் தரஜா உங்களுக்கு தெரியுமா ? என்று எல்லோர் முன்னிலையிலும் சத்குரு அவர்கள் :

" இந்த அஜமி அப்துல் காதிர் வரும் காலத்தில் மாண்புமிகு இறைநேசச் செல்வராக, மிகச் சிறந்த ஆத்ம ஞானியாக விளங்குவார். இறைநேசச் செல்வர்களின் (வலிமார்களின்) தோள் மீதும் இவரின் திருப்பாதங்கள் உள்ளன எனக் கூறுமாறு இறைவனால்

ஆணையிடப்படுவார். இவர் காலத்து இறைநேசச் செல்வர்களின் மாபெரும் அரசராக இவரே விளங்குவார் " என்று நன்மாராயம் நவின்றார்.
அந்த இளவல் அப்துல் காதிர்தான் " கௌதுல் ஆலம் தஸ்தஹீர் மஹ்பூபே ஸூப்ஹானி முகையதீன் அப்துல் காதிர் ஜிலானி கத்தஸல்லாஹூ ஸிர்ரஹூல் அஸிஸ் " .
நாமும் நம் தோள்களை தாழ்த்திக் கொடுப்போம் . நம் மீதும் அந்த மஹா சற்குருவின் பொற்கமல மங்கள பாதம் பட்டு இலங்கட்டும்.

## சற்குருவின் சகவாசம் 8

பூரணத்துவம் நிறைந்த குரு.



ஹியூப் ஆன்டென்பியூஸ் என்ற கவிஞர் இப்படி சொல்கிறார்.
" வார்த்தைகள் இல்லாது யாராலும் பிரார்த்தனை செய்ய முடியாது. எவராலும் மொழிக்கு வெளியே வாழ முடியாது. ஒவ்வொன்றும் உரையாடல் சம்பந்தபட்டதாகவே உள்ளது"
ஆம். பிரார்த்தனை ஒரு உரையாடல்தான். அது பூரணத்துவத்துடன் உரையாடுகிறது. இந்த உரையாடலை நீங்கள் கற்றுக் கொள்ள வேண்டும். மரங்களோடு பேசவேண்டும் என்ற ஆசை சில சமயம் உங்களிடம் எழுவதில்லையா ? அவை பதில் தராது என்று நன்றாகவே தெரியும். செடியில் இருக்கும் ரோஜா மலருக்குச் சில சமயம் நீங்கள் ஹலோ சொல்வதில்லையா ? அது அசட்டுத் தனமான காரியம் என்பதால் நீங்கள் ஹலோ சொல்வதில்லை . ஆனாலும் ஆசை இருக்கத்தானே செய்கிறது ?
சில நேரங்களில் சந்திரனுடனும், நட்சத்திரங்களுடன் பேச வேண்டும் என்ற ஆசை எழவில்லையா ? அப்படி எழவில்லை என்றால் நீங்கள் உணரும் தன்மை இழந்துவிட்டதாக அர்த்தம் .

சில சமயம் கற்பாறைகளை அன்புடனும்,பாசத்துடனும் தொட்டதில்லையா ? உங்கள் கண்களுக்குத் தெரியாமல் இருக்கும் பொருட்களிடம் சில சமயம் ஏதாவது சொல்ல ஆசை கொண்டதில்லையா ? அதுவே பிரார்த்தனை, அதுவே உரையாடல் ஆகும்.
அந்தக் காலத்தில் கருவிகள் எதுவும் இல்லாமல் ஆதி மனிதர்கள் உருவாக்கிய முதல் கருவி இந்தக் கல் ஆயுதம் தான்.புதிய சிந்தனைகள், புதிய கண்டு பிடிப்புகள் எல்லாமே இந்தக் கல்லில் இருந்துதான் தொடங்குகின்றன .உழைப்பின் முக்கியத்தை முதல் முறையாக மனிதன் உணர்ந் கொண்டது இந்தக் கல்லிடம் இருந்துதான் . தனித்தனியாக அல்ல, நாம் அனைவரும் ஒரே சமூகமாக ஒன்று சேர்ந்து உழைத்தால், நம் அனைவருக்கும் பலன் அதிகம் என்பதை இந்தக் கல்தான் மனிதனுக்கு கற்றுத் தந்தது .
மேலும் இந்தக் கல் உருவாக்கும் போதுதான் மனிதர்கள் தங்களுக்குள் பேசிக் கொள்ளும் வழக்கத்தையும் ஆரம்பித்திருக்க வேண்டும். கிண்டலடிக்கவும் , சண்டை போடவும், மகிழ்ச்சியை வெளிப்படுத்தவும், நட்பு கொள்ளவும் அவர்கள் கற்றுக் கொண்டது இந்தக் கல்லை உருவாக்கும் போதுதான்.

எனவே, கல்லுக்கு நாம் அனைவரும் நன்றி சொல்ல வேண்டும் .இந்தக் கல் இல்லாவிட்டால் கற்காலம் இல்லை. கற்காலம் இல்லாவிட்டால், இன்றைய நவீன காலமும் இல்லை .எனவே கல்லுக்கு நன்றி செலுத்துங்கள் என்கிறார்கள் விஞ்ஞானிகள். அட போங்க கல்லுக்கென்ன உயிரா இருக்கிறது ?
இருக்கிறது . அட , உயிர் இருக்கிறது . சொன்ன கேளுங்க .
"நாம் மலைகளை தாவூதுக்கு வசப்படுத்திக் கொடுத்தோம் . மாலையிலும் . காலையிலும் அவைகள் அவருடன் சேர்ந்து துதித்தன. " குர்ஆன் ( 38 : 18 )
நபி ஸாலிஹ் (அலை) அவர்களின் ஒட்டகம் மலை ஈன்றெடுத்த ஒட்டகம்தானே..? மலை ஒட்டகத்தை ஈன்றெடுக்குமா ? கேள்வியெல்லாம் கூடாது ,

நபி (ஸல்) அவர்களும் அபூபக்கர் சித்தீக் (ரலி) , உமர் (ரலி) , அலி (ரலி) இவர்கள் உஹது மலையின் மீது இருக்கும் போது உஹது மலை தளும்பியது உடனே " உஹதே ... தளும்பாதே உன் மீது ஒரு நபியும் ,ஒரு சித்தீக்கும். இரண்டு ஷுஹதாக்களும் (இறைவழியில் உயிர் நீர்த்தவர் ) இருக்கும் போது நீ ஏன் தளும்புகிறாய் ? உடனே உஹது நிலைபெற்று நின்றது .

நபி (ஸல்) அவர்கள் " பாறையின் மீது அமர்ந்திருக்கும் ஒருவனின் மன நிலை எப்படி இருக்கிறது என்பதை. அந்தப் பாறைக் கல் அறிந்து கொள்கிறது "

" அபூபக்கர் (ரலி) அவர்கள் வீட்டின் சுவற்றில் பதித்த கல் ஒன்று நான் நபியாவதற்கு முன்பே எனக்கு ஸலாம் சொன்னது

சின்ன கூழாங் கற்கள் திக்ரு செய்கிறது என்பதாக நபி (ஸல்) அவற்றை கையில் எடுத்ததும் கல் திக்ரு செய்வதை நபித் தோழர்களும் கேட்டனர்.

சற்குரு ஸல்லல்லாஹ் அலா முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் பயின்ற உமர் (ரலி) அவர்கள், வெள்ளிக்கிழமை மிம்பர் படி மீது ஏறி, உமர் (ரலி) அவர்கள் குத்பா ஓதிக் கொண்டு இருக்கும் போது, திடீரென நூற்றுக்கணக்கான மைல்களுக்கு அப்பால் இருக்கும் முஸ்லிம் படைத் தளபதியான ஸாரியா (ரலி) அவர்களை உஷார் படுத்தி, " ஸாரியா ஜபல் . . ஸாரியா ஜபல் . . ஸாரியா ஜபல் . . அதாவது ஸாரியா மலை என்று மூன்று தடவை சப்தமாக காற்று வெளியினில் சொல்லி,வழக்கம் போல் குத்பா ஓதி முடிக்கிறார்கள்

ஸாரியா (ரலி) அவர்களுக்கு இவ்வெச்சரிக்கை குரல் கேட்கிறது உடனே தங்கள் படைகளை மலையை நோக்கி அழைத்து சென்று மலைக்குப் பின்னால் மறைந்திருந்த பகைவர்களிடமிருந்து இஸ்லாமிய படை தபபியதோடு பகைவர்களை எளிதாக வெல்ல முடிந்தது

நைல் நதி காலமெல்லாம் ஒடக் கூடிய வற்றாத ஜீவநதியாக முன்பு இல்லை. கோடையில் வற்றி விடக் கூடியது பண்டை காலத்தில் கன்னிப் பெண்ணை பலியிட மீண்டும் வெள்ளப் பெருக்கொடுத்து ஓடும் .இஸ்லாமிய ஆட்சி காலம் எகிப்தின் கவனராக அம்ரு பின் ஆஸ் (ரலி) அவர்கள் எகிப்தின் இக்கொடுமையான சடங்குகயைப் பற்றி மதீனாவில் உள்ள கலீபா உமர் (ரலி) அவர்களுக்கு கடிதம் எழுத....உமர் (ரலி) அவர்கள் நேரடியாக நைல் நதிக்கே கடிதம் எழுதினார்கள் .

" நைல் நதியே..! அல்லாஹ்வின் உத்தரவு கொண்டு காலமெல்லாம் வற்றாத ஜீவ நதியாக பூமியில் ஓடுவதாக இருந்தால் ஓடவும், இல்லையேல் நைல் நதியே பூமிக்கு வேண்டாம்." - என்றெழுதிய கடிதத்தை நைல் நதியின் கரையில் ஒரு பலகையில் அடித்து நடப்பப்பட்டது. அன்றிரவே நைல் நதி பிரவாகம் எடுத்து கரை புரண்டு இன்று வரை ஓடிக் கொண்டிருக்கிறது வற்றாத ஜீவநதியாக !

இவ்வாறெல்லாம் உயிர் இல்லாத அஃறிணை பொருட்களுடன் பேசிய உமர் (ரலி) அவர்கள், 'உமரின் நாவின் வழியாக அல்லாஹ் பேசுகிறான்' என்று நபி (ஸல்) அவர்களால் சிறப்பித்து கூறியுள்ளார்கள் . உமர் (ரலி ) அவர்கள் கூற்றிற்கேற்ப, அல்லாஹ் சில வசனங்களை ( இருபதுக்கும் அதிகமான வேத வசனங்கள் ) இறக்கியதையும் நாமெல்லாம் அறிந்துள்ளோம்.

சகல வஸ்துகளிடம் பேசிய சற்குரு நபி (ஸல்) அவர்களிடம் பயின்ற ஸஹாபி உமர் (ரலி) அவர்களும் அதனை நடைமுறைப்படுத்த அல்லாஹ்வே உமரின் நாவு வழியாக பேசினான் . இதற்கு சகல வஸ்துக்களிடம் அன்பு பாராட்டிய பூரணத்துவம் நிறைந்த சற்குரு ஸல்லல்லாஹ் அலா முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் காரணமாக இருந்தார்கள் .

ஹியூப் ஆன்டென்பியூஸ் என்ற கவிஞர் இப்படி சொல்கிறார்.

" வார்த்தைகள் இல்லாது யாராலும் பிரார்த்தனை செய்ய முடியாது. எவராலும் மொழிக்கு வெளியே வாழ முடியாது. ஒவ்வொன்றும் உரையாடல் சம்பந்தபட்டதாகவே உள்ளது"

## சற்குருவின் சகவாசம் 9

யார் உங்கள் குரு ?



மிகச் சிறந்த சூஃபி ஞானிகளில் ஒருவரான ஹாசன் (ரஹ்) .அவர்கள் இறக்கும் சமயத்தில் "உங்களது குரு யார் ? " என்று யாரோ ஒருவர் கேட்டார்.

அதற்கு அவர், "மிக தாமதமாக இந்த கேள்வியை கேட்டிருக்கிறீர்கள். நேரம் இல்லை. நான் இறந்து கொண்டிருக்கிறேன்" என்று கூறினார்.

அதற்கு கேள்வி கேட்டவர், " நீங்கள் பெயரை மட்டும் சொன்னால் போதுமானது. நீங்கள் இன்னும் உயிரோடு இருக்கிறீர்கள், இன்னும் சுவாசித்து கொண்டும், பேசிக் கொண்டும் இருக்கிறீர்கள். நீங்கள் பெயரை மட்டும் சொன்னால் போதுமானது " என்று கேட்டார்.

அதற்கு ஹாசன் (ரஹ்) அவர்கள் "எனக்கு ஆயிரக்கணக்கான குருமார்கள் இருக்கிறார்கள். நான் அவர்களது பெயரை சொல்வதற்கே எனக்கு பல மாதங்கள் பிடிக்கும். அவர்களைப் பற்றி பேச வருடங்கள் ஆகும். இருப்பினும் மூன்று பேர்களை மட்டும் நான் குறிப்பிட விரும்புகிறேன்.

அதில் ஒன்று ஒரு திருடர். ஒருமுறை நான் பாலைவனத்தில் தொலைந்து போய் வழி கண்டுபிடித்து கிராமத்தை போய் சேரும்போது நடு இரவாகி விட்டது. பாதி இரவு சென்று விட்டது. கடைகள் அனைத்தும் மூடிக் கிடந்தன. கதவுகள் அனைத்தும் அடைபட்டுக் கிடந்தன. ரோட்டில் மனித நடமாட்டமே இல்லை.

நான் விசாரிப்பதற்காக யாராவது இருக்கிறார்களா என்று தேடினேன். இறுதியில் சுவற்றில் உள்ளே நுழைவதற்காக கன்னம் வைத்துக் கொண்டிருந்த ஒரு திருடனை பார்த்தேன். நான் அவரிடம், " நான் தங்க இங்கே ஏதாவது இடம் இருக்குமா ? " என்று கேட்டேன்.

அவர், நான் ஒரு திருடன், நீங்களோ ஒரு சூஃபி ஞானி போல தோன்றுகிறீர்கள். இப்போது தங்க இடம் கண்டு பிடிப்பது மிகவும் கடினம். ஆனால் நீங்கள் விருப்பப்பட்டால் என் வீட்டிற்கு வரலாம், திருடனுடன் தங்க உங்களுக்கு எந்த ஆட்சேபணையும் இல்லையென்றால் என்னுடன் வாருங்கள் " என்று அழைத்தார்.

.

நான் கொஞ்சம் ஒரு வினாடி தயங்கினேன். பின் எனக்கு உரைத்தது. ஒரு திருடன் சூஃபியை பார்த்து பயப்படாத போது,

ஏன் சூஃபி திருடனைக் கண்டு அஞ்ச வேண்டும். உண்மையில் அவன்தான் என்னைக் கண்டு அஞ்ச வேண்டும். அதனால் நான் அவனிடம் , " சரி..! நான் உன் வீட்டிற்கு வருகிறேன்" என்று கூறினேன்.

நான் அவனுடன் சென்று அவன் வீட்டில் தங்கினேன். அந்த மனிதன் மிகவும் அன்பானவன், மிகவும்

**அருமையான**

மனிதர். நான் அவருடைய வீட்டில் ஒரு மாதம் தங்கினேன். ஒவ்வொரு இரவும் அவர் திருடுவதற்கு கிளம்பும்போதும், "சரி, நீங்கள் உங்கள் வேலையை பாருங்கள், தியானம் செய்யுங்கள், ஓய்வெடுங்கள், நான் என் வேலையை பார்க்கப் போகிறேன்" என்பார்.

அவர் திரும்பி வரும்போது, ஏதாவது கிடைத்ததா என்று நான் கேட்பேன். இன்று எதுவும் கிடைக்கவில்லை. ஆனால் நாளை திரும்பவும் முயற்சிப்பேன். என்று கூறுவார். ஒருநாளும் அவர் நம்பிக்கையிழந்ததை நான் பார்க்கவேயில்லை.

ஒரு மாதம் முழுவதும் அவர் வெறும் கையுடன்தான் திரும்பி வந்தார். ஆனாலும் அவர் மகிழ்ச்சியாகத்தான் இருந்தார். அவர்
நாளை முயற்சி செய்வேன். கடவுள் விருப்பபட்டால் நாளை ஏதாவது கிடைக்கும். நீங்களும் எனக்காக பிரார்த்தனை செய்யுங்கள். இந்த ஏழைக்கு உதவி செய்யுங்கள் என்று நீங்கள்கடவுளிடம் சொல்லுங்கள்" என்று கூறுவார்.

மேலும் தொடர்ந்து ஹாசன் சொல்லுகையில், " நான் பல வருடங்கள் தொடர்ந்து தியானம் செய்து கொண்டிருக்கையில் எதுவும் நிகழவில்லை. நான் மிகவும் மனமுடைந்து நம்பிக்கையிழந்து இது எல்லாவற்றையும் நிறுத்திவிடலாமா என்று பல சமயங்களில் நினைத்ததுண்டு. கடவுள் என்று ஒருவரும் இல்லை,எல்லா பிரார்த்தனைகளும் மடத்தனம், எல்லா தியானங்களும் பொய் என்று நினைப்பேன்

அப்போது திடீரென அந்த திருடனின் நினைவு வரும். அவர் ஒவ்வொரு நாள் இரவும் கடவுள் விருப்பபட்டால் நாளை ஏதாவது கிடைக்கும் என்று கூறியதை நினைத்துக் கொள்வேன். அதனால் மேலும் ஒருநாள் முயற்சி செய்து பார்க்கலாம் என்று நினைத்துக் கொள்வேன். திருடன் கூட அந்த அளவு நம்பிக்கையுடனும் அந்த அளவு நம்பிக்கையுணர்வுடனும் இருக்கும்போது நான் ஏன் இன்னும் ஒருநாள் முயற்சி செய்து பார்க்கக் கூடாது என்று தோன்றும்.

பலமுறை இப்படி நிகழ்ந்திருக்கிறது. அந்த திருடனும் அவனைப் பற்றிய நினைவும் நான் இன்னும் ஒருநாள் என்று முயல உதவி செய்திருக்கிறது. ஒருநாள் அது நிகழ்ந்து விட்டது. அது நிகழ்ந்தே விட்டது. நான் அந்த திருடனின் வீட்டை விட்டும் அவனை விட்டும் பலஆயிரம் மைல் தூரம் அப்பால் இருந்தேன். ஆயினும் நான் அந்த திருடனுக்கு மனதார நன்றி சொல்வேன். அவர்தான் எனது முதல் குரு "

எனது இரண்டாவது குரு ஒரு நாய். நான் மிகவும் தாகமாக இருந்தேன். தண்ணீர் குடிப்பதற்காக நதியை நோக்கி போய்க் கொண்டிருந்தேன். அப்போது ஒரு நாயும் தண்ணீர் குடிப்பதற்காக நதியை நோக்கி வந்தது அதற்கும் மிகவும் தாகமாக இருந்தது.

அது நதிக்குள் பார்த்தது. அங்கே வேறொரு நாய் இருப்பதை பார்த்தது – அதனுடைய பிம்பம்தான் – அதைப் பார்த்து பயந்தது. அது குரைத்தது உடனே அந்த நாயும் குரைத்தது. இது மிகவும் பயந்து போய் தயங்கிக் கொண்டே திரும்பி போனது.

ஆனால் தாகம் மிகவும் அதிகமாக இருந்ததால் திரும்பி வந்தது, தண்ணீரில் பார்த்தது, அந்த நாய் அங்கேயே இருப்பதை பார்த்தது. ஆனாலும் தாகத்தினால் தண்ணீரில் எட்டிக் குதித்தது, அந்த பிம்பம் கலைந்து போய் விட்டது. தண்ணீரை குடித்து அது ஒரு கோடை காலமாக இருந்ததால் தண்ணீரில் நீச்சலடித்து ஆனந்தப்பட்டது.

நான் பார்த்துக் கொண்டே இருந்தேன். அதன்மூலம் இறைவனிடமிருந்து எனக்கு ஒரு செய்தி வந்ததை புரிந்து கொண்டேன். ஒருவர் எல்லா பயங்களோடும் எட்டிக் குதித்து விடவேண்டும் என்பதை புரிந்து கொண்டேன்.

நான் அறியாததற்குள் குதித்துவிடும் ஒரு சமயம் வந்த போது ஒரு பயம் வந்தது. அந்த எல்லை வரை போய்விட்டு தயக்கப் பட்டுக் கொண்டு திரும்பி வந்து விடுவேன். அப்போது அந்த நாயின் நினைவுதான் வந்தது எனக்கு. நாய் எட்டிக் குதிக்கும்போது நான் ஏன் எட்டிக் குதிக்கக் கூடாது என்று தோன்றியது.

ஒருநாள் நான் அறியாததற்குள் எட்டிக் குதித்துவிட்டேன். நான் கரைந்து அறியாதது மட்டுமே இருந்தது. அந்த நாய்தான் எனது இரண்டாவது குரு.

எனது மூன்றாவது குரு ஒரு சிறு குழந்தை. நான் ஒரு நகரத்தினுள் சென்றபோது அந்த குழந்தை ஒரு மெழுகுவர்த்தியை ஏந்திக்கொண்டு சென்றது. அதன் திரி ஏற்றப்பட்டிருந்தது, மசூதியில் வைப்பதற்காக ஏற்றப்பட்ட அந்த மெழுகுவர்த்தியை கைகளில் எடுத்துக்கொண்டு சென்று கொண்டிருந்தது அந்த குழந்தை.

ஒரு கிண்டலுக்காக நான் அந்த குழந்தையை " நீயா இந்த மெழுகுவர்த்தியை ஏற்றினாய் ? "என்று கேட்டேன். அதற்கு ஆமாம் என்று கூறியது .

நான் தொடர்ந்து, "அந்த ஒளி எங்கிருந்து வந்தது என்று உன்னால் கூற முடியுமா ?"

மெழுகுவர்த்தி எரியாமல் இருந்தது, நீ ஏற்றினாய் ஒளி வந்தது. நீ ஏற்றியபோது பார்த்தாய் அல்லவா அந்த ஒளி எங்கிருந்து வந்தது என்று உன்னால் கூற முடியுமா ? என்று கேட்டேன். அந்த சிறுமி சிரித்துவிட்டு, மெழுகுவர்த்தியை ஊதி அணைத்துவிட்டு, இப்போது நீங்கள் இந்த ஒளி எங்கு போனது என்று பார்த்தீர்கள் அல்லவா அது எங்கு போனது ? என்று எனக்கு கூறுங்கள் என்று கேட்டாள்

என்னுடைய ஆணவம் சுக்குநூறானது, எனது அறிவு அனைத்தும் பொடிப்பொடியானது.அந்த வினாடியில் நான் எனது முட்டாள்தனத்தை உணர்ந்தேன். அப்போதிலிருந்து நான் அறிந்தவன் என்பதை விட்டு விட்டேன்" என்றார்.

ஹாசன் (ரஹ்) அவர்கள் மூன்று குருக்களைப் பற்றி

கூறினார். மேலும் அவர் பலர் இருக்கின்றனர். ஆனால் அவர்கள் எல்லோரையும் பற்றியும் பேச எனக்கு நேரம் இல்லை என்றார்.

ஆம், அது உண்மை. எனக்கு ஒருவர்தான் குரு என்று கிடையாது.ஏனெனில் எனக்கு ஆயிரக்கணக்கான குருக்கள் இருக்கின்றனர். நான் சாத்தியப்பட்ட எல்லா வழிகளிலும் கற்றுக் கொண்டேன். நீங்கள் அப்படிப்பட்ட விதமான ஒரு சீடன் என்றால் உங்களுக்கு குரு என்று ஒருவர் தேவை இல்லை.

ஆனால் நினைவில் கொள்ளுங்கள் குரு என்ற ஒருவர் இருக்க வேண்டிய அவசியம் இல்லை. ஆனால் நீங்கள் தேர்ந்தெடுத்தாலும் சரி, தேர்ந்தெடுக்காமல் எல்லோரையும் வைத்துக் கொண்டாலும் சரி, நீங்கள் ஒரு சீடனாக இருக்க வேண்டியது அவசியம்.

وَّيَبْقٰى وَجْهُ رَبِّكَ ذُو الْجَلٰلِ وَالْاِكْرَامِ

மிக கண்ணியமும் பெருமையும் தங்கிய உங்களது இறைவனின் திருமுகம் மட்டும் (அழியாது) நிலைத்திருக்கும்.

(அல்குர்ஆன் : 55:27)

எங்கு நோக்கினும் அவனின் அத்தாட்சிகளை கூறும் இறைஞானங்கள் அநேகம் உண்டு. இதை எப்படி நீங்கள் அறிந்து கொள்வீர்கள் ?

(அவன் தான் அருள் மிக்க) அர்ரஹ்மான்; ஆகவே, அறிந்தவர்களிடம் அவனைப் பற்றிக் கேட்டு தெரிந்து கொள்ளுங்கள் .(அல்குர்ஆன் : 25:59) என்கிறான் இறைவன் .

ஆகவே குரு அவசியமாக தேவைப்படுகிறார் .ஆனால் நீங்கள் சீடனாக இருப்பது இந்த பாதையில் அதை விட மிக அவசியமான ஒரு விஷயம். சீடனாக இருப்பது என்றால் – கற்க முடிவது, கற்க தயாராக இருப்பது, இந்த இயற்கைக்கு திறந்தவனாக இருப்பது. நீங்கள் ஒரு குருவை தேர்ந்தெடுக்கும் போது என்ன நிகழ்கிறது எப்படி கற்றுக் கொள்வது என கற்றுக் கொள்ள ஆரம்பிக்கிறீர்கள் .
ஒரு குருவுடன் இருக்கும்போது நீங்கள் மெதுமெதுவாக லயப்பட ஆரம்பிக்கிறீர்கள். மெதுமெதுவாக நீங்கள் இயற்கையுடன் லயப்படுவது எப்படி என கற்றுக் கொள்கிறீர்கள்

குரு என்பவர் இந்த இயற்கையின் சிறிய வடிவம்தான். குருவுடன் நெருங்கி வர வர நீங்கள் அழகு, நேசம், நெருக்கம், அணுக்கம், அன்யோன்யம், ஒப்புக்கொடுத்தல் ஆகியவற்றை பற்றி தெரிந்து கொள்கிறீர்கள் .
ஒருவரிடம் ஒன்றாக இருக்கும்போது இவ்வளவு ஆனந்தம் கிடைக்கும்போது, முழுமையுடன் ஒன்றாக இருக்கும்போது எவ்வளவு ஆனந்தம் கிடைக்கும் என்பதை நீங்கள் பார்க்கும் ஒரு நேரம் வரும்.
குரு என்பவர் ஒரு ஆரம்பம்தான், அவர் முடிவு அல்ல. உண்மையான குரு என்பவர் ஒரு வாசல்தான், நீங்கள் அவர் மூலம் சென்று கடந்து போக முடியும். உண்மையான குரு அவரை கடந்து செல்ல உங்களுக்கு உதவுபவர்.

## சற்குருவின் சகவாசம் 10

சற்குரு காட்டிய அல்லாஹ்வின் அர்ஷ்



காமிலான ஷைகைத் தேடிப் புறப்பட்ட ஹஜ்ரத் காஜா கரீபு நவாஜ் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் ஈராக் நாட்டில் ஹாரூன் நகரில் ஆன்மீக அரசாட்சி புரிந்து வந்த ஹஜரத் உஸ்மான் ஹாரூனி (ரஹ்) அவர்களை தமது ஆன்மீக ஆசானாக ஏற்று, பைஅத் பெற்றார்கள்
இதுபற்றி காஜா கரீப் நவாஜ்(ரஹ்) அவர்கள் " எனது ஷெய்கு எனக்கு இரண்டு ரக்அத் தொழும்படி பணித்தார்கள். அவ்வாறே செய்தேன். பிறகு கிப்லாவை முன்னோக்கி அமரும்படி கூற, நானும் அவ்வாறே அமர்ந்தேன். சூரா பகராவை ஓதும்படி கூறினார்கள். அவ்வாறு நான் ஓதிய பின் 80 தடவை சுபஹானல்லாஹ் கூறும்படி பணித்தார்கள். அவ்வாறு ஓதினேன்.
இதற்குப் பிறகு எனது கையை அவர்கள் கை மீது வைத்து என்னை தமது அருட் பார்வையால் நோக்கி, உம்மை அல்லாஹ்விடம் கொண்டு சேர்த்து விட்டேன்" என்று கூறினார்கள் .

அதன் பிறகு சில முறைப்படி தொப்பியும் , முபாரக்கான ஆடையும் அணிவித்தார்கள். பிறகு அங்கேயே அமர்ந்து ஆயிரம் தடவை சூரா இக்லாஸ் ஓதச் சொன்னார்கள்.
அதை முடித்ததும் எங்களுடைய ஷைகுமார்களின் பயிற்சி முறைப்படி ஓரிரவு பகல் பரிபூரணமாக முஜாஹாத செய்ய வேண்டுமென்று கூறி , அதன் முறையை கற்று தந்தார்கள். அதையும் நிறைவேற்றிய பின்...
மறுநாள் ஷைகு அவர்களை சந்தித்தேன் .அப்போது என்னை நோக்கி வானத்தை பார்க்கும்படி கூறினார்கள். அவ்வாறே நான் பார்த்தபோது "எதுவரை பார்க்கிறீர் ? " என்று ஷைகு அவர்கள் கேட்டனர் .
"அல்லாஹ்வின் அர்ஷ் வரைப் பார்க்கிறேன்" என்று கூறினேன்.
பிறகு கீழே பார்க்கும் படி கூற, அவ்வாறே பார்த்தபோது,'' எதுவரை பார்க்கிறீர் ?" என்று ஷைகு கேட்டார்கள்.
"ஏழு பூமிக்கு கீழ் வரை பார்க்கிறேன் " என்று கூறினேன்.

பிறகு மீண்டும் ஆயிரம் தடவை சூரா இக்லாஸ் ஓதும்படி கூறினார்கள். அவ்வாறே ஓதினேன் "இப்போது எதுவரை பார்க்கிறீர் ?" என்று கேட்டார்கள் "ஹிஜாபே அழமத் " என்னும் திரைகள் வரை பார்க்கிறேன் " என்று கூறினேன்.
பிறகு கண்ணை மூடச் சொன்னார்கள். மூடினேன். பிறகு மீண்டும் திறக்கும்படி உத்தரவிட்ட போது, கண்ணைத் திறந்தேன் .ஷைகு அவர்கள் தமது இரு விரல்களை எனது அருகில் கொண்டுவந்து , அதற்கு இடையில் பார்க்கும்படி கூறினார்கள் . அவ்வாறு பார்த்தபோது எதைப் பார்க்கிறீர் ? என்று கேட்டார்கள். 18000 உலகங்களும் எனது கண்ணருகே வந்து இருப்பதை பார்க்கிறேன்' என்றேன்.
இதன் பிறகு ஷைகு அவர்கள் என்னை நோக்கி " உமது வேலை பூர்த்தியாகி விட்டது" எனக் கூறி அருகே கிடந்த செங்கலை தூக்கும் படி கூற , அதை தூக்கிய போது அதன் கீழே சில பொற்காசுகள் இருந்தன. அதை ஏழைகளுக்கு தர்மம் செய்யும்படி கூறினார்கள். அவ்வாறு செய்தேன்.
இதன்பிறகு ஷைகு அவர்களின் பணி விடையில் 20 ஆண்டுகள் செலவிட்டேன் .இரவிலும், பகலிலும் ,தூக்கத்திலும், விழிப்பிலும், பயணத்திலும், ஊரிலும், எல்லா நிலைகளிலும் ஊழியம் செய்தேன் எனக்கு கிடைத்த எல்லா நற்பாக்கியங்களும் ஷைகின் பணிவிடையில் கிடைத்ததேயாகும்.

## சற்குருவின் சகவாசம் 11

(சற்குரு காட்டிய உலக பற்றற்ற வாழ்க்கை)



ஒரு நாள் ஸரீ அஸ்ஸகதீ (ரஹ்) அவர்கள் மார்க்க சொற்பொழிவு ஆற்றிக் கொண்டிருக்கும்போது,
" இவ்வுலகில் ஊர்வன,பறப்பன, நடப்பன போன்ற எண்ணற்ற படைப்பினங்களில் மனிதன் உயர்ந்த படைப்பாக படைத்துள்ளான் . ஆனால் மற்ற படைப்பினங்களை விட மனிதன் மிக பலவீனமாக படைக்கப்பட்டுள்ளான்.
மனிதன் இறைவனுக்கு மாறு செய்கிறவனாக இருக்கிறான் . நல்ல காரியங்களை செய்து நற்கூலி பெறும் வாய்ப்பை கண்டு மலக்குகள் கூட பெருமைப்படுகிறார்கள். தீயவை செய்து அவன் அடையும் நிலையை அறிந்து மலக்குகள் அவனோடு உறவு கொள்ள வெட்கப்படுகிறார்கள்.

மனிதர்களை நேர்வழியில் அழைக்க லட்சோபலட்சம் நபிமார்களை அனுப்பப்பட்டும் நல்வழியின்பால் ஈர்க்க முடியவில்லை . ஆனால் அல்லாஹ்வின் திருமறை குர்ஆன் அவனை மாற்றக் கூடியதாக அமைந்துள்ளது " என்று கூறினார்கள்.
அவர்கள் கடைசியாக சொன்ன " மனிதர்களை நேர்வழியில் அழைக்க லட்சோபலட்சம் நபிமார்களை அனுப்பப்பட்டும் நல்வழியின்பால் ஈர்க்க முடியவில்லை . ஆனால் அல்லாஹ்வின் திருமறை குர்ஆன் அவனை மாற்றக் கூடியதாக அமைந்துள்ளது " என்ற இந்த கருத்து
சொற்பொழிவைக் கேட்டுக்கொண்டிருந்த அஹமத் யஜீத் என்பவர் ஓவென அழுது மயக்கமுற்றார். மயக்கம் தெளிந்து இல்லம் சென்று அன்று இரவு தூங்காது சிந்தனை செய்து மறுநாள் காலை ஸரீ அஸ்ஸகதீ (ரஹ்) அவர்களின் இல்லம் வந்து , அல்லாஹ்வை அடையும் வழியைக்காட்டுத் தருமாறும், தன்னை அவர்களின் சீடராகவும் ஏற்றுக் கொள்ளும்படியும் வேண்டினர்.
ஷரீஅத்துடைய மார்க்க வழியா ? மஃரிபத் என்னும் ஆன்மீக பாதை வழியா ? ஷரீஅத்துடைய வழி தினமும் ஐவேளைத் தொழுகை, வருடத்தில் ஒரு தடவை ஜகாத் என்னும் ஏழை வரி, நோன்பு , வசதி உள்ளவர்கள் ஹஜ் ..போன்ற கடமைகளை நிறைவேற்றினால் போதுமானது. மஃரிபத் என்றால் உலகை முற்றிலும் துறந்து விட வேண்டும் . இதில் எது வேண்டும் ? என்று கேட்டார் ஸரீ அஸ்ஸகதீ (ரஹ்) அவர்கள் .
"இரண்டுமே " என்றார் அஹ்மத் யஜீத் .

இந்த நிகழ்வுகள் அவரை கானகம் செல்ல தூண்டியது. கானகத்தில் தவம்செய்து சில நாட்களுக்குப்பின் அஹ்மத் யஜீத் தன் சற்குருவை தேடி வருகிறார் . மெலிந்த உருவம், அழுக்கடைந்த ஆடை , அடக்கத்துடன் ஸரீ அஸ்ஸகதீ (ரஹ்) அவர் முன் வருகிறார்கள். வரவேற்று ஞான பாட்டையைப் பற்றி பேசிக் கொண்டிருக்கும் போது அஹ்மத் யஜீத் அவர்கள் குர்ஆனில் திளைத்து , அல்லாஹ்வுடன் பனா ஆகி இருப்பதை சற்குரு ஸரீ அஸ்ஸகதீ (ரஹ்) அவர்கள் உணர்ந்தார்கள்.

அஹ்மத் யஜீத் அவர்களின் குடும்பத்தார், தாயும், மனைவியும் அவரின் கோலத்தைக் கண்டு அழுதார்கள். " இவர்கள் ஆன்மீக வழியில் நடந்து வருகிறார்கள். அதுவும் இறைவனின் கற்பனை படி நடந்து வருகிறது .பொறுமை கொள்ளுங்கள் என்று சற்குரு கூறினார்கள் .

சில நாட்களுக்குப் பின் ஒரு மனிதர் வந்து ஸரீ அஸ்ஸகதி அவர்களிடம், "அஹ்மத் யஜீத் மரணப்படுக்கையில் இருந்து வருகிறார் " என்று கூற , சத்குருவும் அவ்விடம் சென்றார்கள். உண்மையில் அவரின் இறுதிக்கட்டம் . அவரின் தலையை தன் மடி மீது வைத்து சற்குரு குர்ஆன் ஒதிக் கொண்டிருக்க ....

اِنَّ هٰذَا لَهُوَ الْفَوْزُ الْعَظِيْمُ

நிச்சயமாக இதுதான் மகத்தான வெற்றியாகும்.

(அல்குர்ஆன் : 37:60)

لِمِثْلِ هٰذَا فَلْيَعْمَلِ الْعٰمِلُوْنَ

எனவே பாடுபடுபவர்கள் இது போன்றதற்காகவே பாடுபடவேண்டும். (அல்குர்ஆன் : 37:61)

என்ற வசனங்களை ஓதும்போது , அஹ்மத் யஜீத் சட்டென புன்முறுவல் பூக்க , உயிர் பிரிந்தது.

ஸரீ அஸ்ஸகதீ (ரஹ்) அவர்கள் மார்க்க சொற்பொழிவில் கடைசியாக சொன்ன வாசகங்கள் ..." மனிதர்களை நேர்வழியில் அழைக்க லட்சோபலட்சம் நபிமார்களை அனுப்பப்பட்டும் , நல்வழியின்பால் ஈர்க்க முடியவில்லை . ஆனால் அல்லாஹ்வின் திருமறை குர்ஆன் அவனை மாற்றக் கூடியதாக அமைந்துள்ளது " என்ற இந்தக் கருத்து அஹ்மத் யஜீத் அவர்களை ரஹ்மத்துல்லாஹி அலைஹியாக மாற்றியது.

## சற்குருவின் சகவாசம் 12

சற்குருவின் மாபெரும் நினைவுக் களஞ்சியம்



சற்குரு திரு நபியின் அருள் முகத்தை காண்பதொன்றே அபூஹுரைரா (ரலி) அவர்களுக்கு அரும்பெரும் இன்பமாய் இருந்தது "அதற்கிணைகாட்ட ஓர் உவமானத்தை நான் பெறவே இல்லை. அப்பெருமகனாரின் திருமுகத்தில் பகலவன் பவனி வருவதை நான் கண்டேன். அவர்கள் தோழமையைத் தாம் பெற்றதற்காகவே எந்நாளும் இறைவனுக்கு நன்றி செலுத்துபவனான இருந்து வருகிறேன்" என்றார்கள் அபூஹுரைரா

அல்லாஹ்வின் அருள்மறை குர்ஆன் நபி[ஸல்] அவர்கள் மீது அருளப்படும் காலகட்டத்தில், சில நபித்தோழர்களை எழுத்தர்களாக நியமித்து நபியவர்கள் குர்ஆனை எழுதிவைத்திட பணித்த செய்தியை நாம் அறிவோம்.

ஆனால் நபி[ஸல்] அவர்களின் திருவாயால் மொழிந்த பொன்மொழிகள் அவ்வாறு எழுதப்படவேண்டும் என்று நபியவர்கள் கட்டளையிடவில்லை. இருப்பினும் அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அவர்களைப் போன்ற சிலர் ஹதீஸ்களை எழுதிவைத்திருந்தனர். ஆனாலும் இவர்கள் அறிவித்த ஹதீஸ்களை விட, ஹதீஸ்களை எழுதிவைக்காத (கவனிக்கவும் 'எழுதி வைக்காத ) அபூஹுரைரா[ரலி] அவர்கள் தான் அதிக அளவில் ஹதீஸ்களை அறிவித்துள்ளனர். இன்னும் சொல்லப்போனால் ஹதீஸ்களை அறிவித்த ஸஹாபிகள் பட்டியலில் அபூஹுரைரா[ரலி] அவர்கள் முதலாவதாக திகழ்கிறார்கள்

ஹிஜிரி 6 ஆண்டு அண்ணலார் (ஸல் )அவர்கள் கைபரில் போர் நடத்திக் கொண்டிருக்கையில், வந்து அவர்களை சந்தித்தார் அபூஹுரைரா(ரலி) அவர்கள். அதற்கு முந்தி ஏறத்தாழ 19 ஆண்டுகாலம் நபித்துவ தோழமை அவர்கள் இழந்து விட்டிருந்தார்கள். நபியவர்களின் நான்காண்டு காலத் தோழமையையே பெற்றிருந்தும், அபூஹுரைரா அவர்கள் தமக்கு முந்திய சஹாபாக்கள் அனைவரை விடவும் அதிகமான ஹதீஸ்களை அறிவித்த கண்டு வியப்படையாதார் யாருமில்லை.

A) 1000 ஹதீஸ்களுக்கு மேல் அறிவித்தவர்கள் ஏழு பேர்கள்

01 அபூ ஹுரைரா (ரலி) 5374 ஹதீஸ்கள்

02 அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) 2630

03 அனஸ் இப்னு மாலிக் (ரலி) 2286

04 ஆயிஷா ஸித்தீக்கா (ரலி) 2210

05 அப்துல்லா இப்னு அப்பாஸ் (ரலி) 1660

06 ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் (ரலி) 1540

07 அபூ ஸயீதுல் குத்ரீ (ரலி) 1170

B ) 1000 ஹதீஸ்களுக்கும் குறைவாக அறிவித்தவர்கள்

08 அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது ரலி) 848 ஹதீஸ்

09 அப்துல்லாஹ் இப்னு அம்ருப்னுல்ஆஸ் (ரலி) 700

10 உமர் இப்னுல் கத்தாப் (ரலி) 537

11 அலீ இப்னு அபீதாலிப் (ரலி, 536

12 அபூதர்ருல் கிஃபாரி (ரலி) 281

13 இப்னு அபீ வக்காஸ் (ரலி) 270

14 முஆது இப்னு ஜபல் (ரலி) 200

15 அபூதர்தாஃ (ரலி) 179

16 உத்மான் இப்னு அஃப்ஃபான் (ரலி) 147

17 அபூபக்கர் (ரலி) 142

"நான் என் இரவுகளை மூன்றாகப் பங்கிட்டு இருந்தேன். அதில் ஒரு பகுதியில் இறைவணக்கம் புரிந்தேன். ஒரு பகுதியில் உறக்கத்திற்காக ஒதுக்கினேன். மூன்றாம் பகுதியில் அண்ணலார் (ஸல்) அவர்களிடம் கேட்டவற்றை மனனம் செய்து வந்தேன்" என தாங்கள் அண்ணலாரின் அருள் ஞானத்தை தம் நெஞ்சக் கருவூலத்தில் சேமித்த பாங்கை அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்.

அபூ ஹுரைரா(ரலி) அதிகமாக நபிமொழிகளை அறிவிக்கிறாரோ என மக்கள் கூறிக் கொண்டிருக்கிறார்கள்.

அல்லாஹ்வின் வேதத்தில் இரண்டு வசனங்கள் மாத்திரம் இல்லையென்றால் நான் ஒரு நபிமொழியைக் கூட அறிவித்திருக்க மாட்டேன்' என்று அபூ ஹுரைரா(ரலி) கூறிவிட்டு,

'நாம் நேர்வழியையும் தெளிவான சான்றுகளையும் அருளி, மக்களுக்காக அவற்றை வேதத்தில் நாம் தெளிவாகக் கூறிய பின்னரும்,யார் அவற்றை மறைக்கிறார்களோ அவர்களை நிச்சயமாக அல்லாஹ் தன் அருளுக்கு அருகதையற்றவர்களாக்கி விடுகிறான். மேலும் (தீயோரை) சபிப்ப(வர்களான இறைநம்பிக்கையாளர்களும் வான)வர்களும் அவர்களைச் சபிக்கின்றனர்.

ஆயினும் அவர்களில் யார் (தம் குற்றங்களிலிருந்து) மீண்டு, மேலும் (தம்மைச்) சீர்திருத்தி இன்னும் (தாம் மறைத்தவற்றை மக்களுக்குத்) தெளிவுபடுத்தியும் விடுகின்றனரோ அவர்களைத் தவிர. (அவ்வாறு தம்மைத் திருத்திய) அவர்களை நான் மன்னித்து விடுவேன். நான் மிக்க மன்னிப்பவனும் அருளுவதில் அளவற்றவனுமாவேன்' (திருக்குர்ஆன் 02:159-160) என்ற இரண்டு வசனங்களையும் ஓதிக் காட்டினார்கள்.

மேலும் தொடர்ந்து 'மக்காவிலிருந்து ஹிஜ்ரத்துச் செய்து மதீனாவிற்கு வந்த எங்கள் சகோதரர்களோ வியாபாரம் பேரங்களில் ஈடுபட்டுக் கொண்டிருந்தார்கள். மதீனாவிலிருந்த அன்ஸாரித் தோழர்களோ தங்கள் (விவசாய) செல்வங்களில் ஈடுபட்டுக் கொண்டிருந்தார்கள். ஆனால் இந்த அபூஹுரைராவோ முழுக்க முழுக்க (வேறு வேலைகளில் ஈடுபடாமல்) பட்டினியாக நபி (ஸல்) அவர்களுடனேயே இருந்தேன். மற்றவர்கள் வருகை தராத இடங்களுக்கெல்லாம் நான் செல்வேன். அவர்கள் மனப்பாடம் செய்யாதவற்றையெல்லாம் மனப்படாம் செய்து கொண்டிருந்தேன்' என்று கூறினார்கள்' அஃரஜ் என்பவர் அறிவித்தார். ஸஹீஹ் புகாரி : 118.

ஒருநாள் அண்ணலார் (ஸல்) அவர்கள் "அபூஹுரைரா ! போரில் கிடைக்கும் கனிமத்துப் பொருட்களில் உன்னுடைய சகோதரர்கள் கேட்பதைப் போன்று ஒரு நாளும் நீர் எதுவும் கேட்பதில்லையே...

"இறைவன் தாங்களுக்கு அளித்துள்ள ஞானத்தில் ஒரு துளியேனும் தாங்கள் எனக்கு அருள் புரிவதையே அதைவிட பெரும் செல்வமாக நான் உவக்கின்றேன் "

" உமக்கு முன்னர் என்னிடம் எவரும் அதனை கேட்கவில்லை அறிவைத் தேடுவதில் பேராவல் கொண்டவராகவே நீர் இருக்கின்றீர்" என மகிழ்ந்த நபி ஸல் அவர்கள்...

" அபூஹுரைரா! உம்முடைய மேலாடையை என் முன் விரிப்பீராக !" பணித்தார்கள்

அபூஹுரைரா ரலி அவர்களும் தங்களுடைய மேலாடையை அண்ணலார் (ஸல் ) அவர்களுக்கு தங்களுக்கும் இடையே விரித்தார்கள். சற்று நேரம் தங்கள் இரு கரங்களை ஏந்தி இறைவனிடம் துவா செய்தவண்ணம் நபி (ஸல்) அவர்கள் .

"அபூஹுரைரா...! அப்போர்வையை உம் நெஞ்சோடு அணைத்துக் கொள்வீராக !" என்றார்கள். அவ்வாறே அப் போர்வையை சுருட்டி தன் நெஞ்சோடு அணைத்துக் கொண்ட அபூஹுரைரா ( ரலி) அவர்கள் அடுத்த வினாடி முதல் தாம் கற்ற கல்வி ஞானத்தில் ஒரே ஒரு எழுத்தைக் கூட தம் வாழ்நாளில் என்றும் மறந்ததில்லை "என அவர்கள் அறிவிக்கிறார்கள்.

மர்வான் இப்னுல் ஹகம் அபூஹுரைராவின் நினைவாற்றலைப் பரிசோதிக்க விரும்பினார்.

ஒருமுறை அவரைத் தம் அவைக்கு அழைத்தவர், நபியவர்களின் போதனைகள் சிலவற்றைத் தமக்கு அறிவிக்கச் சொன்னார்.

கலீஃபா கேட்கிறாரே... என்று அபூஹுரைரா சில ஹதீஸ்கள் அறிவித்தார். அதையெல்லாம் எழுதி வைத்துக்கொள்ள திரை மறைவில் ஒரு சேவகனை அமர்த்தியிருந்தார் மர்வான்.

ஓராண்டிற்குப் பிறகு அபூஹுரைராவைத் தம் அவைக்கு மீண்டும் அழைத்துவரச் செய்த மர்வான், அதே நபிமொழிகளைப் பற்றிக் கேட்க, ஒரு வார்த்தை ஓர் எழுத்து வித்தியாசமில்லாமல் வெளிவந்தன அதே ஹதீஸ்கள்.

இவ்விதமாக தனியானதொரு சிறப்புத் தகுதி ஏற்பட்டுப் போயிருந்தது அபூஹுரைரா ரலியல்லாஹு அன்ஹு!

இவர்களை நபி (ஸல்) அவர்கள் "அபூஹுரைரா ஞானத்தின் பொதி "என புகழ்ந்ததாக அபூ ஸாஈதுல் குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

" மாபெரும் நினைவுக் களஞ்சியம் " என அபூஹுரைரா அவர்களை இமாம் ஷாபி (ரஹ் ) அவர்கள் புகழ்கிறார்கள்.

## சற்குருவின் சகவாசம் 13

(இறை தரிசனம் கிடைக்கச் செய்த சற்குரு)



ஹிஜ்ரி 910 ஜமாஅத்துல் ஆகிர் மாதம் பத்தாம் நாள் 'அப்துல்காதிர் ஷாகுல் ஹமீது பாதுஷா நாயகம்' அவர்கள் இவ்வுலகில் பிறந்தார்கள்.

அவர்களுக்கு 18 வயது ஆனபோது ஆன்மீக பாதையில் அடியெடுத்து வைக்க தம் பெற்றோர் அனுமதி பெற்று குவாலியர் சென்றனர். வழியில் இல்யாஸ் (அலை ) அவர்கள் அவர்களை சந்தித்து இஸ்முல் அஃலதைப் அவர்களுக்கு போதித்தார்கள்.

அதன் பின் அவர்களின் வழித்துணையாக முயீனுத்தீன் என்பவர் வந்து சேர்ந்தார். இருவரும் பயணத்தை மேற்கொண்டு குவாலியரின் வெளிப்புறத்தை வந்தடைந்தனர். அங்கிருந்த ஒரு பாழடைந்த பள்ளியில் இருவரும் தங்கினார்கள். அப்போது முயீனுத்தீனை நோக்கி , "இறைவன் எனக்கு இங்கு ஒரு ஆன்மீக ஆசானைக் காட்டி அருளும் வரை நான் உண்ணவோ,உறங்கவோ, இவ்விடத்தை விட்டு நீங்கவோ செய்வதில்லை என்று இறைவன் மீது ஆணையிட்டு கூறியுள்ளேன் .ஆதலின் நீர் உன் வழியே செல்வீராக ! "என்று அனுப்பி வைத்தார்கள் .

குவாலியரில் இருந்த பாழடைந்த பள்ளியில் இளவல் அப்துல் காதிர் அவர்கள் உண்ணாமல் உறங்காமல் கடும் வணக்கத்தில் ஈடுபட்டு இருந்தபோது ஒரு அசரீரி ...

"அப்துல் காதிரே எழும் ! உம் வணக்கம் கண்டு மெச்சினோம். இன்று முதல் உனக்கு "ஷாஹ் அல் ஹமீது " (புகழ் அரசர்) என்னும் பட்டம் சூட்டி உள்ளோம் .உம்முடைய ஆன்மீக ஆசான் இங்கு வாழும் முகம்மது கௌது இப்னு கதீருத்தீன் ஆவார் " என்று முழங்கியது .

அக்கணமே அவர்களின் மனக்கண்முன் முஹம்மது கௌது குவாலியரி அவர்களின் தோற்றமும் காட்சியும் வழங்கி மறைந்தது .அதே நேரத்தில் முஹம்மது கௌது குவாலியர் அவர்களின் செவியில் "உம்மிடம் தீட்சை பெறுவதற்காக அப்துல்காதிர் ஷாஹுல் ஹமீது என்ற இளவல் வருகிறார் அவரை வரவேற்று ஆவண செய்க ! "என்று அசரீரி ஒலித்தது .

அது கண்டு வியப்பும், மகிழ்ச்சியும் கொண்ட முஹம்மது கௌது குவாலியரி (ரஹ்) அவர்கள், இளவலை அன்போடு வாரி அணைத்து அழைத்து சென்று தீட்சை நல்கி ஆன்மீகப்
பேரமுதமும் வழங்கி கௌரவித்தனர்.

சற்குரு பத்தாண்டு காலம் தனி அறையில் தங்க வைத்தார்கள். இந்த தவ வாழ்வில் சற்குருவால் ஆன்மீகக் கல்வியும். பயிற்சியும் பெற்றனர். இளவலுக்கு உதவிட வழித்துணையாக வந்த முயீனுத்தீன் அவர்களும் உதவியாளராக சேர்ந்தனர்.
ஒருநாள் இரவு அவர்கள் இஷா தொழுகையை தொழுது விட்டு
'முஷாஹதா'வில் தலைகுனிந்த வண்ணம் நீண்ட நேரம் இருந்தனர். இதனை இமைகொட்டாது பார்த்துக் கொண்டிருந்த முயீனுத்தீன் அவரை அணுகி, முஷாஹதா என்னும் ஆன்மீக தரிசனத்தில் தாங்கள் கண்டதை எடுத்துரைக்க வேண்டினர்.
" இன்று இரவு கிள்று (அலை) அவர்கள் என்னை அழைத்துச் சென்று மண்ணகம் முழுவதையும் எனக்கு சுற்றிக் காண்பித்தார்கள். பின்னர் விண்ணக முழுவதையும் எனக்கு சுற்றிக் காண்பித்து அங்குள்ள புனித இடங்களிலெல்லாம் என்னை அமர்த்தினார்கள். அங்கு வைத்துதான் நான் பல்வேறு பேறுகளை பெற்றுக்கொண்டேன். நிறைய இறை நேசர்களை சந்தித்து அளவளாவினேன். ஒவ்வொருவரின் பிரத்யேக துஆவினைப் பெற்றேன்.
பின்னர் என் பாட்டனார் கௌதுல் அஃலம் முஹ்யித்தீன் அப்துல் காதிர் ஜீலானி ( ரஹ் ) அவர்கள் சந்திக்கும் பேறு பெற்றேன். அப்போது அவர்கள் என்னை நோக்கி, " மகனே அங்கு குழுமியிருக்கும் வலிமார்களுக்கு இமாமாக நின்று தொழ வையும் " என்றனர்.முதலில் நான் தயங்கினேன். அது கண்டு அவர்கள் " இது உமக்கு அருளப்பட்ட தங்கமான வாய்ப்பு தாமதியாது தொழ வைத்து துஆ இறைஞ்சும் " என்று ஆணையிட்டனர். அவ்விதமே நான் செய்தேன்.
இதன் பின் நான் "ஆலமுல் மலக்கூத் " சென்று நபிமார்களை சந்தித்து. அவர்களுக்கெல்லாம் சலாம் உரைத்தேன்.அனைத்து இமாம்களையும் பெரியவர்களையும் சந்தித்து அளவளாவினேன்.

" பிறகு நான் "மகாமன் மஹ்மூதா" சென்று அண்ணல் நபி (ஸல்) அவர்களை கண்டு களிபேருவகை கொண்டேன். அவர்கள் என்னை என் புருவ மத்தியில் முத்தமிட்டு , ஆசீர்வதித்து அறபோதம் செய்தார்கள்".
பின்னர் நான் இறைவனின் திவ்ய தரிசனமாகிய "லிகா" என்பதனையும் எய்தப்பெறும் மாபெரும் பேற்றினையும் பெற்றேன். அப்பொழுது இறைவன் என்னை நோக்கி "உம்மை 'குத்பு' ஆகவும் "கௌது' ஆகவும் தேர்ந்து எடுத்து உள்ளேன். இதற்கு மேல் உமக்கு என்ன வேண்டும் ? என்று வினவினான் அதற்கு நான், " எனக்கு நீயே வேண்டும் " என்று கூறினேன் .
அதுகேட்டு மகிழ்ந்த இறைவன் , "அன்த அப்தீ ஹக்கா " _ ' நீர் என்னுடைய உண்மையான அடிமை' என்று நன்மாராயம் கூறி அனுப்பி வைத்தான் என்று கூறினர் . அதுகேட்டு முயீனுத்தீன் உணர்ச்சி வசப்பட்டு மகிழ்ச்சி கண்ணீர் சொரிந்தார்.

## சற்குருவின் சகவாசம் 14

(பெண் குருமார்கள்)



"ஆன்மிகத்தில் ஆண் பெண் என்ற வித்தியாசம் எல்லாம் கிடையாது " -சூஃபி அத்தார்
ஒரு முஸ்லிம் பெண்ணைப் பார்த்து, " நீ ஒரு ராபியத்துல் பஸரிய்யா" என்று சொல்லிவிட்டால், இந்த உலகில் இருக்கும் எல்லா விருதுகளும் கிடைத்துவிட்டது போல் அவள் மகிழ்வாள். இவ்வளவுக்கும் ராபியா பற்றி அவளுக்கு அவ்வளவாக தெரிந்திருக்காமலும் இருக்கலாம். பெயரை மட்டும் கேள்விப்பட்டு இருக்கலாம் .ஆனால் ஒவ்வொரு முஸ்லிம் பெண்ணின் இதயத்திலும் மிக உயர்ந்த இடம் ராபியாத்துல் பஸ்ரிக்கு உள்ளது.

"ராபியா ஒரு பெண்ணல்ல. நூறு ஆண்களுக்கும் மேல் . வேதனை உடுத்தி தலை முதல் கால்வரை உண்மையில் மூழ்கியவர். இறைவனின் பிரகாசத்தில் அழிந்து போனவர் - - என்று சூஃபி அத்தார் குறிப்பிடுகின்றார் .
ஒருமுறை ஹஸன் பஸரி (ரஹ்) தனது ஆன்மீகச் சொற்பொழிவு தொடங்காமல் தாமதித்து கொண்டிருந்தார். அப்போது அவருக்கும் அவருடைய சொற்பொழிவை கேட்க வந்தவர்களுக்கும் ஒரு உரையாடல் நடக்கிறது.
"எல்லோரும்தான் வந்து விட்டார்களே ஏன் இன்னும் சொற்பொழிவை தொடங்கவில்லை? "
" ராபியா வரட்டும் "
'' அந்த கிழவிக்காகவா காத்திருக்கிறீர்கள்? நாங்கள் போதாதா? "
" யானைகள் குடிப்பதற்கான பானத்தை நான் எப்படி எறும்புகளின் பாத்திரத்தில் ஊற்றி நிரப்புவது? " என்றார் ஹஸன் பஸரி (ரஹ்)
ராபியாவை " இரண்டாம் மரியம் " என்றும், ஒரு பெண் இறைவனுடைய பாதையில் நடக்கும் போது அவரை பெண் என்று சொல்ல முடியாது என்றும் , ராபியாவுக்கு 400 ஆண்டுகளுக்கு பிறகு வாழ்ந்த சூஃபி மகாகவி ஃபரீதுத்தீன் அத்தார் வர்ணிக்கிறார்.
சூடானில் நோய் தீர்ப்பதில் வல்ல''ஷெய்கா "எனப்படும் சூஃபிப் பெண் குருமார்கள் இருக்கிறார்கள் (ஷெய்கு என்பது ஆண்பால், ஷெய்கா என்பது பெண்பால் - தலைவி என்று பொருள்) மத்திய கிழக்கில் பல ஆன்மீகப் பாதைகளில் உறுப்பினர்களாகவும் பெண்கள் இருக்கிறார்கள் .அவர்களில் அநேகர் ஷெய்காவாக இருக்கிறார்கள்.
"ஃபாத்திமா நிஷாபூரி " என்றொரு சூஃபி பெண் இருந்தார். இவரைப்பற்றி பிஸ்தாமி " எந்த ஒரு ஆன்மிக உயர்நிலை பற்றி அவரிடம் பேசினாலும் ஃபாத்திமா ஏற்கனவே அந்த நிலையை அடைந்தவராக கண்டேன் "என்று பிஸ்தாமி கூறுகிறார்
இன்னொரு முக்கிய சூஃபியான துன்னூன் மிஸ்ரியிடம் "சூஃபிகளின் மிகச் சிறந்தவர் என்று நீங்கள் யாரைக் கருதுகிறீர்கள் ? என்று கேட்டதற்கு...

"ஃ பாத்திமா நிஷாபூரி என்ற பெண்தான். திருமறையின் வசனங்களின் உள்ளர்த்தங்களை விளக்கிக் கொண்டவர்களில் அவரை விடச் சிறந்தவரில்லை . அவர் இறைநேசரும், எனது குருவும் ஆவார் "என்று கூறினார் .
மிக முக்கிய சூஃபி களில் ஒருவரான பயாஸித் பிஸ்தாமி , பாலைவனத்தில் தான் சந்தித்த ஒரு வயதான மூதாட்டிதான் தன் குரு என்கிறார். மூதாட்டி என்னை " நீ ஒரு வீணான சர்வாதிகாரி " என்று என்னை திட்டி, உன் ஆன்மிக சக்தியைக் கொண்டு சிங்கத்தின் மீது ஒரு மூட்டை நிறைய மாவு பொதியை அதன் முதுகில் ஏற்றி அதை ஒரு கழுதையைப் போல பொதி சுமக்க பயன்படுத்தியதை கண்டித்தார்.
அற்புதம் நிகழ்த்துகின்ற ஆற்றலில் பெருமை கொண்டதன் மூலம் பிஸ்தாமி தனது வீணான தற்பெருமையைக் காட்டியதாக அம்மூதாட்டி குற்றம் சாட்டினார். அம்மூதாட்டி விமர்சனம் பிஸ்தாமின் கண்களைத் திறந்தது. பிஸ்தாமின் குருவாக அந்த மூதாட்டியை ஏற்றுக் கொண்டார்.
மேற்கத்திய உலகில் மிகவும் பிரபலமாக இருக்கும் ஆன்மீக பாதைகளில் ஒன்று மௌலானா ஜலாலுத்தீன் ரூமியின் பாதையான மௌலவிய்யா. இப்பாதையில் பெண்களுக்கு நல்ல மரியாதையும் கண்ணியமும் கொடுக்கப்படுகிறது .
ரூமியின் தந்தை பஹாவுத்தீன் வலத் என்பவரின் உள்ளத்தில் ஆன்மீகத் தேடலின் தீயை மூட்டியதே கொராசானின் இளவரசியாக இருந்த ரூமியின் பாட்டிதான் . அன்னையின் வளர்ப்பில் மார்க்க அறிஞர்களின் அரசன் என்று புகழப்படும் அளவுக்கு உருவானார் பஹாவுத்தீன் வலத் . ரூமியின் தாயார் மூமினா காத்தூனும் பக்தி சிரத்தை மிகுந்த இறைநேசச் செல்வியாக திகழ்ந்தார்.
ஆன்மீகத்தில் பெண்களுக்கு இருக்கும் தகுதிகள் பற்றியும் . மரணம் வரும் முன்பே மரணித்து முடிகின்ற அவர்களின் தகுதி பற்றியும் ரூமியின் குருவாகிய ஷம்ஸ் தப்ரேஸ் " மகாலாத் " எனப்பட்ட பல சொற்பொழிவுகள் பேசியிருக்கிறார் .
ரூமிக்கும் பல பெண் சிஷ்யைகள் இருந்துள்ளனர். 'ஸமா' எனப்பட்ட சூஃபி இசை நிகழ்ச்சியில் பங்கெடுத்துக் கொள்ளுமாறு அவர்கள் உற்சாகப்படுத்தப்பட்டனர். பெண்கள் தனியாக ஸமா நிகழ்ச்சி நடத்தினாலும் அவ்வப்போது ஆணுகளுடன் சேர்ந்து செய்தனர் .
ரூமியின் சிஷ்யைகளில் பிரபலமானவர் ஃபஹ்ருத்தீன் நிஷா என்பவர். அவருடைய காலத்தில் ' ராபியா ' என்று வர்ணிக்கப்பட்டவர். நிஷா இறந்து ஏழு நூற்றாண்டுகளுக்கு பிறகு அவருடைய கல்லறையை புனர் நிர்மாணம் செய்வதற்காக அவருடைய உடல் மீண்டும் வெளியில் எடுக்கப்பட்ட போது, மௌலவிய்யாப் பாதையின் அப்போதைய தலைவராக இருந்த ஷெய்கு ஹயாத்தி தீதேயும் அருகில் இருந்தார். நிஷாவின் உடல் கெடாமல் அப்படியே இருந்தது என்றும், அவர் உடலை எடுத்தபோது ரோஜாவின் நறுமணம் எங்கும் பரவியது என்றும் அவர் கூறினார்.

பெண் என்பவள் இறைவனின் படைப்பிலேயே பரிபூரண அழகு வெளிப்படுத்துபவள் என்று ரூமி அடிக்கடி கூறுவார்
"அவள் படைக்கப்பட்டவள் அல்ல ;
படைப்பவள் "
என்று மஸ்னவி காவியத்தில் பாடியுள்ளார்.
இறைவனின் திருப்பெயர் களில் அடிக்கடி பயன்படுத்தப்படும் ரஹ்மான் (அருளாளன்) , ரஹீம் ( அன்புடையோன்) என்ற இரு சொற்களும் "கருவறை "என்பதைக் குறிக்கும் வேர்ச்சொல்லிலிருந்து வருகிறது என்று ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர். அப்படி இருக்கும்போது சூஃபித்துவத்தில் பெண்கள் சாதிப்பது ஒன்றும் ஆச்சரியமல்ல.
-நாகூர் ரூமியின் சூஃபி வழியிலிருந்து ...

## சற்குருவின் சகவாசம் 15

(சற்குருவின் சொல் சாத்வீகமானது)



'கரு இன்றி உயிர் இல்லை ; குரு இன்றி ஞானம் இல்லை' என்று தக்கலை பீரப்பா சொல்வார்கள்.

"ஒரு சீடர் தயார் நிலையில் இருக்கும்போதுதான் குரு கண்ணில் படுவார். அவரவர் பக்குவத்திற்கு ஏற்ப சிவனே குருவாக வந்த அமைவான் "என்று சைவசித்தாந்தத்தில் ஒரு கருத்து உள்ளது.

" யாருக்கு ஆன்மிக ஞானகுரு வாய்க்கவில்லையோ அவனுடைய குரு ஷைத்தானாகவே இருப்பான் "

" குருவை தேடி கிடைக்காதவர்களுக்கு நானே குருவாக இருப்பேன் " என்று சற்குரு கௌது நாயகம் முகையதீன் அப்துல் காதிர் ஜிலானி (ரஹ்) அவர்கள் குறிப்பிடுகிறார்கள்

ஒரு சீடன் ஒரு குருவிடம் வந்து, " நான் பல குருக்களிடம் பயின்று விட்டேன். ஆனால் யாருமே பரிபூரண சற்குருவாக இல்லை. ஒவ்வொரு குருவிடமும் ஒரு குறை இருந்தது. ஆனால் நீங்கள் பரிபூரண குருவாக எனக்கு தெரிகிறீர்கள். எனவே தங்களிடம் பயில வந்துள்ளேன் "என்று சொன்னான்

அதற்கு அந்த குரு, " நீ சொல்வது சரிதான். நான் பரிபூர்ண குருதான். ஆனால் என்னால் உன்னை ஏற்றுக் கொள்ள முடியாது . ஏனென்றால் நானும் அப்பழுக்கற்ற பரிபூரண சிஷ்யர்களைதான் ஏற்றுக் கொள்வேன்" என்றார்.

ஒரு முறை முல்லாவிடம் பயில மாணவர்கள் வந்தனர் அவர்களை ஏற்றுக் கொள்வதாக சொன்னார் . என் பின்னே வாருங்கள் என்று சொல்லி, தன் கழுதையின் முகத்தில் பக்கம் தன் முதுகை இருக்குமாறு ஏறிக்கொண்டார். பின்னே வந்த மாணவர்களுக்கு முல்லாவின் செயல் வேடிக்கையாக இருந்தது. ஒன்றும் சொல்லாமல் அவர்கள் பின்தொடர்ந்தனர்.

"என்ன பார்க்கிறீர்கள் ? நீங்கள் எனக்கு முன்னே போனால் எனக்கு அவமரியாதை செய்வதாகும். நான் என் பின்பக்கத்தை உங்களுக்கு காட்டிக் கொண்டு சென்றால் உங்களுக்கு அவ மரியாதையாகும். அதனால்தான் இப்படி " என்றார்.

இதில் பல்வேறு விஷயங்கள் சூசகமாக சூஃபியத்துவத்தில் உணர்த்தப்படுகின்றன . முல்லா பின்பக்கமாக கழுதையின் மீது உட்கார்ந்துகொண்டு வருவதால் , தன் மாணாக்கர்களை கவனித்துக் கொண்டு வரமுடியும்.மற்றவர்கள் தன்னைப் பற்றி என்ன நினைப்பார்கள் என்பதைப் பற்றி ஒரு சூஃபி குரு ஒருபோதும் கவலைப்பட மாட்டார்.

அதோடு ஏற்கனவே ஆன்மீக பாதையில் அவர் சென்றவர்தான் என்பதால் , மீண்டும் பாதையை பார்த்துக் கொண்டுதான் போக வேண்டும் என்ற அவசியம் அவருக்கு இல்லை. மற்றவர்களுக்கு அசௌகரியமாக இருக்கக்கூடிய ஒரு வழி, அவருக்கு சமநிலை தவறாத சரியான வழியாக இருக்கிறது. ஒரு குருவைப் பற்றிய பல செய்திகளை இந்த தலைகீழ் கழுதை பிரயாணம் சொல்கிறது.

குரு சொன்னார் : " சாப்பிடும் முன் கை கழுவிக் கொள்ளுங்கள் இன்று நான் சொல்கிறேன். அட, அது நல்லதுதானே சுத்தமாக சாப்பிடச் சொல்கிறார் நம் குரு என்று நீங்கள் நினைக்கிறீர்கள் இது சரியா ? "

கொஞ்ச நேர யோசனைக்குப் பிறகு சீடர்கள் " சரிதான் " என்றனர்

குருவும் மறுபடியும் சொன்னார் : " சாப்பிடும் பொழுது பேசாதீர்கள் என்கிறேன். சரிதான் சாப்பிடும்போது பேசினால் செய்யும் காரியத்தில் கவனம் சிதறும் என்று நான் சொன்னதை ஏற்றுக் கொள்கிறீர்கள் . இது சரிதானா ?

கொஞ்ச நேர யோசனைக்குப் பிறகு சீடர்கள் "சரிதான் " என்றனர்.

அப்படியானால் நீங்கள் என்னை பின்பற்றவில்லை, உங்கள் அறிவை, தர்க்கத்தைப் பின்பற்றி, நான் சொன்னது உங்கள் அறிவைக் கொண்டு சிந்தித்து சரி என்று உங்களுக்கு பட்ட பிறகு நீங்கள் ஏற்றுக்கொள்வீர்களேயானால் , உங்களுக்கு நான் குருவல்ல . அப்படிப்பட்டவர்கள் எனக்கு தேவையும் இல்லை. எனக்கு முட்டாள்கள்தான் தேவை . அறிவாளிகள் அல்ல. உங்கள் அறிவால் ஒரு

பயனும் இல்லை என்று தானே என்னிடம் வந்திருக்கிறீர்கள். அறிவை பயன்படுத்த வேண்டிய இடம் இதுவல்ல; இது சொன்னதை கேட்க வேண்டிய இடம்.

குருவின் வழிகள் வினோதமானவை. கேள்விகள் கேட்கக் கூடாது .சொன்னதை செய்ய வேண்டும். எல்லாவற்றுக்கும் நிச்சயமாக காரணம் இருக்கும் . விளைவு தானகாக வரும்

நபிகள் நாயகம் (ஸல்) தோழர்கள் செய்ததெல்லாம் அதுதான். அவர்கள் நபியவர்கள் சொன்னதை பற்றி சரியா தவறா என்று சிந்தித்துக் கொண்டிருக்கவில்லை. சொன்னதை , சொன்னவுடனே செய்தார்கள் அதுதான் சூபி வழியின் பிரதானம் .

சற்குருவின் சொல்லுக்கு கீழ்படிய வேண்டுமென்பதற்கு குர்ஆன் நபி மூஸா (அலை) அவர்களுக்கும் கிள்று (அலை) அவர்களுக்கும் இடையே பெற்ற நிகழ்வுகளும் சம்பாஷணைகளும் நல்ல உதாரணம்

وَاِذْ قَالَ مُوْسٰى لِفَتٰهُ لَاۤ اَبْرَحُ حَتّٰۤى اَبْلُغَ مَجْمَعَ الْبَحْرَيْنِ اَوْ اَمْضِىَ حُقُبًا

இன்னும் மூஸா தம் பணியாளிடம், "இரு கடல்களும் சேரும் இடத்தை அடையும் வரை நீங்காது நடப்பேன்; அல்லது வருடக் கணக்கில் நான் போய்க்கொண்டிருப்பேன்" என்று கூறியதை நீர் நினைவு படுத்துவீராக. (அல்குர்ஆன் : 18:60)

فَلَمَّا بَلَغَا مَجْمَعَ بَيْنِهِمَا نَسِيَا حُوْتَهُمَا فَاتَّخَذَ سَبِيْلَهٗ فِى الْبَحْرِ سَرَبًا

அவர்கள் இருவரும் அவ்விரணடு (கடல்களு)க்கும் இடையே ஒன்று சேரும் இடத்தை அடைந்த போது; அவ்விருவருடைய மீனை அவ்விருவரும் மறந்து விட்டனர்; அது கடலில் தன்னுடைய வழியைச் சுரங்கம் போல் அமைத்துக்கொண்டு (நீந்திப் போய்) விட்டது. (அல்குர்ஆன் : 18:61)

فَلَمَّا جَاوَزَا قَالَ لِفَتٰىهُ اٰتِنَا غَدَآءَنَا لَقَدْ لَقِيْنَا مِنْ سَفَرِنَا هٰذَا نَصَبًا

அவ்விருவரும், அப்புறம் அந்த இடத்தைக் கடந்த போது, தம் பணியாளை நோக்கி, "நம்முடைய காலை ஆகாரத்தைக் கொண்டுவா; இந்த நம் பிரயாணத்தில் நிச்சயமாக நாம் களைப்பைச் சந்திக்கிறோம்" என்று (மூஸா) கூறினார்.

(அல்குர்ஆன் : 18:62)

قَالَ اَرَءَيْتَ اِذْ اَوَيْنَاۤ اِلَى الصَّخْرَةِ فَاِنِّىْ نَسِيْتُ الْحُوْتَ وَ مَاۤ اَنْسٰنِيْهُ اِلَّا الشَّيْطٰنُ اَنْ اَذْكُرَهٗ ۚ وَاتَّخَذَ سَبِيْلَهٗ فِى الْبَحْرِ ۖ عَجَبًا

அதற்கு "அக்கற்பாறையில் நாம் தங்கிய சமயத்தில் நீங்கள் பார்த்தீர்களா? நிச்சயமாக நான் மீனை மறந்து விட்டேன்." மேலும், அதை (உங்களிடம்) சொல்வதை ஷைத்தானையன்றி (வேறு எவனும்) என்னை மறக்கடிக்கவில்லை; மேலும் அது கடலுக்குள் தன் வழியை ஆச்சரியமாக அமைத்துக் கொண்டது!" என்று பணியாள் கூறினார்.

(அல்குர்ஆன் : 18:63)

فَارْتَدَّا عَلٰۤى اٰثَارِهِمَا قَصَصًا ۙ قَالَ ذٰ لِكَ مَا كُنَّا نَبْغِ

(அப்போது) மூஸா, "நாம் தேடிவந்த (இடம் அ)துதான்" என்று கூறி, இருவரும் தம் காலடிச் சுவடுகளைப் பின்பற்றி (வந்தவழியே) திரும்பிச் சென்றார்கள்.

(அல்குர்ஆன் : 18:64)

فَوَجَدَا عَبْدًا مِّنْ عِبَادِنَاۤ اٰتَيْنٰهُ رَحْمَةً مِّنْ عِنْدِنَا وَعَلَّمْنٰهُ مِنْ لَّدُنَّا عِلْمًا

(இவ்வாறு) அவ்விருவரும் நம் அடியார்களில் ஒருவரைக் கண்டார்கள்; நாம் அவருக்கு நம்மிடமிருந்து கிருபை அருளியிருந்தோம்; இன்னும் நாம் அவருக்கு நம்மிடமிருந்து கல்வி ஞானத்தையும் கற்றுக் கொடுத்திருந்தோம்.

(அல்குர்ஆன் : 18:65)

قَالَ لَهٗ مُوْسٰى هَلْ اَتَّبِعُكَ عَلٰٓى اَنْ تُعَلِّمَنِ مِمَّا عُلِّمْتَ رُشْدًا

"உங்களுக்குக் கற்றுக் கொடுக்கப்பட்ட நன்மையானவற்றை நீங்கள் எனக்குக் கற்பிக்கும் பொருட்டு, உங்களை நான் பின் தொடரட்டுமா? என்று அவரிடம் மூஸா கேட்டார்.

(அல்குர்ஆன் : 18:66)

قَالَ اِنَّكَ لَنْ تَسْتَطِيْعَ مَعِىَ صَبْرًا

(அதற்கவர்,) "நிச்சயமாக நீர் என்னுடன் பொறுமையாக இருக்க இயலமாட்டீர்!" என்று கூறினார். (அல்குர்ஆன் : 18:67)

وَكَيْفَ تَصْبِرُ عَلٰى مَا لَمْ تُحِطْ بِهٖ خُبْرًا

"(ஏனெனில்) எதைப் பற்றி உமக்கு முழுமையான ஞானம் இல்லையோ, அதில் நீர் எவ்வாறு பொறுமையாயிருப்பீர்!" (என்று கேட்டார்.)

(அல்குர்ஆன் : 18:68)

قَالَ سَتَجِدُنِىْۤ اِنْ شَآءَ اللّٰهُ صَابِرًا وَّلَاۤ اَعْصِىْ لَكَ اَمْرًا

(அதற்கு) மூஸா, "இன்ஷா அல்லாஹ்! நான் பொறுமையுள்ளவனாகவும், எவ்விஷயத்திலும் உமக்கு மாறு செய்யாதவனாகவும் நான் இருப்பதை நீங்கள் விரைவில் காண்பீர்கள்" என்று (மூஸா) சொன்னார். (அல்குர்ஆன் : 18:69)

قَالَ فَاِنِ اتَّبَعْتَنِىْ فَلَا تَسْـَٔلْنِىْ عَنْ شَىْءٍ حَتّٰۤى اُحْدِثَ لَكَ مِنْهُ ذِكْرًا

(அதற்கு அவர்) "நீர் என்னைப்பின் தொடர்வதாயின், எந்த ஒரு விஷயத்தைப் பற்றியும் - நானாகவே அதைப்பற்றி உமக்கு அறிவிக்கும் வரை - நீர் என்னிடம் கேட்கக் கூடாது" என்று சொன்னார். (அல்குர்ஆன் : 18:70)

فَانْطَلَقَا حَتّٰۤى اِذَا رَكِبَا فِى السَّفِيْنَةِ خَرَقَهَا قَالَ اَخَرَقْتَهَا لِتُغْرِقَ اَهْلَهَا لَقَدْ جِئْتَ شَيْـًٔـا اِمْرًا

பின்னர் இருவரும் ஒரு மரக்கலத்தில் ஏறும் வரையில் நடந்து சென்றனர், (மரக்கலம் கடலில் செல்லலானதும்;) அவர் அதில் ஓர் ஓட்டையைப் போட்டார்; "இதிலுள்ளவர்களை மூழ்கடிக்கவா நீங்கள் இதில் ஓர் ஓட்டையைப் போட்டீர்கள்? நிச்சயமாக நீங்கள் ஓர் (அபாயகரமான) பெருங் காரியத்தைச் செய்துவிட்டீர்கள்" என்று (மூஸா) கூறினார்.

(அல்குர்ஆன் : 18:71)

قَالَ اَلَمْ اَقُلْ اِنَّكَ لَنْ تَسْتَطِيْعَ مَعِىَ صَبْرًا

(அதற்கு அவர்,) "நிச்சயமாக நீர் என்னுடன் பொறுமையைக் கடைப்பிடிக்க முடியாது என்று உமக்கு நான் சொல்லவில்லையா? என்றார். (அல்குர்ஆன் : 18:72)

قَالَ لَا تُؤَاخِذْنِىْ بِمَا نَسِيْتُ وَلَا تُرْهِقْنِىْ مِنْ اَمْرِىْ عُسْرًا

"நான் மறந்து விட்டதைப் பற்றி நீங்கள் என்னை(க் குற்றம்) பிடிக்க வேண்டாம்; இன்னும் என் காரியத்தைச் சிரமமுடையதாக ஆக்கி விடாதீர்கள்" என்று (மூஸா) கூறினார்.

(அல்குர்ஆன் : 18:73)
فَانْطَلَقَاحَتّٰٓى اِذَا لَقِيَا غُلٰمًا فَقَتَلَهٗ ۙ قَالَ اَقَتَلْتَ نَـفْسًا زَكِيَّةً بِغَيْرِ نَـفْسٍ لَـقَدْ جِئْتَ شَيْــًٔـا نُّكْرًا

பின்னர் (மரக்கலத்திலிருந்து இறங்கி) இருவரும் வழி நடக்கலானார்கள்; (வழியில்) ஒரு பையனை அவ்விருவரும் சந்தித்த போது, அவர் அவனைக் கொன்று விட்டார். (உடனே மூஸா) "கொலைக்குற்றமின்றி, பரிசுத்தமான ஜீவனைக் கொன்றுவிட்டீர்களே? நிச்சயமாக நீங்கள் பெருத்தக் கேடான ஒருகாரியத்தையே செய்து விட்டீர்கள்!" என்று (மூஸா) கூறினார். (அல்குர்ஆன் : 18:74)
قَالَ اَ لَمْ اَ قُلْ لَّكَ اِنَّكَ لَنْ تَسْتَطِيْعَ مَعِىَ صَبْرًا

(அதற்கு அவர்) "நிச்சயமாக நீர் என்னுடன் பொறுமையாக இருக்க இயலாது என்று உமக்கு நாம் சொல்லவில்லையா?" என்று கூறினார். (அல்குர்ஆன் : 18:75)
قَالَ اِنْ سَاَ لْتُكَ عَنْ شَىْءٍ بَعْدَهَا فَلَا تُصٰحِبْنِىْ قَدْ بَلَـغْتَ مِنْ لَّدُنِّىْ عُذْرًا

இதன் பின்னர் நான் எந்த விஷயத்தைப் பற்றியாவது உங்களிடம் கேட்பேனாயின் நீங்கள் உங்கள் தோழனாக வைத்துக் கொள்ள வேண்டாம் - நிச்சயமாக நீங்கள் என்னிடமிருந்து தக்க மன்னிப்புக் கோருதலைப் பெற்றுக் கொண்டீர்கள்" என்று கூறினார். (அல்குர்ஆன் : 18:76)
فَانْطَلَقَا حَتّٰٓى اِذَاۤ اَتَيَاۤ اَهْلَ قَرْيَةِ ۨاسْتَطْعَمَاۤ اَهْلَهَا فَاَبَوْا اَنْ يُّضَيِّفُوْهُمَا فَوَجَدَا فِيْهَا جِدَارًا يُّرِيْدُ اَنْ يَّـنْقَضَّ فَاَقَامَهٗ قَالَ لَوْ شِئْتَ لَـتَّخَذْتَ عَلَيْهِ اَجْرًا

பின்னர் அவ்விருவரும் வழி நடந்து, இருவரும் ஒரு கிராமத்தாரிடம் வந்து சேர்ந்தார்கள்; தங்களிருவருக்கும் உணவு தருமாறு அந்த கிராமத்தாரிடம் கேட்டார்கள்; ஆனால் அவ்விருவருக்கும் விருந்தளிக்க அவர்கள் மறுத்து விட்டார்கள்; அப்போது அங்கே இடிந்து அடியோடு விழும் நிலையிலிருந்த ஒரு சுவரை அவ்விருவரும் கண்டனர்; ஆகவே, அவர் (சரிசெய்து) நிமிர்த்து வைத்தார். (இதைக் கண்ட மூஸா) "நீங்கள் நாடியிருந்தால் இதற்கென ஒரு கூலியை பெற்றிருக்கலாமே" என்று (மூஸா) கூறினார்.

(அல்குர்ஆன் : 18:77)
قَالَ هٰذَا فِرَاقُ بَيْنِىْ وَبَيْنِكَ سَاُنَـبِّئُكَ بِتَاْوِيْلِ مَا لَمْ تَسْتَطِعْ عَّلَيْهِ صَبْرًا

"இது தான் எனக்கும், உமக்குமிடையே பிரிவு(க்குரிய நேரம்) ஆகும்; எதைப் பற்றி நீர் பொறுமையாக இருக்க முடியவில்லையோ, அதன் விளக்கத்தையும் (இப்பொழுதே) உமக்குத் திட்டமாக அறிவித்து விடுகிறேன்" என்று அவர் கூறினார். (அல்குர்ஆன் : 18:78)
اَمَّا السَّفِيْنَةُ فَكَانَتْ لِمَسٰكِيْنَ يَعْمَلُوْنَ فِى الْبَحْرِ فَاَرَدْتُّ اَنْ اَعِيْبَهَا وَكَانَ وَرَآءَهُمْ مَّلِكٌ يَّاْخُذُ كُلَّ سَفِيْنَةٍ غَصْبًا

"அம்மரக்கலம் கடலில் வேலை செய்யும் ஏழைகள் சிலருக்குச் சொந்தமானது; எனவே நான் அதை (ஓட்டையிட்டு)ப் பழுதாக்க விரும்பினேன்; (ஏனெனில்) அவர்களுக்குப் பின்னால் (கொடுங்கோலனான) ஓர் அரசன் இருந்தான்; அவன் (பழுதில்லா) மரக்கலங்களையெல்லாம் பலவந்தமாக எடுத்துக் கொள்கிறான். (அல்குர்ஆன் : 18:79)
وَاَمَّا الْغُلٰمُ فَكَانَ اَبَوٰهُ مُؤْمِنَيْنِ فَخَشِيْنَاۤ اَنْ يُّرْهِقَهُمَا طُغْيَانًا وَّكُفْرًا

"(அடுத்து) அந்த சிறுவனுடைய தாய், தந்தையர் இருவரும் முஃமின்களாக இருக்கிறார்கள்; அவன் (வாலிபனாகி) அவ்விருவரையும் வழிகேட்டிலும், குஃப்ரிலும் சேர்த்து விடுவான் என்று நாம் பயந்தோம். (அல்குர்ஆன் : 18:80)
فَاَرَدْنَاۤ اَنْ يُّبْدِلَهُمَا رَبُّهُمَا خَيْرًا مِّنْهُ زَكٰوةً وَّاَقْرَبَ رُحْمًا

"இன்னும், அவ்விருவருக்கும், பரிசுத்தத்திலும் (பெற்றோரிடம்) அன்பு செலுத்துவதிலும் சிறந்திருக்க கூடிய (ஒரு மகனை) அவ்விருவருடைய இறைவன் (கொலையுண்டவனுக்குப்) பதிலாக கொடுப்பதை நாம் விரும்பினோம்.

(அல்குர்ஆன் : 18:81)
وَاَمَّا الْجِدَارُ فَكَانَ لِغُلٰمَيْنِ يَتِيْمَيْنِ فِى الْمَدِيْنَةِ وَكَانَ تَحْتَهٗ كَنْزٌ لَّهُمَا وَكَانَ اَبُوْهُمَا صَالِحًـا فَاَرَادَ رَبُّكَ اَنْ يَّبْلُغَاۤ اَشُدَّهُمَا وَيَسْتَخْرِجَا كَنْزَهُمَا رَحْمَةً مِّنْ رَّبِّكَ وَمَا فَعَلْتُهٗ عَنْ اَمْرِىْ ذٰ لِكَ تَاْوِيْلُ مَا لَمْ تَسْطِعْ عَّلَيْهِ صَبْرًا

"இனி: (நான் நிமிர்த்து வைத்த) அந்த சுவர் அந்தப் பட்டிணத்திலுள்ள அநாதைச் சிறுவர் இருவருக்குரியது; அதன் அடியில் அவ்விருவருக்கும் சொந்தமான புதையல் உள்ளது; அவ்விருவருடைய தந்தை (ஸாலிஹான) நல்ல மனிதராக இருந்தார்; எனவே, அவ்விருவரும் தக்க பிராயமடைந்த தம்மிருவரின் புதையலையும் வெளிப்படுத்தி (எடுத்துக்) கொள்ள வேண்டும் என உம்முடைய இறைவன் நாடினான். (இவையெல்லாம்) உம் இறைவனுடைய ரஹ்மத்தில் நின்றும் உள்ளவை; என் விருப்பு, வெறுப்பின்படி எந்தக் காரியத்தையும் செய்யவில்லை; எதைப் பற்றி நீர் பொறுமையாக இருக்க முடியவில்லையோ அதன் விளக்கம் இது தான்" என்று கூறினார். (அல்குர்ஆன் : 18:82)

( மேற்கண்ட மூன்று நிகழ்வுகளில் மானசீகமாக மறைந்திருக்கும் சற்குருவின் சொல் சாத்வீகமானது. அது விதி என்னும் களா கத்ரை உள்ளடக்கியது என்பதை அடுத்தடுத்த பதிவுகளில் தனித்தனியாக பதிவு செய்கிறேன் இன்ஷா அல்லாஹ் )

## சற்குருவின் சகவாசம் 16

(சற்குருவை தேடுதல் என்பது சத்தியத்தை கண்டடைதல்)



மூஸா (அலை) தவ்ராத் வேதம் அருளப்பட்ட நபி மூஸா (அலை ) அவர்களை பார்க்கணும் வேறு ஒருவர் மிக அறிந்தவராக இருந்தார் என்று ஒப்புக்கொள்ள யூதர்களது மனம் இடந்தரவில்லை. வேறு ஒருவர் அதிகம் தெரிந்தவராக இருந்தார் என்பதை ஒப்புக் கொள்வதால், தங்களது நபிக்கு இழுக்கு வருவதாக அவர்கள் தவறாக எண்ணிக் கொண்டனர்.

அப்பொழுது பனி இஸ்ராயில்களிலுள்ள அறிஞர் ஒருவர், இது பற்றி தம் நபியிடமே தெரிந்து கொள்ள வேண்டி , "மிக அறிந்தவர் யார் ? " என்று மூஸா (அலை) அவர்களிடம் வினவினார்.

அதற்கு மூஸா (அலை ) அவர்கள், "அல்லாஹ்தான் மிக அறிந்தவன் " என்று கூறாமல், " நான் " என்று கூறினார். இதற்காக இறைவன் அவரை கண்டித்து, " நீர் மிக அறிந்தவர் அல்ல, இரு கடல்களும் சேரும் இடத்தில் எனது அடிமை ஒருவர் இருக்கிறார் அவர் உண்மை பார்க்கிலும் மிக அறிந்தவர் " என்று அறிவித்தான். அவ்வடிமைதான் ஹஜரத் கிள்று (அலை) ஆவார்கள்.

அவரது முகவரி 'இரு கடல்கள் சேருமிடம்' என்று இறைவன் குறிப்பிட்டாலும், மேலதிகமான விபரங்கள் தேவைப்பட்டதால் நபி மூஸா (அலை) அவர்கள் : " எனது றப்பே..! அவரை நான் எங்கு காண்பேன் ? அவரைக் கண்டுபிடிக்கும் விஷயத்தில் எவ்வாறு நான் வெற்றி அடைய முடியும் ? " என்றார்

அதற்கு இறைவன் "கடற்கரையில் ஒரு பாறையின் அருகில் அவரை நீர் காணலாம் . உப்பிட்ட ஒரு மீனை உமது கூடையில் வைத்துக் கொள்வீராக ! அது உனக்கு கட்டு சாதமாகவும் இருக்கட்டும். எந்த இடத்தில் அம்மீன் உயிர்பெற்று உம்மை விட்டு மறைந்து விடுகிறதோ அந்த இடத்தில் நீர் அவரைக் காணலாம் " என்றான் .

وَاِذْ قَالَ مُوْسٰى لِفَتٰىهُ لَاۤ اَبْرَحُ حَتّٰۤى اَبْلُغَ مَجْمَعَ الْبَحْرَيْنِ اَوْ اَمْضِىَ حُقُبًا

இன்னும் மூஸா தம் பணியாளிடம், “இரு கடல்களும் சேரும் இடத்தை அடையும் வரை நீங்காது நடப்பேன்; அல்லது வருடக் கணக்கில் நான் போய்க்கொண்டிருப்பேன்” என்று கூறியதை நீர் நினைவு படுத்துவீராக. (அல்குர்ஆன் : 18:60)

மேற்கண்ட வசனத்தில் ஒரு ஹுக்பு என்பது 80 வருட காலம்; அதாவது நீண்ட காலத்துக்கு பிரயாணம் செய்வது, இரு கடல்கள் சந்திக்கும் இடத்தை அடைவது 80 வருட காலமாவது நான் நடப்பேன் அதாவது இறைஞானம் போதிப்பவர் கிடைப்பதற்காக பெரிய சிரமத்தையும் ஏற்பேன் என்ற கருத்து .

நபி மூஸா (அலை) அவர்கள் பயணத்தின் துணையாக தம் சகோதரியின் புதல்வர் யூஷஉ (அலை) அவர்களைத் தேர்ந்தெடுத்தார்கள் .

பிரயாணி தனக்கொரு நண்பனை பயணம் செய்யும்போது ஏற்படுத்திக்கொள்ள வேண்டும். பிரயாண நண்பன் கிடைத்த பிறகு அவ்விருவரில் ஒருவர் தலைவராகவும், மற்றொருவர் தலைவருக்கு கீழ்ப்படிபவராகவும் இருக்கவேண்டும்.

பிரயாண நண்பன் தனது நோக்கத்தையும் உறுதியையும் அறிந்திருக்க வேண்டும் .அவ்வாறு அறிந்திருந்தால்தான் பிரயாண காலம் எவ்வளவு என்பதை தெரிந்துகொள்ளவும் , தன்னுடன் ஒத்துழைக்கவும் முடியும்.

உண்மையான சிஷ்யனுக்கு தான் பின்பற்றக்கூடிய ஞானாசிரியரைத் தேடி கண்டுபிடிக்கும் விஷயத்தில் தன் நோக்கம் வெற்றியடையும் வரை பின் வாங்குவதில்லை என்ற நிய்யத்தும் இருக்க வேண்டும்.

ஏனெனில் ஞானாசிரியரைத் தேடுவது, அந்தரங்கத்தில் சத்தியத்தை தேடுவதாகும் என்ற விபரங்கள் இந்த வசனத்தில் சுட்டிக் காட்டப்படுகின்றன என்பதாக "தாவீலாத்துன்னஜ்மிய்யா" என்ற கிதாபில் கூறப்பட்டிருக்கிறது.

فَلَمَّا بَلَغَا مَجْمَعَ بَيْنِهِمَا نَسِيَا حُوْتَهُمَا فَاتَّخَذَ سَبِيْلَهٗ فِى الْبَحْرِ سَرَبًا

அவர்கள் இருவரும் அவ்விரணடு (கடல்களு)க்கும் இடையே ஒன்று சேரும் இடத்தை அடைந்த போது; அவ்விருவருடைய மீனை அவ்விருவரும் மறந்து விட்டனர்; அது கடலில் தன்னுடைய வழியைச் சுரங்கம் போல் அமைத்துக்கொண்டு (நீந்திப் போய்) விட்டது. (அல்குர்ஆன் : 18:61)

ஹஜ்ரத் மூஸா (அலை ) அவர்களும் யூஷஉ (அலை) அவர்கள் கடற்கரை ஓரமாக நடந்து வந்து இரு கடல்களும் சந்திக்கும் இடத்தை அடைந்தனர். அங்கு ஒரு பாறை இருந்தது. அப்பாறையில் நபி மூஸா (அலை) அவர்கள் தூங்கினார்கள்.

பின்னர் மூஸா (அலை) அவர்கள் எழுந்து ,பாறையின் அடியில் உள்ள சுனையில் ஒலுச் செய்து தொழுவதற்காக தயாரானார்கள். அந்த ஒலுத் தண்ணீரில் ஒரு துளி உப்பிட்ட மீனின் மீது விழுந்தது . உடனே உயிர் பெற்று, துள்ளிக் குதித்து, கடலில் விழுந்து, தனக்குரிய வழியே சென்றது .

இந்த சுனையின் தண்ணீர்தான் "மாவுல் ஹயாத்" என்னும் ஜீவ தீர்த்தம் என்று அழைக்கப்படுகிறது.

யூஷஉ (அலை) அவர்கள் இதனை ஆச்சரியமாகப் பார்த்துக் கொண்டிருந்தார். என்றாலும் ,அந்த உடனேயே நபி மூஸா (அலை) இடம் சொல்ல மறந்து விட்டார்.

பின் நபி மூஸா (அலை) உணவு சாப்பிட கேட்க , அப்போதுதான் மீன் மீண்டும் உயிர் பெற்று கடலில் குதித்ததை யூஷஉ (அலை) தெரிவிக்கிறார்கள் .

قَالَ اَرَءَيْتَ اِذْ اَوَيْنَاۤ اِلَى الصَّخْرَةِ فَاِنِّىْ نَسِيْتُ الْحُوْتَ وَ مَاۤ اَنْسٰنِيْهُ اِلَّا الشَّيْطٰنُ اَنْ اَذْكُرَهٗ ‌ وَاتَّخَذَ سَبِيْلَهٗ فِى الْبَحْرِ ‌ عَجَبًا

அதற்கு “அக்கற்பாறையில் நாம் தங்கிய சமயத்தில் நீங்கள் பார்த்தீர்களா? நிச்சயமாக நான் மீனை மறந்து விட்டேன்.” மேலும், அதை (உங்களிடம்) சொல்வதை ஷைத்தானையன்றி (வேறு எவனும்) என்னை மறக்கடிக்கவில்லை; மேலும் அது கடலுக்குள் தன் வழியை ஆச்சரியமாக அமைத்துக் கொண்டது!” என்று பணியாள் கூறினார். (அல்குர்ஆன் : 18:63)

உடனே நபி மூஸா (அலை) அவர்கள் "அதுதான் நாம் தேடி வந்த இடம் " என்று கூறி வந்த வழியே திரும்பிச் சென்று அக்கற்பாறையை அடைகிறார்கள் .

அங்கே ... ஒருவர் துணியால் தன்னை மூடிக்கொண்டும், தலையில் பச்சை துணியைக் கட்டிக் கொண்டு தொழுது கொண்டிருந்தார் . அவர்தான் கிள்று (அலை) ஆவார்கள் .

அவர்கள் தொழுது முடித்ததும் ஹஜ்ரத் மூஸா (அலை) அவர்கள் அவருக்கு சலாம் சொல்லவே, அவர் பதில் சலாம் சொல்லிவிட்டு, " நீர் யார் ? " என விசாரித்தார்.

அதற்கு மூஸா (அலை) அவர்கள் " நான் மூஸா " என்றார்கள்

அப்போது கிள்று (அலை) அவரை நோக்கி " பனூ இஸ்ராயில்களது மூஸாவா நீர் ? " என்று வினவினார்

அப்பொழுது அவர் "ஆம் " என்றார்.

உடனே அவர் " உமக்கு பனூ இஸ்ராயீல்களிடம் அதிக வேலை இருக்குமே " என்று வினவினார்

அதற்கு மூஸா (அலை ) அவர்கள் "கல்வி பயில்வதற்காக இறைவன் என்னை தங்களிடம் அனுப்பி இருக்கிறான் " என்று பதிலளித்தார்கள் .

பின்னர் ஹஜரத் யூஷஉ ( அலை ) அவர்கள் அவ்விடத்தை விட்டு திரும்ப வந்து விட்டார்கள். அதனால் மூஸா ( அலை) அவர்கள் மட்டும் ஹஜரத் கிள்று (அலை) அவர்களுடன் இருந்தார்கள் .

## சற்குருவின் சகவாசம் 17

( குரு அந்தரங்கமானவர் )



"அறிவு (Knowledge ) வேண்டுமெனில் காதைத் திறந்து வை .

ஞானம் ( wisdom) வேண்டுமெனில் வாயை மூடி வை"

சீனப் பழமொழி ஒன்று உள்ளது.

"குரு வேலையெல்லாம் உங்கள் தலையை வெட்டுவதுதான். தலையைத் தவிர வேறெதையும் ஒரு சீடன் இழக்க வேண்டியதில்லை. உங்கள் கேள்விகளுக்கு பதில் சொல்பவரல்ல குரு.உங்கள் கேள்விகளை அழிப்பவர் - ஓஷோ

குருவுக்கு முதலில் சீடர் வேலை செய்ய வேண்டும். அவருக்கு ஒரு வேலைக்காரன் மாதிரி செயல்பட வேண்டும் . இப்படி செயலாற்றுவது மிகவும் முக்கியம் .ஏனெனில் குருவுக்கு சீடரின் மரியாதைகள் தேவையில்லை. ஆனால் "சாலிக் "என்று சொல்லப்படும் ஒரு சீடரின் அகந்தை அழிய அது உதவும்.

தாயின் புடவை நுனியைப் பிடித்துக்கொண்டு குழந்தை நடப்பது மாதிரியானது சூஃபிப் பாதை . அந்தப் பயணத்தில் ஒரு குருவுக்கும் சீடருக்குமான உறவு. மாதா ,பிதா ,குரு, தெய்வம் என்ற முதுமொழியில் குருவின் நிலை உணர்த்தப்படுகிறது.

ஆரம்பம் தாய் பின்பு தந்தை கடைசியில் கடவுள் ஆனால் கடவுளிடம் கொண்டு போய் சேர்ப்பவர் கடவுளுக்கு முன்னிருக்கும் குரு .குருவுக்குப் பிறகுதான் தெய்வம்.

குரு என்பவர் உங்களைப்போல மனித வடிவம் கொண்டவராகவும், உங்களைப் போல் பூமியில் வாழ்ந்து கொண்டிருப்பதாகவும் இருக்கிறார் . அவரை நீங்கள் தொட்டுப் பார்க்கலாம். அவருடன் உரையாடலாம். உங்களைப் போலவே அவரும் சாப்பிடுகிறார்.பேசுகிறார். இதற்கு மேல் குருவைப் பற்றி என்ன அறிய ? நீங்கள் கேட்கலாம் .

குருவுக்கு அப்பால் தேடினால் அங்கு மௌனம் மட்டுமே தென்படும். பூரணமான , முழுமையான , களங்கமற்ற மௌனமாக அது இருக்கும். குருவுக்கு அப்பால் ஒரு உருவமற்ற நிலையே எஞ்சி இருக்கிறது .இந்த உலகிற்கும் , கடவுளுக்கும் சரியான நடுவான இடத்தில் இருப்பதாக குரு விளங்குகிறார். இதனால்தான் தாய் , தந்தை, உருமற்ற கடவுளுக்கு முன்னால் ரூபம் பாதி அரூபம் பாதியான குரு வைக்கப்படுகிறார் .

தாயை ,தந்தையை உருவமாக பார்த்த நீங்கள் , குருவையும் உருவமாக பார்க்கலாம் .ஆனால் குருவின் இன்னொரு புறம் உருமற்ற அரூப நிலை .இது கடவுளின் நிலை .

இதையே ஒரு நிகழ்வாக குர்ஆன் நமக்குப் படம் பிடித்து காட்டுகிறது .
قَالَ لَهٗ مُوْسٰى هَلْ اَتَّبِعُكَ عَلٰٓى اَنْ تُعَلِّمَنِ مِمَّا عُلِّمْتَ رُشْدًا

“உங்களுக்குக் கற்றுக் கொடுக்கப்பட்ட நன்மையானவற்றை நீங்கள் எனக்குக் கற்பிக்கும் பொருட்டு, உங்களை நான் பின் தொடரட்டுமா? என்று அவரிடம் மூஸா கேட்டார்.

(அல்குர்ஆன் : 18:66)

நபி மூஸா (அலை) அவர்கள் முக்கிய நபிமார்களில் ஒருவராக இருந்தும் கல்வி கற்க சென்றதிலிருந்து , ஒருவர் எவ்வளவுதான் கல்வியைக் கற்றுத் தேர்ந்து இருந்தாலும் மேலும் தேடிக் கற்றுக் கொள்வதை நிறுத்தி விடலாகாது என்பது இதிலிருந்து தெரிய வருகிறது .

"தொட்டிலிருந்து மண்ணறை வரை கல்வியை தேடுங்கள்" என்பது நபிமொழி
قَالَ اِنَّكَ لَنْ تَسْتَطِيْعَ مَعِىَ صَبْرًا

(அதற்கவர்,) “நிச்சயமாக நீர் என்னுடன் பொறுமையாக இருக்க இயலமாட்டீர்!” என்று கூறினார். (அல்குர்ஆன் : 18:67)
وَكَيْفَ تَصْبِرُ عَلٰى مَا لَمْ تُحِطْ بِهٖ خُبْرًا

“(ஏனெனில்) எதைப் பற்றி உமக்கு முழுமையான ஞானம் இல்லையோ, அதில் நீர் எவ்வாறு பொறுமையாயிருப்பீர்!” (என்று கேட்டார்.) (அல்குர்ஆன் : 18:68)
قَالَ سَتَجِدُنِىْۤ اِنْ شَآءَ اللّٰهُ صَابِرًا وَّلَاۤ اَعْصِىْ لَكَ اَمْرًا

(அதற்கு) மூஸா, “இன்ஷா அல்லாஹ்! நான் பொறுமையுள்ளவனாகவும், எவ்விஷயத்திலும் உமக்கு மாறு செய்யாதவனாகவும் நான் இருப்பதை நீங்கள் விரைவில் காண்பீர்கள்” என்று (மூஸா) சொன்னார். (அல்குர்ஆன் : 18:69)

"எவ்வாறு நான் பொறுமையாக இல்லாதிருக்க முடியும் ?" என்று நபி மூஸா (அலை) அவர்கள் விலகியதற்கு ,

உங்கள் நபியாக இருக்கிறீர்கள் .உங்களது கட்டளைகள் புறம் (ஷரீயத்) சம்பந்தப்பட்டவைகள். என்னிலிருந்து ஏதேனும் ஒரு காரியம் நிகழலாம் . வெளிக்கு அது பொருத்தமற்றதாக தோன்றலாம். ஆனால் அதன் அந்தரங்க காரணம் உமக்குத் தெரியாமல் இருக்கலாம். ஆதலால் நீர் அதனைப் பொறுத்துக் கொண்டிருக்க மாட்டீர் " என்று கிள்று (அலை) அவர்கள் பதில் கூறினார்கள்.

மூஸா (அலை) அவர்கள் அல்லாஹ் நாடினால் பொறுமையாக என்னைக் காண்பீர் " என வாக்களித்தார். ஆயினும் அப்புறம் பொறுமையாக இருக்க முடியவில்லை.

இதற்குக் காரணம் என்னவெனில் மூஸா (அலை) அவர்கள் கல்வி கற்கும் மாணவன் என்ற முறையில் சென்றார்கள். மாணவர்கள் ஒன்றை கண்டால் அதில் உள்ள நுட்பத்தை உணரும் வரை பொறுமையுடன் இருப்பதில்லை . தங்களது ஆசிரியரிடம் அதனைக் குறித்து வினவுவது வழக்கம். இது மாணவர் இனத்துக்கு ஏற்பட்ட இயற்கை .ஆதலின் நபி மூஸா (அலை ) அவர்கள் தம்மைக் குறித்து வாக்களித்தாலும், மாணவர் இயற்கைக்கு ஏற்றவாறு பொறுமையுடன் இருக்க இயலவில்லை.
قَالَ فَاِنِ اتَّبَعْتَنِىْ فَلَا تَسْـئَلْنِىْ عَنْ شَىْءٍ حَتّٰۤى اُحْدِثَ لَـكَ مِنْهُ ذِكْرًا

(அதற்கு அவர்) “நீர் என்னைப்பின் தொடர்வதாயின், எந்த ஒரு விஷயத்தைப் பற்றியும் - நானாகவே அதைப்பற்றி உமக்கு அறிவிக்கும் வரை - நீர் என்னிடம் கேட்கக் கூடாது” என்று சொன்னார். (அல்குர்ஆன் : 18:70)

ஞான மார்க்கத்தில் செல்லும் சீடன் ஆசானின் செய்கைகள், சொற்கள் , நிலைகள் ஆகியவை எதனையும் ஆட்சேபிக்காதிருக்க மட்டுமல்லாமல், அதை தனது புத்திக்கு பொருத்தமற்றதாக தோன்றினாலும் கூட ஆசானின்பால் விசுவாசமுள்ளவனாக இருக்க வேண்டும்.

சத்குரு சரியாத்தான் இருக்கிறார். தனது எண்ணம்தான் தவறானது என்ற நல்ல எண்ணத்திலேயே இருக்கவேண்டும். குரு ஒன்றைப்பற்றி கூறாத வரையில் அதனைக் குறித்து சொல்லாலும் , செயலாலும் சீடர் விசாரிக்காமல் இருக்க வேண்டும் . இவ்வொழுக்கங்களைக் கடைப்பிடிக்க வேண்டும் என்பது மேற்கூறிய வசனத்தில் புலனாகிறது.

ஹஜரத் லுக்மான் ஹக்கீம் அவர்கள் நபிதாவூத் (அலை) அவர்களிடம் சென்றார்கள். அப்போது நபியவர்கள் உருக்குச் சட்டை தயார் செய்து கொண்டிருந்தார்கள் .

இதனைப் பற்றி விசாரிக்க வேண்டும் என்று லுக்மானுக்கு ஆவல் இருந்தது. என்றாலும் விசாரிக்காமல் இருந்தார். சட்டை தயாரானவுடன் நபி தாவூத் ( அலை ) அவர்கள் அதனை அணிந்து, "யுத்தத்துக்கு இந்தச் சட்டை நல்லதாயிற்று" என்று கூறினார்கள். அப்போதுதான் அது எதற்கு உதவும் என்பதை லுக்மான் உணர்ந்து கொண்டார்கள்.

குருவின் செய்கைகளை சீடர் குறிப்பால் உணர்ந்து கொள்ள வேண்டும் .ஏனெனில் குரு அந்தரங்கமானவர்

## சற்குருவின் சகவாசம் 18

( குருவிடம் சீடர் பாமரனாக இருக்க வேண்டும் )



நீங்கள் சீடராய் இருப்பவராக இருந்தால் , கற்றுக் கொள்பவராக இருக்க வேண்டும். கற்றுக் கொள்ளுதல் என்பது பாமரன் போன்ற நிலையில் இருந்து கொண்டு சீடர் கற்றுக் கொள்ள வேண்டும். சீடர் தனக்குள் தீர்மானங்கள் ஏற்படுத்திக் கொண்டு விடக்கூடாது. அவை சீடராக இருக்கும் உங்களை கற்றுக்கொள்ள அனுமதிக்காது.
ஏதாவது சில விஷயங்கள் அந்த தீர்மானங்களுக்கு எதிராக அமைந்திருந்தால், அவற்றை நிராகரிக்கும் நிலைக்கு நீங்கள் தள்ளப்படுகிறீர்கள். அந்த தீர்மானங்களுக்கு எதிராக அவை இல்லாமல் இருந்தால், நீங்கள் எதையும் கற்றுக் கொள்ள முடியாது. உங்கள் பழைய தப்பபிப்ராயம் மேலும் பலப் பட்டுவிடும்.
ஏதாவது உங்களுக்கு உடன்பாடானதாக இருந்தால், அங்கே கற்றுக் கொள்ளல் இருக்காது . அது பழைய கருத்தைப் . பலப்படுத்தும் செயலாகவே அமையும் . குரு அவ்வாறு செய்ய மாட்டார். புதியது ஏற்பட வேண்டுமென்று பழையது உடைத்து எறிந்து விடுவார்.
இவ்வளவு காலம் நீங்கள் சுமந்து கொண்டிருந்தை எல்லாம் அவர் அப்புறப்படுத்தி விடுவார். உங்கள் மனதில் இடவசதி செய்யவேண்டியிருக்கிறது .

உங்களுடைய தீர்மானங்கள் பழைய அபிப்பிராயங்கள் எண்ணங்கள், தத்துவங்கள் , கோட்பாடுகள் போன்றவற்றை நீங்கள் பிடித்துக் கொண்டு தொங்கினால், ஒரு குருவை கண்டுபிடிக்க முடியாது. குருவின் பணியை எல்லா தத்துவங்களையும் அழிப்பதுதான். அவர் நிஜமான விஷயங்களில் ஆர்வம் கொண்டிருக்கிறார். விஷயங்கள் குறித்து அனுமானங்களில் அவருக்கு விருப்பமில்லை .
"என்னோடு நீங்கள் இருக்க விரும்பினால் , எதையும் கற்றுக் கொள்ளாதவராக மாறுங்கள். கற்றுக் கொள்ளாதவராக மாறாவிட்டால், அப்போது உங்களுக்கு அளிக்க என்னிடம் எதுவும் இருக்காது. நீங்கள் ஏற்கனவே நிறைய சேமித்துக் கொண்டு இருக்கிறீர்கள் "என்று ரமண மகரிஷி தனது சீடர்களிடம் சொல்வது வழக்கம்.
மேற்கண்ட செய்தி ஒரு சீடர் எப்படி குருவிடம் நடந்து கொள்ள வேண்டும் என்பதை பார்த்தோம் . இதையே குர்ஆனில் கிள்று நபிக்கும் மூஸா நபிக்கும் இடையே நடக்கும் சம்பவத்தை உதாரணமாக பாருங்கள் .
قَالَ فَاِنِ اتَّبَعْتَنِىْ فَلَا تَسْـــَٔلْنِىْ عَنْ شَىْءٍ حَتّٰٓى اُحْدِثَ لَـكَ مِنْهُ ذِكْرًا
(அதற்கு கிள்று) “நீர் என்னைப்பின் தொடர்வதாயின், எந்த ஒரு விஷயத்தைப் பற்றியும் - நானாகவே அதைப்பற்றி உமக்கு அறிவிக்கும் வரை - நீர் என்னிடம் கேட்கக் கூடாது” என்று சொன்னார். (அல்குர்ஆன் : 18:70)
فَانْطَلَقَا حَتّٰٓى اِذَا رَكِبَا فِى السَّفِيْنَةِ خَرَقَهَا قَالَ اَخَرَقْتَهَا لِتُغْرِقَ اَهْلَهَا لَقَدْ جِئْتَ شَيْــًٔـــا اِمْرًا
பின்னர் இருவரும் ஒரு மரக்கலத்தில் ஏறும் வரையில் நடந்து சென்றனர், (மரக்கலம் கடலில் செல்லலானதும்;) அவர் (கிள்று) அதில் ஓர் ஓட்டையைப் போட்டார்; “இதிலுள்ளவர்களை மூழ்கடிக்கவா நீங்கள் இதில் ஓர் ஓட்டையைப் போட்டீர்கள்? நிச்சயமாக நீங்கள் ஓர் (அபாயகரமான) பெருங் காரியத்தைச் செய்துவிட்டீர்கள்” என்று (மூஸா) கூறினார்
(அல்குர்ஆன் : 18:71)

மரக்கலம் என்று குறிப்பிட்டிருந்தாலும் கப்பலைப் போன்ற பெரிய மரக்கலமாகும் .
நபி மூஸா (அலை) அவர்களும், கிள்று நபி அவர்களும் கப்பலில் தங்களை ஏற்றிக் கொள்ளும் விஷயமாக கப்பல் காரர்களிடம் பேசினர். அவர்கள் ஏற்கனவே கிள்று அலைஹிஸ்ஸலாம் அவர்களை அறிந்திருந்ததால் கட்டணமின்றி அவர்களை கப்பலில் ஏற்றிக் கொண்டனர்.
கப்பல் ஓட்டிகள் இருவரையும் பார்த்து' இவ்விருவரும் கள்வர்களாக இருப்பார்கள்' என்று கூறியதை , கப்பல் சொந்தக்காரர் மறுத்து "இல்லை இவர்களது முகங்கள் நபிமார்களது முகங்களை போல் இருக்கிறது " என்று கூறினார்.
கப்பல் ஆழமான இடத்திற்கு சென்ற பிறகு, ஒருவரும் அறியாத நிலையில் ஒரு ஆயுதத்தை எடுத்து தண்ணீருக்குப் பக்கத்தில் உள்ள பலகைகளில் இரு பலகைகளை கிள்று (அலை) அவர்கள் கழற்றி கப்பலை ஓட்டையாகி விட்டார்கள்.

நபி மூஸா (அலை) அவர்கள் அந்த ஓட்டையை தங்களது துணிகளால் அடைக்க தொடங்கினார்கள். கிள்று (அலை) அவர்கள் ஒரு பாத்திரத்தை எடுத்து கப்பலில் உள்ள ஓட்டையை வெளியே தெரியாமல் மறைத்தார்கள்.

தண்ணீர் கப்பலில் நுழையாத விதமாகத்தான் கப்பலின் ஓரங்களில் ஓட்டை போட்டதாகவும். அப்போது மூஸா (அலை) அவர்கள் ".கட்டணம் வாங்காமல் நம்மை கப்பலில் ஏற்றி உதவி செய்ததற்கு இவ்வாறுதானா பிரதிபலன் அளிப்பது ? ஆகவே நீங்கள் ஆச்சரியமான காரியத்தை செய்தீர்கள் '' என்று அவரிடம் கூறினார்கள்.

கிள்று (அலை) அவர்கள் கப்பலை ஓட்டையாக்கியதும் மூஸா (அலை) அவர்கள் கப்பலில் ஒரு பக்கம் ஒதுங்கி தனியே இருந்துகொண்டு, இந்த மனிதரிடம் சேர்ந்து என்ன கற்கப் போகிறேன்..? பனூ இஸ்ராயீல்களிடமிருந்தால் ,காலையிலும் மாலையிலும் அவர்களுக்கு அல்லாஹ்டைய தவ்ராத்தை ஓதிக் காட்டுவேன்.அவர்கள் எனக்கு வழிபட்டு நடப்பார்கள் என்று மனதுக்குள் சொல்லிக்கொண்டு இருந்தார்கள்.

அப்போது கிள்று (அலை) அவர்கள், " மூஸாவே... நீ யோசித்துக் கொண்டிருப்பதை நான் கூறட்டுமா" என்றார்கள்

அதற்கு அவர் "கூறும் " என்றார்.அப்பொழுது அவர் நினைத்துக் கொண்டு இருந்ததை விபரமாகக் கூறவே, மூஸா (அலை) அவர்கள் "உண்மைதான் "என்று ஒப்புக் கொண்டார்கள்.

قَالَ اَلَمْ اَقُلْ اِنَّكَ لَنْ تَسْتَطِيْعَ مَعِىَ صَبْرًا

(அதற்கு கிள்று ) “நிச்சயமாக நீர் என்னுடன் பொறுமையைக் கடைப்பிடிக்க முடியாது என்று உமக்கு நான் சொல்லவில்லையா? என்றார். (அல்குர்ஆன் : 18:72)

قَالَ لَا تُؤَاخِذْنِىْ بِمَا نَسِيْتُ وَلَا تُرْهِقْنِىْ مِنْ اَمْرِىْ عُسْرًا

“நான் மறந்து விட்டதைப் பற்றி நீங்கள் என்னை(க் குற்றம்) பிடிக்க வேண்டாம்; இன்னும் என் காரியத்தைச் சிரமமுடையதாக ஆக்கி விடாதீர்கள்” என்று (மூஸா) கூறினார்.

(அல்குர்ஆன் : 18:73)

பிற்பாடு கப்பலில் ஏன் ஓட்டைப் போட்டேன் என்பதை பற்றிய விபரத்தை ஞானம் கற்க வந்த மூஸா நபியிடம் கிள்று (அலை) அவர்கள் விளக்கினார்கள்

اَمَّا السَّفِيْنَةُ فَكَانَتْ لِمَسٰكِيْنَ يَعْمَلُوْنَ فِى الْبَحْرِ فَاَرَدْتُّ اَنْ اَعِيْبَهَا وَكَانَ وَرَآءَهُمْ مَّلِكٌ يَّاْخُذُ كُلَّ سَفِيْنَةٍ غَصْبًا

“அம்மரக்கலம் கடலில் வேலை செய்யும் ஏழைகள் சிலருக்குச் சொந்தமானது; எனவே நான் அதை (ஓட்டையிட்டு)ப் பழுதாக்க விரும்பினேன்; (ஏனெனில்) அவர்களுக்குப் பின்னால் (கொடுங்கோலனான) ஓர் அரசன் இருந்தான்; அவன் (பழுதில்லா) மரக்கலங்களையெல்லாம் பலவந்தமாக எடுத்துக் கொள்கிறான். (அல்குர்ஆன் : 18:79)

உன்துலுஸ் நாட்டில் (போர்ச்சுக்கல் ,சிசிலி ,ஸ்பெயின் ஆகிய மூன்று நாடுகளும் சேர்ந்தது) காத்தபா என்ற தீவிலுள்ள அரசனைக் குறிக்கிறது . இவன் பெயர் ஜலந்தீ . இவன் கடல் கொள்ளைக்காரன்களில் முதலாமனாகவும் இருந்தான்.

கடலில் செல்லும் கப்பல்களில் குற்றம் குறை இல்லாதவைகளை அக்கிரமாக பிடுங்கிக் கொள்வது இவனது வழக்கம் . பழுது உள்ளவைகளை எடுத்துக்கொள்வதில்லை. ஆதலின் அந்த கப்பல் கொடுங்கோல் அரசனின் ஆட்கள் இருந்த இடம் சென்றபோது ,அவ்வாட்கள் கப்பலில் ஏறி பார்த்தார்கள் . கப்பல் பழுதுள்ளதாக இருப்பதாகக் கண்டு அதனை கைப்பற்றாமல் விட்டுவிட்டனர்.

அவர்களை விட்டு கப்பல் தப்பி அப்புறம் சென்ற பிறகு கிள்று நபியவர்கள் அதையே மறுபடியும் எடுத்த பலகையை அதே இடத்தில் அறைந்து ஒழுங்குபடுத்தி விட்டார்கள்.

கிள்று (அலை) , மூஸா (அலை) ஆகியவர்களிடமிருந்து கப்பல்காரர்கள் கட்டணம் வசூல் செய்யாததால் அதனைப் பார்க்கினும் சிறந்ததை கடலில் வேலை செய்கிற ஏழைகளான தன் அடியார்களுக்கு அல்லாஹுதஅலா பகரமாக்கினான் .

இந்த மறைவான ஞானம் பற்றி நபி மூஸா (அலை) அவர்கள் அறியாமல் , ஞானம் கற்றுக் கொடுக்கும் கிள்று நபியை தவறுதலாக அவர்களிடமே பேசி விட்டார்கள் .

சீடராய் இருப்பவர், கற்றுக் கொள்பவராக இருக்க வேண்டும். கற்றுக் கொள்ளுதல் என்பது பாமரன் போன்ற நிலையில் இருந்து கொண்டு ஒருவர் கற்றுக் கொள்ள வேண்டும். ஒருவர் தனக்குள் தீர்மானங்கள் ஏற்படுத்திக் கொண்டு விடக்கூடாது. அவை உங்களை கற்றுக்கொள்ள அனுமதிக்காது.

குருவிடம் சீடர் பாமரனாக இருக்க வேண்டும்

ரஹ்மத் ராஜகுமாரன்

## சொர்க்கத்தின் நதிகள்



சொர்க்கத்தில் " நஹர் ரஹ்மத் " என்ற ஒரு நதி உண்டு. அந்த நதியின் மணல் கஸ்தூரியும், அதனுடன் கலந்து கிடக்கும் பருக்கை கற்களாக முத்துக்கள் இருக்கும். ரஹ்மத் நதி நீர் பனிநீரிலும் வெண்மையும் , தேனிலும் இன்பமுமாய் உள்ளது. இந்நதி எட்டு சுவர்க்கங்களிலும் பிரவாகித்து ஓடும்.

அடுத்து " கௌதர் நதி " என்னும் சிறப்பு வாய்ந்த நதி ஒன்று உண்டு. இதன் ஆழம் எழுபதினாயிரம் காத அளவுள்ளது. இதன் இரு கரைகளும் முத்தினாலும், மரகதத்தினாலும் , மாணிக்த்தினாலும் ஆனது. அதன் இருமருங்கும் முத்துக் கூடாரங்கள் போடப்பட்டிருக்கும்.

கௌதர் நதி கரையில் உள்ள மரங்கள் ஆணி முத்தினாலும் , மாணிக்கத்தினாலும் வளர்ந்திருக்கும் இந்நதி பிரவாகிக்கும் நீர் பாலிலும் வெண்மையும் , தேனிலும் இன்பமுமாயிருக்கும். இந்த கௌதர் நதி

நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்களுக்குச் சொந்தமானது .

அடுத்து சொர்க்கத்தில் "நஹறுல் காபூர் "

என்கிற கற்பூர நதியும் உண்டு.

“நிச்சயமாக நல்லவர்கள் (சுவர்க்கத்தில்) குவளைகளிலிருந்து (பானம்) அருந்துவார்கள்; அதன் கலப்பு காஃபூராக (கற்பூராக) இருக்கும், (காஃபூர்) ஒரு சுனையாகும்; அதிலிருந்து அல்லாஹ்வின் நல்லடியார்கள் அருந்துவார்கள். அதை (அவர்கள் விரும்பும் இடங்களுக்கெல்லாம்) ஓடைகளாக ஓடச் செய்வார்கள். குர்ஆன் (76 : 5 , 6)

இன்னும் மேன் மாடங்களிலிருக்கும் சுவனவாசிகள் பயன்படுத்தும்படியான ஆகாச நதிகளும் அநேகம் ஓடிக்கொண்டிருக்கும் , இந்நதியை "நஹ்ரு தஸ்னீம் " என்று அழைக்கப்படுகிறது.

"நஹ்ரு ரம்யான் " என்கிற நதியின் கரையில் பவளத்தினாலேயே பட்டணங்கள் இருக்கும் .அந்த பட்டணத்திற்கெல்லாம் வெள்ளியினாலும் , பொன்னாலும் ஆயிரம் வாசல் உண்டு. அங்கு பல வித நீரூற்றுகளும் , அருவிகளும் உண்டு.

சொர்க்கத்து நதிகளில் சில நம் பூமியின் நதிகளைப் போல் இரு கரைகளை உருவாக்கி பள்ளத்தில் ஓடும் நதி போல் அல்லாமல் , இரு கரைகளே இல்லாமல் சுவனத் தரையின் மேல் ஓடும் விநோத நதிகளும் உண்டு.

சொர்க்கத்து எல்லா பாதைகளிலும் , எல்லாத் தரிப்பிடங்களிலும் ஓடிக்கொண்டிருக்கிற " ஸல்ஸபீல் நதி " அங்கு உண்டு .

وَيُسْقَوْنَ فِيْهَا كَاْسًا كَانَ مِزَاجُهَا زَنْجَبِيْلًا

(இஞ்சி கலந்த) "சன்ஜபீல்" என்னும் (மிக்க உயர்ந்ததொரு) பானமும் அங்கு அவர்களுக்குப் புகட்டப்படும்.

(அல்குர்ஆன் : 76:17)

عَيْنًا فِيْهَا تُسَمّٰى سَلْسَبِيْلًا

அது அங்குள்ள ஓர் ஊற்றின் நீர், அதற்கு "ஸல்ஸபீல்" என்றும் பெயர் கூறப்படும்.

## சற்குருவின் சகவாசம் 19

(அறிவு வேகமானது. ஞானம் விவேகமானது)



அறிவு என்பது எப்போதும் விவாதங்களை தொங்கவிட்டு நிறுத்தும் இடமாக உள்ளது. அறிவுக்கு கற்றுக்கொள்வதில் ஆர்வத்தைக் காட்டிலும் ஆணவம் இருக்கிறது . ஆணவம் மிகைக்கையில் அது கற்றுக் கொள்வதில் ஆர்வம் இல்லாது போகிறது. நீங்கள் வளர வளர ஆர்வம் குறைந்து போகிறது.

குழந்தைகளால் எளிதாக கற்றுக்கொள்ள முடியும் காரணம் அவர்களிடம் ஆணவம் இல்லை .எனவே வேகமாகவும் எளிதாகவும் கற்றுக்கொள்ள முடிகிறது. 35 அல்லது 40 வயதில் அதே விஷயத்தை கற்க நினைத்தால், அது சிரமானதாகவும் கிட்டத்தட்ட முடியாததாகவும் மாறிவிடுகிறது. உங்கள் அறிவுக்கு இப்போது என்ன நேர்ந்தது ?

50 வருட காலத்திற்குப் பிறகு உங்கள் அறிவு முன்பு இருந்ததைவிட அதிகரித்திருக்க வேண்டும் ; அப்படி இருப்பதில்லை. நீங்கள் நிறைய குப்பைகளை ஆணவத்தோடு அள்ளி சேகரித்து வைத்திருக்கிறீர்கள். அறிவின் செயல்பாடு சுதந்திரமானதாக இல்லை. அது சுமை நிறைந்ததாக உள்ளது. குப்பைகளினால் எடை கூடி போய்விட்டது. எதையும் கற்றுக் கொள்வதை அவமானமாக கருதுகிறது. எனவே உங்களால் பணிவுடனும் இருக்க முடியாது. கற்றுக் கொள்ளவும் முடியாது.

ஜுனைதுல் பாக்தாதி (ரஹ்) அவர்கள் தன்னிடம் சீடராக வருபவரை பல ஆண்டுகள் ஒரு வார்த்தை கூட பேசாமல் பள்ளிவாசலுக்கு வெளியே நிற்க வைப்பார்.பின்னர் சில ஆண்டுகள் உட்கார வைப்பார். ஆத்திரம் ஆணவம் எல்லாம் அழிந்து பொறுமை வந்து பொறுமையும் போய் மனம் வெறுமையாகி அகந்தை என்பது மருந்துக்குக் கூட இல்லாமல் போன பிறகுதான் பள்ளிவாசலுக்கு உள்ளே அழைப்பார். பின்னர் தொட்டு ஆசிர்வதிப்பார் .

ஒரு தடவை ஜுனைதுல் பாக்தாதி தன் சீடர் ஒருவரோடு காட்டு வழியாக போய்க்கொண்டிருந்தார். கடுமையான வெயில் காரணமாக சீடருக்கு மூக்கிலிருந்து ரத்தம் வந்தது. ''அப்பாப்பா ... என்னா சூடு " என்று சொன்னார் சீடர்.

" இறைவனின் ஏற்பாட்டை குறை கூறுகிறாயா ? உடனே என்னை விட்டுப் போய்விடு" என்று கோபமாக சொன்னார்.

நல்ல மழை பெய்யும் பொழுது, வெயில் அடிக்கும்போது பொதுவாக நாம் என்ன சொல்வோமோ அதைத்தான் அந்த சீடரும் சொல்லி இருக்கிறார். அதுவும் மூக்கு ரத்தம் வரும் அளவுக்குப் பொறுமையாக இருந்த பிறகு. ஆனால் அது கூட குருவின் பார்வையில் மிகப் பெரிய தவறாக பார்க்கப்படுகிறது.

فَانْطَلَقَاحَتّٰٓى اِذَا لَقِيَا غُلٰمًا فَقَتَلَهٗ ۙ قَالَ اَقَتَلْتَ نَـفْسًا زَكِيَّةً ۢ بِغَيْرِ نَـفْسٍ لَـقَدْ جِئْتَ شَيْـــًٔا نُّكْرًا

பின்னர் (மரக்கலத்திலிருந்து இறங்கி) இருவரும் வழி நடக்கலானார்கள்; (வழியில்) ஒரு பையனை அவ்விருவரும் சந்தித்த போது, அவர் (கிள்று) அவனைக் கொன்று விட்டார். (உடனே மூஸா) “கொலைக்குற்றமின்றி, பரிசுத்தமான ஜீவனைக் கொன்றுவிட்டீர்களே? நிச்சயமாக நீங்கள் பெருத்தக் கேடான ஒருகாரியத்தையே செய்து விட்டீர்கள்!” என்று (மூஸா) கூறினார். (அல்குர்ஆன் : 18:74)

நபி மூஸா அலை அவர்கள் கூறிய சமாதானத்தை கிள்று (அலை) அவர்கள் ஒப்புக் கொண்டார்கள். பின்னர் கப்பல் கரையை சேர்ந்தவுடன் அதனை விட்டு இறங்கி ஓரமாக நடந்து கொண்டிருக்கையில், ஒரு கிராமத்தின் எல்லையில் பல குழந்தைகள் விளையாடிக் கொண்டிருந்தனர். அவர்களில் ஒரு சிறுவனை கிள்று (அலை) அவர்கள் பிடித்து தலையை வெட்டி உடல் வேறாக்கி கொன்றுவிட்டார்கள். இதனை மூஸா (அலை) அவர்கள் ஆட்சேபித்து "குற்றமற்ற சிறுவனை கொன்று விட்டீரே " என்றார் .

இப்படி மூஸா (அலை) அவர்கள் கேட்டவுடன் கிள்று (அலை) அவர்கள் கோபமடைந்து, அவனின் தலையில் ஒரு பக்கத்து தோலை உரித்து காட்டினார்கள். அதில் " இவன் இறை மறுப்பாளன் விசுவாசம் கொள்ளமாட்டான் " என்று எழுதி இருந்தது.

وَاَمَّا الْغُلٰمُ فَكَانَ اَبَوٰهُ مُؤْمِنَيْنِ فَخَشِيْنَاۤ اَنْ يُّرْهِقَهُمَا طُغْيَانًا وَّكُفْرًا

“(அடுத்து) அந்த சிறுவனுடைய தாய், தந்தையர் இருவரும் முஃமின்களாக இருக்கிறார்கள்; அவன் (வாலிபனாகி) அவ்விருவரையும் வழிகேட்டிலும், குஃப்ரிலும் சேர்த்து விடுவான் என்று நாம் பயந்தோம். (அல்குர்ஆன் : 18:80)

فَاَرَدْنَاۤ اَنْ يُّبْدِلَهُمَا رَبُّهُمَا خَيْرًا مِّنْهُ زَكٰوةً وَّاَقْرَبَ رُحْمًا

“இன்னும், அவ்விருவருக்கும், பரிசுத்தத்திலும் (பெற்றோரிடம்) அன்பு செலுத்துவதிலும் சிறந்திருக்க கூடிய (ஒரு மகனை) அவ்விருவருடைய இறைவன் (கொலையுண்டவனுக்குப்) பதிலாக கொடுப்பதை நாம் விரும்பினோம். (அல்குர்ஆன் : 18:81)

இப்பையன் இறந்த பிறகு இறைவன் சாலிஹானா அவனின் பெற்றோர்களுக்கு ஒரு பெண் குழந்தையை கொடுத்தான். அப்பெண் குழந்தையை ஒரு நபி திருமணம் செய்தார்கள் . அந்த பெண்ணின் வயிற்றில் தோன்றிய சந்ததியினரின் 70 பேர் நபிமார்கள் ஆனார்கள் என்பதாக இப்னு அப்பாஸ் ரலி அவர்கள் கூறுகிறார்கள்

நீங்கள் ஒரு காரியத்தை வெறுக்கக் கூடும் அது உண்மையில் உங்களுக்கு நல்லதாக இருக்கலாம் என்று திருக்குர்ஆன் கூறுகிறது.

இப்பையனை கொலை செய்தது பிரத்யட்சமாக அத்தாட்சியாக இருக்கிறது. அதாவது பையன் இறந்ததை அவனது பெற்றோர்கள் விரும்பவில்லை .ஆனால் அவனது மரணம் பெற்றோர்களுக்கும் , அட , பையனுக்கும் கூட நன்மையாக அந்தரங்கத்தில் இருந்தது என்பதை நபி மூஸா (அலை) அறிந்திருக்கவில்லை .

قَالَ اَ لَمْ اَ قُلْ لَّكَ اِنَّكَ لَنْ تَسْتَطِيْعَ مَعِىَ صَبْرًا

(அதற்கு அவர்) "நிச்சயமாக நீர் என்னுடன் பொறுமையாக இருக்க இயலாது என்று உமக்கு நாம் சொல்லவில்லையா?" என்று கூறினார். (அல்குர்ஆன் : 18:75)

قَالَ اِنْ سَاَ لْتُكَ عَنْ شَىْءٍ بَعْدَهَا فَلَا تُصٰحِبْنِىْ قَدْ بَلَـغْتَ مِنْ لَّدُنِّىْ عُذْرًا

இதன் பின்னர் நான் எந்த விஷயத்தைப் பற்றியாவது உங்களிடம் கேட்பேனாயின் நீங்கள் உங்கள் தோழனாக வைத்துக் கொள்ள வேண்டாம் - நிச்சயமாக நீங்கள் என்னிடமிருந்து தக்க மன்னிப்புக் கோருதலைப் பெற்றுக் கொண்டீர்கள்" என்று கூறினார். (அல்குர்ஆன் : 18:76)

அறிவு என்பது எப்போதும் விவாதங்களை தொங்கவிட்டு நிறுத்தும் இடமாக உள்ளது. ஆனால் ஞானம் விவேகமான செயல்களை செய்யும்.

## சற்குருவின் சகவாச தொடருக்கு சாதகமாக இருந்த நூற்களை சொல்லுங்களேன்.




" சத்குரு " என்ற முன்னாள் நான் எழுதிய பதிவுகளைப் பற்றி நண்பர் Vali Poakkan Parathesi " சத்குரு என்ற தொடர் பதிவு அத்துடன் முடிந்ததா ? "என்று கேட்டார்

'இல்லை இன்னும் அதன் தொடர் பதிவுகள் இருக்கிறது என்று சொல்லி சத்குருவின் மகத்துவத்தை அந்த தொடரில் சொல்லி இருந்தேன் . தொடர்ந்து சத்குருவின் சகவாசம் என்று சீடராகளாகிய முரீதுகள் சற்குருவிடம் நடந்து கொள்ள வேண்டிய அனுஷ்டாங்களைப் பற்றி கூற இந்த தொடரை ஆரம்பித்தேன் . இத்துடன் சூஃபித்துவ சற்குருவைப் பற்றி வேறு வேறு தலைப்புகளில் இன்னும் நிறைய சொல்ல வேண்டியதிருக்கிறது .

அதற்குள் நண்பர்கள் அநேகர் "இந்த தொடரை எந்தெந்த நூற்களில் இருந்து கையாள்கிறீர்கள் ? ஒவ்வொரு பதிவின் போதும் கேட்டுக் கொண்டே இருக்கிறார்கள் . அவர்களுக்காக ...

1) பூரணத்துவம் நிறைந்த குரு - ஓஷோ

(உபயம் : நண்பர் Meeran Sahib )

2) வலிமார்கள் வரலாறு - அப்துற் றஹீம் (1 முதல் 5 பாகம் )

3) தப்ஸீருல் ஹமீத் (ஓரிரு பாகங்கள்)
4) சூஃபிக் கதைகள் - யூமா வாசுகி
( உபயம் : திருநெல்வேலி மாவட்ட நூலகம்)
5) சூஃபி வழி -நாகூர் ரூமி
(உபயம்: வயது முதிர்ந்த நண்பர் மர்ஹூம் ஹாஜி A அமானுல்லாஹ் சாகிப் )
6) பாக்தாத்தின் இராஜ ரிஷி - எம்.ஏ ஹைதர் அலி
25 பதிவுடன் நிறைவு செய்ய வேண்டும் என்று நினைக்கிறேன் .இன்ஷா அல்லாஹ் .

## சற்குருவின் சகவாசம் 20

(தன்னை தனக்குத்தானே காட்டிய சற்குரு)



ஒருவர் பூரணத்துவம் நிறைந்த சற்குருவை குறித்து நீங்கள் முடிவெடுக்கலாகாது. அப்படி முடிவெடுத்தால் தவறானது. உங்கள் முடிவு கடந்த கால அனுபவங்களிலிருந்து வெளிப்படுகின்றன .

சாத்வீகமான இயல்பு நிலையில் இருந்தால் மட்டும் ஒருவர் குருவை பெறமுடியும் ஆசைப்படும் வேகம் என்பது அவசரம் கொண்ட நிலையாகும் .

குருவைத் தேடும் மனிதர் பெண் இயல்பு நிறைந்தவர் மாதிரி இருக்க வேண்டும். அவசரம் காட்டக்கூடாது கவனத்துடனும் விழிப்புடனும் இருந்து என்ன செய்ய முடியும் என்பதே தெளிவுடன் இருக்க வேண்டும்.

ஏதாவது ஒரு குருவை முன்பே தெரிந்து வைத்திருக்கிறீர்களா ? அல்லது குருவுடன் அனுபவம் ஏதாவது உண்டா ? நீங்கள் தெரிந்து வைத்திருக்கும் தகவல்கள் எல்லாம் கடன் வாங்கி வைத்திருப்பவைகள் . நீங்கள் உறுதியான கருத்துடன் இல்லை. அது சார்ந்த உண்மையில் நம்பிக்கை வைக்க உங்களால் இயலாது .

எப்படி குருவை முடிவு செய்ய ஆசைப்படுகிறீர்கள் ? ஒருவர் பூரணத்துவம் பெற்ற குரு என்று எதை வைத்து எடை போடுகிறீர்கள் ? ஒரு குருவை எடை போடவும் தீர்மானிக்கவும் உங்களுக்கு தகுதி இருக்கிறதா ? அப்படி இருந்தால் நீங்கள் பூரணத்துவம் பெற்ற குருவை விடவும் உயர்ந்தவராகி விடுவீர்கள் .

சற்குருவின் செயல்களை மட்டும் கவனித்தால் நீங்கள் ஏமாந்து போவீர்கள். அவரது புறச்செயல்களை கவனித்த நீங்கள் அவரது அகம் எதனுடன் தொடர்போடு இருக்கிறது என்பதை நீங்கள் அறிய மாட்டீர்கள் .அட , "அதை அறியத்தானே நீங்கள் சீடராகவே அவரிடம் வந்திருக்கிறீர்கள் .

கிள்று (அலை) அவர்களிடம் ஞானம் கற்க வந்த நபி மூஸா (அலை) அவர்கள் இறுதியான நிகழ்வுக்கு வருகிறார்கள்
فَانْطَلَقَا حَتّٰٓى اِذَاۤ اَتَيَاۤ اَهْلَ قَرْيَةِ ۨاسْتَطْعَمَاۤ اَهْلَهَا فَاَبَوْا اَنْ يُّضَيِّفُوْهُمَا فَوَجَدَا فِيْهَا جِدَارًا يُّرِيْدُ اَنْ يَّـنْقَضَّ فَاَقَامَهٗ قَالَ لَوْ شِئْتَ لَـتَّخَذْتَ عَلَيْهِ اَجْرًا

பின்னர் அவ்விருவரும் வழி நடந்து, இருவரும் ஒரு கிராமத்தாரிடம் வந்து சேர்ந்தார்கள்; தங்களிருவருக்கும் உணவு தருமாறு அந்த கிராமத்தாரிடம் கேட்டார்கள்; ஆனால் அவ்விருவருக்கும் விருந்தளிக்க அவர்கள் மறுத்து விட்டார்கள்; அப்போது அங்கே இடிந்து அடியோடு விழும் நிலையிலிருந்த ஒரு சுவரை அவ்விருவரும் கண்டனர்; ஆகவே, ( கிள்று) அவர் (சரிசெய்து) நிமிர்த்தி வைத்தார். (இதைக் கண்ட மூஸா) “நீங்கள் நாடியிருந்தால் இதற்கென ஒரு கூலியை பெற்றிருக்கலாமே” என்று (மூஸா) கூறினார்.

(அல்குர்ஆன் : 18:77)
قَالَ هٰذَا فِرَاقُ بَيْنِىْ وَبَيْنِكَ سَاُنَـبِّئُكَ بِتَاْوِيْلِ مَا لَمْ تَسْتَطِعْ عَّلَيْهِ صَبْرًا

“இது தான் எனக்கும், உமக்குமிடையே பிரிவு(க்குரிய நேரம்) ஆகும்; எதைப் பற்றி நீர் பொறுமையாக இருக்க முடியவில்லையோ, அதன் விளக்கத்தையும் (இப்பொழுதே) உமக்குத் திட்டமாக அறிவித்து விடுகிறேன்” என்று அவர் கூறினார். (அல்குர்ஆன் : 18:78)

وَاَمَّا الْجِدَارُ فَكَانَ لِغُلٰمَيْنِ يَتِيْمَيْنِ فِى الْمَدِيْنَةِ وَكَانَ تَحْتَهٗ كَنْزٌ لَّهُمَا وَكَانَ اَبُوْهُمَا صَالِحًا فَاَرَادَ رَبُّكَ اَنْ يَّبْلُغَاۤ اَشُدَّهُمَا وَيَسْتَخْرِجَا كَنْزَهُمَا رَحْمَةً مِّنْ رَّبِّكَ وَمَا فَعَلْتُهٗ عَنْ اَمْرِىْ ذٰ لِكَ تَاْوِيْلُ مَا لَمْ تَسْطِعْ عَّلَيْهِ صَبْرًا

“இனி: (நான் நிமிர்த்து வைத்த) அந்த சுவர் அந்தப் பட்டிணத்திலுள்ள அநாதைச் சிறுவர் இருவருக்குரியது; அதன் அடியில் அவ்விருவருக்கும் சொந்தமான புதையல் உள்ளது; அவ்விருவருடைய தந்தை (ஸாலிஹான) நல்ல மனிதராக இருந்தார்; எனவே, அவ்விருவரும் தக்க பிராயமடைந்த தம்மிருவரின் புதையலையும் வெளிப்படுத்தி (எடுத்துக்) கொள்ள வேண்டும் என உம்முடைய இறைவன் நாடினான். (இவையெல்லாம்) உம் இறைவனுடைய ரஹ்மத்தில் நின்றும் உள்ளவை; என் விருப்பு, வெறுப்பின்படி எந்தக் காரியத்தையும் செய்யவில்லை; எதைப் பற்றி நீர் பொறுமையாக இருக்க முடியவில்லையோ அதன் விளக்கம் இது தான்” என்று கூறினார். (அல்குர்ஆன் : 18:82)

அஸ்ரம் , ஸுரைம் என்ற இரு அநாதைச் சிறுவர்கள். இவருடைய தந்தையின் பெயர் காஷிஹ் .தாயார் பெயர் தன்யா. இவர் விவசாயியாகவும் தக்வா உள்ளவராகவும் இருந்தார் . இவர் நாணயமானவர் .ஜனங்கள் தங்களிடமுள்ள பணங்களை இவரிடம் கொடுத்து வைப்பார்களாம். இவற்றை பாதுகாத்து உரியவரிடம் திரும்ப ஒப்படைப்பார். இவர்களது தந்தை இவர்களது ஏழாவது தலைமுறையில் உள்ள பாட்டன் என்பதாக ஜஃபருப்னு முஹம்மது (ரஹ்) அவர்கள் கூறியிருக்கிறார்கள் .

புதையல் என்பது எங்கு தங்கப் பாளம் என்பதாகச் சொல்லப்படுகிறது . அந்த தங்கப்பாளப் பலகையில் அதன் இருபுறங்களிலும் உபதேசங்கள் எழுதப்பட்டிருந்தன. அதாவது பிஸ்மில்லாஹிர்ரஹ்மானிர்ரஹீம் கத்தரை (விதியை) விசுவாசிப்பவனைக் குறித்து ஆச்சரியப்படுகிறேன். அதாவது எல்லா காரியங்களும் அல்லாஹ்வின் கற்பனையாலும் , அவனுடைய தக்தீராலும் (வித்யாலும்) நிகழுகின்றன ஆதலின் ஒருபக்கம் தவறிப்போவதாலும் ஒரு கஷ்டம் வந்து எய்துவதாலும் துக்கம் அடைவது எவ்வாறு ? என்று எழுதப்பட்டிருந்தது .

இந்த விவரங்களை கிள்று (அலை) அவர்கள் அறிந்து கடந்த மூன்று காரியங்களையும் நான் என் சொந்த புத்தியால் செய்யவில்லை .இறைவனது கட்டளைப்படியே செய்தேன் என்பதை அறிந்து நீர் பொறுமையுடன் இருந்து என்னுடன் சேர்ந்திருப்பீராயின் ஆச்சரியத்திலும் ஆச்சரியமான ஆயிரம் புதுமைகளைக் கண்டு இருப்பீர் என்று கூறினார்கள்.

கிள்று ( அலை) நபி மூஸா (அலை ) அவர்களிடம் தாங்கள் என் மீது மூன்றுவிதமான ஆட்சேபனைகள் தெரிவித்தீர்கள். அதற்கும் நான் உங்களுக்கு விளக்கம் கூறுகிறேன்.

நீரில் முழ்குவதற்காக ஓட்டை இட்டீரரே என்று கப்பலைக் குறித்து வினவினீர் கப்பலில் ஓட்டை இட்டதால் அதற்காக கடலில் மூழ்க வேண்டிய அவசியமில்லை. கப்பல் இல்லாமலேயே ஒரு பேழையில் உம்மை உம் தாயார் மிதக்க விட கடலில் மூழ்காமல் உயிருடன் இருக்கவில்லையா ? என்று மூஸா குழந்தையாய் இருக்கும் பருவத்தில் நைல் நதியில் பேழையில் வைத்து அவர் தாய் அனுப்பியதை குறிப்பிட்டு காட்டினார்கள்.

குற்றமற்ற ஒரு உயிரை கொல்கிறீரே என்று நீர் ஆட்சேபித்தீரே.. குற்றம் இல்லாமல் ஒரு கிப்தியானை நீர் கொலை செய்யவில்லையா ? என்று மூஸா (அலை) வாலிப பருவத்தில் இருவர் சண்டை விலக்கும் போது தான் செய்த ஒரு கொலை காரியத்தை கிள்று (அலை ) அவர்கள் சுட்டிக்காட்டினார்கள்.

தாங்கள் விரும்பியிருந்தால் சுவர் சரி செய்தற்கு கூலியை வாங்கி இருக்கலாமே என்று நீங்கள் ஆட்சேபனை தெரிவித்தீர்களே...ஷுஐபு (அலை) அவர்களது பெண் மக்களுக்கு நீர் தண்ணீர் வார்த்துக் கொடுத்தீரே அதற்குரிய கூலியை வாங்காமலேயே ஏன் தண்ணீர் வார்த்துக் கொடுத்தீர் ? என்று மூஸா (அலை) அவர்கள் வாழ்க்கையில் நடந்த சம்பவத்தை சுட்டிக்காட்டி கிள்று (அலை) அவர்கள் பதில் கேட்டார்கள்.

ஆக நபி மூஸா (அலை) அவர்களின் வாழ்க்கையில் நடந்த அத்தனை சம்பவங்களும் கிள்று (அலை) அவர்களுக்கு நன்கு தெரிந்திருக்கிறது . தம்முடைய சம்பவங்களில் புதைந்துள்ள ரகசியங்களில்தான் தனக்குரிய ஞானம் புதைந்து இருக்கிறது.ஞானத்தில் மிகப் பெரிய ஞானம் தன்னை அறிதல்தானே. இதை அறிந்து கொள்ளவா இறைப் பெரியோன் இந்த 3 சம்பவங்களை எனக்காக ஏற்படுத்தி அதில் புதைந்துள்ள ரகசியத்தை கிள்று (அலை) அவர்களுக்கு தெரிவித்துக் கொடுத்தானோ என்று கூட மூஸா (அலை) அவர்கள் எண்ணினார்கள் .

சற்குருவின் செயல்களை மட்டும் கவனித்தால் நீங்கள் ஏமாந்து போவீர்கள். அவரது புறச்செயல்களை கவனித்த நீங்கள் அவரது அகம் எதனுடன் தொடர்போடு இருக்கிறது என்பதை நீங்கள் அறிய மாட்டீர்கள் .அட , "அதை அறியத்தானே நீங்கள் சீடராகவே அவரிடம் வந்திருக்கிறீர்கள் .

சற்குருவின் சகவாசம் 21

(குரு துரோகம்)




மஸ்ஜித் நபவியில் ஒரு தூண் உள்ளது .இதற்கு உஸ்துவானா அபூ லுபாபா என்றும் கூறுவர் உஸ்துவானா தவ்பா - தவ்பா தூண் என்றும் கூறுவர்.

அபூ லுபாபா (ரலி) அவர்கள் பிரபல ஸஹாபி ஆவார்கள்

பத்ருப் போருக்கு முஸ்லிம்கள் கிளம்பிச் சென்றபோது , அப்துல்லாஹ் பின் உம்மிமக்தூம் என்ற பார்வையற்ற ஸஹாபிடம் மதீனாவின் நிர்வாகப் பொறுப்பை நபியவர்கள் அளித்தார்கள் என்று அறிவோம்

அபூலுபாபா அப்பொழுது பத்ருப் படையில் இடம் பெற்றிருந்தார். பின்னர் நபியவர்கள், அபூலுபாபாவை அழைத்து அவரிடம் மதீனாவின் நிர்வாகப் பொறுப்பை ஒப்படைத்தார்கள். அந்த அளவிற்கு அவர் மீதும் , அவரது தகுதியின் மீதும் நபியவர்களுக்கு நம்பிக்கை இருந்திருக்கிறது.

"பனூ குறைளா " யுத்தத்தின் போது , பனூ குறைளா வர்க்கத்தினரை நபித்தோழர்கள் முற்றுகையிட்டனர்.வேறு வழி இன்றி ஆயுதங்களை போட்டு விட்டு சரணடைந்து விட எண்ணினார்கள்.

மௌடீகக் காலத்தில் அபூ லுபாபா (ரலி) அவர்களுக்கும் பனூ குறைளா வர்க்கத்தினருக்கும் மிக நெருங்கிய தொடர்பு இருந்தது. அதனால் அக்கூட்டத்தினர் “அபூலுபாபாவிடம் கலந்துரையாட வேண்டும், தயவுசெய்து அவரை எங்களிடம் வரச்சொல்லுங்கள்” என்று கோரிக்கை வைத்தனர்.

அதைக்கேட்டு, “நபியவர்கள் சொன்னால் ஒழிய அவர்களிடமெல்லாம் நான் போக முடியாது” என்று திட்டவட்டமாகச் சொல்லிவிட்டார் அபூலுபாபா.

அனுமதியளித்தார்கள் நபியவர்கள்.

இதனால் " நாங்கள் சரணடைந்தால் , நபி (ஸல்) அவர்களின் திட்டம் என்னவாக இருக்கும் " என்பதை அக்கூட்டத்தினர் அழுது கொண்ட கேட்க, அபூ லுபாபா (ரலி) அவர்கள் தமது கையால் கழுத்தின் பக்கம் சாடை செய்து , அதாவது அவர்களை தலைவெட்டி விடுவதுதான் , என்ற யுத்த ரகசியத்தை எதிராளிகளுக்கு வெளிப்படுத்தி விட்டார்கள்.

'எப்படியும் மரணமாவோம்' என்ற நிலையில் அவர்களாக வந்து சரணடைவது கேள்விக்குறியானது.

நொடிப்பொழுதில் நிகழ்ந்துவிட்ட அந்தச் செய்கையின் தீவிரத்தால் அடுத்த கணமே உணர்ந்துவிட்டார் அபூலுபாபா.

‘இது ராஜத் துரோகம். அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் நான் இழைத்த நம்பிக்கைத் துரோகம்!’ என்று வெலவெலத்துப் போயின அவரது கைகளும் கால்களும். வெட்கமும் குற்ற உணர்ச்சியும் அவரைப் பிடுங்கித் தின்றன.

பனூ குரைளா மக்களிடமிருந்து பிடுங்கிக்கொண்டு கிளம்பியவர், களத்திற்குத் திரும்பவில்லை; நபியவர்களைச் சந்திக்கவில்லை. வேகவேகமாய் மதீனாவின் பள்ளிவாசலுக்கு விரைந்தார். அங்குள்ள ஒரு பேரீத்த தூணில் தம்மைத் தாமே கட்டிப்போட்டுக் கொண்டார்; சத்தியம் செய்துவிட்டார்.

“நான் செய்த காரியத்திற்கு அல்லாஹ் என்னை மன்னிக்கும்வரை நான் என்னை இந்தத் தண்டனையிலிருந்து விடுவித்துக்கொள்ள மாட்டேன். பனூ குரைளா விஷயத்தில் இனி நான் தரகு வேலையில் ஈடுபடவே மாட்டேன். அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் துரோகம் இழைத்த பனூ குரைளாவின் குடியிருப்புப் பகுதிக்கு நான் இனி செல்லவே மாட்டேன். என்னுடைய தவ்பாவை இறைவன் ஏற்றுக் கொள்ளாத வரை என்னை அவிழ்த்துக் கொள்ள மாட்டேன் . மேலும் நபி (ஸல்) அவர்கள் அவிழ்த்து விட்டால்தான் இவ்விடத்தை விட்டுச் செல்வேன் " என்று உறுதி கொண்டார்கள்.

நபி (ஸல்) அவர்களுக்கு இச்செய்தி கிடைத்த போது , "அவர் நேரே என்னிடம் வந்திருந்தால் , நான் அல்லாஹு தஆலாவிடம் அவருக்காக பாவ மன்னிப்புக் கேட்டிருப்பேனே , ஆனால் அவர் நேரடியாக அல்லாஹ்விடம் தவ்பா ஏற்றுக்கொள்ள உறுதி கொண்ட பிறகு நான் எவ்வாறு அவரை அவிழ்த்து விட முடியும் ? " என்று கூறிவிட்டார்கள் .

பல நாட்கள் இதே நிலையில் கழிந்தன.

தொழும் நேரத்திலும் சுய தேவைகளுக்கும் அவருடைய மனைவியோ ,மகளோ அவரை அவிழ்த்து விடுவார்கள். தேவை முடிந்த பின் கட்டி விடுவார்கள் . இதே நிலையில் பல நாட்கள் வரை உண்ணவோ, அருந்தவோ, ஏதுமின்றி பசியினால் கண்களுக்கு முன்னால் இருள் சூழ்ந்து கொண்டது .காதடைத்து பலத்த ஓசை மட்டுமே கேட்டது.

பல நாட்களுக்குப் பிறகு நபி (ஸல்) உம்மு ஸல்மா (ரலி -அன்ஹா) அவர்களின் வீட்டிலிருக்கும் போது, தஹஜ்ஜ் நேரத்தில் அபூ லுபாபா (ரலி) அவர்களின் தவ்பா ஏற்றுக்கொள்ளப்பட்டதாக இறைவசனம் வேத வசனமாக

وَاٰخَرُوْنَ اعْتَرَفُوْا بِذُنُوْبِهِمْ خَلَطُوْا عَمَلًا صَالِحًا وَّاٰخَرَ سَيِّئًا عَسَى اللّٰهُ اَنْ يَّتُوْبَ عَلَيْهِمْ اِنَّ اللّٰهَ غَفُوْرٌ رَّحِيْمٌ

" வேறு சிலர், தங்கள் நல்ல செயல்களைத் தீய செயல்களோட

(அறியாமல்) கலந்துவிட்டனர். அந்தக் குற்றத்தை ஒப்புக்கொள்கின்றனர். அவர்களுடைய குற்றங்களை அல்லாஹ் மன்னித்துவிடலாம். திண்ணமாக, அல்லாஹ் மன்னிப்பவன்; கருணையாளன்" என்ற அந்த இறை வாசகம் சூரத்துத் தவ்பாவின் 102ஆவது வசனமாக இடம்பெற்றுவிட்டது.

உடனே அபூ லுபாபா (ரலி) அவர்களின் தவ்பா இறைவன் ஏற்றுக்கொள்ளப்பட்ட நற்செய்தியை கூறி ஸஹாபாக்கள் அவிழ்த்து விட எண்ணி அவரை அவிழ்க்க முற்படும் போது, "ரசூலுல்லாஹி (ஸல்) அவர்களே நேரடியாக வந்து தங்களுடைய முபாரக்கான திருங்கரங்களால் அவிழ்த்து விடாதவரை என்னை அவிழ்த்துக் கொள்வதில் சம்மதம் இல்லை " என உறுதிபட கூறி விட்டார்கள் .

நபி (ஸல்) சுப்ஹூ தொழுகைக்கு தமது இல்லத்தில் இருந்து வெளியே வந்த போது அவர்களை அவிழ்த்து விட்டார்கள்

இன்றும் மஸ்ஜித் நபவியில் உஸ்துவானா தவ்பா - "தவ்பா தூண் "என்று அழைக்கப்படுகிறது

## சற்குருவின் சகவாசம் 22

(சற்குருவிற்குள் சங்கமம்)




தேடுதல் என்பது ஞானத்தை மட்டும் அல்ல ; குருவையும் சேர்த்துதான் தேட வேண்டியது உள்ளது சீடனுக்கு.

மஹாபாரத்தில் ...

துரோணோச்சாரியாராகிய நான் அரச குடும்பத்தில் பிறந்தவர்களுக்கு மட்டும் ஆய கலைகளான வில்வித்தையும் கற்றுக் கொடுத்து வந்தேன் .

என்னைப் பார்ப்பதற்காக ஏகலைவன் என்ற சத்ரிய சாதகன் , பாண்டவர்கள் பாடம் கற்கும் இடத்திற்கு வந்த பொழுது, பாண்டவர்களுடைய நாய் அவனைப் பார்த்துக் குரைத்து விட்டது. எனவே அதன் வாயைச் சுற்றிலும் தைக்கும்படியான ஒரு அஸ்திரத்தை அதன் மீது அவன் ஏவி விட்டான்.

அதைக் கண்ட அர்ஜுனன் இது என்ன அஸ்திரம் குருவே, எனக்கு இந்த வித்தையை நீங்கள் கற்றுத் தரவில்லையே என்று கேட்டான்.

நான் சொன்னேன் எனக்கு இது தெரியாது. இது யாருக்கும் நான் கற்றுத் தந்த வித்தையல்ல என்று.

பிறகு அனைவரும் நாயை முன்னே அனுப்பி பின் தொடர்ந்து அது யார் அந்த வில் வித்தகன் என்று தேடிப் போனோம். அங்கேதான் ஏகலைவன் என் சிலையை வைத்து மானசீகமாக வித்தைகளைக் கற்றுக் கொண்டிருந்தான்.

அவன் ஏற்கனவே என்னிடம் வித்தை கற்றுத் தரும்படி கேட்டு வந்திருந்தான். நான் தம்பி ஒரு வேடனுக்குத் தேவையான அனைத்து வில் வித்தைகளும் உனக்கு நன்றாகவே தெரிந்திருக்கிறது. அது போதும். நான் அரச குமாரர்களுக்கு மட்டுமே கற்றுத் தருவேன் என்று சொல்லி அனுப்பி வைத்தேன்.

அதற்குப் பிறகே அவன் என் சிலையை வைத்து மானசீகமாக குருவாக ஏற்றுக் கொண்டு எல்லா வித்தைகளையும் கற்று தேர்ச்சி அடைந்திருக்கிறான். அவன் குரு பக்திக்கு நிகர் எவருமேயில்லை.

குரு தொடர்பு இல்லாமல் கூட குரு மீது கொண்ட அளப்பரிய பிரியம் குரு சொல்லித் தராத ஞானத்தைப் பெற்றுத் தரும் என்பதற்கு நிகழ்வாக மஹாபாரதத்தில் இது சொல்லப் பட்டிருக்கிறது.

அகிலத்திற்கோர் அருட்கொடையாக அனுப்பப் பெற்ற நபிகள் கோமான் (ஸல்) அவர்கள் ஒரு நாள் மதினாவின் பள்ளிவாயிலிலே அமர்ந்து மக்களுக்கு அறபோதம் நல்கிக் கொண்டிருந்தார்கள்.

அப்பொழுது அவர்கள் திடீரெனத் தங்களின் செங்கமலத் திருமுகத்தை எமன் நாட்டின் பக்கம் திருப்பிப் புன்முறுவல் பூத்தவர்களாய்,

"திட்டமாக எமன் நாட்டிலிருந்து வரும் ஆழிய அன்புத் தென்றலின் சுகத்தை நுகர்கிறேன் .என்னை பின் தொடரும் அந்த ஒரு மனிதரின் பரிவுரை காரணமாக, ராபி ஆ, முலறு ஆகிய இரு கூட்டத்தினரின் ஆடுகளின் மீதுள்ள உரோமத்தின் எண்ணிக்கை அளவுள்ள மக்கள் சுவனம் புகுவர் என்று திருவாய் மலர்ந்தனர் .

அண்ணலாரின் இச்சொற்கள் அவர்களின் தோழர்களுக்கு அளவற்ற வியப்பை அளித்தது.

"நாயகமே அந் நல்லவர் யார்?"

"நலமெல்லாம் திரண்ட அந்தப் புனிதர் யார்?" என்று அவர்கள் பெரிதும் ஆவலுடன் வினவினார்கள். அதற்கு அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள் ,

"அவர் அல்லாஹ்வின் நல்லடியார். எமன் நாட்டிலுள்ள கரன் என்னும் ஊரில் வாழ்ந்து வருகிறார் "என்று பதிலிறுத்தனர்.

"அவர் தங்களைவந்து தரிசித்துள்ளாரா?"

"இல்லை; அவர் என்னைத் தம் புறக்கண்ணால் தரிசிக்காத போதினும் அகக்கண்ணால் தரிசித்துள்ளார்"

"அவர் ஏன் தங்களை தரிசிக்க வரவில்லை?"

"அவர் இறை வணக்கத்தில் தம்மை மறந்து, தம் சுற்றம் மறந்து, தம் சூழல் மறந்து மூழ்கி இருப்பதன் காரணமாகவும் , என்னுடைய வழிமுறையை (ஷரீஅத்தை) பேணுதலுடன் பின்பற்றி வருவதன் காரணமாகவும் அவர் என்னை தரிசிக்க வரவில்லை. கண்ணிழந்த அவரின் வயோதிக அன்னைக்குப் பணிவிடை செய்த பின் ஆடு மேய்த்து , அதிலிருந்து கிடைக்கும் சிறிதளவு வருவாயைக் கொண்டு அவர் தம் அன்னைக்கு உணவளித்து வருகிறார்"

ஸஹாபா பெருமக்கள் மாநபிகளார் ﷺ அன்னவர்களிடம் கேட்டார்கள், "எங்களுக்கு அவர்களை காணக்கிடைக்குமா நாயகமே?"
நபிகள் கோமான் முஹம்மத் ﷺ அன்னவர்கள் ஸையிதுனா அபூபக்ர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களைப் பார்த்துக் கூறினார்கள், "நீங்கள் அவர்களைக் காணமாட்டீர்கள். உமரும் அலியும் (ரலியல்லாஹு அன்ஹும்) அவர்களைக் காணுவார்கள்."
பின் அவர்கள் இருவரையும் பார்த்துக் கூறினார்கள், "(அவர்களின் அடையாளம்) அவர்களின் உடலெங்கும் ரோமம் நிறைந்திருக்கும். அவர்களின் இடது கை உள்ளங்கையில் ஒரு திர்ஹத்தின் அளவு வெள்ளை அடையாளம் இருக்கும். அது வெண்குஷ்டத்தின் அடையாளம் அல்ல. அவர்களைக் கண்டவுடன் என்னுடைய சலாத்தை அவர்களுக்கு எடுத்துச் சொல்லுங்கள். என்னுடைய உம்மத்தவர்களான என் சமூகத்துக்கு அவர்களை துஆ செய்யச் சொல்லுங்கள்.
ஏமனில் கரன் நகர் முழுவதும் தேடி ரொம்பவும் சிரமத்திற்கு இடையில் உவைஸுல் கரனி (ரஹ்) அவர்களை உமர் (ரலி ) , அலி (ரலி) இருவரும் கண்டுபிடித்தனர்.
உமர் (ரலி) அவர்கள் , உவைஸுல்கரனி (ரஹ்) அவர்களிடம் ,
" தாங்கள் ஏன் பெருமானார் (ஸல்) அவர்கள் உயிரோடிருக்கும் போது அவர்களை வந்து தரிசிக்கவில்லை?"
"தாங்கள் அவர்களைத் தரிசித்துள்ளீர்களா?" என்று திருப்பி கேட்டார்கள் உவைஸ் .
"ஆம் . அவர்களுடனேயே இருந்திருக்கிறோமே ?
"நல்லது . பெருமானாரின் அழகு திருமுகத்தில் அவர்களின் புருவங்கள் ஒன்று சேர்ந்திருந்தனவா , பிரிந்திருந்தனவா ?" என்று கேட்டார் உவைஸுல் கரனி ,
உமர் (ரலி) அலி (ரலி) யாது கூறுவதென தெரியவில்லை .
"இஃதென்ன புதுமை ! தாங்கள் இருவருமே பெருமானாரின் அன்புத் தோழர்கள் அல்லவா அவர்களைப் பற்றி இது கூடத் தெரியவில்லை .நல்லது .
"அடுத்து உஹது யுத்தத்தில் நபி(ஸல்) அவர்களுக்கு ஒரு பல் உடைந்த போது உண்மைத் தோழர்களாக இருப்பின் அது போன்று உங்களின் ஒரு பல்லை விழச் செய்யவில்லையா? நட்பு என்றால் அதுதானே உண்மை நட்பு ! என்னைப் பாருங்கள் ... நான் என் பற்கள் அனைத்தையும் பிடுங்கி விட்டேன். நான் ஒரு பல்லைப் பிடுங்க , அது நபி (ஸல்) அவர்களுக்கு வீழ்ந்த பல்லாக ஒரு சமயம் இல்லாதிருக்குமோ என்ற ஐயம் எனக்கு ஏற்பட அத்தனை பல்லையும் பிடுங்கி விட்டேன் " , என்று தன் பொக்கை வாயைத் திறந்து காட்டினார்.
தோழர்கள் இருவரும் வியந்து போயினர்.
பிரிதொரு சமயம் உவைஸுல் கரனி (ரஹ்) அவர்கள் நபி (ஸல்) அவர்களை ஜியாரத் செய்ய மதீனா வர இருந்தார்கள்
பூமான்நபிமீது பேரின்ப காதல்
நபி-ஸல் அவர்கள் ரவ்ளா ஷரீப் வாட்ச்மேனிடம் .
"நாளை என்னை ஒருவர் ஜியாரத்
செய்ய வருவார் அவரை உள்ளே விடாதே..! என
கனவில் தோன்றி சொன்னார்கள்
அதே போல் உள்ளே விடவில்லை...
2வது நாள் நபி-ஸல் அவர்கள் கனவில் தோன்றி "நாளை அவர் இன்ன
மாறுவேடத்தில் வருவார் விடாதே...!" என்றார்கள்
அதேபோல் வாட்ச்மேன்அவரை விடவில்லை...!
3வது நாள் கனவில்..நபி-ஸல்
சொன்னார்கள் "அவர் பழக்கூடையில்
ஒழிந்து கொண்டு வருவார் விடாதே...!"
அதேபோல் அவரை உள்ளே விடவில்லை....
4வது கனவில் வாட்ச்மேன் கேட்டார்...
"யாரசூலல்லாஹ்...!ஏன் அவரை தடுத்தீர்கள்...?
"என் ரவ்ளா வுக்கு முன் நின்று
"அஸ்ஸலாமு அலைக்கும் யாரசூலல்லாஹ்" என்று அவர் சொன்னால்.நான் கப்ரை பிளந்து எழுந்து வந்து பதில் ஸலாம் சொல்லும் வரை போக மாட்டார்..அந்த அளவு
அவர் என்மேல் பிரியம் வைத்து இருக்கிறார்..!"
"அவர்கள்தான் உவைஸுல் கர்னைன்
ஆவார்கள்."
இது என்ன மாதிரியான குருபக்தின்னு அளவிட முடியுமா ?

**சற்குருவின் சகவாசம் 23**

( சற்குருவே சர்வமயம் ஃபனாஃபிஷ்ஷைகு )



கென்யா. ஒருநாள் ஜலாலுதீன் ரூமி அவர்கள் பள்ளியில் மாணவர்களுக்கு கல்வி போதித்து கொண்டிருந்தார்கள். அங்கு காட்டுவாழ் மனிதரைப் போன்று ஒருவர் வந்து , இஃது என்ன ? என்று கிதாபுகளைப் பற்றி வினவினார்.
"இதைப்பற்றி எல்லாம் உமக்கு ஒன்றும் தெரியாது, சும்மா இரும்" என்று மௌலானா ரூமி சற்று வெறுப்போடு கூற .
அவ்வளவுதான். அந்த மனிதர் அங்கிருந்த நூல்களை எல்லாம் அள்ளி பக்கத்தில் உள்ள தண்ணீர் தொட்டியில் போட்டு தண்ணீரில் மூழ்கடித்து விட்டார்கள். அதுகண்டு ரூமி அவர்களும் அவர்களின் மாணவர்களும் அலறி அடித்து துடித்து விட்டனர் .
அந்த நூல்கள் எல்லாம் பல வருடம் ரூமி ஆய்வு செய்து எழுதிய கிதாபுகள் . அப்போது அந்த மனிதர் அமைதியாக அந்த தண்ணீர் தொட்டிக்குள் கையை விட்டு அத்தனை நூல்களையும் வெளியே எடுத்தார்.
என்ன வியப்பு..! அந்த நூல்கள் எல்லாம் தண்ணீரில் நனையாது எப்படி இருந்ததோ அப்படியே இருந்தன. அதை பார்த்த ரூமி அவர்கள் அவரிடம் ,

இஃது என்ன என்று வினவ, " இதைப்பற்றி எல்லாம் உமக்கு ஒன்றும் தெரியாது .சும்மா இரும் " என்று கூறிவிட்டு, அவ்விடத்தை விட்டு ஓடினார் .
இப்போதுதான் அந்த மனிதர் சாமானியர் அல்ல , நாம் கற்ற கல்வி வேறு ,அவர் கற்ற கல்வி வேறு என்ற உண்மை மௌலானா ரூமி அவர்கள் உணர்ந்து, அந்த மனிதர்தான் ஷம்சுத் தப்ரேஸ் (ரஹ்) அவர்கள் என்பதை தெரிந்து கொண்டார்கள். அவரை பின்தொடர்ந்து ரூமி அவர்கள் ஓடி கண்டுபிடித்து ,அவர்களிடம் பிழையைப் பொறுத்தருளுமாறு வேண்டி , அவர்களின் ஆன்மீக மாணவராகி விட்டார் .
கொராஸானில் பஸார் நகரிலிருந்து ஷம்சுத் தப்ரேஸ் அவர்களை தம் இல்லம் அழைத்து வந்து, இருவரும் அறையின் கதவை தாழிட்டுக் கொண்டு நாற்பது நாட்கள் மற்றொரு வரலாற்றின்படி ஆறு மாதங்கள் தனித்திருந்தனர். இந்த ஆறு மாத காலத்தில் ஷம்சு தப்ரேஸ் அவர்கள் மௌலானா ரூமியின் இதயத்தில் ஆன்மீகத்தின் பல ரகசியங்களை எல்லாம் ஊட்டினார்கள் . மௌலானா ரூமியின் ஆன்மீக கண் வெளிச்சம் பெற்றது. இதிலிருந்து நாம் கற்ற கல்வி எல்லாம் சாதாரணமானவை என்பதை மௌலானா ரூமி அவர்கள் உணர்ந்தார்கள் .

இதன் காரணமாக மௌலானா ரூமி மதரஸாவில் அமர்ந்து மாணவர்களுக்கு பாட போதிப்பதையும் , மேடை மீது ஏறி மக்களுக்கு அறிவுரை பகர்வதையும் விட்டொழிந்தார்கள். 'ஸமா ' என்ற பேரின்ப இசை நிகழ்ச்சியை வெறுத்து வந்த ரூமி அவர்கள் இப்பொழுது அதனை பெரிதும் விரும்பி கேட்கலானார். அதிலே கரைந்து போனார்கள் .
இதுபற்றி ரூமி கூறும் போது , "மதுக் கிண்ணத்தை வைத்திருப்பவரின் நெற்றியை நான் பார்த்ததும், போதை என் தலைக்கேறியது. அடுத்தகணம் நான் என் எழுதுகோலை உடைத்தெறிந்து சுதந்திரமாகி விட்டேன் "
இதனால் ரூமியின் மாணவர்களுக்கு ஷம்சு தப்ரேஸ் மீது பகை ஏற்பட்டு அதை ஷம்ஸ் தப்ரேஸிடம் காட்டினார்கள் .எனவே எவரிடம் சொல்லாமல் ஷம்ஸ் கென்யாவை போய்விட்டார்கள் . " பாவிகள் என் ஆசானே என்னிடமிருந்து விரட்டிவிட்டனர். இனி நான் எங்கு அவரைக் காண்பேன் ? " என்று ஏங்கி தவித்து கண்ணீர் பெருக்கெடுத்து எப்போதுமே ரூமி அழுது கொண்டிருந்தார்கள் .
ரூமி அவர்களின் பரிதாபகரமான நிலையைக் கண்டு பதறிய மாணவர்கள் ஷம்சு தப்ரேஸ் திமிஷ்கில் இருப்பதை அறிந்து, ரூமியின் மகன் சுல்தான் வலதின் தலைமையில் திமிஷ்க் போய் ஷம்சு தப்ரேஸ் அவர்களிடம் மன்னிப்புக் கேட்டு, ரூமி தன் சற்குருவிற்கு கொடுத்தனுப்பிய காணிக்கை ஆயிரம் தீனார்களையும் கொடுத்து , அவர்களை கென்யாவிற்கு ஓர் அரசரைப் போல்

அழைத்து வந்தனர் .மற்றவர்களெல்லாம் வாகனத்தில் ஏறிய வந்தபோது திமிஷ்க்கிலிருந்து கென்யா வரை ரூமி மகன் சுல்தான் வலத் நடந்தே வந்தார்.
ஷம்சு தப்ரேஸ் அவர்களை வரவேற்க கென்யா நகரமே திரண்டிருந்தது. ரூமி அவர்கள் சற்குரு ஷம்சு தப்ரேஸ் அவர்களை தம் இல்லம் அழைத்து வந்து, தன் வளர்ப்பு மகளையும் அவர்களுக்கு மணமுடித்து, தன் வீட்டோடு வைத்துக் கொண்டார்கள்.

நாளுக்கு நாள் மௌலான ரூமி ஷம்சு தப்ரேஸ் மீது கொண்ட ஈடுபாடு உச்சநிலையை ஏறிக்கொண்டிருந்தது .இருவரும் தனித்து தியானத்தில் ஈடுபட்டும், ஆன்மிகம் பற்றி உரையாடியும் இன்ப பொழுதைப் போக்கிக் கொண்டிருந்தார்கள். இதைக் கண்டு மௌலானா ரூமியின் மாணவர்கள் மீண்டும் புழுங்கலாயினர் .
ஷம்சு தப்ரேஸ் தம் மனைவியுடன் மௌலானா ரூமியின் இல்லத்தின் முகப்பிலிருந்த அறையில் வாழ்ந்து வந்தார்கள். ரூமியின் இரண்டாம் மனைவி மூலம் பிறந்த அலாவுத்தீன் தம் தந்தையை காண இல்லம் வருந்தோறும் அந்த அறை வழியாகவே வரவும் போகவும் இருந்தார் . மேலும் ரூமியின் மாணவர்களுடன் இவரும் சேர்ந்து ஷம்சு தப்ரேஸ்யை வெறுக்கலானார்.
இதனால் ஷம்சு தப்ரேஸ் சொல்லிக் கொள்ளாமல் தம் மனைவியுடன் இரவோடு இரவாக கென்யாவை விட்டு புறப்பட்டு போயே போய்விட்டார்கள். இதனால் மௌலானா ரூமி மீண்டும் கவலைப்பட்டு உருகலானார்கள் .
ரூமி மீண்டும் தானே தன் சற்குருவைத் தேட ஆரம்பிக்க, எங்குமே ஷம்சு தப்ரேஸ் கிடைக்கவே இல்லை. கவலையால் கென்யா வந்த ரூமி இல்லத்திலேயே முடங்கி விட்டார்கள்.

மௌலானா ரூமியின் மாணவர்கள் ஹகீம் ஸனாயியின் 'ஹதீக்கா'வையோ.அத்தாருடைய 'மந்திக்குத் தைரை'யோ படித்துக் கொண்டிருப்பதைக் கண்ட மாணவனும் , வளர்ப்பு மகனுமாகிய ஹிஸாமுத்தீன் தன் சற்குரு மௌலானா ரூமியிடம் சொல்ல,
'ஷம்ஸ் தருவார்' என்றார்கள்
மௌலானா ரூமி அவர்கள் "ஷம்சும் நானும் இருவரல்ல; ஒருவரைதான் அவர் இந்த ரூமியை விட்டு எங்கும் போகவில்லை என்னுள்ளே இருக்கிறார் . அவர் சூரியன் என்றால் ,அதன் கதிர் நான்தான் .அவர் கடல் என்றால், அதன் ஒரு திவலை நான்தான். கதிருக்கு ஒளி அளிப்பது சூரியன் திவலையே உண்டுபண்ணுவது கடல். எனவே ஷம்ஸ்க்கும் எனக்கும் இடையே எவ்வித பாகுபாடும் இல்லை . நானே ஷம்ஸாவேன்" கூறினார்கள் .

எந்த ஆன்மீக அறிவை வேண்டி ஷம்சைத் தேடி அலைந்தார்களோ அது தம் உள்ளிருந்தே பீறிட்டு வெளியே வருவதை ரூமி கண்டார்கள்.
மௌலானா ரூமியின் இல்லத்தில் ஒரு தூண் இருந்தது. ஒவ்வொரு இரவிலும் அவர்கள் பேரின்ப போதை மேலிட்டு தன்னுணர்வற்ற உடலாக அத்தூணைப் பற்றி பிடித்துக் கொண்டு அதனைச் சுற்றி சுற்றி சுழன்று சுழன்று வருவார்கள். அப்போது ரூமி அவர்களின் வாய் கவி மாரி பொழியும் . அதுதான் மஸ்னவி ஷரீபாக வெளிவர , அதனைப் பதிக்கும் வேலை வேகமாக நடந்தது. மௌலானா ரூமியின் வாயிலிருந்து கவிதை வெள்ளம் கரைபுரண்டு ஓடியது. அதனை உடனுக்குடன் ஹிஸாமுத்தீன் எழுதிக் கொள்வார்.
ஆறு தொகுதிகளில் 26,600 அடிகளைக் கொண்ட அந்த மாபெரும் ஞான காவியம் பாரசீகத்தின் சிகரம் என போற்றப்படுகிறது.
பாரசீக மொழியில் ஃ பிர்தௌஸியின் 'ஷா நாமா'வும் ஸஅதியின் ' குலிஸ்தானும் 'ஹாபிஃஸுடைய 'தீவானும்' சிறப்புற்று விளங்கிய போதிலும் இவை மூன்றுக்கும் மேலான இடத்தை மௌலானா ரூமியின் மஸ்னவி ஷரீப் பெற்று தன்னிகரற்று விளங்குகிறது.

மஸ்னவியை அறிஞர் பெருமக்கள் பாரசீக மொழியில் உள்ள திருக்குர்ஆன் என்று போற்றி புகழுகிறார்கள். திருக்குர்ஆனின் சாரத்தைப் பிழிந்து அதனை சமைத்துள்ளதாக மௌலானா ரூமியே கூறுகிறார்கள்.அதில் மார்க்கத்தின் வேர்களும், இயற்கை ரகசியங்களின் கண்டுபிடிப்புகளும், தெய்வீக அறிவும் பொதிந்திருப்பதாக அதன் முதல் தொகுதியின் அரபி முன்னுரையில் ரூமி குறிப்பிடுகிறார்கள்.
இறுதியாக மௌலானா ரூமியின் அன்பார்ந்த பெருவாழ்வும் தன் முடிவு நெருங்கி கொண்டிருக்க, ரூமி இறப்பதற்கு 40 நாட்களுக்கு முன்பே கென்யா இலேசான நில அதிர்ச்சிகள் தொடர்ந்தன. மக்கள் ரூமியிடம் கூற , ' பயப்படாதீர்கள் ! பாவம் இந்த பூமி பசித்துக் கொண்டு உள்ளது .கொழுத்த உணவை உண்ண அது விரும்பி ஏங்கிக்கொண்டு உள்ளது . விரைவில் அவ்வுணவு அதற்கு கிடைக்கும். அதன்பின் அது பசி தீர்ந்து, அமைதி பெற்றுவிடும். நீங்கள் கவலைப்படாதீர்கள் " என்று கூறினார்கள் .
" மக்கள் என்னையே உலகில் இருக்க வேண்டும் என்று விரும்பிய போதிலும், ஷம்சு தப்ரேஸ் என்னை அங்கு அழைத்துக் கொண்டு இருக்கிறார்".
ஹிஜ்ரி 672 ஜாமதியுல் ஆகிர் 5 ஆம் நாள் 68 ஆண்டுகள் மூன்று மாதங்கள் இவ்வுலகில் வாழ்ந்த மாபெரும் ஒரு இறைநேசர் தன் சற்குருவைத் தேடி பயணப்பட்டார் .
"ரூமின் எசமானர் அறிவார்ந்த ஞானியாகவில்லை
அவர் ஷம்சுத் தப்ரேஸின் அடிமையாகும் வரை " - ரூமி

## சற்குருவின் சகவாசம் 24.

( சூஃபி வழிப்பயணம் )



சூஃபியாக்கள் இந்த உலகத்தில் வாழும்போது எதிர்கொள்ளும் நிலையை ஓர் உதாரணத்துடன் சொல்றேன் .

புராதான ஜப்பானில் கேடயம் எதுவும் இல்லாமல் இரு வாள் கொண்டு போரிடும் வீரர் இருவரில் ஒருவராக உங்களை கற்பனை செய்து கொள்ளுங்கள்.

உங்கள் எதிரியை எதிர்கொள்ளும் போது இடையறாது மிகக் கவனத்துடன் உறுதியாகவும், ஆயத்தமாகவும் இருக்கிறீர்கள்

கண நேரமாவது விழிப்பு நிலையை தளர விட்டுவிடுவீர்களானால் ,அக்கணமே நீங்கள் வெட்டி வீழ்த்தப்படுவீர்கள்.

சண்டையை வேடிக்கை பார்க்க பெரும் கூட்டம் கூடியுள்ளது.

நீங்கள் குருடனல்ல , ஓரக்கண்ணால் கூட்டத்தைப் பார்க்கிறீர்கள்.

நீங்கள் செவிடனல்ல , கூட்டம் எழுப்பும் ஆரவாரத்தை கேட்கிறீர்கள்.

பக்கத்தில் பரிசு பொருட்கள் நிறைய பரப்பப்பட்டு உள்ளது.

ஆனால் எந்த ஒரு கணமும் உங்கள் மனம் இத்தகைய புலனார்ந்த பதிவுகளுக்கு கட்டுப்படுமா ?

ஒவ்வொரு நொடியும் உங்கள் மரணம் தவிர்க்கப்படுகிறது. அல்லது தள்ளி வைக்கப்படுகிறது .

உங்கள் எதிரியும் மட்டும் நீங்கள் உற்று நோக்காத தருணமே இருக்காது .இருக்கக் கூடாது .

இந்த நிலையில்தான் ஞானிகள் எப்போதும் உலகத்தை எதிர்கொள்கிறார்கள்.

இது ஒரு வகை பயம் கலந்த விழிப்புநிலை.

பயணம் எந்த ஒரு சாதாரண மனிதனையும் கூடப் புடம் போட்டுவிடும் வல்லமை கொண்டது. பயணத்தின் புதிய இடம், புதிய பண்பாடு, புதிய வடிவங்கள், புதிய மனிதர், புதிய அனுபவம் என்று பல புதுமைகளை சந்தித்து மானிடர்கள் புதிய சிந்தனைத் தளத்திற்கு செல்கின்றனர்.

ஒரு சூஃபியின் பயணம் இரண்டு தளங்களில் இயங்குகிறது.அது உடல் பயணமாகவும்(PHYSICAL TRAVEL) ஞானப் பயணமாகவும்(MYSTIC TRAVEL) அமைகின்றது.

ஒரு பயணி, பயணித்து தனது இலக்கான சேர வேண்டிய இடத்தை அடைவது போல ஒரு சூஃபியானவர் தனது ஞானப் பயணத்தால் சூஃபிய படிநிலை ஞானத்தை அடைகின்றார்.

"பயணம் வேதனையில் ஒரு பகுதியாகும். அது ஒருவரின் உணவையும். பானத்தையும் .உறக்கத்தையும் தடுத்து விடுகிறது. எனவே, ஒருவர் தம் தேவையை முடித்ததும் விரைந்து தம் குடும்பத்தாரிடம் செல்லட்டும்"என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். புஹாரி : 1804 அபூஹுரைரா (ரலி).

மேற்கண்ட பயணம் குறித்த நபிமொழி உடல் பயணத்திற்கும் மட்டும் அல்ல , ஞானப் பயணத்திற்கும் கனகச்சிதமாகப் பொருந்தும் .

சூஃபி என்ற வார்த்தை அரபி மொழியிலுள்ள வார்த்தை. சூஃபி தத்துவம் என்பது காலதேச வர்த்தமானங்களை கடந்தது. ஒரு சூஃபி எந்த மதத்தை சேர்ந்தவராக வேண்டுமானாலும் இருக்கலாம். விழித்துக்கொண்ட எந்த மனிதனும் சூஃபிதான். ஹிந்துமதத்தின் அத்வைதத்துக்கும், பௌத்தத்தின் ஜென்னுக்கும் மிக நெருக்கமாக உள்ளது இந்த சூஃபித்துவம்.

சூஃபித்துவத்தின் தாக்கம் மதத்தோடு நின்றுவிடவில்லை. அது பல தளங்களிலும் வியாபித்தது. இலக்கியம் ,இசை, நடனம் ,கதை சொல்லல் , கலைகள், கட்டிடக்கலை,மருத்துவம், நோய் தீர்த்தல் ...என்று பல திசைகளிலும் ஊடுருவும் பன்முகத்தன்மை கொண்டது.

இஸ்லாமிய கட்டடக் கலைகளின் அடிநாதமாக இருப்பது சூஃபியத்துவம்தான் . மக்கா நகரில் இருக்கும் புனித ஆலயமான கஃபா கூட சூஃபி கணித முறைப்படி அமைக்கப்பட்டது என்று கூறுகிறார்கள்.

மேற்கத்திய இலக்கியம் வெகுவாக சூஃபித்துவத்தின் தாக்கத்திற்குள் வந்தது 'ஆங்கிலக் கவிதையின் தந்தை' என்று சொல்லப்படும் ச்சாஸரின் (Chaucer) காவியமான "காண்டர்பரி டேல்ஸ்" - இது ஃபரீதுத்தீன் அத்தாரின் "பறவைகளின் மாநாடு" (மன்திகுத் தய்ர்) என்ற ஆன்மீக காவியத்தின் தாக்கத்தில் எழுதப்பட்டதுதான்.

சூஃபித்துவத்தைப் பற்றி எழுப்பப்படும் குற்றச்சாட்டுகளுக்கு சூஃபிகளே பதில் சொல்கிறார்கள் .

முதலாவது குற்றச்சாட்டு:

சூஃபித்துவத்தில் மிகவும் குறையாக காண்பது பைஅத். பைஅத் இறைவனே நபிகளாரிடம் தம் நபித்தோழர்களிடம் செய்ய சொன்ன ஒரு வழிமுறைதான் பைஅத் .

தரீக்காக்களில் பைஅத் செய்துகொள்வது இறைதூதரின் வழிமுறையைப் பின்பற்றி (பைஅதுல் அகபா) சூபியிஸத்தில் (தரீகாவில்) மிக முக்கியமான அம்சம், ஞான வழி பெரியார் ஒருவர் கண்காணிப்பில் தனது குணங்களை சரி செய்வதாகும். இதற்கு பைஅத் என்று கூறப்படுகிறது.

ஆன்மீக வழிகாட்டியான ஷெய்குவிடம் அவரைப் பின்பற்றும் சீடர்கள் இஸ்லாத்துக்கு முரணான சகல விடயங்களை, பித்அத்களை விட்டும் தவிர்ந்து வாழ்வதாகவும், உலக இன்பங்களில் மூழ்காது இஸ்லாத்துக்காக உழைப்பதாகவும் செய்துகொள்ளும் விசுவாசப் பிரமாணமே பைஅத் எனப்படுகின்றது.

இந்த பைஅத் மூலம் ஆத்மீக குருவுக்கும் சீடர்களுக்கும் ஒரு இறுக்கமான பிணைப்பு ஏற்படுவதோடு அவர்கள் ஒரு சற்குருவின் ஒரு கட்டுக்கோப்பில் வாழவும் அதாவது தொழுகையில் இமாமிற்கு கட்டுப்பட்டு பின் தொடர்வது மாதிரியான சந்தர்ப்பம் கிடைக்கின்றது.

(நபி நாயகமே!) உங்களிடத்தில் (வெளிரங்கத்தில் கைகொடுத்து) பைஅத்து செய்கிறவர்கள் (யதார்த்தத்தில்) அல்லாஹ்விடத்தில்தான் பைஅத்து செய்கிறார்கள். (குறிப்புகளை விட்டும் பொதுவான) அல்லாஹ்வின் கை (வெளிப்பாடுகளில் நின்றுமுள்ள குறிப்பான) அவர்களது கைகளின் மீது இருக்கிறது.

எவனொருவன் அ(ந்த பைஅத்)தை முறித்துக் கொண்டானேயானால் அவன் தன் மீதே (அவன் நஷ்டத்தை மீட்டி) முறித்துக் கொண்டான். எவனொருவன் எதன் மீது அல்லாஹு இடத்தில் உடன்படிக்கை செய்தானோ அதை நிறைவேற்றுவானேயானால் அல்லாஹ் அவனுக்கு மிகப் பெரிய கூலியைக் கொடுப்பான். (அல்குர்ஆன் 48:10)

அசலில் பைஅத் என்பது ஓர் மனிதன் தன்மீது ஒரு இமாமுக்கு (தலைவருக்கு) வழிப்பட்டு நடப்பதற்காக சில உடன்படிக்கைகளை செய்து, அதை நிறைவேற்றி வருவதாகும். மேற்கண்ட வசனத்தில் சொல்லப்பட்டது 'ஹுதைபிய்யா' எனும் இடத்தில் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் சஹாபாப் பெருமக்கள் செய்து கொண்ட பைஅத்து நிழ்வானாகும்.

நற்காரியங்களில் ஒரு தலைவருக்கு இணங்கி நடப்பதற்காக உடன்படிக்கை செய்வதையும் ஒரு முரீது ஒரு ஷெய்குக்கு (அவர் இடும் நிபந்தனைகள், ஒழுக்க நெறிகளுக்கு) வழிப்பட்டு நடப்பதற்காக உடன்படிக்கை -பைஅத் செய்வதையும் இவ்வசனம் பொருந்திக் கொள்ளும். (மெஞ்ஞானிகளான) ஷெய்குமார்களும் முரீதீன்களிடம் பைஅத்து எடுக்கும்போது இவ்வசனத்தை (ஓதியும்) புழங்குகிறார்கள்.

ஒரு காமிலான ஷெய்கை பைஅத் செய்து கைப்பிடித்தவன் தன் ஷெய்கிடம் மிகவும் மரியாதையோடும், கண்ணியத்தோடும் நடந்து கொள்ள வேண்டும். ஷெய்கிடம் மரியாதைக் குறைவாகவோ, கண்ணியக் குறைவாகவோ நடப்பது அவனின் ஈமானை பாதித்து விடும்.

ஒருவன் ஷெய்கை எதிர்ப்பதால் அவனுடைய பைஅத் முறிந்து விடுகிறது. அவனுக்கும் அவன் ஷெய்குக்கும் உள்ள தொடர்பு அறுந்து விடும்.

அதாவது நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் கொண்ட நேரடித் தொடர்பு அறுந்து விடும். ஒரு ஷெய்கால் வெறுத்து ஒதுக்கப்பட்டவனை வேறு எந்த ஷெய்காலும் முன்னேற்றப்பாதைக்கு கொண்டு செல்ல முடியாது என்பது குறிப்பிடத்தக்கது.

இரண்டாம் குற்றச்சாட்டு :

' ஷரியத் என்று சொல்லப்படும் இஸ்லாமிய சட்டதிட்டங்களுக்கு சூஃபிகள் மதிப்பு கொடுப்பதில்லை. அவற்றைப் பின்பற்றுவதும் இல்லை .அவற்றுக்கு மாற்றமாக நடக்கிறார்கள்.

ஆனால் உண்மை இதற்கு நேர் மாறாக இருக்கிறது. சூஃபியாக்கள் மார்க்க சட்டங்களை மிகவும் மதித்து பேணி நடக்கிறார்கள். உதாரணமாக....

"உண்மையிலேயே தொழுகை என்றால் என்னவென நீங்கள் விளங்கிக் கொண்டீர்களேயானால், தொழுகையில் நிற்கும் போது இம்மையிலும், குனியும்போது மறுமையிலும், சுஜூத்தில் (முகம் குப்புற கிடத்தலில்) இறைவனோடும் இருப்பீர்கள்" என்கிறார் மௌலானா ஜலாலுத்தீன் ரூமி.

''ஆன்ம அபிவிருத்திக்கு தொழுகை இன்றியமையாததாகும். தொழுகையானது மனிதன் இறைவனிடம் ஒப்படைக்கும் ரகசியமாகும். தொழுகை தவிர்த்து வேறு எப்போதும் மனிதனுக்கு இந்த வாய்ப்பு கிடைப்பதில்லை "என்று கூறினார்கள் க்வாஜா முயீனுத்தீன் சிஷ்தி.

"ஒவ்வொருமுறை தொழுகையில் உன் தலை தாழும்போது இறைவனிடம் உன் மதிப்பு உயருகிறது"

ஒருவன் பறந்து கொண்டே வந்தாலும் சரி அவன் ஷரியத்தை விட்டு விட்டவனென்றால் , நீங்கள் அவனை விட்டு விடலாம்" என்கிறார் இப்னு அரபி .

முல்லா ஒரு நாள் சந்தையில் ஆலிவ் பழங்களை விற்றுக்கொண்டிருந்தார் .வியாபாரம் ரொம்பவும் மந்தமாக இருந்தது. அப்போது அப்பக்கமாக சென்ற ஒரு பெண்ணை முல்லா அழைத்து பழங்களை வாங்கச் சொல்லி தூண்டினார்.

தன்னிடம் பணம் இல்லை என்று சொல்லி அவள் "வேண்டாம்" என்றாள். "பரவாயில்லை பிறகு கொடுத்துக் கொள்ளலாம். கடனாவது பெற்றுக்கொள்" என்று முல்லா சொன்னார். அவள் அப்போதும் தயங்கினாள் . உடனே ஒரு பழத்தை எடுத்துக் கொடுத்து சுவைத்துப் பார்க்கச் சொன்னார்.

"பெரியவரே , நான் நோன்பு பிடித்திருக்கிறேன் " என்றாள்

" ரமலான் மாதம் ஆறு மாதத்திற்கு முன்பே போய்விட்டதே ?" என்றார் முல்லா .

"ஆமாம் ஆனால் நான் ஒரு நோன்பை விட்டுவிட்டேன் அதை இப்போது பிடிக்கிறேன்" என்றாள்.

" சரி ஒரு கிலோ கருப்பு ஆலிவ் பழங்களை கொடுங்கள்" என்று சொன்னாள்.

"இல்லை இல்லை .மறந்துவிடு. இறைவனுக்கு செலுத்தவேண்டிய கடனையே ஆறு மாதம் கழித்துதான் கொடுக்கிறாய் என்றால் , என் கடனை எப்போது திரும்புவாய் என்று யாருக்கு தெரியும் ? என்று சொல்லி மறுத்துவிட்டார்.

ஒரு நோன்பை விட்டு விடுவது கூட எவ்வளவு பெரிய விஷயமாக எடுத்துக் கொள்ளப்பட்டது என்பது விளக்கும் அழகான சூஃபி கதை இது.

மூன்றாம் குற்றச்சாட்டு :

சூஃபித்துவத்தில் அடுத்து பெரிய குறையாக காண்பது சூஃபியின் இசை .சூஃபி இசையின் முக்கிய நோக்கமே தன்னிலை மறந்து இறை அனுபவத்தில் இரண்டற கலப்பதேயாகும். கர்நாடக இசை எப்படி இறைவனை அடைவதையே தனது ஆதார நோக்கமாக கொண்டதோ அதேபோல்தான் சூஃபி இசையும். ஆனால் கர்நாடக இசை சுருதி மற்றும் தாளம் போன்ற இலக்கண விதிமுறைகளுக்கு உட்பட்டது.

ஆனால் சூஃபி இசையில் இதுபோன்ற இலக்கண விதிமுறைகள் எதுவும் இல்லை. அது தியான நிலைக்குள் மனதை கொண்டு சென்று பிரபஞ்ச வெளியில் இரண்டற கலக்கும் ஒரு பயணம். அதை சுகிப்பதே மிகப் பெரும் அலாதி.

ஞெ (NYE) எனப்படும் குழல் இசை சூஃபி இசையின் அடிப்படை நாதம். தேவாலயத்தில் இசைக்கப்படும் ஆர்கன் இசைப்போல, கர்நாடக இசையில் இசைக்கப்படும் இசைக்கருவி போல.

சூஃபிமார்கள் உலகம் முழுக்க பயணம் மேற்கொண்டு இஸ்லாத்தை பரப்பியபோது இந்த சூஃபி இசை அந்தந்த நாட்டு கலைவடிவத்தை உள்வாங்கிக்கொண்டு பல்வேறு பிரிவுகளில் விரிந்தது.

இந்தியாவில் கஜலாகவும், கவாலியாகவும் திரிபடைந்தது. சூஃபி ஞானம் விவரிப்புகளுக்கு அப்பாற்பட்டது.

உலகம் போற்றும் ரூமியின் மஸ்னவி சரீப் ஸமா என்ற நடன இசையிலிருந்து திளைத்தெழுந்ததுதான்

https://www.facebook.com/meeran.mitheen/videos/10224702909182801/

'நீ எந்த பாதையில் சென்றாலும் அதிலேயே ஈடுபாட்டுடன் தொடர்ந்து பயணித்தால் இறுதியை அடைய முடியும் என்கிறது சூஃபித்துவம் .

ஒவ்வொருவருக்குள்ளும் சூஃபி தன்மை உண்டு என்கிறது சூஃபியிஸம். எனினும் சிலரே அதனை வெளிக்கொணர்ந்து சூஃபிக்கள் ஆகி விடுகின்றனர்.

மனித வாழ்வின் முழுமைக்கு சூஃபிமார்கள் ஆற்றிய தொண்டுகள் மகத்தானவை. எனினும், கடலின் அடியில் கிடக்கும் முத்துகள் போல அவை மக்களால் உணரப்படாமலே உள்ளன. மூச்சடக்கி மூழ்குபவர்கள் மட்டுமே முத்துக்களை அள்ளிக்கொண்டு வரமுடியும். தேடுங்கள், கிடைக்கும் என்பது கூட ஒரு வகையிலான சாகாவரம் பெற்ற சூஃபிமொழிதான்.

இதையே ஒரு சூஃபி நிகழ்வுகள் மூலம் சொல்றேன் .சூஃபிஸம் என்பது வைரம் மாதிரி ..

தன்னன் ( துன்னூன் ) என்ற சூஃபி ஞானியைப் பார்ப்பதற்கு இளைஞர் ஒருவர் வந்தார்.

"மற்ற விஷயங்களில் இருப்பது போல சூஃபியிலும் பல தவறுகள் இருக்கின்றன" என்றார் இளைஞர்

தன்னன் தன் கையில் இருந்த ஒரு மோதிரத்தை கழற்றி இளைஞனிடம் கொடுத்தார் . பிறகு சொன்னார்

"நீங்கள் இதை சந்தைக்கு கொண்டு சென்று விற்க வேண்டும். ஆனால் அதற்கு விலையாக ஒரு தங்க நாணயம் கிடைக்க வேண்டும் "

சந்தையில் எந்த ஒரு வியாபாரியும் அந்த மோதிரத்தை வாங்கி பார்த்து , ஒரு வெள்ளி நாணயத்திற்கு அதிகமாகத் தரத் தயாராக இல்லை .

இளைஞர் அந்த மோதிரத்தை திரும்பக் கொண்டு வந்தார்.

அப்போது ஞானி ..

"இப்போது நீங்கள் இந்த மோதிரத்தை ஒரு வைர வியாபாரியிடம் கொண்டு சென்று விற்க வேண்டும். இந்த மோதிரத்திற்கு அவர் என்ன விலை தருகிறார் என்று பாருங்கள்" என்றார்.

இளைஞர் ஒரு வைர வியாபாரியிடம் கொடுத்து, அந்த மோதிரத்திற்கு விலை கேட்டார் .

ஆயிரம் தங்க நாணயங்கள் தருவதாக சம்மதித்தார்.

தன்னன் சூஃபி சொன்னார் : இதுதான் சூஃபிஸத்தின் நிலை .

உமர் (ரலி) அவர்களின் சூஃபித்துவ நடைமுறையைக் கண்டு இந்தியாவின் தந்தை மகாத்மா காந்தியடிகள் "இரவில் ஒரு பெண் சுதந்திரமாக வெளியே சென்று வர முடிகிறது என்றால் அதுதான் உண்மையான சுதந்திரம்.

" இந்திய தேசத்தின் முழுமையான சுதந்திரத்தை இஸ்லாமிய சாம்ராஜ்யத்தின் நீதிமான் உமர் அவர்களின் ஆட்சியின் அடிப்படையில் அமைகிறபோது தான் சுவைக்க முடியும்." என்று -ஆயிரத்து நானூறு ஆண்டுகளுக்கு முன்னால் வாழ்ந்த கலீஃபா உமர் (ரலி) அவர்கள் பற்றி காந்திஜி குறிப்பிடுகிறார் .

சூஃபி கதைகள் அங்கதமும், மறைபொருளும் ஆழ்ந்த தத்துவ நோக்கமும் கொண்டவை மட்டுமல்ல,

நம் மனதின் இருண்ட மூலைகளில் வெளிச்சம் ஏற்படுத்துபவை.

சூஃபி வழிபயணத்தில் முடிந்தால் இணைந்து கொள்ளுங்கள். இல்லையேல் வழி விடுங்கள். பாவம் அவர்கள் செல்ல வேண்டிய தூரம் மிக அதிகம். அது துன்பங்களாலும் துயரங்களாலும் பின்னப்பட்ட நெடு வழிப்பயணம்.ஆகவே ஒரு போதும் குறை கூறாதீர்கள் . .

சூஃபியாக்கள் இந்த உலகத்தில் பயணிக்கும் ஒவ்வொரு நொடிப்பொழுதும் மரணத்தை எதிர்கொள்ளும் நிலை. ஆனால் உண்மையில் அது மரணமில்லா பெருவாழ்வுக்கு நம்மை கூட்டிச் செல்லும் புனித வழிப்பயணம். அது ஆபத்தானதுதான், ஆனாலும் அது அலாதியானது. அது அற்புதமானது.அதைப் பற்றி எவ்வளவுதான் விளக்கி எழுதினாலும் அதைச் சொல்லி முடியாதது .அப்படி எழுத நினைப்பது ஒரு சிட்டுக்குருவி வானத்தை அளக்க முற்பட்ட கதையாகி விடும்.

சூஃபியாக்களின் குண நலன்கள் வரையறை செய்ய முடியாத பல பன்முகத் தன்மையுடையது. அதிலிருந்து 24 இயல்பு தன்மைகளை மட்டுமே எடுத்து ஆழ்ந்து தந்திருக்கிறேன். இந்த 24 பதிவுகளைப் பற்றி உங்களது மேலான எந்த ஒரு விமர்சனத்தையும் வரவேற்கிறேன். காத்திருக்கிறேன்.

இத்துடன் 'சற்குருவின் சகவாசம் ' தொடர் பதிவுகள் நிறைவு செய்யலாம் என நினைக்கிறேன் . உங்கள் கருத்து ?


\\\\\\\\\\

## சற்குருவின் சகவாசம் 25

(குருவிற்கெல்லாம் சற்குரு )



"சூபித்துவம் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் பார்க்க முடியாவிட்டால், அது இஸ்லாத்தில் இல்லை என்றே துணிந்து சொல்லி விடலாம். அவர்களை பின்பற்றாதவனுக்கு எல்லா ஆன்மிகப் பாதைகளும் அடைக்கப்பட்டு விட்டன" என்றார் சூபிகளின் குரு ஜுனைத்துல் பாக்காதி (ரஹ்) அவர்கள்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் எப்படிப்பட்டவராக இருந்தார்கள் ?

சூஃபி குணங்களின் இருப்பிடமாக நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இருந்தார்கள். எளிமை. வறுமை ,தர்மம், தாராளம் போன்ற குணங்கள் சூஃபிக்குரியன.

'' உஹது மலையளவு தங்கம் இருந்தாலும் , இறைவனுக்காக அதைச் செலவு செய்து விடுவேன்' என்று நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள். எப்போதுமே அவர்கள் கொடுப்பவராகவே இருந்தார்கள். மாலையில் வீடு திரும்பும்போது தர்மம் செய்யப்படாத ஒரு தங்கக்காசு (தீனார்) ஒரு வெள்ளிக்காசு (திர்ஹம்) அவர்களிடம் இருந்ததில்லை.

இரவாகியும் தர்மம் பெற யாரும் வரவில்லை எனில், அப்படிப்பட்ட ஒருவர் வந்து காசை தர்மம் பெற்றுக் கொள்ளும் வரை நம் வீட்டுக்கு அவர்கள் திரும்புவதில்லை .ஒருவர் கேட்டு எதையும் அவர்கள் கொடுக்காமல் இருந்ததில்லை .
நாளைக்கு என்று அவர்கள் எதையுமே எடுத்து வைத்தது இல்லை. பரீரா என்ற பணிப்பெண் முதல் நாள் கொடுத்த உணவையே மறுநாள் இரவும் கொண்டு வந்து கொடுத்தபோது "மறுமை நாளை நீ அஞ்சவில்லையா ? நாளைக்கென்று எதையும் சேமித்து வைக்க வேண்டாம். மிக உயர்ந்தவனாகிய அல்லாஹ் ஒவ்வொரு நாள் காலைக்குமான உணவை கொடுப்பான் " என்று கூறினார்கள்
ஒரு மாதத்திற்கு மேல் கூட வீட்டில் உணவு இன்றி அடுப்பெரியாமல் இருந்துள்ளது . அவர்களுடைய வழக்கமான உணவு தண்ணீரும், பேரித்தம் பழமும்தான்.

தன்னை சித்திரவதை செய்தவர்களை, ஊரை விட்டு விரட்டியவர்களை, கல்லால் அடித்தவர்களை , தன் உறவினர்களைக் கொன்றவர்களை , தனக்கு விஷம் வைத்தவளை, தன் தோழர்களை கொடுமைப்படுத்தியவர்களை, கொன்றவர்களை எல்லோரையும்தான் மன்னித்தார்கள் . அதுவும் பழிவாங்க நல்ல சந்தர்ப்பம் கிடைத்த மக்கா வெற்றியின் போது.
உரக்கச் சிரித்தது இல்லை .யாரையும் அடித்ததில்லை .சாய்ந்துகொண்டு சாப்பிட்டதில்லை. அவர்கள் இந்த உலகைவிட்டு சென்ற போது, கொஞ்சம் பார்லிக்காக அவர்களுடைய கவசம் ஒரு யூதரிடம் அடகு வைக்கப்பட்டு இருந்தது. சொத்து எதுவும் இல்லை. அதானால் அவர்கள் விட்டுச் செல்ல எதுவும் இருக்க இல்லை. வீட்டில் இருந்த சொற்ப காசும் தர்மம் செய்யப்படும் வரை அவர்கள் உயிரை பிரியவில்லை.

நேர்மையானவராக, நீதி தவறாதவராக, ஒழுக்கம் உள்ளவராக இருந்தார்கள். தனக்கு உரிமையில்லாத எந்த பெண்ணின் உடல் மீதும் அவர்கள் விரல் கூடப் பட்டதில்லை .
தனது காலணியும், உடையையும் தானே தைத்துக் கொண்டார்கள். வீட்டு வேலைகளில் பெண்களுக்கு உதவியாக இருந்தார்கள் .வெட்க குணம் உள்ளவர்களாகவும், யாருடைய கண்ணையும் உற்றுப் பார்க்காதவர்களாகவும் இருந்தார்கள்.
அழைப்பு கொடுக்கப்பட்ட பின்னரே விருந்துக்கு செல்வார்கள். அழைப்பு கொடுப்பவர் அடிமையாக இருந்தாலும், அந்த அழைப்பை புறக்கணித்ததில்லை .கொடுக்கப்பட்ட அன்பளிப்பு கொஞ்சம் பாலாக இருந்தாலும் பெற்றுக்கொள்வார்கள். அதையும் ஏழைகளோடு அமர்ந்து சாப்பிடுவார்கள்.
தனக்கு வைக்கப்பட்ட உணவை என்றுமே அவர்கள் குறை சொன்னதில்லை. பிடித்தால் சாப்பிடுவார்கள். இல்லையெனில் சாப்பிடாமல் இருந்துவிடுவார்கள். மிகவும் சூடான உணவை சாப்பிட்டதில்லை .பாலை அப்படியே குடித்தார்கள்.ஆனால் தண்ணீரை மெதுவாக உறிஞ்சினார்கள்.
அனுமதிக்கப்பட்ட எந்த உணவையும் வெறுத்து ஒதுக்கியது இல்லை . உணவு உண்ணும் போது ஓர் அடிமையைப் போல் உண்பார்கள் .பல நேரங்களில் கடுமையான பசியினால் வயிற்றில் இரண்டு கற்களை கட்டி வைத்திருந்தார்கள்.
மௌனமாக இருப்பார்கள்; ஆனால் திமிராக அல்ல. பேச்சில் உறுதியும் தெளிவும் இருக்கும்; ஆனால் வளவளவென நீளமாக இருக்காது. பேச்சில் நகைச்சுவை இருக்கும் ஆனால் அது வெறும் நகைச்சுவைக்காக இருக்காது, அதில் உண்மை இருக்கும் .
குதிரை, ஒட்டகம், கழுதை போன்றவற்றின் மீது பயணம் செய்திருக்கிறார்கள். எதுவுமே இல்லாமல் வெறும் காலோடும் வெறுந்தலையோடும் சென்றிருக்கிறார்கள். நோயாளிகளை பார்த்து ஆறுதல் சொல்வார்கள். பாதுகாவலர்கள் இன்றியே பகைவர்கள் மத்தியில் செல்வார்கள்.

நறுமணங்கள் பிடிக்கும். கெட்ட வாசனையை பிடிக்காது. யார் மீதும் அதிகாரம் செலுத்தவில்லை. யார் மன்னிப்புக் கோரினாலும் கொடுப்பார்கள் .புன்னகைப்பார்கள் ; ஆனால் சத்தமாக சிரித்ததில்லை. தன்னிடமிருந்த பணியாட்களின் உடைகளையும் உணவையும் விட சிறந்ததை அவர்கள் உடுத்தியதோ உண்டதோ இல்லை.
அப்பழுக்கற்ற இந்த ஆட்சியாளரின் நடவடிக்கைகள் சொல்லிக்கொடுத்து வந்ததல்ல . அறியாமையில் மூழ்கி இருந்த பாலையில் இடையர்களோடு வளர்ந்தவர்கள். சிறுவயதிலேயே தந்தையும் தாயையும் இழந்து அனாதையாக இருந்தவர்கள்.
பகைவர்களை கூட அவர்கள் சபித்ததில்லை. யாரையாவது சபிக்கச் சொன்னால் அதற்கு பதிலாக ஆசீர்வதித்தார்கள். 'சபிப்பதற்காக நான் அனுப்பப்படவில்லை ' என்று சொன்னார்கள்.

படுக்கை ஏதாவது இருந்தால், அதன் மீது படுப்பார்கள். இல்லையெனில் மண்ணில் படுத்தார்கள். முகமன் கூறுவது எப்போதுமே அவர்கள் முந்திக் கொண்டார்கள். கைகுலுக்கும் போது தனது கையை முதலில் விடுவிக்க மாட்டார்கள். தனது தோழர்களை அவர்களது 'குன்யத் ' என்ற கண்ணியப் பட்டப் பெயர்களால் அழைத்தார்கள்.
உண்மையை மட்டும் பேசினார்கள். கொஞ்சமாக உண்டார்கள். கொஞ்சமாக உறங்கினார்கள். இரவின் பெரும்பகுதியை இறை வணக்கத்திலேயே கழித்தார்கள் .

ஒரு பரிபூரண சூஃபிக்கான இலக்கணமாகத் திகழ்ந்த அவர்களைப் பின்பற்றித்தான் சூஃபிகள் தங்கள் வாழ்வை அமைத்துக் கொண்டார்கள்.
எல்லா சூஃபி ஞானாசிரியர்களும் தங்களை "முஹம்மதின் ஒளி" என்பதாகவே பார்த்தார்கள். இதை சூபியாக்கள் தங்களது பாஷையில் " நூரெ முஹம்மதியா " என்றே அழைத்தார்கள் .

சூஃபியத்துவத்தின் ஆணிவேர் மதீனத்துல் முனவ்வராவிலிருந்தல்லவா வேர் ஊன்றி ,உலகெங்கும் கிளை பரப்பி நறுமணம் கமிழச் செய்கிறது என்றால் அது மிகையாது .

## சற்குருவின் சகவாசம் 26

(சற்குருவே விழிப்புணர்வு)



அபூ யஜீத் பிஸ்தாமி (ரஹ்) அவர்கள் சிறுவயதில் அன்னையின் அனுமதியுடன் பாக்தாத் நகர் சென்று உயர் கல்வி பெற்றார். அவர்களின் வாழ்நாளில் 360 க்கும் மேற்பட்ட ஞான ஆசான்களிடம் கல்வி பயின்றார்.

இறுதியாக இமாம் ஜாஃபர் ஸாதிக் (ரலி ) அவர்களிடம் கொஞ்ச காலம் கல்வி கற்றார்கள்.

ஒருநாள் இமாம் அவர்கள் இவர்களை நோக்கி "அபூ யஸீத் ! அந்த ஜன்னலில் இருக்கும் புத்தகத்தை எடுத்து வாரும் " என்று கூறினார்கள்.

"ஜன்னல் எங்கே உள்ளது ? "என்று வினவினார்

"என்ன இவ்வாறு கேட்டு விட்டீர் ? எத்தனை காலமாக இங்குதானே வந்து போகிறீர்கள், ஜன்னலைக் கூடவா நீர் பார்க்கவில்லையா ? "என்று கேட்டார்கள்

அதற்கு பிஸ்தாமி அவர்கள், "தங்கள் முன் வந்ததும், மற்றெதையும் கவனிப்பது இல்லை, அதற்காகவும் நான் இங்கு வரவில்லை" என்று கூறினார்.

அது கேட்டு வியப்பு மேலிட இமாமவர்கள், " நீர் எதற்காக என்னைத் தேடி வந்தீர்களோ, அது உமக்கு பூர்ணமாக கிடைத்துவிட்டது. வந்த வேலை முடிந்து விட்டது. இனி உம் ஊருக்கு சென்று உம் அன்னையை கவனித்துக்கொள்ளும் " அனுப்பி வைத்தார்கள்.

இதையே எளிய உதாரணத்துடன் சொல்றேன் .

விழிப்புணர்வு என்பது நீங்கள் ஒரு சைக்கிளை முதன்முதலாக ஓட்டுவதற்கு கற்றுக் கொள்வதைப் போன்றது.

அப்படிக் கற்றுக் கொள்ளும்போது, நீங்கள் ஒரு அமைதியான, போக்குவரத்து இல்லாத சாலையில், அதிகாலையில் ஓட்டக் கற்றுக் கொண்டிருக்கிறீர்கள். அப்போது நீங்கள் சாலையின் ஓரத்தில் சிவப்பு நிறத்தில் நிறுத்தப்பட்டுள்ள மைல்கல்லைப் பார்க்கிறீர்கள். சாலையோ அறுபது அடி அகலம் இருக்கும். ஆனால், அந்த மைல்கல் மிகவும் சிறியதாக சாலை ஓரத்தில் நிற்கும். ஆனால் நீங்கள் அதைப் பார்த்து பயப்படுவீர்கள்.

நீங்கள் சைக்கிளில் அந்த மைல்கல்லில் மோதிவிடுவோமோ என்று பயப்படுவீர்கள். இப்போது நீங்கள் அந்த அறுபது அடி சாலையை மறந்துவிடுவீர்கள். உண்மையில் கண்ணைக் கட்டிக் கொண்டு சென்றாலும்கூட அந்த மைல்கல்லில் மோதுவதற்கு அதிக சந்தர்ப்பம் கிடையாது.

ஆனால் இப்போதோ, கண்களை திறந்து கொண்டு இருக்கும்போதே அந்த அறுபது அடி சாலை மறக்கப்பட்டு, உங்களது மனம் அந்த மைல்கல்லில்மீது குவிக்கப்பட்டு விட்டது.

உங்களது விழிப்புணர்வு சைக்கிள் ஓட்டுவதிலிருந்து மாறி அந்த மைல்கல்லில் மீது மோதாமல் இருப்பதற்காக கவனம் செலுத்தப்படுகிறது .

முதலில் அதன் சிவப்பு நிறம் மனதில் குவிகிறது. எனவே நீங்கள் அதைப் பார்த்து பயப்படுகிறீர்கள். எனவே அதன்மீது மோதுவதைத் தவிர்ப்பதற்கு நீங்கள் விரும்புகிறீர்கள். நீங்கள் ஒரு சைக்கிளின் மீது இருப்பதையும் மறந்துவிடுவீர்கள்.

அதன் பின்பு நீங்கள் எல்லாவற்றையும் மறந்துவிடுவீர்கள். இப்போது உங்களுக்கு உள்ள ஒரே பிரச்னை அந்த மைல்கல்லில் மோதாமல் இருப்பது எப்படி என்பதுதான். இல்லையெனில் அதன்மீது மோதி உங்களது கை காலை உடைத்துக் கொள்ள வேண்டியிருக்கும்.
இப்போது நீங்கள் அந்த மைல்கல்லின் மீது மோதுவது தவிர்க்கமுடியாமல் போய்விடும். நீங்கள் நிச்சயம் அந்த கல்லின்மீது மோதிவிடுவீர்கள். அதன்பிறகு நீங்களே, " நான் இந்தக் கல்லின் மீது இடிக்காமல் இருப்பதற்கு கவனமாக முயற்சி செய்தேன். என்றாலும் தோற்று விட்டேன்" என்று நினைத்து ஆச்சரியப்படுவீர்கள்.
உண்மையில் நீங்கள் கடினமாக முயற்சி செய்ததால்தான் நீங்கள் அந்த கல்லின்மீது மோதினீர்கள். நீங்கள் அதை நெருங்கி வர வர, அதன்மீது மோதாமல் இருப்பதற்கு நீங்கள் கடினமாக முயற்சி செய்தீர்கள். ஆனால் நீங்கள் எந்த அளவுக்கு அந்த கல்லை தவிர்த்துவிட முயற்சி செய்தீர்களோ அந்த அளவுக்கு உங்களது மனம் அதன்மீது குவிந்துவிட்டது.
எனவே உங்களது இலட்சியம் சைக்கிள் ஓட்டிப் பழக ரோட்டைப் பார்த்து ஓட்டுவதானே தவிர, ரோட்டோரம் உள்ள மைல்கற்களை கவனிப்பது அல்ல . இதனால் உங்களது விழிப்புணர்வு இடம் மாறி உங்கள் இலட்சியத்தை அது திசை திருப்பி விட்டது.
ஆனால் பிஸ்தாமி (ரஹ்) அவர்களுக்கு விழிப்புணர்வு தன் சற்குருவின் மீது மட்டுமே இருந்தது.



என்ன செய்வது முஸ்லிம்களே
எனக்கே தெரியவில்லை
கிறிஸ்தவனோ யூதனோ
முஸ்லிமோ அல்ல நான்
கிழக்குமல்ல மேற்குமல்ல
நிலமுமல்ல கடலுமல்ல
மண்ணோ விண்ணோ நீரோ
நெருப்போ காற்றோ எதுவுமல்ல
அரசனுமல்ல ஆண்டியுமல்ல
இந்தியனோ சீனனோ அல்ல
ஈராக்கியனோ கொராசானியனோ அல்ல
இம்மையை சேர்ந்தவனோ
மறுமையை சேர்ந்தவனோ அல்ல
சொர்க்கத்துக்குரியனோ
நரகத்துக்குரியனோ அல்ல
எனது இடமோ இடமற்றது
எனது தடமோ தடமற்றது
உடலோ உயிரோ அல்ல
இருமையை விட்டுவிட்டேன் நான்
தேடுவதும் தெரிவதும்
காண்பதும் அழைப்பதும் ஒன்றே
முதலும் முடிவும் அவனே
அகமும் புறமும் அவனே
போதையில் இருக்கிறேன் நான்
என்பதைத் தவிர சொல்வதற்கு ஏதுமில்லை
ஜலாலுத்தீன் ரூமி

## சற்குருவின் சகவாசம் 27

(நபிக்கு தோழர்கள் ஆனால் சகோதரர்கள்)



நபி (ஸல்) அவர்களின் தோழர்கள் நபிகளாரிடம் பிரதிபலித்த நூற்றுக்கு மேற்பட்ட நற்குணங்களில் மிகவும் அதிகமாக ஈர்த்துக் கொண்டது நேர்மையும், சகோதரத்துவமும், தியாகமும்தான். இக்குணங்களை தங்கள் வாழ்வில் கடைபிடித்து ஒழுகி வந்தனர் .

ஹஜரத் இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறுவது :

ஒரு மனிதர் , ஸஹாபி ஒருவருக்கு ஆட்டுத் தலை ஒன்றை அன்பளிப்பாக அனுப்பி இருந்தார் .அந்த ஸஹாபி , என்னுடைய இன்ன நண்பர் என்னை விட அதிகத் தேவை உள்ளவராகவும் , பெரும் குடும்பஸ்தராகவும் இருக்கிறார் என்று எண்ணி அந்த ஆட்டுத் தலையை அந்த நண்பருக்கு அனுப்பி வைத்தார்.

அவர் தனக்கு வந்த ஆட்டுத் தலையை மற்றொரு நண்பருக்கு அனுப்பி வைத்தார் . அவ்வாறே அந்த ஆட்டுத் தலை ஏழு வீடுகளுக்குச் சென்று சுற்றி விட்டு , முதல் ஸஹாபியின் வீட்டுக்கே வந்து சேர்ந்தது !

இச்சம்பவத்தின் மூலம் பொதுவாக அந்த ஸஹாபாக்கள் ஏழைகளாக , தேவை உடையவர்களாக இருந்திருக்கிறார்கள் என்பதும் , ஒவ்வொருவரும் தன்னுடைய தேவையை விடப் பிறருடைய தேவையை முதன்மையானதாகக் கருதி இருக்கிறார்கள் என்பதும் தெரிய வருகிறது .

"தனக்குப் போய்தான் தானம் " என்ற சொற்றோடரை இச் சம்பவம் பொய்யாக்கி இருக்கிறது!

யர்மூக் யுத்தம் நடைபெற்றுக்கொண்டிருந்த தருணம் அது. ஆயிரத்துக்கும் மேற்பட்ட நபித்தோழர்கள் காயமுற்று வீழ்ந்து கிடக்கின்றார்கள்.

அப்போது, காயமுற்றவர்களுக்கு தண்ணீர் கொடுப்பதற்காக படையில் பங்கெடுத்த தோழர் தண்ணீர் பையோடு விரைகிறார்.

தூரத்தில் ஒரு முனகல் சப்தம் அருகே சென்று பார்க்கிறார். அங்கே, ஹாரிஸ் இப்னு ஹிஷாம் (ரலி) அவர்கள் கடும் தாகத்தோடு காணப்படுகின்றார்கள்.

தண்ணீர் பையை திறந்து ஹாரிஸ் (ரலி) அவர்களின்ன் வாயின் அருகே கொண்டு சென்ற போது, அவருக்கு சற்று தொலைவில் இன்னொருவரின் முனகல் சப்தம் ஹாரிஸ் (ரலி) அவர்கள் சப்தம் கேட்ட திசையை நோக்கி அவரின் தாகத்தை போக்குமாறு சைகை செய்கின்றார்.

தண்ணீர் பையோடு அவருக்கு அருகே சென்ற பார்த்த போது, அங்கே இக்ரிமா இப்னு அபூஜஹ்ல் (ரலி) கடுமையான தாகத்தோடு காணப்படுகின்றார்கள்.

அவருக்கு சற்று தொலைவில் இருந்து இன்னொருவரின் முனகல் சப்தம், இக்ரிமா (ரலி) அவர்கள் அவரின் தாகத்தைப் போக்குமாறு சைகை செய்கின்றார்.

தண்ணீர் பையோடு ஓடிச் சென்று பார்த்தால் அங்கே, அயாஷ் இப்னு ரபீஆ (ரலி) அவர்கள் நாவறண்டு தாகத்தோடு காணப்பட்டார்கள். வாயின் அருகே தண்ணீரை கொண்டு செல்கிற போது அயாஷ் (ரலி) அவர்கள் ஷஹீதாகி விட்டார்.

இக்ரிமா (ரலி) அவர்களை நோக்கி தண்ணீர் பையோடு ஓடிச் சென்று பார்த்தால் அவரும் ஷஹீதாகி விட்டார்.

ஹாரிஸ் (ரலி) அவர்களுக்கு தண்ணீர் கொடுக்கலாம் என்று அங்கே ஓடிச் சென்றால் அவரும் ஷஹீதாகி விட்டார்.

( நூல்: அல்மஃகாஸீ லிஇமாமி அல்வாகிதீ )

பலத்த காயத்தோடும், தகிக்கும் தாகத்தோடும் மரணத்தின் விளிம்பில் இருந்து கொண்டிருந்த அந்த நபித்தோழர்கள் ஒவ்வொருவரின் உணர்வும் தங்களின் உயிரை விட சகோதரத்துவ உறவே மிகவும் உவப்பானதாக தெரிந்தது.

"அல்லாஹ்வும் அவர்களைப் பற்றி, திருப்தி அடைவான், அவர்களும் அவனைப்பற்றி திருப்தி அடைவார்கள்; தன் இறைவனுக்குப் பயப்படுகிறாரே அத்தகையவருக்கே இந்த மேலான நிலை உண்டாகும்". (அல்குர்ஆன் : 98:8)

## சற்குருவின் சகவாசம் 28

(ஞானத்திற்கு தேவை அறிவு அல்ல, அறியாமையே)



மனிதனின் அடிப்படை பிரச்சினை என்ன? ..அறியாமையா ?

அறியாமை பிரச்சினையல்ல . அறிவுதான் பிரச்சினை.அறிவு என்பது எப்போதும் கடன் பெற்றதாக இருக்கிறது. அது ஒருபோதும் சுயமானது அல்ல .

ஒருவர் விஷயம் தெரிந்தவராக இருந்தால் , மற்றவர்களை ஏமாற்ற இயலும் என்று நம்புகிறார். உலகின் மிகப் பெரிய ஏமாற்று சக்தியாக அறிவு இருந்து வருகிறது. அது மனிதர்களை தந்திரம் நிறைந்தவர்களாக, வேஷக்காரர்களாக. ஆணவக்காரர்களாக மாற்றுகிறது.

அது பொய்யான எண்ணத்தை ஏற்படுத்துகிறது என்பதை அவர்கள் அறிவார்கள். நிஜமான பாதை எது என்று அவர்களுக்கு அந்த அறிவைக் கொண்டு நிச்சயமாக தெரியும். அதன் காரணமாக அவர்கள் அதே அறிவை கொண்டு வழி தவறி விடுகிறார்கள். அதுதான் வேடிக்கை

அறியாமை தேவையா என்றால் , அதுதான் தேவை. அறியாமையிலிருந்து நம்பிக்கை எழுகிறது .விசுவாசம் பிறக்கிறது அறியாமையிலிருந்தே அனைத்து மதங்களும் தோன்றின என்றே வரலாறு கூறுகிறது.

ஜூஸ்யா என்ற யூத ஞானி. யூதர்கள் அவரை ஞானக் கிறுக்கர் என்றே அழைத்தனர் .அவர் யூதக் கோவிலுக்குச் சென்ற போது எல்லோருமே கேலி செய்தனர் . குழந்தைகள் அவரது அங்கியைப் பிடித்து இழுத்தனர் .

உடனே அவர் சுற்றி நின்ற, " சீறார்களே..! நான் ஒன்று சொல்லப் போறேன்" என்றார்.

குழந்தைகள் ஏதோ ஜால வித்தை செய்து காட்டப் போகிறார் என்று சுற்றி நின்றன. ஜூஸ்யா ஒவ்வொரு குழந்தையையும் தனித்தனியாக உற்று நோக்கி விட்டு ,வீட்டிற்கு அனுப்பி விட்டார்.

வீட்டிற்கு போன குழந்தைகள் சாப்பிட மறுத்தன. "சாப்பாடு சுத்தமாக இல்லை "என்றது ஒரு குழந்தை .மற்றொரு குழந்தை "இறைச்சி உண்ணக் கூடாது.அது சுத்தமாக இல்லை " என்றது. இப்படி அத்தனை குழந்தைகளும் சாப்பிட சுத்தம் பற்றி பேசி சாப்பிட மறுத்தன. ஜூஸ்யாவைப் பார்க்காத மற்ற குழந்தைகளும், ஜூஸ்யாவைப் பார்த்த குழந்தைகளைப் பார்த்து சாப்பிட மறுத்தன.

குழந்தைகள் குறிப்பிட்ட 'சுத்தம்' என்பது அந்த உணவு வாங்கிய பணம் சம்பாதித்த வழியை குறிப்பிடுகிறது என்பது அப்புறமாக பெற்றோர்களுக்கு புரிந்தது.

அவர்களால் பைத்தியம் என்று கேலி செய்யப்பட்ட மனிதர் ஒரு புனிதமான ஞானி என்று எல்லோரும் புரிந்து கொண்டார்கள்' அந்த ஞானி தன்னிடமுள்ள ஏதோ ஒன்றை பார்வை மூலம் குழந்தைக்குள் செலுத்தி விட்டார். அவரை அவமானப்படுத்தி விட்டதாக எண்ணி பயந்து போன பெற்றோர்கள் ஓடிச் சென்று மன்னிப்பு கேட்டனர்.

ஜூஸ்யா சிரித்துகொண்டே எல்லோரையும் மன்னித்து விட்டார். அந்த பெற்றோர்களின் கண்களையும் பார்க்க விரும்பினார். அவர்கள் வேகமாக அங்கிருந்து விலகி ஓடி விட்டார்கள். அவர்கள் அறியாமையில்லாத அறிவு பெற்றிருந்தார்கள் .

குழந்தைகள் அறியாமையில் இருந்தார்கள் .வித்தியாசமான குருவின் கண்களை பார்க்க அவர்கள் தயாராக இருந்தார்கள். அவர்கள் தொடர்பு வைத்துக் கொண்டார்கள் . ஒரு கணம் குருவின் விரிந்த தன்மையில் தங்களை இழந்து விட்டார்கள். அந்த கணத்தில் குரு அவருக்களுக்குள் ஊடுருவிப் பாய்ந்து பெருகினார். அங்கே ஒரு சந்திப்பு , இணைதல், ஒரு தொடர்பு ஏற்பட்டுவிட்டது. அது பிரபஞ்சத்தின் உண்மை நிலையை குழந்தைகளுக்கு காட்டிக் கொடுத்து விட்டது.

"சிறிய குழந்தைகள் போல் நீங்கள் இல்லாவிட்டால் கடவுளின் ராஜ்ஜியத்தில் நுழைய முடியாது " என்று இயேசு சொன்னது சரிதான்.

இயேசு சந்தைக் கடையில் நின்று கொண்டிருக்கிறார். அவரை ஜனங்கள் சூழ்ந்திருக்கிறார்கள் .யாரோ யூத மத போதகர் ஒருவர் நீங்கள் கடவுளின் ராஜ்ஜியம் பற்றி நிறைய பேசுகிறீர்கள். யார் போதுமான அளவு தகுதி பெற்று அங்கு நுழைய முடியும் ? அங்கே நுழைவதற்கு அனுமதிக்கப்படும் மனிதர்களின் குணாதிசயம் எப்படி இருக்க வேண்டும் ? "என்று கேட்டார் .

இயேசு சுற்றுமுற்றும் பார்த்தார். அந்த யூத மத போதகர், ''உங்களை போன்றவர்களால்தான் நுழைய முடியும் ' என்று இயேசு சொல்வார் என்று அவர் எதிர்பார்த்தார் .

அந்த கூட்டத்தில் ஒரு செல்வந்தர் இருந்தார். அவர் யூத கோவிலுக்கு நிறைய அன்பளிப்புகள் செய்திருந்தார் .எனவே "நிச்சயம் அவர் என்னைத்தான் தேடுகிறார் உங்களைப் போன்ற மனிதர்கள்தான் கடவுளின் ராஜ்யத்திற்குள் நுழைய முடியும் என்று சொல்வார் ' என்று அவரும் எதிர்பார்த்தார்.

அவர்கள் எல்லோரும் ஏமாற்றம் அடைந்தார்கள். இயேசுவின் கண்கள் அலைந்து தேடின. கூட்டத்தில் இருந்த ஒரு குழந்தையின் மீது அவர் பார்வை சென்று நிலைத்தது. அவர் அந்த குழந்தையை வாங்கி தூக்கிப்பிடித்து , " இந்த சிறிய குழந்தையை போல் இருப்பவர்கள் மட்டுமே கடவுளின் ராஜ்ஜியத்திற்குள் நுழைய முடியும் "என்றார்.

மனிதன் இறந்துவிட்டால் மூன்று விஷயங்களைத் தவிர அவனுடைய அனைத்து அமல்களும் அவனைவிட்டு துண்டிக்கப்பட்டு விடுகிறது. (அவை) நிரந்தர தர்மம், பயன்தரும் கல்வி, அவருக்காக துஆச் செய்யும் சாலிஹான குழந்தை' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (முஸ்லிம்)

## சற்குருவின் சகவாசம் 29



இந்தியாவின் மேற்குப் பகுதியிலுள்ள இலட்ச தீவைச் சேர்ந்த கவர தீவில் ஹிஜ்ரி 1144 ஆம் ஆண்டு சையிது முஹம்மது புகாரி தங்கள் பிறந்தார்கள் .

( ஹிஜ்ரி 1144 - ஹிஜ்ரி 1207 = 63 வருடங்கள் )

அலி கர்ரமல்லாஹு வஜ்ஹகு பாத்திமா நாயகியின் 34 வது வழித்தோன்றலான அவர்களை எல்லோராலும் "மௌலா புஹாரி நாயகம் " என்று அழைத்தனர்.

தந்தை வழித்தொடர்பில் ஹுஸைனியாகவும் தாய் வழித்தொடர்பில் ஹஸனியாகவும் இருக்கிறார்கள். கராமத்துக் கடலான அவர்கள் 'குத்புஸ்ஸானி' என்னும் சிறப்புப் பெயருக்கும் உரியவர்களாகும்.

ஹஜ் நிறைவேற்றுவதற்காக மக்கா சென்ற அவர்கள் ஹஜ் முடித்துவிட்டு ,அங்கு தம் பாட்டனார் முஹம்மது (ஸல்) அவர்களின் அடக்க இடத்தை தரிசிப்பதற்காக மதினா சென்றார்கள்.

அவர்களை தெரிந்த சிலர் அவர்களை "சையிது" என்று அழைத்து பெரிதும் மரியாதை செய்தார்கள் . அது கண்டு மதினாவின் ஷரீஃபாக இருந்த சையிது ஒருவருக்கு ஏற்பட்ட மனப்புழுக்கத்திற்கு அளவில்லை. "நான்தான் சையிது அவர் சையிது அல்ல" என்று கூறினார். இது புகாரி தங்கள் அவர்களின் செவிகளில் பட்டது. பின் தகராறு முற்றியது.

" நாம் இருவரும் நபிகளாரின் ரௌளா முன் நின்று, பெருமானார் ( ஸல் ) அவர்களுக்கு சலாம் உரைப்போம். எவருடைய ஸலாத்திற்கு பெருமானார் ( ஸல் ) பதில் கூறுகின்றார்களோ அவரையே நாம் 'சையிது' என்று அழைப்போம் என்று முடிவு செய்தனர்.

இதன்பின் இருவரையும் பின் தொடர்ந்து மக்கள் திரளாக வர ரவ்ளா சென்றனர். முதலில் மதினா ஷரீஃப் ரௌளா முன்னின்று பெருமானார் (ஸல்) அவர்களுக்கு ஸலாம் உரைத்தார்கள். பதில் ஸலாம் வரவில்லை .மீண்டும் உரைத்தார் மீண்டும் பதில் வரவில்லை. அப்பொழுது அவரின் முகம் கருகியது

இப்பொழுதும் அங்கு குழுமியிருந்த மக்கள் புகாரி தங்கள் அவர்களை ஸலாம் உரைக்க சொன்னார். அதற்கு அவர்கள் "சற்று பொறுங்கள் பின்னால் கூறுகிறேன்'' என்று கூறினார்கள் .

அப்பொழுது அங்கிருந்த சிலர் "புகாரி தங்கள் பயந்துவிட்டார் எனவேதான் தயங்குகிறார் "என்று தங்களுக்குள் பேசிக் கொண்டார்கள் .அவர்கள் கூறிய வண்ணம் சற்று நேரம் கழித்து ரவ்ளா முன் மிகவும் மரியாதையுடன் சென்று பேணுதலுடன் கைகட்டி நின்று , "அஸ்ஸலாத்து வஸ்ஸலாமு அலைக்க யா ரசூலுல்லாஹ் ! "என்று கண்ணீர் மல்க ஸலாம் உரைத்தனர். அடுத்தகணம் "வ அலைக்கும் ஸலாம்" என்று பதில் ஸலாம் புனித ரவ்ளாவிலிருந்து வெளிவந்தது. அது கேட்டு அனைவரும் மெய்சிலிர்த்தனர் .
அப்போது மதினா ஷரீஃப் நிலைமை பரிதாபமாக இருந்தது. இது கண்ட புகாரி தங்கள் அவர்கள் அவர் மீது இரங்கி, "இப்பொழுது நீரும் ஸலாம் கூறும் உமக்கும் பதில் கிடைக்கும் " என்று கூறினார் .
அவ்வாறே அவரும் ஸலாம் சொல்ல ரவ்ளாவிலிருந்து
"வ அலைக்கும் ஸலாம் "என்று பதில் வந்தது. இது கண்டு அங்கு கூடியிருந்த அனைவரும் முன்னை விடப் பன்மடங்கு அதிகமான ஆச்சர்யம் ஏற்பட்டது.
அப்போது புகாரி தங்கள் அவர்கள் மக்களை நோக்கி,
"நாங்கள் இருவருமே சையிதுகள்தான் அவர் என்னை சையிது அல்ல என்று கூறியதால்தான் பிரச்சனை வந்தது .
முதலில் அவர் எம் பெருமானார் (ஸல் ) அவர்களுக்கு ஸலாம் உரைத்த பொழுது, நபியவர்கள் தங்களின் அடக்க இடத்தில் தொழுது கொண்டிருந்தார்கள். எனவே அவருடைய ஸலாத்திற்கு பதில் வரவில்லை. இதனை அவர் அறியார். நான் அதை அறிந்து அதன் காரணமாக சற்று தாமதித்து, அவர்கள் தொழுது முடித்தபின் அவர்களுக்கு ஸலாம் உரைத்தேன். அவர்கள் பதிலளித்தார்கள். பின்னர் அவரும் ஸலாம் உரைத்தார். அவருக்கும் அவர்கள் பதில் ஸலாம் சொன்னார்கள் .எனவே நாங்கள் இருவருமே சையிதிகள்தாம் என்று நிரூபித்தார்கள்.

மௌலானா அவர்கள் இவ்வுலகை விட்டு மறைந்த அவர்களுடைய முபாரக்கான திருவுடலை சுமந்து கொண்டு அடக்கஸ்தலத்துக்கு சென்று கொண்டிருந்த போது இடை வழியில் " இது யாருடைய ஜனாஸா ? "என்று ஒரு மூதாட்டி வினவ ...
" இது மௌலா புஹாரி நாயகத்துடையது ".. என்று அவருக்கு பதில் சொல்லப்பட்ட போது,
"அவர்கள் வெள்ளிக்கிழமைதானே மறைவார்கள்? இன்று வெள்ளிக்கிழமை இல்லையே ".. என்று அம்மூதாட்டி சொன்ன மறுகணமே அவர்களை சுமந்து சென்ற முபாரக்கான சந்தூக்கில் இருந்து எழுந்து உட்கார்ந்த மௌலா புஹாரி நாயகம் அவர்கள், திரும்ப தனது இல்லத்துக்கே எடுத்துச் செல்லுங்கள்... என்று கட்டளையிட்டதாகவும், அடுத்து வந்த வெள்ளிக்கிழமையில் தான் இவ்வுலகை விட்டுப் பிரிந்தார்கள் என்று ஞானவான்களான பெருமக்கள் சொல்வார்கள்.
இள வயதிலேயே அவர்களில் இருந்து கராமத்துகள் வெளிப்பட ஆரம்பித்தன. காற்றில் காற்றாடி விட்டு சிறுவர்கள் விளையாடும் ஒரு காலத்தில் அவர்களில் இருந்து நிகழ்ந்த கராமத்து வியந்து பேசப்படுகின்ற ஒன்றாகும்.
கேரளாவில் உள்ள அவர்களது பாட்டனாரின் ஸியாரத்துக்காக தாயாருடன் செல்லும் போது சிறு பிள்ளையாக இருந்த மௌலா புஹாரி நாயகம் அவர்கள் அவர்களுடைய காற்றாடியை அவர்களின் நண்பரிடம் கொடுத்து விட்டு சென்றிருந்தார்கள்.
ஸியாரத்தை முடித்து அங்கிருந்த குடும்ப உறவுகளையும் பார்த்து விட்டு திரும்ப ஊருக்குச் வந்த பின்னால் தன் காற்றாடியை பெற்றுக் கொள்வதற்காக நண்பரின் வீட்டை நாடிச் சென்ற போது,
அவர்களது நண்பரின் பெற்றோர் பிள்ளையை இழந்த சோகத்தில் இருந்தார்கள். கண்மணி மௌலா புஹாரி நாயகம் அவர்கள் அவர்களிடத்தில் தன் நண்பரைப் பற்றி விசாரிக்க அவர்கள் சொன்ன பதில் அவர்களின் சோகத்துக்கான காரணத்தை வெளிப்படுத்தியது.

''தங்களே நீங்கள் ஸியாரத்துக்காக சென்றிருந்த நேரத்தில் உங்கள் நண்பர் சுகவீனமுற்று மரணமுற்றார்" என்ற தகவலை அவர்கள் மௌலா புஹாரி நாயகத்திடம் விபரிக்க
உடனே புஹாரி நாயகம் அவர்கள் ''அப்படியா, என் காற்றாடியை அவரிடம் கொடுத்து விட்டுப் போனேன், எங்கு வைத்தார்" என்று வினவ
'' தெரியவில்லை எஜமானரே "என்று அவர்கள் சொல்ல,
உடனே மௌலா புஹாரி நாயகம் அவர்கள் கபுருஸ்தானில் அவர்களுடைய நண்பர் அடக்கம் செய்யப்பட்டிருந்த இடத்துக்குச் சென்று நண்பரை உயிராக்கி வெளியாக்கி,

“என்னுடைய காற்றாடியை வைத்த இடத்தில் இருந்து எடுத்துத் தந்து விட்டு வா... " என்று சொல்ல, அதற்கு அவர்களது நண்பர்,
" காற்றாடியை நான் எடுத்து தந்து விடுகிறேன். திரும்பவும் என்னை கூட்டி வந்து இங்கே விட்டு விடுங்கள்", காரணம் உங்களோடு இருந்து நான் விளையாடி மகிழ்ந்த பரக்கத்தினால், உங்களோடு வைத்த நட்பின் பரக்கத்தினால், அஹ்லுபைத்தாகிய உங்களோடு கொண்ட நெருக்கத்தின் பரக்கத்தினால் அல்லாஹு சுப்ஹானஹுத்தஆலா எனக்கு மேலான சுவனபதியை அருளாக தந்திருக்கிறான். அதை நான் அனுபவித்துக் கொண்டிருக்கிறேன். அதனால் திரும்பவும் என்னை கூட்டி வந்து என் கப்ரிலேயே விட்டு விடுங்கள். இந்த உலகில் நான் இருக்க விரும்பவில்லை " என்று வினயமாக வேண்டிக் கொள்ள,

அதை ஏற்றுக் கொண்ட மௌலா புஹாரி நாயகம் அவர்கள் நண்பரை வீட்டுக்கு கூட்டி வந்தார்கள். மரணித்து பல நாட்களுக்குப் பின் தன் மகனை உயிராக்கி அழைத்து வந்த மௌலா புஹாரி நாயகத்தின் கராமத்து கண்ட நண்பரின் பெற்றோருக்கு

பேராச்சரியம். முழு ஊருமே திரண்டு நிற்க, காற்றாடி வைத்த இடத்திலிருந்து திரும்ப வழங்கப்பட்டது. பின் பாசத்தின் விளைவால் பிரிவில் உழன்ற கவலையால் குழந்தையை தங்களோடு வைத்துக் கொள்ள நண்பரின் பெற்றோர் பிரியப்பட்ட போது,
நண்பர், மௌலா புஹாரி நாயகம் அவர்களிடம் "நீங்கள் எனக்கு கொடுத்த வாக்கை நிறைவேற்ற வேண்டும்"... என்று கோரிக்கையை ஞாபகப்படுத்தவும்,

மௌலா புஹாரி நாயகம் அவர்கள் அப்பெற்றோர்களிடம், "நீங்கள் சந்தோஷமடையுங்கள், காரணம் நீங்கள் சுவனவாதியை பெற்ற பெற்றோர்களாக இருக்கிறீர்கள். நான் அவருக்கு திரும்ப அங்கு கொண்டு போய் விடுவதாக வாக்களித்திருக்கிறேன். அவரை நான் சுவர்க்கத்துக்கு அனுப்பி விட்டு வந்து விடுகிறேன். அல்லாஹுத்தஆலா உங்களுக்கு இன்னொரு பிள்ளையை தருவான், அந்தக் குழந்தையும் சுவர்க்க வாதியே, அவருக்கும் இப்போதே நான் விலாயத்தை வழங்கி விட்டேன், அவர்கள் கஷ்புடையவராக இருப்பார்கள் " என்று அந்தப் பெற்றோருக்கு நல்மாராயம் கூறிய மௌலா புஹாரி நாயகத்துக்கு அந்த நேரத்தில் ஏழு வயதுதான். தன் நண்பருக்கு கொடுத்த வாக்கை காப்பாற்றுமுகமாக அவரை அழைத்துப் போய் சுவர்க்கத்து அனுப்பி விட்டு வந்தார்கள்.
எண்ணிலடங்கா கராமத்துகளை கொண்ட அவர்களின் பெயர் தங்கள் ஸில்ஸிலா தொடரில் இருப்பதையிட்டு பெருமிதம் கொள்ளும் ஹஸ்ரத் மாப்பிள்ளை லெப்பை நாயகம் அவர்கள் 'எங்களுக்கு எந்த விதப்பயமுமில்லை..' என்று விதந்துரைக்கிறார்கள்.
கண்மணி புஹாரி நாயகம் அவர்களின் கராமத்துகள் ஜலாலியத்தும் ஜமாலியத்தும் சார்ந்தே இருந்தது.
கராமத்துக் கடலான அவர்களை தன் ஸில்ஸிலாத் தொடரில் பெற்றுக் கொண்டதற்கா மாப்பிள்ளை லெப்பை நாயகம் அவர்கள் பெருமிதம் கொள்வதில் எத்தனை பெரிய மகத்துவம் இருக்கிறது என்கதையும் அஹ்லுபைத்துகளின் திருக்கரம் பிடித்தவர்களும் அவர்களின் நேசத்தை நெருக்கத்தை பெற்றவர்கள் எவ்வளவு பெரிய பாக்கியவான்கள் என்பதையும் இதிலிருந்து உணரலாம்.
குத்புல் அக்தாப் கௌஸுத் தாரைன் செய்யிது ஷரீப் அஸ்ஸெய்யிது முஹம்மது மௌலா ஜலாலிய்யில் ஹுஸைனிய்யில் புஹாரி ஸாஹிபு கண்ண்ணூரி ரலியல்லாஹு அன்ஹு நாயகத்தின் 235 வது உரூஸ் முபாரக்குடைய தினம் ஷவ்வால் பிறை மூன்றாகும். இன்றுதான் உரூஸ் நாளாகும் .
எங்களூர் மேலப்பாளையத்தில் புகாரி தங்கள் தர்கா ஐந்து இடங்களில் உள்ளது .

## சற்குருவின் சகவாசம் 30

( சூஃபிக்களின் ஆன்ம உறுப்புகளும், துறவிகளின் உடல் சக்கரங்களும் 01 )




ரமண மகரிஷியிடம் பால் ப்ரண்டன் ஒரு கேள்வி கேட்டார்.
"உலகில் நிறைய குரு மார்கள் இருகிறார்கள். இவர்களில் யாரை நான் சிறந்த குருவாக ஏற்பது ?
அதற்கு ரமணர் : "யார் உன்னிடம் இல்லாததை வெளியில் எடுக்கிறாரோ, யார் இருப்பதை உனக்கு கொடுக்கிறாரோ அவரே சிறந்த குரு " என்று கூறினார்.
இல்லாததை எப்படி எடுப்பது?
இருப்பதை எப்படி கொடுப்பது?
எது இல்லாதது?
"நான்" என்ற உணர்வு
எது இருப்பது?
என்னுள் இருக்கும் இறை நிலையை உணர்த்துவது.
ஆனால் நாம் இந்த உடல்தான் ' நான் 'என்றும், இறை நிலையை வெளியில் இருப்பது என்றும் எண்ணி அதைத் தேடிக்கொண்டும் இருக்கிறோம்.

இந்த நிலையை யார் உணர்த்துகிறாரோ
அவரே நம் குரு...
உடலுக்கு முக்கிய உறுப்புகள் இருப்பதுபோல ஆன்மாவுக்கும் முக்கிய உறுப்புகள் இருக்கின்றன. அவைகளை சூஃபியாக்கள் " லதாயிஃப் " என்றழைத்தனர். இவைகளை நுட்பம் மையங்கள் என்று சொல்லலாம் (" லதஃபா "என்பது ஒருமை.லதீஃபா என்றால் நுட்பம் என்று பொருள் )
இந்த ஆன்மாவின் முக்கிய உறுப்புகளால் ஆற்றல் அதிகரித்துக்கொண்டே போகும் கணக்கை வைத்து, சூஃபியாக்கள் இந்த நுட்பம் மையங்களை வகைப்படுத்தினர். இதற்கு அவர்கள் திருக்குர்ஆனின் வசனங்களை ஆதாரமாகக் காட்டுகின்றார்கள் . அவற்றுக்கு "லத்தாயிஃபே சித்தா "என்று பெயர்.
1 ) நஃப்ஸ் , 2) கல்ப் , 3).சிர் , 4) ரூஹ் , 5) ஹஃபி , 6) அஹ்ஃபா இந்த ஆறு உறுப்புகள் ஆன்மாவிற்கு உண்டு என சூஃபியாக்கள் குறிப்பிடுகின்றனர் .
இவைகளை இப்படி வகைப்படுத்தியதில் நக்ஷபந்தியா தரீக்காவுக்கு முக்கிய பங்குண்டு .
ஆனால் இந்து துறவிகள் மனித உடலில் இயங்கும் ஏழு சக்கரங்கள் உண்டு என்கின்றனர் .
சக்கரங்கள் மனிதனின் உடலில் 114 உள்ளது. (திருக்குர்ஆனின் மொத்த அத்தியாயங்கள் 114 ). இருப்பினும் ஏழு சக்கரங்கள் மிக முக்கியமானவை. இந்த சக்கரங்கள் அனைத்தும் நரம்புகளின் மைய பிணைப்பில் அமைய பெற்றிருக்கும். இந்த சக்கரங்களின் பங்களிப்பு இல்லாமல் மனித உடல் சக்தி நிலையை எட்ட முடியாது. ஒவ்வொரு சக்கரத்திற்கும் ஆட்சி கிரகம் உள்ளது. அவையாவன :
7 சக்கரங்கள் : 1) மூலாதாரம் 2) சுவாதிஷ்டானம் 3) மணிபூரகம்
4) அனாகதம் 5) விசுத்தி 6) ஆக்ஞா 7 ) சகஸ்ரஹாரம்
மானிடர் உடலில் ஏழு சக்கரங்கள் உண்டென்றாலும் ஆறு சக்கரங்கள்தான் ஆதார மையங்களாக உள்ளன.
அவை :1) மூலாதாரம், 2) சுவாதிஷ்டானம் 3) மணிப்பூரகம்,
4) அனாகதம், 5). விசுத்தி, 6) ஆக்ஞா என்பன. சகஸ்ரஹாரம் (துரியம்) என்பது ஞானத்தின் வாயில் ஆகும்.
குண்டலினி யோகம் என்பது மூலாதாரத்தில் இருந்து துரியத்திற்கு உயிர் சக்தியை ஏற்றும் பயிற்சி ஆகும்.
சிலர் துரியம் என்ற வாயிலையும் சேர்த்து ஏழுச் சக்கரங்கள் என்பர். ஆனால் ஆறு சக்கரங்கள்தான் ஆதார மையங்கள் என்கின்றனர் .
சூஃபியாக்கள் குறிப்பிடும் ஆன்மா உறுப்புகள் ஆறும் , துறவிகள் குறிப்பிடும் உடலில் உள்ள சக்கரங்கள் ஆறும் ஆக இந்த ஜோடிகளுக்கிடையே உள்ள தொடர்பு பற்றி ஒவ்வொரு பதிவாக இனி தொடர்வோம் .

## சற்குருவின் சகவாசம் 31

(சூஃபிக்களின் லதீஃபாவும், துறவிகளின் உடல் சக்கரங்களும் - 02 )



சூஃபியாக்களின் லதீஃபாவிற்கும் , துறவிகள் உடல் சக்கரங்கள் வழியாக குண்டலினியை எழுப்புவதற்கும் அடிப்படை ஆதாரமாக இருப்பது தியானம்.
"இறைவனோடு பேசுவது என்பது பத்து பகுதிகளைக் கொண்டது அதில் ஒன்பது பகுதிகள் மௌனமாக இருப்பதாகும் " - நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள்
இந்த மௌனம்தான் தியானம் என்கிறார்கள் சூஃபியாக்கள் .

அடக்கப்பட்ட மனம் நமது நண்பன் . அடங்காத மனம் நம் விரோதி . இன்று நாம் சந்திக்கும் பல பிரச்னைகளுக்கு காரணம் நம் மனம்தான். நமக்கு ஏற்படும் நோய்களுக்குக் காரணமும் ஆரோக்கியமற்ற எண்ணங்களைக் கொண்ட மனம்தான். எனவே முள்ளை முள்ளால் எடுப்பதுபோல மனதை மனதால்தான் அடக்கமுடியும். இதற்கு நம் கையில் இருக்கும் ஒரே கருவி தியானம்.

தியானம் என்பது அமைதி, விழிப்புணர்வு, தெளிவு , ஆனந்தம் ஆகியவற்றைக் கொண்டு வரக்கூடிய ஒரு மனநிலை . அல்லது மூளை நிலை . அது நம் கூடவே பிறந்தது. நம்மோடே இருப்பது. ஆனால் நம்மால் உதாசீனப்படுத்தப்படுவது.

தியானத்தின் ரகசியம் என்னவென்றால். நாணயத்துக்கு இரண்டு பக்கங்கள் உண்டல்லவா, அதே போலவே தியானத்திற்கும் இரண்டு பக்கங்கள் உண்டு. தியானம் செய்தால், அமைதியான மனநிலைக்கு போவோம் என்று வைத்துக்கொண்டால் ,அது அப்படியே திருப்பியும் பார்க்கலாம். அதாவது அமைதியான மனநிலைக்கு போவதற்காக வேண்டுமென்ற முயற்சி செய்தால், நாம் தியான நிலைக்குப் போய்விடுவோம் .இதுதான் தியானத்தின் ரகசியம்.

தியானம் உடலில் இருந்து தொடங்குகிறது. ஸ்தூலமாகத் தெரிகின்ற உடலை ஒரு குறிப்பிட்ட நிலைக்குக் கொண்டு வருவதன் மூலமே, உடலுக்கு உள்ளே, உடலுக்கு அப்பால் இருக்கின்ற கண்ணுக்குத் தெரியாத , ஆனால் நிச்சயமாக இருக்கின்ற மனத்தை, குறிப்பிட்ட நிலைக்கு கொண்டு வர முடியும்.

உடல் என்பது கண்ணுக்குத் தெரியும் மனம் என்றும், மனம் என்பது கண்ணுக்குத் தெரியாத உடல் என்றும் மிக அழகாகச் சொல்வார் ஓஷோ.

குறைந்தபட்ச தேவைப்படும் போதெல்லாம் தியான நிலையில் இருக்க முடியுமானால், அந்த மனநிலையை ஏற்படுத்த முடியுமானால் போதும் . நம் வாழ்க்கையை நாம் விரும்பும் விதத்தில் மாற்றி அமைத்துக் கொள்ளலாம் இன்னும் கொஞ்சம் முன்னேறி சொல்லப்போனால் அடுத்தவர் வாழ்க்கையும் மாற்றி அமைக்கலாம்.

" தியானம் செய்யும்போது,சிகரெட் பிடிக்கலாமா ?" என்று சீடன் ஒருவன் குருவிடம் கேட்டான். அதற்கு அந்த குரு அவனை திட்டி அனுமதி மறுத்து விட்டார் .

மற்றொரு சீடன் அதே குருவிடம் போய், " சிகரெட் பிடிக்கும்போது தியானம் செய்யலாமா ?" என்று கேட்டான் அதற்கு அந்த குரு அப்படி கேட்ட அந்தச் சீடனை பாராட்டி, " பேஷாக செய்யலாம் " என்று அனுமதி அளித்தார்.

இந்த சின்ன கதை மிகவும் அற்புதமானது .ஏனெனில் அது ஓர் உண்மையை மிக அழகாகச் சொல்கிறது. தியானம் என்ற ஒரு செயல் நம் அன்றாட நடவடிக்கைக்கு அப்பாற்பட்டதாக இல்லை. அது நம்முடைய எல்லா செயல்பாட்டிலும் இருக்கிறது என்ற உண்மைதான் அது.

அரவிந்தர் சுவாமி நடக்கும்போதே தியானம் செய்வாராம். அதாவது நடப்பதைக் கூட ஒரு தியானமாக அவர் மாற்றிக் கொண்டிருந்தார் என்று அர்த்தம் . இதைத்தான் இறைவனும் தன் வேதத்தில் ..
وَمَا خَلَقْتُ الْجِنَّ وَالْإِنسَ إِلَّا لِيَعْبُدُونِ

இன்னும், ஜின்களையும், மனிதர்களையும் அவர்கள் என்னை வணங்குவதற்காகவேயன்றி நான் படைக்கவில்லை.

(அல்குர்ஆன்: 51:56) எல்லா நடவடிக்கையுமே வணக்கமா ? ஆம் வணக்கமாகத்தான் செய்ய வேண்டும்

மௌலானா ரூமியின் ஸமா நடனம் கூட "சுழன்றாடும் தியானம் " என்கிறார்கள்.

உளவியலின்படி தியானம் மனதை ஒரு முகப்படுத்தி பல சாதனைகளை புரிய உதவுகிறது. உதாரணமாக ஜெனிடிக் இன்ஜினியரிங்கில் ஜீன்களில் உள்ள விவரங்களை, நோய்க்குறிப்பை மாற்றியமைத்து, நோயை நீக்கிக்கொள்ளலாம் . நோய் நிவர்த்தி மூலம் ஆயுள் விவரத்தை மாற்றியமைத்து ஆயுளை அதிகரித்துக் கொள்ளலாம்.

ஆனால் இத்தகைய மாற்றங்கள் நிகழ வேண்டுமென்றால் சில காலங்கள் எடுக்கும். அதுபோல செலவே இல்லாமல் மன எண்ணத்தாலேயே நம் ஜீன்களின் ஆர்.என்.ஏ, டி.என்.ஏ பதிவுகளை மாற்றியமைத்து, நமது சுபாவங்களையும் , ஆயுளையும் , ஆரோக்கியத்தையும் , அற்புத ஆற்றல்களையும் பெறுவதற்கு பெரிதும் உதவுகிறது தியான பயிற்சி என்கிறார்கள் .

தியானம் பகுத்தறிவுக்கு உட்பட்டது அல்ல
அது முற்றிலும் மாறானது
தியானத்தைப் பற்றி விளக்கம் கேட்டால்
யாராலும் சரியாக விளக்க முடியாது
அது பகுத்தறிவுக்கோ, தர்க்கத்திற்கோ, விவாதத்திற்கோ உட்படாதது
அதை அறிந்து கொள்ள ஒரே வழி
அதை நாமே செய்து அனுபவமாக பெற வேண்டிய அற்புத கலை
தியானம் செய்யும் போது வரக்கூடிய 10 முக்கிய தடைகள் என்று குருமார்கள் விவரிக்கிறார்கள் .

1. சிலருக்கு ஆரம்பகாலத்தில் தியானம் செய்தபோது இருந்த ஆர்வம் போகப்போக குறைந்துவிடும். இதற்குக் காரணம் தியானத்தில் உடனடி பலன்களை எதிர்பார்ப்பதால்தான் .

தியானத்தில் உயர்ந்த நிலை அடைய குறைந்தது 6 ஆண்டுகளாவது ஆகும் . "தியானம் செய்வதினால் என்ன பயன் ?" என்னும் அலட்சியம் கூடவே கூடாது . பொறுமையும் நம்பிக்கையும் அவசியம் . தியானத்தில் வெற்றிபெற்ற யோகிகளான விவேகானந்தர் , மௌலானா ரூமி , குணங்குடியார் , தக்கலை பீரப்பா ,ரமணர் , போன்ற ஞானிகளை முன்மாதிரியாக வைத்துக் கொள்ளுங்கள் .

2. ஓசைகள் , குப்பைக்கூளங்கள் , தீயவர்கள் உடனிருக்கும் சூழல்களில் தியானம் செய்ய மனம் வராதுதான் . முடிந்தவரை சூழலை மாற்றிக்கொள்ளுங்கள் . இல்லையெனில் , தியானம் மனதில்தானே நடக்கின்றது என்பதைத் தெளிவாக புரிந்துக்கொண்டு எதைப்பற்றியும் கவலை கொள்ளாமல் தியானம் செய்யுங்கள் .

3. நோய்கள் வந்தால் தியானத்தை நிறுத்துவது கூடாது . எப்படி ஒருவேளை உணவை நாம் எப்போதும் தவிர்க்க நினைப்பதில்லையோ , எந்த ஒரு நிமிடமும் நாம் சுவாசிப்பதை எப்படி நிறுத்துவதில்லையோ அதுபோல தியானமும் நம் அன்றாட வாழ்வில் ஒரு அங்கமாக மாற வேண்டும் .

4. எல்லோரிடமும் சம்பந்தம் இல்லாமல் தியானப்பயிற்சியை பற்றி பேசாதீர்கள் . ஒவ்வொரு குருவும் அவர்களின் சிஷ்யர்களுக்கு சொல்லித்தரும் தியானத்தில் ஒரு சில வேறுபாடுகள் இருக்கும் . அதைப் பற்றி யோசித்துக்கொண்டு நம்முடையது சரியில்லையோ என்று நினைப்பதால் தியானம் செய்ய மனம் வராது .

5. தியானத்தை விட்டு விட்டு செய்யாதீர்கள் . கண்ட நேரத்திலும் , கண்ட இடங்களிலும் அதை செய்யாதீர்கள். ஒரு குறிப்பிட்ட நேரங்களில் தொடர்ந்து ஒரே இடத்தில் ஒரே நேரத்தில் செய்வதை பழக்கமாக்கிக்கொள்ளுங்கள் .

6. நாவை அடக்கவேண்டும் . அதிகம் பேசுவதால் மனம் அலைபாயும். நாவை காக்காவிட்டால் துக்கம் வரும் .அடுத்தவரை குறை கூறுவது, ஒருவர் இல்லாதபோது அவர்களைப் பற்றி தவறாக பேசுவது கூடாது. அடுத்தவருக்கு உபதேசிக்காமல் உங்கள் வேலையை சிறப்பாக நீங்கள் பாருங்கள் .

இரண்டாவதாக கண்ட நேரத்தில் கண்ட உணவை உண்ணக்கூடாது. நாவை அடக்கிவிட்டால் மீதியுள்ள நான்கு புலன்களையும் எளிதாக அடக்கிவிடலாம் .

7. சுவர் இருந்தால்தான் சித்திரம் வரைய முடியும் . அதுபோல சத்துக்கள் நிரம்பிய , ஆரோக்கியமான , எளிதில் ஜீரணமாகக்கூடிய உணவுகளை அளவோடு மற்றும் நேரத்தோடு எடுத்துக்கொள்ளுங்கள் . உடற்பயிற்சியும் அவசியம் தேவை . உடல்பலம் இல்லாமல் ஆத்ம பலம் கிடைக்காது .

8. தியானத்தில் நிறைவு அடைந்துவிட்டது போலவும் , ஞானம் அடைந்துவிட்டது போலவும் , உயர் நிலை அடைந்துவிட்டதாகவும் உங்களுக்குள்ளேயே நீங்களே கற்பனை செய்துகொண்டு பிறரிடம் உங்கள் புகழைப் பாடாதீர்கள் . இப்படி சாதனை நிலையைத் தீர்மானித்துக் கொள்வதால் அவர்களுடைய சாதனை கெடும் .

9. தியானப்பாதையில் செல்லும்போது அவர்களை வழிநடத்தவும் , கஷ்டம் வரும்போது உபதேசித்து தைரியம் கூறுவதற்கும் நிச்சயம் ஒரு சற்குரு தேவை . தியானப் பாதையில் வெற்றி பெற்ற சற்குருவாக அவர் இருக்கவேண்டும் .

10. மறதி , சோம்பல் , அதீத தூக்கம் ஆகிய மூன்று குறைகளும் தியானத்தின் முக்கிய தடைகளாகும்.நோய் , உலகப்பற்று , சந்தேகம் , மனச்சலிப்பு , சோம்பல் , அலட்சியம் ,எழுச்சிகள் , தவறாக புரிந்துக்கொள்ளுதல் ஆகியவை தியானத்திற்கான தடைகள் என்கிறார்கள்

தியானத்தில் ஒவ்வொரு நிலையை அடையும்போதும் இப்படிப் பல தொல்லைகள் வருவது சகஜம் . அதை சரியாகப் புரிந்துக்கொண்டு , சமயோசிதத்தால் அவற்றை உணர்ந்து சற்குருவின் உதவியால் அவற்றைத் தாண்டினால் பேராற்றல் கிடைப்பது நிச்சயம் .

ரஹ்மத் ராஜகுமாரன்.

## சற்குருவின் சகவாசம் 32

(ஆன்ம நுட்பங்களும், சூட்சம உடல் சக்கரங்களும் 03 )



1) லத்தீஃபாயெ நஃப்ஸி

ஆறு நுட்பங்களில் இது முதலாவது. தொப்புளுக்கு சற்று கீழே இருப்பதாக கருதப்படுகிறது. செம்மஞ்சள் நிறத்தோடு தொடர்புடையது இது. தியானம் செய்வதன் மூலம் இதன் ஆற்றல்களைக் கூட்டலாம் என்று கருதப்படுகிறது.

நஃப்ஸ் என்ற சொல்லுக்கு பல பொருள்கள் கொடுக்கப்படுகின்றன. ' சுயம் 'என்றும் , 'மனம்' என்றும் சொல்லலாம். இதன் வேர்ச்சொல் 'மூச்சு' என்பது இருந்து வருகிறது.

சில சூஃபிகள் , 'நஃப்ஸ்' என்பதும் மனம், உணர்ச்சி, கற்பனை, விருப்பம் சார்ந்த எல்லாவற்றையும் குறிப்பதாக கருதுகின்றனர். ஆனாலும் 'கீழான மன இச்சைகள் ' என்ற பொருளிலேயே அது பல சூஃபிகளால் பயன்படுத்தப்படுகிறது

காமம், பேராசை, பொறாமை, குரோதம், அகந்தை போன்ற எதிர்மறை சிந்தனைகள் நஃப்ஸோடு தொடர்பு உடையவை. இந்த நஃப்ஸை சுத்தப்படுத்தி பரிபூரண மாற்றத்திற்கு உருவாக்குவதே சூஃபித்தத்துவத்தின் அடிப்படை நோக்கம் . இதை 'தஸ்கியத்துன் நஃப்ஸ் ° என்றும் 'தத்தஹ்ஹீருல் கல்ப்' என்றும் கூறுகின்றனர்.

ஒரு சூஃபியின் பயணமானது நஃப்ஸை துடைப்பதில் துவங்குகிறது.பல சமயங்களில் அடித்து துவைக்கவும் வேண்டியிருக்கிறது.

ஆரம்பத்தில் " நஃப்ஸ் அம்மாரா " என்ற ஆசை கொண்ட மனசாக இருக்கும் . கடைசியில்"நஃப்ஸ் முத்மஇன்னா " என்னும் இறைவனில் திருப்தியுற்ற ஆன்மாவாக மாறும்.

இதையே உடல் உறுப்புகளில் 7 சக்கரங்கள் என்று போதிக்கிறது இந்திய ஆன்மிகம். மனிதனின் சக்திநிலை பற்றிப் பேசும்போது இந்த ஏழு சக்கரங்கள் குறித்துப் பேசப்படுகிறது. இவை மனிதனின் உடலில் காணப்படுபவை அல்ல. கண்ணுக்குத் தெரியாத சூட்சும உடலில் உள்ளவை.

அதில் முதல் சக்கரம் மூலதாரம் ( மூலம் + ஆதாரம்) . இது ஆண் உடலில் தண்டு வடதின் அடிப்பகுதியில், பிறப்புறுப்புக்கும், மலத்துவாரத்திற்கும் இடையே அமைந்துள்ளது. பெண் உடலில் இது கருப்பையின் கழுத்துப்பகுதியில் அமைந்துள்ளது. எனவே பிறப்புகளுக்கு ஆதாரமாக இருப்பதால் இதனை மூலாதாரம் எனப்படுகிறது.

நமது உடலில் முதுகு தண்டுவடத்திற்கு அருகில் இருக்கும் இந்த சக்கரம்தான், நம் உடலையும் ,மனதையும், உயிரையும் இந்த பூமியுடன் இணைக்கக் கூடிய சக்தியை பெற்றிருக்கிறது. அனைத்து சக்கரங்களிலும் இது மிகவும் முக்கியமான ஒன்றாக விளங்குவதற்கு இதுவே காரணமாகும்.

இந்த பூமியுடன் நம்மை இணைப்பதற்கான தொடர்பு சங்கிலியாக இந்த சக்கரம் மகத்தான பணியினை செய்கிறது. பூமியிலிருந்து ஆற்றலைப் பெற்று உடலுக்கு அனுப்ப கூடியதாக இருக்கிறது. உயிர் வாழ்வதற்கான மகத்தான பணியினை இது செய்வதனால்தான் தியானத்தில் இது முக்கிய பங்கு வகிக்கிறது. இந்த சக்கரத்தின் நிறமானது செந் நிறத்தில் இருக்கிறது.

மனித உடலில் முதுகுத் தண்டுவடத்தின் கடைசி எலும்பு Cocox bone என்ற எலும்பின் நுனி. இது குண்டலினி சக்தியின் இருப்பிடமாக கருதப்படுகிறது.இந்த எலும்பின் நுனி பற்றி குர்ஆன் மற்றும் நபிமொழியில் ...

“இறந்து, உக்கி மண்ணாய் போன அவனுடைய எலும்புகளை நாம் ஒன்று சேர்க்க மாட்டோம் என்று மனிதன் எண்ணிக்கொண்டிருக்கின்றானா?” குர்ஆன் (75:3).

அல்லாஹ்வின் தூதர் அருமை நாயகம் நபிகள் (ஸல்) அவர்கள் சொன்னார்கள்:

“மனிதனின் உடலில் எலும்பு ஒன்று உள்ளது. அதை பூமி ஒருபோதும் புசிக்காது. அதை வைத்தே மீண்டும் மறுமையில் அவன் படைக்கப்படுவான்”.

அப்போது அருகில் இருந்த தோழர்கள் கேட்டனர் 'அது எந்த எலும்பு என்று எங்களுக்கு விளக்கிச் சொல்ல முடியுமா?'
அதற்கு நபிகளார் பதில் அளிக்கும்போது, 'உள்வால் எலும்பின் நுனி' என்றார்கள். (முஸ்லிம்-5662)
ஜெர்மன் விஞ்ஞானி ஹான்ஸ் ஸ்பீமேன் என்பவர் உள்வால் எலும்பு நுனி குறித்து தீவிரமாக ஆராய்ந்தார். அதனை பல ஆயிரம் டிகிரி வெப்பத்தில் எரிக்கவும், வீரியம் மிக்க அமிலங்களின் கலவை கொண்டு அதனை கரைக்கவும் முயற்சி செய்தார். அதில் சிறு மாறுதலைக் கூட அவரால் செய்ய முடியவில்லை. ஆராய்ச்சியின் முடிவாய் திருக்குர்ஆன் வார்த்தைகளை உண்மைபடுத்தி உலகிற்கு அறிவித்தார்.
இந்த எலும்பின் முனையில்தான் குண்டலினி சக்தியின் இருப்பிடமாக கருதப்படுகிறது. குண்டலினியை செந்நிற சுருள் பாம்பாக உருவகப்படுத்தப்படுகிறது.

மூலாதாரத்தில் இருக்கும் குண்டலினி சக்தியை எழுப்புவதன் மூலம் ஆன்மீக சாதனைகளை சித்தர்கள், ஞானிகள் செய்து ஞானமடைந்து இருக்கிறார்கள் .
மூலாதாரத்தில் இருக்கும் குண்டலினி சக்தியை இடதுகலை , பிங்கலை ,சுவாசத்தின் மூலமாக நிறுத்தி சுழிமுனை நாடியின் மூலமாக ஆக்ன சக்கரத்திற்கு கொண்டு செல்வதே ஒரு ஞானியின் சாதனையாக கருதப்படுகிறது. இந்த சுவாசித்தலை திசை மாற்றவும், வழிநடத்தவும் சித்தர்கள் நன்கு அறிந்திருந்தார்கள். இது சித்தர் ஞான சர நூல் நூலில் குறிப்பிடப்பட்டிருக்கிறது.
மூலாதாரத்தில் இருக்கும் குண்டலினி சக்தியை மூச்சுக் கலை மூலம் சூடுபடுத்தி ஆவியாக்கி எல்லா சக்கரங்கள் வழியாக இந்த ஆவி ஊடுருவி இறுதியில் ஏழாம் சக்கரத்தை அடைகிறது .அது சகஸ்ரம் எனப்படும் துரியம் (மூளை) அதாவது ஏழாவது ஆதாரமாகும் . அதையும் கடந்தால், "துரியாதீதம்" எனப்படும் துவாதசாந்தப் பெருவெளியில் இருக்கும் பரம்பொருள் நிலையை அடைகிறது .
இதனால் உடல் காயகல்பமாக்கும் கலையை சித்தர்கள் செய்கிறார்கள். காய கல்பமாக மாற்றப்பட்ட உடல் அமானுஷ்யமான செயல்பாடுகளை சர்வசாதாரணமாக செய்கிறது.

## சற்குருவின் சகவாசம் 33

(ஆன்ம நுட்பங்களும், சூட்சம உடல் சக்கரங்களும் 04)



லத்தீஃபாயெ நஃப்ஸியின் இரண்டாம் பாகம்.
அம்மாரா நஃப்ஸ் - ஆணையிடும் மனம் என்று இதைச் சொல்லலாம். அது நமக்கு ஆணைகள் இடும் .அதன் பேச்சை தான் நாம் கேட்க வேண்டும். எஜமான் மாதிரி செயல்படும் மனம் இது . ஆள வேண்டும் என்ற ஆசையும் நிலைத்திருக்க வேண்டும் வேண்டும் என்ற பேராசையும் கொண்ட மனம் இது.
எந்த பண்புகளெல்லாம் நமக்கு இருக்கக்கூடாது என்று இறைவனும் அவனது இறுதித் தூதரும் எச்சரிக்கை செய்தார்களோ அந்த பண்புகளையெல்லாம் விரும்பும் மனம்.
தன்னை தானே வியந்து கொள்ளும் , தற்பெருமை, திமிர் , பெருமை, மற்றவரை அடிமைப்படுத்த வேண்டும் என்ற எண்ணம் .அடுத்தவரின் தவறுகளை வெளிப்படுத்த விரும்பும் குணம். பொய் சொல்லுதல் , புறம் பேசுதல், பொறாமை, பிறன்மனை நோக்கல், நன்றி கெட்டத்தனம் இது போன்ற நிறைய நிறைய கெட்ட தன்மைகள் கொண்ட நஃப்ஸ் .

ஒரு அரசன் ஊர்வலம் போய்க் கொண்டிருக்கும் போது, ஒரு சூஃபி குறுக்கே நின்றார் ."என்ன விஷயம் ? என்று கேட்டதற்கு தனது பிச்சை பாத்திரத்தை காட்டி "இதில் நிறையும் அளவு போட வேண்டும்" என்று வேண்டுகோள் வைத்தார்.

அரசனும் அதற்கான உத்தரவு கொடுத்தான். போடப்போட பெர்முடா முக்கோணத்தில் கப்பல்கள் எல்லாம் மறைந்து போனது போல எல்லாமே அதனுள்ளே உள்ளே போய் மறைந்து கொண்டிருந்தன.

" நீ என்னுடைய கஜானாவை காலி செய்து கொண்டிருக்கிறாய் என்று அலறினான் அரசன்.

"இப்போது யார் பிச்சைக்காரன் என்று சொல் " என்றார் சூஃபி.

அந்த பிச்சைக்கார பாத்திரம்தான் நப்ஸ் அம்மாரா. அது ஒரு காலமும் நிரம்பவே நிரம்பாது .

"லாயிலாஹ இல்லல்லாஹ் " என்ற மந்திரத்தின் மூலமாக இந்தக் மனத்தைக் குணப்படுத்தலாம் என்று பல ஆன்மிக சற்குருமார்கள் சொல்லுகின்றனர்.

2 வது சக்கரம் : சுவாதிஷ்டானம்

கண்ணுக்குத் தெரியாத சூட்சம உடலில் வயிற்று பகுதியில் இந்த சக்கரம் அமைந்துள்ளது. சரியாக சொன்னால் தொப்புளுக்கு சற்று கீழே மர்ம ஸ்தானத்திற்கு சற்று மேலே அமைந்துள்ளது . இந்தச் சக்கரத்தின் முக்கிய செயல்பாடு இன்பம். இன்பம்.

இந்த சக்கரமானது குருமார்களின் முறையான பயிற்சி மூலம் மனித உணர்வுகளை கட்டுப்படுத்த கூடியதாக இருக்கிறது. நினநீர்கணு என்று அழைக்கப்படும் உடலில் உள் உறுப்பானது உடலின் நோய் எதிர்ப்பு சக்தியை அதிகரிக்கக் கூடியது, உடலில் நோய் இருக்கும் பகுதியை கண்டறிவதிலும் முக்கிய பங்கு வகிக்கக் கூடியது ஆகும்.

அதை இந்த சக்கரத்தின் கட்டுப்பாட்டில் வைத்திருப்பதன் மூலம் உடலுக்கு முக்கிய பங்கு வகிக்கக் கூடிய ஒன்றாக இருக்கிறது. மேலும் பாலியல் உணர்வுகளை தூண்டக்கூடிய சுரப்பியாகவும் இந்த சக்கரம் செயல்படுகிறது. எனவே தான் கல்யாணம் ஆனவர்கள் இந்த சக்கரத்தினை மேலும் தூண்டக் கூடியதாக யோக ஆசனங்கள் மற்றும் தியானங்களில் ஈடுபட வலியுறுத்தப்படுகின்றனர்.

அதே சமயம் இந்த சக்கரத்தினை அதிகம் தூண்டி விடாமலும், கவனத்துடனும் செயல்பட வேண்டியதாக யோக வல்லுனர்கள் கூறுகின்றனர். இந்தச் சக்கரம் நன்கு தூண்டப்பட்டுள்ள மனிதன் உலக வாழ்க்கையில் இன்பங்களை அனுபவிக்கவே நாட்டம் கொள்வான். ஈகோவிற்கும் இந்த சக்திதான் காரணமாக இருக்கிறது. இந்தச் சக்கரம் பள்ளம் கண்ட இடமெல்லாம் பாயும் நீர்த் தத்துவத்துக்கு உதாரணமாகச் சொல்லப்படுகிறது. இந்த சக்கரத்தின் நிறமானது ஆரஞ்ச் நிறத்தில் இருக்கிறது.

மூலாதார சக்கரத்திற்கான மாத்திரம் "லம்", இருப்பது போல ,

சுவாதிஷ்டானம் சக்கரத்திற்கான மந்திரம் "வம்" எனப்படுவதாகும். இது உணர்வுகளோடு தொடர்புடைய ஒரு சக்கரமாகும். இருப்பினும் ஐம்புலன்களை தாண்டி அறிகின்ற சக்தி இதிலிருந்துதான் கிடைக்கிறது என்பதையும் யோகிகள் மறுக்க முடியாது என்கிறார்கள் .

பின் குறிப்பு :

"லத்தீஃபா "என்று வளைதளத்தில் தேடினால், துபாய் நாட்டு இளவரசி லத்தீஃபா கிடைக்கிறது . அரண்மனை விட்டு தப்பியோடி, பின் வீட்டுக்காவலில் இருட்டறையில் வைத்திருப்பதாக தகவல் .

காரணம் இளவரசி லத்தீஃபாயெ நஃப்ஸியால் பாதிக்கப்பட்டு, சுவாதிஷ்டான சக்கரத்தின் கீழான செயல்பாட்டிற்கு அடிமையானதாக தகவல்.மேற்படி தகவல்கள் வலைதளத்தில் நீங்கள் வலை வீசி கண்டிப்பாக தேடிக் கொள்வீர்கள் என்று எனக்குத் தெரியும்.அப்படி தேடச் சொல்லும் காரணம் நஃப்ஸ் அம்மாரா.

## சற்குருவின் சகவாசம் 34

(ஆன்ம நுட்பங்களும், சூட்சம உடல் சக்கரங்களும்)




லத்தீஃபாயெ கல்பி

மார்புக்கு இடது பக்கமாக இருப்பது கல்ப் என்ற நுட்பம். இது சிவப்பு நிறத்தோடு தொடர்புடையது என்றாலும் மஞ்சள் கலந்த சிவப்பு நிறத்தை ( தீ நிறத்தை ) குறிக்கிறது.

கல்ப் என்ற இந்த நிலையில் மனிதன் தனது செயல்களுக்கு தானே சாட்சியாக இருக்கிறான்.

இந்த கல்ப் எனப்படும் நுட்பத்தை எழுப்புவதன் மூலமாக மனிதனுக்கு நெருப்பால் படைக்கப்பட்ட ஜின் வர்க்கத்தினரை பற்றிய அறிவும் கிடைக்கும் என்று நம்பப்படுகிறது. இதற்கு சற்குருவின் வழிகாட்டலின்படிதான் நடத்தப்பட வேண்டும் என்பது அவசியம் .

இதயம் என்று சொல்லப்பட்டாலும் கல்ப் என்பது இரத்தத்தை உடல் முழுக்க அனுப்பும் இதயம் என்ற உறுப்பல்ல என்பது இங்கே மிக முக்கியம் கவனிக்க வேண்டிய விஷயம் .

"கல்ப் " என்பது இதயத்தை குறிக்கும். ( உச்சரிப்பு கொஞ்சம் மாறினால் நாயையும் குறிக்கும் ) சூஃபிகள் கல்பு பற்றியும் பல விதமாக சொல்கின்றனர்.

கல்ப் மூலம் திக்ரு செய்வது பற்றியும் சில குருமார்கள் சொல்லிக் கொடுக்கிறார்கள் .இதனையே பாஸ் அன் பாஸ் என்கிறார்கள் .

புல்லாங்குழலில் காற்றை செலுத்தி அதன் துவாரங்களை மூடி திறந்து சப்த அலைகளை கூட்டி குறைப்பது போன்று நம் மூச்சுக்காற்று, நம் உடல் வழியே சுவாசமாக போய் வரும் போது ஒரு வித சப்த அலையை ஏற்படுத்துகிறது .அதன் சப்தத்தை " ஹூ "என்ற திக்ரால் நிரப்புகிறார்கள் .

14-ம் நூற்றாண்டைச் சேர்ந்த சூஃபி ஞானி பஹாவூத்புதின் புகாரி சொல்கிறார். " உணர்தல் கூடிய சுவாசம் உள்ளவன் உள்ளொளி மிக்கவன்' என்கிறார்.

தாவோக்களின் நூல் ஜூவாஞ்சி (ZHUANGZI) சாதாரண மனிதர்கள் கழுத்தினாலும், ஞானிகள் முழு உடலாலும் சுவாசிக்கின்றனர்'என்று சொல்கிறது.

புத்தர் தன் உடலை எப்படியெல்லாமோ வருத்தியும் கிடைக்காத ஞானம் , கடைசியில் போதி மரத்தடியில் ஒரு விதமான மூச்சுப் பயிற்சியை தொடர்ந்து செய்தார். அதன் பெயர் "விபாசனா" அதன் பிறகே ஞானம் பெற்றார் .

16 வகையான மூச்சுப் பயிற்சியை புத்தர் தனது ‘அனப நாஸ்தி சுத்தா’ உரைக்கோர்வையில் தியான மூச்சு முறைகள் என்று சொல்கிறார். இடையறாது அலைக்கழிக்கும் வாழ்வில் மூச்சு ஒரு நங்கூரமென செயல்பட்டு மனிதனைக் காக்கிறது. கவனம் ஒன்றில் குவிய கவலைகள் மறைய,ஆற்றல் வளர்கிறது.

பரவச நிலையின் இடம் என்றும், இறைக்காதலின் கதவு என்று இதை சூஃபி பெருமகனார்கள் சொல்கின்றனர்.

பெரும்பாலோரைப் பொறுத்தவரை இது நஃப்ஸ் என்னும் மனத்துக்கும் , ' ரூஹ்' என்னும் ஆன்மாவுக்கும் நடக்கும் போராட்டக் களமாக இது இருக்கிறது.

உடல் , மனம் , ஆன்மாவை இணைக்கும் தங்கப் பாலம்தான் 'சுவாசம்' என்கிறார் ஓஷோ

கல்ப் திக்ரை உங்களது சற்குருவிடம்தான் நீங்கள் கேட்டுக் கொள்ள வேண்டும். அது எழுத்தில் விபரிக்க முடியாத ஓர் உணர்வு என்கின்றனர் .

மணிபூரகம் எனும் மூன்றாவது சக்கரம் . இது ஆளுமையை குறிக்கும் சக்கரம். இந்தச் சக்கரத்தின் முக்கிய செயல்பாடு முயற்சி மற்றும் உழைப்பு ஆகும். மணிப்பூரகம் நன்கு தூண்டப்பட்ட மனிதன் கடும் உழைப்பாளியாக வாழ்வில் சிறந்து விளங்குவான்.

இந்தச் சக்கரம் நெருப்புத் தத்துவத்தை பிரதிபலிக்கிறது. (லத்தீஃபா கல்ப் எனப்படும் நுட்பத்தை எழுப்புவதன் மூலமாக மனிதனுக்கு நெருப்பால் படைக்கப்பட்ட ஜின் வர்க்கத்தினரை பற்றிய அறிவும் கிடைக்கும் என்று நம்பப்படுகிறது )

அதனால் இந்த சக்கரத்தை சோலார் ப்ளெக்ஸஸ் என்றும் இதற்கு ஒரு பெயருண்டு.
இந்த சக்கரம் சூட்சம உடலில் தொப்புளுக்கு சற்று மேலே இருக்கிறது. உடலின் மையமாக கூட இதனை கருதலாம். இந்த பகுதியில் இருந்துதான் உடல் இயக்கச் சக்தி உடலெங்கும் விநியோகிக்கப்படுகிறது. கணையம், என்கிற சுரப்பி இதனுடைய கட்டுப்பாட்டில்தான் செயல்படுகிறது.
இரைப்பை,கல்லீரல்,பித்தப்பை,மண்ணீரல் ஆகியவை இதன் கட்டுப்பாட்டில்தான் செயல்படுகின்றன. அட்ரீனல் சுரப்பியையும் கட்டுப்படுத்தும்.
இதன் கிரகம் செவ்வாய். இதன் நிறம் மஞ்சள். இந்த சக்கரத்தை சமநிலைப்படுத்தினால் தன்னம்பிக்கையை அதிகரிக்கும். இந்த சக்கரமானது சுய ஒழுக்கம், மற்றும் வெற்றியினை ஊக்குவிக்கக் கூடிய சக்கரமாக இயங்குகிறது.
மேலும் இது ஒரு நுண்ணுணர்வுகளை உருவாக்குகிறது. அதாவது எதிர்காலத்தில் நமது உடல் மற்றும் உயிருக்கு எதிராக ஏதெனும் பிரச்சனைகள் வர இருக்கின்றன என்ற நுண்ணுணர்வை நமக்கு தரும் ஆற்றலை இந்த சக்கரம் பெற்றிருக்கிறது.
மணிபூரகம் சக்கரத்திற்கு "ரம்" என்பது இதன் மந்திர ஒலி.
.

## சற்குருவின் சகவாசம் 35

(ஆன்ம நுட்பங்களும், சூட்சம உடல் சக்கரங்களும்)



லத்தீஃபாயெ ரூஹி
"ரூஹ்" என்பது மூன்றாவது நுட்பம். மார்பின் மையத்தில் இது இருப்பதாக கருதப்படுகிறது . இது பச்சை நிறத்தோடு தொடர்புடையது . இதை தாண்டினால் மனிதனுக்கு மரணத்திற்குப் பிறகான மறுமையோடு பரிச்சயம் ஏற்படும் என்று நம்பப்படுகிறது.
சில சூஃபிகள் 'ரூஹ்' என்பது இறைவனைக் குறிப்பதாகச் சொல்கின்றனர். அதுவும் ஒரு படைப்பை என்று சிலர் சொல்கின்றனர் .எது எப்படியிருப்பினும் ரூஹ் என்பது சூஃபி களுக்கு மிக முக்கியமான ஒரு விஷயமாகும். இதற்கு முக்கியத்துவம் கொடுத்து 11ஆம் 12ஆம் நூற்றாண்டு சூஃபிகள் மிக அதிகமாகப் பேசியும், எழுதியும் உள்ளனர்..
ரூஹிற்கு அழிவில்லை என்பதை ஒஷோ வேறு ஒரு வித்தியாசமான கோணத்தில் சொல்கிறார் :
"காமத்திலிருந்து பிறந்தது நீங்கள் அல்ல ;
உங்கள் உடல்
இறந்ததிலிருந்து அழியப் போவது நீங்கள் அல்ல ;
உங்கள் உடல் "
உங்களுக்குள்ளே ஒரு பேராற்றல் இருப்பது உண்மை அதுதான் ஆன்மீக ஆற்றல் நம்முடைய பிரதான பிரச்சினையை அதுதான் இதுநாள்வரை தீர்த்து வைத்துக் கொண்டிருக்கிறது ஆமாம் நான் என்ன சூழ்நிலையில் இருந்தாலும் விடாமல் இதயம் துடித்துக் கொண்டே இருக்கிறதல்லவா ? மூச்சை உள்ளேயும் வெளியேயும் போய் வந்து கொண்டு இருக்கிறதல்லவா ?
இதெல்லாம் நம்முடைய கட்டுப்பாட்டுக்குள் இருந்தால் என்னவாகும் கொஞ்சம் நினைத்துப் பாருங்கள் எவ்வளவு பெரிய மகத்தான பணியினை நமக்காக நமக்குள்ளே இருக்கும் பேராற்றல் நாம் இறக்கும் வரை விடாமல் கணநேரம் கூட மறக்காமல் செய்து கொண்டிருக்கிறது என்று கொஞ்சம் நினைத்துப் பாருங்கள் . நன்றியுணர்ச்சியோடு ஒரு குழந்தைக்கு என்ன தேவை என்று குழந்தையை விட தாய்க்கு தானே தெரியும் !.

கேட்காமலே நமக்கான வேலைகளை சரியான நேரத்தில் மிகச் சரியாக செய்து அந்தப் பேராற்றல் நம் பிரச்சனைகள், . அனைத்தையும் தீர்க்க போதுமானது. நாம் கற்றுக்கொள்ள வேண்டியது அதை தூண்டிவிடும் தொழில்நுட்பத்தைத்தான் அந்த பேராற்றலை தூண்டிவிடும் மன நிலையைத்தான் நாம் தியானம் என்கிறோம்.

4 - வது சக்கரம் அனாகதம்

இருதய சக்கரம் என்றழைக்கப்படும் இந்த சக்கரமானது நமது நெஞ்சுப்பகுதியில் இருக்கிறது. காதல், அன்பு, நட்பு, பண்பு, உண்மை போன்ற உணர்வுகளை வெளிப்படுத்தக் கூடிய மற்றவர் தூண்டக்கூடிய சக்கரமாக இது இருக்கிறது.

இந்தச் சக்கரத்தின் முக்கிய குணங்கள் அன்பு மற்றும் படைப்பாற்றல் ஆகும். இது காற்று தத்துவத்தைக் குறிக்கிறது. (அன்பு என்றால் எல்லோரும் ஏன் நெஞ்சைத் தொடுகிறார்கள்? காதலைக் குறிக்க இதயம் குறியீடாக பயன்படுத்தப்படுகிறது? காரணம் இந்த சக்கரத்தில் அனாகதம் சக்கரம் .

தைமஸ் சுரப்பி இதன் கட்டுப்பாட்டில் செயல்படுகிறது. இருதயம், நுரையீரல்கள்,இரத்த ஓட்டம், கல்லீரல்,ஆகியவையும் இதன் ஆதிக்கத்தில் இருக்கின்றன. நமது மனதிற்கு தேவையான ஆற்றலை தரக் கூடியதாக இந்த நான்காவது சக்கரம் செயல்படுகிறது. இதன் நிறம் பச்சையகும்.

## சற்குருவின் சகவாசம் 36

(ஆன்ம நுட்பங்களும், சூட்சம உடல் சக்கரங்களும்)




லத்தீஃபாயெ சிர்ரி

மார்பின் வலது பக்கத்தில் இருக்கிறதென சொல்லப்படுகிறது. இந்த ' சிர் ' எனும் நான்காவது நுட்பம். இது வெள்ளை நிறத்தோடு தொடர்புடையது.

எல்லா மனிதர்களும் விதிகளும் "லவ்ஹுல் மஹ்ஃபூள் " எனும் விதிவசப்பட்டோலையில் எழுதப்பட்டிருப்பதை போல, ஒவ்வொரு மனிதனின் செயல்களையும் இது பதிவு செய்கிறது . (பிரம்மச் சுவடி ஞாபகம் வருகிறதா ? )

இதைத் தூண்டிய பிறகு , மனிதனுக்கு உதாரணங்களின் உலகோடு பரிச்சயம் ஏற்படும் என்று சொல்லப்படுகிறது.

"ஆலமே மிஸால் " எனப்படும் உதாரணங்களில் உலகு' என்பது மேல் உலகங்களின் மாதிரி என்று வைத்துக்கொள்ளலாம்

" சிர் " என்பதற்கு ' ரகசியம்' என்று பொருள் உண்டு. இறைவனின் திருப்பெயர்களை உச்சரிப்பது , அவற்றை தியானம் செய்வதன் மூலம் தூண்ட முடியும் என்று சொல்கிறார்கள்.

இதை 'திக்ர் ' என்றும் சொல்கின்றனர் . இந்த உலக சிந்தனைகளில் இருந்து மனதே காலிசெய்து வெறுமையாக்குவது, பின் அதை இறைசிந்தனை கொண்டு நிரப்புவது, இந்த நுட்பத்தை தூண்டிவிடும் என்றும் சொல்லப்படுகிறது.

5 சக்கரம் விசுத்தி :

ஆன்ம நுட்ப மையத்தில் மார்பின் வலது பக்கம் என்று சொல்லப்படும் இது , சூட்சம உடலில் தொண்டைக்குள் இச் சக்கரம் இருப்பதாக சொல்லப்படுகிறது .

ஐந்தாவது சக்கரமான இந்த சக்கரம் மனிதனின் சூட்சம உடலில் தொண்டைப் பகுதியில் அமைந்திருக்கிறது. உங்களைப் பற்றி மற்றவர்கள் அறிந்து கொள்ள உதவும் வகையிலான பயன்பாடு இந்த சக்கரம் செய்கிறது. அதாவது உங்களது பேச்சுதிறனை கட்டுப்படுத்தக் கூடியதாக இருக்கிறது.

தைராய்டு சுரப்பி இதன் கட்டுப்பாட்டில் இருக்கிறது. குரல்வளை, மூச்சுக்குழல், உணவுக்குழல், கைகள் இதன் கட்டுப்பாட்டில் செயல்படுகின்றன. இதன் நிறம் நீல நிறமாகும்.

சக்கரம் எல்லையற்ற மகிழ்ச்சியையும் சுதந்திரத்தையும் கொடுக்க வல்லது.விசுத்தி சக்கரத்தோடு தொடர்புடைய புலன் கேட்டல் என்றாலும் கேட்டல் என்பது பேசுதல் என்பதோடும் இணைந்ததுதான்.

பிறர் உங்களிடம் பேசுவதைக் கனிவான கவனத்துடன் கேட்டலும், பிறரிடம் பேசுவதில் நேர்மையும், வெளிப்படைத்தன்மையும் கொண்டிருப்பதன் மூலமும்தான் உங்களுக்கும் சமூகத்திற்கும் நீங்கள் உண்மையானவராக இருக்க முடியும்.மிகத் தூய்மையான மனநிலையை அடைய முடியும். விசுத்தி சக்கரம் இதை சாத்தியப்படுத்துகிறது.

பிறரைத் திருப்திப்படுத்தும் நோக்கில், அவர்களை வருத்தப்படுத்தக் கூடாது என்பதற்காக அவர்கள் விரும்பியதைக் கூறுவதன் மூலம் ஒருவர் தன் கருத்துக்களை வெளியிடத் தவறும்போது, அவர் தனக்கும் பிறருக்கும் நேர்மையாக இல்லாதது மட்டுமல்லாமல் தன் சுயநம்பிக்கையையும் தன்மதிப்பையும் இழந்து போக நேரிடும். இது விசுத்தி சக்கரத்தின் இயக்கத்தைப் பாதிக்கும்.

விசுத்தி சக்கரம் உங்கள் உணர்வுகளை வெளிப்படுத்தும் மையம். உங்களை, உங்களின் படைப்புத் திறனை, உங்கள் வாழ்வின் நோக்கத்தை நீங்கள் உணர்ந்து அங்கீகரிக்க, உங்களின் இலக்கை அடையவும் உங்களின் விசுத்தி சக்கரம் சீராக இயங்க வேண்டியது அவசியம்.

வாய், நாக்கு, பற்கள், ஈறு, குரல்வளை, கேட்கும் திறன், தாடை, கழுத்து, தோள், தைராய்டு ஆகியவற்றை விசுத்தி சக்கரம் நிர்வகிக்கிறது.

மனித உடலில் நோய் எதிர்ப்பு சக்தியை அதிகப்படுத்தும் சக்கரம் என்றால் அது விசுத்தி சக்கரம் தான். விசுத்தி சக்கரம் என்பது தொண்டைப் பகுதியைக் குறிக்கின்றது.

இந்திய புராணத்தின்படி பாற்கடலைக் கடைந்த போது, வந்த விஷத்தை விழுங்கி, தன் தொண்டையில் நிறுத்திய சிவபெருமானின் கதை அறிந்த ஒன்றுதான்.

சிவபெருமான் தன் தொண்டைக்குழியில் நிறுத்திய விஷமானது, சிவபெருமானை தாக்கவில்லை. காரணம் விசுத்தி சக்கரத்திற்கு, விஷத்தை முறிக்கும் தன்மை உள்ளது என்பதால் தான்.

இதன்படி எந்த ஒரு விஷத்தன்மை கொண்ட, கண்ணுக்குத் தெரியாத கிருமியாக இருந்தாலும் அதை அழிக்கக் கூடிய சக்தியானது, விசுத்தி சக்ரா என்று சொல்லப்படும். தொண்டைக்குழிக்குள் உள்ளது.

காய்ச்சல், சளி போன்ற பிரச்சனைகள் வருவதற்கு முன்பாகவும், முதலில் நமக்கு பாதிப்பது தொண்டை பகுதிதான். தொண்டை கரகரப்பு வந்துவிட்டாலே, நம் உடலுக்கு ஏதோ ஒரு பிரச்சினை வரப்போகிறது என்று தான் அர்த்தம். நம்மில் பெரும்பாலானோர் இதை உணர்ந்திருப்போம். அதாவது உடம்பில் இருக்கும் விசுத்தி சக்கரம் முறையாக இயங்கவில்லை என்றால் நம்மை நோய்தொற்று விரைவாகத் தாக்கும்.

இந்த விசுத்தி சக்கருவை எப்படி சீராக இயங்க வைப்பது? என்பதற்கான பயிற்சியை இப்போது பார்ப்போம்.

நீங்கள் முதலில் வசதியான ஒரு இருக்கையில் அமர்ந்து கொள்ளுங்கள். அதன் பின்பு உங்களது இரு உள்ளங்கைகளையும் ஒரு பத்து முறை நன்றாக தேய்க்க வேண்டும். தேய்க்கும்போது சூடு வரும் அல்லவா? அந்த அளவிற்கு உள்ளங்கை சூடுடானவுடன், உங்களது கழுத்தின் முன்பக்கம் ஒரு கையையும், கழுத்தின் பின்பக்கம் ஒரு கையையும் வைத்துக் கொள்ளுங்கள்.

உங்கள் உள்ளங்கையில் இருக்கும் சூடானது, கழுத்து பகுதியை சூழ்ந்திருக்க வேண்டும். அந்த சமயம் உங்கள் கவனம் முழுவதையும் உங்கள் தொண்டைக்குழியில் கொண்டு வந்து நிறுத்த வேண்டும். ஒரு நிமிடம் இப்படி உங்களது உள்ளங்கைகளை கழுத்துப்பகுதியில் வைத்திருந்தால் போதும். உங்கள் கையில் இருக்கக்கூடிய காந்த சக்தியானது, தொண்டைக் குழியை சீராக இயங்க வைக்கும்.

இரண்டாவதாக உங்களது கழுத்து பகுதியை லேசாக மேலே பார்த்தவாறு உயர்த்தி(கழுத்து வலிக்காமல் இருக்க தலையணைகளை கழுத்துக்குப் பின்னால் வைத்துக் கொள்ளலாம்), வாயிலிருந்து ஐந்து முறை மூச்சை உள்வாங்கி வெளியிடுங்கள். சாதாரணமான சுவாசம் தான். ஆனால் வாய்ப்பகுதியில் மூச்சைவிடப் போகிறீர்கள். இதன் மூலம் உங்களின் விசுத்தி சக்கரம் என்று சொல்லப்படும் தொண்டை குழியானது சீராக இயங்கி நோய் எதிர்ப்பு சக்தியை அதிகரிக்கும்.

மேற்குறிப்பிட்டுள்ள இந்த இரண்டு பயிற்சியையும் இரவு தூங்கச் செல்வதற்கு அரை மணி நேரத்திற்கு முன்பு செய்வது நல்ல பலனைத் தரும். நம்முடைய உடம்பில் விசுத்தி சக்கரம் சீராக இயக்கம் அடைந்துவிட்டால் உடல் ஆரோக்கியம் சீராகும் என்பது குறிப்பிடத்தக்கது.

## சற்குருவின் சகவாசம் 37

(ஆன்ம நுட்பங்களும், சூட்சம உடல் சக்கரங்களும்)




லத்தீஃபாயெ ஹஃபி

புருவங்களுக்கு மத்தியில் இது இருக்கிறது. நீல நிறத்தோடு தொடர்புடையது. எழுதப்பட்ட புத்தகத்திற்கு ஒப்பானது.

இது 'ஹஃபி ' என்றால், 'உள்ளார்ந்த நுட்பம் ' 'மர்மமானது ' என்று பொருள். இதற்கு மேல் எதுவும் சொல்வதற்கில்லை.

ஆக்ஞா சக்கரம்

இதை நெற்றிக்கண் சக்கரம் என்றும் சொல்வார்கள். இரண்டு புருவங்களுக்கு மத்தியில் சற்று மேலாக அமைந்திருக்கிறது. பிட்யூட்டரி சுரப்பி இதன் கட்டுப்பாட்டில் இருக்கிறது. மூளை, கண்கள், மூக்கு, காதுகள் ஆகிய உடல் உறுப்புகள் இதன் கட்டுப்பாட்டில் இருக்கின்றன. உங்களை பற்றியு உலகத்தை பற்றியும் அறிந்துக் கொள்வதற்கு இந்த சக்கரம் பயன்படுகிறது. இந்த சக்கரத்தின் நிறமானது இண்டிகோ

(கரு நீல நிற ) நிறத்தினை கொண்டிருக்கிறது.

தொலை உணர்தல், தொலை அறிதல் போன்ற சக்திகள் இதன் மூலமாகத்தான் கிடைக்கின்றன. அறிவு சங்கல்பம், மனவலிமை, ஆகியவற்றின் இருப்பிடம் இது. இதன் மூலம்தான் விஷயங்களை உருவகப்படுத்திப் பார்க்க முடிகிறது. இந்தக் கண் திறக்கின்ற போது ஆன்மீகக் கண் திறப்பதாக ஞானிகள் சொல்கிறார்கள். தண்டுவடம், மூளையின் கீழ்பகுதி, கண்கள், மூக்கு, காதுகள் ஆகிய அவயங்கள் இதன் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டவை.

மனித மனத்தை அகங்காரம், மமகாரம் எனப் பிரிக்கலாம். இவை இட, பிங்கல நாடியின் மேற்பகுதியில் அமைந்துள்ளது. இவை ஆக்ஞா சக்கரத்தில் ஒன்றுக்கொன்று குறுக்காகவும், நெடுக்காகவும் மாறி செல்லும்.

இறந்த கால நினைவுகள், கட்டுப்பாடுகள், உணர்வுகள் ஆகியவை தேக்கமாக வலது மூளையில் இருக்கிறது. ( எதிர்பக்கத்தில் குறுக்கில் சென்று அடையும்) எதிர்காலத்தைப் பற்றிய சிந்தனைகள், திட்டமிடுதல், செயல்பாடுகள், ஆகியவை தேக்கமாக மூளையின் மறுபக்கத்தில் (இடதுபுறம்) அமைந்துள்ளது. இவற்றை வெப்பமான வாயுக்களுடன் ஒப்பிடலாம்.

மிக அதிகமாக நாம் செயல்படும் போது, சிந்திக்கும் போது, வலது நாடி செயல்படுகிறது. இது உண்மையில் வாயுவைப் பயன்படுத்தும்போது இயற்கையிலுள்ள சமநிலை பாதிக்கப்பட்டு மற்ற நாடியும் சக்தியை இழக்கின்றன. இது மூளையில் பனி மண்டலத்தில் ஏற்படுத்தி ஆத்மா ஞானம் பெறுவதில் தடையை ஏற்படுத்துகிறது.

ஆன்ம விழிப்புணர்வு பெறும் முன்னர் நாம் பல்வேறு நிலையில் சமநிலை அற்றவர்களாக இருப்போம். அகங்காரம், மமகாரம் ஆகியவற்றின் சக்தி இழப்பைப் பொறுத்து நமது நாடிகளில் சமநிலை தடைப்பட்டு சுழுமுனை வழியாக ஆன்ம முன்னேற்றம் ஏற்படுவதில்லை. குண்டலினி இந்த பனி மூட்டங்களின் பிணைப்பை ஊடுருவி சகஸ்ராராத்தில் பிரம்மா சைத்த்தன்யத்துடன் இணைய முடிவதில்லை.

இது ஏனெனில் "பிரான்டிநெல் போன் " எனும் முன் மண்டை ஓடுகளின் கடினத்தன்மையால் தான் எனலாம். நாம் பிறக்கும் போது முன் மூளைகளுக்கிடைப்பட்ட பகுதி பிறக்கும் போது மென்மையான திசுக்களால் மூடப்பட்டிருக்கும். குழந்தை வளர வளர திசுக்கள் கடினமாக்கப்பட்டு விடும் பாதையும் தடைபடுகிறது. இதனால் அகங்காரம் தேக்கமடைந்து " நான்" என்பது வலுப் பெறுகிறது.

நாம் நமது அகங்காரத்தை அழிக்க வேண்டும் என்பதல்ல. அகங்காரம் நமது ஆன்ம வளர்ச்சிக்குத் தேவைதான். இவை இல்லாமல் நாம் செயல்பட முடியாது. மமகாரத்துடன் சமநிலை அடைய செய்து இடைவெளியை ஏற்படுத்திய பின்பு தான் குண்டலினி மேலெழுந்து சகஸ்ராரத்திற்கு வந்து சேரும். இது மிகவும் கடினமானதுதான்.

இது ஞானம், தெளிவு போன்றவற்றுக்கான சக்கரம். விசுக்தியைப் பொறுத்தவரை, அந்தச் சக்கரம் தாண்டப்பட்டால் ஆற்றலோடு திகழ முடியுமே தவிர, சமூகத்தில் நிறைய எதிர்ப்புகள் இருக்கும். சமூக வாழ்க்கையோடு உடன்பட இயலாது. மக்களிடமிருந்து

விலகி வாழ்கிற நிலையிலேயே இருப்பார்கள். ஆனால் ஆக்ஞா முழுவதுமாகத் தூண்டப்பட்டவர்கள் சமூகத்தில் அங்கீகாரத்தைப் பெற்ற ஞானவான்களாகத் திகழ்வார்கள்.

## சற்குருவின் சகவாசம் 38

லத்தீஃபாயெ அஹ்ஃபா




' அஹ்ஃபா ' என்றால் "மிக மர்மமானது" " மிக நுட்பமானது" என்று பொருள். தலைக்கு மேலே இருக்கிறது வயலட் நிற தொடர்புடையது. இறை ஒருமையைக் குறிக்கும் புள்ளி (நுக்தா - யெ_ வாஹிதா) என்று இது சொல்லப்படுகிறது.

இது ஒவ்வொரு மனிதனுக்கும் இருக்கிறது. இறையருள் வெளிப்படையாக கொடுக்கப்படும் போது இது உணரப்படுகிறது. பிரபஞ்சத்தைப் பற்றிய ரகசிய அறிவு இதனிடம் இருக்கிறது.

இந்த புள்ளியினுள் நுழைவதன் மூலம் பிரபஞ்ச அறிவுக்குள்ளும் அதனை இயக்கிக் கொண்டிருக்கும் விதிகளுக்குள்ளும் மனிதன் நுழைகிறான்." உனக்காகவே நான் மண்ணிலும் விண்ணிலும் உள்ளவற்றை படைத்தோம் " என்று இறைவசனத்தை மனிதன் இங்கே புரிந்து கொள்கிறான்.

அஹ்ஃபாவும் , ஹஃபாவும் சேர்ந்து பரமாத்மாவை ( ரூஹெ ஆஸம்) உருவாக்குகிறது. இது ஒரு ஒளி வட்டம் ஆகும். அதில் பார்க்கப்பட்ட மற்றும் பார்க்கப்படாத அனைத்தையும் பற்றிய அறிவு இருக்கிறது என்று சொல்லப்படுகிறது .

சக்கரங்கள் என்று சொல்லப்படும் இந்திய மரபுச் சிந்தனையை தவிர்க்க முடியாமல் நினைவுபடுத்துகிறது இந்த சூஃபி உளவியல். எனவே இரண்டுக்கும் உள்ள தொடர்பு பற்றி எழுத ஆராய்ந்தோம்.

7 வது சக்கரம் சகஸ்ரஹாரம்

உச்சந்தலையில், பிறந்த குழந்தைக்கு மட்டும் தலையில் மென்மையாக இருக்கும் இடத்தில் இருக்கிறது இந்த சக்கரம், பரவச நிலையைத் தரத்தக்கது. எப்போதும் ஒருவிதமான பரவச நிலையிலேயே இருக்கிற தன்மை, சஹஸ்ரஹாரா முழுமையாகத் தூண்டப்பட்டவர்களுக்கு உரியது.

இதற்கு தாமரைச் சக்கரம் என்ற பெயரும் உண்டு. இது உச்சந்தலை பகுதியில் அமைந்திருக்கிறது. ஏழாவது சக்கரமான இது இருப்பதிலேயே மிக வலிமையான சக்கரமாகும் . சாதாரண மனிதர்களால் கட்டுப்படுத்தக் கூடியதாக இந்த சக்கரம் இருப்பதில்லை. உச்சந்தலையில் இருக்கும் இந்த சக்கரமானது நம் உடலின் ஆற்றலை வானத்திலிருந்து பெற்றுத் தரக்கூடியதாகவும் இருக்கிறது. இச் சக்கரத்திற்கும் வெட்ட வெளிக்கும் இடையே நெருங்கிய தொடர்பு உண்டு.

புத்தர் இந்த சக்கரத்தினை கட்டுப்படுத்தி, "நிர்வாணம் " என்ற மனமற்ற பெரிய நிலையை அடைந்தார். இந்தச்சக்கரத்தின் மூலம்தான் ஒருவர் ஞானத்தைப் பெறமுடியும். பிரபஞ்சத்துக்கும்,நமக்கும் உள்ள தொடர்பினை தெளிவு படுத்துகின்ற சக்கரம் இது. பீனியல் சுரப்பி இதன் கட்டுப்பாட்டில் இருக்கிறது. மூளையின் மேற்பகுதி இதன் ஆதிக்கத்திற்கு உட்பட்டது .

(இத்துடன் சற்குருவின் சகவாசம் தொடர் நிறைவு பெறுகிறது)

## சூஃபியின் வழித்தடம் 1



(ஃபனாவிற்கும்,' பகா 'விற்கும் இடையுள்ள பாலம்)

உயிர் வாழ்க்கை இணையற்றது, தனித்தன்மை கொண்டது. அது ஆழம் காண முடியாத கடல் போன்றது.

அதன் மேற்பரப்பில் எண்ணற்ற அலைகள் மேலெழுகின்றன.

கடல் ஒன்றுதான் அலைகளுக்கு கணக்கில்லை. உயிர் வாழ்க்கையும் கடல்போல் மிகப்பெரியது புரிந்து கொள்ள முடியாதது .அந்தக் கடலின் மேற்பரப்பில் ஒரு சிற்றலையாய் நீங்கள் மேலெழுந்தீர்கள்.

உயிர் வாழ்க்கை இப்படித்தான் தொடர்கிறது. ஒரு துளியிருந்து நீங்கள் பிறந்தீர்கள். உங்கள் விரும்பாத விருப்பங்களின் விளைவாய் ஒருநாள் நீங்கள் பிறந்து விட்டீர்கள்.மறுநாள் அந்த கடலில் காணாமல் போனீர்கள் அதன்பிறகு கவனிக்கப்படவில்லை. அறியப்படவில்லை.

வாழ்க்கையின் அவகாசம் மிகவும் குறுகியது.

ஆன்மாவின் பயணம் தொடங்குகிறது.அந்த நிலைபேறுடைய பயணத்தை மேற்கொள்கிறார்கள் பாக்கியவான்கள்.

இறைவனின் திருவருளால், கடலின் மேற்பரப்பில் தோன்றி மறையும் சிற்றலையாகி விட மாட்டீர்கள். கடலில் சிறுதுளி அடங்கி ஒன்றாகுவதை " கலைத்தல் " (முடிவுக்குக் கொண்டுவருவதல்) என்று சூஃபிகள் கூறுவர் .

அவர்கள் இறை தியானத்தில் மூழ்கி தன்னையே மறக்கும் நிலைக்கு ' ஃபனா ' என்கிற சொல்லைப் பயன்படுத்துவர். ஃபனா என்றால் அழித்துக் கொள்ளுதல். இந்த அழித்துக்கொள்ளலும்,கலைத்தலும் வெவ்வேறல்ல. அதன் அடுத்த நிலையாகவே 'பகா 'வைச் சொல்வார்கள். இது, ஒருவன், தான் என்கிற உணர்வை அழித்துக் கொண்டு இறைவனிடம் தரிபடும் நிலையை குறிப்பது .ஆன்மீகப் படித்தரத்தில் "பகா"வே மிகவும் உச்சமான நிலையாகும் .

சூஃபி ஞானம் என்பது 'ஃபனா' விற்கும் 'பகா' விற்கு இடையிலான பாலம் ஆகும்.
وَلَا تَطْرُدِ الَّذِيْنَ يَدْعُوْنَ رَبَّهُمْ بِالْغَدٰوةِ وَالْعَشِىِّ يُرِيْدُوْنَ وَجْهَهٗ‌ مَا عَلَيْكَ مِنْ حِسَابِهِمْ مِّنْ شَىْءٍ وَّمَا مِنْ حِسَابِكَ عَلَيْهِمْ مِّنْ شَىْءٍ فَتَطْرُدَهُمْ فَتَكُوْنَ مِنَ الظّٰلِمِيْنَ

(நபியே!) தங்கள் இறைவனின் திருப்பொருத்தத்தை விரும்பி காலையிலும் மாலையிலும் பிரார்த்தித்துக் கொண்டிருப்பவர்களை நீங்கள் விரட்டி விடாதீர்கள்! அவர்களுடைய கணக்கிலிருந்து எதுவும் உங்களுடைய பொறுப்பாகாது. உங்களுடைய கணக்கிலிருந்து எதுவும் அவர்களுடைய பொறுப்பாகாது. ஆகவே, நீங்கள் அவர்களை விரட்டினால் அநியாயக்காரர்களில் நீங்களும் ஒருவராகி விடுவீர்கள்! (அல்குர்ஆன் : 6:52)

உயிர் வாழ்வதன் உண்மையான நோக்கமே வாழ்க்கைக்கு ஒரு புதிய அர்த்தத்தைக் கொடுப்பதுதான். ஆன்மா, தான் விரும்பியதை அடைவதன் மூலம் அது சாத்தியமாகிறது.

எல்லோருமே ஒருநாள் இந்த அகன்ற கடல் பரப்பில் காணாமல் போகிறவர்கள் தாம் .

பயணத்தை தொடங்குங்கள்.

சந்தர்ப்ப, சூழ்நிலைகள் உங்களுக்கு சாதகமாகவே இருக்கின்றன. ஒரு இணக்கத்தை, அமைதியை நீங்கள் உணர்வீர்கள். உங்கள் பயணத்திற்கு இடையூறாக, நம்பிக்கையைக் கெடுக்கக் கூடியதாய் எதுவும் இனி இருக்காது.

புயல் கரையைக் கடந்து விட்டது. இனி ஒவ்வொரு கணமும் அமைதி நிறைந்ததாகவே இருக்கும்.

## சூஃபியின் வழித்தடம் 2

(உங்கள் பாதையும், உங்கள் பயணமும்)



தற்போது நீங்கள் வாழ்கிற உலகில் ஒவ்வொன்றும் ஒரு நிறைவு பகுதியையும், ஒரு குறிக்கோளையும் கொண்டிருக்கும் என்பதை கவனித்தீர்களா ?

நிறைவுப் பகுதி என்பது எல்லை, அல்லது பக்குவமடைகிற நிலை.

குறிக்கோள் என்பது அது சுயேச்சையாய் இயங்கும் நிலை அல்லது சுதந்திரம்.

எடுத்துக்காட்டாக ஒரு பழம் கனியும் வரை மரத்தில் இருக்கிறது. **'பழுத்தல்'** என்பது பக்குவம். பழுத்த பழம் மரத்தில் தங்காது விழுந்துவிடும். ' விழுதல் ' அதன் ***சுதந்திரம் .*** தன்னுடைய பூர்வத்துக்கு திரும்புவதே குறிக்கோள். பூர்வத்துக்குத் திரும்புவதுடன் நோக்கம் பூர்த்தியாகி விடுகிறது.

விவசாயி விதையை நிலத்தில் விதைத்துவிட்டு, கவனமாய் பார்த்துக் கொள்கிறான். அது வளரத் தொடங்குகிறது. அந்தச் செயல் முறையில் பல நிலைகளுக்கு அது உட்படுகிறது. பல கட்டங்களை அது அனுபவிக்கிறது. படிப்படியாக அது பூவாகி, காயாகி, கனியாகி மீண்டும் விதை ஆகிவிடுகிறது .
விதையாகி மறுபடியும் அதன் செயல்முறை தொடர்கிறது .ஆக தன்னுடைய பூர்வ நிலையை அது அடைகிறது . அது ஒரு வளைவடிவத்தில் (Circle) நிகழ்கிறது, அந்த வட்ட முழுமைப் பெறுகிறது. அந்த வட்டம் முழுமை அடைவதே அதன் சுதந்திரம்.

ஒரு கூழாங்கல்லை காணும்போதோ , ஒரு மழைத்துளி விழுவதைக் கவனிக்கும்போதோ ,ஒரு மலையின் மீது உலாவச் செல்லும்போதோ, ஓர் ஆற்றில் குளிக்கும் போதோ அவற்றில் ஒவ்வொன்றும் பூமியில் நீங்கள் உணரக்கூடும் ஒரு நிறைவு பகுதியையும், ஒரு குறிக்கோளையும் கொண்டிருக்கும் என்பதை கவனித்தீர்களா ?

ஒரு மழைத்துளி திரும்பத் திரும்ப சுற்றுப் பயணம் செய்துள்ள நீரின் ஒரு பகுதியே இந்தக் கணத்தில்தான் இது மழை துளியாக இருக்கிறது.
இந்த மழைத்துளி கடலின் ஒரு பாகமாக இருந்தது. மலையில் தொடங்கும் ஓர் ஆற்றில் அது பயணம் செய்திருக்கிறது. பூமியின் மிகுந்த ஆழத்தில் அது தங்கியதும் உண்டு.
இந்த மழைத்துளியின் பயணத்தில் நிறைவு பகுதியையும், குறிக்கோளையும் உங்களால் அவதானிக்க முடிகிறதா ?

கூழாங்கல்லும் தொலைவிடங்களுக்குச் சென்று திரிந்திருக்கிறது. நீண்ட காலத்துக்கு முன் அது பூமியின் உள்ளே மிக்க ஆழத்தில் உறைந்த கடுமையான சூட்டினால் உருகி, மேலே பொங்கி எழுந்த பாறைக் குழம்பில் ஒரு துளியாக இருந்தது.
அந்தத் துளி குளிர்ந்து இறுகி ஒரு மலையின் பாகமாக மாறிற்று. கடும் வேகத்தில் பாய்ந்து வந்த ஒரு மறையாறு அதை உருட்டித் தள்ளி வந்து இருக்க வேண்டும் !
அல்லது ஒரு பனிக்கட்டி ஆறு தன்னுடைய மெதுவான பெயர்ச்சியில் அதை பல்லாயிரம் மைல் தூரம் தள்ளிக் கொண்டு வந்து தான் உருகிய இடத்தில் போட்டுவிட்டிருக்க வேண்டும். அது பல இடங்களுக்கு பயணம் செய்திருக்கிறது. பல பொருட்களின் பகுதியாக அது இருந்திருக்கிறது

இந்த கூழாங்கல்லின் பயணத்தில் நிறைவு பகுதியையும், குறிக்கோளையும் உங்களால் அவதானிக்க முடிகிறதா ?

இவைகள் மாதிரியே **' தஸவ்வும் '** என்கிற உள்ளுணர்வு பாதையில் **( Mystical path )** ஆன்மா பயணிக்கிறது . அது பிரிந்திருக்கும் நிலையில் இருந்து, இணைந்து கொள்வதற்கான பயணம். அந்த வீடு நோக்கிச் செல்லும் பயணத்தில் நம்முடைய உள்ளார்ந்த பண்பை (சாரம்) நாம் தேடி கண்டுபிடிக்கிறோம்.

" உன் பாதை நெடுகிலும் - கூட்ட நெரிசலில் இருந்தாலும், தனிமையை உணர கூடியவனாயிரு. நீ புறத்தே எந்தச் செயலில் ஈடுபட்டிருந்தாலும் அகத்தே எல்லாவற்றிலுமிருந்து விடுபட்டவனாயிரு. எந்த ஒன்றுடனும் உன்னை அடையாளப்படுத்திக் கொள்ளாமல் இருப்பதற்குக் கற்றுக் கொள்" - மன்சூர் ஹல்லாஜ்.

ஜலாலுத்தீன் ரூமி : '' அவர் உனக்கு முன்பாக உள்ள எல்லா வழிகளையும் அடைக்கிறார் என்றால் , யாரும் அறிந்திராத ஒரு ரகசிய வழியை உனக்கு நிச்சயம் காட்டுவிப்பார் "

"உன்னுடைய கடைசி மூச்சு உள்ளவரை

இந்தப் பாதையில் கடுமையாக முயன்று முன்னேறு

அந்தக் கடைசிமூச்சு உனக்கான நற்பேறுகளை அவனிடமிருந்து கொண்டுவரக் கூடும்" – ரூமி

## **சூஃபியின் வழித்தடம் 3**



மனம் என்பது மூளையிலோ அல்லது இதயத்திலோ உள்ள வஸ்து அல்ல. இந்த உலகம், அதன் காலம், இவற்றினுள் வாழும் மக்கள் சமூகம் இம்மூன்றுடன் நிகழும் தனிமனிதனின் உரையாடலில்தான் பிரக்ஞை பிறக்கிறது.

நீங்கள் பிரக்ஞை (தன்னுணர்வு) யாக இருக்கிறீர்கள். உங்கள் உணர்வு நிலை நீங்கள் ஓய்வு கொள்ளும் விதமாக உள்ளது அங்கேயேதான் ஒருவர் அமைதியையும், ஆறுதலையும், சமாதானத்தையும் கண்டடைய முடியும் .

அதெப்படி ஓய்வில் இவையெல்லாம் சாத்தியமாகும் என்று நீங்கள் கேட்கலாம் . சொல்றேன் .

ஒரு பயணி தன்னுடைய பயணத்தின் இடையே தற்காலிகமாகவேனும் ஓரிடத்தில் தங்கி இளைப்பாற வேண்டும். நீண்ட பயணத்தில் அவர் களைத்து சோர்வது தவிர்க்க முடியாதது. ஆனால் பயணத்தின் ஓய்விடம் எது ?

அதாவது தன் உணர்வு நிலையின் விளைவாக அவர் அடையும் " புரிந்துகொள்ளுகை " (Understanding)யே பேரின்பத்தை நிறைவான மகிழ்ச்சியை கொடுக்கும். அந்த மகிழ்ச்சிக்குரிய தருணங்களில் உங்கள் இருப்புணர்வின் மையத்தை நீங்கள் அடைகிறீர்கள்...அதுவே உங்கள் ஓய்விடம் (Resting place ) சரிதானா ?

இந்த தன்னுணர்வில் 'நான் கடவுளை நேசிக்கிறேன் ' என்று சொல்வது எளிது. அதன் மூலம் தொடர்ந்து உங்களுடைய தனித்தன்மையை, ' தான் ' என்கிற அகங்காரத்தை (Ego) நீங்கள் வளர்த்துக் கொள்கிறீர்கள்.

எப்படி ?

தண்ணீரும் பனிக்கட்டியும் இணைந்து ஒன்றாவது இல்லை. ஆனால் பனிக்கட்டி தன் வடிவத்தை இழந்தால் மட்டுமே தண்ணீருடன் இரண்டறக் கலந்து கொள்ள முடியும். அப்படித்தான் உங்கள் விஷயத்திலும் உங்களுடைய தற்போதைய வடிவத்தில் நீங்கள் இறைவனுடன் இணைந்து கொள்ள முடியாது. அத்துடன் உங்களுக்கும் இறைவனுக்கும் எந்த தொடர்பும் இல்லாமல் போகிறது. அதற்கு காரணம் உங்களுடைய 'அகந்தை' என்கிற பனிக்கட்டி உருவம். ஆனால் இறைவனோ உருவமற்றவன்.

" இறைவன் வடிவமற்றவன்

நீங்களோ வடிவமுள்ளவர்

அகந்தையே உங்கள்

வடிவமாக இருக்கிறது "

ஆனால் சூஃபி எளிதாக அகந்தையை கடந்து விடுகிறார்.

அவர் எப்படி கடக்கிறார் ?

நீங்கள் இவ்வுலகில் பிறந்து வந்த போது உங்கள் அகவெளி பளிங்குபோல் தெளிவாய், தூயதாயிருந்தது . அதில் எந்த ஒன்றும் எழுதப்படவில்லை. நீங்கள் முழுமையின் ஒரு பகுதியாக இருக்கிறீர்கள் . உங்கள் உயிர்ப்பொருள் அந்த முழுமையோடு தொடர் இயக்கம் கொள்கிறது.

நீங்கள் எதனுடன் இசைவாக இருக்கிறீர்களோ அதனுடன் சேர்ந்து கொள்கிறீர்கள். பனிக்கட்டி கரைந்து உருவமிழந்து தான் உருவெடுத்த நீருடன் கலப்பது போல் , சூஃபி ஞானிகள் தன் அகத்தை அழித்துக் கொள்கிறார்கள் .

தன்னையே மறக்கும் நிலையில் தான் அழிந்து' ஃபனா ' வாகி அடுத்த நிலையான 'பகா 'வை அடைகிறார்கள் .

## சூஃபியின் வழித்தடம் 4



தன்னைத் தானே அறிதலால் தன் இறைவனை அறிந்து கொள்ளலாம் என்கிறது ஆன்மீகம் .

தன்னைத் தானே இழத்தல் (இறைவனிடம் சரணடைதல் ) மூலமும் இறைவனை அறிந்து கொள்ள முடியும் என்கிறது கிழக்கத்திய ஆன்மீகம் .

அஹ்மது இப்னு கஸ்ரவிய்யா (ரஹ்) என்னும் சூஃபி ஞானி இறைவனளவில் **' தவக்குல் '** வைத்து கானகம் சென்றனர்.

அப்பொழுது அவர்கள் காலில் முட்கள் பாய்ந்து கடும் வேதனையை வழங்கின. அவர்கள் கீழே அமர்ந்து காலில் பாய்ந்த முட்களில் ஒன்றைப் பிடுங்கி வெளியே வீசி எறிந்தார்கள் .அப்பொழுது அவர்களுக்கு இறைவன் மீது தவக்குல் வைத்துக் கானகம் புறப்பட்டது நினைவுக்கு வந்தது.

காலில் தைத்த முட்களை வெளியே எடுப்பதனால் இறைவன் மீது வைத்த தவக்குலுக்கு மாசு ஏற்பட்டு விடுமோ என்று அஞ்சிய அவர்கள் மற்ற முட்களை எடுக்காது நொண்டி , நொண்டி நடந்து மக்கா சென்று பின்னர் தாயகம் திரும்பினர்.

இப்பயணத்தில் அவர்கள் தம் கால்களில் தைத்த முட்களினால் பட்ட துயரம் சொல்லுந் தரத்ததாயில்லை.

பின்னர் அவர்கள் அபூ யஸீத் பிஸ்தாமி (ரஹ்) அவர்களை சந்திப்பதற்காக பிஸ்தாம் சென்ற பொழுது , அவர்கள் இவர்களை புன்முறுவலுடன் வரவேற்று,

" தங்களின் கால்களில் முட்கள் தைத்தனவே, தாங்கள் என்ன செய்தீர்கள்? " என்று வினவினார்

" நான் அவற்றை எடுக்காது விட்டுவிட்டேன் " என்று விடை பகர்ந்தார்கள்.

" **தாங்கள் அவ்விதம் செய்தது தவறு**. ஒருவர் தம் காலில் தைத்த முட்களை வெளியே எடுத்து வீசி எறிவதனால் அவர் இறைவன் மீது கொண்ட 'தவக்குல்' ஒருபோதும் கெட்டு விடாது" என்று கூறினார்கள்.
அறிதலுக்கும், இழத்தலுக்கும் இதில் விளக்கம் இருக்கிறது.

## சூஃபியின் வழித்தடம்



நிலைபேறுடைய ஒரு பயணத்தை மேற்கொள்கிற வாழ்க்கையே அர்த்தம் உடையதாகும் .
ஒரு கணத்தில் மூச்சொன்று உள்ளே இழுக்கப்படுகிறது. மறு கணத்தில் அது வெளியேற்றப்படுகிறது இந்த இரண்டு நிகழ்வுக்கு இடையில் நீள்கிறது வாழ்க்கை.இந்த வாழ்க்கை குறுகிய கால அளவே நீடித்திருப்பது.

ஒவ்வொரு மூச்சிலும் ஒரு புதிய உயிர் இயக்கத்தை அடைகிறீர்கள். பிறகு, அது இன்னதென்று தெரியாத ஒரு விழிப்பற்ற நிலையில் சென்றுவிடுகிறது.மீண்டும் ஒரு புதிய உயிர் இயக்கம் இன்னதென்று அறியாத, அறிய முடியாத ஒன்றிலிருந்து மேலெழுகிறது.
இந்த இயக்கம் கனவேகத்தில் நடைபெறுகிறது. மனமும் அதன் வரையறுக்கப்பட்ட நியதியும் அதை விளங்கிக் கொள்ள முடியாது .
உதாரணத்திற்கு, அறிவியலார் சொல்கிறார்கள், உங்களுடைய சருமம் ஒவ்வொரு கணத்திலும் மாறிக் கொண்டிருப்பதாக. ஆனால் உங்களுடைய கண்களும் , அறிவுத்திறனும் போதாது அதை நீங்கள் கண்டுகொள்வதற்கு .
அதேப்போல வாழ்க்கை ஒவ்வொரு கணப்பொழுதிலும் இருக்கிறது. எனவே ஒவ்வொரு கணமும் மேன்மை உடையதாகும்.

**'ஆழம் காணமுடியாத பெருங்கடலில்**
**அந்தச் சிறுதுளி ஐக்கியமாவதற்கு**
**ஒரு கணமே போதுமானது**
**உங்கள் வாழ்க்கை அர்த்தமுடையதாவதற்கு '**
**"அந்த கணத்தில் நீங்கள் நீங்களாக**
**இருந்தால் , அற்புதம் நிகழ்ந்து விடுகிறது !"**

அது உடனடி நிகழ்வு. திட்டமிட்டு நிகழ்த்தப்படுவது அல்ல. தானாகவே இயல்பாகவே நிகழ்கிற ஒன்றிற்கு நீங்கள் எப்படித் திட்டமிட முடியும் ?
இந்த ஒவ்வொரு கணப்பொழுதிலும் வாழ்வதற்கு சூஃபிகள் வணக்கத்தை தேர்ந்தெடுக்கிறார்கள்.
வணக்கத்தை ஒவ்வொரு செயலிலும் நன்கு செய்து விடுகிறார்கள். அவர்களின் ஒவ்வொரு கணமும் வணக்கமாகவே அர்த்தமாகி விடுகிறது .

"நான் ஜின்களையும், மனிதர்களையும், என்னை வணங்க வேண்டும் என்பதற்காகவேயன்றி வேறு எதற்கும் படைக்கவில்லை" (திருக்குர்ஆன் 51:56)

இந்த வசனத்தைப் படித்தபின் அனேகமானவர்களின் எண்ணங்களில் வெறும் தொழுகை, நோன்பு, ஜகாத் போன்றவை மட்டுமே வணக்கம் என்பதான ஒரு பிம்பமும் தவறான கற்பிதமும் தோன்றும். யோசித்துப் பார்த்தால்... இவற்றை மட்டும் நிறைவேற்றுவதற்காகவா இறைவன் நம்மைப் படைத்தான் என்ற ஐயமும் கூடவே எழும்.
இவைதான் வணக்கம் என்று நாம் கருதும் இந்தத் தொழுகை, நோன்பு, ஜகாத் ஆகியவற்றுக்கு அன்றாட வாழ்வின் ஒருநாளில் எத்தனை மணி நேரங்களை நாம் ஒதுக்குகின்றோம் என்பதை யோசித்துப் பார்த்தாலே, வணக்கம் என்பது இவை மட்டுமல்ல என்பது தெரியவரும்.

உண்மையில் ஐந்து வேளை தொழுகைக்காக 24 மணி நேரத்தில் 5 சதவீதம் மட்டுமே ஒதுக்கப்படுகிறது. எனில் மீதி நேரம்..?
மாதங்களைக் கணக்கிட்டால் 8.5 சதவீதம் மட்டுமே நோன்புக்காக ஒதுக்கப்படுகிறது. எனில் மீதி நேரம்..?
ஜகாத் என்பதோ வருடத்தில் ஒரு முறை மட்டுமே. எனில் மீதி நேரம்..?
வாழ்நாளில் ஒரு முறைதான் ஹஜ். எனில் மீதி நேரம் ..?
'என்னை வணங்க வேண்டும் என்பதற்காகவேயன்றி உங்களை நான் படைக்கவில்லை' என்ற இறைக்கூற்றின் அடிப்படையில் பார்த்தால்; 24 மணி நேரமும் தொழுது கொண்டோ, நோன்பு நோற்றுக்கொண்டோ அல்லது ஜகாத் கொடுத்துக்கொண்டோ அல்லவா இருந்திருக்க வேண்டும்?
இதுநடைமுறை சாத்தியம் அல்ல என்பது அனைவரும் அறிந்ததே. எனவே வணக்கம் என்பது வெறும் தொழுகையும் நோன்பும் மட்டுமல்ல. மாறாக அறிந்துகொள்ளுங்கள்...

ஓர் ஏழைக்கு உணவளிக்கும்போது, நீங்கள் வணக்கத்தில் ஈடுபட்டுள்ளீர்கள்.
மத, இன, மொழி வேறுபாடு பார்க்காமல் கவலை சூழ்ந்த மனிதனின் கண்ணீர் துடைக்கும்போது, நீங்கள் வணக்கத்தில் ஈடுபட்டுள்ளீர்கள்.
அமானிதம் பேணி, அடுத்தவர் உரிமையில் கை வைக்காமல் இருக்கும்போது, நீங்கள் வணக்கத்தில் ஈடுபட்டுள்ளீர்கள்.
நாவால் பிறர் மனதை நோகடிக்காமல் இருக்கும்போது, நீங்கள் வணக்கத்தில் ஈடுபட்டுள்ளீர்கள்.
மலர்ந்த முகத்துடன் மக்களைச் சந்திக்கும்போது, நீங்கள் வணக்கத்தில் ஈடுபட்டுள்ளீர்கள்.
தேவையற்றை கோபத்தையும் அவசியமற்ற ஆத்திரத்தையும் கட்டுப்படுத்தும்போது, நீங்கள் வணக்கத்தில்தான் ஈடுபட்டுள்ளீர்கள்.

லஞ்சம் வாங்க மறுக்கும் லட்சியவாதியாக மாறும்போது, நீங்கள் வணக்கத்தில் ஈடுபட்டுள்ளீர்கள்.
உண்மையை உரக்கச் சொல்லும்போது, நீங்கள் வணக்கத்தில் ஈடுபட்டுள்ளீர்கள்.
வியாபாரத்தின்போதும், கொடுக்கல் வாங்கலின்போதும், நீதியுடனும் விட்டுக்கொடுக்கும் மனோபாவத்துடனும் நடந்துகொள்ளும்போது, நீங்கள் வணக்கத்தில் ஈடுபட்டுள்ளீர்கள்.

உங்கள் வேலையையும் உங்களது பணியையும் ஈடுபாட்டுடனும் பொறுப்புடனும் செய்யும்போதும், வாங்கும் ஊதியத்திற்கு உகந்த முறையில் உழைக்கும்போதும் நீங்கள் வணக்கத்தில்தான் ஈடுபட்டுள்ளீர்கள்.
உண்ணும் உணவும் அருந்தும் பானமும் அனுமதிக்கப்பட்ட வழிமுறையினூடாக இருந்தால் அதுவும் வணக்கமே.
அணியும் ஆடையும், அத்தியாவசியப் பொருட்களும் அனுமதிக்கப்பட்ட முறையில் சம்பாதித்தவையாக இருந்தால் அதுவும் வணக்கமே.
இதைவிட ஆச்சரியம் என்னவென்றால் வாழ்க்கைத் தேவையை நிறைவேற்றுவதற்காகவும் குடும்பத்தைக் காப்பாற்றுவதற்காகவும் உழைப்பதும் அதுவும் வணக்கத்தில் கட்டுப்படுகிறது.
வயலில் உழைப்பவரும், தொழிற்சாலையில் இயங்குபவரும், கடைவிரிக்கும் வியாபாரியும், அலுவலகத்தில் பணி செய்யும் ஊழியரும், துறைசார் நிபுணர்களும் தங்களுடைய பணிகளை வணக்கமாகவும், மறுமை வெற்றிக்கான ஆதாரமாகவும் மாற்றிக்கொள்ள முடியும்.

பலசாலியான ஒரு மனிதர் இறைத்தூதர் (ஸல்) அவர்களுக்கு அருகில் கடந்து சென்றார். அப்போது தோழர்கள்,
"அல்லாஹ்வின் தூதரே! இவர் மட்டும் இறைப் பாதையில் போராட முன்வந்திருந்தால் எவ்வளவு நன்றாக இருந்திருக்கும்?" என்று கூறினர்.
அப்போது இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

“அறிந்துகொள்ளுங்கள்! தமது குழந்தைகளைக் காப்பாற்ற வேண்டும் என்பதற்காக இவர் உழைக்கச் செல்கின்றார் என்றால் இவரும் இறைப்பாதையிலேயே இருக்கின்றார்.

தமது வயதான பெற்றோரைக் காப்பாற்ற வேண்டும் என்பதற்காக இவர் உழைக்கச் செல்கின்றார் என்றால் அப்போதும் இவர் இறைப்பாதையிலேயே இருக்கின்றார்.

அடுத்தவரிடம் கையேந்தாமல் தமது சுயமரியாதையைக் காப்பாற்ற வேண்டும் என்பதற்காக உழைக்கச் செல்கின்றார் என்றால், அப்போதும் இவர் இறைப்பாதையிலேயே இருக்கின்றார்.

ஒருவர் பெருமைக்காகவும், பகட்டுக்காகவும் உழைக்கச் செல்கின்றார் என்றால் அப்போதுதான் இவர் சைத்தானின் பாதையில் இருக்கின்றார்”. (தபரானி)

இஸ்லாத்தின் பார்வையில் வணக்கம் இப்படித்தான் பட்டியலிடப்படுகிறதே தவிர, வெறும் தொழுகையையும் நோன்பையும் மட்டும் வைத்தல்ல.

இதை சூஃபிகள் நன்கு உணர்ந்து ஒவ்வொரு கணப்பொழுதிலும் அதை வீணாக்காமல் வாழ்ந்து கொண்டே இருக்கிறார்கள் மரணத்திற்குப் பிறகும் கூட !

## சூஃபியின் வழித்தடம் 6

நான் யாரென்று நான் அறியேன்
நம்பிக்கையுடன் மசூதிக்கு செல்பவனுமல்லன் ;
நம்பிக்கையின்மைக்கு சரணடைபவனுமல்லன் ;
சுத்தமானவனுமில்லை ; அசுத்தமானவனுமில்லை ;
மோசஸுமில்லை ; பாரோ-வும் இல்லை ;
நான் யாரென்று நான் அறியேன்
வேதப் புத்தகங்களில் இல்லை நான் ;
போதைப் பொருள்களிலும் இல்லை;
கெட்டவர்களின் கூட்டாளியாக மதுக்கடையிலும் நான் இல்லை ;
தூங்கவுமில்லை ; விழித்திருக்கவுமில்லை ;
நான் யாரென்று நான் அறியேன்
பாவிகளுக்கு நடுவிலுமில்லை ; புனிதர்களுக்கு நடுவிலுமில்லை ;
மகிழ்ச்சி மிக்கவனில்லை ; கவலை நிறைந்தவனுமில்லை ;
நீரைச் சார்ந்தவனில்லை ; பூமியைச் சார்ந்தவனுமில்லை ;
நான் வாயு இல்லை ; தீயுமில்லை ;
நான் யாரென்று நான் அறியேன்
அரேபியாவைச் சேர்ந்தவனில்லை ; லாகூரில் வசிப்பவனுமில்லை ;
இந்தியனில்லை ; நாக்பூரில் வசிப்பவனுமில்லை ;
இந்துவோ அல்லது பெஷாவர் வாழ் துருக்கி-இஸ்லாமியனோ இல்லை
நதௌன் நகரில் இருப்பவனும் இல்லை.
நான் யாரென்று நான் அறியேன்
சமயங்களின் ரகசியங்களை அறிந்தவனில்லை நான் ;
ஆதாம்-ஏவாளுக்குப் பிறந்தவனில்லை நான்;
எனக்கென்று ஒரு பெயரையும் இட்டுக் கொண்டதில்லை ;
மண்டியிட்டு தொழுகை புரியும் கூட்டத்தைச் சேர்ந்தவனில்லை ;
வழிதவறிச் சென்றவர்களின் கூட்டத்தையும் சேர்ந்தவனில்லை ;
நான் யாரென்று நான் அறியேன்
தொடக்கத்தில் நான் இருந்தேன் ; இறுதியிலுமிருப்பேன் ;
ஒன்றைத் தவிர வேறெதையும் அறியாத ஒருவன் நான்

என்னை விட ஞானி இருப்பானா?
புல்லா, அறிய முனையத் தக்க வேறொருவன் இருக்கிறானா?

- சூஃபி புல்லா ஷா (பஞ்சாபி)

## சூஃபியின் வழித்தடம் 7



பைபிளில் இப்படி ஒரு வசனம் கூறப்பட்டிருக்கிறது :
"பொன்னைச் சம்பாதிப்பதிலும் ஞானத்தைச் சம்பாதிப்பது எவ்வளவு உத்தமம்! வெள்ளியைச் சம்பாதிப்பதிலும் புத்தியைச் சம்பாதிப்பது எவ்வளவு மேன்மையாக இருக்கிறது".—நீதிமொழிகள் 16:16.

கூழாங்கற்களின் குவியல்களோடு கலந்திருக்கும் ஒற்றை மாணிக்க கல்லை நவரத்தின வியாபாரி மிக இலேகுவாக கண்டெடுத்து விடுவார்.

இதைப் போலவே காற்றினில் பூவின் நறுமணத்தை பிரித்தறிவது போல் இஸ்லாத்தின் நறுமணத்தை ஒரு சூஃபி ஞானி எளிதில் கண்டெடுத்து விடுவார்.

ஈரான் நீஷாப்பூரில் அஹ்மது இப்னு ஹர்ப் என்னும் சூஃபி ஞானி தம் சீடர்களுக்கு ஆன்மீக ஞானம் போதித்துக் கொண்டிருந்தார் . அவரது அண்டை வீட்டு பஹ்ராம் என்பவரது வாணிபம் பொருள்களை வழிபறி கொள்ளையர்கள் கொள்ளையடித்ததாக கேள்விப்பட்டதும்,இது பற்றி விசாரித்து , அவருக்கு ஆறுதல் சொல்ல கிளப்பும் போது , ,
அவரின் சீடரில் ஒருவர் : " பெரிய துயர செய்திதான். ஆனால் பஹ்ராம் அவர் தீயை வணங்குபவராயிற்றே. நம்முடைய மார்க்கம் (தீன்) வேறு; அவருடைய மார்க்கம் வேறு நமக்கும் அவருக்கும் இடையே என்ன தொடர்பு , என்ன உறவு இருக்கிறது நாம் அவரிடம் சென்று ஆறுதல் கூறி வருவதற்கு?" என்று கூறினார் .

அதற்கு சூஃபி ஞானியவர்கள் : "அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அண்டை வீட்டாரின் உரிமைகள் பற்றி கூறியுள்ள அமுத மொழிகளை நீங்கள் மறந்து விட்டீர்களா என்ன ? பஹ்ராம் தீயைக் கடவுள் என கருதி வணங்குபவர்தான் அதில் ஐயமில்லை. அவர் தீயை வளர்த்து வணங்குவதை நான் கண்கூடாக பல தடவை பார்த்துள்ளேன் . எனினும் அவர் நம் அண்டை வீட்டுக்காரர் அல்லவா ? நம்முடைய தவ மடத்திருக்கும் அவருடைய வீட்டுக்கும் இடையே ஒரு சுவர் தானே குறுக்கே நிற்கிறது. அப்படி இருக்கும் பொழுது அவர் நம் அண்டை வீட்டுக்காரரே அன்றி வேறென்ன ? அண்டை வீட்டுக்காரர் அனந்தத்திற்கும் பாத்திரமானவர் அல்லவா ?" என்று கூறி சீடர் சூழப் புறப்பட்டார்கள்.
அஹ்மது இப்னு ஹர்ப் சூஃபியைக் கண்டதும் , பஹ்ராம் : "வரவேண்டும் அடிகளாரே வரவேண்டும் ! என்று கூறி அவர்களை கைலாகு கொடுத்து வரவேற்றார். அவரை தம் இல்லத்தில் அமரச் செய்து விருந்துக்கு ஏற்பாடு செய்தார் .
"வீணே சிரமம் எடுத்துக்கொள்ளாதீர்கள். உமக்கு பேரிழப்பு நேர்ந்ததாக கேள்வியுற்றோம்.அது பற்றி விசாரித்து ஆறுதல் கூறி செல்வதற்காக வந்தோம் "என்று கூறினார்.
" பேரிழப்புதான் ஏற்பட்டு விட்டது. ஆனால் அதற்காக நான் கவலைப்படவில்லை. மாறாக நான் இறைவனுக்கு நன்றி செலுத்தி கொண்டுள்ளேன்.

காரணம் ஒன்று, கொள்ளைக் கூட்டத்தினர் என் பொருள்களைத்தான் கொள்ளையடித்துக் கொண்டு சென்றார்கள். மற்ற எவருடைய பொருட்களையும் கொள்ளையடித்து கொண்டு செல்லவில்லை. அவர்களுடைய பொருட்களை கொள்ளையடித்து சென்று இருப்பின் அவர்களால் தலைதூக்க இயலாமல் போயிருக்கும்.

இரண்டாவதாக என்னுடைய பொருட்களில் பாதியைதான் கொள்ளையடித்துச் சென்று உள்ளார்கள். மற்றப் பாதி நல்ல விலைக்கு விற்கப்பட்டு, இழப்பில் ஒரு பகுதியைச் சரி கட்டி விட்டது.

மூன்றாவதாக , என்னுடைய உலகப் பொருள்கள் தாமே களவாடப்பட்டது அதனால் பாதகமில்லை , என்னுடைய மார்க்கத்தை அவர்களால் களவாட இயலுமா என்ன ? அது என்னுடைய உள்ளத்தில் நீங்காது நிரம்பி வழிந்து கொண்டு உள்ளது அது எனக்குப் போதும் . உலகப் பொருள்கள் என்ன ? வரும் போகும் " என்று கூறினார்

பஹ்ராமின் இம்மொழிகள் அஹ்மது இப்னு ஹர்ப் சூஃபி அவர்களுக்கு அளவற்ற மகிழ்ச்சியை அளித்தன . அவர்கள் தம் சீடர்களை பக்கம் திரும்பி ." அவர் கூறியதே குறித்துக் கொள்ளுங்கள் நான் அதில் இஸ்லாத்தின் நறுமணத்தை நுகரகிறேன்" என்று கூறினார்கள்.
காற்றினில் பூவின் நறுமணத்தை பிரித்தறிவது போல் இஸ்லாத்தின் நறுமணத்தை ஒரு சூஃபி ஞானி எளிதில் கண்டெடுத்து விடுவார்.

## சூஃபியின் வழித்தடம் 8

தஸவ்வுஃப் என்றால் என்ன ? என்று ஜுனைதுல் பக்தாதி (ரஹ்) அவர்களிடம் கேட்டபோது ... (Copy link) யை பார்வையிடவும்

**https://m.facebook.com/story.php?story_fbid=2464915993767741&id=100007480923921**

ஜுனைத் (ரஹ்) அவர்கள் தம்முடைய ஆன்மீகப் அடித்தளத்தை பலகாலமாக பிறர் அறியாவண்ணம் ரகசியமாக வைத்திருந்தார்கள். எனினும், இது பற்றி அவர்கள் ஒரு தடவை கூறும் பொழுது நான் பத்தாண்டு காலமாக என் இதயம் வழிதவறிச் சென்று விடா வண்ணம் கவனித்து வந்தேன்.

அதன்பின் பத்தாண்டு காலம் என் இதயம் என்னை கண்காணித்து வந்தது. நான் இப்பொழுது என் நிலைமை என்னவெனில் என் இதயம் என்னை அறிவதும் இல்லை; நானும் அதனை பொருட்படுத்துவதில்லை .

கடந்த இருபது ஆண்டு காலமாக இறைவன் என் வாயிலாகப் பேசிக்கொண்டிருக்கிறான். வெளிப்படையான ஆன்மீக தத்துவங்களை நான் 20 ஆண்டு காலமாக மக்களுக்கு எடுத்துரைத்து கொண்டிருக்கிறேன். ஆன்மீக ரகசியங்களை நான் வெளிப்படையாக எடுத்துரைக்கக் கூடாது என்று எச்சரிக்கப்பட்டு உள்ளேன்.

இறையச்சம் என்னை ஆட்கொள்ளும் போது நான் தன்னுணர்வற்றவனாகி விடுகிறேன். அவனுடைய கழிவிரக்கத்தை நினைவு கூறும்போது ,எனக்கு மூர்ச்சை தெளிகிறது.

"நான் ஓர் அடிமை. எனக்குச் சுதந்திரமே இல்லை .இறைவன் என்னை எங்கு போகுமாறு கூறினும் அது சுவனமாக இருந்தபோதிலும் சரி , நரகமாக இருந்தபோதினும் சரி நான் அங்கு செல்வேன் .எனக்கும் என் இறைவனுக்கும் இடையே

தீக்குழம்பாலான ஆறு ஓடிய போதிலும் ,என் இறைவனைச் சந்திக்கும் பேராவாவால் உந்தப்பட்டு நான் அதை ஒரு தாண்டாக தாண்டி அவனே அடைவேன் .

இறைவன் அளவில் தம்மை அழித்துக் கொள்ளும் ஃபனா நிலையை எய்திய பொழுது ( 'லைஸ ஜுப்பத்திம் ஸிவல்லாஹ்) - என்னுடைய சட்டைக்குள் அல்லாஹ்வைத்தவிர எவன் உள்ளான் ? என்றும் ,

பேசிகின்றவனும் நானே. கேட்கின்றவனும் நானே. ஈருலகிலும் வேறு யார் உள்ளார் ? என்றும் தன்னை அறியாமல் கூறிவிட்டனர். இதன் காரணமாக அவர்களை காஃபிர் என்று மார்க்க அறிஞர்கள் கூறவும் , அவர்கள் சிறை தண்டனைக்கு உள்ளாகவும் நேரிட்டது.

## சூஃபியின் வழித்தடம் 9

சூஃபி அபுல் ஹுஸைன் நூரி (ரஹ்) அவர்கள் பஸராவில், ஒரு தெரு வழியே சென்று கொண்டிருந்தார்கள். அப்போது ஜாடிகள் ஒன்றன்பின் ஒன்றாக அங்கு கொண்டுவந்து இறக்கப்பட்டன . மொத்தம் முப்பது ஜாடிகள் அவற்றின்மீது "லுத்ஃப் " (இன்பம்) என்ற சொல் பொறிக்கப்பட்டிருந்தது. அதைக் கண்ட அவர்கள் வியப்பு கொண்டவர்களாக ...

" அதில் என்ன இருக்கிறது? "என்று வினவினார்கள்

" மது "என்று பதில் கூறினான் ஒருவன்.

" எங்கு செல்கிறது? " என்று அடுத்து கேட்டார்கள்.

" அரண்மனைக்கு " என்றான் அவன்

அடுத்த கணம் அவர்கள் உணர்ச்சி மிக்கவர்களாய் அவற்றின் மீது பாய்ந்து, தம் கையில் இருந்த தடியால் அவற்றில் 29 ஜாடிகளை ஒன்றன்பின் ஒன்றாக உடைத்தெறிந்தார்கள் எஞ்சியது ஒன்றே ஒன்றுதான்.

இவ்வழக்கு அரசர் மூதலித் திடம் வந்தது.

அரசர், " யார் நீ ? "

" நான் ஒரு சீர்திருத்தவாதி ''

" என்ன! சீர்திருத்தவாதியா ? எவன் அந்தப் பதவியை உமக்குத் தந்தான் ? "

" தங்களுக்கு எவன் இந்த அரச பதவியை தந்தானோ, அவனே எனக்கு சீர்திருத்தவாதிப் பதவியை தந்தான்''

அவரின் இப்பதில் அரசரைச் சற்று திணற வைத்தது. எனினும் சமாளித்துக்கொண்டு,

" ஏன் ஜாடிகளை உடைத்தீர்?

" தங்களின் மீது எனக்குள்ள அன்பால் தான் அவ்வாறு செய்தேன். தங்களைத் தவறிருந்து காக்க விரும்பியே அவ்வாறு செய்தேன்"

" நல்லது 29 ஜாடிகளை உடைத்த நீர் , ஒன்றை மட்டும் உடைக்காது ஏன் பாக்கி வைத்து விட்டீர் ?"

"மதுவால் இறைவனின் கட்டளைகள் புறக்கணிக்கப்படுவதை நான் விரும்பவில்லை. இறைவனுக்காக வேண்டியே நான் அந்த ஜாடிகளை உடைத்தேன். 29 ஜாடிகளை உடைக்கும் வரையில் அந்த எண்ணமே என் உள்ளத்தில் மிகைத்திருந்தது. ஆனால் அடுத்து, ' எவருமே செய்யத் துணியாத ஒரு செயலை நான் செய்துவிட்டதாக' ஒரு விதத் திமிர் என் உள்ளத்தில் தளிர்விட்டது.அடுத்த கணம் நான் முப்பதாவது ஜாடியை உடைப்பதை விட்டும் என்னுடைய கையைத் தடுத்துக் கொண்டேன்.''

இதைக்கேட்டதும் அரசரின் தலை கிறுகிறுத்தது. தம்முன் வந்து நிற்பவர் சாமானியர் அல்லர். ஒரு மகான் என்பதை அவர் உணரலானார் .

உடனே அவர் நூரி (ரஹ்) அவர்களை நோக்கி, " அடிகளாரே சென்று வாருங்கள்.இறை கட்டளைக்கு மாறாக எது நடப்பினும் அதனை தடுத்து நிறுத்துங்கள்.அதற்கு நான் உங்களுக்கு முழு உரிமை தருகிறேன் என்று மொழிந்தார் அரசர் மூதலித்

## சூஃபியின் வழித்தடம் 10

மன்சூர் ஹல்லாஜ் (ரஹ்) அனல் ஹக் (நானே உண்மை) என்று கூறியதற்காக ,அனல் ஹக் (நானே இறைவன்) என்று அர்த்தம் கொள்ளப்படுகிறது.

இந்தக் குற்றத்திற்காக அவர்களுக்கு மரண தண்டனையும் விதிக்கப்படுகிறது. அபூபக்கர் ஷிப்லீ (ரஹ்) அவர்களும், மன்சூர் ஹல்லாஜ் (ரஹ்) அவர்களும் , ஜுனைத்துல் பாக்தாதி (ரஹ்) அவர்களிடம் கல்வி பயின்றவர்கள்.

அபூபக்கர் ஷிப்லி அவர்கள் இப்பொழுது தம் பள்ளித் தோழரை நோக்கி, "ஹுசைன் இப்னு மன்சூரே ! இறை இரகசியங்களை மக்களிடம் வெளிப்படையாக எடுத்துரைக்க வேண்டாம் என்று நான் எவ்வளவு கூறியும் நீர் கேட்கவில்லையே , நீரும் ஒரு வார்த்தை கூறினீர் . நானும் ஒரு வார்த்தை கூறினேன். நீர் "அனல் ஹக்கு " என்கிறீர். நானோ ''அன கைருன் " (நானே மேலானவன்) என்றேன். உன் மீது இறையருள் இறங்கியது என்மீது இறை முனிவு இறங்கியது என்று கூறுகிறார்களே அது ஏன் ? "

அதற்கு ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் , " நீர் 'அன கைருன் ' என்று கூறியது உம்முடைய "நான் " என்ற அகங்காரத்தில் கூறியதாகும். நான் " அனல் ஹக் " என்று கூறியது என்னை, என்னுடைய " நான் " என்ற அகங்காரத்தை அழித்து விட்டுக் கூடியதாகும். இதுவே இரண்டிற்கும் இடையே உள்ள வேற்றுமை ஆகும். " நான் " என்ற அகங்காரத்தை நீக்குவதே மாண்புடையதாகும் என்று எடுத்துரைத்தார்கள்.

## சூஃபியின் வழித்தடம் 11

வாழ்க்கை - ஒழுங்கு செய்யப்பட்ட நிகழ்வுகளின் தொகுதி. அது இணக்கமற்ற நிலைக்குள் இணக்கத்தைக் கொண்டு வருவது.

நீங்கள் மூன்று தளங்களில் இருந்து கொண்டிருக்கிறீர்கள். உடல், மனம், அறிவு என்ற மூன்று தளங்கள். ஒவ்வொரு தளமும் அதற்கான புரிதலை கொண்டது. ஒரு ஏணியின் மூன்று படிகள் போன்றதே இவையும். அங்கிருந்து கொண்டு உலகையும், அதன் நடப்புகளையும் நீங்கள் கவனிக்க முடியும்.

தெருவில் ஏதோ நடக்கிறது. என்ன நடக்கிறது.. என்று அறிய உங்களுக்கு ஆர்வம். ஆனால் நீங்கள் இருக்கிற இடத்திலிருந்து அதை சரியாகக் கவனிக்க முடியவில்லை. இன்னும் கொஞ்சம் உயரமான இடத்தில் இருந்தால் எல்லாமும் தெளிவாக தெரியும் என்று படுகிறது.
ஒவ்வொரு படிப்படியாய் மேலேறுகிறீர்கள். உயரமான இடத்திற்குச் சென்றதும் எல்லாவற்றையும் தெளிவாக பார்க்க முடிகிறது.

இந்த தளங்கள் மனம் சார்ந்த மையங்களாக (உடல்,மனம், அறிவு) மேலும் பகுத்தறிய முடியும். ஆனால் சூபிகளின் தளங்கள் இந்த மூன்றையும் தாண்டி மேலேறுகிறது . இதன் மூலம் வாழ்வின் இன்பத்தையும் , துன்பத்தையும் ஒரே மாதிரி பார்க்கிறார்கள் . இன்னும் சொல்லப்போனால் துன்பத்தை அதிகமாக நேசிப்பதோடு அது இறைவனின் பொருத்தத்தைப் பெற்றுத்தருவதாக கருதுகிறார்கள் .
மன்சூர் ஹல்லாஜ் (ரஹ்) அவர்களுக்கு மரண தண்டனை நிறைவேற்ற மேடையில் நிறுத்தப்பட்டிருக்கிறார்கள் .
அப்போது அபூபக்ர் ஷிப்லீ (ரஹ்) அவர்கள் ஹல்லாஜ் (ரஹ்) அவர்களிடம் ,
" தஸவ்வுஃப் (ஆத்ம ஞானம்) என்றால் என்ன ? "
" தஸவ்வுஃப்பின் தாழ்ந்த நிலை , நீர் பார்க்கும் என்னுடைய இந்த நிலைதான் "
"அவ்விதமாயின் தஸவ்வுஃப்பின் உயர்ந்த நிலை யாது ? "
" அதைப் பற்றி உமக்கேன் கவலை ? அதனை உம்மால் அடைய இயலாது " என்று சட்டென மறுமொழி பகர்கிறார்கள் ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள்
வாழ்க்கை - ஒழுங்கு செய்யப்பட்ட நிகழ்வுகளின் தொகுதி. அது இணக்கமற்ற நிலைக்குள் இணக்கத்தைக் கொண்டு வருவது.

## ஞூஃபியின் வழித்தடம் 12



ஒரு நாள் முஹ்யித்தீன் இப்னு அரபி (ரஹ்) கடைக்கு மார்க்க விற்பன்னர் ஒருவர் வந்தார். அவர்களை சோதிப்பதற்காக. மாபெரும் ஞானநூல்களை எழுதும் இவர்கள் எவ்வாறு வியாபாரத்துறையில் ஈடுபட்டுள்ளார்கள் என்பது விளங்காத புதிராக இருந்தது.
கடைக்குள் நுழைந்தும் அவர்கள் பணத்தை குவித்து வைத்து எண்ணிக்கெண்டு இருந்தார்கள். வந்தவரை அமரச் செய்து விட்டு எண்ணுவதில் ஈடுபட்டிருந்த அவர்கள் பாங்கொலியை கேட்டதும் அந்தப்பணத்தை எல்லாம் பெட்டியில் போட்டு விட்டு அவரையும் அழைத்துக் கொண்டு பள்ளிக்கு புறப்பட்டு விட்டார்கள்.
இது வந்தவருக்கு பெரும் வியப்பை அளித்தது. பள்ளியில் அவர்களே இமாமாக நின்று தொழவைத்தார்கள். வந்தவரும் பின்னால் நின்று தொழுதார். அப்பொழுது தம் கைத்தடியை , ஹவ்ழுக்கு அருகில் மறந்து வைத்து விட்டு வந்தது நினைவுக்கு வந்தது.

அது வெள்ளிப் பூண் கட்டப்பட்ட ஐந்து திர்ஹம் மாத்திரம் பெறுமானம் உள்ள கைத்தடி. தொழுகையை விட்டுவிட்டு அதனை எடுத்து வந்து மீண்டும் தொழ அவர் எண்ணினார். அதற்கு மார்க்கத்தில் இடம் உள்ளது என்று அவரின் வெளி மனம் கூறியது.எனினும் இந்த அற்பப் பொருளுக்காகத் தொழுகையை விட்டுச்செல்வதா... என்று அவரின் உள் மனம் வாதித்தது. இப்படியான தடுமாற்றத்துடன் தொழுகையை இமாமுடன் சேர்ந்து தொழுது முடித்தார்கள்.

தொழுது முடித்ததும் "ஹவ்ழ்" அருகே சென்று தம் கைத்தடியை பார்த்தார்கள். அது வைத்த இடத்தில் வைத்த படியே இருந்தது. அதனை மகிழ்ச்சியுடன் எடுத்துக் கொண்டு வந்த பொழுது இப்னு அறபி (றஹ்) அவர்களும் துஆ ஓதி விட்டு வெளியில் வந்தார்கள். தம் முன் எதிர் பட்ட அவரையும் அழைத்துக் கொண்டு உணவுண்ணத் தம் இல்லம் வந்தார்கள்.

வீட்டில் வகை வகையான உணவுகள் அவர் முன் கொண்டு வந்து பரத்தப்பட்டன. அவரின் உள்ளத்தில் ஒரு கோடி எண்ணங்கள் ஓடி மறைந்தன. "என்ன துறவு இது? பட்டு வாணிபம் செய்து கொண்டு பல வகையான உணவுகளை உண்டு வாழ்வதுவா துறவு?" என தம்முள்ளே தம்மை வினவிக் கொண்டார்.
'உண்ணுங்கள்' என்று உபசரித்த வண்ணம் அவரின் முன் பரத்தி வைக்கப்பட்டிருந்த உணவுப் பொருட்களை அவரின் உணவுத்தட்டில் எடுத்து வைத்து உண்ணுமாறு கேட்டுக் கொண்டார்கள்.
"தாங்கள்?" என்று வினவினார் அந்த மார்க்க விற்பன்னர்.
"எனக்கான உணவுகள் இப்பொழுது வரும்" என்று கூறினார்கள் அவர்கள்.
இவற்றை விட மேலான உணவுகள் அவர்களுக்கென விஷேடமாக தயாரிக்கப்பட்டிருக்கும் போல் இருக்கிறது. என்று எண்ணிக் கொண்டு அவர் சாப்பிட்டார்.

அப்போது அவர்களின் ஊழியன் ஒரு கோப்பையில் கஞ்சியையும், ஒரு தட்டில் துவையலையும் கொண்டு வந்து அவர்களின் முன் வைத்தார். துவையலை தொட்டுக் கொண்டு அந்தக் கஞ்சியை பிரியத்துடன் குடித்தார்கள்.
அவர்கள் அதைக் கண்டதும் அவருக்கு தம் கண்களையே தம்மால் நம்பமுடியவில்லை அப்போது அவர்கள் அவரை நோக்கி "சோதித்தது போதுமா? இன்னும் சோதிக்க வேண்டுமா?" என்று புன்முறுவலுடன் வினவியவண்ணம் "நான் இந்த வியாபாரத்தை பிறருக்கு பிழைப்புக்கு வழி ஏற்படுத்துவதற்காக நடத்தி வருகின்றேனே தவிர, வேறில்லை.

இங்கு குவித்துக் . கிடக்கும்பட்டு நவரத்தினங்களிலோ, பணத்திலோ என்மனம் இலயிக்க நான் ஒரு போதும் அனுமதிப்பதில்லை. பட்டும் நவரத்தினமும் கடையில் உள்ளன.பணம் பெட்டியில் உள்ளது. அவற்றை என் உள்ளத்தில் நான் ஒரு போதும் கொலுவேற்றி வைப்பதில்லை"

"நானோ ஒரு சாமான்யன். என்னையே நான் துன்பத்திற்காளாக்கிப் பழக்கப்பட்டவன். பல தடவைகள் 'ஹவ்ள்' நீரை அருந்திக் கொண்டு பட்டினி கிடந்துள்ளேன். பாயில் படுக்காது சந்தூக்கில் படுத்துறங்கியுள்ளேன். நான் இப்பொழுது உண்பதோ இந்த எளிய கஞ்சியேயாகும். "ஆனால் தங்களோ மார்க்க விற்பன்னர். தொழுகையில் தக்பீர் கட்டியவுடன் ஹவ்ள் அருகே தாங்கள் மறந்து வைத்து விட்டு வந்த கைத்தடியின் நினைவு வர, தக்பீரை விட்டுவிட்டு அதனை எடுத்து வர எண்ணிணீர்கள். ஐந்து திர்ஹம் மட்டும் பெறுமதியான அதன் மீது தங்களின் உள்ளம் இலயித்து நின்றது. தங்களின் உடல் தான் குனியவும் குப்புறவிழவும், எழுந்து நிற்கவும் செய்தது என்று கூறினார்கள்.

அத்துடன் அவர் அவர்களிடம் மன்னிப்புக் கோரி மீண்டார்.
இப்னு அறபி (றஹ்) அவர்கள் மறைவாக வைக்கப்பட்டிருந்த ஆன்மீக இரகசியஙகளை வெளிப்படையாக மக்களுக்கு எடுத்தரைத்த முதல் மனிதராக விளங்கினார்கள். இதனால் ஷைகுல் அக்பர் (மாபெரும் குருநாதர்) என அழைக்கப்படுகின்றார்கள்.
**புதூஹாத்துல் மக்கிய்யா, புஸூஸூல் ஹிகம், புதூஹாத்துல் மதனிய்யா, தர்ஜூமானுல் அஷ்வாக், கீமியா அல் ஸஆதத், ஹில்யதுல் அப்தால்** முதலான முன்னூற்றுக்குமேற்பட்ட நூல்களை அவர்கள் எழுதியுள்ளார்கள்.

அவர்களின் நூல்களின் தனித்தன்மை என்னவென்றால், அவற்றை ஒருவர் படித்துச் சிந்திப்பின் அவரின் இதயம் விசாலமடைகிறது. அவரின் துன்பங்கள் அகழ்கின்றன. அவரின் சிக்கல்களுக்கு ஒரு முடிவு காணப்படுகிறது.
இப்னு அறபி (றஹ்) அவர்கள் தங்களின் வாழ்நாளின் இறுதியில் திருக்குர்ஆனுக்கு ஒரு விளக்கவுரை எழுதத் தொடங்கி பதினைந்து பாகங்களுக்கு விளக்கவுரை எழுதினர்.
இதன் போது அவர்களுக்கு நோய் ஏற்பட்டது. 'சூரதுல் கஹ்ப்'க்கு விளக்கவுரை எழுதும் போது அதன் 65 வது வசனம் "இவ்விருவரும் வந்த போது (அவ்விடத்தில்) நம் அடியாரில் ஒருவரைக் கண்டார்கள் அவர் மீது நாம் அருள் புரிந்து நமக்குச் சொந்தமான ஒரு ஞானத்தையும் நாம் அவருக்குக் கற்பித்தோம்" என்பதற்கு விளக்கம் எழுதும் போது அவர்களின் மூச்சு நின்றது. இது நிகழ்ந்தது ஹிஜ்ரி 638 ரபீஉல் ஆகிர், பிறை 28 (கி.பி 1240 நவம்பர் 16) வெள்ளிக்கிழமை இரவிலாகும்.

இன்னாலில்லாஹி வஇன்னா இலைஹி ராஜஊன்

வலிமார்கள் இவ்வுலகில் சூரியனைப் போன்றவர்கள். இங்கு மறைவது போன்று தெரியும் அங்கு உதயமாகி விடுவார்கள். அங்கு மறைவது போன்று தெரியும் இங்கு உதயமாகி விடுவார்கள்.

குறிப்பு : சூஃபியின் வழித்தடம் இத்துடன் நிறைவு பெறுகிறது .

## சூஃபிகளின் உலகம் 1



அது ஓர் உலகம். இன்னும் சொல்லப்போனால் அது தனி உலகம்; ஆனால் அது பொது உலகம் அல்ல .
அது தத்துவம் கடந்த நிலை , கடந்து போவதற்கான தத்துவமல்ல ! அது கருத்தியல் பிரச்சாரங்கள் செய்வதில்லை , வெறுமனே நடைமுறைக் குறிப்புகளே தருகின்றது.
உதாரணமாக…ஒரு நபி தன்னை நபி என்று பிரகடனப்படுத்தியே ஆகவேண்டும். ஆனால் எந்த ஒரு சூஃபியும் தன்னை வலி என்று சொன்னதே இல்லை !

சூஃபிசம் ஊக ஆய்வு செய்வதல்ல, அது முற்றிலும் மெய்மைக்குட்பட்டது, நடைமுறைக்குரியது, பயன் நாட்டமுடையது. ஆதலினால் அதற்கு உலகளாவிய பொதுநோக்கு அதற்கில்லை.மேலும் அது ஒரு முறைமையல்ல. அதனால் அறிவையும் அது முறைமைப்படுத்துவதில்லை.

சூஃபிசம் ஒரு அமைப்பு அல்ல. வாழ்க்கையின் மறைபொருட்களுக்குள் செல்லும் ஒரு பாதையாகும்.அது எதையும் விளக்குவதில்லை . வெறுமனே மறைபொருளை நோக்கிச் சுட்டிக் காட்டுகிறது .
அது நிலவைச் சுட்டிக்காட்டும் விரல். விரலை ஆய்வுசெய்து நீங்கள் நிலவை புரிந்து கொள்ளலாகாது. ஆனால் அத்திசையை கருணையோடு பின்பற்றினீர்களானால், அதனோடு தொடர்பு விடாமல் இருந்தீர்களானால், நீங்கள் நிலவை காணலாம். விரல் நிலவல்ல. விரல் நிலவாக முடியாது, ஆயினும் நிலவிற்கான பாதையைக் காட்ட முடியும்.

சூஃபிசக் கதைகள் தத்துவார்த்தமானவையல்ல. அவை மென்மையான ஜாடைக் குறிகள், வெறும் குசுகுசுப்புகள். சூஃபிசத்தில் உரத்த பேச்சில்லை .சன்னமான பேச்சுகளே . இயல்பாகவே ஒத்துணர்வு மட்டுமல்ல, மற்றவருடனும் ஒத்துணர்வு கொண்டு கேட்கத் தயாராக இருப்பவர்கள், நம்பிக்கையோடு மனம் திறந்து சரணாகதி அடைய தயாரானவர்கள் மட்டுமே சூஃபிசத்தைப் புரிந்துகொள்ள முடியும். அதிலும் அன்புகூரத் தகுதியானவர்கள் மட்டுமே சூஃபிசத்தை வெகுவாக புரிந்துகொள்வர் .
அது தரும் செய்தி என்ன ? அது தர்க்க ரீதியான ஆய்வு அல்ல. அதேசமயத்தில் ஜென் தத்துவம் போல் தர்க்க முரணானதும் அல்ல. தர்க்கரீதியாக இருப்பதும் , தர்க்க முரணாக இருப்பதும் இரண்டும் வெவ்வேறு முனைக் கோடிகளில் இருப்பதாகும் என்கிறது சூஃபிசம். இவை இரண்டிற்கும் நடுவே உள்ளது சூஃபிசம்.

"சூஃபி யார்? "

இந்தக் கேள்விக்கு வரையறுப்பது போல் ஒரு பதிலைச் சொல்ல முடியாது. இதனை அறிந்தே பாரசீகத்தில் ஒரு சொலவடை உருவானது: "சூஃபி யார்? சூஃபியே சூஃபி!" - ( சூஃபி ச்சீஸ்த் சூஃபி சூஃபீஸ்த் ) இதை நீங்கள் புரிந்து கொண்டால் , அந்த உலகில் நீங்கள் பிரவேசிக்கலாம்.
பின் நீங்கள் பிரகாசிப்பீர்கள் ஒரு சூஃபியாக !

சூஃபி மகாகவி மௌலானா ரூமி இவ்வாறு பாடுகிறார்கள்:
"நீ பார்க்கும் செங்கல்லில்
சூஃபி கண்ணாடியைக் காண்கிறார்.
நீ வறண்ட நிலத்தைப் பார்த்து அயர்கிறாய்
சூஃபி அதில் இடுப்பளவு தாவரங்கள்
அசைவதைக் காண்கிறார்"

சூஃபிகள் சராசரியான வாழ்க்கைச் சூழலில்தான் வாழ்கிறார்கள் என்றால் நம் வாழ்வில் சூஃபித்துவம் இருக்கத்தானே செய்யும்? நாமும் சூஃபிகளாக முடியும் அல்லவா? என்று நீங்கள் கேட்கலாம்.
முடியும், நிச்சயம் முடியும். தூங்கிக் கொண்டிருக்கும் ஒருவனுக்குத்தான் விழித்தெழ வேண்டும் என்னும் சிந்தனை வந்துவிட்டாலே அவன் தூக்கத்திலிருந்து விழித்துக் கொண்டிருக்கிருக்கிறான் என்றுதான் அர்த்தம்!

## சூஃபிகளின் உலகம் 2

(ஜென்னிஸம் ஆண் , சூஃபிஸம் பெண் அதுவும் தாய் )
நண்பர் Mohamed Nowfer என் இன்பாக்ஸில் வந்து,
Mohamed Nowfer : அல்ஹம்துலில்லாஹ் அஸ்ஸலாமு அலைக்கும் சிறப்பாக இருக்கிறது சூஃபி பதிவு. வாழ்த்துக்கள் ஜென் தத்துவமும் எனும் வரி ஜென் என்பது தவிர்க்க பட்டால் மேலும் சிறப்பாக இருக்கும். பணி தொடர வாழ்த்துக்கள் 🙏
ர. ரா : சூஃபியிஸமும் , ஜென்னிஸமும் இரு தத்துவங்களாக பார்க்கப்படுகிறது. ஜென் தத்துவத்தோடு சரி. ஆனால் சூஃபிஸம் வாழ்க்கை. இதை உவமானத்தோடு சொல்வதற்கு ஜென் தேவைப்படுகிறது .ஒளியை படம் பிடிக்க இருட்டும் தேவை.

இந்த இரு தத்துவத்தையும் உவமானத்தோடு சொல்றேன் .
ஜென்னின் முக்கிய கருத்து 'மைன்ட்ஃபுல்னெஸ்' என்னும் அறிவு நிலை . சூஃபிசத்தில் அது 'ஹார்ட்புல்னெஸ்' - அதாவது நெஞ்சார்ந்த நிலை .இது இதயத்திற்குரியது.
ஜென் மனதிற்கு எதிரானது. ஆனால் மனதினூடே சென்றுதான் மனதை கடக்கின்றது .
சூஃபிசம் மனதிற்கு எதிரானதல்ல; அது மனதைப் பற்றி கருத்தற்றது. சூஃபி இதயத்தின் மீதே கவனம் செலுத்துகிறது. மனதைப் பற்றி அக்கறை கொள்வதில்லை. அது இதயத்துக்குரியதின் மீது நம்பிக்கை (ஈமான்) கொள்கிறது.
சூஃபியின் பாதை அன்பின் பாதை. ஜென்னின் பாதை போர் வீரனுடையது. சாமுராயின் பாதை. இரண்டு அணுகுமுறைகளுக்கும் உள்ள அடிப்படை வித்தியாசமே இதுவே .
ஜென் கதை அபத்தமானது. அது ஒரு புதிர். விடை காண முடியாத புதிர். நீங்கள் முயற்சி செய்யலாம். ஆனால் தீர்வு காண முடியாது. கதையோடு சேர்ந்தது அதன் விடை காண முடியாத தன்மை. அவை ஜென் கதைகளுக்கே உள்ளியல்பானவை . அது அபத்தமாகத்தான் இருக்க வேண்டும். ஏனென்றால் அது உங்கள் மனதை அழிப்பதற்கான கருவி. மனதைக் கொன்று எப்படி மானுடம் பேச முடியும் ?
ஜென் அதீத ஆண்மை வாய்ந்தது. ஜென் கதை உங்களைப் பைத்தியமாக்கும் மனதில் ஒரு பித்த நிலையை உருவாக்கி, அதைக் கடந்து போக உதவும்.

சூபிக் கதை ஒரு புதிரல்ல, அது ஒரு உருவகக் கதை. அதிர்ச்சியளிப்பதல்ல, அது விளங்கவைக்க கூடியது. அது கவர்ந்திழுக்கும் ஒன்று. அது காதலர் வழியாகும். அது மென்மையானது. அது பெண்மையுடையது.
சூஃபிகள் தங்களின் மூலமாக கராமத் என்னும் இறை அற்புதம் வெளிப்பட்டால் , ஒரு பெண் ருதுவானதற்காக வெட்கப்படுவதைப் போல் வெட்கப்படுகிறார்கள். இது சூஃபிஸம் பெண்மை வாய்ந்தது என்பதற்குரிய எடுத்துக்காட்டு .

சூஃபிஸம் பெண் மாதிரி மேலும் அது தாயானதுதான் உம்முவான தாயானது .
மேலும் நபி (ஸல்) அவர்கள் ஒரு தடவை 'உங்களில் யார் தொழுகையில் இந்த உம்முல் குர்ஆனை (பாத்திஹா) ஓதவில்லையோ அது அவருக்கு மிகப்பெரும் நஷ்டமாக அமையும்' என மூன்று முறை கூறினார்கள். இந்த சூராவை ஓதாவிட்டால் தொழுகை முழுமை பெறாது என்றும் கூறியுள்ளார்கள்.

இந்த வேதத்தை - அபிவிருத்தி நிறைந்ததாகவும், இதற்குமுன் வந்த (வேதங்களை) மெய்ப்படுத்துவதாகவும் நாம் இறக்கி வைத்துள்ளோம்; (இதைக்கொண்டு) நீர் (நகரங்களின் தாயாகிய) மக்காவில் உள்ளவர்களையும், அதனைச் சுற்றியுள்ளவர்களையும் எச்சரிக்கை செய்வதற்காகவும்,நாம் இதனை அருளினோம். ( குர்ஆன் 6:92 )

சூஃபிஸம் எல்லா கிதாபுகளின் தாயான குர்ஆன் மாதிரி, எல்லா நகரங்களின் தாயான மக்கா மாதிரி . தாயின் காலடியில் சுவர்க்கத்தை காணச் செய்யும் அற்புதம் வாய்ந்தது சூஃபிஸம்.
ஜென்னிஸம் ஆண் என்றால்,சூஃபிஸம் பெண். அதுவும் தாய்

## சூஃபிகளின் உலகம் 3



சூஃபி என்பவர் இறைவனுக்குள் நுழைந்தவர் .வாழ்க்கையின் மர்மத்தை ஊடுருவியவர். மெய்மையை எதிர்கொண்டவர்.

ஒரு சூஃபி உலக அறிவுடையவராக இருக்கலாம்; இல்லாமலும் இருக்கலாம். அது ஒரு பொருட்டே அல்ல .ஞானத்திற்கும் அறிவுக்கும் எந்த தொடர்பும் இல்லை.
சூஃபி பிரபஞ்சத்தின் ஒளியாக இருப்பார். நீங்கள் ஒளி என்றதும் வெளிச்சத்தை தேடுவீர்கள்.இந்த ஒளி என்பது அவருக்குள் மிகுந்திருக்கும் சாந்தம் என்னும் அமைதி. பட்ட இடமெல்லாம் பரவி சமாதானத்தை நிலை நிறுத்தக் கூடிய ஒளி .அவரைப் பார்க்கும் பொழுதெல்லாம் திரும்ப திரும்ப அவரைப் பார்க்க தூண்டக்கூடிய ஒளி .

இயேசு அறிவார்ந்த மனிதர் அல்ல. அவர் காலத்தில் வாழ்ந்த எந்த யூத குருவும் இயேசுவை விட அறிவிற் சிறந்தவராய் இருந்திருக்கலாம். புத்தரும் பெரும் அறிவாளி அல்ல. எந்த ஒரு பிராமணப் பண்டிதரும் அவரை விட அதிகம் அறிந்தவராக இருக்கலாம். புத்தர் வேதங்களைப் பற்றி அதிகம் அறிந்தவர் அல்ல.
அறிவு என்பது நினைவாற்றலின் மூலமாக வருவது; ஞானம் தியானத்தின் மூலமாக கிடைப்பது. இயந்திரத்துக்கு கூட அறிவு சாத்தியப்படும். அதனால்தான் கம்ப்யூட்டர்கள் அறிவுடன் இருக்கின்றன ! ஆனால் எந்த கம்ப்யூட்டரும் ஞானம் பெற்றதாக இருக்க முடியாது. ஞானியான கம்ப்யூட்டர் பற்றி நீங்கள் கேள்விப்பட்டிருக்கிறீர்களா ?

அறிவுடைய கம்ப்யூட்டர் சாத்தியம்தான். மனிதனை விட அதிக அறிவு உடையது .அதிக திறமை உடையது. குறைவாக தவறுகள் செய்யக்கூடியது. உடனடியாக மற்றும் மிக வேகம் கொண்டது. கேள்வி கேட்டால் பதில் உடனே உடனே தரக்கூடியது. ஆனால் அது ஏற்கனவே அந்த கம்ப்யூட்டருக்கு தரப்பட்ட பதிலாகத்தான் இருக்கும்.
அது புதிதாக தன்னிச்சை எதையும் சொல்லாது. சொந்த படைப்பாக எதுவும் இருக்காது. அதனால் அது ஞானம் கொண்டிருக்க முடியாது. அதை ஒரு மனித ஜீவனாக உங்களுடன் தொடர்புபடுத்தி படுத்திக் கொள்ள முடியாது . அது வெறுமனே உங்கள் கேள்விக்கு ஒரு பதிலாகத்தான் இருக்க முடியும்.
சூஃபியை நீங்கள் பெற்றிருக்கும் அறிவால் எடை போட்டு விடாதீர்கள். அவர் பிரபஞ்சத்தை உணர்ந்திருக்கிறார் என்பதை விட பிரபஞ்சம் அவரை உணர்ந்திருக்கிறது !

இந்த சூஃபி உங்களைப் போன்றே இருப்பார்.இருப்பினும் அவர் உங்களைப் போன்றவர் அல்ல. அவருக்கும் அதே உடல், அதே உடலமைப்புத்தான். ஆயினும் அவரின் உயிர்ருருவை ஏதோ ஒன்று அறியா இடத்திலிருந்து ஊடுருவியிருக்கிறது. அப்பால் உள்ளது அவர்களுக்குள் வந்தது. இந்த 'அப்பால் ' தொட்டுணரத் தக்க வகையில் இருக்கிறது. நீங்கள் கருணையோடும், நேசத்தோடும் அணுகினால் அவர்களின் அகச் சூழலின் சில கண நேரத் தோற்றங்களைக் காணமுடியும்.

சூஃபி என்பவர் இறைவனுக்குள் நுழைந்தவர். வாழ்க்கையின் மர்மத்தை ஊடுருவியவர். மெய்மையை எதிர்கொண்டவர்.
اَ لَّذِيْنَ يَتَّبِعُوْنَ الرَّسُوْلَ النَّبِىَّ الْاُمِّىَّ الَّذِىْ يَجِدُوْنَهٗ مَكْتُوْبًا عِنْدَهُمْ فِى التَّوْرٰىةِ وَالْاِنْجِيْلِ يَاْمُرُهُمْ بِالْمَعْرُوْفِ وَيَنْهٰٮهُمْ عَنِ الْمُنْكَرِ وَيُحِلُّ لَهُمُ الطَّيِّبٰتِ وَيُحَرِّمُ عَلَيْهِمُ الْخَبٰۤٮِٕثَ وَيَضَعُ عَنْهُمْ اِصْرَهُمْ وَالْاَغْلٰلَ الَّتِىْ كَانَتْ عَلَيْهِمْ
فَالَّذِيْنَ اٰمَنُوْا بِهٖ وَعَزَّرُوْهُ وَنَصَرُوْهُ وَ اتَّبَـعُوا النُّوْرَ الَّذِىْۤ اُنْزِلَ مَعَهٗ ۤ ۙ اُولٰۤٮِٕكَ هُمُ الْمُفْلِحُوْنَ

(ஆகவே, அவர்களில்) எவர்கள் எழுதப் படிக்கத் தெரியாத (நம்) தூதராகிய இந்த நபியைப் பின்பற்றுகிறார்களோ அவர்கள் தங்களிடமுள்ள தவ்றாத்திலும், இன்ஜீலிலும் இவருடைய பெயர் எழுதப்பட்டிருப்பதைக் காண்பார்கள்.

(இத்தூதரோ) அவர்களை நன்மையான காரியங்களைச் செய்யும்படி ஏவி, பாவமான காரியங்களிலிருந்து விலக்குவார். நல்லவைகளையே அவர்களுக்கு ஆகுமாக்கி வைப்பார். கெட்டவற்றை அவர்களுக்குத் தடுத்து விடுவார்.

அன்றி, அவர்களது சுமையையும் அவர்கள் மீதிருந்த (கடினமான சட்ட) விலங்குகளையும் (இறைவனின் அனுமதி கொண்டு) நீக்கிவிடுவார்.
ஆகவே, எவர்கள் அவரை உண்மையாகவே நம்பிக்கை கொண்டு, அவரை பலப்படுத்தி அவருக்கு உதவி செய்து, அவருக்கு இறக்கப்பட்ட பிரகாசமான (இவ்வேதத்)தைப் பின்பற்றுகிறார்களோ அவர்கள்தான் வெற்றி பெற்றவர்கள். (அல்குர்ஆன் : 7:157)

## சூஃபிகளின் உலகம் 4

(குருவை கண்டடைதல்



அது கி.பி.பதினோராம் நூற்றாண்டு. இராக் நாட்டின் பக்தாத் நகரில் இருந்த நிஜாமிய்யா பல்கலைக்கழகத்தில் இஸ்லாமிய சமயக் கல்வியை முழுமையாகக் கற்றுத் தேர்ந்து சமய அறிஞர் (ஆலிம்) என்னும் பட்டமும் பெற்று வெளியேறுகிறார்கள் முகைதீன் ஆண்டகை.

‘ஏட்டுச் சுரைக்காய் கறிக்கு உதவாது’ என்பது அவர்களுக்குப் புரிகிறது. ஏட்டில் பெற்ற சமயக் கல்வி இறையனுபவத்தை, ஞானத்தைத் தராது என்றும் அதற்கான கலையைத் தக்க குருவிடம் பெற வேண்டும் என்றும் உணர்கிறார்கள். விதியில் தனக்கென்று எழுதப்பட்டுள்ள ஆன்மிக குருவைத் தேடிப் பல நபர்களைச் சந்திக்கிறார். நல்ல அறிஞர்களாக இருந்தவர்கள் கூட குரு என்னும் ஸ்தானத்தில் தன்னைக் கவரவில்லை என்று உணர்கிறார்கள்.

அப்படி பாக்தாத் நகர வீதிகளில் ஒருநாள் நடந்துகொண்டிருந்தபோது எதிரே ஒரு சர்பத் வியாபாரி தன்னுடைய வண்டியைத் தள்ளிக்கொண்டு வருவதைப் பார்க்கிறார்கள் . மக்களின் பார்வைக்குப் படாத ஒரு விஷயம் முகைதீன் ஆண்டகையின் கூர்மையான கவனிப்பில் விழுகிறது. அதாவது அந்த சர்பத் வியாபாரியின் இனிப்புப் பதார்த்தங்கள் மீது ஈக்கள் மொய்க்கவில்லை.

இது பற்றி அவரிடம் வினவியபோது அவர் அலட்டிக் கொள்ளாமல் ”நெருப்பில் ஈக்கள் மொய்ப்பதில்லை தம்பி” என்று சொல்கிறார். ஹழ்ரத் ஹம்மாத் என்னும் அவர்களே தான் தேடிய குரு என்று அவர்களிடம் முகைதீன் ஆண்டகை தீட்சை பெற்றார்கள்.

மௌலானா ரூமி (ரஹ்) அவர்களின் வாழ்விலும் இதே போல் ஒரு நிகழ்ச்சி. அவர்களுடைய மூன்றாம் குருவாக விளங்கியவர்கள் சலாஹுத்தீன் ஸர்கூப் (ரஹ்) என்பவர்கள். அவர்கள் ஒரு பொற் கொல்லர். அவரைத் தன் குருவாக மௌலானா ரூமி (ரஹ்) அவர்கள் எப்படித் தெரிந்துகொண்டார்கள் என்பது சுவாரஸ்யமானது.

ஒருநாள் அவர்கள் தன் மாணவர்களுடன் கடைவீதியில் நடந்து கொண்டிருந்தபோது சலாஹுத்தீனின் பட்டறையைக் கடந்து செல்ல நேர்ந்தது. அப்போது சலாஹுத்தீன் பொற்கொல்லர் வேலையில் ஈடுபட்டிருந்தார்.

அவர் சுத்தியலால் தட்டும் ஓசை மௌலானா ரூமியை அப்படியே இழுத்துப் பிடித்து நிறுத்திவிட்டது. ஆழ்ந்த தியானத்தில் மட்டுமே கேட்கும் கிரகங்களின் இசை (சவ்த்தெ சர்மத்) அந்தக் கொல்லரின் சுத்தியலிலிருந்து வெளிப்பட்டுக் கொண்டிருந்தது!

சமயக் கல்வியில் கரைகண்ட மேதையாக, ஆயிரத்திற்கும் மேலான மாணவர்களைப் பெற்றிருந்த மௌலானா ரூமி மக்களின் பார்வையில் மிகவும் தாழ்ந்த நிலையில் இருந்த சலாஹுத்தின் ஸர்கூப் அவர்களை அக்கணமே தன் ஆன்மிக வழித்துணையாக ஏற்றுக் கொண்டார்கள்.

பிரபஞ்சத்தில் அண்டகோளங்கள் ஒருவித ஒழுங்குமுறையில், தாள கதியில், லயத்தில் இயங்கிக் கொண்டிருக்கின்றன. சலாஹுத்தீன் ஸர்கூப் அந்தப் பிரபஞ்ச இயக்கத்துடன் ஒத்திசைந்து இயங்குபவர்களாக இருந்திருக்க வேண்டும். அது அவர்களின் தொழிலில் பிரதிபலித்தது. அதனையே மௌலானா ரூமியின் அவர்களின் அகப்பார்வை கண்டுகொண்டது. அந்த ஒத்திசைவைத் தன் இயல்பான அசைவுகளில் உருவாக்கியதே அவர்கள் செய்த ஆன்மிக சாதனை. இதை நாமும் நம் அன்றாட வாழ்வில் கொண்டு வரலாம் அல்லவா?

## சூஃபிகளின் உலகம் 5

( மெய்மையை மெய்யாகவே காண்பவர்கள் சூஃபி )

ஒரு சீனப் பேரரசர் தன் படுக்கை அறையில் ஒரு ஓவியம் தீட்டப்பட வேண்டும் என்று விரும்பினார். தன் கனவில் ஒரு வெள்ளை நாரை முழு நிலவை தாண்டி பறப்பதைக் கண்டார் அதை ஓவியமாக்க விரும்பினார். மிகப்பெரிய ஓவியவரை தேடினார் .மிகப் பெரிய ஓவியர் என்று அறியப்பட்ட ஒருவர் கிடைத்தார். அவர் ஒரு பெண்.

"நான் கனவில் கண்டது ஓவியமாக வேண்டும் என்ன சன்மானம் வேண்டுமானாலும் தருகிறேன் " என்றார்.

" நீங்கள் காத்திருக்க வேண்டும் "என்றாள் அந்தப் பெண்.

ஒரு வருடம் ஆயிற்று அரசர் விசாரித்தார்.

"காத்திருங்கள்" என்றாள் .

மீண்டும் மீண்டும் அதே பதில்தான். சில வருடங்கள் கடந்த பிறகு அரசர் கேட்டார், "எவ்வளவு காலமாகும். முழுநிலவைக் கடந்து போகும் ஒரு நாரை, இந்த சின்ன ஓவியம் தீட்ட இன்னும் எவ்வளவு காலமாக ஆகப்போகிறது ? " என்றார் அரசர்.

அந்தப் பெண் சொன்னது: " நான் ஒவ்வொரு முழுநிலவன்றும் கவனித்துக் கொண்டிருக்கிறேன் ,ஒரு நாரைக் கூட இதுவரை நிலவை கடந்து போகவில்லை. அது போகும் வரை என்னால் ஓவியம் வரைய முடியாது. மேலும் நான் ஆண் இல்லை,கற்பனையில் வாழ்வதற்கு . பெண் நான் கனவவியளாளர் அல்ல. மெய் மெய்யாக உணரும் வரை நிஜமில்லா கற்பனையை ஓவியமாக வரைய என்னால் முடியாது.அருவமானவற்றை என்னால் கற்பனை செய்ய முடியாது. அதைப் பார்க்க வேண்டும் நடப்பதைக் கண்டால் தான் என்னால் அதை செய்ய முடியும் " என்றாள்

அரசர் அவள் கருத்தை புரிந்து கொண்டார் " ஓவியம் தேவையில்லை. நீ சொல்வது எனக்கு புரிகிறது. கவலைப்படாதே உனக்குரிய சன்மானம் வழங்கப்படும் " என்றார்

"வரையாத ஓவியத்திற்கு எப்படி சன்மானம் பெற முடியும் ?" என்று கேட்டாள் .

" நீ முழு நிலவை பார்க்கும் போதெல்லாம் நீ தூரிகையுடன் காத்திருந்ததை ,என்னால் எளிதாக கற்பனை செய்ய முடிகிறது. அதற்குரிய சன்மானம்தான் இது " என்றார்.
இது வெறும் கதை அல்ல .மெய்மையை மெய்யாகவே காணத் துடித்தவளின் மெய்யுணர்வு இது.
நபிமார்கள் 'வஹீ 'மூலம் இறைவனிடமிருந்து ஆன்மீக . அறிவை பெற்றனரோ, அதே போன்று சூஃபிகள் இல்ஹாம் மூலம் இறைவனிடமிருந்து ஆன்மிக அறிவைப் பெற்றார்கள்.
இதனையே பாயஸீத் பிஸ்தாமி (ரஹ்) அவர்கள் "நீங்களெல்லாம் இறக்கக்கூடிய மனிதர்களிடருந்து அறிவை பெறுகின்றீர்கள். நாங்களோ பிறப்பில்லா இறைவனிடமிருந்து அறிவை பெறுகின்றோம் " என்று கூறினார்கள்.
சூஃபிகள் கற்பனை கலவாத மெய்யிலிருந்து மெய்மையை மெய்யாகவே கண்டவர்கள்.
இவர்கள் சொல்வது, கற்பனை அல்ல ; நிஜம்.

## சூஃபிகளின் உலகம் 6

துறவு தந்த பொக்கிஷங்கள்





இஸ்லாமிய எழுத்துலக மாமன்னர், தத்துவ பேரறிஞர், ஆலிமே ஷரீஅத், இமாமே தரீகத், ஜமாலுல் இஸ்லாம், ஹுஜ்ஜதுல் இஸ்லாம் இமாம் அபூஹாமித் முஹம்மத் அல் கஸ்ஸாலி (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் ஹிஜ்ரி 450 ரபீயுல் ஆகிர் பிறை 27 (கி. பி. 1058) அன்று ஈரான் நாட்டில் "தூஸ்" என்னும் ஊரில் பிறந்தார்கள்.
'இமாமுல் ஹரமைன்" அபுல் மஆலி அல் ஜுவைனி (ரலியல்லாஹு அன்ஹு) என்ற பெரியாரிடம் மார்க்க கலை, தத்துவ கலை, தர்க்க கலை, மொழி ஆராய்ச்சி, இயற்கை விஞ்ஞானம், ஆத்மஞானக் கல்வி ஆகியவற்றை கற்று சிறந்த மார்க்க மேதையாக விளங்கினார்கள்.

மார்க்க அறிவும், ஆன்மிக அறிவும் மெய்யறிவின் இருவேறு பிரிவுகள் ஆகும். இரண்டும் வெவ்வேறு தன்மை பெற்றதாகும் இமாம் கஸ்ஸாலி ரஹ்மத்துல்லாஹி அவர்கள் ஜாமியா மதரஸாவின் முதல்வராக இருந்து பணியாற்றிய பல ஆண்டுகளுக்குப் பின்தான் இந்த உண்மையை கண்டறிந்தார்கள்.
மாபெரும் மார்க்க விற்பன்னர்களாகிய தாம் ஆன்மிக கடலில் கணுக்கால் அளவு தண்ணீரில் தான் இருக்கக் கண்டார்கள். ஆனால் ஆன்மீக அறிஞர்கள் என்னும் ஞானிகள் குறைந்த அளவு கல்வியோ , அல்லது கல்வியை கற்காமலோ ஆன்மீகக்கடலில் மூழ்கிக் குளித்து முத்தெடுத்துக் கொண்டிருப்பதை கண்டார்கள் .
இமாமவர்கள் தம் வாழ்வில் வெறுப்புற்று பதவியை துறந்து, நாடு துறந்து ஆன்மிகத் துறையில் ஈடுபட்டனர். ஹிஜ்ரி 488 (கி. பி. 1096) இல் பக்தாத்தை விட்டு சிரியா நாட்டுக்கு சென்று காடுகளிலும், மண்டபங்களிலும், தங்கி தியானத்திலும்,

தொழுகையிலும், நப்ஸை அடக்குவதிலும் ஈடுபட்டு துறவை மேற்கொண்டார்கள். இந்த நேரத்தில்தான் தனது உலக புகழ் பெற்ற மகத்தான நூலான
“இஹ்யாவு உலூமித்தீன்” என்ற மாபெரும் கிரந்தத்தை எழுதினார்கள்.இதுபற்றிய தங்களின் அனுபவங்களை அவர்கள் "பிழையிலிருந்து விடுதலை" என்ற தம் நூலில் கூறியுள்ளார்கள்.

பிறகு மஃரிபா என்னும் ஆத்ம ஞானத்தை யூஸுப் அல் நஸ்ஸாஜ் (ரலியல்லாஹு அன்ஹு) என்ற பெரியாரிடம் கற்றார்கள்.இதன் பின்தான் அவர்கள் மன அமைதி பெற்று, தாம் உண்மையான மெய்யுணர்வை பெற்றதாக உணர்ந்தார்கள்.

இமாம் கஸ்ஸாலி அவர்கள் எழுதிய முதல் கிதாபு “கிதாபுல் மங்கூல்” ஆகும். இந்த கிதாபை தன்னுடைய ஆசிரியரிடம் காட்டியபோது, அதைப்பார்த்த ஆசிரியர், இமாம் கஸ்ஸாலி (ரலியல்லாஹு அன்ஹு) அவர்களிடம் கூறினார்கள்: “நான் உயிரோடு இருக்கும் போதே என்னை நீங்கள் நல்லடக்கம் செய்து விட்டீர்கள். நான் மரணிக்கும் வரை காத்திருக்கக்கூடாதா? உங்களுடைய இந்த கிதாபு, நான் இதுவரை எழுதியவற்றை எல்லாம் இடம் தெரியாமல் ஆக்கிவிட்டது” என்று புகழ்ந்தார்கள்.

ரிபாய் தரீக்காவின் ஸ்தாபகர் சுல்தானுல் ஆரிபீன் அஹ்மது கபீர் ரிபாயீ (ரலியல்லாஹு அன்ஹு) அவர்களின் “புர்ஹானுல் முஅய்யத்” என்ற நூலிலும், ஸுஹ்ரவர்த்தி தரீக்காவின் ஸ்தாபகர் இமாம் ஸுஹ்ரவர்த்தி (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் எழுதிய “அவாரிபுல் மஆரிப்” என்ற நூலிலும் இஹ்யாவு உலூமித்தீனிலுள்ள கருத்துக்கள் பல காணப்படுகிறது.

இமாம் கஸ்ஸாலி (ரலியல்லாஹு அன்ஹு) அவர்களின் மஃரிபா போதனையை பின்பற்றியே, ஷைகுல் அக்பர் முஹியித்தீன் இப்னு அரபி (ரலியல்லாஹு அன்ஹு) தமது நூல்களை எழுதியுள்ளார்கள்.
கௌஸுல் அஃலம் முஹியத்தீன் அப்துல் காதிர் ஜீலானி (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் “குன்யதுத் தாலிபீன்” என்ற தனது நூலில் நாதாக்களின் ஆதாரங்களை கூறுவதைவிட அதிகமாக இமாம் கஸ்ஸாலி (ரலியல்லாஹு அன்ஹு) அவர்களின் நூல்களில் இருந்தே ஆதாரங்களை கூறியுள்ளார்கள்.

பகல் முழுவதும் நோன்பு நோற்று, இரவு முழுவதும் நின்று வணங்கு கிறார். அவ்விருவர்களில் சிறந்தவர் யார்? என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் வினவப்பட்டது. அதற்கு நபியவர்கள் ‘வணக்கசாலியைவிட மக்களுக்கு நல்லதை கற்றுக் கொடுக்கும் கல்வியாளரே சிறந்தவர்’ என பதில் கூறினார்கள். (தாரமீ, திர்மிதி)

## சூஃபிகளின் உலகம் 7

(உங்கள் வயது என்ன? இரண்டு )



ஒருமுறை பெருமானார் (ஸல்) அவர்கள் அலீ (ரலி) அவர்களுக்கு ஞானகுருவின் அருமைபெருமைகளைப் பற்றி பின்வருமாறு உபதேசித்தார்கள்.

'அலீயே ! நீங்கள் அல்லாஹ்வின் அரிமா! துணிச்சலான வீரர். ஆனால் அதற்காக உங்கள் சிங்க மனத்தை நம்பியிருக்க வேண்டாம். நம்பிக்கை எனும் ஈச்சமர நிழலில் ஒதுங்கிவிடுங்கள். ஞானகுருவின் நிழலெனும் பாதுகாப்புக்குள் வந்துவிடுங்கள். அதன் பின் நேரான பாதையில் செல்வதிலிருந்து உங்களை யாரும் தடுக்க முடியாது.

'ஞானகுருவின் குணாம்சங்களைப் பற்றி நான் பேசவேண்டுமெனில், இறுதித் தீர்ப்பு நாள் வந்தாலும் முடிக்க முடியாது. தெய்வீகச் சூரியன் தன்னை மனிதனிலே மறைத்துக்கொண்டான். இந்த மர்மத்தைப் புரிந்துகொள்ளுங்கள். எது சரி எது தவறு என்பதைப் பொறுத்த மட்டில் இறைவனே போதுமானவன்.
'அலீயே ! பக்தியான செயல்பாடுகள் ஆயிரமாயிரம் உண்டு. ஆனால் அவற்றில் இறைவனின் அடிமைச் சேவகனாகிய ஞானகுருவின் நிழலை நீங்கள் தேர்ந்தெடுத்துக் கொள்ளுங்கள்.

'ஏதாகிலும் ஒரு பக்தியான செயல்பாட்டில் ஈடுபட்டு மக்கள் தங்களைக் காப்பாற்றிக் கொள்கிறார்கள். நீங்கள் குருவின் நிழலில் அடைக்கலம் தேடுங்கள். அப்போதுதான் உங்களுக்கே தெரியாத உங்களின் ரகசிய எதிரிகளிடமிருந்து நீங்கள் தப்பிக்க முடியும்.
'குருவானவர் உங்களை ஏற்றுக்கொண்டபின், அவரிடம் முழுமையாக உங்களை ஒப்படைத்துவிடுங்கள். கிளறு அவர்களிடம் மூஸா தன்னை ஒப்படைத்ததுபோல.
கிளறு சொல்வதையெல்லாம், செய்வதையெல்லாம் பொறுமையுடன் ஏற்றுக்கொள்ளுங்கள். அவர் கோபப்பட்டு, "போதும், இதுவே நமது பிரிவு '' என்று சொல்லாதபடி பார்த்துக்கொள்ளுங்கள்.
'அவர் படகைக் கவிழ்த்தாலும் சரி, குழந்தையைக் கொன்றாலும் சரி, ஒரு வார்த்தையும் பேசவேண்டாம். அவர்களுடைய கைக்கு மேலே இருப்பது தனது கைதான் என்று இறைவன் சொன்னான். ஞானகுருவின் கையானது தனது கைதான் என்றும் அவன் அறிவித்துள்ளான்.

'இறைவனுடைய கை குழந்தையைக் கொன்றால், மறுபடியும் அதற்கு உயிர் கொடுக்கும் அது. உயிர் என்பது என்றைக்குமே அழியாத ஒன்றுதானே ?
'குருவின்றி, யாராவதொருவர், அரிதாக, சரியான பாதையில் பயணம் செய்வாராகில், அதற்கும் பல ஞானகுருக்களின் இதயங்களின் கருணைதான் காரணம். சிஷ்யர்களாக இல்லாதவருக்கே ஞானகுரு இவ்வளவு கண்ணியம் செய்வாராகில், நேரடியான மாணாக்கர்களைப் பற்றி நான் என்ன சொல்ல ?
தங்கள் மாணாக்கர் குழுவில் இல்லாதவர்களுக்கும் ஞானகுருவானவர் ஆன்மீக உணவளிக்கையில், இருக்கும் சிஷ்யர்களுக்கு என்னவெல்லாம் கிடைக்கும் என்று சொல்ல வேண்டுமா என்ன ?

'குரு தரும் ஒவ்வொரு வேதனையும் தங்கத்தைப் புடம் போடுவதைப் போன்றதாகும். கண்ணாடியைத் தேய்த்துக் கழுவி சுத்தப்படுத்துவதைப் போல. இல்லையெனில் உங்களிடம் எப்படித் தெளிவு வரும் ? '

இவ்வாறாக ஞானக்கோட்டையின் தலைவாசலாகிய அலீ ( ரலி) அவர்களுக்கு, ஞானக்கோட்டையாகிய பெருமானார் (ஸல்) அவர்கள் குருவின் அவசியத்தையும் சிறப்புக்களையும் பற்றி எடுத்துரைத்தார்கள்.
எனக்கும் இறைவனுக்கும் இடையே இன்னொருவர் எதற்கு ? என்று கேள்வி வருவது மிகப் பெரிய அறியாமை . தான் எல்லாம் அறிந்து விட்டோம் , தன்னால் சகலமும் அறிய முடியும் என்கிற அறியாமை எவ்வளவு பெரிய கைசேதத்தில் விட்டு விடும்.

சில சமயம் சற்குருக்களை சாமானியரகளாக சித்திரிக்கப்படும்போது அவர்கள் தங்களை மறைத்துக் கொள்ளவே விரும்புகிறார்கள்.

சற்குருவின் தொடர்பு என்பது உலக ரீதியில் பொருளாதாரம் ,செல்வாக்கு , அந்தஸ்து குறித்த விஷயம் அல்ல. அது ஆன்மீக உலகில் நம் ஆத்மாவின் பிரவேசம் குறித்த விஷயம் .
இமாம் அபுஹனீபா (ரஹ்) அவர்களிடம் உங்கள் வயது என்ன? என ஒருவர் கேட்க,
அவர்கள், "இரண்டு வயது" என்றார்களாம்.
"என்ன இந்த முதிய வயதில் இரண்டு வயது என்கின்றீர்களே?" என்ற போது,
" இமாம் ஜாஃபர் சாதிக் (ரஹ்) அவர்களிடம் இரண்டு வருடம் கால் மடங்கி, அமர்ந்து பற்பல கல்விகளையும் கற்றுத் தேர்ந்தேன். அதை மட்டுமே நான் வாழ்ந்த வருடங்களாக கருதுகின்றேன் " என்று பதில் கூறினார்களாம் அவர்கள்.

## சூஃபிகளின் உலகம் 8

( "நீ ஞானத்தைத்தான் தேடினாலெழிய, என்னை அல்ல" )



எதையும் தர்க்கரீதியாக அணுகுவது 'முஹம்மது இப்னு அலீ திர்மிதீ' (ரஹ்) அவர்களின் இயல்பு. ஞானத்தின் பிழம்பாக, அறிவின் ஊற்றாக விளங்கிய அவரது சிந்தனை ஆற்றல் அபரிமிதமானது. இமாம் திர்மிதி, ( கி.பி. 824)ல் பாரசீக குடும்பத்தில் (இன்றைய உசுபெக்கிசுத்தான் நாட்டில்) உள்ள திர்மித் நகரில் பிறந்தார்கள்
அளவற்ற அறிவை வரமாகப் பெற்றிருந்த அவர், சிறுவயது முதலே, எல்லாவற்றையும் கேள்வி கேட்பவராக இருந்தார்கள். ஞானத்தின் அனைத்து வழிகளையும் ஏனென்ற ஒற்றைக் கேள்வியின் மூலம் தனது அறிவினுள் அடக்க முயன்றார்கள். அந்த முயற்சியில் அவர் வெற்றியும் பெற்றார்கள். இதனால்தான், ஆழமான கோட்பாடுகளையும், சிக்கலான சித்தாந்தங்களையும் சாமானியருக்கும் புரியும் வகையில் எளிய மொழியில் அவரால் எழுத முடிந்தது; விளக்க முடிந்தது.

தனது அறிவையும், தர்க்கத்தையும் எந்த அளவு நம்பினார்களோ, அதைவிட ஒருபடி மேலாக இறைவனை நம்பினார்கள். வாழ்வில் ஒருபோதும் அந்த நிலையை அவர்கள் மாற்றிக்கொள்ளவில்லை.
இளம் வயதில் இறைவணக்கமும்,தர்க்கமும் திர்மிதீ (ரஹ்) அவர்களின் வாழ்வில் ஒருவிதத் தேக்கத்தை ஏற்படுத்தின. வெளியூருக்குப் பயணம் மேற்கொண்டால், அந்தத் தேக்க நிலையிலிருந்து விடுபடலாம் என்று அவர்கள் நம்பினார்கள். தன்னுடைய நண்பர்கள் இருவருடன் இணைந்து ஆன்மிகப் பயணம் செல்வதற்கு ஆயுத்தமானார்கள். நண்பர்களின் பெற்றோர்கள் அவர்களை ஆசிர்வதித்து வழியனுப்பினர்கள். ஆனால், திர்மிதீயின் தாயார் மட்டும் மிகுந்த கவலையுடன் இருந்தார்.

அன்னையின் அருகில் அமர்ந்து, கையைப் பிடித்தபடி, ஏனென்று? திர்மிதீ (ரஹ்) காரணம் கேட்டார். "நானோ மிகுந்த இயலாமையில் இருக்கிறேன். வயதும் முதிர்ந்துவிட்டது. நோயும் என்னை வாட்டி எடுக்கிறது. நீயோ ஓர் உன்னதப் பயணத்தை மேற்கொள்ள இருக்கிறாய். உன்னைத் தடுக்கவும் எனக்கு மனமில்லை. ஆனால், துணைக்கு யாருமின்றித் தனியாக இருக்கும் என்னை நீ யாரிடம் ஒப்படைத்துச் செல்வாய்?" என்று அவருடைய தாயார் கவலையுடன் பதில் கேள்வி கேட்டார்.
தனது மனிதாபிமானமற்ற செயலின் வீரியத்தை திர்மிதீ (ரஹ்) அவர்கள் உணர்ந்தார்கள். பெரும் தவறு இழைக்கவிருந்தோம் என்று எண்ணி, வெட்கித் தலைகுனிந்தபடி, தாயின் கையைப் பிடித்து அழுதார்கள்.
உவைஸுல் கரனி (ரஹ்) அவர்களுக்கும் வயோதிக தன் தாயாரை பராமரிக்க வேண்டிய காரணத்தால் , அகிலத்திற்கு வந்துதித்த அண்ணலெம் பெருமானார் (ஸல்) அவர்கள் காலத்தில் உவைஸுல் கரனி (ரஹ்) அவர்கள் வாழ்ந்தும், சந்திக்க முடியாமல் போனது.
தன் தாயாருக்கு கடமையாற்றியதாலும், நபிகளாரின் மீது கொண்ட நேசத்தாலும் , நபிகளார் அவர்கள் மிஹ்ராஜின் போது, அணிந்திருந்த பரக்கத்தான அங்கியை தம் தோழர்களிடம் கொடுத்து, உவைஸுல் கரனி (ரஹ்) அவர்களுக்கு அனுப்பவில்லையா ? (" Santhu Khaja Faizee , நீங்க சொன்ன தகவலை பதிந்து விட்டேன். சந்தோஷம்தானே ? )
ஆகையால் தேடி கண்டடைய வேண்டிய ஞானம், தம் வீடு தேடி வந்தடையும் என்று திர்மிதீ (ரஹ்) அவர்கள் நம்பினார்கள்

பின் சிறிதும் தாமதிக்காமல், தன்னுடைய நண்பர்களைச் சந்தித்து, "மன்னித்துக்கொள்ளுங்கள். என்னால் இந்தப் பயணத்துக்கு வரமுடியாது. நீங்கள் மட்டும் சென்று, ஞானத்தை எனக்கும் சேர்த்துப் பெற்று வாருங்கள்" என்று சொல்லிவிட்டு, மீண்டும் தாயிடம் வந்தார்கள்.
தாயைக் கவனிப்பது, இறைவணக்கம், சிந்தனையை எழுத்தில் வடிப்பது, தனியே தர்க்கிப்பது ஆகிய செயல்களே அவர்களது வாழ்வாக மாறின. இருந்தாலும், திர்மிதீ (ரஹ்) அவர்களின் ஆழ்மனத்தில் பயணம் செல்ல முடியாதது குறித்து வேதனையும், ஏக்கமும் இருந்து கொண்டேயிருந்தன.
"பயணத்தின்மூலம் ஞானம் பெறும் வாய்ப்பு தனக்குக் கிடைக்காமல் போய்விட்டதே" என ஒரு நாள் தனிமையில் அமர்ந்து, அழுதுகொண்டு இருந்தார்கள். அப்போது அங்கு வந்த ஒரு முதியவர், "ஏன் அழுகிறாய்?" எனக் கேட்டார்.

நடந்த அனைத்தையும் ஒன்றுவிடாமல் அவரிடம் திர்மிதீ (ரஹ்) அவர்கள் சொல்லத் தொடங்கினார்கள். "என்னுடைய நண்பர்கள் ஞானம் பெற்றுவிடுவார்கள். நான் மட்டும் இங்கேயே தேங்கிவிட்டேன்" என்று கவலையுடன் சொன்னபடி அழத் தொடங்கினார்கள்.
"கடமையே வாழ்வின் உன்னத ஆசான். அதுவும் குறிப்பாகத் தாயைக் கவனிக்கும் கடமை. எனினும், கவலை வேண்டாம். பயணங்களில் கிடைக்கும் ஞானத்தைவிட மேலான ஞானத்தை நான் உனக்குக் கற்றுக்கொடுக்கிறேன். அழுவதை நிறுத்து. கற்றலை நாம் இன்றே தொடங்குவோம்" என்று சொன்னபடி திர்மிதீ (ரஹ்) அவர்களுக்கு அவர் ஞானத்தைப் போதிக்கத் தொடங்கினார்கள் .
அந்தப் பெரியாரைப் பற்றி திர்மிதீ (ரஹ்) அவர்கள் விசாரித்த போதெல்லாம் , " நீ ஞானத்தைத்தான் தேடினாலெழிய என்னை அல்ல" என்றே பதிலளித்தார்கள்.
திர்மிதீ (ரஹ்) அவர்களின் தர்க்கங்கள் பயனுள்ள ஒன்றாயின. அவருடைய கேள்விகள், முதியவரின் ஞானத்தில் மோதி பதிலாகத் திரும்பி, புது ஒளியை திர்மிதீ (ரஹ்) அவர்களின் ஆன்மிக வாழ்வில் பாய்ச்சின.

திர்மிதீ (ரஹ்) அவர்களின் ஆன்மிக ஞானம் விஸ்வரூபமெடுத்தது. உண்ணுவதற்குக் கூட நேரமின்றித் தனது நேரத்தை திர்மீதி (ரஹ்) அவர்கள் அந்த முதியவருடன் செலவிட்டார்கள். ஒன்றல்ல, இரண்டல்ல, மூன்று வருடங்கள் அவ்வாறு கழிந்தன. அறிவின் வடிவாக ஞானத்தின் பிழம்பாக திர்மிதீ (ரஹ்) அவர்கள் ஒளிரத் தொடங்கியபோது, அந்த முதியவர் மறைந்து போனார். அவரை ஊரெங்கும் திர்மீதி (ரஹ்) தேடினார்கள். ஆனால், அந்தத் தேடல்களால் அந்த முதியவரைக் கண்டுபிடிக்க முடியவில்லை. மீண்டும், திர்மீதி (ரஹ்) அவர்கள் கவலையில் மூழ்கத் தொடங்கினார்கள்.

ஒரு நாள், தூய ஆடை உடுத்தி, இறைவணக்கத்துக்கு திர்மிதீ (ரஹ்) அவர்கள் கிளம்பிச் சென்றார்கள். அப்போது மாடியிலிருந்து குப்பையை அவருடைய பணிப்பெண் தவறுதலாக அவர்மீது எறிந்துவிட்டார். அந்தப் பெண்ணிடம் மிகுந்து கோபத்துடன் திர்மிதீ (ரஹ்) அவர்கள் ஏதோ சொன்னார்கள்.
அந்தச் சொல்லின் வலி தாங்காமல் சினங்கொண்டு, தன்னிடமிருந்த குப்பை முழுவதையும் திர்மிதீ (ரஹ்) அவர்களின் மேல் அந்தப் பெண் கொட்டினார். ஏனோ அதற்கு திர்மிதீ (ரஹ்) அவர்கள் கோபம் கொள்ளவில்லை.

பொறுமையின் உருவமாய், அந்தப் பெண்ணை நோக்கி அன்புடன் புன்னகைத்தார்கள். அதற்கு அடுத்த நொடி, ஆச்சர்யம் ! அந்த முதியவர் மீண்டும் திர்மிதீ (ரஹ்) அவர்களின் முன் வந்து நின்றார்கள் .
அந்த நிகழ்வுக்குப் பின், திர்மிதீ தன் வாழ்வில் ஒருபோதும் கோபம் கொள்ளவில்லை. “கோபம் கொள்ளும் சூழ்நிலை ஏற்பட்டால், அவர்கள் வழக்கத்தைவிட அமைதியாகவும், அன்பாகவும் இருப்பார்கள் ” என அவர்களுடைய சீடர்கள் பின்னாளில் தெரிவித்தனர்.
எண்ணற்ற புத்தகங்களை திர்மிதீ (ரஹ்) அவர்கள் எழுதியுள்ளார்கள். சூஃபி தத்துவ இயலையும், மனித உளவியல் சித்தாந்தத்தையும் விளக்கும் ஒளியாக அவரது எழுத்துகள் இன்றும் விளங்குகின்றன. அவரது சுயசரிதை மனிதகுலத்தின் பொக்கிஷமாகக் கருதப்படுகிறது; போற்றப்படுகிறது; இன்றும் பாதுகாக்கப்படுகிறது.

இந்தச் சுயசரிதையே ‘இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்களின் சூஃபி உலக வாழ்வுக்கும், எழுத்துக்கும் அடித்தளமாக இருந்தது. ‘ஷைகுல் அக்பர் இப்னு அரபி (ரஹ்) அவர்களின் சூஃபி உலகின் மிகப் பெரும் ஞானியாக்கியதிலும் இந்தச் சுயசரிதைக்கு முக்கியப் பங்குண்டு.
சாமானியர்கள் மட்டுமல்லாமல் சூஃபி ஞானிகளுக்கும் வழிகாட்டியாகத் திகழ்ந்த அவர்கள் , கி.பி. 898-ம் ஆண்டில் இந்த உலகை விட்டு மறைந்தார்கள்.

## சூஃபிகளின் உலகம் 9




இமாம் கஸ்ஸாலி (ரலியல்லாஹு அன்ஹு) அவர்களின் சிறப்பை, மிகவும் அழகாக எடுத்துக்காட்ட ஷாதுலி தரீக்காவின் ஸ்தாபகர் இமாம் அபுல் ஹஸன் ஷாதுலி (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் தான் கண்ட ஒரு
**அருமையான**
கனவை தெரிவிக்கின்றார்கள்:

“ஒருநாள் பைத்துல் முகத்தஸ் பள்ளியில் நான் தூங்கிக்கொண்டிருக்கும் போது ஒரு கனவு கண்டேன். பள்ளிவாசலின் வெளியே ஹரத்தின் நடுவில் சிம்மாசனம் ஒன்று போடப்பட்டிருந்தது. மக்கள் கூட்டம், கூட்டமாக அங்கு வந்து நின்றுக் கொண்டிருந்தார்கள். அப்போது நான் அந்த சிம்மாசனத்தை பார்த்தேன். அங்கே எங்கள் பெருமானார் கண்மணி நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அன்னவர்கள் அந்த சிம்மாசனத்தில் அமர்ந்திருந்தார்கள்.
அங்கே இப்ராஹீம் (அலைஹிஸ்ஸலாம்), மூஸா (அலைஹிஸ்ஸலாம்), ஈஸா (அலைஹிஸ்ஸலாம்), நூஹ் (அலைஹிஸ்ஸலாம்) ஆகிய நபிமார்கள் அனைவரும் தரையில் அமர்ந்திருந்தார்கள். அவர்கள் பேசுவதை நான் கவனித்துக் கேட்டேன்.
ஸைய்யதுனா மூஸா (அலைஹிஸ்ஸலாம்) அவர்கள் நமது நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அன்னவர்களிடம் “உங்கள் உம்மத்திலுள்ள உலமாக்கள் பனீ இஸ்ராயீல்களின் நபிமார்களை போன்றவர்கள் என்று கூறினீர்களே, எவ்வாறு” என்று கேட்டார்கள்.

உடனே எங்கள் கண்மணி நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அன்னவர்கள் “இதோ” என்று இமாம் கஸ்ஸாலி (ரலியல்லாஹு அன்ஹு) அவர்களை சுட்டிக் காட்டினார்கள்.
இமாம் கஸ்ஸாலி (ரலியல்லாஹு அன்ஹு) தனது இடத்திலிருந்து எழுந்து பணிவோடு நின்றார்கள். அப்போது நபி மூஸா (அலைஹிஸ்ஸலாம்) அவர்கள் இமாம் கஸ்ஸாலி (ரலியல்லாஹு அன்ஹு) அவர்களிடம் ஒரு கேள்வி கேட்டார்கள். அதற்கு இமாம் கஸ்ஸாலி (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் 10 பதில்கள் அளித்தார்கள்.

உடனே நபி மூஸா (அலைஹிஸ்ஸலாம்) அவர்கள் “நான் கேட்டதோ ஒரே ஒரு கேள்வி. ஆனால் உங்கள் பதிலோ பத்தாக இருக்கிறதே” என்று கூறினார்கள்.
அதற்கு இமாம் அவர்கள் சொன்னார்கள். “நீங்களும் இதைப்போன்று தானே செய்தீர்கள். “மூஸாவே உமது வலது கையில் இருப்பது என்ன?” என்று ஒரே ஒரு கேள்வியைத்தானே அல்லாஹ் அஸ்ஸவஜல் உங்களிடம் கேட்டான். அதற்கு இது என் கைத்தடி என்று ஒரே பதிலில் சொல்லி இருக்கலாமே! ஆனால் நீங்களோ இது என் கைத்தடி, இதன் மீது நான் சாய்ந்துக் கொள்வேன், இதன் மூலம் என்னுடைய ஆடுகளுக்கு இலை, குலைகளை பறிப்பேன், இன்னும் இதன் மூலம் எனக்கு பல பிரயோசனங்கள் இருக்கின்றது என்று பல பதில்கள் அளித்தீர்களே!” என்று இமாம் கஸ்ஸாலி (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் பதில் கொடுத்தார்கள்.
(தப்ஸீர் ரூஹுல் பயான் பாகம் – 1, பக்கம் – 230)

இதிலிருந்து இமாம் கஸ்ஸாலி (ரலியல்லாஹு அன்ஹு) அவர்களின் சிறப்பையும் அறிவுக்கூர்மையையும் விளங்கிக்கொள்ளலாம். எனவே இத்தகைய அறிவு மாமேதையின் புத்தகங்கள் தமிழிலும் வெளிவந்துள்ளதால் நாமும் அவற்றை வாசித்து பயன் பெற முயற்சி செய்ய வேண்டும். குறிப்பாக நாம் இஹ்யாவு உலூமித்தீன் போன்ற நூல்களை வாசிப்பதன் மூலம் அறிவும், சிந்தனையும், நற்குணமும், ஒழுக்கமும் உண்டாகும்.
இத்தகைய சிறப்புக்குரிய இமாம் கஸ்ஸாலி (ரலியல்லாஹு அன்ஹு) அவர்களுக்கு கொடுத்து அறிவைப் போன்று, ஒரு சிறிதளவாவது ஏழைகளான நமக்கும் எல்லாம் வல்ல அல்லாஹ் அஸ்ஸவஜல் தந்தருள்வானாக!

## **ஸூஃபிகளின் உலகம் 10**



பலக் நாட்டின் அரசராக இருந்து, அரச பதவியை துறந்து, ஸூஃபியானவர் இப்ராஹீம் இப்னு அத்ஹம் (ரஹ்) அவர்கள் இறைநேசச் செல்வர்களைப் பற்றி கூறும்போது,
"அவர்களின் உள்ளம் எப்போதும் இறை சிந்தனையில் மூழ்கியும் , இறைவனுக்கு நன்றி செலுத்திக் கொண்டும் , இறைவனின் பேராற்றலைப் பற்றி நினைவு கூர்ந்து கொண்டும் இருக்கும் "
இப்ராஹீம் இப்னு அத்ஹம் (ரஹ்) அவர்கள் மஃரிஃபா என்ற இறை அகமிய ஞானத்தை ஒரு கிறிஸ்துவ துறவியிடமிருந்து தனக்கு கிடைக்கப் பெற்றதாக கூறினார்கள் அதுபற்றி அவர்கள் :
" நான் மஃரிஃபாவை ' ஸம்அன் ' என்ற கிறிஸ்தவ துறையிடமிருந்து கற்றுக்கொண்டேன். அவரின் தவமடம் சென்ற நான்,
" இங்கு எவ்வளவு காலமாக வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள் ?" கேட்டேன் .
" 70 ஆண்டு காலமாக " என்று அவர் பதில் கூறினார்
" என்ன உணவு உண்கிறீர்கள் ?"
"ஹனீஃபே..! (உருவமற்ற ஓரிறை வணக்கவாளரே ! ) ஏன் அதுபற்றி வினவுகிறீர் ? " என்று கேட்டார்.

" அது பற்றி அறிய ஆவலாக உள்ளேன்" என்று கூறினேன்.

" ஓர் இரவுக்கு ஒரு பட்டாணிக்கடலை வீதம் உண்டு வருகிறேன்". என்று அவர் பதில் கூறினார்

"அது தங்களுக்கு போதுமா ? " என்று வியப்புடன் வினவினேன்.

அதற்கு அவர் " கீழே காத்திருக்கும் மக்களைப் பார்த்தீரா ? " என்று கேட்டார்.

"பார்த்தேன்" என்று கூறினேன் .

"அவர்கள் என்னை தரிசிப்பதற்காக ஆண்டுக்கு ஒரு தடவை இங்கு வந்து, என்னுடைய இந்த அறையை அலங்கரித்து, இதனை சுற்றி பலமுறை வந்து , என்னைக் கௌரவிக்கிறார்கள். எனக்கு இறை வணக்கத்தில் சிலபொழுது அலுப்பு ஏற்படின், அவர்கள் எனக்கு செய்யும் கௌரவத்தை எண்ணிப் பார்த்து மகிழ்ச்சியுறுகிறேன். ஆண்டுக்கு ஒரு நாளைக்கு கௌரவம் பெறுவதற்காக ஓராண்டு காலம் முழுவதும் வணக்கத்தில் ஈடுபட்டுள்ளேன். அவ்விதமாயின் , ஹனீஃபே..! நான் என்றென்றும் கௌரவம் பெற விரும்பினால் எத்தனை கடுமையான வணக்கத்தில் ஈடுபடவேண்டும் என்பதை நினைத்துப் பாரும் " என்று கூறினார்கள்.

அவருடைய இந்த பேச்சு எனக்கு மாபெரும் அறிவு விளக்கத்தை வழங்கியது. மேலும் ஏதாவது அறிவுரை பகருமாறு அவரை வேண்டினேன்.

அது கேட்டு, அவர், " கீழே இறங்கும் " என்று கூறினார்.

அவ்வாறே நான் கீழே இறங்கியதும், அவர் ஒரு வாளியை கீழே இறக்கினார் அதில் 20 பட்டாணிக்கடலை இருந்தன.

"நீ அங்கு உள்ள மாதா கோவிலுக்குச் சென்று அங்கு காத்திருக்கும் மக்களுக்கு நான் உமக்கு அளித்ததைக் காட்டும். அதன் பின் மேலே ஏறி என்னிடம் வாரும் " என்று அவர் கூறினார்.

அவர் வாளியை இறக்கியதைக் கண்ட மக்கள் என்னிடம் ஓடோடி வந்து, " ஹனீஃபே..! துறவி உமக்கு வாளியில் என்ன அனுப்பி வைத்தார் ? "என்று வினவினார்.

" அவர் உண்ணும் உணவில் சிறிது எனக்கு அனுப்பி வைத்தார்" என்று நான் பதில் சொன்னேன்.

" அப்படியா ! அதைக் கொண்டு நீர் என்ன செய்யப் போகிறீர் ? அதனைப் பெற நாங்கள் அல்லவா அதிகம் உரிமை உள்ளவர்களாக இருக்கிறோம்.எனவே அதற்கு ஒரு விலையை நீர் கேளும் நாங்கள் தருகிறோம்"என்று கூறினார்கள்.

நான் அதன் விலை 20 தீனார் (பொற்காசு) என்று கூறினேன். அவர்கள் மறு பேச்சு இன்றி அப்பணத்தை என்னிடம் தந்து, அந்த 20 பட்டாணி கடலைகளையும் என்னிடம் இருந்து பெற்றுக் கொண்டார்கள்.

நான் துறவியிடம் சென்று நடந்ததைக் கூறினேன்.

அது கேட்ட அவர், " நீர் தவறு செய்து விட்டீர். நீர் அவர்களிடம் ஒவ்வொரு பட்டாணிக்கடலைக்கும் ஆயிரம் தீனார் வீதம் 20 பட்டாணிக்கடலைக்கு இருபதினாயிரம் தீனார் கேட்டிருப்பின், அவர்கள் தந்திருப்பார்கள். இவற்றை விரும்பாத, இவற்றை வணங்காத ஒருவனுக்கு அளிக்கப்படும் கௌரவம் இதுவென்றால், இறைவனை வணங்கக் கூடிய ஒருவனுக்கு எத்தனை கௌரவம் கிடைக்கும் என்பதை எண்ணிப் பாரும். ஆதலின் ஹனீஃபே ! இனி நீர் அதனையும் ஏறிட்டுப் பார்க்காது இறைவனையே முன்னோக்கினவனாக இரும்" என்று கூறினார் .

## சூஃபிகளின் உலகம் 11

" யார் பேரழகு?... நிலவா ? நானா ?"




கலீபா ஹாரூன் ரஷீத் தன் மனைவி ஜுபைதாவுடன் பௌர்ணமி இரவன்று தம் மாளிகையின் நந்தவனத்தில் நிலவின் அழகை ரசித்துக் கொண்டிருந்தார்.

ஜுபைதா தம் கணவரை பார்த்து யார் பேரழகு.. ? நிலவா ? நானா ? என்று கேட்டார்.

அதற்கு அரசர், " அன்பே..! சுய உணர்வுடன்தான் பேசுகிறாயா..? மனதை ஈர்க்கும் சந்திரன் அழகு எங்கே ! நீ எங்கே ! நிலவுப் பெண்ணுடன் மனிதப் பெண்ணை ஒப்பிட முடியுமா ?

அரசி, " என் அழகுக்கு முன்னால் நிலவு நிற்கமுடியாது. நானே சந்திரனை விட அதிக அழகுடையவள் ஆவேன் " என்றார்.

இதைக் கேட்டதும் அரசருக்கு கோபம் வந்துவிட்டது . மன்னர்கள் எப்போதும் தங்கள் கருத்துக்கு எதிர்கருத்து வரவேக்கூடாது என்று எண்ணுபவர்கள்தானே !

" உன் வாதத்திற்கு நீ சரியான சான்றுகளைச் சமர்ப்பிக்க வேண்டும் இல்லையேல், உன்னை தலாக்- மன்னிப்பு கோரவும் அவர் விரும்பவில்லை . கணவரின் சவாலை அவர் ஏற்றுக்கொண்டார். இருவரும் சற்று மனத்தாங்கலுடன் நந்தவனத்தில் இருந்து திரும்பினர்.

அதிகாலை அரசி ஜுபைதா காத்தூன் தன்னுடைய அந்தரங்கத் தோழியிடம் எல்லா விபரங்களையும் கூறி, புஹ்லூல் தானா (ரஹ்) என்ற சூஃபி அவர்களிடம் அனுப்பினார்

"தாங்கள்தான் என் தாவாவுக்கு அத்தாட்சி அளிக்க வேண்டும். என் கணவரை விட்டுப் பிரிய விரும்பவில்லை. அவர் கோபத்தில் என்னை தலாக் சொல்லி விடுவதாக கூறிவிட்டார். இப்போது தாங்கள்தான் இப்பிரச்சனையை தீர்த்து வைக்கவேண்டும் " என்று தோழியிடம் சொல்லி அனுப்பினார்.

தோழிப்பெண் அவர்களைத் தேடிப்பிடித்து, செய்தியை சமர்ப்பித்தார் . புஹ்லூல் சூஃபி அவர்கள் அந்தப் பெண்ணைப் பார்த்து, " இம்மாதிரியான பிரச்சனைகளையெல்லாம் என்னிடம் கொண்டுவரக் கூடாது. கணவன் மனைவிக்கிடையே உள்ள பிணக்குகளைத் தீர்த்து வைப்பது என் வேலையல்ல .இந்த ஒரு முறை மட்டும் ஒரு பிரச்சனையை எடுத்துக் கொள்கிறேன். இனி அவர்கள் இது போன்ற காரியங்களில் ஈடுபடக்கூடாது என்று எச்சரித்தேன் - என்று உன் தலைவியிடம் சொல்லிவிடு" என்றார்.

அதிர்ஷ்டவசமாக அன்று வெள்ளிக் கிழமையாக இருந்தது. சூஃபி அவர்கள் வெகு சீக்கிரமே அரசாங்க பள்ளிக்கு வருகை தந்து, மன்னருக்கு உரிய பிரத்தியேக இடத்தில் அமர்ந்து கொண்டார் .

மஸ்ஜிதில் இமாம் சூஃபி அவர்களின் எளிமையான வெளித் தோற்றத்தைக் கண்டு, "ஹஜரத்..! இது அமீருல் மூமினீன் அமரும் இடமாயிற்றே ! தாங்கள் வேறு ஓர் இடத்தில் அமர்ந்து கொள்ளுங்கள் "என்றார் .

அதற்கு புஹ்லூல் , "மஸ்ஜித் இறை இல்லமாகும். கலீஃபா எப்படி ஓர் இறையடியாரோ அப்படியே நானும் ஓர் இறையடியான்தான்! இறை இல்லத்தில் உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்ற ஏற்றத்தாழ்வு எப்படி ஆகுமானதாகும் ?" என்றார்.

இமாம் ஒன்றும் சொல்லவில்லை. இன்று இந்த பரதேசியின் தலை கீழே உருளப்போகிறது என்று தமக்குள் எண்ணினார். புஹ்லூல் மஸ்ஜித் இமாமை நோக்கி, " சகோதரரே ! இன்று தொழுகையில் ' வத்தீனி ' அத்தியாயத்தை ஓதுங்கள். அவ்வாறு ஓதும்போது, 'லகத் கலக்னல் இன்ஸான பீ அஹ்ஸனி தக்வீம் ' لَقَدْ خَلَقْنَا الْإِنسَانَ فِيْ أَحْسَنِ تَقْوِيْمٍ ( நிச்சயமாக மனிதனை நான் மிக அழகான வடிவத்தில் படைத்தோம்) என்ற வசனம் வரும் இடத்தில், "லகத் கலக்னல் கமர பீ அஹ்ஸனி தக்வீம் ( நிச்சயமாக சந்திரனை நாம் மிக அழகான வடிவத்தில் படைத்தோம் ) என ஓதுங்கள் என்றார்.

பேஷ் இமாம் திடுக்கிட்டார். " அது என்ன இது திருக்குர்ஆனின் மாறுதல் செய்யும்படி ஏவுகிறீரா? நீர் கொல்லப்படுவதுடன் , என்னையும் கொலை செய்ய விரும்புகிறீரா ? "
சூஃபி அவர்கள் எந்த பதிலையும் அளிக்காமல், அவருடைய முகத்தை சற்று நேரம் கூர்ந்து பார்த்தார். அந்த பார்வையில் என்ன இருந்ததோ தெரியவில்லை. இமாம் இறங்கி வந்து, அவருடைய வேண்டுகோளுக்கு கட்டுப்பட்டு வத்தீனி அத்தியாயத்தை ஓதச் சம்மதித்தார்.
தொழுகை நேரம் நெருங்கியது. தொழுகையாளிகள் பள்ளியில் நிறைந்தனர். மன்னர் ஹாரூனும் வந்துவிட்டார் .
தம்முடைய இடத்தில் ஒரு பக்கீர் வீர ஆவேசமாக அமர்ந்திருக்கக் கண்டு, அமைதியாக அவருக்கு பக்கத்தில் அமர்ந்து கொண்டார்.
இமாம் குத்பாவுக்குப் பிறகு தொழுகையை ஆரம்பித்தார். 'வத்தீனி' ஓதத் துவங்கி, "லகத் கலக்னல் கமர பீ அஹ்ஸனி தக்வீம்" என ஓதி விட்டார் !
உடனே மன்னர் கலீபா, " இமாம் திருக்குர்ஆனில் மாற்றம் செய்கிறார். அவர் சிரச்சேதம் செய்யப்பட வேண்டும்" என்றார் .

சூஃபி புஹ்லூல் குறுக்கிட்டு, " இல்லை ! திருக்குர்ஆனில் மாற்றம் செய்தது இமாம் அல்ல , மன்னர் கலீஃபாவாகிய நீங்கள்தான் மாற்றம் செய்து விட்டீர்கள். இங்குள்ள எல்லா குர்ஆனும் இரவோடு இரவாக மாற்றப்பட்டு விட்டது . இந்த மசூதி இமாம் அவர்களும் மன்னரின் விருப்பத்திற்கேற்ப மாற்றப்பட்ட வசனத்தை ஓதினார் " என்றார்.
இதைக் கேட்ட மக்கள் வியந்தனர்.
மன்னர், " நான் திருக்குர்ஆனில் மாற்றும் செய்தேனா ? எங்கே? எப்போது ? என்ன ஆதாரம் ?
சூஃபி அவர்கள் அலமாரியிலிருந்து ஒரு குர்ஆன் பிரதியை எடுத்து காண்பித்தார். அதில் மாற்றம் செய்யப்பட்டிருந்தது. இதை கண்டு அதிர்ச்சி மன்னர் அடைந்தார் .
" நான் இந்த மாற்றத்தை செய்ய சொல்லவில்லை, அதுக்கு இறைவனே சாட்சி ! பெரியவரே , நீர் ஏனோ என் மீது வீண் பழி சுமத்துகின்றீர்கள்" என்றார்.

சூஃபி அவர்கள் , மன்னரை நோக்கி " நிலவை விட மனிதன் தான் அழகானவன் என்று நேற்று இரவு உன் மனைவி கூறிய போது, நீர் அதை ஏற்க மறுத்தீர் அல்லவா ? மனிதனைவிட நிலவுதான் அழகு என்று வாதிட்டீரே ! உமது துணைவியார் சொன்னதே உண்மை. இறைவனும் தன் திருமறையில் நாம் மனிதனை மிக அழகிய வடிவில் படைத்திருக்கின்றோம்' என்றுதான் கூறியிருக்கின்றான்.ஆனால் அதனை நீர் ஏற்றுக் கொள்ள மறுத்தீர்" என்றார் .
அரசர் உண்மை நிலையை அறிந்து பாவமீட்சி பெற்றார்.

**கூடுதல் குறிப்பு :-**
சூஃபி புஹ்லூல் தானா (ரஹ்) அவர்களின் மண்ணறை பாக்தாத் ரயில்வே நிலையத்திற்கு அருகில் உள்ளது. அவருடைய மண்ணறைக்கு பக்கத்தில் சீக்கிய மத ஸ்தாபகர் குருநானக் நாற்பதுநாள் தங்கியிருந்து தவம் செய்த இடம் இன்றும் பாதுகாக்கப்பட்டு வருகிறது. ஆயிரக்கணக்கான சீக்கியர்கள் அங்கே அதனை தரிசிக்க செல்கின்றனர்.

## சூஃபிகளின் உலகம் 12

மிஃராஜ் மாலை பாடிய ஆலிப் புலவர்




மண்ணுலகில் வாழ்ந்து கொண்டே பூத உடலோடு விண்ணுலகிற்கு அண்ணல் எம் பெருமானார் முஹம்மத் முஸ்தபா ரஸூல் ஸல்லல்லாஹூ அலைஹிவஸல்லம் அவர்கள் செய்த விண்வெளிப் பயணம் மிஃராஜ்.
இந்த பயணத்தின் மூலம் அல்லாஹ் அவர்களுக்கு விண்ணுலகைக் காட்டச் செய்த ஏற்பாடு என்றாலும், அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹிவஸல்லம் அவர்கள் மீது அவர்களின் தோழர்களுக்கு இருந்த நம்பிக்கையை உரைத்துப் பார்க்கச் செய்த ஏற்பாடும் ஆகும் அது.
கனவில் செய்யலாம் அதுபோன்ற பயணத்தை. ஆனால் அது நனவில் செய்யப்பட்டது. அது தான் வியப்பான விசித்திரம்

பெருமானார் முஹம்மத் முஸ்தபா ரஸூல் ஸல்லல்லாஹூ அலைஹிவஸல்லம் அவர்கள் மீது 'பானத் சுஆத்' என்னும் புகழ்பாடி அதற்குப் பரிசாக அவர்களின் புனித மேனி மீதிருந்தப் போர்வையால் போர்த்தப் பெறும் பெரும்பேறு பெற்ற அரபிக் கவிஞர் கஃபு இப்னு ஸூஹைறரின் வழிவந்தவர் 'மிஃ;ராஜ் மாலை' எனனும் அருங்காப்பியத்தைப் புனைந்த ஆலிப் புலவர் அவர்கள்.
அரபவனியில் இருக்கும்வரை உதிரத்தில் இருந்த கவித்திறன் அரபிக் கவிதைகளாக உருவெடுத்தது. அந்த உதிரத்திலிருந்த கவித்திறன் தமிழகம் வந்து தங்கி விட்டபோது தமிழ் கவியாக வடிவெடுத்தது. கஃபு இப்னு சுஹைறரின் உதிரம் தம் உடலில் ஒடப்பெற்ற பாக்கியம் பெற்றவர் ஆலிப்புலவர் அவர்கள்.
அண்ணல் எம் பெருமானார் முஹம்மத் முஸ்தபா ரஸூல்ஸல்லல்லாஹூ அலைஹிவஸல்லம் அவர்களைக் கனவில் காணவே பெரும் பேறு பெறவேண்டும். அவர்களை நனவில் காண எத்தகு பேறு பெற்றிருக்க வேண்டும்? அத்தகு பெரும்பேறு பெற்றவர்தான் ஆலிப்புலவர் அவர்கள்.
இன்று நெல்லை மாவட்டத்திலுள்ள " மேலச் சேவல் "என்று வழங்கப் பெறும் மங்கை நகரில் பிறந்தவர் ஆலிப்புலவர். மடாதிபதி ஒருவரின் இல்லத்தில் தங்கி தமிழ்கல்வி கற்ற இவர் மலையாள மொழியையும் அறிந்திருந்தார்.

முஸ்லிம்களுக்கென தமிழில் காவியங்கள் இல்லையென்றுணர்ந்த ஆலிப்புலவர், தாம் ஒன்று இயற்ற விரும்பி, அண்ணல் நபி ல்லல்லாஹூ அலைஹிவஸல்லம் அவர்களின் வான்பயணமான மிஃராஜை காவியமாக்க முனைந்தார்.

காயல்பட்டினம் சென்று நாஜி செய்யது முஹம்மத் அலாவுத்தீன் அவர்களிடம் அதற்கான உரைபெற்று காப்பியம் படைக்கத் தொடங்கினார்.ஹிஜ்ரி 998 ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட அந்த நூலுக்கு 'மிகறாசு மாலை' என்று பெயரிட்டார். அதனை அரங்கேற்றுவதற்கு முஸ்லிம்கள் யாரும் உதவ முன்வரவில்லை. கோட்டாற்றில் வாழ்ந்த தம் மாணவர் சிவலிங்கம் செட்டியாரிடம் செய்தியைக் கூறியபோது, அவர் மனம் வருந்தி தம் நண்பர் பாவாடைச் செட்டியார் என்பவரிடம் அதுபற்றிக் கூறினார்.

கண் பார்வையற்றவரான பாவாடைச் செட்டியார் அப்பணிக்கான செலவை ஏற்று நடத்த முன்வந்தார். அவ்வாண்டு ரஜப் மாதம் முதற்பிறையன்று காவியம் அரங்கேற்றமாயிற்று.

ஆலிப்புலவர் அதன் 110,111 ஆம் பாடல்களைப் பாடியபோது எதிரேயிருந்த வேப்பமரத்தில் ( இன்றைய வேம்படிப் பள்ளிவாசலில்) அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹிவஸல்லம் அவர்கள் திருத்தோற்றம் வழங்கி 'பைத்துல் முகத்தஸ் பள்ளிவாசலின் தூணில் துளையிட்டு புராக்கைக் கட்டியது இறைவனுக்கும் ஜிப்ரீலுக்கும் எனக்கும் மட்டும்தானேத் தெரியும். நீர் அதனை எவ்வாறு தெரிந்து பாடினீர் ?' என்று வினவ,
'நானும் அறியேன் அவ்வாறு என் வாயில் வந்துவிட்டது' என்று புலவர் கூற அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹிவஸல்லம் மகிழ்ந்து ஆலிப்புலவரைத் தழுவினார்கள். போர்வை ஒன்றையும் போர்த்தினார்கள்.
அப்போது அங்கு தோன்றிய ஒளியால் பாவாடை செட்டியாரும் கண்ணொளி பெற்றாராம். பெருமானரைக் கண்ட கண்களால் வேறொன்றையும் காணேன் என்று உறுதிபூண்ட ஆலிப்புலவர் தம் கண்களை மறைத்துக் கட்டிக்கொண்டு வாழ்ந்தனாராம்.

ஆயிரத்து நானூற்றி ஐம்பது ஆண்டுகளுக்கு முன் செய்யப்பட்ட விண்ணுலகப் பயணம் மிஃராஜ்ஜை பற்றி நானூற்று ஐம்பது ஆண்டுகளுக்கு முன் நெய்யப்பட்ட நூல்தான் மிஃராஜ் மாலை என்னும் காவியம். இஸ்லாமிய தமிழ் இலக்கியத்திற்கு வயது அதிகம். ஆயினும் இருக்கும் நூல்களில் இது இரண்டாவதாகும். முதல்நூல் ஆயிரம் மசாலா.

ஒருநாள் பாளையங்கோட்டை சென்றபோது மக்ரிப் தொழுகையில் ஸஜ்தா செய்து கொண்டிருக்கும்போது ஆலிப்புலவர் அவர்கள் உயிர்நீத்தார்கள். அது நடந்த நாள் ஹிஜ்ரி 1000 ஆண்டு ரமளான் பிறை 27 வெள்ளிக்கிழமையாகும். அவரின் அடக்கவிடம் பாயையங்கோட்டையில் 'ஆலியப்பா தர்கா' என்று அழைக்கப்படுகிறது.
அவருக்குப் பின் தோன்றிய உமர் புலவர் சீறாபுராணத்தில் மிஃராஜ் நிகழ்ச்சி பற்றிப் பாடாததற்குக் காரணம் ஏற்கனவே ஆலிப்புலவர் அதுபற்றி பாடிய காப்பியம் மக்களிடையே சிறப்புப் பெற்று வழங்கி வந்ததேயாகும். மேலும் அதுபற்றி அவர்பாட நினைத்தபோது, உமர் புலவரின் கனவில் ஆலியப்பா அவர்கள் தோன்றி அவ்வெண்ணத்தைக் கைவிடும்படி கூறியதுதான் காரணம் என்றும் சொல்லப்படுகிறது.
ஆலிப்புலவர் ரஹ்மத்துல்லாஹி அவர்களின் உதிரம் அவர் வழி வந்தவர்களின் உடலில் ஓடியது. அவர் உதிரம் ஓடிய அவர்கள் பலரின் நாவில் கவி ஊறியது. ஆலிப்புலவர் அவர்களுக்கு ஓர் ஆண் மகனும் இரண்டு பெண்மக்களும் இருந்தனர். அவர்களின் சந்ததியினர் கோட்டாற்றிலும், மேலப்பாளயத்திலும் இன்னும் வேறுபல ஊர்களிலும் வாழ்ந்து வருகின்றனர். அவர்களுள் பலர் பெரும்புலவர்களாகவும் அறிஞர்களாகவும் விளங்கியுள்ளனர். இன்னும் விளங்கிவருகின்றனர்.

(வரலாற்று தகவல்: பன்னுலாசிரியர் மர்ஹூம் எம்.ஆர்.எம் அப்துற் றஹீம்.) பதிவிலிருந்து ..

## சூஃபிகளின் உலகம் 13

ஏர்வாடி செய்யிது இப்றாஹிம் வலியுல்லாஹ்



சுல்தான் சையத் இப்ராஹீம் வலியுல்லாஹ், புனித மதினா மாநகரில் கி.பி. 1145-ஆம் ஆண்டு சைய்யிதா ஃபாத்திமா என்ற அம்மையாருக்கும், மதினாவின் ஆளுநர் சையத் அஹ்மத் என்பவருக்கும் மகனாகப் பிறந்தவர்கள்.
இவர் இறைத்தூதர் முஹம்மத்(ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களின் பேரர் ஹுசைன்(ரலியல்லாஹு அன்ஹு) அவர்களின் பதினாறாவது தலைமுறையினர் என்பது குறிப்பிடத் தக்கது. இவர் ஆரம்பத்தில் ஆட்சி நிர்வாகத்தில் தந்தைக்கு உற்றத் துணையாக இருந்தார்கள். தமது 25-ஆம் வயதில் ஸைனப் என்ற பெண்மணியை மணந்து இல்லற வாழ்க்கையை இனிதே மேற்கொண்டார்கள்.

12 ம் நூற்றாண்டில் ஒரு நாள் அந்த ஆன்மீகச் செல்வர் உறங்கும் வேளையில் கண்மணி நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் கனவில் திருக்காட்சி நல்கி தமிழ்நாடு சென்று தீனுல் இஸ்லாத்தை பரப்புமாறு பணித்து விட்டு மறைந்தார்கள்.
கனவு கண்டு விழித்த அந்த ஆன்மீக செல்வர் இறைவனுக்கு சிரம் தாழ்த்தி இறைத்தூதர் சொன்ன சொல்லை நெஞ்சில் ஏற்று இறைத்தூதரின் ஏவலின்படி தமது 42-ஆம் வயதில் இஸ்லாமிய சமயப் பிரச்சாரப் பணியை மேற்கொண்டார்கள்.

மார்க்கப் பணி சிறப்புடன் செய்ய தமது நெருங்கிய நண்பர்களுடனும், உறவினர்களுடனும் ஆலோசனை நடத்தினார்கள். அதில் குறிப்பிடத் தகுந்தவர்கள் அவரது மைத்துனர் ஜைனுல் ஆபிதீன் மற்றும் மாவீரர்கள் சையத் காதிறும், சையத் முகையிதீனும் ஆவர்கள். அவர்கள் ஆலோசனைக்கு ஏற்ப 'றூம்' நாட்டு அதிபதி மகமது பாதுஷாவின் உதவியை நாடினார்கள்.
'றூம்' நாட்டு மன்னர் மட்டற்ற மகிழ்ச்சியுடன் புனித தீன் பிரச்சாரப் பணியினை மேற்கொள்ளத் தேவையான பொருளுதவி மற்றும் ஆளுதவி செய்ய முன் வந்தார். தமது படைத் தளபதிகளில் மதிநுட்பத்திலும், வீரத்திலும், பொறுமையிலும், கல்வியிலும், சமயப் பற்றிலும், விவேகத்திலும் சிறந்தவரான அப்பாஸ் என்னும் துருக்கிய தளபதியை சுல்தான் சையத் இப்ராஹீம்(வலி)க்கு துணையாக அனுப்பினார்.

முதல் கட்டமாக கி.பி.1165-இல் ஈரான், ஈராக், பலுசிஸ்தானம் ஆகிய பகுதிகளைக் கடந்து சிந்து, முல்தான் பகுதிகளில் மூவாயிரம் தொண்டர்களுடன் வந்தடைந்து அமைதியான முறையில் இஸ்லாமியச் சமயப் பிரச்சாரம் செய்து வெற்றி கண்டார்கள்.
பிறகு அடுத்த கட்டமாக கி.பி. 1186-இல், கண்ணூர் வழியாகத் தமிழகம் வந்தார்கள். நெல்லை, மதுரை, நாகை ஆகிய பகுதிகளில் சமயப் பணி மேற்கொண்டு அமைதியாக இஸ்லாமியச் சமயக் கருத்துக்களை விளக்கி வியாக்கியானம் செய்து வந்தார்கள்.

அப்போது பாண்டி நாட்டை அரசாண்ட ஐந்து மன்னர்களுக்குள்ளும் சுமுக உறவு நிலவவில்லை. அவர்களுக்குள் போட்டியும், பூசலும், பகைமையும் மலிந்து காணப்பட்டன. இதன் விளைவாக மார்க்க விளக்கம் புரிய வந்த சுல்தான் சையது இப்ராஹீம்(வலி) அவர்கள், வாளேந்த நிர்ப்பந்திக்கப்பட்டார்கள்.
அந்நாளில் பவுத்திர மாணிக்க நகரை ஆண்டு வந்த விக்கிரம பாண்டியன் தன் தம்பி குலசேகர பாண்டியனுக்கு பங்கு கொடுக்காததால் தன் அண்ணன் மீது வெறுப்புற்று இந்த ஆன்மீக செல்வரின் உதவியை வேண்டி அவரையே தூதனுப்பி பேச செய்கிறான்.

ஆன்மீக செல்வரும் குலசேகர பாண்டியனின் பரிதாப நிலைக்கண்டு விக்கிரம பாண்டியனிடம் சென்று எவ்வளவு முறையிட்ட போதும் அவன் பங்கு கொடுக்க மறுத்து விடுகிறான்.
நியாயத்துக்காக போராடி நீங்கள் தான் எனக்கு வழிகாட்ட வேண்டும் என குலசேகர பாண்டியன் கெஞ்சலானான்.. ஆன்மீக செல்வரும் அதை ஒப்பு கொண்டு பங்காளி துரோகத்தை முறியடிக்க தன்னிடம் இருந்த போர் வீரர்களையும் குலசேகர பாண்டியனிடம் இருந்த படை வீரர்களையும் ஒன்று திரட்டி அநியாயக்காரனான விக்கிர பாண்டியனுடன் போர் புரிகிறார்கள்..
அப்போரில் திருப்பாண்டியன் தோற்கடிக்கப்பட்டான். பிறகு தப்பி ஓடி திருப்பதியில் தஞ்சம் புகுந்தான். இதனால் அச்சமுற்ற குலசேகரப் பாண்டியனும் நெல்லையை விட்டுச் சென்று முகவைப் பகுதியை ஆண்ட தமயன் விக்கரம பாண்டியனிடம் தஞ்சம் புகுந்தான்.
இதன் விளைவாக, நெல்லை, மதுரை ஆகிய பகுதிகள் சுல்தான் சையது இப்ராஹீமின் மேலாண்மையின் கீழ் வந்தன. இப்பகுதிகளை மீட்பதற்காக விக்கிரம பாண்டியன் சுல்தானுக்கு எதிராக போர் தொடுத்தான்.
இப்போர் 'பத்துநாள் போர்' என்றழைக்கப்படுகிறது. இப்போரில் விக்கிரம பாண்டியனுடைய படைகள் தோற்கடிக்கப்பட்டன. அவனது இரு புதல்வர்களும் பல தளபதிகளும் கொல்லப்பட்டனர்.
வெற்றி வாகை சூடிய சுல்தான் சையது இப்ராஹீம்(வலி) ஏறத்தாழ பன்னிரெண்டாண்டுகள் (கி.பி. 1195 முதல் கி.பி. 1207 வரை) பாண்டிய நாட்டின் கிழக்குப் பகுதியில் வைப்பாற்றிற்கும், வைகை நதிக்கும் இடைப்பட்ட பகுதியை ஆட்சி செய்தார்.

போரில் விக்கிரம பாண்டியன் உயிர் இழக்கிறான்.அதன் பின் அந்த ஆன்மீக செல்வர் குலசேகர பாண்டியனுக்கு சேர வேண்டிய பகுதியை அவனிடம் ஒப்படைக்கிறார்கள்.

மீதமுள்ள பகுதியை குலசேகர பாண்டியன் அந்த ஆன்மீக செல்வரிடம் ஒப்படைத்து அதை நீங்களே அரசாள வேண்டும் என வேண்ட அவன் விருப்பபடி அவனுக்கு முடி சூட்டி ஆட்சியில் அமர செய்து விட்டு ஏனைய பகுதிகளுக்கு தாமே அரசராக பொறுப்பேற்று கி.பி.1195 முதல் 1207 வரை பன்னிரண்டு ஆண்டுகள் ஏழு மாதங்கள் செங்கோல் செலுத்தினார்கள்.

இதுவே தமிழ் மண்ணில் தோன்றிய முதல் முஸ்லிம் மன்னராட்சியாகும். இதன் தலைநகரம் பௌத்திர மாணிக்கப் பட்டிணமாகும்.
சுல்தான் சையது இப்ராஹீம்(வலி) தமது ஆட்சிக் காலத்தில் நாணயங்களை வெளியிட்டார்கள்.. அவரது சம காலத்தவர் சோழ நாட்டை ஆண்ட மூன்றாம் குலோத்துங்கன் என்பது குறிப்பிடத்தக்கது.
சுல்தான் சையது இப்ராஹீம்(வலி) எல்லா மக்களிடமும் குறிப்பாக முஸ்லிமல்லாதவர்களிடமும் அன்புடனும், பாசத்துடனும், மனித நேயத்துடனும் ஆட்சி புரிந்தார்கள். இஸ்லாமிய மார்க்க விஷயங்களிலும் தாராள தன்மையையே கடைப்பிடித்து ஒழுகினார்.
தமிழ் நாட்டின் வரலாற்றிலேயே 'முதல் முஸ்லிம் அரசர்' என்ற பெருமையுடையவரும் சுல்தான் சையது இப்ராஹீம்(வலி) அவர்களே!
தமிழ் மண்ணில் அமைதியான ஆட்சி ஏற்பட்ட பிறகு அப்பாஸ் தலைமையிலான படைகள் அரேபியாவிற்கு திருப்பி அனுப்பப்பட்டன. இவ்வாய்ப்பைப் பயன்படுத்தி விக்கிரம பாண்டியனின் உறவுக்காரனான வீரபாண்டியன் திருப்பதி மன்னனின் துணையுடன் படையெடுத்து வந்து கடுஞ் சமர் புரிந்து சுல்தான் சையது இப்ராஹீமை வெற்றி கொண்டான்.
முகவை மாவட்டத்திலுள்ள ஏர்வாடி என்ற இடத்தில் சுல்தான் சையது இப்ராஹீம் நல்லடக்கம் செய்யப்பட்டார்கள். மதினா மாநகரின் ஒரு பகுதியான **'யர்புத்'** என்ற இடத்திலிருந்து சுல்தான் சையது இப்ராஹீம் அவர்கள் புறப்பட்டு வந்ததால் அவர்கள் அடக்கம் செய்யப்பட்ட இடமும் 'யர்புத்' என்றே அழைக்கப்பட்டது.
இச்சொல் நாளடைவில் மருவி 'ஏர்வாடி' எனலாயிற்று. அவருடைய 'தர்கா' இன்றளவும் இந்து – முஸ்லிம் கலாச்சாரப் பண்பாட்டின் இணைப்பாகவும், மத நல்லிணக்கத்தின் எடுத்துக்காட்டாகவும் விளங்குவது பாராட்டுதற்குரியது.
அவர் 'ஷஹீதான' பிறகு அவரது தம்பி மகன் சையது இஸ்ஹாக், பாண்டிய மன்னரிடம் பெற்ற மானிய கிராமங்களை வைத்து பராமரித்து வந்தார்கள்.
Sufi Manzil பதிவிலிருந்து

## சூஃபிகளின் உலகம் 14

ஆத்தங்கரை அன்னை செய்யது அலி பாத்திமா ரலி -அன்ஹா

அவர்களின் வரலாறு




நெல்லை மாவட்டத்தில் பெட்டைக்குளத்துக்குத் தென் மேற்கேயுள்ள திசையன்விளை அருகே ஆற்றங்கரை. இது பிரசித்தி பெற்ற தர்காக்களில் ஆத்தங்கரை பள்ளிவாசலும் சிறப்பான தர்கா .இந்த தர்காவில் ஷேக் முஹம்மது (ரலி) செய்யது அலி பாத்திமா (ரலி அன்ஹா) இருவரும் அடங்கப் பெற்றுள்ளனர் .

செய்வினை, பில்லி, சூனியம் மற்றும் கெட்ட தீய ஆவிகளால் பீடிக்கப்பட்டவர்கள் நலம் அடைகின்றனர். நோய்களால் பாதிப்படைந்தவர்கள் இங்கு வருகின்றனர்.

ஆற்றங்கரை நாயகி என மக்ககளால் போற்றப்படும் தாய் செய்யது அலி பாதிமா நாயகி அல்லாஹ்வின் அருளால் நிகழ்த்திய அதிசயங்கள் எண்ணற்றவை என்கின்றனர் திசையன்விளை பகுதியில் உள்ள மக்கள்.

ஆத்தங்கரை செய்யது அலி பாத்திமா நாயகி அவர்கள் தன் கணவர் ஷேக் முகமது (வலி) அவர்கள் மீது அளவுகடந்த பிரியம் வைத்திருந்தார்கள். எல்லா நிலைகளிலும் அல்லாஹ், பெருமானார் முஹம்மது ரசூல் (ஸல் ) அவர்கள் சொன்னபடி கணவனுக்கு கட்டுப்பட்டு வாழக் கூடியவர்களாகவும், தன் கணவரையே தனக்கு தாயாகவும், தந்தையாகவும், செய்கு என்னும் குருவாகவும், நண்பராகவும் எல்லா நிலைகளிலும் ஏற்றுக் கொண்டு காதலோடு வாழ்ந்து வந்தார்கள்.

திசையன்விளை அருகில் கடல் ஓரத்தில் இருந்த ஆத்தங்கரை என்ற பகுதியில் இஸ்லாம் மதத்தை பரப்ப வந்தார்கள்.

இவர்கள் அரபு நாட்டிலிருந்து வந்து மலையாள கரையில் இறங்கி, ஆறு பேர்களுடன் பெட்டைகுளம் போக எண்ணி இவ்வழியே வந்தவர்கள். தங்களுக்கு விரைவில் இறை அழைப்பு வருவதை உணர்ந்து இங்கே தங்கினார்கள்.

ஒருநாள் தொழுகையுடைய நேரமானதால், தனது குருவும் கணவருமான சேக் முகமது வலியுல்லாஹ் அவர்களுக்கு ஒளுகு செய்வதற்கு செய்யது அலி பாத்திமா (ரலி) அவர்கள் தண்ணீர் எடுக்க சென்றார்கள் .

தண்ணீர் எடுத்து திரும்பி வந்த பார்த்து போது தனது அருமை கணவர் உயிரிழந்த நிலையில் இருந்தார்கள். அருகில் பாம்பு ஒன்று படம் எடுத்தபடி நின்றுகொண்டிருந்தது.

செய்யது அலி பாத்திமா நாயகியைப் பார்த்ததும் அந்த பாம்பு அவர்களிடம் பேசியது. " அல்லாஹ்வின் உத்திரவைக் கொண்டு நான் பேசுகிறேன். நான் தான் தங்கள் கணவர் சேகு முஹம்மது வலியுல்லாஹ் அவர்களை தீண்டினேன். நானாக கொத்தவில்லை.அல்லாஹ்வின் உத்தரவுப்படி தான் அது நடந்தது. அதன் காரணமாக தங்கள் கணவர் வபாத்தாகி விட்டார்கள் என அந்தப் பாம்பு சொன்னது.

தனது செய்ஹுவான அருமை கணவரை இழந்த செய்தியால் செய்யது அலி பாத்திமா நாயகி அவர்கள் கண்ணீர் விட்டு அழுதவர்களாக அல்லாஹ் விதித்ததை ஏற்றுக்கொண்டார்கள்.

தன் நிலையை பொருந்திக்கொண்டு, அல்லாஹ்விடம் இறைஞ்சியவர்களாக தன்னுடைய கடைசி நிலையும், தன் கணவரை போல் பாம்பு மூலமாகவே தீண்டப்பட்டு உயிர் வாங்கப்பட வேண்டும் என்று அல்லாஹ்விடம் கோரினார்கள்.

அதன்படியே செய்யது அலி பாத்திமா நாயகி அவர்களையும் நாகப்பாம்பு கொத்தப்பட்டு, அந்த இடத்திலேயே கணவரின் உடல் அருகிலேயே வபாத்தாகி விடுகிறார்கள்.

அந்த பாம்பே அவர்களுக்கு (பாத்திமா என்ற பெயரோடு) மெய்காப்பாளராகவும் இன்றும் இருந்து வருகிறது.

புலிமாங்குளத்தில் உள்ள கரையாளர்களின் கனவில் தங்கள் வரவையும் , இறப்பையும் உரைத்து தங்களை நல்லடக்கம் செய்யுமாறு பணித்துவிட்டு மறைந்தனர். அவ்வாறு அவர்கள் வந்து தாம் கண்ட கனவைக் கூறி இவர்கள் இருவரையும் நல்லடக்கம் செய்து தர்கா அமைத்தார்கள்.

இச்சூஃபி தம்பதிகள் இறப்பெய்திய நாள் ஹிஜ்ரி1050 ரபியுல் அவ்வல் பிறை 14 வெள்ளிக்கிழமை இரவாகும்.

இவர்களின் நினைவு நாள் விழா ஆண்டு தோறும் வெகு சிறப்பாக கொண்டாடப்படுகிறது. வெள்ளி, திங்கள் இரவுகளில் இங்கு அதிகமானோர்கள் வருகின்றனர். அதிலும் கணிசமாக கேரளத்திலிருந்தும் வருகின்றனர் .

நோய்களும் , பேய் பிடித்தவர்களும் இங்கு வந்து தங்கி நலம் பெற்றுச் செல்கின்றனர் அவர்கள் தங்குவதற்கும் இங்கு இட வசதி செய்யப்பட்டு உள்ளது.

செய்யது அலி பாத்திமா அவர்கள் ஏர்வாடி இப்ராஹீம் ஷா நாயகத்தின் காலகட்டத்தில் கேரளாவில் இருந்து திருவனந்தபுரம் வழியாக தமிழகத்திற்கு இஸ்லாத்தை பரப்ப வந்தவர்கள். இவ்விருவரின் பூர்வீகம் அரபு தேசமாகும்.

அன்னை செய்யது அலி பாத்திமாவின் சகோதரிகள் மொத்தம் 5 பேர். ஐவரும் பெண் சூஃபிகளாக இவ்வுலகில் அல்லாஹ் தோன்றச் செய்தான்.

முதலாவது உள்ளவர்கள் திருவனந்தபுரத்தில் உள்ள பீமா பள்ளியிலுள்ள தாய் பீமா (ரலிஅன்ஹா )அவர்கள்.

இரண்டாவது உள்ளவர்தான் ஆத்தங்கரை செய்யது அலி பாத்திமா (ரலி அன்ஹா) அவர்கள் .

மூன்றாவது திசையன்விளையிலிருந்து ஆத்தங்கரை போகிற வழியில் ஆலங்குளம் என்ற ஊரில் உள்ள சின்ன புள்ள நாச்சியார் அம்மாள் (ரலி அன்ஹா ) அவர்கள் .

நான்காவது தங்கை குஜராத்திலும், ஐந்தாவது தங்கை மகாராஷ்டிராவிலும் அடங்கப்பட்டுள்ளனர். அவர்களது புகழும் செய்யது அலி பாத்திமா நாயகி போலவே பிரசித்திப்பெற்றது தான் என்கின்றனர் திசையன்விளையில் வாழும் மக்கள்.

இந்த சூஃபி தம்பதியரின் கராமத் என்னும் இறைஅற்புதம் சுற்றியுள்ள எல்லா ஊர்களிலும் வாய்மொழிச் செய்தியாக நிறையவே பேசப்படுகிறது. இதனை கோர்வை செய்தால், அதுவே பெரும் தொடர் பதிவாக அமையும் என்பதில் சந்தேகமில்லை.

**https://www.facebook.com/groups/1005069776595329/permalink/1288804588221845/**

.

சூஃபிகளின் உலகம் 15 only video

## சூஃபிகளின் உலகம் 16

நாகூர் ஷாஹுல் ஹமீது வலி ரலியல்லாஹு அன்ஹு



நாகூர் ஷாஹுல் ஹமீது வலி ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கி.பி. 16ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர்கள் ஆவார்கள். இவர்களது காலம் கி.பி 1532-1600 என அறிஞர்கள் கருதுகின்றனர்.
இப்போது உள்ள உத்திரபிரதேசத்தில் அயோத்திக்கு பக்கத்தில் இருக்கும் மாணிக்கப்பூர் என்ற ஊர் அக்காலத்தில் ஆன்மிகத்தில் சிறப்புற்று விளங்கியது. அவ்வூரில் அண்ணல் நபி (ஸல் ) அவர்களின் அன்பு பேரர் ஹசன் ( ரலி) அவர்களின் வழியில் வந்த ஹசன் குத்தூஸ் அவர்களுக்கும் அண்ணன் நபி (ஸல்) அவர்களின் மற்றொரு பேரர் ஹுசைன் (ரலி) அவர்களின் வழியில் தோன்றிய சையிது ஹமீதுத்தீன் அவர்களின் செல்வ மகள் பாத்திமா இவர்களுக்குப் பிறந்தவர்கள் ஷாஹுல் ஹமீது பாதுஷா நாயகம் அவர்கள்

இறைத்தூதர் ஹிழுரு அலைஹிஸ்ஸலாம் அவர்கள் ஷாஹுல் ஹமீதின் பிறப்பு குறித்து அன்னை பாத்திமாவுக்கு அறிவித்தார்கள். மூன்று மாத கருவாக இருந்தபோதே தனது அற்புதத்தை நிகழ்த்திவிட்டார்கள். ஷாஹுல் ஹமீது நாயகம். உடல்நலக் குறைவாக இருந்த தனது தந்தை நலம் பெறுவார் என்று தாயின் கருவறையில் குரல் எழுப்ப அவ்வாறே தந்தை குணமடைந்தார்.
ஆறுமாதக் கருவாக இருந்தபொழுது தனது தாயார் தொழுகைக்காக ஒழுச் செய்ய கிணற்றுள் விழுந்த பாத்திரத்தை தண்ணீரோடு தாயின் காலடியில் இருக்க வைத்தார். கருவறையில் இருந்தபடியே இரண்டு அதிசயங்களை நிகழ்த்திய ஹாஹுல் ஹமீது , ஹிஜ்ரி 910ம் ஆண்டு ஜமாதுல் ஆகிர் மாதம் பத்தாம் நாள் வியாழன் மாலை வெள்ளிக்கிழமை இரவில் இப்புவியில் ஜனனம் செய்தார்கள்.

நாயகம் பிறந்ததும் ஹிலுரு அலைஹிஸ்ஸலாம் மற்றும் இல்யாஸ் நபிகள் அந்த அறையில் தோன்றினார். ஹிலுரு அலைஹிஸ்ஸலாம் குழந்தையை கையில் எடுத்து பாங்கு சொன்னார்கள். இல்யாஸ் நபி 'சையது அப்துல் காதிர்' எனப் பெயர் சூட்டிவிட்டு தாய்க்கருகில் கிடத்திவிட்டு மறைந்தார்கள்.
நாளரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்த ஷாஹுல் ஹமீது நாயகம் சிறுவயதிலேயே நோன்பு நோற்பது, கேட்பவர் மெய் மறக்கும் நிலையில் திருமறையை இசையுடன் ஓதுவது, மார்க்க கடமைகளை முறையாக கடைப்பிடிப்பது என்று பக்தியில் திளைத்து வந்தார்கள்.
குர்ஆன், தப்ஸீர், ஹதீஸ், ஃபிக்ஹு ஆகிய மார்க்கக் கல்விகளையும் சரித்திரம், பூகோளம், கணிதம், தத்துவம், தர்க்கம், வானசாஸ்திரம் ஆகிய லௌகீகக் கல்விகளையும் பதினெட்டு வயது நிரம்புவதற்குள் கற்று முடித்தார்கள். இடையிடையே ஹிலுறு அலைஹிஸ்ஸலாம் அவர்களும் சிறுவன் முன் தோன்றி வேதத்தை தெளிவாக்கி வைத்தார்கள்.

வாலிப பருவம் அடைந்தது ஷாஹுல் ஹமீது அவர்கள் தங்களுக்கான ஞானகுருவைத் தேடி ஹிஜ்ரி 928ம் ஆண்டு ஜமாதுல் ஆகிர் மாதம் ஒரு திங்கட்கிழமை வழித்துணையின்றி, கைச்செலவுக்குப் பொருள் இன்றி, துறவுக்கோலத்துடன் குவாலியர் பட்டணத்துக்கு விரைந்தார்.
நடை பயணமாக காடுகளை கடந்து வந்து கொண்டிருந்த நாயகத்தை திருடர்கள் கொள்ளையடிக்கும் நோக்கத்துடன் நெருங்கினார்கள். அவரிடம் பொருள் இல்லாததால் நாயகத்தை கொலை செய்யக் கருதி ஆயுதங்களால் வெட்டியவர்கள் தங்கள் உடல்களே துண்டாகி விழுந்தனர். கொள்ளையர்களின் உறவினர்கள் மன்னிப்பு கோரியதைத் தொடர்ந்து அவர்களின் உடலை ஒட்டி, உயிர் கொடுத்து அற்புதம் நிகழ்த்தினார்.

குவாலியர் நகரை நெருங்குகையில் அங்கிருந்த சிற்றூரில் ஒரு சிறிய மசூதியில் நாயகம் தங்கி தனது ஞானகுருவை இறைவனே காட்ட வேண்டும் என்று வேண்டிக் கொண்டார். அப்போது தோன்றிய அசரீரி 'ஷாஹ் அல் ஹமீது' என்ற கருணைப் பெயரை உமக்கு சூட்டியுள்ளோம். உமது ஞானகுரு முஹம்மது கௌது. அவரிடம் செல்' என்றது.
அதன்படி முஹம்மது கௌதுவிடம் சென்று அவரது மெய்ஞ்ஞான பயிற்சிக் கூடத்தில் பயின்று மெய்ஞ்ஞானத் தீட்சை பெற்றுக் கொண்டார். பத்து ஆண்டுகள் மெய்ஞ்ஞானக் கல்வி பயின்றவர் பின்னர் அங்கிருந்து கிளம்பினார்கள். அவருடன் நானூற்று நாற்பது சீடர்கள் உடன் சென்றனர்.
அப்போது மலைவழியாக வரும்போது ஆதிபிதா ஆதம் (அலைஹிஸ்ஸலாம்), ஹவ்வா அலைஹிஸ்ஸலாம் நாயகத்துக்கு "ரிக்வத் " எனப்படும் திருவோடு போன்றதொரு பாத்திரத்தை வழங்கினார்கள். தேவைபடும் போது தேவைப்பட்ட உணவை இதனின்று பெற்றுக் கொள்ளலாம்.

ஊர்தோறும் மக்களுக்கு உபதேசித்தும், உண்மையைப் பேணச் செய்து இஸ்லாத்தை நிலை நாட்டிக் கொண்டே நாயகம் அவர்கள் மாணிக்கப்பூர் வந்தடைந்தனர்.
அங்கு கொஞ்ச காலம் இருந்தவர்கள் வீட்டில் திருமண ஏற்பாடுகள் செய்வதை தடை செய்தவர்களாக சீடர்களுடன் லாகூர் சென்றார். அங்கு இறைவனின் ஆணைப்படி காழி நூருத்தீன் முஃப்தி என்பவரின் மனைவி ஜஹாரா பீபிக்கு தான் மென்ற வெற்றிலை தாம்பூலத்தை கொடுத்து அவரை கருவுறச் செய்தார்கள்.
அவர் பெறப்போகும் முதல் குழந்தைக்கு 'முஹம்மது யூசுஃப்' என பெயரிட நூருத்தினிடம் தெரிவித்ததோடு, குழந்தையின் தன்மை குறித்தும் தெரிவித்த நாயகம் தன் சீடர்களுடம் பயணத்தை தொடர்ந்தார்.
மேற்கு, தென்மேற்கு ஆசிய நாடு நகரங்களைச் சுற்றிக்கொண்டு துருக்கி தேசத்தினுள் புகுந்த நாயகம், கர்ஸான என்ற பட்டணத்தை அடுத்துள்ள மலையில் நாற்பது நாட்கள் தனித்து சில்லா இருந்தார்கள்.
அன்று ஹிஜ்ரி 952 ம் ஆண்டு ரஜப் மாதம் 12&ம் நாள் லாகூரில் ஜஹாரா பீபிக்கு மகன் பிறந்தான். மனக்கண்ணால் தன் மகனை கண்டு உரையாடி முத்தமிட்டு மகிழ்ந்தார்கள்.

ஒருநாள் இரவு தொழுகையின் போது தனது தந்தை மரணிப்பதை அறிந்து தன் சீடர்களுடன் ஒரே இரவில் ஆசியா மைனரிலிருந்து இந்தியாவின் மாணிக்கப்பூரை நடந்தே அடைந்து அதிசயம் நிகழ்த்திய நாயகம் தந்தை மறைந்து 40 தினங்களுக்குப் பின் அரேபியாவுக்கு கிளம்பினார்கள்.
அங்கு மக்கா, மதீனாவில் ஹஜ்ஜு செய்தபடி இருந்தார் நாயகம். அப்போது நாயகம் நிகழ்த்திய அதிசயத்துக்கு பரிசாக இபுனு ரவூஃப் தனது கப்பலை நாயகத்துக்கு சொந்தமாக்கி பத்திரம் கொடுக்க, அதை தன்னிடம் வந்து யாசித்தவனுக்கு கொடுத்துவிட்டு கஃபாவை நோக்கி நடந்தார்கள்.
நாயகம் அவர்கள் தங்களின் 37 ம் வயதில் ஜித்தா துறைமுகத்திலிருந்து கப்பல் ஏறி கேரளாவின் பொன்னாணி எனும் ஊரில் கரையிறங்கினார்கள். அப்போது நாயகத்துடன் அவரது மகன் யூசுஃப் ஆண்டகையும் இருந்தார்கள்.

பின்னர் அங்கிருந்து லட்சத்தீவுகள், சிலோன் முதலிய வெளிநாடுகளுக்கும், காயல்பட்டணம், நத்தம், மேலப்பாளையம் போன்ற பகுதிகளுக்கும் சென்று இறைப்பிரசங்கம் செய்தார்கள்
தஞ்சாவூரில் அதை ஆட்சி செய்த அச்சுதப்ப நாயக்கன் உடல்நலம் குன்றியிருந்தார். நாயகத்தின் சிறப்புகள் தெரிந்து அவரைக் கண்டு நோய் நீங்கப்பட்ட மன்னன், அதற்கு வெகுமதியாக நிலங்களைக் கொடுத்தான். அந்த இடத்தின் பகுதியில் தான் தர்காவும், அதைச் சேர்ந்த குளம் முதலிய கட்டிடங்களும் அமைந்துள்ளன.
ஷாஹுல் ஹமீது நாயகம் அவர்கள் நாஹூரில் இருபத்தெட்டு வருடங்கள் வாழ்ந்திருக்கிறார்கள். அற்புதங்கள் பல நிகழ்த்திய நாகூர் நாதர் ஹிஜ்ரி 978ம் வருஷம் ஜமாதுல் ஆகிர் மாதம் பத்தாம் நாள் வெள்ளிக்கிழமை இரவு புகழுடம்பு எய்தினார்கள்.
தர்கா வரலாறு:

ஆற்காட்டை ஆண்ட நவாபுகள் இவர்களது பெயரால் தஞ்சாவூர் நகரை காதர் நகர் என பெயரிட்டனர். நாகூர் பகுதியில் அமைதி வழியில் தனது அன்பு அழைப்பால் எண்ணற்ற மக்களை இஸ்லாத்தின் பக்கம் கொண்டுவந்த பெருமை நாகூர் ஆண்டகை அவர்களைச் சாரும். இவர்களது அருட்கொடையைத் தொடர்ந்து பெறும் பொருட்டு தமிழகத்தின் பிற பகுதியிலிருந்தும் முஸ்லிம் மக்கள் இங்கு வந்து குடியமர்ந்தனர். இஸ்லாமியர் பெருகினர். இப்பகுதியில் இஸ்லாம் செழித்தோங்கியது.
நாகூர் நாயகம் மறைந்ததும் அவரது புதல்வர் தனது மனைவி, மக்களுடன் அங்கு குடித்தனம் நடத்தி வந்தார். அப்பகுதியைச் சேர்ந்த மீனவர்கள் இவர்களுக்கு ஆதரவாக இருந்ததோடு நாயகத்தின் கஃப்ரை சுற்றி பலகையால் பள்ளி போல் அடைத்தார்கள். அந்தப்பள்ளியே இன்று அழகிய ஐந்து மினாராக்களை( கோபுரம்) உடையதாய் விளங்குகிறது.
**Sadayan Sabu**
//இந்த மினாராவில் இந்து அன்பர் ஒருவர் சின்ன தங்கக் கலசத்தை அமைத்துக் கொடுத்துள்ளார்.// கூத்தாநல்லூரைச் சேர்ந்த மஹாதேவ அய்யர் என்பவரே அந்த இந்து அன்பர். கூத்தாநல்லூரில் தலைமுறை தலைமுறையாக ஜவுளி வியாபாரம் செய்து கொண்டிருக்கும் தொழிலதிபர். தவிர, நாகூர் ஆண்டவர் எங்க ஊரில் மார்க்கப் பணிக்காக வந்த போது, அந்தக் கால விவசாயிகள் நாகூர் ஆண்டவருக்கு தங்க இடமும் உணவும் கொடுத்து உபசரித்ததால், நாகூர் ஆண்டவர்கள் எங்க ஊர் மக்களை ஆசீர்வதித்து வாழ்த்தி சென்றதால் இன்றும் கூத்தாநல்லூர் செல்வச் செழிப்போடு இருக்கிறது. நாகூர் ஆண்டவர்கள் தங்கியிருந்த இடம் இன்றும் பாதுகாக்கப் பட்டு வருகிறது.

## சூஃபிகளின் உலகம் 17

சூஃபிகளின் உலகம் - பதிவுகள் வந்ததிலிருந்து அகீதாவுக்கு மாறுபட்டோர் அநேகர் பின்னூட்டத்தில் ஷிர்க் , புருடா என்றெல்லாம் Command செய்கிறார்கள். அவர்களின் பின்னூட்டங்களை Delete செய்தாலும், அவர்கள் மீது கோபம் ஏதும் வராமல் எனக்கு பரிதாபம்தான் வருகிறது. அவர்களுக்காக இந்தப் பதிவு .
சூஃபிகளின் உலகில் ஏக காலத்தில் பல எண்ணிக்கையுள்ள பலவகை படித்தரங்கள் உடைய அவ்லியாக்கள் -குதுபுமார்கள் - அப்தால்கள் - அவுத்தாதுக்கள் - நுகபாக்கள் - நுஜபாக்கள் என்ற பதவி உடையவர்கள் ,உலக முடிவு நாள் வரையில் இருந்தே வருவார்கள் என்றும்..

ஹகீகத்தில் ஈருலகையும் கண்காணிப்பவர்கள் அவர்கள் தானென்றும் ,அவர்களை முன்னிட்டே பலாய் ,முஸீபத்துகள் விலக்கப்படுவதாயும் ஹதீதுகள் பல காணப்படுகின்றன. அன்னார் அனைவருக்கும் குத்பே அதிபராவார் . அன்னாரை கௌது என்றும் சொல்லப்படும் .இது பற்றிய ஆதாரங்கள் பல இருப்பினும் சிலவற்றை மட்டிலும் இங்குக் குறிப்பிடுவது போதுமெனக் கருதுகின்றோம் .
" ஆண்டவா ! என் மீது நபிமார்கள் நடந்து திரிந்தார்கள் . அவர்களுக்குப் பிறகு நபிகள் பெருமான் அவர்களைச் சுமந்திருந்தேன்.தற்போது அவர்களும் சென்று விட்டார்களே ,நான் தனித்துவிட்டேனே ,என் மீது எந்த நபியும் இல்லையே " என்பதாய் பூமி பிரலாபித்து இறைவனிடம் முறையிட்டுக் கொண்டது .
' நான் சில அவ்லியாக்களை அனுப்புவேன் .அவர்களது இருதயங்கள் நபிமார்களது இருதயங்களைப் போலிருக்கும் .அவர்கள் யுகமுடிவு வரை உன் மீது சஞ்சரிப்பார்கள் ' என்று ஆண்டவன் பூமிக்கு அறிவித்தான் '
....என்ற இவ்விஷயத்தை ஸாலிஹான இறையருள் நேசரான பெரியார் ஒருவர் தமது உலக யாத்திரையின் போது , நித்திய ஜீவனுடைய ஹழ்ரத் கிழ்று அலைஹிஸ்ஸலாம் அவர்களைச் சந்திந்த சமயம் அன்னாரைக் கேட்டு தெரிந்து கொண்டதாக , 'மவாஹிபுல் மஜீது பி மனாகிபி ஷாஹுல் ஹமீது' என்னும் கிரந்தத்தில் காணப்படுகின்றது .

' அந்த அவ்லியாக்கள் ஏகத்தில் 440 பேர்கள் .அவர்களுள் நுஜபாக்கள் 300,நுகபாக்கள் 70, அப்தால்கள் 40,அகியார்கள் 10,உறபாக்கள் 7, அன்வார்கள் 5,அவுத்தாதுகள் 4,முக்த்தார்கள் 3, குத்பு ஒருவர் . குத்பே அனைவருக்கும் அதிபராவார் . இன்னாரை கௌது என்றும் சொல்லப்படும் .
இவர்களுள் யாரும் மரணமாவார்களாயின் அவர்களுக்கடுத்த படித்தரத்தில் இருப்பவர்கள் அந்த ஸ்தானத்திற்கு மாற்றப்படுவார்கள் . அங்ஙனம் பதவியில் உயர்த்தப்படும் போது ,கீழ்ப் படித்தரத்தில் உள்ள நுஜபாக்கள் காலியாகுமிடத்தில் ஸாலிஹீன்களான முஸ்லீம்களில் ஒருவர் அந்த ஸ்தானத்தில் அமர்த்தப்படுவார்"
..என்று ஹழ்ரத் கிழ்று அலைஹிஸ்ஸலாம் கூறியதாக 'மனாகிபுகுத்பில் மஜீதிஸ்ஸையிது ஷாஹுல் ஹமீதில் மாணிக்கப்பூரயில் மவுலிதிந் நாகூரிய்யில் மர்கதி' என்ற கிதாபில் மாதிஹுர் ரஸூல் அல்லாமதுஷ் ஷைகு சதகதுல்லாஹில் காஹிரிய்யில் ஸித்தீக்கி رضي الله عنها அவர்களது சீடர் அல்லாமா ஆரிபுபில்லாஹ் மஹ்மூது தீபி ரலியல்லாஹு அன்ஹு அவர்களும் , 'மவாஹிபுல் மஜீது பி மனாகிபி ஷாஹுல் ஹமீது' எனும் கிதாபில் காயல்பட்டணத்தில் பிறந்து கீழக்கரையில் அடங்கி இருக்கும் இமாமுல் அரூஸ் மாப்பிள்ளை லெப்பை ஆலிம் என்ற அல்லாமதுல் பாளில் ஸையிது முஹம்மது ஆரிபுபில்லாஹி رضي الله عنها அவர்களும் கூறுகின்றார்கள் .

இவை போன்று பல அபூர்வ விளக்கங்களை 'மஜ்மூ அத்துர்து ரஸாயில்' 2வது பாகம் 264வது பக்கத்தில் 'ரத்துல் முஹ்தார்' இயற்றிய அல்லாமா இப்னு ஆபிதீன் رضي الله عنها அவர்கள் விபரமாக வரைந்துள்ளார்கள் .
மேலும் இமாம் ஷஃரானி رضي الله عنها அவர்கள் 'அல்யவாக்கீது வல் ஜவாஹிர் ' என்னும் கிரந்தத்தில் குத்புமார்களின் தரஜா,பதவிகளை விவரமாக எழுதியுள்ளார்கள். இன்னும் இமாம் இப்னு ஹஜர் மக்கீ رضي الله عنهاஅவர்கள் தங்கள் 'பதாவா ஹதீதிய்யாவிலும்' விவரமாக குறிப்பிட்டுள்ளார்கள் .
மேலும் என்னுடைய உம்மத்துகளில் நாற்பது நபர்கள் நபி இபுறாஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுடைய இருதயத்தை உடையவர்களாய் என்றும் இருந்தே வருவர்.

அல்லாஹுத்தஆலா அந்த நபர்களைக் கொண்டு பூலோகத்தில் வாழுபவர்களை விட்டும் பிணிகளைப் போக்குவிப்பான் . அவர்களுக்காக மழையைப் பொழியச் செய்வான் . அன்னவர்களைக் கொண்டு தான் பூலோகத்தில் உள்ளவர்களுக்கு உதவி புரியப்படும் என்பதாய் எம்பெருமானார் ﷺ அவர்கள் திருவாய் மலர்ந்து அருளிய ஹதீது தபறானீயில் காணக் கிடைக்கின்றது .
குத்புக்கே கௌது என்று பெயர். அவர் ஒருவருக்குப் பின் ஒருவராக வருவார். படைப்புகளை எல்லாக் கருமங்களிலும் அன்னார் இரட்சிக்கக் கூடியவராக இருப்பதனால் கௌது என்று பெயர்.
அன்னவருக்கு வலம் ,இடம் , இருபக்கங்களிலும் அரசர்களுக்கு இருப்பதுபோல் இரு அமைச்சர்கள் உள்ளனர் .கௌாது உடைய உத்தரவு கொண்டு வலது பக்கமிருப்பவர் மறைவுலகங்களான ஆலமுல் கைப்பு,ஆலமுல் மலக்கூத்தை நிர்வகித்து வருகின்றார் .

இடது பக்கமிருதுப்பவர் வெளி உலகமான ஆலமுஷ் ஷஹாதத்தை கண்காணித்து வருகின்றார் என்ற விபரத்தை வேலூர் பாக்கியத்துஸ் ஸாலிகாத் ஸ்தாபகர், ஹஜ்ரத் ,அல்லாமா ஷைகு அப்துல் வஹ்ஹாப் ஸாஹிபு رضي الله عنهاஅவர்களது ஆத்மீக ஆசிரியர் ஹஜ்ரத் ஆரிபுபில்லாஹ் ,அல்லாமா ஷைகு ஷாஹ் முஹ்யித்தீன் ஸாஹிபு வேலூரி رضي الله عنها அவர்கள் 'ஜவாஹிருஸ்ஸுலுக்கு' என்னும் கிரந்தத்தில் 114வது பக்கத்தில் வரைத்துள்ளார்கள் .
மேலும் இது போன்ற விபரங்கள் தப்சீர் ரூஹுல் பயான் பாகம் 2,பக்கம் 363லும் , ஷைகுல் அக்பர் இப்னு அரபி رضي الله عنها அவர்களைக் கொண்டும் விபரமாகச் சொல்வதை அறிவிக்கப்படுகிறது .
"அந்தரங்க,பகிரங்க ஆபத்துக்களில் நின்றும் குத்புமார்களைக் கொண்டே ஆண்டவன் அகிலத்தைப் பாதுகாத்துக் கொள்கிறான் " என்று தப்சீர் ரூஹுல் பயான் பாகம் 9,பக்கம் 102ல் கூறப்பட்டுள்ளது .
மேலும் விபரமாகத் தெரிய முஜ்தஹிது,ஹாபிளு அஹா தீதெ நபவிய்யா ,இமாம் ஷைகு ஜலாலுதீன் ஸுயூத்தி رضي الله عنها அவர்கள் இயற்றிய 'ரிஸாலா அல் கப்ருதால்லு அலாவுஜூதின் நுகபா வல் அக்த்காபி வல் அவ்த்தாதி வல் அப்தால்' என்ற நூலையும்,அல்லாமா பாகீஹ் இப்னு ஆபிதீன் رضي الله عنها அவர்கள் இயற்றிய 'மஜ்முஅத்துர் ரஸாயில்' நூலையும் நோட்டமிடுக .

அவ்லியாக்களுள் இரு வகுப்பார் உண்டு.ஒரு வகுப்பார் ஆண்டவனுடைய பாதையில் கஷ்டப்பட்டு தெண்டித்து அவனளவில் தன்னை அளித்து பனாவாகியவர்கள் . இவர்களுக்கு கஸ்பீ என்று சொல்லப்படும் .மற்ற வகுப்பார் ஆலம் அர்வாஹ் எனும் ஆன்ம லோகத்திலேயே ஆண்டவனால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் . இவர்களுக்கு அத்தாயீ என்று கூறப்படும் . குத்பு ,கௌது ஆகியோர் அத்தாயீ வகுப்பைச் சேர்ந்தவர்களே .
[நூல் - ஜவாஹிருஸ் ஸுலூக் ,பக்கம் 114 ]

குத்பு என்ற பதத்திற்கு 'முளை' 'துருவம் ' என்றும் ,கௌது என்ற பதத்திற்கு 'இரட்சிப்பவர் - நாயன் நோட்டமிடும் ஸ்தானம்' என்றும் பொருளைப் பயக்கி நிற்பினும் ,அவற்றின் அந்தரங்கம் பல அரும்பெரும் இரகசியப் புதையல்களைத் தன்னுள் அடக்கியதாய் அமைத்து கிடக்கின்றன. இன்னவர்கள் மூலமாகத் தான் முதலவன் தன்னிருக்கையை அறிக்கை செய்ய வேண்டியதிருக்கிறது . அன்றேல் , இருள்படர்ந்து மூடி அகிலம் அந்தகார்த்துள்ளாழ்ந்து பாழ்பட்டு போகும் .
இறைவன் தன்னடியார்களுக்கு அளித்துள்ள கைம்மாறிளக்க வொண்ணாப் பெரும் பேறு அத்தனையையும் ஒரு தட்டிலும் , குத்பை அனுப்பித் தந்த அருட்பெருங்கொடையை மற்றோரு தட்டிலும் வைத்து சீர்தூக்கி பார்ப்போமாயின் ,குத்பால் பெற்ற கிருபையளவே கனத்து முறுகி நிற்கக் காண்போம் .இன்னாரைப் பற்றி இறைவன் குர்ஆன் ஷரீபில்

اَلَاۤ اِنَّ اَوْلِيَآءَ اللّٰهِ لَا خَوْفٌ عَلَيْهِمْ وَلَا هُمْ يَحْزَنُوْنَ ۖ ۚ

" நிச்சயமாக அல்லாஹ் உடைய அவ்லியாக்களுக்கு பயமென்பதுமில்லை கவலையென்பதுமில்லை " என்பதாய் (10:62 ) அருளியுள்ளான் .

மேற்கூறப்பட்ட அத்தனை விஷயங்களும் உண்மை என்று நாங்கள் ஈமான் கொண்டு சுன்னத்துல் ஜமாத் கொள்கையில் இருக்கிறோம் .மாற்றுக் கருத்துடையவர்கள் தயவு செய்து என் பதிவுகளை தவிர்க்கவும்.

## சூஃபிகளின் உலகம் 18

ஷெய்கு முஹ்யித்தீன் அப்துல் காதிர் அல்-ஜிலானி
கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ்



மெய்நிலை கண்ட ஞானி, மாபெரும் தவசீலர் காதிரியா தரீக்காவின் நாயகர், முஹ்யித்தீன் அப்துல் காதர் ஜீலானி ரழியல்லாஹு அன்ஹு அவர்கள், (1078–1165) இவர் ஈராக்கில் உள்ள ஜீலான் என்ற ஊரில் ஹிஜ்ரி 470 ஆம் ஆண்டு ( கி.பி. 1078 மார்ச் 19 ) ரமலான் மாதம் பிறை 1-ல் திங்கட்கிழமை இரவு ஸஹர் நேரத்தில் ஈராக் நாட்டின் ஜீலான் என்னும் நகரை ஒட்டிய நீப் என்னும் கிராமத்தில் பிறந்தார்கள்.

நபிகள் நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அன்னவர்களின் தலைமுறையில் பிறந்த பேரப் பிள்ளையாவார்கள். இவர்களின் தந்தையாரின் பெயர் ஸைய்யது அபூ ஸாலிஹ் இப்னு மூஸா ரழியல்லாஹு அன்ஹு, தாயாரின் பெயர் உம்முல் கைர் என்னும் அமத்துல் ஜப்பார் ரழியல்லாஹு அன்ஹா என்பதாகும். இவர்கள் தந்தைவழியில் ஹஸனியாகவும் தாய்வழியில் ஹுஸைனியாகவும் விளங்குகிறார்கள்.

இவர்கள் காதிரிய்யா என்ற இஸ்லாமிய சூஃபி சிந்தனைப் பிரிவைத் தோற்றுவித்த இஸ்லாமிய சூஃபி அறிஞர் ஆவார்கள். அப்துல் காதிர் ஜிலானி (ரலி) அவர்கள் ஆரம்பக்கல்வியை தனது 6 வது வயதில் சொந்த ஊரிலேயே பெற்றார்கள். கி.பி.1095 இல் தனது பதினெட்டாம் வயதில் உயர்கல்வியைக் கற்பதற்காக ஈராக்கின் பக்தாத் நகருக்கு சென்றார்கள். 30 வருடங்கள் கல்வி கற்பதில் செலவிட்ட அவர்கள் பின்னர் அதே கல்விநிலையத்தில் ஆசிரியப்பணியிலும் , மார்க்கதீர்ப்பு வழங்கும் பணியிலும் ஈடுபட்டார்கள்.
எல்லா விதமான கல்வியையும் கற்ற பின் தனக்கு ஒரு ஆத்மீக வழிக்காட்டி தேவை என்பதையும் அதுவே தன்னை அல்லாஹ்விடம் நெருங்கச் செய்யும் வழி என்றும் உணர்ந்தார்கள். எனவே தனக்கு ஆத்மீக வழிக்காட்ட ஒரு ஞானகுருவை தந்தருளுமாறு அல்லாஹ்விடம் இறைஞ்சினார்கள்.

அப்பொழுது இறைவன் அவர்களுக்கு ஷைகு ஹம்மாத் என்னும் மார்க்க பெரியாரை தேர்ந்தெடுத்து கொடுத்தான். அந்த ஷைக் அவர்கள் கௌஸுல் அஃலம் முஹ்யித்தீன் அப்துல் காதர் ஜீலானி ரழியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு பலவகையான ஆத்மீக ஞானங்களை கற்றுக்கொடுத்தார்கள்.
பல கடுமையான சோதனைகளை செய்தார்கள். எனினும் கௌஸுல் அஃலம் அவர்கள் சகிப்புதன்மையுடனும், திட நம்பிக்கையில் மலையாகவும் விளங்கினார்கள். பின் மூன்று ஆண்டுகளில் 'தஸவ்வுஃப்' என்னும் ஆத்ம ஞானத்தில் தேர்ச்சி பெற்றார்கள்.
அப்போது ஷைகு ஹம்மாத் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள், " இந்த அஜமி அப்துல் காதிர் வரும் காலத்தில் மாபெரும் ஞானியாக விளங்குவார். தம் பாதம் சகல வலிமார்களின் தோள் மீது இருப்பதாக சொல்லும்படி அல்லாஹ்வால் உத்தரவிடப்படுவார்கள். இவர் காலத்திலுள்ள எல்லா வலிமார்களும் இவருக்கு தலைப்பணிவார்கள்" என்று கூறினார்கள்.

அந்த நிகழ்வு கௌஸுல் அஃலம் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் 89ம் வயதில் ஒரு மகத்துவமிக்க அந்த சம்பவம் நடந்தது. அல்லாஹ்வின் உத்தரவு ஒன்று அவர்களுக்கு வந்து அதை அவர்கள் மக்களுக்கு கூறினார்கள் :

" எனது பாதம் எல்லா வலிமார்களின் தோளின் மேல் இருக்கிறது" என்று கூறியபோது உலகம் முழுவதிலும் இருந்த வலிமார்கள் அனைவர்களும் தமது ஆத்ம காதுகளால் கேட்டார்கள். எல்லோரும் ஒரே நேரத்தில் கௌஸுல் அஃலம் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் பாதத்தை தங்கள் தோள் மீது ஏற்பதாக கூறினார்கள்.
மாபெரும் தவசீலர் முஹ்யித்தீன் அப்துல் காதர் ஜீலானி ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் தனது ஆத்மீக கல்வியை நிறைவு செய்த பின் இபாதத்துகளிலும், தியானத்திலும் ஈடுபடுவதற்காக பக்தாதை விட்டு வெளியேறி ஈராக் காடுகளை நோக்கி சென்றார்கள்.

கர்க் என்னும் காட்டில் பாழடைந்த கட்டிடத்திலிருந்து கடும் தவம் செய்தார்கள். அது எப்படிப்பட்ட தவம் என்றால் வருடத்தில் ஒரு தடவை அவர்களுக்கு ஒரு மனிதர் கம்பளி உடுப்பு ஒன்றை கொடுப்பார். அதை அணிந்துக்கொண்டே நாட்களை போக்குவார்கள்.
அவர்கள் கல்லும், முள்ளும் நிறைந்த காடுகளில் நடந்து போவார்கள். ஒரு வருஷம் முழுவதும் அவர்கள் வெறும் காய்கறிகளை உண்டு தண்ணீர் குடிக்காமல் தவம் செய்தார்கள். மறு ஆண்டில் தண்ணீர் மட்டும் குடித்துக்கொண்டு வேறு எதுவும் சாப்பிடாமல் தவம் செய்தார்கள். மூன்றாம் ஆண்டில் தண்ணீரும் அருந்தாமல், எதுவும் சாப்பிடாமல், தூங்காமல் தவத்தில் ஈடுபட்டார்கள்.

ஹிஜ்ரி 521 ஷவ்வால் 11ம் இரவன்று கௌஸுல் அஃலம் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் கனவில் நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அன்னவர்கள் தோன்றி,
"அப்துல் காதிரே! வழிதவறி செல்லும் மக்களை ஏன் நேர்வழிக்கு அழைக்காமல் இருக்கிறீர்கள் ? " எனக் கேட்டார்கள்.
அதைக் கேட்டு திடுக்கிட்ட கௌஸுல் அஃலம் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள், "யா ரசூலல்லாஹ்! (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) நான் அரபி இல்லையே! அஜமிதானே. எனவேதான் அரபிகளின் நகரத்தில் அரபு மொழியில் பேச தயங்குகிறேன்" என்று கூறினார்கள்.
இந்த பதிலைக்கேட்ட அண்ணல் நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அன்னவர்கள் சிரித்த முகத்துடன் கௌஸு நாயகத்தின் வாயை திறக்கச்சொல்லி 7 தடவை தங்களின் முபாரக்கான எச்சிலை உமிழ்ந்தார்கள். அதற்கு பிறகு கௌஸுல் அஃலம் அவர்களின் திருவாயிலிருந்து ஞானப்போதனைகளும், மார்க்க பயான்களும் வெளிவரத்தொடங்கியது.

ஸைய்யிதுனா முஹ்யித்தீன் அப்துல் காதிர் ஜீலானி ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் ஒரு முறை ஒரு தெரு வழியாக வரும்போது, வழியில் பலஹீனமான வயோதிகர் ஒருவர் அமர்ந்திருந்தார். கௌஸுல் அஃலம் ரழியல்லாஹு அன்ஹு அவர்களை கண்ட அவர், அவர்களுக்கு ஸலாம் சொன்னார், அதற்கு அவர்கள் பதில் ஸலாம் கூறினார்கள்.
பிறகு அவர், தம்மை தூக்கி நிறுத்தும்படி கேட்டுகொண்டார். கௌஸுல் அஃலம் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் அவரை தூக்கி நிறுத்தினார்கள். உடனே அவர் தம் முதுமை நீங்கி வாலிபராக மாறினார்.
இதைக்கண்டு திடுக்கிட்ட கௌஸுல் அஃலம் ரழியல்லாஹு அன்ஹு அவர்களிடம் அவர் சொன்னார்: " நான் தான் தீன் என்னும் சன்மார்க்கமாகும், நீங்கள் இந்த தீனை ஹயாத்தாக்கிய முஹ்யித்தீன் ஆவீர்கள்." என்று கூறி மறைந்தார். இவ்வாறு கூறி மறைந்தவர் ஒரு மலக்கு ஆவார்
மாபெரும் தவசீலர் முஹ்யித்தீன் அப்துல் காதர் ஜீலானி ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் தமது வாலிப வயதில் ஆத்மீக கல்வி கற்பதிலும், தவத்திலும் ஈடுபட்டு விட்டதால் அவர்கள் திருமணம் செய்து கொள்ளவில்லை.

ஆனால் ஹிஜ்ரி 521ல் நபிகள் நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அன்னவர்கள் கௌஸுல் அஃலம் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் கனவில் தோன்றி திருமணம் செய்து கொள்ளுமாறும், அதுவே உங்களுடைய ஆத்ம ஞானம் சம்பூரணமடைய அவசியமும் ஆகும் என்றார்கள்.
அதையொட்டி அவர்கள் திருமணம் செய்தார்கள். தமது 51ம் வயதில் நான்கு மனைவிமார்களை மணந்து 27 ஆண் குழந்தைகளையும், 22 பெண் குழந்தைகளையும் மொத்தம் 49 குழந்தைகளை பெற்றார்கள்.
40 ஆண்டுகள் சன்மார்க்க பிரச்சாரம் புரிந்த மாபெரும் தவசீலர் முஹ்யித்தீன் அப்துல் காதர் ஜீலானி ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் தங்கள் பூத உடலைவிட்டு மறையும் நேரம் வந்தது. அதை லௌஹுல் மஹ்பூல் என்னும் ஏட்டில் அவர்களால் பார்க்க முடிந்தது.

கௌஸுல் அஃலம் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் தனது இறுதி நேரத்தை அடைந்தபொழுது மலக்குமார்களும், அவ்லியாக்களின் ரூஹுகளும் அவர்களை பார்க்க வந்துக்கொண்டிருந்தனர்.
ஒவ்வொருவருக்கும் ஸலாம் கூறிக்கொண்டே இருந்தார்கள். பிறகு அவர்கள் குளித்துவிட்டு இஷா தொழுகையை தொழுதார்கள். நீண்டநேரம் ஸுஜூதில் இருந்து தன் குடும்பத்தார்களுக்கும், சொந்தக்காரர்களுக்கும் தன் முரீதுகளுக்கும், முஸ்லிம்களுக்கும் துஆ கேட்டார்கள்.

ஸுஜூதிலிருந்து அவர்கள் தலையை உயர்தியதும் "சாந்தியடைந்த ஆத்மாவே! உன் அல்லாஹ்வின் பக்கம் திரும்பி வருவாயாக. என் சுவர்க்கத்தில் புகுந்து கொள்வாயாக" என்ற திருக்குர்ஆன் வசனம் அசரீரியாக கேட்டது. கடைசி நேரம் வந்துவிட்டதை உணர்ந்த அவர்கள் தன் வாயால் திருக்கலிமாவை கூறி மூன்று தடவை அல்லாஹ் என்று அழைத்தார்கள். அதோடு தன் 91வது வயதில் ஹிஜ்ரி 561 ரபியுல் ஆகிர் பிறை 11அன்று இந்த உலகை விட்டு மறைந்தார்கள்.
அல்லாஹ்வின்பால் அண்மித்துவிட்ட அவர்களுக்கு மரணமேது!

## சூஃபிகளின் உலகம் 19



வலிகட்கரசர் குத்புல் அக்தாப் முஹ்யித்தீன் ஆண்டகை (றழி) அவர்களின் முத்தான உபதேசங்கள்.
உபதேசம் ஒன்று :-
மெய் விஸ்வாசம் கொண்டவனுக்கு வாழ்கையில் சகல நிலைமைகளிலும் மூன்று விசயங்கள் இன்றியமையாதவை, அவை அல்லாஹிவின் கட்டளைகளுக்கு கீழ் படிந்து நடப்பதும், விலக்கப்பட்டவற்றை விலக்கலும், இறைவன் திருச்சித்தத்தை மனமுவந்து ஏற்பதுமாகும்.
குறைந்த பட்சம் மெய் விசுவாசி இம்மூன்று அனுஷ்டானங்களிலுமாவது ஒழுங்காய் இருந்து வரவேண்டும் ஆகையால், அவன் இவற்றுக்காகவே மனத்தைத் தயாராக்கி, இவையற்றியே தன்னுல் பேசி, தன் அங்கங்களை இவற்றிலேயே ஈடுபடுத்தியவனாய் இருப்பதே பொருத்தமாகும்.
உபதேசம் இரண்டு :-

உண்மை விசுவாசத்துடன் (நபிபெருமான் (ஸல்) அவர்களின் பாதச்சுவட்டை பின்பற்றி நடவுங்கள்! மார்க்கத்தில் புதுமை பித்அத்) ஆனவைகளை உண்டாக்க வேண்டாம்.
(இறைவனுக்கும் அவன் தூதரக்கும்) கீழ்படியுங்கள் வழி தவறிவிடவேண்டாம் ஏகத்துவத்தைப் பாதுகாத்து இறைவன் எத்தீமையையும் உண்டாக்கி விட்டான் என்று கூறாதபடி உங்களைப் பேணிக் கொள்ளுங்கள்
அவன் சத்தியத்தை நிலை நாட்டி, ஐயத்திற்கு இடம் தராதிருங்கள்! பொருமையுடன் நிதானம் தவறாதிருங்கள் உறுதியுள்ளவர்களாய், ஓடிப்போகாதிருங்கள், உங்கள் தேவைகளுக்கு அவனிடமே முறையிடுங்கள்

அம்முறையீடு கேட்கப்படுவதற்கு பொறுமையுடன் காத்திருங்கள்!
அவனுக்கு அடிபணிவதில் ஐக்கியப்படுங்கள், ஒற்றுமைக்குலைவுக்கு இடந்தரவேண்டாம் பரஸ்பரம் அன்பு காட்டுங்கள் ஒருவரை ஒருவர் துவேசிக்க வேண்டாம்.
தீய பழக்கங்களிலிருந்து விலகுங்கள் அவற்றால் மாசடைந்து விடாதீர்கள் உங்கள் ரக்ஷிகனுக்கு அடிபணிவதன் மூலம் உங்களை அழகுபடுத்துங்கள் அவனிடம் கவனம்காட்டத்தவற வேண்டாம்
நீங்கள் (செய்த தவறுகள் குறித்து) பச்சாதாப்படத் தாமதம் வேண்டாம் அல்லும் பகலும் உங்களை சிருஷ்டித்தவனை நினைவு கூறாது சாக்குப்போக்குச் சொல்லவேண்டாம்.
இவ்விதம் சதா அவன் தியானத்திலேயே இருந்தால் உங்களிடம் கருணை காட்டப்படலாம்.
உங்களுக்கு நல்லதிஷ்டம் உண்டாகலாம் நரகாக்கினியிலிருந்து விமோசனமும் சுவர்க்க வாழ்வு பெற்றுச் சாந்தியின் உறைவிடத்திலே ஹூரிகளின் குழாத்திடையில் இறைவனின் ஆசியோடு தரிபட்டிருக்கலாம் அதே நிலையில் என்றும் இருக்கலாம்.

நல்ல குதிரைகள் மீது சவாரி செய்யலாம். கண்ணழகிகளின் நேசத்தில் மகிழலாம். பலவித வாசணைகளும் பெண்களின் இன்னிசையும் மற்றும் பல பாக்கியங்களும் அங்கே கிட்டும் உயரிய வாணுலகில் நபிமார்கள்,சத்திய நேயர்கள், வீரத்தியாகிகள், நேர் வழியாளர்களின் கூட்டத்திற்கு உயர்த்தப்பட்டவர்கள் ஆகுங்கள்

உபதேசம் மூன்று :-
அல்லாஹ்வின் அடியான் ஒரு சோதனைக்கு ஆளாகும்போது முதலில் தன் முயற்சிகளால் அதிலிருந்து தப்பிக்க முயல்கிறான் அவன் தோல்வியுற்றால் மானிடரிடையே உள்ள அரசர், அதிகாரிகள், போன்றவர்களின் உதவியை நாடுகிறான்.
நோய்,நொடியாக இருப்பின் வைத்தியனுடைய உதவியை நாடுகிறான் இதன் மூலம் சோதனையிலிருந்து விடுபட இயலாது போய்விடின் அதன் பின் அவன் சர்வலோக இரட்சகனான அல்லாவின் பக்கம் திரும்புகிறான் தொழுகையாலும், பிரார்த்தனையாலும் பணிவோடு அவனிடம் விண்ணப்பம் செய்கிறான்.
தன்னாலேயே நிவர்த்திகாண முடியும்வரை அவன் பிறர் உதவியையோ தன் சிருஷ்டியாளன் உதவியையோ நாடமாட்டான்.
அல்லாஹ்விடமிருந்து அவனுக்கு உதவி கிடைக்காவிட்டால் அவன் சந்நிதானத்தில் விழ்ந்து, இரந்தும், மண்றாடியும், பணிவோடு வேண்டியும், பயபக்தியோடும், நம்பிக்கையோடும் தன் தேவையைச் சமர்ப்பித்தும் முறையிட்டவாறே கிடப்பான்.
சர்வ வல்லமையாளனான அல்லாஹ் அவனை அதிகம் சோதிப்பான்.
உலகிலுள்ள சகல வழி வகைகளும் அவனுக்கு இல்லாதுபோய்விட்டன என்றாகும்வரை அவனுடைய பிரார்த்தனையை ஏற்க்கமாட்டான். அதன் பின் அல்லஹ்வின் கட்டளையும் செயலும் அவனிடம் வெளியாகும்
அல்லாஹ்வின் இந்த அடியான் சகல உலகப்பாதைகளையும், உலகின் நடவடிக்கைகளையும், முயற்சிகளையும் விட்டு அப்பாலாகிவிடுவான் தன் ஆத்மாவை மட்டும் தன்னகத்தே கொண்டவனாய் இருப்பான்

இவ்வித நிலையில் அவன் சர்வ வல்லமையாளனான இறைவனின் வேலையையன்றி வேறு எதையும் காணான்.
அவசியமாக நிச்சயபூர்வமான அளவுக்கு ஏகத்துவத்தில் அவன் நம்பிக்கை கொண்டவனாகிறான் எதையும் செய்பவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை.
எதையும் அசைப்பவனும், நிறுத்துபவனும் அவனன்றிவேறு யாருமில்லை எந்த நன்மை தீமையும் எந்த இலாப நஸ்டமும், எந்த இன்ப துன்பமும், எந்த எடுத்தலும் கொடுத்தலும், எந்த திறப்பும் அடைப்பும் எந்த ஜீவ மரணமும், எந்த கௌரவ அகௌரவமும், எந்தச் செல்வமும் வறுமையும் அவனாலன்றி வருவதில்லை என்பதை இன்னிலையில் அவன் உணர்வான்.

இதன் பின் தன்னை பாலுட்டி வளர்க்கும் தாதியின் கையிலுள்ள குழந்தையைப்போல, தன்னை குளிப்பாட்டுபவர்கள் கையில் கிடக்கும் மையித்தைப்போல, பூமியில் வைக்கப்பட்டு தன்னை மட்டையாள் அடிக்கப்போகிறவர் முன்கிடக்கும் பந்தைப்போல அவன் அல்லாஹ்வின் திருச்சமூகத்தில் சரணடைந்து சுழன்றுகொண்டு, உருண்டு கொண்டும் இருப்பான். தன்னிடமோ தன்னருகில் உள்ளோர்களிடமோ அசைவதற்குக் கூடப் பலம் இல்லாதிருப்பதைக் காண்பான். இவ்விதமாக அவன் தன் எஜமானனின் வேலையுள் மூழ்கித் தன்னகத்தில் இருந்தே மறைந்தவனாகி விடுவான்.

எனவே அவன் தன் எஜமானனையும் அவன் திறனையும் அன்றி வேறு எதையும் காணான். அவனையன்றி வேறு யார் பேசுவதையும் கேளான். புரிந்து கொள்ளான், அவன் எதையாவது கண்டால் அது அல்லாவுடைய வேலையேயாகும் அவன்

எதையாவது கேட்டறிந்தால் அது அல்லாஹ்வின் வார்த்தையேயாகும், அவன் எதையாவது புரிந்து கொண்டால் அது அல்லாஹ்வுடைய ஞானத்தினுடையவனாகிறான்.
அவனை அண்டியிருப்பதனாலேயே அதிஷ்டவனாய் இருக்கிறான். அவனை அண்டியிருப்பதன் மூலமே அவன் மதிப்பும் மரியாதையும் பெறுகிறான். திருத்தியும் ஆறுதலும் அடைகிறான். அல்லாஹ்வின் வாக்குறுதியால் தன் மனம் நிறைந்து அவன் வார்த்தையின் பக்கல் இழுக்கப்படுகிறான்.
அவனுக்கு புறம்பானவர்களை அவன் வெறுத்து ஒதுங்கிக் கொள்கின்றான் அவன் நினைவு கூர்தலை விரும்பி அதில் நம்பிக்கை கொள்கிறான்.

அந்த மஹா வலுப்பகமானவனிடம் ஸ்தாபிதம் பெற்றவனாகி விருகிறான். அவனிடமிருந்து ஒளி பெற்று உடுத்துக்கொள்கிறான். அவன் ஞானத்தின், அவன் சக்தியின், இரகசியத்தின் அபூர்வமான விசயங்களை விளங்கிக்கொள்கிறான். அந்த மகா சக்தியினிடமிருந்து கேட்டு நினைவால் அவனைப் புகழ்ந்து, துதித்து தொழுகையில் ஈடுபடுகிறான்.

**சூஃபிகளின் உலகம் 20**

ஹழ்ரத் காஜா முயீனுத்தீன் ஜிஸ்தி அஜ்மீரி ரழியல்லாஹு அன்ஹு



அப்பாஸியக் கலீபாக்கள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வழித்தோன்றல்கள் மீது தாங்க இயலாத கொடுமைகளை செய்து வந்தனர். பக்தாத்தில் வாழ்ந்து வந்த அவர்களின் வழித்தோன்றல்களில் சிலர் இஸ்ஃபஹானில் வந்து குடியேறி வாழ்ந்து வரலாயினர்.
அந்நகரில் வாழ்ந்து வந்த அந்த குடும்பத்தைச் சார்ந்த காஜா செய்யிது அப்துல் அஜீஸ் அவர்களின் மகனார் செய்யிது கியாஸுத்தீன் அவர்கள் ஹழ்ரத் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் வம்சாவழியில் தோன்றிய செய்யிது தாவூது என்ற பெரியாரின் அருமைத் திருமகள் உம்முல் வரா என்ற செய்யிதா மாஹினூரை மணமுடித்திருந்தனர்.
அவர்களுக்கு ஹிஜ்ரி 530 ஆம் ஆண்டு ரஜப் பிறை 14 (கி.பி.1116 ஏப்ரல் மாதம் 28 ஆம் நாள்) வெள்ளிக்கிழமை ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அந்தக் குழந்தைக்கு முயீனுத்தீன் (இஸ்லாத்தை வலுப் பெறச் செய்தவர்) என்று பெயரிட்டு அருமைபெருமையாக வளர்த்து வந்தனர்.

ஹாஜா முயீனுத்தீன் ஜிஷ்தி அவர்கள், நபிகள் நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்)அவர்களின் வழித் தோன்றல்களில் ஒருவராவார்கள்.
இச்சமயத்தில் தார்த்தாரியர் இஸ்ஃபஹான் மீது கடுமையான தாக்குதல் நடத்தி, அதனை நாசப்படுத்தி வந்தனர். எனவே செய்யிது கியாஸுத்தீன் ஹஸன் தம் குடும்பத்தினர்களுடன் அந்நகர் விட்டு நீங்கி குராஸானில் குடியேறினார்.

அவரின் அருமை மைந்தர் காஜா முயீனுத்தீன் ஜிஸ்தி அவர்கள் இளமையிலேயே மற்றச் சிறுவர்களை விட்டும் மாறுபட்டவர்களாக விளங்கினர். சின்னஞ்சிறு வயதிலேயே அவர்கள் அன்பு, இரக்கம், தயவு ஆகிய அரும்பெரும் குணங்கள் வாய்க்கப் பெற்றவர்களாக திகழ்ந்தனர்.
இளமையில் மற்றச் சிறுவர்களுடன் சேர்ந்து விளையாடச் செல்வதில்லை. மாறாக பள்ளி சென்று கல்வி பயின்றனர். ஒன்பது வயதிற்குள் குர்ஆன் முழுவதையும் மனனம் செய்து விட்ட அவர்கள், பின்னர் ஃபிக்ஹ் நூல்களையும், ஹதீது நூல்களையும் பயின்று தேர்ச்சியுற்றனர்.

அன்னனாரின் சிறுவயதிலேயே அவர்களின் அன்னை மறைந்து விட்டார்கள். அவர்கள் 15 வயதை எய்தியபோது அன்னாரின் தந்தையும் மறைந்து விட்டார்கள். அவர்களுக்கு தந்தை வழியாகத் தண்ணீர் இறைக்கும் காற்றாடியுடன் கூடிய பழத்தோட்டம் ஒன்று வாரிசு பாத்தியமாக கிடைத்தது. அதிலிருந்து கிடைத்த வருவாயைக் கொண்டு; எளிய முறையில் இனிதே வாழ்க்கை நடத்தி கொண்டிருந்தார்கள்.
தமக்கு சொந்தமான தோட்டத்தை விற்றுவிட்டு கல்வி தேடி சமர்கந்த், புகாரா நோக்கி பயணமாகி அங்கு மௌலானா ஹிஸ்ஸாமுத்தீனிடமும், ஷைகுல் இஸ்லாம் மௌலானா ஷர்ஃபுத்தீனிடமும் மார்க்கக் கல்விகளை கற்றனர்.

பின்னர் கௌதுல் அஃலம் முஹ்யித்தீன் அப்துல் காதிர் ஜீலானி ரழியல்லாஹு அன்ஹு அவர்களை சந்திப்பதற்காக பகுதாது சென்றார்கள். கௌதுல் அஃலம் அவர்கள் முயீனுத்தீன் சிஷ்தி நாயகத்திற்கு தாய்வழியில் ஒன்றுவிட்ட மாமாவாக இருந்தார்கள்.

தம்மைக் காணவந்த அவர்களை தம் சீடர்களிடம் புகழ்ந்துரைத்தார்கள். பிற்காலத்தில் இவர்கள் மாபெரும் மகானாக வருவார்கள் என்று வாழ்த்துரைத்தார்கள். அதன்பின் ஹாரூன் என்ற ஊரை அடைந்து அங்கிருந்த ஷைகு உதுமான் ஹாரூனி ரழியல்லாஹு அன்ஹு அவர்களை சந்தித்து தமக்கு தீட்சை தருமாறு வேண்டினர். அவர்களும் அவர்களுக்கு பயிற்சிகள் கொடுத்து சிஷ்தியா தரீகாவில் தீட்சை வழங்கினர்.
தம் குருவுடன் இரண்டரை ஆண்டுகள் தங்கியிருந்தபின், தம் குரு ஆணையின்படி பகுதாது வந்து கௌதுல் அஃலம் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை இரண்டாவது முறையும்,ஷைகு அபூநஜீப் சுஹ்ரவர்தீ ரலியல்லாஹு அன்ஹு அவர்களையும் சந்தித்து அவர்களின் ஆசியைப் பெற்றனர்.

இதன்பின் இந்தியாவிற்கு ஹிஜ்ரி 561 ஆம் ஆண்டு முஹர்ரம் மாதம் பத்தாம் நாள் (கி.பி. 11-11-1165) அவர்கள் இந்தியாவிலுள்ள மூல்த்தானுக்கு முதன்முதலாக வந்து சேர்ந்தார்கள். அதன்பின் லாகூர் சென்று பின் தம் குருநாதர் உதுமான் ஹாரூனி அவர்களை ரேயில் வைத்து சந்தித்து சிலமாதங்கள் கழிந்தபின் ஹிஜ்ரி 562 ஆம் ஆண்டில் ஹஜ்ஜு செய்வதற்காக மக்கா புறப்பட்டனர்.

அங்கிருந்து மதீனா சென்று அண்ணலாரின் திருக்கபுர் சரீபை தரிசித்தனர். பின்னர் அவர்கள் இருபது ஆண்டுகள் பற்பல நாடு நகரங்களிலும் சுற்றித் திரிந்து பகுதாது மீண்டனர். அங்கு வைத்து, காஜா அவர்களுக்கு கிலாஃபத் வழங்கிய உதுமான் ஹாரூனி அவர்கள் 'முயீனுத்தீனே! நான் உம்மை இறைவனளவில் ஒப்படைத்து விட்டேன்' என்று கூறி அவர்களின் நெற்றியிலும் கண்களிலும் முத்தமிட்டனர்.
தமது 52 ஆம் வயதில் சிஷ்திய்யா தரீகாவில் கிலாஃபத் பதவியைப் பெற்ற காஜா முயீனுத்தீன் சிஷ்தி அவர்கள் சில நாட்கள் பகுதாதில் தங்கியிருந்து பின்பு ஊஷ் என்ற ஊருக்கு சென்று குத்புத்தீன் பக்தியார் என்பவர்களுக்கு தீட்சை நல்கினர்.

இருவரும் மக்கா சென்று ஹஜ்ஜு செய்து விட்டு மதீனா நகர் சென்று பெருமானாரின் தரிசனத்தை பெற்றுக் கொண்டனர். பல்வேறு காடு, மலைகளை சுற்றித் திரிந்து பல்வேறு இறைநேசர்களை பல்வேறு நிலைகளில் கண்டு அவர்களின் துஆப் பேற்றினைப் பெற்றுக் கொண்டார்கள்.

பின்னர் டில்லி வந்து, அங்கிருந்த மக்களுக்கு இஸ்லாமிய அருள் நெறியைப் போதித்துவிட்டு 700 பேர்களை இஸ்லாத்தில் இணைத்து விட்டு கர்னூல் மாவட்டத்திலுள்ள சூனிபத் என்ற ஊருக்கு வந்து அங்கு அடங்கப்பட்டிருக்கும் ஷைகு நாஸிருத்தீன் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் அடக்கவிடத்தில் சில நாட்கள் தங்கி கல்வத்தில் இருந்தார்கள். அவர்கள் கல்வத் இருந்த இடம் இப்போதும் சில்லயே முபாரக் ஹழ்ரத் ஹாஜா கரீப் நவாஸ் என்ற பெயருடன், மரியாதையுடன் அழைக்கப்படுகிறது.
அடுத்து அவர்கள் பாட்டியாலாவிலுள்ள நாரனோஸ் என்ற ஊருக்குச் சென்று அங்கு சில நாட்கள் தங்கி இஸ்லாமியப் பிரச்சாரம் செய்தனர். பின்பு அவர்கள் ஸமானா வழியாக அஜ்மீரை நோக்கிப் பயணமாயினர். ஹிஸ்ரி 588 ஆம் ஆண்டு முஹர்ரம் மாதம் 10 ஆம் நாள் (கி.பி.1192) அவர்களின் புனிதப் பாதங்கள் அஜ்மீர் மண்ணிலே மிதித்தன. அப்பொழுது காஜா நாயகம் அவர்களுக்கு வயது 57.
இந்நகரமும், அதன் சூழலுமத் பிருதிவிராஜ் என்ற ராஜபுத்திர அரசனின் ஆட்சியில் இருந்தது. அவனுடைய அரண்மனை அதன் அருகிலுள்ள தாராகட் என்ற குன்றின் மீது இருந்தது. அதன் அடிவாரத்திலேயே மக்கள் வாழ்ந்து வந்தனர். அங்கேயே அவனுடைய குதிரை ஒட்டகை ஆகியவற்றின் தொழுவங்கள் இருந்தன.

அங்கு வந்த காஜா நாயகம் தம் சீடர்களுடன் வெட்ட வெளியில் இளைப்பாற அமர்ந்தனர். அரசரின் ஆட்கள் வந்து நீங்கள் இங்கு தங்க கூடாது. இது அரசரின் ஒட்டகை அடைக்கும் இடம் என்று சொன்னார்கள். அதுகேட்ட காஜா நாயகம் அவர்கள் அரசரின் ஒட்டகை இங்கேயே அடைபட்டுக் கிடக்கட்டும் என்று சொல்லி விட்டு தம் சீடர்களுடன் அருகிலுள்ள அன்னாசாகர் என்ற ஏரிக் கரையில் போய் தங்கினர்.
காலையில் ஒட்டகம் மேய்ப்பவர்கள் வந்து ஒட்டகையை எழுப்ப முற்பட்ட போது அவைகளால் எழும்ப முடியவில்லை. உடனே அவர்களுக்கு நேற்று நடந்த சம்பவம் நினைவுக்கு வரவே காஜா நாயகத்திடம் வந்து மன்னிப்புக் கேட்டனர்.

அவர்களும் மன்னித்து, இது எந்த எசமானுடைய ஆணைக்காக அமர்ந்திருந்ததோ அந்த எசமானுடைய ஆணை மீது அவை எழுந்து நடக்கும் என்று கூறினர். அவ்விதமே ஆயிற்று. அதுகண்டு ஒட்டகம் மேய்ப்பவர்கள் வியந்து அரசனிடம் இச்சம்பவம் பற்றி சொன்னார்கள்.
இதைக் கேட்ட அரசன் அதிர்ந்தான். ஏனெனில் மன்னனின் அன்னை வாசவதத்தா சோதிடத்தில் மிகவும் புலமை பெற்று விளங்கினாள். அவள் சுமார் 12 ஆண்டுகளுக்கு முன்பே இன்ன இன்ன அடையாளமுள்ள ஒருவர் இங்கு வருவார். அவரின் வரவால் உன் ஆட்சி வீழும் என்று தன் மகனிடம் முன்னறிவிப்பு செய்திருந்தாள்.

அதைக் கேட்ட மன்னன் அப்போது அவர்களின் படத்தை தம்அன்னையிடமே வரைந்து கேட்டு அதன்படிப் பல பிரதிகள் எடுத்து இத்தகு உருவமுடையவர் எவரேனும் தம் நாட்டு எல்லைக்குள் நுழைந்தால் அவரைப் பிடித்து என் முன் கொண்டு வர வேண்டும் என்று ஆணையிட்டிருந்தான்.
எனவே இச்செய்தியைக் கேட்டவுடன் அந்த நபர் இவர்களாகத்தான் இருக்குமோ என்று எண்ணி அவர்களை அங்கிருந்து விரட்ட ஆட்களை அனுப்பினான். அரசரின் ஆணையை சிரமேற்றோங்கிச் செயலாற்ற அவனின் பணியாளர்கள் முயன்ற போது....

நாயகம் அவர்கள் ஒருபிடி மண்ணை அள்ளி, அதில் ஆயத்துல் குர்ஸீயை ஓதி ஊதி, அவர்கள் மீது வீசி எறிந்தார்கள். அவர்கள் அதனைத் தாங்க இயலாது, பெரும் கூச்சலிட்டுக் கொண்டு வெருண்டோடினர்.
இதனை அறிந்த அரசன் காஜா அவர்களைப் பெரிய மந்திரவாதி என்று எண்ணிக் கொண்டு, மந்திரத்தை மந்திரத்தால் தான் வெற்றி கொள்ள வேண்டுமென்று எண்ணி, சாதுராம் என்ற மாபெரும் மந்திரவாதியைக் காஜா அவர்களிடம் அனுப்பி வைத்தான்.
அவர் காஜா நாயகத்தைப் பார்த்ததும் திடுக்கம் ஏற்பட்டு அவர்களின் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டு அன்னாரின் கரம் பிடித்து இஸ்லாத்தைத் தழுவி அவர்களின் ஊழியத்தில் இருந்து கொண்டார். அவருக்கு ஷாதிதேவ் (மகிழ்ச்சியாளர்) என்று பெயர் சூட்டி மகிழ்ந்தார்கள்.
இதன்பின் காஜா அவர்களை எதிர்த்து, மந்திர ஆற்றலினால் போராடி, அவர்களை அங்கிருந்து விரட்டிவிட ஜெய்ப்பால் என்ற மற்றொரு மந்திரவாதியை அனுப்பி வைத்தான் அரசன். அவர் தம்முடைய 1500 சீடர்களுடன் தம்மை எதிர்க்க வருகிறார் என்பதை அறிந்த காஜா நாயகம் அவர்கள் தம்முடைய கைக்கோலை கொடுத்து, நம்முடைய ஜமாஅத்தினரைச் சுற்றி பூமியில் ஒரு கோடு கிழியும். அதற்குள் நாம் இருக்கும் வரையில், அவர்களால் நமக்கு யாதொரு தீங்கும் செய்ய இயலாது என்று கூறினார்கள். அவ்விதமே அவரும் செய்தார்.

சற்று நேரத்தில் ஜெய்ப்பாலும்,அவரின் சீடர்களும் அங்கு வந்து, அக்கோட்டிற்குள் தம் கால்களை வைத்ததும், அவர்கள் மயங்கிக் கீழே விழுந்தனர். மயக்கம் தெளிந்து எழுந்த அவர்கள், தள்ளாடித் தள்ளாடி அன்னாசாகர் ஏரிக்கரையின் ஒரு புறத்தில் சென்றமர்ந்து, அன்னாசாகரின் தண்ணீரைக் காஜா அவர்கள் இருக்கும் பக்கம் செல்லவிடாது தடுக்கும் முயற்சியில் ஈடுபடலாயினர்.
இதனைக் கண்ட காஜா நாயகம் அவர்கள் ஷாதிதேவை அழைத்து, அவரின் கரத்தில் ஒரு பாத்திரத்தை கொடுத்து 'நீர் அன்னாசாகரின் நீரை இந்தப் பாத்திரத்தில் எடுத்து வாரும்' என்று கூறினர். அவர் சென்று அவ்வாறே நீர் எடுத்து வந்ததும், அந்த ஏரியிலுள்ள அனைத்துத் தண்ணீரும் அப்பாத்திரத்துக்குள் வந்து அந்த ஏரி மட்டுமில்லாது, அதனைச் சூழ இருந்த எல்லாக் கிணறுகளும் வற்றி வரண்டு விட்டன. மக்களும், மாக்களும் நீரின்றி செத்து மடிய வேண்டிய அவலநிலை ஏற்பட்டு விட்டது.

ஜெய்ப்பால் திடுக்கிற்று காஜா நாயகம் அவர்களிடம் இரங்கி வேண்ட, பாத்திரத்தில் எடுத்த நீரை ஏரியிலேயே கொட்டும்படி பணித்தனர். அவ்வாறே செய்ய ஏரி தண்ணீரால் நிரம்பி தளும்பியது.
இதன்பின்னரும் அறிவு பெறாது, ஜெய்ப்பாலும், அவருடைய சீடர்களும் மந்திங்களை ஜெபிக்கலாயினர். உடனே ஆயிரக்கணக்கான பாம்புகள் காடுகளிலிருந்து படையெடுத்து வந்து நாயகம் இருக்கும் கோட்டு வளையத்திற்குள்

தலையை விட்டதும் வெருண்டு பின்வாங்கி ஓடத் துவங்கின. அப்பொழுது அவர்களுக்கு ஏற்பட்ட ஏமாற்றத்திற்கு அளவேயில்லை.

ஜெய்ப்பால் முன் வந்து, வானத்தை அண்ணாந்து பார்த்து ஒரு மந்திரத்தை உச்சரிக்க, உடனே வானிலிருந்து நெருப்பு மழை பெய்து, சுற்றிலும் இருந்த மரங்களையெல்லாம் எரித்துச் சாம்பலாக்கியது. எனினும், ஒரு நெருப்புப் பொறிகூட நாயகம் அவர்களும், அவர்களின் சீடர்களும் இருந்து கோட்டு வளையத்திற்குள் வந்து விழவில்லை.
இதுகண்டு பெரிதும் விரக்தியுற்ற ஜெய்ப்பால் மான் தோல் ஒன்றை எடுத்து, அதனை விண்ணை நோக்கி எறிந்து, அதில் பாய்ந்தேறி விண்ணிலே பறந்து, மக்களின் கண்களுக்கு தெரியாமல் மறைந்து விட்டான்.
அப்பொழுது காஜா நாயகம் அவர்களின் சீடர்கள் தியானத்திலிருந்த காஜா நாயகம் அவர்களை அணுகி, ஜெய்ப்பாலின் இந்த நடவடிக்கைகளைப் பற்றி கூறவும், நாயகம் அவர்கள் தங்கள் காலணியை எடுத்து விண்ணை நோக்கி எறிந்தனர்.

அது விண்ணிலே பறந்து சென்று ஜெய்ப்பாலைக் கண்டுபிடித்து அவரின் தலையில் ஓங்கி, ஓங்கி அடித்தவண்ணம், அவரை பூமிக்கு இறக்கி வந்து, காஜா நாயகம் அவர்களின் திருமுன் கொண்டு வந்து விட்டது. அவர் அழுது சலித்து நாயகம் அவர்களின் காலில் விழுந்து மன்னிப்புக்கேட்டு இஸ்லாத்தை தழுவினார். அவருக்கு அப்துல்லாஹ் என்று பெயர் சூட்டி அரவணைத்தார்கள் காஜா நாயகம் அவர்கள்.
இதனால் யாது செய்வதென்று அறியாது திகைத்துக் கொண்டிருந்தான். இனியும் பொது இடத்தில் தங்க வேண்டாம் என்று காஜா நாயகம் அவர்களை ஷாதிதேவும், அப்துல்லாஹ்வும் கூறி ஷாதி தேவ்விற்கு சொந்தமான இந்திரகோட்டின் அருகில் உள்ள நிலத்தில் போய் தங்கினர். அவ்விடத்திலேயே அவர்களின் தர்கா இப்பொழுது உள்ளது.

அங்கு காஜா நாயகம் சென்று அமர்ந்ததும், அங்கு தாங்களும், தங்களின் சீடர்களும் தங்குவதற்கான வீட்டு வசதிகளைச் செய்து கொண்டனர். அங்கு ஒரு சமையல் விடுதியும் நிர்மாணிக்கப்பட்டது. புதிதாக நிர்மாணிக்கப்பட்ட தவமடத்தில் அமர்ந்து காஜா நாயகம் அவர்கள் இஸ்லாமியப் பிரச்சாரத்தை தொடங்கினர்.

அவர்களின் மாண்பினைக் கேள்வியுற்ற மக்கள், நாட்டின் நாலா பக்கங்களிலிருந்தும் வந்து, அவர்களின் கரம்பிடித்து இஸ்லாத்தைத் தழுவினர். நாயகம் அவர்களும் பல்வேறு பகுதிகளில் வாழும் பிரமுகர்களுக்கும், அரசனுக்கும் இஸ்லாத்தில் இணைய அழைப்பு விடுத்தனர்.
பிருதிவிராஜன் பல்வேறு முயற்சிகள் செய்தும் காஜா நாயகம் அவர்களை அடிபணிய வைக்க முடியவில்லை. அஜ்மீரை விட்டு 3 நாளில் விலகுமாறு அரசன் பிருதிவிராஜன் காஜா நாயகத்திற்கு கடிதம் ஒன்று கொடுத்திருந்தான்.

அச்சமயத்தில் ஷிஹாபுத்தீன் கோரியின் கனவில் காஜா நாயகம் அவர்கள் இந்தியாவுக்கு படைஎடுக்குமாறு சொன்னார்கள். அவரும் இரண்டாவது தடவையாக தாரவாடியில் பாளையம் இறங்கி பிருத்விராஜனுக்கு கடிதம் எழுதி எச்சரிக்கை விடுத்தார்.
ஆனால் அதைப் பொருட்படுத்தாமல் யுத்தத்திற்கு தயார் என்று அரசன் பிருத்விராஜன் சொன்னதால் தாரவாடியில் போர் மூண்டது. பிருத்விராஜனுக்கு துணையாக வந்த சிற்றரசர்கள், மன்னர்களும் போரில் உயிர் நீத்தனர். பிருத்விராஜன் ஓடிப்போனார். அவனை ஸர்ஸுரி என்ற இடத்தில் கைது செய்தார் ஷிஹாபுத்தீன் கோரி.

வெற்றி பெற்ற பின் கோரி அஜ்மீர் சென்று நாயகத்தை சென்று சந்தித்து காணிக்கைகள் வழங்கினார்.
தம்மைக் காண வந்த பிருத்விராஜனின் தாய், மனைவி மற்றும் மகன்களை அன்போடு வரவேற்ற கோரி அன்னையாரின் வேண்டுகோளுக்கிணங்க ஆட்சிப் பொறுப்பை பிருத்விராஜனின் மகன் கோலாவிடம் கொடுத்து விட்டு டில்லியில் குத்புதீன் ஐபக் என்பவரிடம் ஆட்சியை ஒப்படைத்து அஜ்மீர் நகரை நிர்வாகிக்க ஸையித் ஹஸன் மஷ்ஹரீ என்பவரை நியமித்து விட்டு கஜ்னி நகர் நோக்கி வெற்றி வீரராக சென்றார்.
அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கனவில் விடுத்த வேண்டுகோளை ஏற்று ஒரு சிற்றரசரின் மகளை இஸ்லாத்திலாக்கி அவருக்கு பீபி அமதுல்லாஹ் என்று பெயரும் சூட்டி திருமணம் முடித்துக் கொண்ட நாயகம் அவர்கள் அதன்மூலம் பக்ருத்தீன், ஹிஸாமுத்தீன் என்ற இரண்டு ஆண்மக்களையும், பீபி ஹாபிஸ் ஜமால் என்ற பெண்மகளையும் பெற்றெடுத்தனர்.
டில்லியில் வசித்து வந்த ஆன்மீக சீடர் குத்புத்தீன் பக்தியாரி அவர்களை சந்திப்பதற்காக டில்லி அய்னுத்தீன் பள்ளிவாசலுக்கு வருகை தந்தபோது அதைக் கேள்விபட்ட மக்கள் அப்பள்ளிவாசலுக்கு அலைஅலையாய் ஓடிவந்து அவர்களை சந்தித்தனர்.

இதன்பின் மற்றொரு நிகழ்ச்சி டில்லியில் ஏற்பட்டது. ஹிஜ்ரி 611 ஆம் ஆண்டு துல்ஹஜ் பிறை (கி.பி.1215 ஏப்ரல் 2 அன்று) காஜா நாயகம் அவர்களின் ஆன்மீக ஆசான் உதுமான் ஹாரூனி ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் தம் மாணவரைக் காண்பதற்காக அங்கு வருகை தந்தனர். ஒரே சமயத்தில் ஒரே இடத்தில் தம் ஆசானின் ஆசானின் ஆசானையும் காண்பதற்கு தங்களுக்கு இறைவன் தந்த இரு கண்கள் பற்றாது மூன்றாவது கண்ணும் வேண்டுமென்று டில்லி மாநகர மக்கள் பேசிக் கொண்டார்கள்.
சுல்தான் அல்தமிஷும், தம் அமைச்சர் பெருமக்களுடன் உதுமான் ஹாரூனி அவர்களிடம் பைஅத் பெற்றுக் கொண்டனர். பின்னர் அவர்கள் நாயகம் அவர்களை நோக்கி ஆன்மீகப் பாதையில் வழிகாட்டும் ஒரு நூலை ஆக்கிக் கொடுக்குமாறு ஆணையிட்டனர்.
அவ்விதமே அவர்கள் 'கன்ஸுல் அஸ்ரார்' என்ற பெயருடன் 25 பகுதிகளடங்கிய ஒரு நூலை எழுதி, சுல்தானுக்கு அன்பளிப்புச் செய்தனர்.
ஹிஜ்ரி 615 ல் உதுமான் ஹாரூனி அவர்கள் டில்லியை விட்டு மக்கா நகர் நோக்கி சென்றனர். அதன்பின் சிலகாலம் நாயகம் அவர்கள் டில்லியில் தங்கியிருந்து மன்னருக்கும், மற்றவர்களுக்கும் ஆன்மீக பயிற்சி அளித்துவிட்டு அஜ்மீர் திரும்பி அதையே தங்கள் இருப்பிடமாக்கிக் கொண்டனர்.
சிறிது காலத்தில் நாயகம் அவர்களின் அன்பு மனைவி பீபி அமதுல்லாஹ் மறுமை வாழ்வை எய்தப் பெற்றனர்.

தமது 90ஆவது வயதில் ஷியாப் பிரிவைச் சார்ந்த பீபி இஸ்மத்துல்லாஹ்வை இரண்டாவதாக மணமுடித்துக் கொண்டனர். இதன் காரணமாக ஏராளமான ஷீயாக்கள் சுன்னத் வல் ஜமாஅத்திற்கு வந்தனர். இந்த திருமணத்தின் மூலம் காஜா நாயகம் அவர்களுக்கு ஜியாவுத்தீன் அபூஸயீத் என்ற மகன் பிறந்தார்.
இரவெல்லாம் கடும் வணக்கம் புரிந்து வந்தனர். சுமார் 70 ஆண்டுகள் தலையணையில் தலைவைத்து படுத்ததில்லை. ஒவ்வோர் இரவும் அவர்கள் மக்கா சென்று வணக்கம் நிகழ்த்தி விட்டு, வைகறைத் தொழுகையில் கலந்து கொள்வதற்காக அஜ்மீர் திரும்பி விடுவர் என்றும், இந்தியாவிலிருந்து சென்ற யாத்ரிகர்கள் அவர்களைப் பலதடவை கஃபாவை இடம் சுற்றி வரக்கண்டுள்ளனர் என்றும் கூறப்படுகிறது.
திருக்குர்ஆனை ஓதிவருவதில் மிகவும் இன்புற்றிருப்பார்கள். நான் அவர்களின் ஊழியத்தில் இருபதாண்டுகள் இருந்துள்ளேன். அதில் அவர்கள் ஒருநாள் கூட தமக்கு உடல் நலத்தை வழங்குமாறு கேட்கவில்லை என்று குத்புத்தீன் பக்தியாரி ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் தெரிவிக்கிறார்கள்.
நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீதும் அளவற்ற அன்பு வைத்திருந்தனர். அன்னாரின் அருளுரைகளைக் கூறும் போதெல்லாம் உளம் உருகிக் கண்ணீர் சொரிவார்கள். ஒரு தடவை அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அருளுரைகளைக் கூறிய அவர்கள் 'நியாயத் தீர்ப்பு நாளின்போது, அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்; அவர்களின் திருவதனத்தைப் பார்க்க நாணமுறுபவனைப் போன்ற கொடிய பாவி எவனுமில்லை. அப்பொழுது நாணமுறுபவன், வேறு எங்கு போய்த்தான் ஒளிந்து கொள்வான்? அவனுக்குப் புகலிடம் தான் ஏது?' என்று கூறித் தேம்பித் தேம்பி அழுதார்கள்.

இறையச்சம் அவர்கள் உள்ளத்தை எப்பொழுதும் ஆட்கொண்டிருந்தது. சிலபொழுது இறையச்சத்தால் நடுங்கவும், தேம்பித் தேம்பி அழவும் செய்வர்.
தம்மைக் கொல்ல வந்தவனை தன் உள்ளுணர்வால் தெரிந்து கொண்ட அவர்கள் அதை அவனிடம் சொல்லியதும் அதிர்ந்த அவர் நாயகம் அவர்களின் காலில் விழுந்து மன்னிப்புக்கேட்டு இஸ்லாத்தை தழுவினார். 14 தடவை மக்காவிற்கு நடந்து சென்று ஹஜ்ஜு செய்து அங்கேயே இறப்பெய்தி ஜன்னத்துல் முஅல்லாவில் அடங்கப் பெற்றார்.

தாழ்மையின் உருவாக விளங்கிய அவர்கள் எவருக்கும் அவர்களே முதலில் ஸலாம் கூறுவர். வயோதிகர் எவரும் தம்மைக் காணவரின் அவரைக் கண்டதும் எழுந்து நின்று அவருக்கு முதலில் ஸலாம் உரைத்து வரவேற்று அமரச் செய்வார்கள். தேவையுடையோரின் தேவைகளை ஒவ்வொரு நாளும் காலையில் சென்று விசாரித்து அவற்றை நிறைவேற்றி வைப்பார்கள்.

அவர்களின் உணவும், உடையும் மிக எளிமையாக இருந்தன.நோன்பு நோற்க விலக்கப்பட்ட நாட்களைத் தவிர்த்து மீதி நாட்களில் நோன்பு நோற்றார்கள். எப்பொழுதும் பகீர்களின் உடையை அணிந்து வந்த அவர்கள், அது கிழிந்துவிடின் அதில் ஒட்டுப் போட்டு தைத்து அணிந்து கொள்வார்கள்.
நாயகம் அவர்கள் பேரின்ப இசை நிகழ்ச்சிகளிலும் அதிக ஈடுபாடுடையவர்களாக இருந்தனர். அதில் கலந்து கொண்டு அவர்கள் சொக்கி மகிழ்ந்து தம்மையே மறந்த நிலையிலாகிவிடுவார்கள். அவர்களுடன் ஷைகு ஷிஹாபுத்தீன் சுஹ்ரவர்தீ, ஷைகு முஹம்மது கிர்மானீ ஷைகு முஹம்மது இஸ்பஹானீ போன்ற இறைநேசச் செல்வர்களெல்லாம் அந்நிகழ்ச்சியில்

கலந்து கொள்வார்கள் என்று அவர்களின் மாணவர் குத்புத்தீன் பக்தியாரி காக்கி ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள்.

ஆன்மீக செங்கோல் செலுத்தி சுமார் 90 இலட்சம் பேர்களை இஸ்லாத்தில் இணைத்த நாயகம் அவர்கள் 97 வயதானபோது தமக்கு இறப்பு அண்மி விட்டதை அறிந்து தம் மாணவர் குத்புத்தீன் பக்தியாரி அவர்களை அஜ்மீர் வருமாறு அழைத்து 'இன்னும் சின்னாட்களில் நான் மறைவேன்' என்று சொல்லி தமது பிரதிநியை நியமிக்கும் கிலாஃபத் நாமாவை ஷைகு அலீ சஞ்சரீ ரலியல்லாஹு அன்ஹு அவர்களை எழுதச் செய்து அவர்களிடம் ஒப்படைத்து, அவர்களை டில்லிக்கு அனுப்பி வைத்து விட்டுத் தாங்கள் உலகிற்கு வந்த பணி நிறைவுற்றதென மனநிறைவுற்றார்கள்.

இதன்பின் சில நாட்கள் உருண்டோடின. ஹிஜ்ரி 627 ஆம் ஆண்டு ரஜப் மாதம், ஆறாம் நாள் (கி.பி. 1226 மே 21) திங்கட்கிழமை இரவு இஷா தொழுதபின் தம் அறையின் கதவைத் தாளிட்டுக் கொண்டு உள்ளே நுழைந்தனர். வைகறையில் கதவு தட்டப்பட்டபோது அது திறக்கப்படவில்லை. பிறகு ஒருவாறு கதவை திறந்து சென்று பார்த்தபோது, அவர்கள் இவ்வுலகை விட்டு மறைந்திருந்தார்கள்.
அவர்களின் நெற்றியில் 'ஹாதா ஹபீபுல்லாஹ் – மாத்த பி ஹுப்பில்லாஹ் (இவர் அல்லாஹ்வின் நேசர், அல்லாஹ்வின் நட்பிலேயே உயிர் நீத்தார்) என்று பொறிக்கப்பட்டிருப்பதைக் கண்டதும், அவர்களின் வியப்புப் பன்மடங்கு அதிகமாகியது.

விடிந்ததும் அவர்களின் மூத்த மகன் காஜா பக்ருத்தீன் தந்தையின் ஜனாஸா தொழுகையை முன்னின்று நடத்த பின்னர் அவர்களின் பொன்னுடல் நல்லடக்கம் செய்யப்பட்டது.
நாயகம் அவர்கள் மறைந்த செய்தி டில்லியிலிருந்த அவர்களின் கலீபா குத்புத்தீன் பக்தியாரி காக்கி அவர்களுக்குப் பல நாட்களுக்குப் பின்னர்தான் தெரிய வந்தது.
நாயகம் அவர்களின் அடக்கவிடத்தை ஷைகு ஹமீதுத்தீன் நாகூரி ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் வழியில் தோன்றிய ஷெய்கு ஹுஸைன் நாகூரி ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் பராமரித்து வந்தார்கள். அப்பொழுது காஜா நாயகம் அவர்களின் அடக்கவிடத்தின் மீது யாதொரு கட்டிடமும் எழுப்பப்படவில்லை.
அரசர் மஹ்மூது கில்ஜி அன்னாரின் மகிமையை உணர்ந்து அவர்களை பல்முறை டில்லிக்கு வருமாறு அழைத்தும் அவர்கள் செல்லவில்லை. நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் திருமுடியைக் காண வருமாறு அழைத்ததுமே அதைக் காண அங்கு சென்றார்கள்.

சுல்தான் ஷெய்கு ஹுஸைன் நாகூரிக்கு பணமுடிப்பு அளித்தும் அதை அவர்கள் ஏற்கவில்லை. தம் மகனாரின் வேண்டுகோளை ஏற்று காஜா நாயகத்தின் அடக்கவிடத்தின் மீது கட்டிடம் கட்டும் எண்ணத்தோடு அப்பணத்தைப் பெற்று அதைக் கொண்டு அவர்களின் கட்டிடம் நிர்ணமானிக்கப்பட்டது.
பின்னர் சுல்தான் மஹ்மூது கில்ஜி தர்காவின் அண்மையில் இறைவனைத் தொழுவதற்காக ஒரு பள்ளிவாயிலை நிர்மாணித்தார். அதுவே இப்பொழுது 'ஸந்தல் மஸ்ஜித்' என்ற பெயருடன் திகழ்கிறது. அவரே 'புலந்து தர்வாஸா' (உயரமான வாசல்) என்ற பெயருடன் விளங்கம் வாயிலையும் நிர்மாணித்தார்.
மால்டாவின் மன்னர், மால்தேவை வென்றபின் டில்லி மன்னர் ஷெர்ஷா சூரியும் அஜ்மீர் வந்து காஜா நாயகத்தை தரிசித்து அங்கு நிலவிய தண்ணீர்ப் பஞ்சத்தை அறிந்து அங்கு தம் பெயரால் ஓர் ஏரியை வெட்ட ஏற்பாடு செய்தார்.

பின்னர் டில்லியை ஆண்ட பேரரசர் அக்பரும் பலதடவை நாயகத்தின் தர்பாருக்கு வருகை தந்துள்ளார். சித்தூரில் வெற்றி கிடைத்தால் கால்நடையாகவே அஜ்மீர் வருவதாக நிய்யத்து செய்து வெற்றி கிடைத்ததும் அதன்படியே செய்து தமது நேர்ச்சையை நிறைவேற்றிக் கொண்டார். அவருக்கு மகன்கள் பிறந்த பின்னரும் பலமுறை அஜ்மீர் வருகை தந்துள்ளார்.

சிவப்பு நிறக்கற்களால் ஒரு பள்ளிவாயிலும், காஜா அவர்கள் வாழ்ந்து மறைந்த குளிப்பாட்டப்பட்ட இடத்தில் தர்வேஷ்கள் தங்குவதற்கு ஒரு தங்குமிடமும் 'ஸஹன் சிராஹ்' என்ற விளக்கு மண்டபமும் நிர்மாணித்ததோடு, 125 மணங்கு (தபர்ருக்) சோறு சமைக்கக் கூடிய பெரிய செம்பு சட்டி ஒன்றையும் செய்து கொடுத்தார். மேலும் அஜ்மீரைச் சுற்றி பாதுகாப்புச் சுவரும் எழுப்பினார்.
அக்பரின் மகன் சலீம் என்ற ஜஹாங்கீர் பலமுறை அஜ்மீர் தர்காவிற்கு வருகை தந்துள்ளார். அங்குள்ள சிறிய செம்பு சட்டி அவர் காணிக்கையாக நல்கியதேயாகும். அதில் ஒரு வேளைக்கு 60 மணங்கு சோறு சமைக்கலாம். இதை காணிக்கையாக வழங்கிய அன்று இதில் சோறு சமைத்து 5000 ஏழைகளுக்கு வழங்கினார் அவர்.

அவரின் மகன் ஷாஜஹானும் இங்கு 5 தடவை வந்து அடக்கவிடத்தை தரிசித்தார். இங்கு வெள்ளை சலவைக் கற்களாலான ஒரு பள்ளிவாயிலையும், நகார்கானாவையும் நிர்மாணித்தார்.
ஷாஜஹான் மகள் ஜஹானரா ஹிஜ்ரி 1503 ஷஃபான் மாதம் 18 ஆம் தேதி காஜா நாயகத்தை தரிசிக்க சென்று ரமலான் மாதம் 7 ஆம் நாள் அஜ்மீர் சென்று அன்னாரின் அடக்கவிடத்தை தரிசித்ததை மிகவும் பாக்கியமாக கருதி தம்முடைய 'முனிஸுல் அர்வாஹ்' என்ற நூலில் வரைந்துள்ளார். மேலும் தமக்கு ஊழியம் செய்ய வந்த ஊழியர்கள் அனைவரையும் அங்கேயே விட்டு விட்டு டில்லி மீண்டார். அந்த ஊழியர்களின் வழித்தோன்றல்களே இன்றும் அங்கு ஊழியம் செய்து வருகிறார்கள்.
ஷாஜஹானுக்குப் பின் அரியணை ஏறிய அவ்ரங்கசீபும் காஜா நாயகம் அவர்களின் தர்பாருக்கு பலமுறை வந்துள்ளார். அஜ்மீருக்கு வரும் ஒவ்வொரு தடவையும் தம் தங்குமிடத்திலேயே ஆயுதங்களை வைத்துவிட்டு கால்நடையாகவே காஜா அவர்களின் அடக்கவிடத்திற்கு வந்து தரிசித்து வந்தார். அப்பொழுது ஐயாயிரம் ரூபாய்க்குக் குறையாமல் காணிக்கை செலுத்தி வந்தார்.
பிற்காலத்தில் காஜா அவர்களின் அடக்கவிடத்திற்கு ஐந்தாம் ஜார்ஜ் மன்னரின் மனைவி மேரி ராணி அம்மையார் ஆப்கான் அமீர் ஹபீபுல்லாஹ் கான், ராம்பூர் நவாப் ஹாமித் அலீகான், ஹைதராபாத் நிஜாம் மீர் உஸ்மான் அலீகான்,தீதா சமஸ்தான மன்னர் மகாராஜா கோபதிசிங்,தோல்பூர் மகாராஜா ராஜா உதயபான் சிங்,மகாத்மா காந்தி,ஜவஹர்லால் நேரு, மௌலானா முஹம்மது அலீ ஜவ்ஹர் ஆகியோரும் வந்து தரிசித்து சென்றுள்ளனர்.
மலேசிய தேர்தலில் வெற்றி பெற்ற துங்கு அப்துர் ரஹ்மான் அமைச்சராக பொறுப்பேற்றதும் அஜ்மீர் வந்து காணிக்கை செலுத்தி சென்றார்.

முன்னாள் பாரத பிரதமர் வாஜ்பாய், தற்போதைய இந்திய பிரதமர் நரேந்திர மோடி, மற்றும் அமெரிக்க அதிபர் பராக் ஒபாமா ஆகியோரும் இந்த இடத்தை வந்து தரிசித்து சென்றுள்ளனர். பராக் ஒபாமா நாயகம் அவர்களின் அடக்கவிடத்திற்கு அழகிய போர்வையை அன்பளிப்பாக அனுப்பியுள்ளார்.
ஜாதி,மத பேதமின்றி அனைவரையும் மாட்சிமையுடன் ஆட்சி செய்யும் அஜ்மீர் நாயகம் அவர்களின் மாண்பினைக் கண்டேன் என்று கி.பி. 1902 ஆம் ஆண்டில் அங்கு வருகை தந்த இந்திய வைஸ்ராய் கர்ஸன் பிரபு தர்காவின் நிகழ்ச்சிக்குறிப்பில் குறிப்பிட்டுள்ளார்.

" சூபிகளின் உலகம்" - தொடர்பதிவு இத்துடன் நிறைவு பெறுகிறது.
இன்னும் சொல்ல வேண்டிய சூஃபிமார்கள் நிறைய இருந்தாலும் , அடுத்தடுத்த தலைப்புகளை ஆய்வு செய்வது என்பது காலத்தின் கட்டாய தேவை.இதை நான் சொல்லித் தெரிய வேண்டியதில்லை.
எனவே விடுபட்ட சூஃபிமார்களைப் பற்றி இன்ஷா அல்லாஹ் மற்றொரு தொடர் பதிவில் உங்களிடம் சொல்ல வருகிறேன்.
இதுவரை எழுதப்பட்ட சூஃபி பதிவுகள் குறித்து உங்களுக்குள்ளே நிச்சயமாக ஒரு மாற்றத்தை அது ஏற்படுத்திருக்கும். அந்த ஓர் சூஃபி தனத்தைப் பற்றி சிந்திந்தித்து, என்னிடம் தங்களின் கருத்துக்களை தெரிவித்தால் மிக்க விவாகரத்து செய்து விடுவேன்" என்றார் .
இதைக் கேட்டு, அந்த எழிலரசி ஒரு நிமிடம் திடுக்கிட்டுத்தான் போனாள். ஆயினும் கணவரைச் சமாதானப்படுத்த சந்தோஷமாக இருக்கும்.
உங்கள் ர.ரா

## கராமத் 01



ரசூல்மார்கள், நபிமார்களுக்கு வல்ல அல்லாஹ் "முஃஜிஸத்" என்ற அற்புதத்தைக் கொடுத்தான். அதைக் கொண்டு அவர்கள் "ரிஸாலத், நுபுவ்வத்" என்பவற்றை நிலைநிறுத்தினார்கள்.

அதேபோல் வலிமார்களுக்கு இறைவன் “கராமத்” என்ற அற்புதத்தைக் கொடுத்தான். அதைக் கொண்டு அவர்கள் “விலாயத்” என்பதை உலகில் நிறுவினார்கள். அந்த அடிப்படையில் நபிமார்கள், ரசூல்மார்களிலிருந்து அற்புதம் வெளியாகும் போது அதை “முஃஜிஸத்” என்றும் வலிமார்களிலிருந்து வெளியாகும் போது அதை “கராமத்” என்று அழைக்கப்படுகிறது.
இரண்டின் மூலமாக வெளியாகும் செயல்கள் ஒன்றுதான். அதற்கு பெயர் அற்புதம். ஆயினும் நபிமார்கள், வலிமார்கள் என்று பிரித்துக் காட்டுவதற்காக முஃஜிஸத், கறாமத் என்று சொல்லப்பட்டுள்ளது.
முஃஜிஸத் பொறுத்த வரை எந்த நபியும் சுயமாக எந்த அற்புதத்தையும் செய்ய விரும்பவில்லை.அதே சமயம் தன்னால் அற்புதங்களை நிகழ்த்த முடியும் என்று எந்த ஒரு நபியும் வாதிடவுமில்லை. மக்கள் அவர்களிடம் கேட்டார்கள். அல்லாஹ்வின் கட்டளை வரும் போது அவ்வப்போது செய்து காண்பித்தார்கள்.

وَمَا كَانَ لِرَسُوْلٍ اَنْ يَّاْتِىَ بِاٰيَةٍ اِلَّا بِاِذْنِ اللّٰهِ لِكُلِّ اَجَلٍ كِتَابٌ  وَلَقَدْ اَرْسَلْنَا رُسُلًا مِّنْ قَبْلِكَ وَ جَعَلْنَا لَهُمْ اَزْوَاجًا وَّذُرِّيَّةً

(நபியே!) நிச்சயமாக உமக்கு முன்னரும், நாம் தூதர்களை அனுப்பி வைத்தோம்; அவர்களுக்கும் மனைவியரையும், சந்ததிகளையும் நாம் ஏற்படுத்தியிருந்தோம்; மேலும், எந்தத் தூதரும் அல்லாஹ்வின் அனுமதியில்லாமல் எந்த அத்தாட்சியையும் கொண்டுவந்ததில்லை; ஒவ்வொரு தவணைக்கும் ஒரு (பதிவு) ஏடு உள்ளது. (குர்ஆன் : 13:38)

முதலில் முஃஜிஸத் பற்றி பார்ப்போம். இந்த முஃஜிஸத் என்னும் அற்புதங்களை நபிகளிடம் மக்கள்தான் கேட்டார்கள்
اِذْ قَالَ الْحَـوَارِيُّوْنَ يٰعِيْسَى ابْنَ مَرْيَمَ هَلْ يَسْتَطِيْعُ رَبُّكَ اَنْ يُّنَزِّلَ عَلَيْنَا مَآىِٕدَةً مِّنَ السَّمَآءِ قَالَ اتَّقُوا اللّٰهَ اِنْ كُنْتُمْ مُّؤْمِنِيْنَ

“மர்யமுடைய மகன் ஈஸாவே! உங்கள் இறைவன் வானத்திலிருந்து எங்களுக்காக உணவு மரவையை (ஆகாரத் தட்டை) இறக்கி வைக்க முடியுமா?” என்று ஹவாரிய்யூன் (சீடர்)கள் கேட்டபோது அவர், “நீங்கள் முஃமின்களாக இருந்தால், அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ளுங்கள்” என்று கூறினார். (குர்ஆன் : 5:112)

قَالُوْا نُرِيْدُ اَنْ نَّاْكُلَ مِنْهَا وَتَطْمَىِٕنَّ قُلُوْبُنَا وَنَـعْلَمَ اَنْ قَدْ صَدَقْتَـنَا وَنَكُوْنَ عَلَيْهَا مِنَ الشّٰهِدِيْنَ

அதற்கவர்கள், “நாங்கள் அதிலிருந்து புசித்து எங்கள் இதயங்கள் அமைதி பெறவும், நிச்சயமாக நீங்கள் எங்களுக்கு உண்மையையே கூறினீர்கள் என்பதை அறிந்து கொள்ளவும், இன்னும் நாங்கள் அதைப்பற்றி சாட்சி கூறக் கூடியவர்களாகவும் இருக்க விரும்புகின்றோம்” என்று கூறினார்கள். (குர்ஆன் : 5:113)

நபி மூஸா(அலை) அவர்களிடம் உணவை கேட்க, இறைவன் வானத்திலிருந்து மன்னு சல்வாவை இறக்கி வைத்ததாக..
يٰبَنِىْۤ اِسْرَآءِيْلَ قَدْ اَنْجَيْنٰكُمْ مِّنْ عَدُوِّكُمْ وَوٰعَدْنٰكُمْ جَانِبَ الطُّوْرِ الْاَيْمَنَ وَنَزَّلْنَا عَلَيْكُمُ الْمَنَّ وَالسَّلْوٰى

இஸ்ராயீலின் சந்ததிகளே! நிச்சயமாக நாம் உங்களை உங்களுடைய எதிரிகளிடமிருந்து காப்பாற்றி "தூர்" என்னும் மலையின் வலது பாக(ம் வந்தால் உங்களுக்குத் தவ்றாத்)த்தை(த் தருவதாக) வாக்களித்து (உணவு கிடைக்காத பாலைவனத்தில்) உங்களுக்கு "மன்னு சல்வா"வையும் ( வானத்திலிருந்து) இறக்கி வைத்தோம். (அல்குர்ஆன் : 20:80)

அபுஜஹில் தலைமையில் இக் கூட்டம் " மினா" என்ற இடத்தில்
நபி (ஸல்) அவர்களை சந்தித்து . "இன்று முழு பௌர்ணமி நீங்கள் அல்லாஹ்வின் தூதர் என்றால், இந்த முழு நிலவை இரண்டாக பிளக்க வேண்டும்.
நபி (ஸல்) அவர்கள் தங்கள் ஆள்காட்டி விரலினால் சந்திரனை இரண்டாகப் பிளக்கச் செய்தார்கள். இதற்கு சாட்சியாக நீங்கள் இருங்கள் என்று நபித்தோழர்களான அனஸ் இப்னு மாலிக் (ரலி), அப்துல்லாஹ் இப்னு மசூது (ரலி), அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரலி) ஆகியோர்களைப் பார்த்து சொன்னார்கள்
சந்திரன் இரண்டாக பிளந்தது.பின் நபி (ஸல்) அவர்கள் அதே ஆள்காட்டி விரலாலேயே பிளந்த சந்திரனையும் சேர்த்தும் வைத்தார்கள். இது பற்றி குர்ஆனில் அல்லாஹ் ...

اِقْتَـرَبَتِ السَّاعَةُ وَانْشَقَّ الْقَمَرُ

மறுமை நெருங்கிவிட்டது. (அதற்கு அத்தாட்சியாக) சந்திரனும் பிளந்து விட்டது. (குர்ஆன் : 54:1)
وَاِنْ يَّرَوْا اٰيَةً يُّعْرِضُوْا وَيَقُوْلُوْا سِحْرٌ مُّسْتَمِرٌّ

எனினும், அவர்கள் எந்த அத்தாட்சியைக் கண்டபோதிலும் (அதனைப்) புறக்கணித்து "இது சகஜமான சூனியந்தான்" என்று கூறுகின்றனர். (குர்ஆன் : 54:2)

முஃஜிஸத் என்னும் அற்புதங்களை மக்கள் நபிமார்களிடம் கேட்டார்கள். அல்லாஹ்வின் கட்டளை வரும் போது அவ்வப்போது செய்து காண்பித்தார்கள்.

**கராமத் 2**



இறந்தவைகளை உயிர்பிக்க அவுலியாக்களால் முடியுமா ?
"ஹயாத்திலும், வபாத்திற்குப்பாலும் அவுலியாக்கள் கராமத்துச் செய்ய சக்தி பெற்று இருக்கின்றார்களா? மவுத்தாகிப் போனவைகளை அவர்களால் ஹயாத்தாக்க முடியுமா ? "என்று இமாம் ஷைகு முஹம்மது கலீலீ (ரஹ்) அவர்களிடம் வினவப்பட்டது. அதற்கு " அவர்கள் கராமத்து செய்ய அவுலியாக்கள் சக்தி பெற்றிருக்கிறார்கள். மவுத்தாகிப் போனவைகளை ஹயாத்தாக்கவும் அவர்களால் முடியும் " என்று அவர்கள் பதில் கூறியிருக்கிறார்கள். இதன் விபரம் பதாவாகலீலீ 1 -வது பாகம் 79 -வது பக்கத்தில் காணப்படுகிறது.

ஹஜ்ரத் தக்கலை மீர் முஹம்மது அப்பா அவர்கள் காலத்தில் திருவனந்தபுரத்தை ஆண்டு வந்த முத்துச்சாமி தம்பிரான் பீர் அப்பா அவர்கள் சகவாசத்தில் சிறிது காலம் இருந்து பெரிய ஞானி மகானாகிவிட்டர் . தன் சற்குரு அப்பா அவர்களை அரச குடும்பத்தினர் பெரிதும் கண்ணியப்படுத்தி மரியாதையோடு உபசரிப்பதை பெரிதும் விரும்பினார்.
அந்தச் சந்தர்ப்பத்தில் அரண்மனயில் அடுத்த வாரத்தில் இளவரசராக பட்டம் சூட்டுவதற்கு நியமிக்கப்பட்ட அரச குமாரனுக்கு திடீரென நோய் உண்டாயிற்று . ராஜ வைத்தியம் செய்தும் பலனில்லாமல் இளவரசன் உயிர் துறந்தான் .
அரச அவையும் சமஸ்தானம் துக்கத்தில் ஆழ்ந்தன. முத்துச்சாமி தம்பிரானோ " "என் சற்குரு அப்பா அவர்கள் அருகில் இருந்திருந்தால் , என் மகன் நோயில் இருந்து காப்பாற்றபட்டிருக்கலாம் " என்று புலம்ப ஆரம்பித்து விட்டார் .

தகனக் கிரியைக்கான ஏற்பாடுகள் நடைபெற்றுக் கொண்டிருந்தன. இந்தச் சமயத்தில் பீர் முஹம்மது அப்பா அவர்கள் அரண்மனைக்குள் திடும் பிரவேசமாக நுழைந்தார்கள். அரச குடும்பத்தாரின் பரிதாப நிலையைக் கண்டு மனமிரங்கினார்கள் .
"முத்துச்சாமி தம்பிரானே , ஞானியான உமக்கு விசனம் வேண்டாம்" என்று அவர்களுக்கு ஆறுதல் கூறினார்கள் .
பின்பு இளவரசன் பிணமாகக் கிடந்த மாடத்திற்குள்ளே சென்று எல்லோரையும் வெளியே போகச் செய்து , கதவை அடைத்துக் கொண்டு, பிணத்துடன் தனிமையாக இருந்தார்கள் . சற்று நேரத்திற்குள் அப்பா அவர்கள் சரீரம் முழுவதும் வியர்த்து வடிந்தவர்தளாய் , இறந்து போன இளவரசனை உயிர் பெற்றெழச் செய்து , தன்னுடன் ஒன்றாக அழைத்து வந்து , அரசனது கையில் ஒப்புவித்து ,"இனி நீர் எம்மைப் பார்ப்பது அரிது " என்று கூறி மறைந்தும் விட்டார்கள் .
அரசர் தம்பிரான் , அப்பா அவர்களைக் கண்டு கொள்வதற்கு எவ்வளவோ பிரயாசை எடுத்துத் தேடியும் அப்பா அவர்கள் கிடைக்கவே இல்லை.
அதன் பின் சற்றேறக்குறைய நூறு வருடங்களுக்குப் பிறகு அப்பா அவர்கள் வந்து சேர்ந்தார்கள் .அப்பா அவர்கள் முந்நூறு வருட காலம், ஜீவித்திருந்ததாய் சரித்திரம் கூறுகின்றது.
***ஆதாரம் :- இவ் வரலாற்றை உரையுடன் அப்பா அவர்கள் எழுதிய "ஞானமணிமாலை " யில் ஜீவி சரிதைப் பகுதியில் காணலாம்.***

ஒரு நாள் பாக்தாத் நகரில் கடைத்தெரு வழியாக கௌதுல் அஃளம் ( ரலி ) அவர்கள் சென்று கொண்டிருந்தபோது, ஒரு கிறிஸ்தவரும் ஒரு முஸ்லிமும் தர்க்கம் செய்து கொண்டிருப்பதை கண்டு அவ்விடம் இன்று கவனித்தார்கள்.
கிறிஸ்தவர் நபி ஈஸா (அலை) அவர்களது முஃஜிஸாத்துக்கள் பலவற்றை கூறி, அவர்களே மேலானவர்கள் என்று கூறினார்.
முஸ்லிம், நபி முஹம்மது (ஸல்) அவர்களது முஃஜிஸாத்துக்கள் பலவற்றை கூறி அவர்களே மிகவும் மேலானவர்கள் என்று கூறினார்.
கடைசியாக அந்த கிறிஸ்தவர் எங்கள் ஈஸா மரித்தவர்கள் உயிர்ப்பித்திருக்கிறார்கள். உங்கள் நபி அவ்விதம் செய்திருக்கிறார்களா ? என்று வினவினார்.
அதற்கு பதில் சொல்ல தெரியாமல் அந்த முஸ்லிம் சிறிது தயங்கினார். உடனே தான் ஜெயித்து விட்டதாக அந்த கிறிஸ்தவர் ஆரவாரம் செய்யலானார்.

இவருடைய விவாதங்களை கவனித்துக் கொண்டிருந்த கௌதுல் ஆஃளம் (ரலி) அவர்கள் முன் வந்து ,அந்தக் கிறிஸ்தவரை நோக்கி, " நீர் கூறிய அத்தனை விஷயங்களும் உண்மைதான். அவற்றை நாங்களும் ஒப்புக்கொள்ளவே செய்கின்றோம். நான் ஒரு முஸ்லிம். முஹம்மது நபி (ஸல்) அவர்களது உம்மத்துக்களில் நானும் ஒருவன். இறந்துபோன மையத்து எதையாவது நீ காண்பி அதை உயிர்பெறச் செய்கிறேன்" என்றார் .
அந்த கிறிஸ்தவர் தமது முன்னோர்களை அடக்கம் செய்யப்பட்டிருக்கும் ஒரு மையவாடிக்கு அழைத்துச் சென்று, "பல்லாண்டுகளுக்கு முன்பு புதைக்கப்பட்ட ஒரு புராதான புதைகுழியை காண்பித்து,
" இதில் அடக்கம் செய்யப்பட்டு இருப்பவர் ஒரு பாடகர். இவர் உயிர் பெற்று எழுந்து என்னுடன் பேசுவாராகில், நான் உங்களது மார்க்கத்தை தழுவுகிறேன் . இல்லாவிடில் நீங்கள் எனது மார்க்கத்தை தழுவவேண்டும் சம்மதம்தானா ?" என்பதை சபதம் கூறினார்
"அப்படியே சம்மதம் "என்பதாக ஹஜரத் கௌதுல் ஆஃளம் உடன்பட்டு, "உங்கள் நபி மரித்தோரை எவ்வாறு உயிர்ப்பித்தார்கள் ? என்று விளங்கினார்கள்.
" அல்லாஹ்வுடைய உத்தரவு கொண்டு எழுந்திரு என்பார்கள். உடனே எழுந்திருக்கும் " என்று அவர் விடையளித்தார்.
" அப்படியா? இப்போது நான், எனது உத்தரவு கொண்டு எழுந்திருக்க செய்கிறேன் பார்" என்று கூறி, "எனது உத்தரவு கொண்டு எழுந்திரு" ( கும்பி இதுனீ) என்று மொழிந்தார்கள்.
அந்த உடனே மடிந்து மண்ணோடு மண்ணாக கிடந்த அந்தப் பாடகர் வாத்தியத்தை இசைத்தவாறு பாடிக்கொண்டே குழியிலிருந்து வெளியே வந்தார்.
அந்த இந்த சங்கீத வித்துவான் கிறிஸ்தவரை நோக்கி, திருக்கலிமாவை கூறி இஸ்லாத்தை தழுவ இன்னும் தாமதம் ஏன் ? என்று வினவினார் .அந்த கிறிஸ்தவர் பேராச்சரியமுற்றவராய் அக்கணமே கலிமா மொழிந்து முஸ்லிம் ஆகிவிட்டார்.
சரித்திர பூர்வமான இவ்வரலாற்றை தப்ரீஜுல் காத்திர் 16-வது பக்கத்திலும் , மனாகிபு கௌதிய்யா 66 -வது பக்கத்திலும் பார்வையிடலாம்.

## கராமத் 3

(ஓங்கி அடித்தால் ...)

ஒருவன் ஹஜ்ரத் செய்யிதுனா அலி (ரலி) அவர்களை நிந்தித்து அவதூறாகப் பேசுவதையே வழக்கமாகவும், பழக்கமாகவும் கொண்டிருந்தான்.
அவன் ஓரிரவு நித்திரையில் ஹஜ்ரத் அலி (ரலி) அவர்கள் அவனது கனவில் தோன்றி, அவனுடைய முகத்தில் ஓங்கி அறைந்தார்கள். அவன் பயந்து திடுக்கிட்டு விழித்துப் பார்க்கும் போது , தன்னுடைய ஸூரத் (கோலம்) மாற்றப்பட்டிருப்பதைக் கண்டு கை சேதப்பட்டான் " என்பதாக கிதாபுர் ரூஹ் என்ற நூலில் சொல்லப்பட்டுள்ளது .
காரீ ஒருவர் மதரஸாவில் குர்ஆன் ஓதிக் கொண்டிருக்கிறார். அந்நேரம் 'மந்திக் ' என்னும் தத்துவ யதார்த்த சாஸ்திரத்தை கற்ற ஒருவன் அந்தப் பக்கமாக போய்க் கொண்டிருக்கிறான்.
அப்போது காரீ, (குல் - அர- அய்த்தும் - இன் அஸ்பஹமாஉக்கும்..)

قُلْ اَرَءَيْتُمْ اِنْ اَصْبَحَ مَآؤُكُمْ غَوْرًا فَمَنْ يَّاْتِيْكُمْ بِمَآءٍ مَّعِيْنٍ

" உங்களின் (குடி) தண்ணீர் பூமியினுள் (உறிஞ்சப்பட்டுப்) போய்விட்டால், அப்பொழுது ஓடும் நீரை உங்களுக்குக் கொண்டு வருபவன் யார்? என்பதை கவனித்தீர்களா? (அல்குர்ஆன்: 67:30) என்ற திருவசனத்தை ஓதிக் கொண்டிருப்பதை அவன் காதில் கேட்டான்.
உடனே அந்தத் தத்துவ யதார்த்த சாஸ்திரி , " ஏன்...கடப்பாறை, மண்வெட்டி கொண்டு பூமியைத் தோண்டி தண்ணீரை நான் வெளியே கொண்டு வருவேனே !" என்று நக்கலாக சொன்னான்.
அன்றிரவு சாஸ்திரி கனவொன்று காணுகிறான் .அதில் ஒரு பெரியார் தோன்றி, "நீ தண்ணீர் கொண்டு வருவதிருக்கட்டும். முதல்ல உனது கண்ணொளியைக் கொண்டு வா பார்ப்போம்" என்று கூறி அவனது முகத்தில் ஓங்கி அறைந்தார்.
உடனே அவன் திடுக்கிட்டுப் பதறி விழித்தெழுந்து அமருகிறான். உண்மையிலேயே தனது கண்ணொளி மறைந்து கபோதியாகி விட்டதை உணர்ந்து கைசேதப்பட்டான்.
ஆதாரம் : மஸ்னவீ ஷரீப் 2-வது பாகத்திலும் , தப்ஸீர் ஜாஹிதியிலும் குறிப்பிடப்பட்டுள்ளது.
(கராமத்தை கிண்டல் செய்யபவர்கள் ஓங்கி அறைப்படுவதை கவனத்தில் கொள்ளவும்)

**கராமத் 4**

(கஃபா இறைநேசர்களை தவாபு செய்கிறது! )



ஹள்ரத் அபூயஸீதுல் புஸ்த்தாமீ (ரஹ்) அவர்கள் வழியில் ஷைகைத் தேடினவர்களாய், ஹஜ்ஜு உம்றாவுக்குப் புறப்பட்டார்கள். இறுதியில் ஒரு குத்பையடைந்தார்கள்.

“நீர் செல்வதெங்கே? பிராயணத்திற்காக வைத்திருப்பதென்ன? என குத்பு அவர்கள் வினவியதற்கு,

அபூயஸீதுல் புஸ்த்தாமீ(ரஹ்) அவர்கள் “நான் ஹஜ்ஜுக்குப் புறப்பட்டுச் செல்கிறேன். பிரயாணத்திற்கு 200 திர்ஹங்கள் வைத்துள்ளேன்” என விடையளித்தார்கள்.

அப்படியானால், திர்ஹமை எனக்குக் காணிக்கையாக வைத்து என்னை தவாபு செய்யும். ஹஜ்ஜும், உம்றாவும் உமக்கு நிறைவேறிவிடும். ஸபா,மர்வாவில் ஸயீ செய்வதும் நிறைவேறிவிடும். ஆண்டவன் மீது சத்தியமாக, அவன் கஃபாவை விட எனக்குச் சங்கையளித்துள்ளான்.

கஃபா வணக்கத்திற்குரிய வீடு. எனது உள்ளமையோ அவனது அகமியத்தின் இல்லம்.கஃபாவும் அவனுடைய தஜல்லியாத்தின் தோற்றந்தான்; ஆனால், இன்ஸான் காமிலின் மீது உண்டாகும் தஜல்லியாத்து கஃபாவில் உண்டாவதில்லை.

நீர் என்னைத் தரிசித்தது இறைவனைக் கண்டது போலாம். உண்மை கஃபாவை நீர் தவாபு செய்துவிட்டீர். நீர் எனக்குச் செய்த ஊழியம் இறைவனைப் புகழ்ந்து அவனுக்கு வழிபட்டதாகும்.

உஷார்! ஆண்டவனை விட்டும் நான் வேறானவனல்லன். ஆண்டவனுடைய நூர் உம்மீது உண்டாவதாக! கண்ணைத் திறந்து, என்னை நோக்கிப் பாரும்! கஃபாவை என்னுடைய வீடு என்று ஆண்டவன் ஒரு முறை தான் சொன்னான். “என் அடியானே!என்று என்னை எழுபது விடுத்தம் கூப்பிட்டுள்ளான்.

அபாயஸீதே! உமக்குக் கஃபா கிடைத்தது. ஆண்டவனிடத்தில் உமக்கு நூர் பிராகசமும், சங்கையும், மகத்துவமும் உண்டாகிவிட்டது” என்பதாக அந்த குத்பு கூறினார்கள்.

இவ்விபரத்தை மௌலானா ஜலாலுத்தீன் ரூமி (ரஹ்) அவர்கள் மஸ்னவி-ஷரீபு. 2 ஆவது பாகத்தில், பீர்-முரீது ஹிகாயத்தில் கூறியுள்ளார்கள்.

ஹள்ரத் உமர் (ரலி) அவர்கள் கஃபாவை நோக்கி “சந்தேகமின்றி, இறைவன் உனக்குச் சிறப்பைக் கொடுத்துள்ளான். ஆனால் இறையிடத்தில் முஃமின் உன்னை விட அதிகச் சிறப்பை உடையவன்” என்று கூறினார்கள் என்பதாக, மிஃப்தாஹுல் உலூம்-ரஹு மஸ்னவீ மௌலானா ரூமி, 7 வது பாகம்,142 வது பக்கத்தில் கூறப்பட்டுள்ளது.

ஒரு நாள்,உமர் (ரலி) அவர்கள் கஃபாவை நோக்கி, “உனக்குப் பெருமையும் சங்கையும் உண்டு, அல்லாஹ்விடத்தில் முஃமின் உன்னைவிட அதிக சங்கை உடையவன்” என்று கூறினார்கள் என்பதாக இபுனுஉமர் (ரலி) அவர்களைக் கொண்டு திர்மதி ஷரீபில் ரிவாயத்துச் செய்யப்பட்டுள்ளது.

“கியாமத்து நாளில் கஃபத்துல்லாஹ், என்னுடைய கபுருக்கு வந்து ‘அஸ்ஸலாமு அலைக்க’ என்று ஸலாம் சொல்லும்.

“வஅலைக்கஸ்ஸலாம்’ என்று பதில் கூறி, “பைத்துல்லாஹ்வே, எனக்குப் பிறகு என்னுடைய உம்மத்து உன்னளவில் வந்து எவ்வாறு நடந்து கொண்டார்கள்?” என்று கேட்பேன்.

அவ்வமயம் அது சொல்லும்; “என்னிடத்தில் வந்தவர்களுக்கு நான் போதுமானவன். அவர்களுக்காக நான் மன்றாடுவேன். என்னிடம் வராதவர்களுக்கு தாங்கள் போதுமானவர்கள். அவர்களுக்காகத் தாங்கள் மன்றாடுவீர்கள்”என்பதாக நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அருள் செய்திருப்பதை ஜாபிர் (ரலி) அவர்கள் ரிவாயத்துச் செய்வதாக,

இஸ்பஹானீ (ரஹ்) கிதாபுத்தர்கீபில் அறிவித்துள்ளதாக, அல்லாமா, காஜீ, உபைதுல்லாஹ் ஸாஹிபு மத்றாஸீ (ரஹ்)”துஹ்பதுஸ் ஸலாயிரீனில்” வரைந்துள்ளார்கள்.

(குல்லுகுத்பின்-யத்தூபு-பில்-பைத்தி-ஸப்ஆவ-அனல்-பைத்து-தாயிபுன்-பி-கியாமீ)

“ஒவ்வொரு குத்புமார்களும் கஃபாவிலுள்ள இல்லத்தை ஏழு முறை தவாபு செய்வார்கள். நானோ, அந்தக் கஃபாவின் இல்லமாகிறது என்னுடைய கூடாரத்தைச் சுற்றி தவாபு செய்கிறது என்று செய்யிதுனாகுத்புல்-அக்த்தாபு முஹிய்யித்தீன் அப்துல்காதிர் ஜீலானி (ரலி) அவர்கள் தங்களது முபாரக்கான,”துப்-பி ஹானீ” பைத்தில் கூறியுள்ளார்கள்.
ஆகவே,மேலே குறிப்பிட்டுள்ள அத்தாட்சிகளிலிருந்து இன்ஸான்-காமில் கஃபத்துல்லாஹ்வை விட மேலாம்பரத்தி லுள்ளவர். எனவே, அத்தகைய தகுதி வாய்ந்த அவுலியாக்களை கஃபத்துல்லாஹ் தேடிச் சென்று தரிசிக்கிறது என்பதில் வியப்பில்லை அல்லவா?
அன்பியா,அவுலியாக்களுக்கு ஆண்டவன் பக்கமிருந்து எல்லாவிதமான தத்துவங்களும் உண்டாயிருக்கின்றன அவர்கள் உயிரோடு இருந்து வந்த சந்தர்ப்பத்தில் அவர்களுக்கிருந்த திரேக பலமும், பார்வையின் கூர்மையும், கேள்வியின் வலிமையும், ஆன்மசக்தியும் மரணத்திற்கு அப்பால் மேலும் அதிகப்பட்டு வலுவடைகின்றன.

ஹயாத்தில், சரீரம் என்ற கூண்டில் அடைப்பட்டுக் கிடந்த ஆன்மாக்கள்,வபாத்திற்குப் பிறகு விடுதலை பெற்றுச் சுதந்திரம் அடைகின்றன. அப்போது அவர்கள் ஈருலகையும் கைக்கடுகு போலப் பார்க்கிறார்கள். நாடிய இடங்களுக்கு நொடிப் பொழுதில் செல்கிறார்கள்.
அவர்கள் ஜீவனோடிருந்த காலங்களில் எங்ஙனம் மனிதர்களுடைய நாட்ட தேட்டங்களை நிறைவேற்றிக் கொடுத்து வந்தார்களோ. அங்ஙனமே, மரணத்திற்குப் பின்பும் செய்யக்கூடிய ஆற்றலை ஆண்டவன் அவர்களுக்களித்துள்ளான்.

அவர்கள் எங்கிருந்த போதிலும் சரி, ஆபத்துக் காலத்தில் அவர்களது திருநாமத்தை விளித்துக் கூப்பிட்டவர்களுக்கு உடனே கைகொடுத்துக் காப்பாற்றி இரட்சிக்கும் தத்துவத்தையும் ஆண்டவன் அவர்களுக்குக் கொடுத்துள்ளான்.
“அவுலியாக்களுக்கு ஆண்டவன் பக்கமிருந்து குத்ரத்து (சக்தி) உடையகரம் உண்டாயிருக்கின்றது. எதிர் நோக்கிப் பாய்ந்து வரும் அம்பையும் கூட வேறு வழியில் திருப்பி அகற்றக் கூடிய வல்லமையுடையவர்கள் அவர்கள்” என்று மஸ்னவீ-ஷரீபு முழங்குகின்றது.
“நான் அஸ்தகிரியிலும், எனது முரீது உதயகிரியிலும் இருந்த போதிலும் சரியே, அவனை ஒநாய் கடிக்க வந்தாலும் எனக்குத் தெரியும். உடனே அதிலிருந்தும் அவனைக் காப்பாற்றுவேன். அத்தகைய கரமும் ஆண்டவனால் எனக்கு அளிக்கப்பெற்றதேயாகும்” என்று தாஜுல் அவுலியா, ஷைகு முஹிய்யுத்தீன் அப்துல் காதிர் ஜீலானி (ரலி) அவர்கள் அருளியுள்ளார்கள்.

பூலோக ஜனத் தொகையில் ஐந்திலொரு பாகத்தினராக, கோடானு கோடி முஸ்லிம்களில், ஆண்களும், பெண்களும்,அவ்விருபாலரும், தத்தமக்கு ஆபத்து, இடர்கள் சம்பவிக்கும் சந்தர்ப்பங்களிலும், ஆனந்த சமயங்களிலும், இந்த அப்துல் காதிர் முஹிய்யித்தீன் ஜீலானி (ரலி) அவர்களது திருநாமத்தைத் தாராளமாக உச்சரிப்பதைப் பிரத்தியட்சமாகப் பார்க்கலாம்.
கடல் போல விரிவான அவர்களது அற்புத காரணங்கள், கறாமத்துகள், மனாக்கிபு கௌதிய்யா, பஹ்ஜத்துல் அஸ்றார், தப்ரீஜுல்காத்திர் முதலிய கிரந்தங்களில் நிறைந்துள்ளன.
“கௌதுல் அஃளம் (ரலி) அவர்களது அற்புத காரணங்கள் ஏராளமாக ஏடுகளையும் கிரந்தங்களையும் நிரப்பிப் பொங்கி வழிகின்றன” (மலஅத் முதல்வனத்தன், குத்பன் முஅல்ல பதன்....) என்று மாதிஹுர் ரஸூல், ஸதக்கத்துல்லாஹ் அப்பா (ரஹ்) அவர்கள், ‘யாகுத்பா மாலையில்’, சிறப்பித்துக் குறிப்பிட்டுள்ளார்கள்.
- ஆதார நூல் : ஹிதாயதுல் அனாம் இலாஜியாரதில் அவுவியாஇல் கிராம்

## கராமத் 5

(மீண்டும் உயிர்த்தெழுதல்)



மரத்தவளை (wood frog) என்பது ஒரு தவளை இனமாகும். இது வட அமெரிக்காவின், ஆப்பலேச்சிய மலைத்தொடரின் வனப்பகுதிகளில் அதிகம் காணப்படுகின்றன.

கடந்த நூற்றாண்டு உயிரிரலாளர்களின் கவனத்தை அது மிகவும் ஈர்த்ததது. காரணம் அளவுக்கு அதிகமான குளிரைத் தாங்கி மரணத்தை வெல்லும்.அதாவது மரணித்து பின் உயிர்த்தெழும் இந்தத் தவளைகளின் ஆற்றல்தான் அந்த உயிரியல் அறிஞர்களின் கவனத்தை ஈர்ப்பதற்குக் காரணமாக அமைந்தது.

வட அமெரிக்காவில் குளிர்காலத்தில் குளிர் கடுமையாக இருக்கும் வெப்ப நிலை உறைநிலைக்குச் சென்றுவிடும் இந்த குளிரிலிருந்த மரத்தவளைகள் தங்களுடைய ரத்தம் உறைவதையும், திசுக்கள் சுருங்குவதையும் தாங்கிக் கொள்ளக்கூடிய தகவமைப்பைப் பெற்றிருக்கின்றன. கடும் குளிரைத் தாங்கிக் கொள்ளக்கூடிய அளவுக்கு அவற்றின் திசுக்கள் செயலாற்றுகின்றன. குளிர்காலம் தொடங்கும்போது, தவளையின் கல்லீரலில் இருக்கக்கூடிய கிளைக்கோஜன், மிகுதியான அளவில் குளுக்கோசாக மாற்றப்படுகிறது. இந்தக் குளுக்கோசுடன் தவளையின் திசுக்களில் உள்ள யூரியாவும் சேர்ந்து கிரையோபுரொட்டக்டன்ஸ என்ற பொருளாக மாறிவிடுகிறது.
இந்தக் கிரையோபுரொட்டக்டன்ஸ் என்ற பொருள் அதன் செல்கள் குளிரால் சுருங்கிடாதவண்ணம் பாதுகாப்பு அளிக்கிறது.

குளிர் காலத்தில் மரத்தவளையின் உடம்பில் உள்ள நீர் 65 சதவீதம் உறைந்து விடும். இதயத் துடிப்பும் முழுவதுமாக நின்றுவிடும். இந்த நிலையில் இந்தத் தவளைகள் பனிப்படர்வுக்குக் கீழ் உறைந்து குளிர்கால உறக்கம் கொள்கின்றன. குளிர் காலம் முடிந்து கோடைக் காலம் தொடங்கும்போது, தவளைகள் கண் விழிக்கின்றன.
ஒரு சாதாரண மரத்தவளைக்குக் கூட மரணித்து பின் மீண்டும் உயிர்த்தெழுதலை சாத்தியமாக்கிய இறைவன், இறைநேசர்களாகிய அவுலியாக்களுக்கு இந்த தன்மையைக் கொடுக்காமலா இருப்பான்... சற்று சிந்தியுங்கள் .
அவ்லியாக்கள் ஜீவியத்திலும், மரணத்துக்கப்பாலும் காண்பித்து வரும் கராமத்து என்னும் அற்புதங்களை நாம் கண்ணாரக் கண்டும், காதால் கேட்டும் வருகின்ற இக்காலத்தில் ஒரு சிலர் இவற்றை இன்கார் ( நிராகரிப்பு ) செய்கின்றனர்.
நான்கு மத்ஹபுகளில் ஒன்றை கடைப்பிடித்து ஒழுக வேண்டியது மார்க்கக் கடமையாகும். முஸ்லீம்கள் எல்லோருமே மதஹபைப் பின்பற்றி நடப்பதாகவே ஒப்புக்கொள்கின்றனர்.
எப்பொழுது மதஹபை ஏற்கிறார்களோ அப்பொழுது அந்த மதஹப்புக்குரிய அகீதாக் (கொள்கை) களையும் அங்கீகரிக்க வேண்டும்.

அன்பியாக்களுடைய முஃஜிஸாத்களையும், அவுயாக்களுடைய கராமத்தையும் உண்மை என்பதும் அகீதாக்களுள் ஒன்று . முஃஜிஸாத்தையோ, கராமத்தையோ ஒப்புக் கொள்ளவில்லையானால், அவனுக்கு மதஹபு இல்லை. மதஹபு இல்லையானால் அவன் சுன்னத்து-வல் - ஜமாஅத்தைச் சேர்ந்தவனல்லன்.
மனிதர்களுடைய நாட்டதேட்டங்களை நிறைவேற்றிக் கொடுப்பதற்காக அல்லாஹுத்தஆலா இரு வழிகளை ஏற்படுத்தி உள்ளான். ஒன்று வலிமார்கள் உடைய கபூரின் ஒரு மலக்கைச் சாட்டுவான்.
மற்றொரு விதமாக வலிமார்களை கபுரை விட்டும் வெளிப்படுத்தி,மனிதர்களது நாட்டதேட்டங்களை நிறைவேற்றிக் கொடுக்கவும் செய்வான்" என்பதாக அப்துல் வஹ்ஹா புஷ்ஷஃறானீ (ரஹ்) அவர்கள் யவாக்கீத்துல் ஜவாஹிரில் குறிப்பிட்டுள்ளார்கள்.

اَوَمَنْ كَانَ مَيْتًا فَاَحْيَيْنٰهُ وَجَعَلْنَا لَهٗ نُوْرًا يَّمْشِىْ بِهٖ فِى النَّاسِ كَمَنْ مَّثَلُهٗ فِى الظُّلُمٰتِ لَـيْسَ بِخَارِجٍ مِّنْهَا كَذٰلِكَ زُيِّنَ لِلْكٰفِرِيْنَ مَا كَانُوْا يَعْمَلُوْنَ
(வீழ்ச்சி அடைந்து) மரணித்தவர்களாக இருந்தவர்களில் எவரை நாம் உயிர்ப்பித்து மனிதர்களுக்கிடையில் நடமாடுவதற்குரிய ஒளியையும் கொடுத்திருக்கின்றோமோ அவர், இருளில் சிக்கி அதிலிருந்து வெளியேற முடியாமலிருப்பவனுக்குச் சமமாவானா? இவ்வாறே நிராகரிப்பவர்களுக்கு அவர்களுடைய (தீய) செயல்கள் அழகாக்கப்பட்டு விட்டன. (அல்குர்ஆன் : 6:122)

## கராமத் 6



ராபியத்துல் அதவிய்யா ( ரஹ்) அவர்களின் இல்லத்திற்கு 9 நபர்கள் வந்தார்கள். வந்தவர்கள் தங்களுக்கு ஹலாலான உணவினை கொடுக்கும்படி வேண்டினார்கள். அவர்களின் இல்லத்தில் அன்று இரண்டு ரொட்டிகள்தான் இருந்தன.
வந்த விருந்தினருக்கு அந்த இரு ரொட்டிகளை அவர்கள் முன்வைத்தார்கள். அது சமயம் வாசலில் ஒரு ஏழை பசிக்கு உணவு கேட்டு நின்றான். ராபியத்தில் பஸரிய்யா அவர்கள் விருந்தினர் முன் இருந்த அந்த இரு ரொட்டிகளை எடுத்து, ஏழைக்கு வழங்கி விட்டனர். விருந்தினருக்கு பெரும் ஏமாற்றமாகிவிட்டது.
சற்று நேரம் கழித்து, ஒரு பணிப்பெண் பாத்திரத்தில் 18 ரொட்டிகளை கொண்டு வந்து கொடுத்தாள். ராபியா அவர்கள் எண்ணிப்பார்க்க 18 ரொட்டிகள், 'இவை நமக்குள்ள உணவு இல்லை ' என்று திருப்பிக் கொடுத்தார்கள்.

மீண்டும் அவள் சென்று 20 ரொட்டிகளை கொண்டுவந்தாள். ரொட்டியை ராபியா அவர்கள் எண்ணிப்பார்க்க, 20 ரொட்டிகள் இருந்ததை கண்டு சந்தோஷத்துடன், விருந்தினர் முன் சமர்ப்பித்து இதைப் புசியுங்கள் எனப்பணித்தார்கள்.
விருந்தினருக்கு ஒரே வியப்பாக இருந்தது. அது சமயம் ராபியா (ரஹ்) அவர்கள் கூறினார்கள் அல்லாஹ் திருமறையில் :

مَنْ جَآءَ بِالْحَسَنَةِ فَلَهٗ عَشْرُ اَمْثَالِهَا وَمَنْ جَآءَ بِالسَّيِّئَةِ فَلَا يُجْزٰٓى اِلَّا مِثْلَهَا وَهُمْ لَا يُظْلَمُوْنَ
எவர் ஒருவர் (ஒரு) நன்மையைச் செய்கிறாரோ அவருக்கு அதுபோல் பத்துப் பங்கு (நன்மை) உண்டு; எவர் ஒருவர் (ஒரு) தீமையைச் செய்கிறாரோ அதைப்போன்ற அளவுடைய கூலியே கொடுக்கப்படுவார் - அவர்கள் அநியாயம் செய்யப்படவும் மாட்டார்கள். (அல்குர்ஆன் : 6:160)
ஒரு நன்மை தர்மம் செய்ய அல்லாஹ் பத்து மடங்கு நன்மை தானம் வழங்குவான் என்று கூறி இந்த ஆயத்தை ஓதி காண்பித்தார்கள். நான் இரு ரொட்டிகளை தர்மம் செய்தேன். முதலில் 18 ரொட்டிகள்தான் வந்தது. திருப்பிக் கொடுத்து விட்டேன். பின்பு அல்லாஹ் 20 ரொட்டிகளை வழங்கியுள்ளான். நான் பெற்றுக் கொண்டேன்" என்று கூறினார்கள். அல்லாஹ் கூறுவது பொய்யல்ல ! உண்மை என்றுரைத்தார்கள்.
...... x ................ x ........... x ............... x ............. x ............ x........... x................ x.................... x....
இமாம் ஜாபர் சாதிக் (ரஹ்) அவர்களின் இல்லத்தில் ஒருநாள் ஏழை தம் பசியை கூறி முறையிட்டார். தன் மனைவியிடம் ஏதும் இருந்தால் கொடுத்து அனுப்புங்கள் என்று பணித்தார்கள்
இமாம் அவர்கள் வீட்டில் எந்த உணவும் அன்று இல்லை. இரண்டு நல்ல முட்டையும் ஒரு கூமுட்டையும்தான் இருந்தது. அதை அந்த ஏழைக்கு அறமாக வழங்கி விட்டார்கள் .
சிறிது நேரத்தில் ஒரு பெண் வந்தாள் . அவள் கூடை நிறைய முட்டைகளை வைத்து இமாம் அவர்களிடம் கொடுத்தாள் . அவள் கோழிப்பண்ணை வைத்திருக்கலாம் . இமாம் அவர்கள முட்டைக் கூடையை பெற்று , தன் மனைவியிடம் கொடுத்தார்கள் .
அந்த பெண் கொடுத்த கூடையில் உள்ள முட்டைகளை எண்ணிப் பார்க்க 30 முட்டைகள் இருந்தது. அதை பரிசோதித்ததில் 20 நல்ல முட்டையும் பத்து கூமுட்டையும் இருக்கிறதே... என்று மனைவி தன் கணவரிடம் முறையிட,
" நீ கொடுத்த ரெண்டு முட்டையில் ஒன்றுக்கு கூமுட்டைதானே.. நீ வழங்கியது போன்று அல்லாஹ் உனக்கு 1க்கு 10 வீதம் கொடுத்துள்ளான் என்று கூறி,
مَنْ جَآءَ بِالْحَسَنَةِ فَلَهٗ عَشْرُ اَمْثَالِهَا وَمَنْ جَآءَ بِالسَّيِّئَةِ فَلَا يُجْزٰٓى اِلَّا مِثْلَهَا وَهُمْ لَا يُظْلَمُوْنَ
எவர் ஒருவர் (ஒரு) நன்மையைச் செய்கிறாரோ அவருக்கு அதுபோல் பத்துப் பங்கு (நன்மை) உண்டு; எவர் ஒருவர் (ஒரு) தீமையைச் செய்கிறாரோ அதைப்போன்ற அளவுடைய கூலியே கொடுக்கப்படுவார் - அவர்கள் அநியாயம் செய்யப்படவும் மாட்டார்கள். (அல்குர்ஆன் : 6:160) என்ற வசனத்தை ஓதிக் காண்பித்தார்கள்.
அவுலியாக்கள் தங்களுக்கு நிகழும் ஒவ்வொரு நிகழ்வுகளையும் குர்ஆனோடு ஒப்பிட்டுப் பார்த்தார்கள். குர்ஆன் அல்லாஹ் தஅலாவின் வார்த்தையல்லவா

## **கராமத் 7**

காவலர் செய்த கராமத்



கடமையைத் தாண்டி ஒரு நற்செயலை எவர் செய்தாலும் அல்லாஹ் நிச்சயமாக நன்றி பாராட்டுகிறவனாகவும் மிக்க அறிந்த வனாகவும் இருக்கிறான். அல்குர் ஆன் : (2 : 158)
இறைவழிபாட்டில் தன்னுயிரை தியாகம் செய்த காரணத்தால் மரணத்தை மரணிக்க செய்ய முடிந்தது, பசியைப் பசிக்க வைக்க முடிந்தது, தாகத்தை தாகிக்க வைக்க முடிந்தது, உறக்கத்தை உறங்க வைக்க முடிந்தது. அச்சத்தை அச்சப்பட வைக்க முடிந்தது. எடுத்தெறியப்பட்ட ஷைத்தானை எட்டி உதைக்க முடிந்தது.

தனக்கு மிஞ்சியதை கொடுப்பது தர்மம் தனக்கு உள்ளதை கொடுப்பது தயாளம் தன்னையே கொடுப்பது தியாகம் இறைவனுக்காக முற்றிலும் அர்பபணித்துக் கொண்ட தியாகிகளே வலிமார்கள் எனப்படும் இறை நேசச் செல்வர்கள். இவர்கள் செய்த தியாகத்தை சொல்ல வேண்டுமானால் மிகையாகாது
வலிமார்கள் எனப்படும் இறைநேசச் செல்வர்கள். இவர்கள் செய்த தியாகத்தின் காரணமாக இறைவன் இவர்களுக்கு கராமத் என்னும் அற்புதங்களைக் கொண்டு சிறப்பாக்கினான். அல்லாஹ் கூறுகின்றான்
اَلَاۤ اِنَّ اَوْلِيَآءَ اللّٰهِ لَا خَوْفٌ عَلَيْهِمْ وَلَا هُمْ يَحْزَنُوْنَ

(முஃமின்களே!) அறிந்து கொள்ளுங்கள்; நிச்சயமாக அல்லாஹ்வின் நேசர்களுக்கு எவ்வித அச்சமும் இல்லை; அவர்கள் துக்கப்படவும் மாட்டார்கள்.
الَّذِيْنَ اٰمَنُوْا وَكَانُوْا يَتَّقُوْنَ
அவர்கள் ஈமான் கொண்டு (அல்லாஹ்விடம்) பயபக்தியுடன் நடந்து கொள்வார்கள்.
لَهُمُ الْبُشْرٰى فِى الْحَيٰوةِ الدُّنْيَا وَفِى الْاٰخِرَةِ لَا تَبْدِيْلَ لِكَلِمٰتِ اللّٰهِ ذٰلِكَ هُوَ الْفَوْزُ الْعَظِيْمُ
அவர்களுக்கு இவ்வுலக வாழ்க்கையிலும், மறுமையிலும் நன்மாராயமுண்டு; அல்லாஹ்வின் வாக்கு(றுதி)களில் எவ்வித மாற்றமுமில்லை - இதுவே மகத்தான பெரும் வெற்றி ஆகும்.
(அல்குர்ஆன்: 10: 62 -64)
முற்காலத்தில் அரபகத்தின் ஒரு பகுதியில் கனி மரங்கள் அடர்ந்த தோப்பு அமைந்திருந்தது, முபாரக் என்பவர் அதன் காவலராக பணிபுரிந்து வந்தார்.
அத்தோப்பின் சொந்தக்காரர் ஒரு நாள் தனது நண்பர்கள் புடை சூழ அங்கே வருகை தருகிறார். காவலரை அழைத்து மதுரமான கனிகளை பறித்து வரக் கூறினார். ஆணையேற்ற முபாரக் சில கனிகளைக் கொணர்ந்து எஜமானர் முன் வைக்கிறார்.
அவற்றை பரிசோதித்துப் பார்த்த சொந்தக்காரரின் முகத்தில்
கோபக்கனல் தெறிக்கின்றது, வார்த்தை வெடிக்கிறது. "முபாரக்..! சுவையானபழத்தை பறித்துக் கொண்டு வரச் சென்னால் புளிப்பான பழத்தைக் கொண்டு வருகிறீரே!
“சொந்தக் காரரின் கோபத்துக்கான காரணத்தைப் புரிந்து கொண்ட காவல்காரர் மீண்டும் ஒடுகிறார். வேறு மரத்திலிருந்து பழங்கள் பறித்துக் கொண்டுவருகிறார்.
அதையும் கவைத்துப் பார்த்த சொந்தக்காரரின் முகம் மீண்டும் சிவக்கிறது.
முபாரக்! என் நண்பர்கள் முன்னால் என்னைக் கோப்படுத்த முடிவு செய்துவிட்டீரா ? முதலில் புளிப்பான பழங்களைக் கொண்டுவந்தீர், இப்போது சப்பென்றிருக்கும் பழங்களைக் கொண்டு வந்திருக்கிறீர்"
சுடு சொல்லைத் தாங்காத முபாரக் பேசினார்; “எஜமானரே! எந்த மரத்துப் பழம் புளிக்கும்? எந்த மரத்துப் பழம் இனிக்கும் என்ற விபரம் எனக்குத் தெரியாது. அதனால் தவறு நடந்து விட்டது. தங்களை வருத்தப்படுத்த வேண்டும் என்ற நோக்கத்தில் நான் செய்யவில்லை" .
பதிலைச் செவியுற்றதும், சொந்தக்காரர் ஆச்சரியத்தின் எல்லையை அடைந்தார்.
" என்ன...? இத்தனை ஆண்டுகளாக இந்தத் தோப்பில் வேலை செய்கிறீர். இந்த விபரம் கூடத் தெரியாதா ?" என வினவினார்.
"ஆம்! எனக்குத் தெரியாது தோப்பைக் காக்கும் பணியைத்தான் எனக்கு தாங்கள் தந்தீர்கள். அஃதில்லாமல் பழங்களை உண்டு பார்க்கத் தாங்கள் இதுவரை கூறியதில்லையே! நான் எனக்கிடப்பட்ட பணியை முறையாகச் செய்து வருகிறேன். ஆனால் இத்தனை ஆண்டு காலங்களில் எந்த மரத்துப் பழத்தையும் நான் சுவைத்துப் பார்த்ததில்லை” என்று கூறினார்.

காவல்காரரின் பதில் சொந்தக்காரருக்கு அதிர்ச்சியைத் தந்தது என்றாலும், அவரைப் பற்றி தான் ஏற்கனவே அறிந்திருந்த விபரங்கள் அந்த பதிலை உண்மை என்றே நம்பச் செய்தன.
ஆம்! அவர் காவல்காரர்களில் ஒரு அதிசய மனிதர். தனது கடமைகளுக்கு அதிகமாக உழைத்து தோப்பை அழகுபடுத்தி இருந்தார். விளைச்சலை அதிகப்படுத்தியிருந்தார். அத்தகைய
மனிதர் நாணயத்திலும் சிறந்து விளங்குவதைப் பார்த்த எஜமானருக்கு அவரின் மீது மட்டற்ற பாசம் ஏற்பட்டது. அவருக்கு பரிசில் கொடுக்க ஆவல் கொண்டார்
ஆம். அவரை தன் மகளுக்கு மணாளராக்கிக் கொண்டார்.
நபி மொழித் திரட்டுக் கலையில் சிறந்து விளங்கிய ஹளரத் அப்துல்லாஹ் இப்னு முபாரக் (ரலி) அவர்கள் அந்த அதிசயத் தம்பதிகளக்குப் பிறந்தவராவார்.
" என்னுடைய இறைநேசர்கள் (அவுலியாக்கள்) எனது பரிவட்டத்திற்குள்ளிருப்பார்கள். என்னை தவிர வேறு யாரும் அறியமாட்டார்கள். (ஹதிது குத்ஸி) '

இறைவன் அறிந்திருந்த தோட்டக் காவலரை தோட்ட சொந்தக்காரர் அறியாமல் தன்னை மறைத்துக் கொண்டதுதான் காவலர் செய்த கராமத் .

வலிமார்கள் எனப்படும் இறைநேசர்கள் இறைவனுக்காக வாழ்ந்த காரணத்தால் மரணத்தை வென்ற மஹான்களாக உலகில் அனைத்து பகுதிகளிலும் மறைந்து வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள்.

## கராமத் 8



தஜ்லா நதிக்கரையோரம் ஒரு ஞானி பக்கீர் கோலத்தில் இருந்தார். ரொம்ப தூரத்திலிருந்து கற்றறிந்த ஒருவன் அவரின் கராமத்தைப் பார்க்க வந்தான்.
அமைதி குலைந்து இருந்தான். ஒருவேளை கடினமான பயணம் செய்ததால், இருக்கலாம். அவன் தனது செருப்பை கோபத்துடன் கழற்றி ஒரு மூலையில் எறிந்து விட்டு, கதவை தடாலென்று அழுத்தி தள்ளினான் .
கோபத்தில் இருக்கும்போது ஒரு மனிதன் தனது செருப்புக்களை ஏதோ தனது விரோதிகளை போல் எண்ணிக் கொண்டு, அவைகளை கழற்றி எறிவான். அப்போதுதான் அவன் தனக்கும் கதவுக்கு இடையே ஏதோ ஒரு பெரிய கருத்துவேறுபாடு வந்ததுபோல் தடாலென்று தள்ளுவான்.
இப்படி கதவை திறந்து கொண்டு அந்த ஆள் உள்ளே வந்ததும், அந்த ஞானிக்கு மரியாதை செலுத்தினான். உடனே அந்த ஞானி " உன் மரியாதையை நான் ஏற்றுக்கொள்ள முடியாது. முதலில் போய், அந்தச் செருப்பிடமும், கதவிடமும் மன்னிப்பு கேட்டு விட்டு வா ! என்று கட்டளையிட்டார்.
அதற்கு அந்த ஆள், " இது என்ன கோளாறு ? கதவிடமும் ஒரு ஜோடி செருப்பிடமும் மன்னிப்பு கேட்க வேண்டுமா ? ஏன் ? அவைகள் உயிருடனா இருக்கின்றன ? " என்று அந்த ஆள் முணுமுணுப்புடன் பேசியதை ஞானி கேட்டார்.
அதற்கு அந்த ஞானி, "நீ உனது கோபத்தை அவைகள் மீது காட்டும் போது, அவைகளை உயிர் அற்றவைகளாக நீ நினைக்கவில்லையே.. செருப்புகள் ஏதோ பெரிய குற்றத்தைச் செய்து விட்டது போல் அல்லவா நீ தூக்கி எறிந்தாய்... மேலும் ஒரு விரோதியை போல் எண்ணிக் கொண்டு, அந்தக் கதவுகளைத் தள்ளினாய். உனது கோபத்தைக் காட்டுவதற்கு மட்டும் அவைகளுக்கு உயிர் இருப்பதாக நீ உணரும் போது, நீ அவைகளிடம் மன்னிப்பு கேட்பதற்கும் அவைகளுக்கு உயிர் உள்ளதை போல் எண்ணிக் கொள்ள வேண்டுமல்லவா..! போ.. அவைகளிடம் மன்னிப்பு கேள். இல்லையெனில் நான் உன்னை ஏறெடுத்துப் பார்க்கமாட்டேன்" என்று கூறினார்.

விசித்திரமான கராமத்துடைய இந்த ஞானியை சந்திக்க எவ்வளவு கஷ்டப்பட்டு பிரயாணம் செய்து வந்தோம் என்பதை அவன் மனதில் எண்ணி, தம்முடைய பகுத்தறிவை புறந்தள்ளி விட்டு, செருப்புகளிடமும், கதவுகளிடமும் மன்னிப்பு கேட்டான்.
அந்த கண நேரம் அவனுக்கு எப்படி இருந்தது தெரியுமா ! அந்த ஞானி கூறியது முதலில் அது முட்டாள் தனமாக இருந்ததாகவும், ஆனால் அவன் அப்படி மன்னிப்பு கேட்டு முடித்தவுடன் அவனுள் புதிதாக ஏதோ ஒன்று மனதிற்குள் பிரவாகம் எடுத்தது போல் இருந்தது. இது அந்த ஞானி செய்த கராமத்தாக அவன் எண்ணினான்

மனிதன் எந்த அளவுக்கு அமைதியும் சந்தோஷமும் பெறமுடியும் என்று அவனால் கற்பனை பண்ணி கூட பார்க்க முடியவில்லை. அப்படி மன்னிப்பு கேட்ட பின்னர் அவன் உள்ளே சென்று அந்த ஞானியின் அருகில் அமர்ந்த பொழுது, அந்த ஞானி சிரித்துக்கொண்டே " இப்போது எல்லாம் சரியாகி விட்டது. உனக்கு கிடைக்க வேண்டியதும் கிடைத்து விட்டதா ? என்று கேட்டார்.
" கிடைத்துவிட்டது " என்றான் .
............... x ............... x ................ x ............... x ............... x ............... x............... x............... x .........
ஒரு முறை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தொழுகை நடத்திக் கொண்டிருக்கும் போது "ருகூஉ" விற்குச் சென்றார்கள். அப்போது ஒரு மனிதர் ஒடோடி வந்து தொழுகையில் சேர்ந்தார்.

தொழுகை முடிந்ததும், அம்மனிதரை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அழைத்து "நண்பரே..! அல்லாஹ் உமது ஆவலை அதிகரிக்கச் செய்வானாக! ஆனாலும் இனியொரு முறை இப்படிச் செய்யாதீர். அமைதியையும், கண்ணியத்தையும் கடைப்பிடியுங்கள். ஜமாஅத்துடன் கிடைத்த ரக் அத்துக்களை தொழுது கொள்ளுங்கள்" என்று உபதேசித்தார்கள்.
பெருமானார் (ஸல்) அவர்களின் அந்த கூற்றிலிருந்து தொழுகை துவங்கும் தருணத்தில் மனதில் அமைதியும், கண்ணியமும் நிறைந்திருக்க ஆவன செய்ய வேண்டுமென்ற கருத்து இறை சந்திப்பையல்லவா பெற வந்திருக்கிறோம் என்ற கருத்து தொனிக்கவில்லையா..?

## கராமத் 9

" எவரொருவருக்கு தமது தேவைகள், நாட்ட தேட்டங்கள் நிறைவேற வேண்டும் என்று இருக்குமானால், அவர் சூரத்துல் ஃபாத்திஹா, ஆயத்துல் குர்ஸி, அலம் நஷ்ரஹ் சூரா இவர்களை ஓதி, அவற்றின் தவாபை குத்புல் அக்த்தாபு, ஹஜரத் அஷ்ஷைகு அப்துல் காதிரு ஜீலானி (ரலி) அவர்களுக்கு அளிக்க வேண்டும் .
பிறகு பகுதாது திசையை முன்நோக்கி 11 எட்டெடுத்து வைத்து, '' யா செய்யிதீ யா அப்துல் காதிர்" என்று 10 விடுத்தம் அழைத்து வேண்டி, தமது நாட்ட தேட்டர்களைக் கேட்க வேண்டும்" என்பதாய் இமாம் ஷெய்கு ஜலாலுத்தீன் ஸுயூத்தி ( ரஹ்) அவர்கள் கித்தாபுர் - ரஹ்மா-பித்திப்பி -வல் ஹிக்மா "என்ற நூலின் 284 வது பக்கத்தில் உரைத்துள்ளார்கள்.
. x.................. x ................... x.................. x ................... x.................. x ......................
அஷ்ஷெய்கு அபூ அம்று உதுமான் அஸ்ஸரீபின் அஷ்ஷெய்கு அபூ முஹம்மது,அப்துல் ஹக் அல் ஹரிமி ஆகிய இருவரும் பின்வரும் விடயத்தைக் கூறுகின்றனர்.
" நாங்கள் ஷெய்கு முஹ்யத்தீன் அப்துல் காதிர் ஜீலானி ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் திருச்சபையில், ஹிஜ்ரி 555, ஸபா - 3 ஞாயிறு அன்று இருந்தோம். ஷைகவர்கள் எழுந்து சென்று அவர்களின் மிதியடியிலிருந்து கொண்டு வுழுச் செய்தார்கள். பின் இரண்டு ரக்அத் தொழுதார்கள். தொழுது முடித்து ஸலாம் கூறியபின் பயங்கரமாக சப்தமிட்டார்கள்.
பின் மிதியடிகளில் ஒன்றை எடுத்து ஆகாயத்தில் வீசினார்கள். எமது பார்வை விட்டும் அது பறந்து சென்றது. பின் மீண்டும் கூச்சலிட்டார்கள். மற்றைய மிதியடியை எடுத்து எறிந்தார்கள். அதுவும் எமது பார்வையை விட்டும் மறைந்தது. அதன் பின் இருக்கையில் வந்து அமர்ந்தார்கள். இது பற்றி அவர்களிடம் கேட்பதற்கு யாருக்கும் துணிவு இருக்கவில்லை.
இது நடந்து இருபத்து மூன்று நாட்களுக்கு பின் அஜமி பிரதேசத்திலிருந்து ஒரு கூட்டம் வந்தது. எங்களிடம் ஷைய்கவர்களுக்கான நேர்ச்சைப் பொருட்கள் இருக்கின்றன என்று அவ்வர்த்தக கூட்டம் கூறியதும், ஷைய்கவர்களிடம் இது பற்றி அனுமதி கேட்டோம். அனுமதி வழங்கினார்கள். ஹரீர் பட்டும், பட்டுப் புடைவைகள், தங்கம் அந்த நாள் ஷெய்கவர்கள் வீசிய மிதியடி உட்பட இவற்றை எம்மிடம் கையளித்தனர்.
இந்த மிதியடி உங்களுக்கு எப்படி கிடைத்தது? என்று அவர்களிடம் வினவினோம்.
அவர்கள் தங்கள் கதையை விபரித்தனர்.ஸபர் மூன்றாம் நாள் நாங்கள் பயணித்துக் கொண்டிருந்தோம். அறபு நாட்டு முன்னணிக் கொள்ளைக் கூட்டம் திடீரென எம்மைத் தாக்கி எமது பொருட்களை சூறையாடியும்,எங்களில் சிலரை கொன்றும் வெறியாட்டம் ஆடின.
பின் ஒரு ஓடையருகே உட்கார்ந்து கொண்டு சூறையாடி எமது பொருட்களை பங்கீடு செய்து கொண்டிருந்தனர். நாங்கள் ஓடையின் மறு கரையில் ஒதுங்கி நின்றோம்.

இச்சந்தர்ப்பத்தில் ஷைய்கவர்களை நாம் நினைத்துக் கொண்டு, இதில் நாம் பாதுகாக்கப்பட்டால் அவர்களுக்கு நமது உடமைகளில் சிலதை நேர்ந்து கொள்வோம் என்று கூறினோம்.
இப்படி நாங்கள் பேசிக் கொண்டிருக்கும்போது பாரிய இரு சப்தத்தைக் கேட்டோம். இச்சத்தம் ஓடையை நிறைத்து நின்றது. கொள்ளையர்கள் பதற்றப்பட்டவர்களாக நின்றதை நாங்கள் கண்டோம். மற்றுமொரு அறபுக் கொள்ளையர் கூட்டம் வந்துவிட்டதோ என்று நாம் அஞ்சினோம். அப்போது கொள்ளையர்களில் சிலர் எம்மிடம் வந்து, உங்கள் உடமைகளைப் பெற்றுக் கொள்ளுங்கள்! எங்களுக்கு நேர்ந்த கதியை வந்து பாருங்கள் என்றனர்.
பின், எங்களை அழைத்துச் சென்று அவர்களின் இரு தலைவர்களையும் காட்டினர். அவ்விருவரும் இறந்து கிடக்கக் காணப்பட்டனர். அவர்கள் ஒவ்வொருவரிடமும் நனைந்த மிதியடிகள் இரண்டு காணப்பட்டன. பின் எங்களின் அனைத்து சாமான்களையும் திருப்பித் தந்துவிட்டு, இது ஒரு பாரதூரமான விடயம் என்று கூறிவிட்டு நகர்ந்தனர்.
ஆதாரம் : பஹ்ஜத்துல் அஸ்றார், பக்கம் - 132

## கராமத் 10

கராமத் என்றால் சங்கை, மரியாதை என்று பொருள்.
கராமத் என்ற ஒன்று உள்ளதா என்று கேட்டால்,ஆம் உள்ளது என்பதுவே நம் பதில்
கராமத் என்றால் என்ன.?

கராமத் என்பது நல்லடியார்களின் வாழ்வில் அவர்கள் எதிர்பார்க்காது அல்லாஹ் நிகழ்த்திக் காட்டும் சில உதவிகள் ,
முஹ்ஜிஸாவுக்கும் கராமத்துக்கும் உள்ள வித்தியாசம்
முஹ்ஜிஸா என்றால் நபிமார்கள் சவாலாக அல்லாஹ்வின் நாட்டப்படி செய்து காண்பித்தவை.
கராமத் என்றால் எதிர்பாராது நல்லடியார்களின் வாழ்வில் அல்லாஹ்வின் நாட்டப்படி நிகழ்ந்தவை. இதற்கு (உ-ம்)
கௌதுல் ஆஃலம் (ரலி) அவர்கள் ஆரம்பத்தில் கல்வியை தம் சொந்த ஊரான ஜீலான் நகரிலேயே கற்றார்கள். பதினெட்டு வயதை அடைந்த பொழுது உயர்கல்வி கற்பதற்காக பகுதாது நகர் செல்ல முடிவு செய்தார்கள்.
அதற்காக தம் அன்னையிடம் அனுமதி கோரினார்கள். அவரின் இந்த முடிவைக் கேட்டு மனம் மகிழ்ந்து, உடனே அனுமதி அளித்தார்கள் அன்னாரின் தாயார் அவர்கள்.
தந்தையார் அபூசாலிஹ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் தம் குடும்பத்தினருக்காக விட்டுச் சென்ற 80 பொற்காசுகளில் 40 பொற்காசுகளை நாயகம் அவர்களின் சட்டைப் பையில் வைத்து தைத்து கல்வி கற்க அனுப்பி வைத்தார்கள் தாயார் அவர்கள்.
அச்சமயம் தம் மைந்தரை நோக்கி, எப்போதும் உண்மையே பேச வேண்டும் என்று உபதேசித்து அனுப்பி வைத்தார்கள்.

பகுதாதிற்காக பயணமாகிச் செல்லும் வியாபாரிகளுடன் சேர்ந்து கொண்டார்கள் நாயகமவர்கள். இவ்வியாபாரிகள் ஹமதான் எனும் நகரைக் கடந்து செல்லும் போது வழிப்பறித் திருடர்கள் அறுபது பேர் இவர்களை வளைத்துக் கொண்டார்கள்.

நாயகமவர்களை கொள்ளையர்கள் சோதித்து கேட்டபோது, தம்மிடம் நாற்பது பொற்காசுகள் இருப்பதாக உண்மையை சொன்னார்கள். ஆனால் திருடர்கள் நம்பவில்லை.
இறுதியாக திருடர்கள் தலைவரிடம் கொண்டு சென்றனர். அங்கும் அவர்கள் உண்மையே பேசினார்கள். நாயகமவர்களை சோதித்துப் பார்த்த போது, அவர்கள் சொன்னது உண்மை என்று தெரியவந்தது.
வியப்புற்ற கள்வர்கள், காரணம் கேட்டபோது, தாயாரிடம் கொடுத்த வாக்குறுதிபடி நான் உண்மையையே பேசினேன் என்றுரைத்தார்கள்.
இதைக் கேட்டு கள்வர்கள் திருந்தி, இனிமேல் பாவச் செயல்களில் ஈடுபட போவதில்லை என்று நாயகமவர்களிடம் சத்தியம் செய்து கொடுத்தனர். இறைவனிடமும் பாவமன்னிப்புத் தேடினர். பிற்காலத்தில் இவர்கள் அனைவரும் வலிமார்களாக திகழ்ந்தனர் என சரித்திரம் கூறுகிறது.
இந்த கராமத் இறைவனால் நாடி செய்யப்பட்டது.
நூல்: கலாயிதுல் ஜவாஹிர்

## கராமத் 11

" சூஃபிகள் சென்ற பாதை மிகச் சரியானது. தெய்வீக அருள் பெற்றவர்கள் அவர்களே. நடத்தையிலும் ஒழுக்கத்திலும் பரிபூரண அடைந்தவர்களும் அவர்களே. இந்த உலகில் உள்ள அறிவுஜீவிகள், தத்துவவாதிகள், மார்க்க மேதைகள் என எல்லோருடைய அறிவையும் சேர்த்தாலும் சூஃபிகள் போன்ற பரிபூரண தூய்மை பெற்ற ஒரே ஒரு மனிதனைக் கூட உருவாக்க முடியாது .
நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுடைய தூய வாழ்விலிருந்தே சூஃபிகள் தங்கள் வெளிப்படையான மற்றும் அந்தரங்கமான வாழ்வை அமைத்துக் கொண்டனர். நபிகள் நாயகம் (ஸல்) அவர்களைத் தவிர இந்த விஷயத்தில் வழிகாட்ட வேறு யாரால் முடியும் ..? " என்று இமாம் கஸ்ஸாலி (ரஹ்) கேட்கிறார்கள்
தாபியீன்களில் மிகச் சிறந்த உவைஸுல் கர்னி (ரலி )

ஸையிதுனா உவைஸ் அல்-கர்னி ரலியல்லாஹு அன்ஹு அவர்களிடம் கேட்கப்பட்டது, “தொழுகையின்போது பணிவடக்கமாக எது கருதப்படுகிறது?”
ஸையிதுனா உவைஸ் அல்-கர்னி ரலியல்லாஹு அன்ஹு கூறினார்கள், “ஓர் அம்பு உங்களை ஊடுருவி சென்றால்கூட உங்களுக்கு அது தெரியக்கூடாது. அந்த அளவுக்கு நீங்கள் தொழுகையில் மெய்மறந்து இருக்க வேண்டும்.”
இவர்கள் தாபியீன்களில் மிகச் சிறந்தவர்கள்.
ஸஹாபா பெருமக்கள் நபிகள் பெருமானார் முஹம்மத் ﷺ அன்னவர்களிடம் கேட்டார்கள், “உவைசுல் கர்னி ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் உங்களை கண்டிருக்கிறார்களா நாயகமே?”
நபிகள் நாயகம் ﷺ அன்னவர்கள் கூறினார்கள், “இல்லை, அவர்களின் ஜடத்துவ கண்களால் என்னை அவர்கள் காணவில்லை. (கண்டிருந்தால் ஸஹாபா என்ற அந்தஸ்தைப் பெற்றிருப்பார்கள்) ஆயினும் அவர்கள் என்னை தன் ஆத்மீகக் கண்களால் கண்டுள்ளார்கள்.”
ஸஹாபா பெருமக்கள் மாநபிகளார் ﷺ அன்னவர்களிடம் கேட்டார்கள், “எங்களுக்கு அவர்களை காணக்கிடைக்குமா நாயகமே?”

நபிகள் கோமான் முஹம்மத் ﷺ அன்னவர்கள் ஸையிதுனா அபூபக்ர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களைப் பார்த்துக் கூறினார்கள்,
“நீங்கள் அவர்களைக் காணமாட்டீர்கள். உமரும் அலியும் (ரலியல்லாஹு அன்ஹும்) அவர்களைக் காணுவார்கள்." பின் அவர்கள் இருவரையும் பார்த்துக் கூறினார்கள் :
“(அவர்களின் அடையாளம்) அவர்களின் உடலெங்கும் ரோமம் நிறைந்திருக்கும். அவர்களின் இடது கை உள்ளங்கையில் ஒரு திர்ஹத்தின் அளவு வெள்ளை அடையாளம் இருக்கும். அது வெண்குஷ்டத்தின் அடையாளம் அல்ல.
அவர்களைக் கண்டவுடன் என்னுடைய சலாத்தை அவர்களுக்கு எடுத்துச் சொல்லுங்கள். என்னுடைய உம்மத்தவர்களான என் சமூகத்துக்கு அவர்களை துஆ செய்யச் சொல்லுங்கள்.
அவர்கள் அவ்லியாக்களில் ‘அத்கியா’ வானவர்கள். (பாதுகாப்பு பரணைப் போன்றவர்கள்) அவர்கள் மிக்கப் பரிசுத்தமானவர்கள்.”

رضوان الله عليهم أجمعين صلى الله عليه وعلى آله وصحبه وسلم
அல்லாஹ் عزوجل நாளை மறுமையிலே ஸையுதுனா உவைஸ் அல்-கர்னி ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் தோழமையை எமக்குத் தந்து அருள்பாலிப்பானாக " என்றார்கள் .
"உமரும், அலியும் (ரலியல்லாஹு அன்ஹும்) அவர்களைக் காணுவார்கள்." என்ற நபிகளாரின் முன்னறிவிப்புப்படி உவைஸுல் கர்னி (ரலி ) அவர்களை இருவரும் சந்தித்தனர்.
“தாங்கள் அண்ணலெம் பெருமானின் அன்புத் தோழர்கள் தாமே! அண்ணலெம் பெருமானுக்கு உஹத் போர்க்களத்தில் வைத்து பல் முறிந்து (இஹீதாகி) விழுந்த பொழுது, தாங்கள் அவர்களின் உண்மையான தோழர்களாயிருப்பின் தாங்களும் ஏன் அதுபோன்று தங்களின் பல்லை விழச் செய்யவில்லை.
நட்பு என்றால் அஃதன்றோ உண்மையான நட்பு! என்னைப் பாருங்கள்! நான் என் பற்கள் அனைத்தையும் பிடுங்கி விட்டேன். நான் ஒரு பல்லைப் பிடுங்க, அது எம்பெருமானுக்கு வீழ்ந்த பல்லாக இல்லாதிருக்குமோ என்ற ஐயம் எனக்கு ஏற்பட, அடுத்த ஒரு பல்லை நான் பிடுங்க, அதேபோன்ற ஐயம் எனக்கு மீண்டும் முளையிட, அவ்வாறு நான் என் பற்கள் அனைத்தையும் பிடுங்கி விட்டேன்” என்று கூறித் தம் பொக்கைவாய் திறந்து புன்னகை பூத்தனர் அப்பெரியார்.
அது கண்டு நபித் தோழர்கள் இருவரும் ஆச்சரியப்பட்டார்கள். உண்மையான முஹப்பத்தின் அர்த்தத்தையும், உண்மையான முஹம்மதின் தாற்பரியத்தையும் உவைஸ் கர்னீ ரளியல்லாஹு அன்ஹு அவர்களுடைய சிறப்பான வாழ்விலிருந்து நாம் அறிந்து கொண்டோம்.

சூஃபிகள் சென்ற பாதை மிகச் சரியானது. தெய்வீக அருள் பெற்றவர்கள் அவர்களே. நடத்தையிலும் ஒழுக்கத்திலும் பரிபூரண அடைந்தவர்களும் அவர்களே. இந்த உலகில் உள்ள அறிவுஜீவிகள், தத்துவவாதிகள், மார்க்க மேதைகள் என எல்லோருடைய அறிவையும் சேர்த்தாலும் சூஃபிகள் போன்ற பரிபூரண தூய்மை பெற்ற ஒரே ஒரு மனிதனைக் கூட உருவாக்க முடியாது

## கராமத் 12



கராமத் எப்படி ஏற்படுகிறது ?
நீங்கள் ஒரு மீனிடம், " கடல் எப்படி இருக்கும் ? "
அந்த மீன் " இதுதான் கடல், கடல் என்னைச் சுற்றி உள்ளது. அது சுதந்திரமானது " என்று கூறும் .
ஆனால் நீங்கள் அதனிடம் "கடலைப் பற்றி விவரி " என்று வற்புறுத்தினால், திமிலங்கலம் போன்ற பெரிய பெரிய ஆபத்துக்களைப் பற்றியெல்லாம் கூறாமல், கடல் சுதந்திரமானது என்றுதான் கூறும் .
அதே மீனை கடலிலிருந்து பிடித்து ஜாடி நீருக்குள் போட்டுவிட்டு, "வாழ்க்கை எப்படி இருக்கிறது ?"
அந்த மீன் "வாழ்க்கை பயங்களாலும்,ஆபத்துக்களாலும் சூழ்ந்தது " என்று கூறும் அதே கடல் மீன் .
கடல் வாழ்வை இம்மையாகவும் , ஜாடி வாழ்வை கபுராகவும் மீன் உருவகப்படுத்திற்று
இந்த சுதந்திரத்திற்குள்ளும் , பயத்திற்குள்ளும் சிக்காமல் ஞானிகள் பற்றற்ற வாழ்க்கையை நேசிக்கிறார்கள்.

اَلَآ اِنَّ اَوۡلِيَآءَ اللّٰهِ لَا خَوۡفٌ عَلَيۡهِمۡ وَلَا هُمۡ يَحۡزَنُوۡنَ
(முஃமின்களே!) அறிந்து கொள்ளுங்கள்; நிச்சயமாக அல்லாஹ்வின் நேசர்களுக்கு எவ்வித அச்சமும் இல்லை; அவர்கள் துக்கப்படவும் மாட்டார்கள். (குர்ஆன் : 10:62)
"மரணம் மட்டும் சந்தையில் விற்குமானால், இறைவனின் நண்பர்கள் அதைத் தவிர வேற எதையும் வாங்கமாட்டார்கள் " -ராஸி
அல்லாஹ்வுடைய அடியார்களில் சிலர் நபிமார்களும் அல்ல, தியாகிகளும் அல்ல. மறுமை நாளில் இறைவனிடம் அவர்களுக்குள்ள பதவிகளைக் கண்டு நபிமார்களும், தியாகிகளும் பொறாமைக் கொள்வர். என்று நபி கூறினர்.
(அப்பொழுது) அவர்கள் யார்? என்று எங்களுக்கு அறிவியுங்கள் என்று தோழர்கள் கேட்டனர்.
(அதற்கு) நபி அல்லாஹ்வின் பொருத்தத்திற்காகவே தங்களிடையே நட்புக்கொள்வர். அவர்களுக்கிடையில் உறவின் முறையும் இருக்காது. பணத்திற்காகவும் அவர்கள் நட்புக் கொள்ள மாட்டார்கள். இறைவன்மீது ஆணையாக அவர்களின் முகம் ஒளிர்ந்து கொண்டிருக்கும்.
அவர்கள் இறை வழியில் செல்வார்கள். மக்கள் அச்சமுறும் பொழுதும், துக்கிக்கும் பொழுதும் அவர்கள் அச்சமுறவும் மாட்டார்கள். துக்கிக்கவும் மாட்டார்கள்.
".(முஃமின்களே!) அறிந்து கொள்ளுங்கள்; நிச்சயமாக அல்லாஹ்வின் நேயர்களுக்கு எவ்வித அச்சமும் இல்லை; அவர்கள் துக்கப்படவும் மாட்டார்கள்." என்ற 10:62 வது வசனத்தை ஓதினர். அறிவிப்பவர்: உமர்(ரலி) நூல்: அபூதாவூத்

என் நேசரை நோவினை செய்தவனிடம் நான் பகிரங்கமாக போர் புரிவேன். கடமையாக்கிய ஒன்றை தான் செய்வதில் இருந்தே தவிர எனக்கு மிக விருப்பமான வேறொன்றை செய்து என் அடியான் என்னிடம் நெருங்கிட முடியாது.
நபிலான (உபரியான) வணக்கங்களை செய்வது மூலம் என்னிடம் நெருங்குவதில் என் அடியான் தொடர்ந்து இருப்பான் இதனால் அவனை நான் பிரியம் கொள்வேன்.
அவனை நான் பிரியம் கொண்டு விட்டால் அவன் கேட்கும் அவனது செவியாகவும் அவன் பார்க்கும் பார்வைப் புலனாகவும், அவன் பிடிக்கும் கையாகவும், அவன் நடந்து செல்லும் காலாகவும் நான் ஆவேன்.
என்னிடம் அவன் கேட்டால் அவனுக்குக் கொடுப்பேன். என்னிடம் நெருங்குவதில் என் அடியான் தொடர்ந்து இருப்பான். இதனால் அவனை நான் பிரியம் கொள்வேன்.
அவனை நான் பிரியம் கொண்டு விட்டால் அவன் கேட்கும் அவனது செவியாகவும் அவன் பார்க்கும் பார்வைப் புலனாகவும், அவன் பிடிக்கும் கையாகவும், அவன் நடந்து செல்லும் காலாகவும் நான் ஆவேன்.
என்னிடம் அவன் கேட்டால் அவனுக்குக் கொடுப்பேன். என்னிடம் அவன் பாதுகாப்புத் தேடினால் அவனை நான் காப்பாற்றுவேன்.

மரணத்தை அஞ்சும் என் மூமினான அடியானின் உயிரை கைப்பற்றுவதை நான் தயங்குவது போல் வேறு எதற்கும் நான் தயங்குவதில்லை. அவனின் மரண வேதனையை நான் நீக்குகிறேன் என்று அல்லாஹ் கூறியதாக நபி (ஸல்) கூறினார்கள் என அபூஹுரைரா (ரலி) அறிவிக்கின்றார்கள்.
.... இப்படித்தான் இறைநேசர்களுக்கு கராமத் என்னும் அற்புதத்தை இறைவனே செய்து விடுகிறான்.

## கராமத் 13

(ஏழ்மையின் விலை ஒரு சாம்ராஜ்ஜியம்)
ஒரு முறை இப்ராஹீம் இப்னு அத்ஹம் : " நான் வானவர் ஜிப்ரயீலைக் கனவில் கண்டேன். கையில் அவர் ஒரு புத்தகம் வைத்திருந்தார்.
"அதில் இருப்பது என்ன?" என்று கேட்டேன்
" இறைவனுடைய நண்பர்களுடைய பெயர்கள் " என்று அவர் சொன்னார்.
" அதில் என் பெயர் இருக்கிறதா? " என்று கேட்டேன்
" இல்லை " என்று அவர் சொன்னார்.
" சரி பரவாயில்லை. இறைவனுடைய நண்பனாக நான் இல்லாவிட்டாலும், இறைவனுடைய நண்பர்களுக்கு நண்பராக இருக்கிறேன் " என்று சொன்னேன்
கொஞ்ச நேரம் அமைதியாக இருந்த ஜிப்ரீல், " இறைவனின் நண்பர்கள் என்ற பட்டியலில் இப்போது உங்கள் பெயர் எல்லா பெயர்களுக்கும் மேலே இப்போது பதிவு செய்யப்பட்டடு இருக்கிறது ஏனெனில் ஆன்மிகப் பாதையில் நம்பிக்கை இழந்த நிலையில் இருந்துதான் நம்பிக்கை பிறக்கிறது "

ஒரு நாள் ஒருவர் இப்ராஹிம் இப்னு அத்ஹம் அவர்களிடம், ஒருவர் வந்து, " பல்க் நாட்டின் அரசாட்சியை விட்டுவிட்டு வந்ததன் மூலம் உங்களுக்கு என்ன கிடைத்தது ? என்று கேட்டார்.
அந்த நேரத்தில் இப்ராஹீம் இப்னு அத்ஹம் ஒரு ஆற்றின் கரையோரமாக அமர்ந்திருந்தார். கையில் இருந்த ஒரு ஊசியை உடனே அவர் ஆற்றில் வீசி எறிந்தார். பின் அந்த ஆற்றின் மீன்களுக்கெல்லாம் ஊசியைக் கொண்டு வரும்படி உத்தரவிட்டார். உடனே

கும்பலாக மீன்கள் ஒவ்வொன்றும் தன் வாயில் ஒரு ஊசியை வைத்துக் கொண்டு நீருக்கு மேலே வந்தன. அதில் தன் ஊசியை மட்டும் எடுத்துக்கொண்டு, இப்ராஹிம் சொன்னார் :
"ஆன்மிகப் பாதையில் நான் வந்ததனால் எனக்கு கிடைத்த மிக அற்பமான தகுதி இது. என் ராஜ்ஜியத்தை விலையாகக் கொடுத்து இந்த ஏழ்மையை நான் வாங்கி இருக்கிறேன் "

"கட்டி வைத்ததை அவிழ்த்து விடு ;
அவிழ்த்து விட்டதை கட்டி வை "

## கராமத் 14

(பாத்திரத்திற்குள் ஏரி)
ஹிஸ்ரி 588 ஆம் ஆண்டு முஹர்ரம் மாதம் 10 ஆம் நாள் (கி.பி.1192) அன்று அஜ்மீர் நகருக்கு காஜா நாயகம் வருகை தந்தார்கள் .அப்போது அவர்களுக்கு வயது 57.

இந்நகரம் பிருதிவிராஜ் என்ற ராஜபுத்திர அரசனின் ஆட்சியில் இருந்தது. அவனுடைய அரண்மனை அதன் அருகிலுள்ள தாராகட் என்ற குன்றின் மீது இருந்தது. அதன் அடிவாரத்திலேயே மக்கள் வாழ்ந்து வந்தனர். அங்கேயே அவனுடைய குதிரை,ஒட்டகை ஆகியவற்றின் தொழுவங்கள் இருந்தன.
அங்கு வந்த காஜா நாயகம் தம் சீடர்களுடன் வெட்ட வெளியில் இளைப்பாற அமர்ந்தனர். அரசரின் ஆட்கள் வந்து நீங்கள் இங்கு தங்க கூடாது. இது அரசரின் ஒட்டகை அடைக்கும் இடம் என்று சொன்னார்கள். அதுகேட்ட காஜா நாயகம் அவர்கள் "அரசரின் ஒட்டகை இங்கேயே அடைபட்டுக் கிடக்கட்டும் " என்று சொல்லி விட்டு தம் சீடர்களுடன் அருகிலுள்ள அன்னாசாகர் என்ற ஏரிக் கரையில் போய் தங்கினர்.

காலையில் ஒட்டகம் மேய்ப்பவர்கள் வந்து ஒட்டகையை எழுப்ப முற்பட்ட போது அவைகளால் எழும்ப முடியவில்லை. உடனே அவர்களுக்கு நேற்று நடந்த சம்பவம் நினைவுக்கு வரவே காஜா நாயகத்திடம் வந்து மன்னிப்புக் கேட்டனர்.
அவர்களும் மன்னித்து, " ***இது எந்த எசமானுடைய ஆணைக்காக அமர்ந்திருந்ததோ அந்த எசமானுடைய ஆணை மீது அவை எழுந்து நடக்கும் " என்று கூறினர். அவ்விதமே ஆயிற்று. அதுகண்டு ஒட்டகம் மேய்ப்பவர்கள் வியந்து அரசனிம் இச்சம்பவம் பற்றி சொன்னார்கள்.***
***இதைக் கேட்ட அரசன் அதிர்ந்தான். ஏனெனில் மன்னனின் அன்னை வாசவதத்தா சோதிடத்தில் மிகவும் புலமை பெற்று விளங்கினாள். அவள் சுமார் 12 ஆண்டுகளுக்கு முன்பே இன்ன இன்ன அடையாளமுள்ள ஒருவர் இங்கு வருவார். அவரின் வரவால் உன் ஆட்சி வீழும் என்று தன் மகனிடம் முன்னறிவிப்பு செய்திருந்தாள்.***
அதைக் கேட்ட மன்னன் அப்போது அவர்களின் படத்தை தம்அன்னையிடமே வரைந்து கேட்டு, அதன்படிப் பல பிரதிகள் எடுத்து இத்தகு உருவமுடையவர் எவரேனும் தம் நாட்டு எல்லைக்குள் நுழைந்தால் அவரைப் பிடித்து என் முன் கொண்டு வர வேண்டும் என்று ஆணையிட்டிருந்தான்.
எனவே இச்செய்தியைக் கேட்டவுடன் அந்த நபர் இவர்களாகத்தான் இருக்குமோ என்று எண்ணி அவர்களை அங்கிருந்து விரட்ட ஆட்களை அனுப்பினான். அரசரின் ஆணையை சிரமேற்றோங்கிச் செயலாற்ற அவனின் பணியாளர்கள் முயன்ற போது நாயகம் அவர்கள் ஒருபிடி மண்ணை அள்ளி, அதில் ஆயத்துல் குர்ஸீயை ஓதி ஊதி, அவர்கள் மீது வீசி எறிந்தார்கள். அவர்கள் அதனைத் தாங்க இயலாது, பெரும் கூச்சலிட்டுக் கொண்டு வெருண்டோடினர்.
இதனை அறிந்த அரசன் காஜா அவர்களைப் பெரிய மந்திரவாதி என்று எண்ணிக் கொண்டு, மந்திரத்தை மந்திரத்தால் தான் வெற்றி கொள்ள வேண்டுமென்று எண்ணி, சாதுராம் என்ற மாபெரும் மந்திரவாதியைக் காஜா அவர்களிடம் அனுப்பி வைத்தான்.
அவர் காஜா நாயகத்தைப் பார்த்ததும் திடுக்கம் ஏற்பட்டு அவர்களின் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டு அன்னாரின் கரம் பிடித்து இஸ்லாத்தைத் தழுவி, அவர்களின் ஊழியத்தில் இருந்து கொண்டார். அவருக்கு ஷாதிதேவ் (மகிழ்ச்சியாளர்) என்று பெயர் சூட்டி மகிழ்ந்தார்கள்.
இதன்பின் காஜா அவர்களை எதிர்த்து, மந்திர ஆற்றலினால் போராடி, அவர்களை அங்கிருந்து விரட்டிவிட ஜெய்ப்பால் என்ற மற்றொரு மந்திரவாதியை அனுப்பி வைத்தான் அரசன்.

அவர் தம்முடைய 1500 சீடர்களுடன் தம்மை எதிர்க்க வருகிறார் என்பதை அறிந்த காஜா நாயகம் அவர்கள் தம்முடைய கைக்கோலை கொடுத்து, நம்முடைய ஜமாஅத்தினரைச் சுற்றி பூமியில் ஒரு கோடு கிழியும். அதற்குள் நாம் இருக்கும் வரையில், அவர்களால் நமக்கு யாதொரு தீங்கும் செய்ய இயலாது என்று கூறினார்கள். அவ்விதமே அவரும் செய்தார்.

சற்று நேரத்தில் ஜெய்ப்பாலும்,அவரின் சீடர்களும் அங்கு வந்து, அக்கோட்டிற்குள் தம் கால்களை வைத்ததும், அவர்கள் மயங்கிக் கீழே விழுந்தனர். மயக்கம் தெளிந்து எழுந்த அவர்கள், தள்ளாடித் தள்ளாடி அன்னாசாகர் ஏரிக்கரையின் ஒரு புறத்தில் சென்றமர்ந்து, அன்னாசாகரின் தண்ணீரைக் காஜா அவர்கள் இருக்கும் பக்கம் செல்லவிடாது தடுக்கும் முயற்சியில் ஈடுபடலாயினர்.

இதனைக் கண்ட காஜா நாயகம் அவர்கள் ஷாதிதேவை அழைத்து, அவரின் கரத்தில் ஒரு பாத்திரத்தை கொடுத்து 'நீர் அன்னாசாகரின் நீரை இந்தப் பாத்திரத்தில் எடுத்து வாரும்' என்று கூறினர்.

அவர் சென்று அவ்வாறே நீர் எடுத்து வந்ததும், அந்த ஏரியிலுள்ள அனைத்துத் தண்ணீரும் அப்பாத்திரத்துக்குள் வந்து அந்த ஏரி மட்டுமில்லாது, அதனைச் சூழ இருந்த எல்லாக் கிணறுகளும் வற்றி வரண்டு விட்டன. மக்களும், மாக்களும் நீரின்றி செத்து மடிய வேண்டிய அவலநிலை ஏற்பட்டு விட்டது.

ஜெய்ப்பால் திடுக்கிற்று காஜா நாயகம் அவர்களிடம் இரங்கி வேண்ட, பாத்திரத்தில் எடுத்த நீரை ஏரியிலேயே கொட்டும்படி பணித்தனர். அவ்வாறே செய்ய ஏரி தண்ணீரால் நிரம்பி தளும்பியது.

" கடலுக்குள் கலந்த பிறகு உப நதிகளைப் பற்றி ஒரு வார்த்தையும் தேவையில்லை "
ஹகீம் சனாய்

## கராமத் 15

நாகூர் ஷாஹுல் ஹமீது வலி ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கி.பி. 16ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர்கள் ஆவார்கள். இவர்களது காலம் கி.பி 1532-1600 என அறிஞர்கள் கருதுகின்றனர்.

முஹம்மது நபியின் வழித்தோன்றல் சையிது ஹஸன் குத்தூஸ் என்பவருக்கும், நபியின் மருமகன் அலி ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் வழித்தோன்றலான சையித் ஹமீதுத்தீன் மகளுமான அன்னை பாத்திமாவுக்கும் மகனாக சுமார் ஐநூறு வருடங்களுக்கு முன்னால் இந்தியாவின் மாணிக்கப்பூர் நகரில் பிறந்தவர்கள்தான் ஷாஹுல் ஹமீது (ரலி) அவர்கள்.

வாலிப பருவம் அடைந்தது ஷாஹுல் ஹமீது (ரலி) அவர்கள் தங்களுக்கான ஞானகுருவைத் தேடி, ஹிஜ்ரி 928ம் ஆண்டு ஜமாதுல் ஆகிர் மாதம் ஒரு திங்கட்கிழமை வழித்துணையின்றி, கைச்செலவுக்குப் பொருள் இன்றி, துறவுக்கோலத்துடன் குவாலியர் பட்டணத்துக்கு விரைந்தார்கள்.

நடை பயணமாக காடுகளை கடந்து வந்து கொண்டிருந்த நாயகத்தை திருடர்கள் கொள்ளையடிக்கும் நோக்கத்துடன் நெருங்கினார்கள்.

அவரிடம் பொருள் இல்லாததால் நாயகத்தை கொலை செய்யக் கருதி, ஆயுதங்களால் வெட்டியவர்கள் தங்கள் உடல்களே துண்டாகி விழுந்தனர்.

கொள்ளையர்களின் உறவினர்கள் மன்னிப்பு கோரியதைத் தொடர்ந்து அவர்களின் உடலை ஒட்டி, உயிர் கொடுத்து அற்புதம் நிகழ்த்தினார்.

முஹம்மது கௌது (ரஹ்) அவர்களிடம் சென்று அவரது மெய்ஞ்ஞான பயிற்சிக் கூடத்தில் பயின்று மெய்ஞ்ஞானத் தீட்சை பெற்றுக் கொண்டார்கள்.

பத்து ஆண்டுகள் மெய்ஞ்ஞானக் கல்வி பயின்றவர், பின்னர் அங்கிருந்து கிளம்பினார்கள். அவருடன் நானூற்று நாற்பது சீடர்கள் உடன் சென்றனர்.

ஊர்தோறும் மக்களுக்கு உபதேசித்தும், உண்மையைப் பேணச் செய்து இஸ்லாத்தை நிலை நாட்டிக் கொண்டே நாயகம் அவர்கள் மாணிக்கப்பூர் வந்தடைந்தனர்.

அங்கு கொஞ்ச காலம் இருந்தவர்கள் வீட்டில் திருமண ஏற்பாடுகள் செய்வதை தடை செய்தவர்களாக சீடர்களுடன் லாகூர் சென்றார்.

அங்கு இறைவனின் ஆணைப்படி காழி நூருத்தீன் முஃப்தி என்பவரின் மனைவி ஜஹாரா பீபிக்கு தான் மென்ற வெற்றிலை தாம்பூலத்தை கொடுத்து அவரை கருவுறச் செய்தார்கள்.

அவர் பெறப்போகும் முதல் குழந்தைக்கு 'முஹம்மது யூசுஃப்' என பெயரிட நூருத்தினிடம் தெரிவித்ததோடு, குழந்தையின் தன்மை குறித்தும் தெரிவித்த நாயகம் தன் சீடர்களுடம் பயணத்தை தொடர்ந்தார்கள்.

ஒருநாள் இரவு தொழுகையின் போது, தனது தந்தை மரணிப்பதை அறிந்த நாயகமவர்கள் தன் சீடர்களுடன் ஒரே இரவில் ஆசியா மைனரிலிருந்து இந்தியாவின் மாணிக்கப்பூரை நடந்தே அடைந்து அதிசயம் நிகழ்த்திய நாயகம், தந்தை மறைந்து 40 தினங்களுக்குப் பின் அரேபியாவுக்கு கிளம்பினார்கள்.

நாயகம் அவர்கள் தங்களின் 37 ம் வயதில் ஜித்தா துறைமுகத்திலிருந்து கப்பல் ஏறி கேரளாவின் பொன்னாணி எனும் ஊரில் கரையிறங்கினார்கள். அப்போது நாயகத்துடன் அவரது மகன் யூசுஃப் ஆண்டகையும் இருந்தார்கள்.

பின்னர் அங்கிருந்து லட்சத்தீவுகள், சிலோன் முதலிய வெளிநாடுகளுக்கும் காயல்பட்டணம், நத்தம், மேலப்பாளையம் போன்ற பகுதிகளுக்கும் சென்று இறைப்பிரசங்கம் செய்தவர் தஞ்சாவூரை அடைந்தார்கள்.
அதை ஆட்சி செய்த அச்சுதப்ப நாயக்கன் உடல்நலம் குன்றியிருந்தார். நாயகத்தின் சிறப்புகள் தெரிந்து அவரைக் கண்டு நோய் நீங்கப்பட்ட மன்னன், அதற்கு வெகுமதியாக நிலங்களைக் கொடுத்தார். அந்த இடத்தின் பகுதியில் தான் தர்காவும், அதைச் சேர்ந்த குளம் முதலிய கட்டிடங்களும் அமைந்துள்ளன.
ஒவ்வொரு நாளும் நாகூர் தர்காவில் ஜாதி ,மதபேதங்கள் இன்றி அனைத்து மக்களும் ஜியாரத்திற்கு வருகின்றனர்

"அவனது வாசலில் முஸ்லீம் யார் ? கிறிஸ்தவன் யார் ? நல்லவன் யார் ? கெட்டவன் யார் ? எல்லோரும் தேடுபவர், அவனோ தேடப்படுபவன் " _ ஸனாய்

## நண்பர்களின் வேண்டுகோளுக்கிணங்க மீண்டும் கராமத்

## கராமத் 16

(முஃஜிஸாத்தா? கராமத்தா ? )
அண்ணலெம் பெருமானார் (ஸல்) அவர்களின் சமுகத்திற்கு அஸீதுப்னு ஹுளைர் (ரலி) அவர்களும் , உப்பாதுப்னு பஷர் (ரலி) அவர்களும் இருள் சூழ்ந்த ஓர் இரவில் சென்றிருந்தார்கள் .
பிறகு அவ்விருவரும் ஒன்றாக திரும்பி வரும்போது அவர்களுக்கு முன்பாக இரு ஜோதிப் பிரகாசங்கள் அவ்விருவர் முன் ஜொலித்துக் கொண்டே போய்க் கொண்டிருந்தன .
அவ்விருவர்கள் பிரிந்து தனித்தனியே செல்ல முற்பட்ட போது அந்த இரு ஜோதிகளும் தனித்தனியே பிரிந்து அவர்கள் வீடு சேரும் வரை அவரவருடன் போய்க் கொண்டிருந்தன என்பதாக அனஸ் (ரலி) அவர்கள் ரிவாயத்துச் செய்திருக்கிறார்கள் .
அது என்ன ஒளி ? இது முஃஜிஸாத்தா ? கராமத்தா ? நீங்கள்தான் சொல்ல வேண்டும் .
இந்த ஹதீது ஸஹிஹுல் புகாரியிலும் கூறப்பட்டுள்ளது. (புகாரி 3639)

## கராமத் 17

(முஃஜிஸாத்தும் Vs கராமத்தும் )

அரூபியான அல்லாஹ் ﷻ அகிலத்தில் தனக்குப் பிரதிநிதியாகச் சொரூபியான ஸெய்யிதுனா அபுல் பஷர் ஆதம் عليه السلام அவர்களை உண்டாக்கினான் .
"லாயஸாலு அப்தீ ... என்னுடைய அடியான் நபிலான வணக்கங்களையும் விருப்புடன் பேணிச் செய்பவனாக நீங்கா வண்ணமாகி எனது பொருத்தத்தை பெறும் வண்ணம் நெருங்கி, நான் அவனை நேசிக்கும் அளவுக்கு அகிவிடுகின்றான் ." என்ற ஹதீது குத்ஸியின்படி
ஆதம் عليه السلام அவர்கள் குர்பூ- பறாயிலு , குர்பூ-நவாபிலு அமல் செய்து நிறப்பமானபடியால் அல்லாஹ் ﷻவுக்கு கலீபாவாயிருந்து ,உலகத்தின் காரியாதிகளை நடத்தி வந்திருக்கின்றார்கள். அவர்களில் நின்றுமே பஷரிய்யதென்னும் மனுவர்க்கம் இறுதித் தீர்ப்பு நாள் பரியந்தம் வெளியாகிக் கொண்டே வருகின்றது.
ஸெய்யிதுனா அபுல் பஷர் ஆதம் عليه السلام அவர்கள் உள்ரங்கத்தில் விலாயத்தும் வெளிரங்கத்தில் நுபுவ்வத்தும் உடையவர்களாயிருந்தார்கள்.
அவர்களுக்குப் பிறகு பல நபிமார்கள் வெளியாகி இறுதி நபியாக எம்பெருமானார் ﷺ அவர்கள் தோன்றினார்கள்.
எம்பெருமானார் ரஸூலே கரீம் ﷺஅவர்களுக்குப் பிறகு நபியில்லையாகையால், அவர்கள் பால் பகிரங்கமாக இருந்த நுபுவ்வத் அந்தரங்கமாகி, அந்தரங்கமாக இருந்த விலாயத் பகிரங்கமாயிற்று .
அந்த விலாயத்தைச் சுமந்தவர்கள் தான் அவ்லியாக்களாவர் . ஆகவே நபியுடைய முடிவு வலியுடைய ஆரம்பமாகும் .
நுபுவ்வத்தாகிய நபித்துவத்தில் தொடர்பு முடிவடைந்து விட்டபடியால், ஒவ்வொரு காலத்திலும் நபியின் பிரதிநிதியாக ஒருவர் நியமனமாகின்றார் .அத்தகையவர் யுகமுடிவு நாள் வரை ஏற்பட்டுக் கொண்டேயிருப்பர் .
அவரே ஆண்டவனுக்கு முடுகுதல் ( திருப்தியைப்) பெற்ற வலி,கூட்டத்தினருக்கு இமாம் ,ஒரே நேர்வழி காட்டக்கூடிய ஹாதியும் மஹ்தியுமாவார் . வலது ,இடது இரு பக்கங்களிலும் அன்னாருக்கு அமைச்சர்கள் இருக்கின்றனர். அவர்களும் வலிமார்களாவே இருக்கின்றனர் என்பதாக மவ்லானா முஹம்மது ஜலாலுதீன் ரூமி رضي الله عنه அவர்கள் மஸ்னவி ஷரீபில் குறிப்பிட்டுள்ளார்கள் .
'அல்லாஹ் ﷻநபிமார்களுக்கு தந்து திருவசனமாகிய வஹியைக் கொண்டு பயிற்சி அளித்தான். அவ்லியாக்களுக்கு தெய்வீக உதிப்பாகிய இல்ஹாமைக் கொண்டு பயிற்சி அளிக்கிறான் . அவ்லியாக்கள் நபிமார்களுடைய நிருவாகப் பொறுப்பாளர்களாவும், பிரதிநிதிகளாகவும் ,வாரிசுகளாகவும் ஊழியர்களாகவும் இருக்கின்றார்கள் .
இத்தகைய நல்லடியார்களே உலகப் பிரஜைகளுடையவும், உலகத்துடையவும் காரியஸ்தர்களாகவும், உலகத்தை நிலைப் பெறச் செய்பவர்களாவும் இருக்கின்றார்கள் . அவர்களைக் கொண்டே உலகமும் நிலை பெற்றிருக்கின்றது .

அவர்கள் சிருஷ்டியை ஆளுபவர்களாகவும் ,மெய்ப்பொருளின் பிரதிநிதிகளாகவும் இருப்பது புறத்தோற்றத்தில் அன்று உள்ரங்கத்திலேயாம் ' என்பதாக மஹ்பூபே ஸுப்ஹானி,மஹ்ஷுக்கே ரஹ்மானி ,கிந்திலே நூரானி தாஜுல் அவ்லியா ஸெய்யிதுனா முஹ்யித்தீன் அப்துல் காதிர் ஜீலானி அவர்கள் பத்ஹுர் ரப்பானில் உபதேசித்துள்ளார்கள்
'அன்னாரே சர்வ இரட்சகர், அன்னாரைப் பொறுத்தே சகல லோகக் காரியாதிகளெல்லாம் சுற்றியாடுகின்றன. அண்ணரைக் கொண்டே அல்லாஹ் ﷻ உலகங்களைக் காக்கின்றான் .
அன்னாரே மஹ்தீ என்றும்,காத்தமுல் அவ்லியா என்றும் சொல்லப்படும் .அன்னவர் காலத்தில் அன்னார் தான் காத்தமுல் அன்பியா ,ஸெய்யிதுனா முஹம்மது ﷺ அவர்களின் பதவியாகிய மகாமுன் மஹ்மூதாவில் தரிப்பட்டிருப்பவர். அன்னாரே கலீபதுல்லாஹ் என்ற தெய்வப் பிரதிநிதியாக இருக்கின்றார் ' என்பதாக ஆரிபு ரப்பானி ஹழ்ரத் ஸெய்யிது அப்துல் கரீம் ஜீலி رضي الله عنها அவர்கள் இன்ஸான் காமில் நூலில் கூறுகிறார்கள் .

ஆதாரம் : ஹிதாயதுல் அனாம் இலாஜியாரதில் அவுலியாஇல் கிராமிலிருந்து ....

" வாயை மூடு , கண்ணை மூடு , காதை மூடு , இறைவனின் ரகசியம் உனக்குத் தெரியாவிட்டால் , என்னைப் பார்த்துச் சிரி.
_ மௌலானா ரூமி

## கராமத் 18
(சித்திக்காரன் வரைந்த கஃபா)

அபுல் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் பதாயிகு நகரத்தில் அபூபக்கர் ரிஃபாயி அவர்கள் புதல்வி ஆயிஷாவை திருமணம் முடித்ததாக பல்வேறு கிரந்தங்களில் காணப்படுகிறது.
நிறைமாத கர்ப்பிணியாய் இருந்த ஆயிஷா அம்மையார் அவர்கள் தொழுகை முடிந்து தம்முடைய வயிற்றைப் பார்த்துக் கொண்டே "அஸ்ஸலாமு அலைக்கும் என் மகனே" என்று விளிக்கிறார்கள். அதற்கு கருவிலிருந்து, வஅலைக்குமுஸ்ஸலாம் என்று பதிலும் வந்தது
இதை அம்மையாரின் சகோதரர் கவனித்தார். இந்த சம்பவத்திற்கு நாற்பதாவது நாள் ஹிஜ்ரி 512ஆம் வருடம் ரஜப் மாதம் வியாழக்கிழமை பதாயிகு நகரில் ஹஸன் என்ற இடத்தில் செய்யிது அஹ்மது கபீர் நாயகம் ஜனனம் ஆனார்கள்.

காலங்கள் உருண்டோடின. நாயகத்திற்கு நாலரை வயது. செய்கு அலீ என்ற பெரியாரிடம் கல்வி கற்பதற்காக ஒப்படைக்கப்பட்டார். பத்து வயது அடையும் முன்போ அனைத்து விதக் கல்வியிலும் தேர்ந்து விட்டார்.
தமது 28ஆவது வயதிற்குள் ஆண்டகை அவர்கள் மிகப் பிரபலமாகி விட்டார்கள். வெகு காலம் வரை தனித்தே இருந்த ஆண்டகை அவாக்ள் மெய்ஞ்ஞானப் பெருவள்ளலாய் விளங்கிய ஷெய்கு அலியுல் வாஸ்தி காதிரி ரலியல்லாஹு அன்ஹு அவர்களிடம் 'இர்ஷாத்' பெற்றுக் கொண்டதும் மக்களுக்கு உபதேசிக்கவும் அவர்களைக் கடைந்தேற்றவுமான காரியத்தில் ஈடுபடத் துவங்கினார்கள்.
கஃபத்துல்லாஹ்வை தரிசிக்க வேண்டும் என்ற ஆசை அவர்கள் மனதில் உண்டானவுடன் திடீரென ஒருநாள் எவ்விதமான பிரயாண முன்னேற்பாடுகளும் இன்றி மாற்றுடை கூட இல்லாமல் திடீரென ஒருநாள் காலையில் புறப்பட்டு விட்டார்கள்.
ஊர் எல்லையை தாண்டி சில கஜ தூரமே சென்றிருப்பார்கள். சற்றுத் தொலைவில் கஃபாவின் ஹரம் பளீரென்று தோன்றியதும் திடுக்கிட்டு நின்றனர்.
அவர்களுடன் கூட சென்ற யாகூப் என்பவர் என்ன பிரமை பார்த்தீர்களா? என்றார்.
பிரமை அல்ல நிஜம் என்று ஆண்டகையின் முகம் விசனத்தால் மலர்ச்சியை இழந்தது. கண்களில் நீர் மணிகள் மின்னின. அந்த கஃபா தரிசனத்தை 'சித்திக்காரன் வரைந்த கஃபா படத்தை வீட்டில் இருந்தவாறு பார்க்கிறதை கஃபா தரிசனம் என்று எனக்குள் கொள்ள முடியாது' என்று உரத்த குரலில் சொன்ன ஆண்டகை அவர்கள் சட்டென்று ஊரை நோக்கி திரும்பினார்கள்.

இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் வமிசவழியில் வந்துதித்த மன்சூர் அலி ரலியல்லாஹு அன்ஹு என்ற பெரியார் ரிபாஃயாக் கிளையாரில் தோன்றிய மாபெரும் மகான். தம் இளம் வயதிலேயே ஆயிரக்கணக்கான முரீதீன்களை பெற்றிருந்தார்கள்.
மன்சூர் அலி (ரலி) இறைநேசராகவும், மிகப் பெரிய ஞானியாகவும் கருதப்பட்ட அவர்கள் பிற உயிர்களிடம் பேசக் கூடிய ரகசிய ஞானம் கொண்டவர்களாகத் திகழ்ந்தார்கள். துஷ்ட மிருகங்களை கட்டுப்படுத்தக் கூடியவர்களாகவும் இருந்தார்கள்.
தன் மாமனார் மன்சூர் அலி நாயகத்திடம் பைஅத் பெற்றுக் கொண்டு, அன்னாரிடம் கிலாபத்தும் பெற்றுக் கொண்டார்கள்.
ரிஃபாயிய்யா தரீகாவில் ஆண்டவர்கள் முரீதானதும் அந்த தரீகா விரைவில் பிரபலமாயிற்று.
அதன்பின் மரணத்திற்கு பின் மரணித்தல் என்ற நிலையை பெற்றுக் கொண்டார்கள்.
ஷரீஅத்தை மீறுவது என்பது ரிபாயி ஆண்டகை அவர்களால் பொறுத்துக் கொள்ள முடியாத ஒன்று. அந்தளவிற்கு பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீது காதல் கொண்டிருந்தார்கள்.

தம்மிடம் முரீது வாங்க வருபவர்களிடம் பெயர், குலம், கோத்திரம், கல்வி, முகவரி பற்றி விசாரிப்பதில்லை. முதலில் ஒளு செய்துவிட்டு வரச் சொல்வார்கள். தம் எதிரே உட்காரச் செய்வார்கள். பின்னர் அவரைப் பார்த்து அல்லாஹ்வின் தொண்ணூற்று ஒன்பது திருநாமங்களையும் வரிசையாக ஒவ்வொன்றாய் நிறுத்தி நிறுத்தி சொல்வார்கள்.

அவ்விதம் சொல்கையில் ஏதாவது ஒருநாமம் வந்தவரை உணர்ச்சி கொள்ளச் செய்யும். அவரது அமைதியான நிலையிலும் மூச்சிலும் மாறுதல் உண்டாகும். உடனே அந்த மனிதனின் ஆன்ம குணத்தின் அடிப்படையை ஆரிஃப் நாயகம் புரிந்து கொள்வார்கள். அதன்பின் அவரிடம் பைஅத் எனும் உறுதிப்பிரமாணம் வாங்கிக் கொண்டு தீட்சை வழங்கி, அவர் செய்ய வேண்டிய திக்ர்களை உபதேசித்து அதை பயிற்சி செய்யும்படி அனுப்புவார்கள்.
மூன்று முறை ஓதியும் கேட்டவர் உள்ளத்தில் அது எவ்வித சலனத்தையும் ஏற்படுத்தவில்லையெனில், "இன்னும் நீங்கள் பக்குவம் பெறவில்லை. உங்களுக்கு அல்லாஹ் நேர்வழி காட்ட வேண்டும் .உங்கள் வீட்டின் நான்கு சுவர்களும் இடிந்து கிடக்கின்றன. வெட்ட வெளி சங்கீதத்தை எதிரொலிப்பதில்லை " என்று சொல்லி திருப்பி அனுப்பி விடுவார்கள்.
வேறு எந்த ஞானப் பாதையிலும் இல்லாத ஒரு சிறப்பான அம்சம் இது. அல்லாஹ்வின் திருப்பெயர்களோடு தொடர்பு இல்லாத பொருளோ , குணமோ இந்தப் பிரபஞ்சத்தில் கிடையாது.
படைத்தவனிடமிருந்து படைப்பினம் வேறுபட்ட பெயரோடும், தோற்றத்தோடும் இருந்தாலும், படைத்தவனின் உயிர்க்குணம் எங்காவது பிரதிபலிக்கத்தான் வேண்டும் என்பது ஆரிஃப் நாயகத்தின் கருத்து .
அதே சமயம் தன்னிடம் வந்தது இனிய சங்கீதத்தை எழுப்பக் கூடிய மெல்லிய நரம்புத்தந்தி தானா அல்லது மரக்கட்டையா என்று தெரிந்து கொள்ளவும் இந்த முறை பயன்பட்டது .

ஹிஜ்ரி 555ல் தமது 48வது வயதில் கருத்த கம்பளி ஒன்றைப் போர்த்திக் கொண்டு தன்னந்தனியாக திருமதினா மாநகர் நோக்கிப் புறப்பட்டார்கள்.
மதீனா நகரின் தலைவாயிலை மிதித்ததுமே "யாரஸூலல்லாஹ், யாரஸூலல்லாஹ் " என்று பிதற்றிக் கொண்டே ரவ்லா ஷரீபுக்குள் நுழைந்தார்கள். தலை குனிந்தவாறு வெகுநேரம் மௌனமாய் நின்றிருந்தார்கள்.
அங்கே எதிர்பாராமல் ஏராளமான வலிமார்கள் அங்கே குழுமியிருந்தார்கள். கௌதுல் அஃலம் முஹ்யித்தீன், ஷெய்கு இத்தீ இப்னு மூசாஃபிக், ஷெய்கு அப்துர் ரஜ்ஜாக் ஹுசைனி ரலியல்லாஹு அன்ஹும் ஆகியோர் உட்பட அங்கே 9900வலிமார்கள் இருந்தனர் என நூருல் அஹ்மதிய்யா என்ற நூலில் திட்டமாகக் கூறியிருப்பதாக ருமூஜுல் ஃபுகாரா என்ற உர்து நூலில் காணப்படுகிறது.
காதலனின் ஒருமித்த மனத்துடன் புறச் செயலை மனம் அறியாத பித்தனின் ஆசை வெறியுடன் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் ரவ்லாவையே பார்த்தவாறு நின்றிருந்த ஆண்டகை உரத்தக் குரலில்,
'அஸ்ஸலாமு அலைக்கும் யாஜத்தீ –எனது பாட்டனாரே!' என்றதும் 'வ அலைக்குமுஸ்ஸலாம் யா வலதீ- எனது பேரனாரே' எனப் பெருமானாரின் ரவ்லாஷரீஃபின் உள்ளிருந்து பதில் வந்ததை அனைவரும் கேட்டனர்.
அதன்பின் உணர்ச்சி வசப்பட்ட ஆண்டகையின் தூய கோரிக்கைகள் கவிதைத் துளிகளாய் வடிய ஆரம்பித்தன.
'நான் தூரத்தே இருக்கும்போது
தங்கள் கபுரை முத்தமிடுவதற்காக
எனது உயிரை அனுப்பிக் கொண்டிருந்தேன்
அந்த உயிர் உடலோடு இப்போது
தங்கள் சமூகம் வந்திருக்கிறது.
தங்கள் வலது கரத்தை நீட்டுங்கள்,
என் உதடுகள் அதனை முத்தமிட்டுக் கொள்ளட்டும்'
இந்தக் கவிதை அமுதின் கடைசிச் சொல் அவர்களது நாவினின்று கழன்று விழுந்ததும் மின்னல் ஒன்று பளீரிட்டு நிலைத்தாற் போன்ற உணர்ச்சி பெருமானாரின் கபுர்
ஷரீஃபினின்று அவர்களது புனிதக் கரம் வெளிப்பட்டதைக் கண்ட ஆண்டகை யாரஸூலல்லாஹ்! எனக் கத்திக் கொண்டே ஓடினார்கள்.
வானமும் வையமும் அடைந்திராத அந்தப் பாக்கியத்தை நினைத்துப் பூரித்துக் கொண்டே நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் திருக்கரத்தை ஆசைதீர முத்தமிட்டுக் கண்ணீர் சொரிந்தார்கள்.

## கராமத் 19

(விதிப் பலகையைப் பார்ப்பவர் அவ்லியா அல்ல; விதியை மாற்றி எழுதுபவரே அவ்லியா)
பிரபல்ய வியாபாரியும், செல்வந்தருமான ஸ்பெயின் வாசி ஒருவருக்கு எல்லாவிதமான ஐசுவரியச் சம்பத்துக்கள் இருந்தும் , ஒரே ஒரு பெருங்குறை அதுதான் புத்திரர் சம்பத் இல்லாத குறை.

தான் கேள்வியுற்றிருந்த பெரியவர்கள் யாவரிடத்திலும் தேடிச் சென்று, தனது மனக்குறையை அவர் தெரிவித்தார். யாவரும் அவருக்கு " விதியிலேயே பிள்ளை பாக்கியம் பெறுவதற்கு எழுதப்படவில்லை " என்ற பதிலையே கூறினர். அவரும் மிகவும் மன கவலையோடு இருந்து வந்தார்.
கடைசியாக ஹஜரத் கௌதுல் அஃளம் அப்துல் காதிர் ஜீலானி (ரலி) அவர்களது கீர்த்திப் பிரஸ்தாபத்தைக் கேள்வியுற்று, பாக்தாத் நகருக்கு சென்று, தனது நிலைப்பாட்டை அவர்களிடம் கூறினார்.
கௌதுல் அஃலம் அவர்கள், " லவ்ஹை நோக்கினேன் அதில் உமக்கு பிள்ளைகுட்டி பாக்கியம் இல்லை என்றே தெரிய வருகிறது " என்று சொன்னார்கள்.
உடனே அம்மனிதர் கலங்கி பரிதவித்து , "நாயகமே இந்த துர்பாக்கியவனக்கு பிள்ளை இல்லை என்று எல்லோருமே கூறிவிட்டார்கள். இரப்போர்க்கு இல்லை என்று சொல்லாமல் கேட்டதை ஈந்து வழங்கும் வள்ளலாகிய தங்கள் வாயிலைத் தேடி வந்துள்ளேன். இந்த பாவியின் கோரிக்கை தயவுகூர்ந்து, பூர்த்தியாக்கி கிருபை செய்தருள வேண்டுகிறேன் "
அவரது மனோ நிலையை அறிந்து மனமிறங்கி, கௌதுல் அஃளம் ( ரலி) அவர்கள், " அலியே..! என்னில் நின்றும் உமக்கு ஒரு பிள்ளையை தருகிறேன். உமது முதுகை எனது முதுகுடன் சேரும்.எனது முதுகுத்தண்டில் இருப்பது ஓர் ஆண் குழந்தை. அது உமது இல்லத்தில் பிறக்கும் . எமது எல்லாவித இல்முகளுக்கும் அந்த பிள்ளையே வாரிசாவார். அவர் எமது நாவாகவே பேசுவார். எவரும் வெளிப்படுத்தாத அகமிய ரகசியங்களை எல்லாம் அவர் பகிரங்கப் படுத்துவார். புகழோடும், கீர்த்தியோடும் விளங்குவார். அவருடைய பெயர் முஹம்மது .ஆனால் "முகையதீன் " என்ற காரணப் பெயருடன் விளங்குவார் " என்று ஆசி கூறி அனுப்பினார்கள்.
அவரும் சந்தோஷத்துடன் வீடு திரும்பினார் .அன்று அவர் மனைவி கர்ப்பவதியாகி அப்பால் ஜனனமானார்கள்தான் ஹஜ்ரத் ஷைகுல் அக்பர், ஸையிதுனா முஹம்மது ,
முஹிய்யத்தீன் இப்னு - அரபி (ரலி) அவர்களாவர்கள்.
இவ் வரலாறு, 'மனாகிப் கௌதிய்யா '76-வது பக்கத்திலும் , 'கலாயிதுல்_ ஜவாஹிர் 'கிரந்தத்திலும் காணலாம்.
விதிப் பலகையைப் பார்ப்பவர் அவ்லியா அல்ல; விதியை மாற்றி எழுதுபவரே அவ்லியா

## கராமத் 20

(அறுத்து கொன்று உயிர்பித்தல்)
வலிமார்கள் மூலம் செய்யப்படும் அற்புதங்களை கராமத் என்றும் , நபிமார்கள் மூலம் செய்யப்படும் அற்புதங்களை முஃஜிஸாத் என்றும் அழைக்கப்படுகிறது. இந்த இரண்டு அற்புதங்களையும் இறைவன் புறத்தாலே செய்யப்படுகிறது.
وَاِذْ قَالَ اِبْرٰهٖمُ رَبِّ اَرِنِىْ كَيْفَ تُحْىِ الْمَوْتٰى قَالَ اَوَلَمْ تُؤْمِنْ قَالَ بَلٰى وَلٰـكِنْ لِّيَطْمَٮِٕنَّ قَلْبِىْ قَالَ فَخُذْ اَرْبَعَةً مِّنَ الطَّيْرِ فَصُرْهُنَّ اِلَيْكَ ثُمَّ اجْعَلْ عَلٰى كُلِّ جَبَلٍ مِّنْهُنَّ جُزْءًا ثُمَّ ادْعُهُنَّ يَاْتِيْنَكَ سَعْيًا  وَاعْلَمْ اَنَّ اللّٰهَ عَزِيْزٌ حَكِيْمٌ
அன்றி, இப்ராஹீம் (இறைவனை நோக்கி) "என் இறைவனே! இறந்தவர்களை நீ எவ்வாறு உயிர்ப்பிக்கின்றாய். (அதை) நீ எனக்குக் காண்பி" எனக் கூறியபோது, அவன் (இதை) "நீங்கள் நம்பவில்லையா?" என்று கேட்டான்.
(அதற்கு) அவர் "நான் நம்பியே இருக்கின்றேன். ஆயினும், (அதனை என் கண்ணால் கண்டு) என்னுடைய உள்ளம் திருப்தியடைவதற்காக (அதனைக் காண்பி)" எனக் கூறினார்.
(அதற்கவன்) "நான்கு பறவைகளைப் பிடித்து நீங்கள் அவைகளைப் பழக்கி, பின்னர் (அவைகளைத் துண்டு துண்டாக அறுத்து) அவற்றில் ஒவ்வொரு பாகத்தை ஒவ்வொரு மலையின் மீதும் வைத்துவிட்டு (நடுவில் இருந்துகொண்டு) அவைகளை நீங்கள் கூப்பிடுங்கள். அவை உங்களிடம் பறந்துவந்து சேரும் (எனக் கூறி, அவ்வாறு செய்து காண்பித்து)
"நிச்சயமாக அல்லாஹ் மிகைத்தவனும், மிக்க நுண்ணறிவுடையவனுமாக இருக்கின்றான் என்பதையும் நீங்கள் உறுதியாக அறிந்து கொள்ளுங்கள்" என்றான்.
(அல்குர்ஆன்: 2:260)

அடுத்து ,
فَقُلْنَا اضْرِبُوْهُ بِبَعْضِهَا  كَذٰلِكَ يُحْىِ اللّٰهُ الْمَوْتٰى ۙ وَيُرِيْكُمْ اٰيٰتِهٖ لَعَلَّكُمْ تَعْقِلُوْنَ
“(அறுக்கப்பட்ட அப்பசுவின்) ஒரு துண்டால் அ(க்கொலையுண்டவனின் சடலத்)தில் அடியுங்கள்” என்று நாம் (மூஸாவுக்கு ) சொன்னோம்.
இவ்வாறே அல்லாஹ் இறந்தவர்களை உயிர்ப்பிக்கிறான்; நீங்கள் (நல்ல) அறிவு பெறும் பொருட்டுத் தன் அத்தாட்சிகளையும் அவன் (இவ்வாறு) உங்களுக்குக் காட்டுகிறான் (அல்குர்ஆன் : 2:73)
மேற்கண்ட இரு நிகழ்வுகளில் நபிமார்கள் கேட்டதற்கிணங்க இறைவன் அறுத்து கொன்று உயிர்பித்துக் காண்பித்தான். ஆனால் நபி (ஸல்) அவர்கள் ஒரு நிகழ்வில் .....
................. X ............................................ X ..............................
அண்ணலெம் பெருமானார் (ஸல்) அவர்களுக்கு விருந்தளிக்க ஜாபிர் (ரலி) அவர்கள் தனது வீட்டில் ஓர் ஆட்டுக்குட்டியை அறுத்து சமையலுக்கு ஏற்பாடு செய்தார்கள்.
ஆட்டுக்குட்டியை தந்தை அறுப்பதை பார்த்துக்கொண்டிருந்த அவர்களது மூத்த புதல்வன் தன்னுடைய தம்பியை பிடித்து அவ்வாறே அறுத்து விட்டான்.
இதைக்கண்ட அவனுடைய தாய் விரட்டி பிடிக்க ஓடவே, மூத்த மகனாகிய அவன் மாடியில் ஏறி கால் தவறி கீழே விழுந்து அவனும் இருந்தான்.

அண்ணலெம் பெருமானார் (ஸல்) அவர்கள் விருந்துண்ண வந்த சந்தர்ப்பத்தில், மூத்த மகனுடையவும், இளைய மகனுடையவும் மரணச் செய்திகளை அறிந்து துஆ செய்தார்கள். இறைவன் அருளால் அவ்விருவரும் உயிர் பெற்று எழுந்தார்கள்.
இவ்வரலாறு ஷவாஹிதுன் னுபுவ்வத்தில் வருவதாக அன்வாரே - ஆப்த்தாபே - ஸதாகத் , 2-வது பாகம், 207 வது பக்கத்தில் கூறப்படுகின்றது .
மேலும் இஹ்யாஉல்குலூப் -பீ - மவுலிதில் மஹ்பூப் 94 - வது பக்கத்திலும் சொல்லப்பட்டுள்ளது

## கராமத் 21

(பிதாவின்றி பிள்ளையை வெளிப்படுத்தல்)

தகப்பன் இன்றி ஹஜ்ரத் ஈஸா (அலை) அவர்கள் பிறந்த வரலாறு குர்ஆனில் கூறப்படுகின்றது.
قَالَتْ اَنّٰى يَكُوْنُ لِىْ غُلٰمٌ وَّلَمْ يَمْسَسْنِىْ بَشَرٌ وَّلَمْ اَكُ بَغِيًّا
அதற்கு அவர் (மர்யம்), “எந்த ஆடவனும் என்னைத் தீண்டாமலும், நான் நடத்தை பிசகியவளாக இல்லாதிருக்கும் நிலையிலும் எனக்கு எவ்வாறு புதல்வன் உண்டாக முடியும்?” என்று கூறினார்.
قَالَ كَذٰلِكِ قَالَ رَبُّكِ هُوَ عَلَىَّ هَيِّنٌ وَلِنَجْعَلَهٗۤ اٰيَةً لِّلنَّاسِ وَرَحْمَةً مِّنَّا وَكَانَ اَمْرًا مَّقْضِيًّا
“அவ்வாறேயாகும்; “இது எனக்கு மிகவும் சுலபமானதே; மனிதர்களுக்கு ஓர் அத்தாட்சியாகவும், நம்மிடமிருந்து ஒரு ரஹ்மத்தாகவும் நாம் அவரை ஆக்குவோம்; இது விதிக்கப்பட்ட விஷயமாகும்” என்று உம் இறைவன் கூறுகிறான்” எனக் கூறினார்.
فَحَمَلَـتْهُ فَانْتَبَذَتْ بِهٖ مَكَانًا قَصِيًّا
அப்பால், மர்யம் ஈஸாவை கருக்கொண்டார்; பின்னர் கர்ப்பத்துடன் தொலைவிலுள்ள ஓரிடத்தை சென்றடைந்தார்.
(அல்குர்ஆன் : 19:20-22)
ஹஜ்ரத் ஷாஹ் ஹஸன் அலீ அஜீமாபாதீ (ரலி) அவர்கள் மிகவும் வலுப்பமான வலியுல்லாவாகவும், பிர்தவுஸிய்யாத் தரீக்காவின் ஷைகாகவும் இருந்தார்கள்.
அவர்களது முரீதுகளில் ஒருவருக்கு வெகுகாலமாக குழந்தை இல்லை. அவரது மனைவி மலடியாக இருந்தாள். அவர் இந்தக் குறையை ஷைகு அவர்களிடம் முறையிட்டார்.
ஷைகு அவர்கள் அவரது மனைவியை தனி அறையில் கல்வத் இருக்கச் செய்து கன்னிப்பெண் யாவரும் அப்பக்கத்தில் போகக்கூடாது என்றும் தடை விதித்திருந்தார்கள்.
கல்வத்தில் இருந்த அப்பெண்மணியை வெளியிலிருந்து கொண்டு ஷைகு அவர்கள் கூர்ந்து நோக்கிக் கொண்டிருந்தார்கள்.

தற்செயலாய் ஒன்பது வயதுள்ள ஒரு சிறுமி, கதவு துவாரத்தின் வழியாக பார்த்தாள் . ஷைகு அவர்களின் கூர்மையான நோக்கு அந்த சிறுமி மீதும் விழுந்தது. மலடியான இந்தப் பெண்ணும் கர்ப்பவதியானாள். அந்த சிறுமியும் கர்ப்பவதியானாள்
அற்புத வரலாறு, "மிர்ஆத்துல் கவனைன் "என்ற நூலில் 443 - வது பக்கத்தில் சொல்லப்படுகின்றது.
ஆகவே எக்காலமும் அவ்லியாக்களுக்கு கராமத்து செய்ய சக்தி உண்டு . மவுத்தானவர்களை ஹயாத்தாக்கவும் தத்துவம் உண்டு . பிதாவின்றி பிள்ளையே வெளிப்படுத்தவும் வல்லமை உண்டு. அவுலாது பிள்ளைக்குட்டி பாக்கியம் வேண்டும் என்று அவர்களிடம் கேட்பது ஆகும் .
இவை எல்லாம் குர்ஆன், ஹதீது, மற்றும் பெரியவர்களின் சரித்திரங்களை கொண்டு ஸ்திரமாகின்றன. இவற்றை மறுப்பவன் சத்தியத்தை மறுப்பவன் ஆவான்.
"கராமத்தைக் கொண்டு தகப்பன் இன்றி பிள்ளையை வெளிப்படுத்த அவுலியாக்களுக்கு சக்தி உண்டா ? " என்று ஆரிபுபில்லாஹ் ஷைகு முஹம்மது கலீல், ஷாபியீ (ரலி) அவர்களிடம் வினவப்பட்டது
"அங்ஙனம் செய்ய அவர்களுக்கு சக்தி உண்டு" என்று விடை பகர்ந்தார்கள். இது விவரம், பதாவா கலீலீ 1 -வது பாகம் 79 - வது பக்கத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

ஆதார நூல் : ஹிதாயதுல் அனாம் இலாஜியாரதில் அவுலியாஇல் கிராம் .

## கராமத் 22

( 'கராமத் ' தொடர் பதிவுகள் ஏற்படுத்தும் சலனங்கள் )

கராமத் தொடர் பதிவுகள் சில மாற்றுக் கொள்கையுடைய பகுத்தறிவு நண்பர்களுக்கு மிகவும் கடுப்பை ஏற்படுத்தி இருக்கிறது.
" அறிவியல் ரீதியாக குர்ஆனையும், விஞ்ஞானத்தையும் இணைத்து அழகாக சொன்னீர்கள். இப்போது பதிவிடும் பதிவுகள் பகுத்தறிவுடைய எவரும் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள் " என்று முகநூல் சார்பாக கேட்டுக் கொண்டார்.

சரி, நீங்க சொல்ற அறிவியலின் நவீன கோட்பாடுகளும் உங்கள் பகுத்தறிவை பதம் பார்க்கக் கூடியதையும் நானே ஆரம்ப நாட்களில் சொல்லியிருந்தேனே !...அப்போது இதே நவீனத்துவ கொள்கைக்காரர்களாகிய நீங்கள் பகுத்தறிவு பற்றி எதுவும் பேசவில்லை. 'ஆஹா அற்புதம் ' என்று கூட பின்னூட்டமிட்டீர்களே!
இப்போது இதே அறிவியலுக்கும் கராமத்துகள் உண்டு. அந்த கராமத்துகளைப் பற்றியும் சொல்றேன். உங்கள் பகுத்தறிவை பதமாக பத்திரப்படுத்தி பார்த்துச் சொல்லுங்கள்.
எட்வார்ட் லோரன்ஸ்' (Edward Lorenz) என்பவர் 1963 -ல் அறிவித்த சித்தாந்தம் ஒன்றை சொன்னார் அதற்கு கேயாஸ் தியரி என்று பெயர் . லோரன்ஸின் ஆதார மேற்கோள் ஒன்று அறிவாளிகளை மிகவும் சிந்திக்க வைத்து , இது ஒரு தனி இயலாக வளரும் அளவுக்கு ' கேயாஸ் தியரி ' முக்கியம் அடைந்துள்ளது .

கேயாஸ் தியரி என்பது ஒரு மிகச்சிறிய நிகழ்வு, காரணம்-விளைவு (cause - effect) சுழற்சியில் சிக்கி, காலப்போக்கில் மிகப் பெரிய மாற்றத்தை உண்டாக்கும் சாத்தியக்கூறு உண்டு. இதை இப்படியும் விளக்குவார்கள் .
அவர் கேட்ட கேள்வி " பிரேசில் வண்ணத்துப் பூச்சியின் சிறகடிப்பில் அமெரிக்காவின் டெக்ஸாஸில் புழுதிப் புயலை ஏற்படுத்துமா ? "
உங்களது பதில் என்ன ? ஏற்படுத்தாது என்கிறீர்களா ? ஏற்படுத்தும்.
ஒரு வண்ணத்துப்பூச்சியின் சிறகடிப்பு என்பது எப்போவோ பறந்து, சிறகடித்தது. அந்த சிறகடிப்பினால் காற்றில் அசைவு ஏற்படுத்தப்பட்டது . அதற்கு இப்போ என்ன ?
அந்த ஒரு சிறு காற்றழுத்தம் இடம் மாறி இடம் மாறி எங்கோ கடலிலே உருவாகிய காற்றுக்கு அழுத்தம் கொடுத்தது, இந்தக் காற்றின் அழுத்தம் பல்லாயிரக்கணக்கான மைல்களுக்கு அப்பால் ஒரு புயலாக மாறுவதுதான் இந்த கேயாஸ் தியரி அல்லது வண்ணத்து பூச்சி விளைவு ! நம்புங்கள். நான் சொல்றது அதி நவீன விஞ்ஞானம்.
இந்த மாற்றத்திற்கான ஆரம்ப விதை மிக சிறிதாக என்றோ எங்கேயோ போடப்பட்டது ! இதை ஆன்மிகவாதிகள் "விதி " என்கிறார்கள். அறிவியலாளர்கள் அதற்கு "கேயாஸ் தியரி" என்று பெயர் இட்டுள்ளார்கள். அவ்வளவுதான் !
எனவேதான் சொல்கிறேன். "பிரேசிலில் ஒரு வண்ணத்துப்பூச்சியின் சிறகடிப்பில் அமெரிக்க டெக்ஸாஸில் புழுதிப் புயலை ஏற்படுத்தலாம் என்று !"
இதையே நபிமொழி வாயிலாக சொல்றேன்.
நபித் தோழரின் மரணத்தின் சிறுஅதிர்வு இறை பெரியோனின் மிகப் பெரிய அர்ஷின் அரியணையை அசைத்ததாக நபிமொழி ஒன்று கூறுகிறது
ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
" சஅத் பின் முஆத் (ரலி) அவர்களின் பிரேதம் (ஜனாஸா) மக்கள் முன்னிலையில் வைக்கப்பட்டிருந்தபோது,
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "சஅத் பின் முஆத் அவர்களின் இறப்புக்காக அளவற்ற அருளாள(னான இறைவ)னின் அரியணை (அர்ஷ்) அசைந்தது" சொன்னார்கள்.
ஸஹீஹ் முஸ்லிம் : 4869.

அதே மாதிரி '' ஒரு பெண்ணுக்கு கட்டப்பட்ட தாலி அறுபடும்போது , அல்லாஹ்வின் அர்ஷ் குலுங்குகிறது '' என்பதை உங்கள் ஊரில் சொல்லக் கேட்டிருக்கிறீர்களா ? கேட்டுப் பாருங்கள்.
மிகப்பெரிய இறைவனின் மாபெரும் அர்ஷ், ஒரு முழம் தாலி சரடு அறுபடும்போது குலுங்குகிறது, என்றால் நீங்கள் நம்ப வேண்டும் .இப்போது உங்கள் பகுத்தறிவுக்கு சேதாரம் இல்லையோ ?
கேயாஸ் தியரி என்பது ஒரு மிகச்சிறிய நிகழ்வு, காரணம்-விளைவு (cause effect) சுழற்சியில் சிக்கி, மிகப் பெரிய மாற்றத்தை உண்டாக்கும் சாத்தியக்கூறு உண்டு.
சரி, நவீன விஞ்ஞானத்தின் இன்னொரு கோட்பாடு என்ன சொல்கிறது பாருங்கள் .
பிரபஞ்சத்தின் அத்தனை அங்கங்களும் ஒன்றுடன் ஒன்று இணைந்தவை. அதாவது ' ஒரு புல்லை வெட்டும் போது இந்த பிரபஞ்சத்தையே அசைக்கிறோம்' - இது குவாண்டம் இயற்பியலின்படி நிஜம்.
ஒரு மரத்தின் நான்கு கிளைகளை வெட்டினால் அந்த இடத்தில் நான்கு செ.மீ மழை குறைவாக பெய்கிறது. காரணம் அந்த இடத்தில் செய்யப்பட்ட செயல் கர்ம வினை மரத்தின் கிளையை வெட்டியதற்காக மழை குறைகிறது !
அடுத்து . . . ஒரு பொருளைப் பற்றி சிந்திக்கும் அந்தச் செயலே அந்தப் பொருளையும்,உங்கள்களையும் மாற்றி விடுகிறது என்பதாக குவாண்டம் இயற்பியல் ஆதாரத்துடன் மிகத் தெளிவாக நிரூபிக்கிறது !
ஆனால் ....
' அஜ்மீர் காஜா நாயகம் அன்னாசாகர் ஏரியின் தண்ணீர் முழுவதையும் ஒரே ஒரு கூஜாவில் அடைத்து வைத்துக் கொண்டார்கள் ' என்றதும், பகுத்தறிவுடைய எவரும் ஏற்றுக்கொள்ள மாட்டார்கள் என்று உங்கள் பகுத்தறிவு சொல்லச் சொல்கிறது!
' இனி உங்களிடம் என்ன சொல்ல இருக்கிறது? '

## கராமத் 23

(இறைநேசர்களின் இறுதிப் பொழுதுகள்)

எல்லாப் புகழும் இறைவனுக்கே. அவ்லியா, அப்தால், குத்பு, கௌது என்றெல்லாம் புகழப்படும் இறைநேசர்களின் படித்தரங்களில் வித்தியாசம் இருந்தாலும் அவர்கள் அனைவருக்கும் பொதுவான குணாம்சங்கள் பல உள்ளன. அவற்றைத் தெரிந்துகொள்வது நமக்கு நிச்சயம் நன்மை பயக்கும். அந்த குணங்களை நபிமார்களிடமும் நாம் பார்க்க முடியும். அவ்லியாவெல்லாம் அன்பியாவின் வாரிசுகள்தானே?!
அதற்குமுன், இறைவனைத் தவிர வேறு எதையும், எவரையும் நேசிக்காத இறைநேசர்களும் நம்மைப் போன்ற மனிதர்கள்தான் என்ற நினைப்பிலிருந்து நாம் முதலில் வெளியே வரவேண்டும். அது அறியாதவர்களின் பேச்சு. தன் அறிவு மட்டுமே வழிகாட்டி என்று நினைக்கும் அகந்தையின் பேச்சு. இறைநேசர்களும் நம்மைப் போன்றவர்கள்தான் என்று கூறுபவர்கள் அறியாமையில் இருப்பவர்கள்.
மனிதர் செய்வதையெல்லாம் செய்து பார்க்கும் குரங்கு
குறைமனிதரெல்லாம் இறைநேசராக முடியாது விளங்கு
கொஞ்ச நேரம் அவ்லியாவோடு இருங்கள் நூறாண்டுகளின் தூய தொழுகையைவிட அதிக நன்மையைப் பெறுங்கள் என்றும் சூசகமாக மௌலானா ரூமி இறைநேசர்களின் மகிமையைப் பற்றிப் பேசுகிறார்கள்.
இறைநேசர்களும் உண்கிறார்கள், உடுக்கிறார்கள், தொழுகிறார்கள், நோன்பிருக்கிறார்கள், ஹஜ்ஜு செய்கிறார்கள், நாமும் அதைத்தானே செய்கிறோம் என்று சிலர் கேட்கிறார்கள். ஆனால் அவர்களது மனநிலைக்கும் நம் மனநிலைக்கும், அவர்களது இபாதத்துக்கும் நமது இபாதத்துக்கும் இடையில் மலைக்கும் மடுவுக்குமான வித்தியாசம் உள்ளதை நாம் புரிந்துகொள்ளவேண்டும்.

எல்லா இறைநேசருர்களுக்கும் தான் எப்போது இந்த மண்ணுலகை விட்டும், உடலை விட்டும் நேரடி இறை நெருக்கத்துக்கு செல்லப்போகிறோம் என்று தெரிந்திருந்தது. அது சில மணி நேரங்களுக்கு முன்னதாக இருக்கலாம். சில மாதங்கள், சில ஆண்டுகளுக்கு முன்னதாகவும் இருக்கலாம்.

முஆத் இப்னு ஜபல் (ரலி) என்னும் நபித்தோழரை யெமன் தேசத்துக்கு அளுநராக அனுப்பும்போது பெருமானார் (ஸல்) சில உபதேசங்களை அவருக்குச் செய்தார்கள். செய்துவிட்டு, நான் சொன்னபடியே செய்யுங்கள், ஏனெனில் அடுத்த ஆண்டு நீங்கள் இங்கே வரும்போது நான் இருக்க மாட்டேன் என்று கூறினார்கள்! ஒரு ஆண்டுக்கு முன்பே பெருமானார் (ஸல்) அவர்களுக்கு தனது மறைவு பற்றித் தெரிந்திருந்தது.

97 ஆண்டுகள் வாழ்ந்த க்வாஜா முயீனுத்தீன் சிஷ்தி அவர்கள் தான் இறக்கப்போவதை முன்னறிந்து, தன் பிரதிநிதியாக தனக்குப் பிறகு குத்புத்தீன் பக்தியார் அவர்களே இருக்க வேண்டும் என்று சொல்லி, அவரை அஜ்மீருக்கு வரும்படி கடிதம் எழுதினார்கள். அவர் வந்தபிறகு, 'நான் சில நாட்களில் இந்த இடத்தில் அடக்கமாவேன்' என்று கூறினார்கள். அதேபோல, ரஜப் பிறை 06 அன்று மறைந்தார்கள்.
திருமுல்லை வாசலில் அடங்கியுள்ள வலியுல்லாஹ் யாசீன் மௌலானா அவர்கள் மௌத் ஆன பிறகு யார் யாருக்கெல்லாம் சொல்லியனுப்புவது என்று பார்க்க, அவர்களது உற்ற உறவினர், நண்பர்கள் யாரும் விடுபட்டுப் போய்விடக்கூடாது என்பதற்காக அவர்களது டயரியைப் புரட்ட, அதில் அன்றைய தேதியில் 'இன்று மாலை 5.30 மணிக்கு' என்று அவர்கள் கையால் எழுதப்பட்டிருந்தது. அன்று மாலை அந்த நேரத்தில்தான் அவர்கள் வஃபாத் ஆனார்கள்!

தான் இறப்பதற்கு நான்கு நாட்களுக்கு முன்பு பல்லாக்கு வலியுல்லாஹ், 'இன்னா லில்லாஹி, பல்லாக்குத் தம்பி மறையவல்லவா போகிறார்' என்று கூறிக் கொண்டிருந்தார்கள். அதேபோல நான்கு நாட்களுக்குப் பிறகு, ஹிஜ்ரி 1360 / 1939ல் ரபியுல் ஆகிர் பிறை 25ல் தமது 92ம் வயதில் மறைந்தார்கள்.
நான்கு ஆண்டுகள் 'கல்வத்'தில் இருந்த குணங்குடி மஸ்தான் சாஹிப் அவர்கள் கனவில் தன் நண்பர் புலவர் நாயகத்துக்குத் தோன்றி, அந்த ரமளான் மாதத்தோடு தான் மறைந்துவிடப்போவதாகவும், காவாந்தோப்பில் தன் உடல் இருப்பதாகவும், அதை எடுத்து வந்து இப்போது தண்டையார் பேட்டையில் அடங்கியிருக்கும் இடத்தில் அடக்கம் செய்யுமாறும் சொல்லி மறைந்தார்கள். அதன் படியே சென்று பார்த்தபோது நறுமணம் வீசும் அவர்களது உடல் கஃபனிடப்பட்டு காவாந்தோப்பில் இருந்தது
'120 வயது நி
றைவடையும் ஒரு நாளில், ஹிஜ்ரி 1244, ஷஃபான் பிறை 19-ல்...செவ்வாய் பகல் பொழுதில் இவ்வுலகை விட்டு மறைந்து இறையுலகு செல்லப் போகிறோம்' என்று காரைக்கால் மஸ்தான் சாஹிப் தனது இறப்பு பற்றி தன் ஊழியராக இருந்த படேசா பீவியிடம் சொன்னார்கள்
திருச்சி நத்ஹர் வலீ அவர்கள் ஹிஜ்ரி 417ம் ஆண்டு ஒரு ரமாளான் பிறை ஒன்பதாம் இரவு தராவீஹ் தொழுத பிறகு தன் சீடர்களை அழைத்து, 'நான் புறப்பட வேண்டிய நேரம் நெருங்கிவிட்டது, ரமளான் பிறை 14 வெள்ளிக்கிழமை நான் இவ்வுலகை விட்டுப் போய்விடுவேன்' என்று முன்னறிவிப்பு செய்து, அதேபோல இஷாத்தொழுகைக்காக தொழுகை விரிப்பில் ஸுஜூதில் இருந்தபோது மறைந்தார்கள்.
ஸஹ்ல் இப்னு அப்துல்லாஹ் அல் துஸ்தரீ அவர்கள், 'இன்னும் சில கணங்களில் நான் இறந்துவிடப் போகிறேன்' என்று தன் சீடரான ஷாத்தில் என்பவரிடம் சொல்லிவிட்ட அடுத்த கணமே உயிர் துறந்தார்கள்.

என் எண்பதாவது வயதில் இறப்பு அண்மிவிட்டதை உணர்ந்துகொண்ட ஜுனைதுல் பக்தாதி தன் மாணவர்களை சமைக்கச் சொன்னார். பின் கஷ்டப்பட்டு வளூ செய்துவிட்டு, தொழுதுவிட்டு, சஜ்தாவில் அழுதுவிட்டு, திருமறையை ஓதி முடித்தார்.

நோயுற்ற இந்த நிலையில் இப்போது ஏன் ஓதுகிறீர்கள் என்று கேட்டபோது, 'என் வாழ்வுச் சுருள் சுருட்டப்படும் நிலையில் இருப்பதைப் பார்த்தபின், நான் இப்போது ஓதாமல் எப்போது ஓதுவது' என்று சொல்லி மீண்டும் திருமறையை ஓத ஆரம்பித்தார். சூரா பகராவின் 70-வது வசனத்தை ஓதிக்கொண்டிருந்தபோது அவரது உயிர் பிரிந்தது.

ஒரு கட்டத்தில் மயங்கி விழுந்த அபுல் ஹுசைன் நூரியை நண்பர்கள் வீட்டுக்கு எடுத்து வந்து லாயிலாஹ இல்லல்லாஹ் என்ற கலிமாவை சொல்லச் சொன்னபோது, 'நான் ஏன் சொல்லவேண்டும்? அவனிடம்தானே போய்க் கொண்டிருக்கிறேன்' என்றார்கள். அத்துடன் அவர்கள் உயிர் பிரிந்தது.
எண்பத்தேழு வயது வரை வாழ்ந்த அபூ பக்ர் ஷிப்லி அவர்கள் நோயுற்றபோது, ஒரு வெள்ளியன்று தன் சீடர் ஒருவரோடு பள்ளிவாசலுக்குச் சென்றார்கள். வழியில் எதிர்ப்பட்ட ஒருவரைப் பார்த்து, 'நாளைக்கு இவரின் உதவி எனக்குத் தேவைப்படும்' என்று கூறினார்கள். மறுநாள் அவர்கள் உயிர் பிரிந்தது.
கஃபனிடுவதற்கான ஆளை அழைத்துவர ஆள் அனுப்பியபோது, கதவைத்திறந்ததும் அவர், 'ஷிப்லி இறந்துவிட்டார்களா?' என்று கேட்டார்.
உங்களுக்கு எப்படித்தெரியுமென்று கேட்டபோது, 'சற்று முன் கனவில் அவரைக் கண்டேன். நான் இறந்துவிட்டேன். எனக்கு வந்து குளிப்பாட்டி, கஃபனிட்டு நல்லடக்கம் செய்யவும்.அது நீர் எனக்குக் கடன் பட்ட தொகைக்கு பிரதியாக இருக்கும்' என்று கூறினார்கள் என்றார்!
அந்த நபர் வேறு யாருமல்ல. முதல் நாள் பள்ளிவாசலுக்குச் சென்றபோது ஷிப்லியின் எதிரில் வந்தவர்தான் அவர்!

120 வயதுவரை வாழ்ந்த ஞானி கைருன் நஸ்ஸாஜ் ஒரு நாள் அஸர் தொழ வளூ செய்தபோது உயிரை வாங்கும் வானவரின் நிழல் அவர் மீது பட்டது. உடனே அவர் வானவரிடம் தொழுது முடித்தபின் உயிரை எடுக்குமாறு கேட்டுக்கொண்டு தொழுதார். அதேபோல தொழுது ஸலாம் கொடுத்தபின் அவரது உயிர் வாங்கப்பட்டது.

ஆரிஃப் நாயகத்துக்கு இருபது நாட்களுக்கும் மேலாக வயிற்றுப் போக்கு ஏற்பட்டிருந்தது. என்னுடைய கொழுப்பும் தசைகளும் கரைந்து வெளியாகிக் கொண்டுள்ளன. நாளை என் மூளை உருகி வெளிவரும். அத்துடன் என் உயிரும் உடலை விட்டு வெளியேறி இறை சன்னிதானத்தை அடைந்துவிடும் என்று கூறினார்கள். அதேபோல அவர்கள் மறுநாள் பிற்பகல் வியாழன் அன்று ஜமாதுல் அவ்வல் பிறை 22ல் வஃபாத் ஆனார்கள்.

ஞானி ஜிந்தாஷாஹ் மதார் அவர்கள் 390 ஆண்டுகள் வாழ்ந்தார்கள். ஒரு ஜமாதுல் அவ்வல் முதல் நாளன்று தன் சீடர்களை அழைத்து, 'நான் அல்லாஹ்வை அடையும் நாள் நெருங்கிவிட்டது' என்று கூறினார்கள். சொன்னதுபோலவே அதே ஜமாதுல் அவ்வல் மாதம் பிறை 17அன்று தியானத்திலும் வணக்கத்திலும் அவர்கள் ஈடுபட்டிருந்தபோது அவர்களது உயிர் பிரிந்தது.
மௌலானா ரூமியின் அந்திமக்காலம் நெருங்கியது. அப்போது அவர், 'மக்கள் என்னை இவ்வுலகில் இருக்கவேண்டும் என்று விரும்பினாலும், ஷம்ஸ் தப்ரேஸ் (அவருடைய ஞானாசிரியர்) என்னை அழைத்துக்கொண்டிருக்கிறார்' என்றார்.
அவர் இறப்பதற்கு நாற்பது நாட்களுக்கு முன்பிருந்தே கொன்யா நகரில் லேசான நில அதிர்வுகள் ஏற்பட்டுக்கொண்டே இருந்தன. அவர் இறப்பதற்கு நான்கு நாட்களுக்கு முன்பு அதிர்ச்சிகள் சற்று அதிகமாக ஏற்பட்டன.
அப்போது ரூமி, 'பாவம், பூமிக்கு மிகவும் பசிக்கிறது. அதற்கு ஒரு கொழுத்த உணவு தேவைப்படுகிறது. விரைவில் அதற்கு அந்த உணவு கிடைக்கும். பின்பு அது அமைதி யாகிவிடும்' என்று கூறினார். ஜமாத்துல் ஆஹிர் பிறை 05ல் அவர் மறைந்தார்.

குத்புத்தீன் பக்தியார் காக்கி அவர்களும் தன் இறப்பை முன்கூட்டியே அறிந்திருந்தார்கள். தனக்குப் பிறகு ஆன்மிகப் பாதையின் பொறுப்புகளை தன் சீடர் ஃபரீதுத்தீன் கஞ்ச ஷகர் செய்ய வேண்டும் என்றும், தான் இறக்கும் தருவாயில் அவர் தன்னோடு இருக்கமாட்டார் என்றும், இறந்த ஐந்து நாட்களுக்குப் பிறகே அவர் வருவார் என்றும், அப்படி வரும்போது தன்னுடைய கிர்க்கா, தலைப்பாகை, பாதக்குறடுகள் ஆகியவற்றை அவரிடம் ஒப்படைக்கும்படி கூறிவிட்டு ரபியுல் அவ்வல் பிறை 14 அன்று இறையடியைச் சேர்ந்தார்கள்.
நிஜாமுத்தீன் அவ்லியா அவர்களும் தான் இறப்பதற்கு சில நாட்களுக்கு முன்பிருந்தே, தன்னைப் பார்க்க பெருமானார் ஆவலுற்றிருப்பதாக கனவில் வந்து சொன்னதாக சொல்லிக் கொண்டிருந்தார்கள். இறப்பதற்கு நாற்பது நாட்களுக்கு முன்பிருந்தே எதையும் சாப்பிடவோ குடிக்கவோ இல்லை. ரபிய்யும் அவ்வல் பிறை 18ல் மறைந்தார்கள்.

க்வாஜா பந்தா நவாஸ் என்று அறியப்பட்ட ஞானி சையித் முஹம்மது அவர்கள் தான் இறப்பதற்கு ஐந்து நாட்களுக்கு முன்பாக, 'சையித் முஹம்மது இந்த உலகை விட்டுப் போய்விட்டார். இன்னாலில்லாஹி' என்று கூறி தனக்குத்தானே ஜனாஸாத் தொழுகையை நிறைவேற்றினார்கள். ஐந்து நாட்களுக்குப் பின் துல்காயிதா பிறை 16-ல் மறைந்தார்கள்.

அஹ்மது வலி அவர்கள் தன் மாணவர்களுடன் நாகை சென்று திரும்பும்போது வழியில் உள்ள ஒரு பள்ளிவாசலில் தங்கினார்கள். அன்று வியாழக்கிழமை. அப்போது அவர்கள் மாணவர்களை அழைத்து, 'நாளைக்கு நான் இறந்துவிடுவேன். என் உடலை மஞ்சக்கொல்லைக்கு எடுத்துச் சென்று என் ஆசான் அப்துல் காதிர் வலியின் அருகில் அடக்கம் செய்யுங்கள்' என்று கூறினார்கள். அதேபோல நடந்தது, அதேபோலவே செய்யப்பட்டது.

பெரிய லெப்பை அப்பா, சின்ன லெப்பை அப்பா என்று இரண்டு ஞானி சகோதரர்கள் காயல்பட்டினத்தில் இருந்தனர். ஞானி ஷைகு சுலைமானின் மகன்களாவர். அதில் சின்னவரைப் பார்த்து ஒருநாள் பெரியவர், 'உன்னுடைய ஜனாஸா தொழுகையை யார் முன் நின்று தொழ வைப்பார்?' என்று கேட்டார்கள். கேள்வியால் சின்ன லெப்பை அப்பா அதிர்ச்சி எதுவும் அடையாமல், 'நீங்கள்தான் அண்ணா' என்று கூறினார்.
அதேபோலவே சின்ன லெப்பை அப்பா ஒரு ஞாயிற்றுக்கிழமை அன்று மறைந்தார். பெரிய லெப்பை அப்பாதான் தன் தம்பிக்கு ஜனாஸா தொழுகையை முன் நின்று நடத்தினார். மூன்று ஆண்டுகள் கழித்து பெரிய லெப்பை அப்பாவும் மறைந்தார்.

ஷெய்கு சதக்கத்துல்லா அப்பாவின் பேரரான காயல் பட்டினம் உமர் வலி அவர்களுக்கு 53 வயது ஆனபோது, தான் வாழப்போகும் இறுதி ஆண்டு அதுதான் என்று அறிந்து மறுமைப் பயணத்திற்கான ஏற்பாடுகளைச் செய்ய ஆரம்பித்தார். அந்த ஆண்டு துல்காயிதா பிறை 16ல் வெள்ளிக்கிழமை இரவு இஷா வேளையில் மறைந்தார்.

கீழக்கரை தைக்கா சாஹிப் வலியவர்கள் தங்கள் இறுதி நேரம் நெருங்கியதும், சீனி முஹம்மது லெப்பை ஆலிம் அவர்களை அழைத்து, தன் இறுதி வந்துவிட்டதாகவும், தன் ஜனாஸா தொழுகையை அவர்தான் தொழவைக்க வேண்டும் என்றும் கேட்டுக்கொண்டார்கள். அதன்படியே அந்த ஆண்டு ஷவ்வால் பிறை 03ல் மறைந்தார்கள்.
ஹஸன்(ரலி) அவர்களின் பரம்பரையில் உதித்த குத்பெ வேலூர் என்று அழைக்கப்பட்ட முஹ்யித்தீன் சையித் ஷா அப்துல் லத்தீஃப் காதிரி அவர்கள் மக்கா சென்றிருந்தபோது உடல்நலக்குறைவு ஏற்பட்டது. விக்டோரியா மகாராணி பரிசுப்பொருள்கள் அனுப்பியபோது, அதை வாங்க மறுத்து, எனக்கு இதெல்லாம் தேவையில்லை, நீங்கள் இஸ்லாத்துக்கு வந்தால் எனக்கது சந்தோஷம் என்று துணிச்சலாக பதில் எழுதியவர் குத்பெ வேலூர். அவர் வேலூரில் பிறந்தால் அவருக்கு அந்த பெயர்.
மறைந்துவிடுவோம் என்பதை உணர்ந்து கொண்ட அவர்கள், என்னை ஹஸன் (ரலி) அவர்களின் அடக்கவிடத்துக்கு அருகில் அடக்கம் செய்யுமாறு கூறினார். அல்லாஹ் அல்லாஹ் என்று கூறிக்கொண்டிருந்த அவர் முஹர்ரம் பிறை 08ல் மறைந்தார். அன்றிரவு மதினா ஆளுனரின் கவனைல் பெருமானார் தோன்றி, 'இன்ன இடத்தில் இன்ன பெயருள்ள என் மகன் இறந்துள்ளார். அவரை நல்லடக்கம் செய்யுங்கள்' என்று கூறி மறைந்தார்கள்!

கல்வத்து நாயகம், கல்வத்து நாயகம் ஆகியோரின் தந்தையாகிய அறிஞரும் மாபெரும் ஞானியுமான மாப்பிள்ளை லெப்பை ஆலிம் அவர்களுக்கு உடல் நிலை ஹிஜ்ரி 1315ல் மோசமாகியது. பதினேழு ஆண்டுகளாக வீட்டுக்குள்ளேயே தனிமைத் தவமிருந்த மகனார் கல்வத்து நாயகம் தன் தனிமையை விட்டு வெளியே வந்து தந்தையைப் பார்த்துவிட்டு, 'அவர்கள் இப்போது இறக்க மாட்டார்கள். அவருக்கு தயிறும் சோறும் கொடுங்கள்' என்று கூறினார்.

ஆனால் அடுத்த ஆண்டு தன் இறுதி நெருங்கிவிட்டதை அறிந்த மாப்பிள்ளை லெப்பை ஆலிம் தன் சீடர்களையும் உறவினர்களையும் அழைத்து, கொடுக்க வேண்டியதைக் கொடுத்து, சொல்ல வேண்டியதைச் சொல்லி கண்களை மூடிக்கொண்டார்கள். அது ரஜபு பிறை 05.
கல்வத்து நாயகமும் தன் முடிவை அறிந்து, தன் பணிப்பெண் ஆமினா உம்மாவை அழைத்து நான் இறக்கப் போகிறேன் என்று கூறினார்கள். அவர் நம்பவில்லை. மகளும் மருமகனும் வந்து பார்த்து சுஜூதில் இருந்த தந்தையைத் தூக்க முயற்சித்தார். தூக்கி நேராக வைத்த பிறகு உயிரோடு இருப்பவரைப் போல சம்மணம் போட்டு அமர்ந்துகொண்டார்கள். காலை தானே நீட்டிக் கொண்டார்கள். ஆனா அவ்வளவுதான். அவர்களின் உயிர் பிரிந்திருந்தது. அது ஷவ்வால் பிறை 22.
இவையெல்லாம் சில உதாரணங்கள் மட்டுமே.

நாகூர் ரூமி
இறைநேசர்களின் பொதுப்பண்புகள் பதிவிலிருந்து

## கராமத் 24

(இறைநேசர்களின் படித்தரங்கள்)

உலகில் ஏக காலத்தில் பல எண்ணிக்கையுள்ள, பலவகை படித்தரங்கள் உடைய அவுலியாக்கள் - குதுபுமார்கள் - அப்தால்கள் - அவுத்தாதுகள் - நுகபாக்கள் - நுஜபாக்கள் என்ற பதவி உடையவர்கள், உலக முடிவு நாள்வரையில் இருந்தே வருவார்கள் என்றும்,

ஹகீகத்தில் ஈருலகையும் கண்காணிப்பவர்கள் அவர்கள் தானென்றும், அவர்களை முன்னிட்டே பலாய், முஸீபத்துகள் விலக்கப்படுவதாயும் ஹதீதுகள் பல காணப்படுகின்றன,
அன்னார் அனைவருக்கும் குத்பே அதிபராவார். அன்னாரை "கௌது " என்றும் சொல்லப்படும். இது பற்றிய ஆதாரங்கள் பல இருப்பினும் சிலவற்றை மட்டிலும் இங்குக் குறிப்பிடுவது போதுமெனக் கருதுகின்றோம்.
" இறைவா...! என் மீது நபிமார்கள் நடந்து திரிந்தார்கள், அவர்களுக்குப் பிறகு நபிகள் பெருமான் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைச் சுமந்திருந்தேன். தற்போது அவர்களும் சென்று விட்டார்களே, நான் தனித்துவிட்டேனே, என் மீது எந்த நபியும் இல்லையே " என்பதாய் பூமி பிரலாபித்து இறைவனிடம் முறையிட்டுக் கொண்டது.
" நான் சில அவுலியாக்களை அனுப்புவேன். அவர்களது இருதயங்கள் நபிமார்களது இருதயங்களைப் போலிருக்கும். அவர்கள் யுகமுடிவு வரை உன் மீது சஞ்சரிப்பார்கள்" என்று இறைவன் பூமிக்கு அறிவித்தான்.
இவ்விஷயத்தை ஸாலிஹான, இறையருள் நேசரான, பெரியார் ஒருவர் தமது உலக யாத்திரையின் போது, நித்திய ஜீவனுடைய ஹஜ்ரத் கிலுறு அலைஹிஸ்ஸலாம் அவர்களைச் சந்தித்த சமயம் அன்னாரைக் கேட்டுத் தெரிந்து கொண்டதாக, ஷமவாஹிபுல் மஜீது பீ மனாகிபி ஷாஹில்ஹமீது எனும் கிரந்தத்தில் காணப்படுகிறது.

அவுலியாக்கள் ஏகத்தில் 440 பேர்கள். அவர்களுள் நுஜபாக்கள் 300, நுகபாக்கள் 70, அப்தால்கள் 40, அகியார்கள் 10, உறபாக்கள் 7, அன்வார்கள் 5, அவுத்தாதுகள் 4, முக்த்தார்கள் 3, குதுபு ஒருவர். குத்பே அனைவருக்கும் அதிபராவார்.
இன்னாரை கௌது என்றும் சொல்லப்படும். இவர்களுள் யாரும் மரணமாவார்களாயின் அவர்களுக்கடுத்த (தரஜா) படித்தரத்திலிருப்பவர்கள் அந்த ஸ்தானத்திற்கு மாற்றப்படுவார்கள்.
அங்ஙணம் பதவியில் உயர்த்தப்படும் போது, கீழ்ப்படித்தரத்திலுள்ள நுஜபாக்கள் காலியாகுமிடத்தில் ஸாலிஹீன்களான முஸ்லீம்களில் ஒருவர் அந்தத் தானத்தில் அமர்த்தப்படுவார்
என்று கிலுறு அலைஹிஸ்ஸலாம் அவர்கள் கூறியதாக மனாகிபுகுத்பில் மஜீதிஸ்ஸையிது ஷாஹுல் ஹமீதில் மாணிக்கப்பூரியில் மவுலிதிந் நாகூரிய்யில் மர்கதி என்ற கித்தாபில் மாதிஹுர் ரஸூல் அல்லாமதுஷ் ஷைகு ஸதக்கத்துல்லாஹில் காஹிரிய்யிஸ் ஸித்தீக்கி ரலியல்லாஹு தஆலா அன்ஹு அவர்களது சீடர் அல்லாமா ஆரிபுபில்லாஹ் மஹ்மூது தீபிரலியல்லாஹு தஆலா அன்ஹு அவர்கள் கூறியுள்ளார்கள் .
மேலும், என்னுடைய உம்மத்துகளில் நாற்பது நபர்கள் நபி இபுராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுடைய இருதயத்தையுடையவர்களாய் என்றும் இருந்தே வருவார்கள் . அல்லாஹ்தஆலா அந்த நபர்களைக் கொண்டு பூலோகத்தில் வாழுபவர்களை விட்டும் பிணிகளைப் போக்குவிப்பான்.
அவர்களுக்காக மழையைப் பொழியச் செய்வான். அன்னவர்களைக் கொண்டுதான் பூலோகத்தில் உள்ளவர்களுக்கு உதவி புரியப்படும் என்பதாய் எம்பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் திருவாய் மலர்ந்தருளிய ஹதீதுதபறானீயில் காணக் கிடைக்கின்றது.

குத்புக்கே கௌது என்று பெயர். அவர் ஒருவருக்குப் பின் ஒருவராக வருவார். படைப்புகளை எல்லாக் கருமங்களிலும் அன்னார் இரட்சிக்கக் கூடியவராக இருப்பதனால் கௌது என்று பெயர். அன்னவருக்கு வலம், இடம் இருபக்கங்களிலும் அரசர்களுக்கு இருப்பதுபோல இரு அமைச்சர்கள் உள்ளனர்.
கௌது உடைய உத்தரவு கொண்டு வலது பக்கமிருப்பவர் மறைவுலகங்களான
ஆலமுல்கைபு, ஆலமுல் மலகூத்தை நிருவகித்து வருகின்றார்.
இடது பக்கமிருப்பவர், வெளியுலகமான ஆலமுஷ் ஷஹாதத்தைக் கண்காணித்து வருகின்றார் என்பதாக ரூஹுல்பயான் தப்ஸீர் பாகம் 2, பக்கம் 363லும், இபுனு அரபி ரலியல்லாஹு தஆலா அன்ஹு அறிவிக்கிறார்கள்.
அந்தரங்க, பகிரங்க ஆபத்துக்களில் நின்றும் குத்புமார்களைக் கொண்டே இறைவன் அகிலத்தைப் பாதுகாத்துக் கொள்கிறான் என்று தப்ஸீர் ரூஹுல்பயான் 9-வது பாகம், 102-வது பக்கத்திலும் கூறப்பட்டுள்ளது.
அவுலியாக்களுள் இரு வகுப்பாருண்டு, ஒரு வகுப்பார் இறைவனுடைய பாதையில் கஷ்டப்பட்டுத் தெண்டித்து அவனளவில் தன்னையழித்து பனாவாகியவர்கள்.
இவர்களுக்கு "கஸ்பீ " என்று சொல்லப்படும்.
மற்ற வகுப்பார் ஆலம் அர்வாஹ் எனும் ஆன்ம லோகத்திலேயே ஆண்டவனால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள். இவர்களுக்கு "அத்தாயீ " என்று கூறப்படும். குத்பு கௌதுகள் அத்தாயீ வகுப்பைச் சேர்ந்தவர்களே. -ஜவாஹிருஸ்ஸூலுக்கு 114-வது பக்கத்தில் எழுதப்பட்டுள்ளது

குத்பு என்ற பதத்திற்கு "முளை துருவம் " என்றும், கௌது என்ற பதத்திறகு " இரட்சிப்பவர் - நாயன் நோட்டமிடும் ஸ்தானம் " என்றும் பொருளைப் பயக்கி நிற்பினும், அவற்றின் அந்தரங்கம் பல அரும்பெரும் இரசகியப் புதையல்களைத் தன்னுள் அடக்கியதாய் அமைந்து கிடக்கின்றன.

இன்னவர்கள் மூலமாகத்தான் முதலவன் தன்னிருக்கையை அறிக்கை செய்ய வேண்டியதிருக்கிறது அன்றேல், அஞ்ஞான இருள்படர்ந்து மூடி, அகிலம் அந்தகாரத்துள்ளாழ்ந்து பாழ்பட்டுப் போடும்.

இறைவன் தன்னடியார்களுக்கு அளித்துள்ள கைம்மாறிளக்க வொண்ணாப் பெரும் அருட்கொடைகள் அத்தனையையும் ஒரு தட்டிலும், குத்பை அனுப்பித் தந்த அருட்பெருங்கொடையை மற்றொரு தட்டிலும் வைத்து சீர்தூக்கிப் பார்ப்போமாயின், குத்பால் பெற்ற கிருபையளவே கனத்து முறுகி நிற்கக் காண்போம். இன்னாரைப் பற்றி இறைவன் குர்ஆன் ஷரீபில்

اَلَا إِنَّ أَوْلِيَاءَ اللهِ لَا خَوْفٌ عَلَيْهِمْ وَلَا هُمْ يَحْزَنُوْنَ

(முஃமின்களே!) அறிந்து கொள்ளுங்கள்; நிச்சயமாக அல்லாஹ்வின் நேசர்களுக்கு எவ்வித அச்சமும் இல்லை; அவர்கள் துக்கப்படவும் மாட்டார்கள்.
(அல்குர்ஆன்: 10:62)
ஆதார நூல் : ஹிதாயதுல் அனாம் இலாஜியாரதில் அவுலியாஇல் கிராம் .

## கராமத் 25

(கொடுக்க வல்லமையுடையவனுக்கு, எடுத்துக்கொள்ளவும் வல்லமையுண்டு! )
ஷைகு ஷாஹ் ஹசன் அலி அஸீமாபாதீ (ரலி) அவர்களது சமுகத்தில் தனக்கு குழந்தை உண்டாக துஆச் செய்யும்படியும் அவர்களுக்கு 500 திர்ஹம் நேர்ச்சை செய்திருப்பதாகவும் மீர் ஜாபர் முஸப்பர்பூரி என்பவர் முறையிட்டுக் கொண்டார்.

ஷைகு அவர்களின் துஆ பரக்கத்தைக் கொண்டு அவருடைய மனைவி கர்ப்பமானாள். ஒன்பது மாதம் கழித்து பிரசவ வேதனை உண்டாயிற்று. குழந்தையின் தலை மாத்திரம் வெளியே காணப்பட்டது. ஆனால் பிரசவம் ஆகாமல் அந்தப் பெண் அதிகம் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தாள் .
" ஷைகு அவர்களுக்கு நீர் வாக்களித்த நேர்ச்சையை நிறைவேற்றாத காரணத்தாலேயே பிரசவம் ஆகாமல் கஷ்டப் ஏற்பட காரணமாக இருக்கலாம். ஆகையால் நேர்த்திக் கடனை உடனே நிறைவேற்றும் " என்று மீர்ஜாபரிடம் அவரது நண்பர்கள் கூறினார்கள்.

"அல்லாஹ் எனக்குக் குழந்தையைக் கொடுத்தான். எவருடைய துஆவைக் கொண்டும் ஆவதென்ன ? "என்பதாய் மீர் ஜாபர் இறுமாப்புடன் சொன்னார்.
இவ்விஷயம் ஷைகு அவர்களுக்கு தெரியவந்தது. அவர்கள் சக்தி மயமான ஜலாலியத்தில் ஆனவர்கள். " கொடுக்க வல்லமை உடையவனுக்கு, எடுத்துக்கொள்ளவும் வல்லமை உண்டு" எனக் கூறினார்கள்.
அடுத்த வினாடியிலேயே குழந்தை வயிற்றில் இருந்து மாயமாக மறைந்து விட்டது. கர்ப்பத்தின் அறிகுறியோ , பேறுகால சங்கதியோ ஏதும் ஏற்படாத நிகழ்வு மாதிரி அதாவது கர்ப்பம் தரிப்பதற்கு முந்தைய நிலைமையை அவர் மனைவி அடைந்தாள்.
இந்த அற்புத வரலாறு, "மிர்அத்துல் கவுனைன் ",442 -வது பக்கத்தில் சொல்லப்பட்டுள்ளது.
ரஹ்மத் ராஜகுமாரன்
மகனே..! ஓ மகனே...!
என் விந்திட்ட விதையே...!
செடியே...! மரமே...! காடே...!
மறுபிறப்பே...!
மரண சௌகர்யமே...! வாழ்...!
- கமலஹாசன்
எழுதிய கவிதைதான் என் நினைவுக்கு வந்தது.

## கராமத் 26

(சரியான வழியைக் காட்டுங்கள் ...! )
இறைவனே நேரில் பிரசன்னமாகி எந்த காரியத்தையும் செய்வதில்லை. பிறர் மூலமாகவே உதவியளிக்கின்றான்.

எம்பெருமானார் (ஸல்) அவர்களுக்கு பத்ரு போரில் மலக்குமார்களைக் கொண்டு உதவி புரிந்துள்ளான்.
பனீ இஸ்ரவேலர்களின் நிறைய நபிமார்களுக்கும் இவ்வாறே உதவி செய்துள்ளான்.
சில நபிமார்களுடைய ஞாபகர்த்த சின்னங்களைக் கொண்ட தாபூத் என்னும் 'ஸகீனா' என்னும் பெட்டியைக் கொண்டு யுத்தங்களில் வெற்றிகளைக் கொடுத்துள்ளான்.
இவ்வாறே அவுலியாக்கள் மூலம் இறைவன் உதவி உபகாரம் புரிந்துத் தனது கிருபையைப் பொழிகின்றான்.

இமாம் அஹ்மது இப்னு ஹன்பல் (ரஹ்) அவர்கள் பாக்தாத்திலிருந்து மக்காவுக்குச் சென்று கொண்டிருக்கையில், வழி தவறி விட்டார்கள். பாதை தெரியாமல் பிரயாண கூட்டத்திலிருந்து பிரிந்து விட்டார்கள்.

அப்போது அவர்களுக்கு, "யா இபாதல்லாஹி அயீனூனீ " என்னும் ஹதீது ஞாபகத்திற்கு வந்தது. உடனே அந்த விதம் செய்து பயன் பெற்றார்கள். அவர்களே தங்களது வாயால் கூறுவதை பாருங்கள்.
" அல்லாஹ்வின் நல்லடியார்களே...! என்னை சரியான பாதையிலே கொண்டு போய் சேர்த்து விடுங்கள்" என்று யாருமற்ற வனாந்தர வெளியில் சத்தமிட ஆரம்பித்தேன். சரியான பாதை வந்தடையும் வரை இவ்வாறு நான் கூறிக் கொண்டே இருந்தேன்"
என்பதாக அவர்கள் தங்கள் பிரயாணக் கஷ்டம் பற்றி சொல்லி வரும் விவரத்தை அவர்களுடைய சரித்திரத்தில் காணலாம்.
- மௌலவி எம்.அப்துல் வஹ்ஹாப் எம், ஏ , பி.டி.எச் அவர்கள் இயற்றியுள்ள " நன்மணி நால்வர்கள் " என்ற நூலின் 137 வது பக்கத்தில் விவரம் காணலாம்.

رواه الطبراني في المعجم الكبير (17 /117) من طريق عبد الرحمن بن شريك قال : حدثني أبي ، عن عبد الله بن عيسى ، عن زيد بن علي ، عن عتبة بن غزوان ، عن نبي الله صلى الله عليه وسلم قال : (إِذَا أَضَلَّ أَحَدُكُمْ شَيْئًا ، أَوْ أَرَادَ أَحَدُكُمْ عَوْنًا ، وَهُوَ بِأَرْضٍ لَيْسَ بِهَا أَنِيسٌ ، فَلْيَقُلْ : يَا عِبَادَ اللهِ أَغِيثُونِي ، يَا عِبَادَ اللهِ أَغِيثُونِي ، فَإِنَّ لِلَّهِ عِبَادًا لا نَرَاهُمْ).
நபி (சல்) அவர்கள் சொன்னதாக உத்பா இப்னு கஜ்வான் (ரலி) அவர்கள் அரிவிக்கிரார்கள்.
உங்களுக்கு ஒரு இடத்தில் பாதையில் ஒரு பொருள் தவரி விட்டால் அல்லது உங்களுக்கு ஏதாவது ஒரு உதவி (பிறரிடமிருந்து) தேவைப்படுமானால், நீங்கள் இருக்கும் அந்த பாதையில் உங்களுக்கு உதவக் கூடிய நபர் யாரும் இல்லாது போனால்,
ஓ! அல்லாஹ்வின் அடியார்கள் யாரேனும் (இங்கு) இருக்கிறீர்கள் தானே? எனக்கு உதவி செய்யுங்கள்!
ஓ! அல்லாஹ்வின் அடியார்கள் யாரேனும் (இங்கு) இருக்கிறீர்கள் தானே? எனக்கு உதவி செய்யுங்கள்!
என்று கூறுங்கள். ஏனெனில்
நமது கண்களுக்கு புலப்படாத அல்லாஹ்வின்
அடியார்கள் அங்கு இருப்பார்கள். (அவர்கள் மூலம் அல்லாஹ் நமக்கு உதவி செய்வான்.)
ஆதாரம்; இமாம் தப்ரானி, முஃஜமுல் கபீரில் பாகம் 17, பக்கம் 117,
ரஹ்மத் ராஜகுமாரன்.
اِهْدِنَا الصِّرَاطَ الْمُسْتَقِيْمَۙ
நீ எங்களை நேர்வழியில் நடத்துவாயாக! (குர்ஆன் : 1:6)

## கராமத் 27

வர்த்தகக் கூட்டமொன்று வியாபாரத்தை முன்னிட்டுப் பிரயாணப்படுவதற்கு முன்பு ஷைகு அபுல்ஹஸன் கிர்கானீ (ரஹ்) அவர்களிடம் சென்று ,
"நாங்கள் போகும் பாதை பயங்கரமான ஆபத்துக்கள் நிறைந்த இடம். ஆகையால் பாத்திரமாகப் போய் வர துஆ செய்து அனுப்பும் படி ஷைகுவிடம் பைஅத் வாங்கிய முரீது வேண்டினார் .
" உங்களுக்கு ஆபத்து நேரிடின் இந்த அபுல்ஹஸனை ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள் " என்று கூறிப் பயணம் அனுப்பி வைத்தார்கள் .
ஷைகுவின் இந்த வார்த்தை அவரது முரீது தவிர வர்த்தக கூட்டத்தின் மற்றையோருக்கு ஒரு மாதிரியாக , பெருத்தக் கேடாக நினைத்தனர் .
பல நாள் பிரயாணத்தில் ஒரு நாள் கொள்ளைக் கூட்டத்தினர் அவர்களை வழிமறித்துப் பொருள்களைச் சூறையாடினர் .
முரீது மட்டும் , ஷைகு அபுல்ஹஸன் கிர்கானி (ரஹ்) அவர்களை விளித்து உதவி தேடினார் . பொருளுடன் அவர் கொள்ளைக் கூட்டத்தாரின் பார்வையை விட்டும் தப்பினார் .
மற்றவர்கள் இறைவனை விளித்து உதவி தேடினர். அவர்களுடைய பொருள்கள் ஒன்று விடாமல் சூரையாடப்பட்டன .
எல்லோருடைய பொருளும் கொள்ளை போயிருக்க, ஒரேவொருவருடைய பொருள் மாத்திரம் தப்பிப் பத்திரமாக இருப்பதையெண்ணி, வர்த்தகர்கள் பேராச்சரியப்பட்டு, ஷைகிடம் வந்தனர்.
" நாங்கள் அல்லாஹ்வைக் கூப்பிட்டு உதவி தேடினோம். பொருளை இழந்தோம் . ஒருவர் மட்டும் உங்களைக் கூப்பிட்டு உதவி தேடினார் . அவருடைய பொருள்கள் பாதுகாக்கப்பட்டது .இதன் காரணம் என்னவென்று நீங்கள் கூறுங்கள் " என்றனர்.
" உங்களை நீங்களே அறியாத போது, நீங்கள் அல்லாஹ்வையும் அறியாது ,வாக்கு மனம் வேறுபட்டு வெறுமனே அவன் பால் உதவி தேடினீர்கள் . இந்த அபுல்ஹஸனோ தன்னை அறிந்து அதன் மூலம் தன் இறைவனை அறிந்து , வாக்கு மனம் ஒன்றுபட்டு அவன்பால் உதவி தேடினார் . அபுல்ஹஸனை ஞாகப்படுத்தி உதவி தேடினால் உங்களுக்காக அபுல்ஹஸன் அல்லாஹ்வின் உதவி தேடுவார் .அவ்வமயம் உங்கள் காரியம் நிறைவேறும் . நீங்கள் அல்லாஹ்வை அறியாத புறத்தில் , என்றும் அவனைக் கூப்பிடும் வழக்கம் போல் ஆயிரம் முறை அழைத்தாலும் யாதொரு பயனுமில்லை"
என்பதாக ஷைகு அபுல்ஹஸன் கிர்கானீ (ரஹ்) அவர்கள் அறிவுறுத்தினார்கள் .
ஆதாரம் : மிர் அத்துல் கவுனைன் - பக்கம் 244

اَلَّذِىْ خَلَقَ السَّمٰوٰتِ وَالْاَرْضَ وَمَا بَيْنَهُمَا فِىْ سِتَّةِ اَيَّامٍ ثُمَّ اسْتَوٰى عَلَى الْعَرْشِ ۛ اَلرَّحْمٰنُ فَسْــٴَــلْ بِهٖ خَبِيْرًا
அவனே வானங்களையும், பூமியையும், அவற்றிற்கிடையிலுள்ளவற்றையும் ஆறு நாட்களில் படைத்தான்; பின்னர் அவன் அர்ஷின் மீது அமைந்தான்; (அவன் தான் அருள் மிக்க) அர்ரஹ்மான்; ஆகவே, அறிந்தவர்களிடம் அவனைப் பற்றிக் கேட்பீராக.

(அல்குர்ஆன்: 25:59)

## கராமத் 28

( நீர் இந்த ஹனபியை அறியாதிருக்கையில் இறைவனை எங்ஙனம் அறிவீர் ? )
குத்பு செய்யிது ஷம்சுத்தீன் முஹம்மது ஹனபி (ரலி) அவர்கள் தங்கள் முரீது ஒருவருடன் கடற்கரைக்குச் சென்று, கடலில் தண்ணீர் மேல் நடந்து செல்ல ஆரம்பித்தார்கள்.
" யா ஹனபீ "என்று தன்னை கூப்பிட்டுக்கொண்டே தண்ணீர் மீது நடக்கும்படி தன் முரீதுக்கு கூறினார்கள்.
இருவரும் தண்ணீரில் நடந்து சென்று கொண்டிருக்கையில் "யாஅல்லாஹ்" என்று ஷைகு ஹனபி அவர்கள் சொல்லிக் கொண்டு போவதைச் செவியேற்ற முரீது, " யாஹனபி " என்னும் சொல்லை விடுத்து, தானும் "யாஅல்லாஹ்" எனக் கூறவே கடலில் முரீது தாழ்ந்துவிட்டார்.
ஷைகு அவர்கள் அவரின் கையைப் பிடித்துத் தூக்கி, " என்ன சொன்னீர் ?" என்று வினவினார்கள்.
ரஹ்மத் ராஜகுமாரன்.
தாங்கள், " யா அல்லாஹ் " எனக் கூறியதை கேட்டு, நானும்
"யா அல்லாஹ்" என்று மொழிந்தேன். உடனே கடலில் தாழ்ந்து விட்டேன்" என்றார்.
" நீவிர் இந்த ஹனபியையே அறியாதிருக்கையில், அல்லாஹ்வை எங்ஙனம் அறிவீர் ? அல்லாஹ்வை அறிந்து சொன்னால் தாழ்ந்திருக்க மாட்டீர் . அல்லாஹ்வை அறியாமல் கூப்பிட்டதால் , தாழ்ந்தீர் "என்பதாய் அறிவுறுத்தினார்கள்.
இது ஷவாஹிதுல் ஹக்கில் கூறப்பட்டுள்ளது
(அவன் தான் அருள் மிக்க) அர்ரஹ்மான்; ஆகவே, அறிந்தவர்களிடம் அவனைப் பற்றிக் கேட்பீராக." (குர்ஆன் : 25:59)

" உடலுக்குள் ஆன்மா மறைந்துள்ளது. ஆன்மாவுக்குள் நீ மறைந்துள்ளாய். மறைந்திருப்பதில் மறைந்திருப்பவனே நீயே எல்லாம் " _ அத்தார்

## கராமத் 29

( குர்ஆன் கூறும் அவ்லியாவும் அவரது கராமத்தும் )

ஸபா நாட்டு அரசி பில்கீஸ் தனது பரிவாரங்களுடன் புறப்பட்டு நபி சுலைமான் (அலை) அவர்களிடம் வந்து கொண்டிருக்கிறார். பைத்துல் முகத்தஸை நெருங்கிவிட்டார் இன்னும் இரண்டொரு நாளில் சுலைமான் அவர்கள் சமூகம் வந்துவிடலாம்.
பில்கீஸ் வருவதற்கு முன்னர் அவருடைய அரியாசனத்தை இங்கு கொண்டு வருவதன் மூலம் இறைவனின் வல்லமையையும், தம்முடைய நபித்துவத்துக்குரிய அற்புதத்தையும் பில்கீஸ்க்கு காட்டுவதற்காகவே நபி சுலைமான் (அலை) அவர்கள் அந்த சிம்மாசனத்தை கொண்டு வருபவர் உங்களில் யார் ? என்று தன்னுடைய அரசவையில் கேட்டார்கள் .
ஏறத்தாழ ஸபா நாட்டிற்கும் பைத்துல் முகத்தஸ்க்கும் 1500 மைல் இருக்கலாம் .அந்த ஸபா நாட்டிலிருந்து அந்த அழகிய சிம்மாசனத்தை நபி சுலைமான் (அலை) அவர்கள் ஆட்சி செய்யும் பைத்துல் முகத்தஸ்க்கு கொண்டு வருவது என்றால் மனித சக்தியை கொண்டு வரக் கூடியது அல்ல.

அந்த சிம்மாசனம் ஸபாவில் பில்கீஸ் அரசின் மாளிகைக்குள் மிகவும் பாதுகாப்புடன் வைக்கப்பட்டுள்ளது. முதலில் அரண்மனைக்குள்ளே செல்வது மிகவும் கடினம். அப்படியே சென்றாலும், அதனை தூக்கிக்கொண்டு விரைவில் கொண்டு வருவது இன்னும் அதிக கடினம். இது மனித சக்தியால் முடியாத ஒன்றாகும். மேலும் ஸபா அரசி பைத்துல் முகத்தஸை நெருங்கிவிட்டாள் அவர் வந்து சேர்வதற்கு முன்னர் அவருடைய சிம்மாசனம் நபி சுலைமான் (அலை) அவர்களிடம் வந்து சேர வேண்டும் என்று நபியவர்கள் விரும்பினார்கள்.

பலம் பொருந்திய " இப்ரீத் " என்னும் ஜின் , " நீங்கள் இந்த இடத்தில் இருந்து எழுவதற்கு முன்னர் (ஒரு வஃக்து பொழுதிலிருந்து அடுத்த வஃக்து பொழுதுக்குள் ) அதனை கொண்டு வந்து உங்கள் முன் வைக்கிறேன். நான் அத்தகைய வலிமை உடையவன். அதில் உள்ள எந்த பொருளும் தவறி விழாத படியும் ,வேறு எங்கும் நான் அதனை கொண்டுசென்று விடமாட்டேன் என்பதிலும் என்னை நீங்கள் நம்பலாம் நான் உங்கள் நம்பிக்கைக்கு உரியவன்தான் " எனக் கூறியது .

' இப்ரீத்' என்றால் மூர்க்கத்தனமும், பலமும் பொருந்திய பயங்கரமான உருவத்தை கொண்டவன். மனிதனால் முடியாத காரியத்தை மிக இலகுவாகச் செய்து முடிப்பவன். இவன் ஜின் வர்க்கத்தை சேர்ந்தவன். 'கூஜன் ' என்ற பெயரும் இவனுக்கு உண்டு எனக் கூறப்படுகிறது.

قَالَ الَّذِىْ عِنْدَهٗ عِلْمٌ مِّنَ الْـكِتٰبِ اَنَا اٰتِيْكَ بِهٖ قَبْلَ اَنْ يَّرْتَدَّ اِلَيْكَ طَرْفُكَ فَلَمَّا رَاٰهُ مُسْتَقِرًّا عِنْدَهٗ قَالَ هٰذَا مِنْ فَضْلِ رَبِّىْ لِيَبْلُوَنِىْٓ ءَاَشْكُرُ اَمْ اَكْفُرُ وَمَنْ شَكَرَ فَاِنَّمَا يَشْكُرُ لِنَفْسِهٖ وَمَنْ كَفَرَ فَاِنَّ رَبِّىْ غَنِىٌّ كَرِيْمٌ

இறைவேதத்தின் ஞானத்தைப் பெற்றிருந்த ஒருவர்: “உங்களுடைய கண்ணை மூடித்திறப்பதற்குள், அதை உங்களிடம் கொண்டு வந்து விடுகிறேன்” என்று கூறினார்;
(அவர் சொன்னவாறே) அது தம்மிடம் வைக்கப்பட்டிருப்பதைக் கண்டதும்: “இது என்னுடைய இறைவனின் அருட் கொடையாகும் நான் நன்றியறிதலுடன் இருக்கின்றேனா, அல்லது மாறு செய்கிறேனா என்று (இறைவன்) என்னைச் சோதிப்பதற்காகவும்; எவன் ஒருவன் (இறைவனுக்கு) நன்றி செலுத்துகின்றானோ அவன் நன்றி செலுத்துவது அவனுக்கே நன்மை)யாவும்; மேலும், எவன் (நன்றி மறந்து) மாறு செய்கிறானோ (அது அவனுக்கே இழப்பாகும்; ஏனெனில்) என் இறைவன், (எவரிடத்தும்) தேவைப் படாதவனாகவும், மிகவும் கண்ணியம் மிக்கவனாகவும் இருக்கின்றான்” என்று (ஸுலைமான்) கூறினார். (அல்குர்ஆன் : 27:40)

"ஆஸிப் இப்னு பர்கியா " எனும் பெயர் கொண்டவர். சுலைமான் நபியின் அமைச்சர் என்றும் உறவில் அவருடைய சகோதரி மகன் என்றும் ஒரு சாரார் கூறுகின்றனர்.

இவர் மகத்தான இறைநாமம் (இஸ்முல் ஆஃலம்) ஒன்றை கற்றிருந்தார். அதனைக் கொண்டு அவர் மகத்தான காரியங்களைச் செய்வார் என்றும் கூறப்படுகிறது. இஸ்முல் ஆஃலம் ஓதி இறைவனிடம் பிரார்த்தனை செய்தால் இவரது பிரார்த்தனை அங்கீகரிக்கப்படும். இதனை ஓதி எதைக் கேட்டாலும் வழங்கப்பட்டு விடும் எனவும் கூறுகின்றனர்

ஆதார நூல்கள் : காஜின் , ரூஹுல்மஆனி

## கராமத் 30

(குர்ஆன் கூறும் கராமத்)
முற்காலத்தில் பனீ இஸ்ரவேலர்களில் ஓர் அரசன் இருந்தான். அரச சபையில் குறி சொல்லும் வயோதிகன் ஒருவனும் இருந்தான் . ஒரு நாள் குறிகாரன் : " மன்னரே ! எனக்கு அந்திம காலம் நெருங்கி விட்டதால் , நல்ல புத்தி தீட்சண்யமுடைய ஒரு சிறுவனைக் கொடுத்தால், அவனுக்கு நான் கற்ற சூனியத் தொழிலைக் கற்றுக் கொடுக்கிறேன் "

அரசன் அப்படி ஒரு சிறுவனை தேர்ந்தெடுத்து சூனியக்காரரிடம் சூனியம் கற்க அனுப்பி வைத்தான் .
சூனியக்காரன் வீட்டிற்கு செல்லும் வழியில் ஒரு இறைஞானி வீடு இருந்தது. அச்சிறுவன் அந்த இறைஞானியின் உபதேசங்களை கேட்டு விட்டு, பின் தாமதமாகவே சூனியக்காரனிடம் செல்லலனான் . தாமதமாக வருவதை கண்டித்து அச்சிறுவனை சூனியக்காரன் அடித்து துன்புறுத்தினான்.
சூனியக்காரனின் துன்புறுத்தலை அந்த இறைஞானியிடம் சிறுவன் சொல்ல , இறைஞானி சிறுவனிடம் , "தாம் வரும் வழியில் ஒரு புலி வந்து தன்னை வழிமறித்ததால், தாமதமாகி விட்டது " என்று சூனியக்காரனிடம் சொல்லுமாறு கூறினார்.
உண்மையிலேயே புலி வழிமறித்து மனிதர்களுக்கு இடையூறு செய்து கொண்டிருக்க, இச்சிறுவன் "இறைஞானி சிறந்தவரா ? சூனியக்காரன் சிறந்தவனா என்பதை நான் அறியேன் "யா அல்லாஹ்.. ! சூனியக்காரனது காரியத்தைப் பார்க்கினும் இறைஞானியின் காரியம் உனக்கு அதிகப் பிரியமாக இருக்குமாயின் , மனிதர்களுக்கு தடையை ஏற்படுத்தும் இந்த புலியை கொன்று விடுவாயாக ! " என்று பிரார்த்தித்து கல்லை எறிந்தான். புலி கல்லடிப் பட்டு இறந்தது .
இந்த விஷயம் இறைஞானிக்கு தெரிந்தது. சிறுவனை அழைத்து , " அருமைப் புதல்வரே !... இன்று நீ என்னிலும் சிறந்தவன். நான் அறிந்த காரியம் உன்னிலிருந்து வெளியாயிற்று . இதனால் வெகு விரைவில் நீ சோதனைக்கு உள்ளாக்கப்படுவாய் அந்த சோதனையில் நீ என்னைக் காட்டிக் கொடுத்து விடாதே ! " என்று இறைஞானி எச்சரித்தார் .

அன்று முதல் சிறுவனிடம் பிறவிக் குருடர், முடவர், வெண்குஷ்டரோகி, கருங்குஷ்டரோகி ஆகியோர்கள் வந்து சிறுவன் கூறும் அல்லாஹ்வை விசுவாசித்து குணமடைந்து சென்றனர் .
அரச சபையில் உள்ள கண் தெரியாத குருட்டு அமைச்சர் பெருஞ் செல்வத்தைப் பாத காணிக்கையாகக் கொடுத்து கண் பார்வையை மீட்டித் தர வேண்டினார் .
அதற்கு அந்த சிறுவன் " நான் எதையும் குணப்படுத்த முடியாது. குணப்படுத்துபவன் அல்லாஹ்தான் நீங்கள் அல்லாஹ்வை ஈமான் கொண்டால், நான் பிரார்த்திக்கிறேன் . அல்லாஹ் குணப்படுத்துவான் " என்று கூறினான். அதன்படி கண் பார்வையைப் பெற்றார். கண் பார்வை பெற்றதும் அரச சபைக்கு அமைச்சர் சென்றார். அரசன் எப்படி கண் பார்வை கிடைத்ததுப் பற்றி விசாரித்தான் .
" அல்லாஹ்தான் " என்றார்.

அதற்கு அரசன் " என்னைத் தவிர்த்து உனக்கு வேறு இறைவன் இருக்கிறானா ? "
" எனக்கும் இறைவனாக , உனக்கும் இறைவனாக உள்ள ஒரே அல்லாஹ் " என்று அமைச்சர் பதில் கூறினார். அரசன் அவரை சிறையில் அடைத்து கொடுமைப்படுத்த , அவர் சிறுவனைக் காட்டிக் கொடுத்தார் .
அச்சிறுவனை பிடித்து துன்புறுத்த, "நான் யாரையும் எப்போதுமே குணப்படுத்தியதில்லை. குணப்படுத்துவதெல்லாம் அல்லாஹ்தான் " என்றான்.
அரசன் சிறுவனைக் கொடுமைப்படுத்த , சிறுவன் இறைஞானியைக் காட்டிக் கொடுத்தான் .
உடனே இறைஞானியைக் கட்டி இழுத்து வந்து , மதம் மாற அரசன் வற்புறுத்தினான். அதற்கு ஞானி மறுக்கவே , உடனே ரம்பம் கொண்டு உச்சியிலிருந்து உடல் இரண்டு துண்டாகப் பிளக்கப்பட்டது.
பின்னர் அமைச்சரையும் மதம் மாற வற்புறுத்த அவரும் மறுக்கவே, அவரையும் ரம்பத்தால் இரண்டாக பிளக்கப்பட்டார் .
பின்னர், அச்சிறுவனை அவனையும் மதம் மாற வற்புறுத்த , அதற்கு மறுப்புத் தெரிவிக்க , மலையில் இருந்து சிறுவனை உருட்டி விட ஆணைப் பிறப்பித்தான் .

சிறுவனை மலை உச்சியில் உருட்டி விட முயலும் போது , " யா அல்லாஹ் இவர்களது தீங்கை விட்டும் நீ விரும்பிய விதத்தில் என்னைக் காப்பாற்றுவாயாக! என்று பிரார்த்தித்தான் . உடனே மலையில் நில நடுக்கம் ஏற்பட்டு சிறுவனைத் தவிர்த்து மற்ற பணியாளர்கள் மலையிலிருந்து உருண்டு இறந்தனர் .
சிறுவனை மீண்டும் அரசன் பிடித்து விசாரிக்க , " அல்லாஹ் அவர்களை விட்டு என்னைக் காப்பாற்றினான் " என்று கூற , சிறுவனை படகில் ஏற்றி நடுக் கடலில் கொண்டு போய் கடலில் போட முயற்சிக்கும் போது, " யாஅல்லாஹ் இவர்களது தீங்கை விட்டும் நீ விரும்பிய விதத்தில் என்னைக் காப்பாற்றுவாயாக!
என்று பிரார்த்தித்தான்.
அப் படகு கவிழ்ந்து சிறுவனைச் தவிர்த்து அனைவரும் கடலில் முழ்கி இறந்தனர் .
அரசன் சிறுவனைப் பிடித்து " உன்னை கொல்வதற்காக மற்றவர்கள் இறந்து போகிறார்கள். எனவே உன்னைக் கொல்வதற்கு நீயே ஓர் உபாயத்தை சொல் " என்றான்.
" நான் கூறுவதுபோல் நீ செய்யாத வரையில் என்னை நீ கொல்ல முடியாது "
அரசன் , " என்ன செய்ய வேண்டும் ?"
" மனிதர்களை யாவரையும் ஒரு இடத்தில் ஒன்று கூட்ட வேண்டும் என்னைக் கழுவிலேற்றி , எனது அம்புக் கூட்டிலிருந்து ஒரு அம்பை எடுத்து, நாணிலேற்றி ,
" பிஸ்மில்லாஹி ரப்பில் குலாம் " அதாவது இந்தச் சிறுவனின் ரப்பாகிய அல்லாஹ்வின் திருப்பெயரால் எய்கின்றேன்" என்று அவ்வம்பை எய்ய வேண்டும். என் மரணத்தை என் இறைவன் தர முடியுமே தவிர , உன்னால் முடியாது " _என்று கூறினான்.
சிறுவன் கூறிய வண்ணம் திறந்த வெளியில் அவ்வூரில் உள்ளவர்கள் யாவரையும் ஒன்று கூட்டி , அவனைக் கழுவிலேற்றி, அவனது அம்பை எடுத்து , அவன் கூறியவாறே கூறி எய்தப்பட்டது .
அவ்வம்பு சிறுவனின் கண்ணுக்கும் , செவிக்கும் இடையில் உள்ள பொட்டில் தைத்தது . அவன் அந்த இடத்தில் கையை வைத்த வண்ணம் இறந்தான் .
இதனைப் பார்த்த மக்கள் யாவரும் ," இச்சிறுவனின் இறைவனை நாங்கள் விசுவாசித்தோம் . இச்சிறுவனின் இறைவனை நாங்கள் விசுவாசித்தோம் " என்று கூறினார்கள்.
உடனே , அரசன் பெரிய பெரிய பள்ளங்களில் நெருப்புக் குண்டங்களை உண்டாக்கி , மனிதர்கள் மதம் மாறவில்லை என்றால் நெருப்புக் குண்டத்தில் வீசி எறியச் சொன்னான் .
அப்படி எறிக்கப்பட்டவர்கள் 20 ஆயிரம் என்றும் 70 ஆயிரம் என்றும் காணக் கிடைக்கிறது .
அதில் ஒரு பெண் தன் கைக்குழந்தையுடனும் மற்ற இரண்டு குழந்தைகளுடனும் நெருப்பில் குதிக்க தாமதித்த போது , கைக்குழந்தை " என் தாயே ! நீங்கள் சத்தியத்தில் இருக்கின்றீர்கள் " என்றதும் , அவளது முதல் மகனை நெருப்பில் வீசப்பட்டது .
அவள் ஈமானில் உறுதியாக இருந்தாள். அடுத்து இரண்டாவது மகனை நெருப்பில் வீசப்பட்டது.அப்போதும் ஈமானில் உறுதியுடன் , இறுதியாக தன் கைக் குழந்தையுடன் நெருப்பினுள் உறுதியான ஈமானுடன் வீழ்ந்தாள். (முஸ்லிம் ,திர்மீதி இவற்றின்சாரம்)

இவ்வரலாற்றை மையப்படுத்தி திருக்குர்ஆனில் இறைவன் .....
قُتِلَ اَصۡحٰبُ الۡاُخۡدُوۡدِۙ

அகழுடையவர்கள் (பள்ளக் கிடங்குடையவர்கள் ) அழிக்கப்பட்டார்கள் (அல்குர்ஆன் : 85:4)
النَّارِ ذَاتِ الۡوَقُوۡدِۙ

அது, விறகுகள் போட்டெரித்த நெருப்பு (அகழ் நெருப்பு )

(அல்குர்ஆன் : 85:5)
اِذۡ هُمۡ عَلَيۡهَا قُعُوۡدٌ ۙ

அதன் முன் அவர்கள் உட்கார்ந்து கொண்டிருந்த சமயத்தில்,

(அல்குர்ஆன் : 85:6)
وَّهُمۡ عَلٰى مَا يَفۡعَلُوۡنَ بِالۡمُؤۡمِنِيۡنَ شُهُوۡدٌ

நம்பிக்கையாளர்களை (நெருப்புக் கிடங்கில் போட்டு) நோவினை செய்வதை அவர்கள் (வேடிக்கையாகப்) பார்த்துக் கொண்டுமிருந்தார்கள். (அல்குர்ஆன் : 85:7)

وَمَا نَقَمُوْا مِنْهُمْ اِلَّاۤ اَنْ يُّؤْمِنُوْا بِاللّٰهِ الْعَزِيْزِ الْحَمِيْدِۙ

(நம்பிக்கை கொண்ட) அவர்களில் யாதொரு குற்றத்தையும் அவர்கள் காணவில்லை. எனினும், மிக்க புகழுடையவனும், (அனைவரையும்) மிகைத்தவனுமாகிய அல்லாஹ்வை அவர்கள் நம்பிக்கை கொண்டதையே அவர்கள் குற்றமாகக் கண்டனர். (அல்குர்ஆன் : 85:8)

الَّذِىْ لَهٗ مُلْكُ السَّمٰوٰتِ وَالْاَرْضِ وَ اللّٰهُ عَلٰى كُلِّ شَىْءٍ شَهِيْدٌ

வானங்கள், பூமியின் ஆட்சி அவனுக்குறியதே! (அவனை நம்பிக்கை கொண்டதற்காகவே அவர்களை நெருப்பில் எறிந்தனர்.) அல்லாஹ்வோ, (இவர்கள் செய்த) அனைத்தையும் அறிந்தவனாகவே இருந்தான். (அல்குர்ஆன் : 85:9)

இவ்வுண்மைச் சம்பவம் நபி (ஸல்) அவர்கள் பிறப்பதற்கு 90 ஆண்டுகளுக்கு முன்னர் நிகழ்ந்தது .
உமர் (ரலி) அவர்களின் ஆட்சி காலத்தில் வேறு ஒரு காரியத்திற்காக பூமியைத் தோண்டிய போது , தனது பொட்டில் அம்புக் காயமுள்ள இடத்தில் தனது விரலை வைத்த வண்ணம் அடக்கப்பட்ட ஒரு சிறுவனின் பிரேதம் தோண்டி எடுக்கப்பட்டது. கையை அவ்விடத்தை விட்டு அகற்றிய போது . காயத்திலிருந்து இரத்தம் வெளிவருவதும் ,கையை விட்டால் அது அக்காயத்தை அடைத்துக் கொள்வதுமாக இருந்தது.
இதனைப் பார்த்த நபித்தோழர்கள் கலீஃபா உமர் (ரலி) அவர்களுக்கு விஷயத்தை தெரிவித்து , மறு உத்தரவுக்கு காத்திருந்தனர் .
கலீஃபா அவர்கள் " இந்தச் சிறுவன் நெருப்பு குண்டங்களில்
சம்பந்தப்பட்டவன் .அவனை அப்படியே வைத்திருங்கள் கியாமத்து நாள் வரை இறைவன் அவனை உயிர்ப்பிக்கும் வரை அப்படியே அடக்கம் செய்யுங்கள் .- தப்ஸீருல் ஹமீத்

## கராமத் 31

(குர்ஆன் கூறும் இறைநேசர்களான உயிர்த்தியாகிகளின் வரலாறு )
தினமும் நாம் ஓதும் யாஸீன் சூராவில் உயிர்த்தியாகிகளான வலிமார்களின் வரலாற்றை இறைவன் கூறியிருப்பது உங்களுக்குத் தெரியுமா ? சொல்றேன்.
"நான் உம்மை வானுக்கு உயர்த்தப் போகிறேன். உமது சிஷ்யர்களை ஒவ்வொருவராகவும் , இரண்டிரண்டு பேர்களாகும் பிரித்து, நகரங்களுக்கு அனுப்பி ஜனங்களை சன்மார்க்கத்தில் வருமாறு அழைக்கச் செய்வீராக !" என்பதாக நபி ஈஸா (அலை) அவர்களுக்கு இறைவன் கட்டளையிட்டான்.
" நான் வானுக்கு சென்ற பிறகு உங்களை நான் நியமனம் செய்த இடங்களுக்கு நீங்கள் சென்று சன்மார்க்க பிரச்சாரம் செய்ய வேண்டும்.உங்களுக்கு நிர்ணயிக்கப்பட்டுள்ள இடத்தில் பேசப்படும் மொழியை நீங்கள் தெரிந்து கொள்ளாதிருந்தால், வானவர் உங்கள் பாதையில் வந்து உங்களுக்கு பானகம் அளிப்பார். அதனை நீங்கள் அருந்தினால், அந்த ஊரின் மொழியை நீங்கள் தெரிந்து கொள்வீர்கள்" என்று நபி ஈஸா (அலை) கூறினார்கள்.என்பதாக கஷ்ஃபுல் அஸ்ரார் என்னும் கிரந்தத்தில் கூறப்பட்டிருக்கிறது.
நபி ஈஸா ( அலை) அவர்கள் வானுக்கு உயர்த்தப்படுவதற்கு முன்னதாக அன்தாக்கியா நகருக்கு யோவானையும்(யஹ்யா), யூனுஸையும் அனுப்பி வைத்தார்கள். இவ்வூருக்கு செல்லுமாறு நபியவர்கள் கட்டளையிட்ட போது, தங்களுக்கு அந்த ஊர்வாசிகளின்மொழி தெரியாது' என்று இருவரும்
நபியவர்களிடம் தெரிவித்தனர்.

அப்போது நபியவர்கள் அவ்விருவரையும் குறித்து இறைவனிடம் பிரார்த்தித்தார்கள். அவ்விருவரும் தூங்கும் பொழுது மலக்குகள் அவர்களை அன்தாக்கியாவுக்கு கொண்டு சென்று விட்டனர். அவ்விருவரும் துயிலெழுந்து பார்க்கும்போது, அவர்கள் அன்தாக்கிய நாட்டில் இருந்தனர் அந்நாட்டு மொழியை இவ்விருவரும் நன்கு சரளமாக பேசினர்.

புதிய ஏற்பாடு "அப்போஸ்தலர் நடபடிகள் " 11: 27-ல் " அந்த நாட்களிலேயே எருசலேமிலிருந்து சில தீர்க்கதரிசிகள் அந்தியோக்கியா (அன்தாகியா) வுக்கு வந்தார்கள் "எனக் காணப்படுகிறது.
அவ்விருவரும் அந்நகரை நெருங்கியபோது, ஆடுகளை மேய்த்துக்கொண்டும், விக்கிரகங்களை தயாரித்து விற்பனை செய்து கொண்டு இருக்கும் ஒரு வயோதிகரை கண்டு, அவருக்கு சலாம் சொன்னார்கள். அவர் இவ்விருவரையும் "நீங்கள் யார் ?" என விசாரித்தார். அதற்கு அவர்கள் நாங்கள் ஈஸாவின் தூதர்கள். உங்களை சன்மார்க்கத்தில் அழைப்பதற்காக வந்திருக்கிறோம் "என்றனர் .
அப்போது அவர் நீங்கள் ஈஸாவின் தூதர்கள் என்பதற்கு என்ன அடையாளம் உங்களிடம் இருக்கிறது ? என்று வினவினார். அதற்கு அவர்கள் "நாங்கள் நோயாளிகளை குணப்படுத்துவோம், இறைவன் கட்டளைப்படி பிறவிக்குருடு வெண்குஷ்டம், ஊனம் இவற்றை நீக்குவோம் என்று கூறினார்கள்.

நபி ஈஸா (அலை) அவர்களது பிரார்த்தனையின் காரணமாக நபிமார்களுக்கு அளிக்கப்பட்டிருந்த அற்புத சக்திகளை அவர்களது தூதர்களான இறைநேசர்களுக்கும் இறைவன் அளித்திருந்தான்.
அப்பொழுது வயோதிகர், " அவ்வாறாயின் எனக்கு ஒரு புதல்வன் இருக்கிறான். அவன் பைத்தியக்காரன். வெகுகாலமாக எம்பையன் நோயாளியாக இருப்பதாகவும், வைத்தியர்கள் மருத்துவம் செய்து கைவிட்டதாகவும், அவனை குணமாக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்.
இவ்விருவரும் இறைவனிடம் துஆ செய்து குணப்படுத்தினார்கள். இதனை பார்த்த வயோதிகர் சன்மார்க்கத்தை தழுவினார்.அவரது பெயர் ஹபீப் எனப்படும் யாஸீன் சூராவில் கூறப்படுவதால், இவரை 'ஸாஹிபு யாஸீன்' (யாஸீனில் உள்ளவர் ) என்றும் கூறுவர்.
இந்த விவரம் ஊர் எங்கும் பரவிற்று.ஏராளமான நோயாளிகள் இவர்களால் குணம் அடைந்தனர். இறுதியாக இவர்களைக் குறித்த விபரம் அரசனுக்கு எட்டிற்று. இவ்விருவரையும் அரசன் வரவழைத்து விசாரணை செய்தான்.அப்போது அவர்கள் நாங்கள் ஈஸாவின் தூதர்கள். ஏகநாயகனை வணங்குமாறு உன்னை நாங்கள் அழைக்கின்றோம்" என்றனர்.
அதற்கு அரசன் " எங்களது தெய்வங்களை தவிர வேறு தெய்வமும் ஒன்றிருக்கிறதா ?" என்று வினவினான். அவ்விருவரும் "ஆம். அவன்தான் உம்மையும் உமது தெய்வங்களையும் உண்டு பண்ணியவன். அவனை விசுவாசித்தவர் சுவர்க்கம் புகுவர். அவனை நிராகரிப்பவர் நரகம் புகுவர் . அவர் அதில் என்றென்றும் நிரந்தரமாக வேதனை செய்யப்படுவர் "என்றனர்.
தனது தெய்வங்களைக் குறித்து அவர்கள் இவ்வாறு கூறியதால், அரசனுக்கு கோபம் ஏற்பட்டது.எனவே அவ்விருவரையும் சிறைச்சாலைக்கு அனுப்பினான்.

اِذْ اَرْسَلْنَآ اِلَيْهِمُ اثْنَيْنِ فَكَذَّبُوْهُمَا فَعَزَّزْنَا بِثَالِثٍ فَقَالُـوْۤا اِنَّاۤ اِلَيْكُمْ مُّرْسَلُوْنَ
நாம் அவர்களிடம் தூதர்கள் இருவரை அனுப்பியபோது, அவ்விருவரையும் அவர்கள் பொய்யாக்கினார்கள்; ஆகவே (அவர்களை) மூன்றாவது தூதரைக் கொண்டு வலுப்படுத்தினோம்; ஆகவே, "நிச்சயமாக நாங்கள் உங்களிடம் அனுப்பப்பட்ட தூதர்கள் ஆவோம்" என்று அவர்கள் கூறினார்கள். (குர்ஆன் : 36:14)
இவ்விபரம் நபி ஈஸா (அலை ) அவர்களுக்கு எட்டிற்று. அவ்விருவருக்கும் உதவி புரியும் பொருட்டு ஷம்ஊன் என்பவரை மூன்றாவதாக அவ்வூருக்கு அனுப்பினார்கள். பின்னர் நபியவர்கள் வானுக்கு உயர்த்தப்பட்டு விட்டார்கள்.
ஷம்ஊன் என்பவர் சாமானியராகவே இவ்வூருக்கு வந்து, வீட்டிற்கு அருகில் வசித்தார். இவர் இன்னார் என்பதும், இந்த விஷயத்திற்காக வந்தார் என்பதும், இங்குள்ளவர்களுக்குத் தெரியாது. இவரிடம் மனிதர்கள் நெருங்கி பழகினார். ஜனங்களின் மத்தியில் இவர் மீது அன்பும் பிரியமும் ஏற்பட்டது. பின்னர் கொஞ்சம் கொஞ்சமாக அரசனுக்கு இவரைக் குறித்த செய்தி தெரிந்தது. அரசனிடம் அவருக்கு அறிமுகம் ஏற்பட்டது. அந்த ஊராரின் மத வழக்கத்தையே அவரும் கடைப்பிடிப்பதாக காட்டிக் கொண்டார். ஆகவே தங்களுடைய மதத்தை கடைப்பிடிப்பவர் என ஜனங்களும் , அரசரும் எண்ணிக் கொண்டிருந்தனர்.

இந்நிலையில் ஒருநாள் அரசனை நோக்கி ஷம்ஊன் "தாங்கள் இருவரை சிறைச்சாலையில் வைத்திருப்பதாகவும், அவ்விருவரும் உம்முடைய தெய்வத்தைத் தவிர வேறு தெய்வம் இருப்பதாக கூறியதாகவும் நான் கேள்விப்பட்டேன். அவ்விருவரையும் வரவழைத்தால்,அவர்கள் கூறுவது இன்னது என்பதாக நானும் தெரிந்து கொள்ளலாம். அவர்களிடம் உன் சார்பாக நான் தர்க்கமும் செய்யலாம்."
ஷம்ஊனின் வேண்டுகோளுக்கிணங்க, அவ்விருவரையும் அரசன் சிறைச்சாலையிலிருந்து வரவழைத்தான். அவர்களிடம் ,
ஷம்ஊன் : "உங்களை அனுப்பியவர் யார் ?"
இருவரும்: " எல்லாவற்றையும் சிருஷ்டித்தவனும்,இணையற்ற வனுமாகிய அல்லாஹுத்தஆலா "
ஷம்ஊன் : "அவனைக் குறித்து விவரம் கூறுங்கள்"
இருவரும் : "அவன் விரும்பியதை செய்வான். அவன் நாடியதை தீர்ப்புச் செய்வான் .
ஷம்ஊன் : " அதற்கு உங்களுடைய ஆதாரம் என்ன ?
இருவரும் : அரசர் சோதித்து , விரும்புவதை செய்வோம்.
உடனே ஒரு பையன் அழைத்து வரப்பட்டான். அவனுக்கு கண்ணில்லை. முகத்தில் கண் இருக்கிற இடம் தெரியாமல் இருந்தது. பையனுக்கு கண்கள் உண்டாக வேண்டும் என இவ்விருவரும் பிரார்த்தித்தனர்.
கண் இருக்க வேண்டிய இடம் பையனுக்கு பிளந்தது.மண் உருண்டைகளை எடுத்து கண் இருக்க வேண்டிய இரு பிளவுகளிலும் வைத்தனர். அவ்விரு உருண்டைகளும் இரு விழிகள் ஆக மாறின. பையன் நன்றாக பார்ப்பவனாகி ஆகிவிட்டான்.

அரசன் இதனைக் கண்டு ஆச்சரியமடைந்தான் . அப்பொழுது ஷம்ஊன்" உனது தெய்வத்தை நீ பிரார்த்தித்தால், இதனை போல அது செய்யுமா ? அவ்வாறு செய்தால் உமக்கும்
அத்தெய்வத்துக்கும் சிறப்பல்லவா ? "என்று அரசனைக் கேட்டார் .
அதற்கு அரசன், " நீ அறியாத ரகசியம் என்னிடம் இல்லை. எங்களது தெய்வத்திற்கு பார்க்கவும் முடியாது. செவி ஏற்கவும் முடியாது. நன்மை தீமை செய்யவும் முடியாது " என்று கூறியதுடன் ,
" இங்கு ஒரு பையன் இருந்தான். அவன் மரணித்து ஏழு நாட்கள் ஆகின்றன. அவனது தந்தைக்கு பக்கத்து ஊரில் ஒரு தோப்பு இருக்கிறது. அங்கு அவர் சென்றிருக்கிறார். இன்னமும் அவர் வரவில்லை. அவர் குடும்பத்தினர் அவரை எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றனர். அவனை அடக்கம் செய்துவிட என் அனுமதி கோரினர். அவர் வரும் வரை பொறுங்கள் என நான் உத்தரவிட்டு இருக்கிறேன் உங்களது றப்பு அவனை உயிர்ப்பித்து விடுவானோ ? "என்று அவ்விருவரையும் வினவினான்.

பிணம் கொண்டுவரப்பட்டது. அவ்விருவரும் இறைவனை பகிரங்கமாக பிரார்த்தித்தனர். ஷம்ஊன் ரகசியமாக மனதுக்குள் அவர்களுடன் சேர்ந்து பிரார்த்தித்தார். இறைவனது கட்டளைப்படி அப்பிணம் உடனே உயிர் பெற்று எழுந்தது.

உயிர்பெற்று எழும்பிய அந்த பையன் " நான் குஃப்ரான கொள்கையில் விசுவாசித்தவனாக மரணித்தவன். என் உடலை விட்டு என் ஆவி பிரிந்த உடன் நெருப்பிலான ஏழு ஓடைகள் வழியாக ஆவி கொண்டு செல்லப்பட்டது. ஆதலால், நீங்கள் இணை வைத்து வணங்கி கொண்டிருப்பது குறித்து உங்களுக்கு நான் அச்சுறுத்துகிறேன் .ஏகநாயகனை விசுவாசிகள். இதோ வானில் தலைவாசல் திறந்திருக்கிறது. நபி ஈஸா (அலை ) அர்ஷிக்கு கீழிருந்து, ' நாயனே..! எனது தோழர்களுக்கு உதவி செய். அவர்கள் எனது தூதுவர்கள் " என்று இறைவனை பிரார்த்தித்துக் கொண்டு இருக்கிறார்.
எனவேதான் இறைவன் என்னை உயிர்ப்பித்திருக்கிறான். ஆகவே வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை ஈஸா அல்லாஹ்வின் ஆன்மாவாகவும் ,அவனது வார்த்தையாகவும் இருக்கிறார் .இந்த மூவரும் அல்லாஹ்வின் தூதர்கள் என்று நான் சாட்சி கூறுகிறேன் " என்றான்.
இதனைக் கேட்ட அரசன், "அம்மூவர் யார் ? "என்றான் அப்பையன் " யோவான் , யூனுஸ் , இவர் ஷம்ஊன்" என்றான்.

அரசன் ஆச்சரியமடைந்தார். பையனது வார்த்தைகள் அரசனின் இதயத்தில் ஆழப்பதிந்து விட்டது என்பதை உணர்ந்து ஷம்ஊன் , தாம் மஸீஹு ஈசாவின் தூதர்தாம் என்பதை தெரிவித்து, அரசனுக்கு சன்மார்க்க உபதேசங்கள் புரிந்தார்.
அவரது உபதேசத்தின் காரணமாக அரசன் மட்டும் விசுவாசம் கொண்டதாகவும் அவனின் பிரஜைகளிலுள்ள பிடிவாதக்காரர்களுக்கு அஞ்சி தனது விசுவாசத்தை மறைத்துக் கொண்டதாகவும் இமாம் குஷைறி (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள்.
அவ்வரசனும் கூட விசுவாசம் கொள்ளவில்லை என்பதாக வஹபுப்னு முனப்பஹ் (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள்

அவனது சமூகத்தினர் தங்களது பழைய தெய்வங்களின் கொள்கையிலேயே ஸ்திரமாக இருந்து, அந்த தூதர்களின் கண்ணைக் கட்டியும், கைகளை பின்னால் கட்டியும் கல்லெறிந்து கொன்று விட்டனர்.
முதன்முதலாக இவர்களை சந்தித்து விசுவாசம் கொண்ட ஹபீப் என்பவரையும், இப்பையனின் தந்தையும் அவர்கள் கொன்றுவிட்டனர். ஹபீப் அவர்களின் அடக்கஸ்தலம் இன்னும் அன்தாகியாவில் உள்ளது. பின்னர் அல்லாஹுத்தஆலா வானவர் ஜிப்ரீல் (அலை) அவர்களை அனுப்பினான். அவர் அவர்களிடத்தில் ஒரு சப்தமிட்டார். அச்சப்தத்தால் அவர்கள் யாவரும் மடிந்தனர்.- தப்ஸீருல் ஹமீத்

## கராமத் 32

நபிமொழியில் இறைநேசர்கள் 1
இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பனூ இஸ்ராயீல் சமுதாயத்தைச் சேர்ந்த 'ஜுரைஜ்' என்று அழைக்கப்பட்டு வந்த ஒருவர் தொழுது கொண்டிருந்தார்.
அப்போது அவரின் தாயார் வந்து அவரை அழைத்தார். அவருக்கு பதில் கூற ஜுரைஜ் மறுத்துவிட்டார். 'நான் அவருக்கு பதிலளிப்பதா, அல்லது தொழுவதா?' என்று (மனத்திற்குள்) கூறினார்.
பிறகு (மீண்டும்), அவரின் தாயார் அவரிடம் வந்து, (தான் அழைத்தும் தன் மகன் பதிலளிக்க வில்லையே என்ற கோபத்தில்), 'இறைவா! விபசாரிகளின் முகத்தில் விழிக்கச் செய்யாத வரை அவனுக்கு (ஜுரைஜுக்கு) மரணத்தைத் தராதே' என்று கூறினார்.
(ஒரு நாள்) ஜுரைஜ் தன் ஆசிரமத்தில் இருந்தார். அப்போது ஒரு பெண், 'நான் ஜுரைஜை நிச்சயம் சோதனைக்குள்ளாக்குவேன்' என்று கூறினாள். அதற்காக, ஜுரைஜின் முன்பு வந்து அவருடன் (தகாத உறவு கொள்ள அழைத்துப்) பேச முனைந்தாள். அவர் (இணங்க) மறுத்துவிட்டார்.
எனவே, அவள் ஓர் இடையனிடம் சென்று, தன்னை அவனுடைய ஆளுகைக்குள் ஒப்படைத்துவிட்டாள். அதன் காரணமாக ஒரு (ஆண்) குழந்தையைப் பெற்றெடுத்தாள்.
பிறகு, 'இவன் ஜுரைஜுக்குப் பிறந்தவன்' என்று கூறினாள். (இதைக் கேட்ட) மக்கள் (வெகுண்டெழுந்து) ஜுரைஜிடம் வந்தனர்; (கோபாவேசத்தில்) அவரின் ஆசிரமத்தைத் தகர்த்து உடைத்துவிட்டனர்; அவரை (அவரின் அறையிலிருந்து) இறக்கி அவரை ஏசினர். ஜுரைஜ் உளூச் செய்து தொழுதார். பிறகு அக்குழந்தையிடம் வந்து, 'குழந்தையே! உன் தந்தை யார்?' என்று கேட்டார். அந்தக் குழந்தை (வாய் திறந்து), '(இன்ன) இடையன்' என்று கூறியது.
இதைச் செவியுற்ற மக்கள், 'உங்கள் ஆசிரமத்தைத் தங்கத்தால் நாங்கள் கட்டித் தருகிறோம்' என்று (ஜுரைஜிடம் அனுமதி) கேட்டார்கள். அதற்கு ஜுரைஜ், 'இல்லை; களிமண்ணால் கட்டித் தந்தாலே போதும்' என்று கூறிவிட்டார்.
ஸஹீஹ் புகாரி : 2482.

## கராமத் 33

(மேகத்திலிருந்து அசரீரி )
நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு மனிதர் ஒரு காட்டு நிலத்தில் இருந்த போது, ஒரு மேகத்தினிடையே "இன்ன மனிதரின் தோட்டத்திற்கு நீர் பொழி" என்று ஒரு சப்தம் வருவதைக் கேட்டார்.
உடனே அந்த மேகம் நகர்ந்து, கருங்கற்கள் நிறைந்த ஒரு பகுதியில் மழையைப் பொழிந்தது. அங்கிருந்த நீரோடைகளில் ஒன்றில் அந்த நீர் முழுவதும் ஓடியது.
உடனே அந்த மனிதர் அந்த நீர்வழியைத் தொடர்ந்தார்.
அப்போது ஒரு மனிதர் தமது தோட்டத்தில் நின்றுகொண்டு மண்வெட்டியால் தண்ணீரை திருப்பிவிட்டுக்கொண்டிருந்தார்.
அவரிடம், "அல்லாஹ்வின் அடியாரே! உம்முடைய பெயர் என்ன?" என்று கேட்டார். அவர் "இன்னது" என மேகத்தினிடையே கேட்ட அதே பெயரைச் சொன்னார்.
அப்போது அவர், "அல்லாஹ்வின் அடியாரே! ஏன் என் பெயரைக் கேட்கிறீர்?" என்றார்.
அதற்கு அந்த மனிதர், "நான் மேகத்தினிடையே உமது பெயரைக் குறிப்பிட்டு, "இன்ன மனிதரின் தோட்டத்தில் நீரைப்பொழி" என ஒரு சப்தத்தைக் கேட்டேன். அந்த மேகத்தின் நீர்தான் இது. அந்தத் தோட்டத்தி(ன் மூலம் கிடைக்கும் வருவாயி)ல் நீர் என்ன செய்கிறீர்?"என்று கேட்டார்.
அதற்கு அந்தத் தோட்டக்காரர், "நீங்கள் சொல்வது உண்மையானால், அதன் விளைச்சலில் கிடைக்கும் வருவாயில் மூன்றில் ஒரு பகுதியைத் தர்மம் செய்கிறேன். மற்றொரு மூன்றில் ஒரு பகுதியை நானும் என் மனைவி மக்களும் உண்கிறோம். இன்னொரு மூன்றில் ஒரு பகுதியை மறுபடியும் விவசாயம் செய்கிறேன்" என்று கூறினார்.
ஸஹீஹ் முஸ்லிம் : 5707.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## கராமத் 34

(நபிமொழியில் மூன்று இறைநேசர்கள்)
இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:
'(முன்காலத்தில்) மூன்று மனிதர்கள் நடந்து சென்றனர். அப்போது மழை பொழிந்தது. அவர்கள் மலையில் உள்ள குகையில் நுழைந்தனர். ஒரு பெரிய பாறை உருண்டு வந்து குகை வாசலை அடைத்தது.
அப்போது அவர்கள் தமக்குள், 'நீங்கள் செய்த நல்லறங்களில் மிகச் சிறந்ததைக் கூறி அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்' என்றனர்.
அவர்களில் ஒருவர், 'இறைவா ! எனக்கு வயது முதிர்ந்த பெற்றோர் இருந்தனர்; நான் ஆடு மேய்க்க வெளியே சென்றுவிட்டுப் பிறகு வந்து, பால் கறந்து, பால் பாத்திரத்தைப் பெற்றோர்களிடம் கொண்டு வருவேன். அவர்கள் அருந்துவார்கள். பிறகு குழந்தைகளுக்கும் குடும்பத்தாருக்கும் என் மனைவிக்கும் கொடுப்பேன். ஓர் இரவு தாமதமாக வந்தேன். பெற்றோர் உறங்கிவிட்டனர். அவர்களை எழுப்புவதை நான் விரும்பவில்லை. குழந்தை பசியால் என் காலடியில் அழுதனர். விடியும்வரை இதே நிலை நீடித்தது. இறைவா! நான் இதை உன்னுடைய திருப்தியை நாடிச் செய்திருப்பதாக நீ அறிந்தால் நாங்கள் வானதைப் பார்க்கும் வகையில் ஓரிடை வெளியை ஏற்படுத்து' எனக் கூறினார்.
அவ்வாறு (பாறை விலகி) இடைவெளி உண்டானது.
மற்றொருவர், 'இறைவா! என்னுடைய தந்தையின் உடன் பிறந்தாரின் மகளை எந்த ஆணும் எந்தப் பெண்ணையும் விரும்புவதைவிட அதிகமாக விரும்பினேன் என்பதை நீ அறிவாய். அவள் தனக்கு நூறு தீனார் தரும்வரை தன்னை அடையமுடியாது என்றாள். நான் உழைத்து நூறு தீனாரைத் திரட்டினேன். அவளுடைய இரண்டு கால்களுக்கிடையே நான் அமர்ந்தபோது அல்லாஹ்வை அஞ்சிக்கொள்! உரிய முறையின்றி முத்திரையை உடைக்காதே! என்று அவள் கூறினாள். உடனே அவளைவிட்டு நான் எழுந்து விட்டேன். இதை உன்னுடைய திருப்தியை நாடி நான் செய்திருப்பதாக நீ அறிந்தால் இந்தச் சிரமத்தைவிட்டு நீக்கு' எனக் கூறினார். அல்லாஹ் அவர்களைவிட்டும் மூன்றில் இரண்டு மடங்கு (சிரமத்தை) நீக்கினான்.
மற்றொருவர், 'இறைவா ! நான் மூன்று ஸாவு கேழ்வரகு கூலிக்கு ஒரு வேலையாளை அமர்த்தினேன். கூலியை நான் கொடுத்தபோது அதை அவர் மறுத்துவிட்டார். அந்தக் கேழ்வரகைப் பயிர் செய்தேன். அதன் வருமானத்தில் மாடுகளையும் அதை மேய்ப்பவரையும் விலைக்கு வாங்கினேன்.
பிறகு அவர் வந்து, அல்லாஹ்வின் அடிமையே! என்னுடைய கூலியைக் கொடு! என்றார். இந்த மாடுகள், அதை மேய்ப்பவர்கள் எல்லாம் உமக்குரியவை; எடுத்துச் செல்லும் என்று கூறினேன்.
அதற்கவர் என்னைக் கேலி செய்கிறீரா? என்று கேட்டார். நான் உம்மைக் கேலி செய்யவில்லை; இவை உமக்குரியவைதான் எனக் கூறினேன். இறைவா! இதை நான் உன்னுடைய திருப்தியை நாடிச் செய்திருப்பதாக நீ அறிந்தால் எங்களைவிட்டு இந்தச் சிரமத்தை நீக்கு' எனக் கூறினார். முழுமையாகச் சிரமம் விலகியது.' என இப்னு உமர்(ரலி) அறிவித்தார். ஸஹீஹ் புகாரி : 2215.

## கராமத் 35

(சத்தியத்தை தேடி கண்டடைதல்)
மூஸா (அலை) தவ்ராத் வேதம் அருளப்பட்ட நபி மூஸா (அலை ) அவர்களை பார்க்கணும் வேறு ஒருவர் மிக அறிந்தவராக இருந்தார் என்று ஒப்புக்கொள்ள யூதர்களது மனம் இடந்தரவில்லை. வேறு ஒருவர் அதிகம் தெரிந்தவராக இருந்தார் என்பதை ஒப்புக் கொள்வதால், தங்களது நபிக்கு இழுக்கு வருவதாக அவர்கள் தவறாக எண்ணிக் கொண்டனர்.
அப்பொழுது பனி இஸ்ராயில்களிலுள்ள அறிஞர் ஒருவர், இது பற்றி தம் நபியிடமே தெரிந்து கொள்ள வேண்டி ,"மிக அறிந்தவர் யார் ? " என்று மூஸா (அலை) அவர்களிடமே வினவினார்.
அதற்கு மூஸா (அலை ) அவர்கள், "அல்லாஹ்தான் மிக அறிந்தவன் " என்று கூறாமல், " நான் " என்று கூறினார். இதற்காக இறைவன் அவரை கண்டித்து, " நீர் மிக அறிந்தவர் அல்ல, இரு கடல்களும் சேரும் இடத்தில் எனது அடிமை ஒருவர் இருக்கிறார் அவர் உண்மை பார்க்கிலும் மிக அறிந்தவர் " என்று அறிவித்தான். அவ்வடிமைதான் ஹஜரத் கிள்று (அலை) ஆவார்கள்.
அவரது முகவரி ***'இரு கடல்கள் சேருமிடம்'*** என்று இறைவன் குறிப்பிட்டாலும், மேலதிகமான விபரங்கள் தேவைப்பட்டதால், நபி மூஸா (அலை) அவர்கள் : " எனது றப்பே..! அவரை நான் எங்கு காண்பேன் ? அவரைக் கண்டுபிடிக்கும் விஷயத்தில் எவ்வாறு நான் வெற்றி அடைய முடியும் ? " என்றார்.
அதற்கு இறைவன் "கடற்கரையில் ஒரு பாறையின் அருகில் அவரை நீர் காணலாம் . உப்பிட்ட ஒரு மீனை உமது கூடையில் வைத்துக் கொள்வீராக ! அது உனக்கு கட்டு சாதமாகவும் இருக்கட்டும். எந்த இடத்தில் அம்மீன் உயிர்பெற்று உம்மை விட்டு மறைந்து விடுகிறதோ அந்த இடத்தில் நீர் அவரைக் காணலாம் " என்றான் .

وَاِذْ قَالَ مُوْسٰى لِفَتٰىهُ لَاۤ اَبْرَحُ حَتّٰٓى اَبْلُغَ مَجْمَعَ الْبَحْرَيْنِ اَوْ اَمْضِىَ حُقُبًا
இன்னும் மூஸா தம் பணியாளிடம், “இரு கடல்களும் சேரும் இடத்தை அடையும் வரை நீங்காது நடப்பேன்; அல்லது வருடக் கணக்கில் நான் போய்க்கொண்டிருப்பேன்” என்று கூறியதை நீர் நினைவு படுத்துவீராக. (அல்குர்ஆன் : 18:60)

மேற்கண்ட வசனத்தில் ஒரு ஹுக்பு என்பது 80 வருட காலம்; அதாவது நீண்ட காலத்துக்கு பிரயாணம் செய்வது, இரு கடல்கள் சந்திக்கும் இடத்தை அடைவது 80 வருட காலமாவது நான் நடப்பேன் அதாவது இறைஞானம் போதிப்பவர் கிடைப்பதற்காக பெரிய சிரமத்தையும் ஏற்பேன் என்ற கருத்து .

நபி மூஸா (அலை) அவர்கள் ஞானத்தை தேடும் பயணத்தின் துணையாக தம் சகோதரியின் புதல்வர் யூஷஉ (அலை) அவர்களைத் தேர்ந்தெடுத்தார்கள் .
உண்மையான சிஷ்யனுக்கு தான் பின்பற்றக்கூடிய ஞானாசிரியரைத் தேடி கண்டுபிடிக்கும் விஷயத்தில் தன் நோக்கம் வெற்றியடையும் வரை பின் வாங்குவதில்லை என்ற நிய்யத்தும் இருக்க வேண்டும்.
ஏனெனில் ஞானாசிரியரைத் தேடுவது, அந்தரங்கத்தில் சத்தியத்தை தேடுவதாகும் என்ற விபரங்கள் இந்த வசனத்தில் சுட்டிக் காட்டப்படுகின்றன என்பதாக **"தாவீலாத்துன்னஜ்மிய்யா"** என்ற கிதாபில் கூறப்பட்டிருக்கிறது.

فَلَمَّا بَلَغَا مَجْمَعَ بَيْنِهِمَا نَسِيَا حُوْتَهُمَا فَاتَّخَذَ سَبِيْلَهٗ فِى الْبَحْرِ سَرَبًا
அவர்கள் இருவரும் அவ்விரணடு (கடல்களு)க்கும் இடையே ஒன்று சேரும் இடத்தை அடைந்த போது; அவ்விருவருடைய மீனை அவ்விருவரும் மறந்து விட்டனர்; அது கடலில் தன்னுடைய வழியைச் சுரங்கம் போல் அமைத்துக்கொண்டு (நீந்திப் போய்) விட்டது. (அல்குர்ஆன் : 18:61)

ஹஜ்ரத் மூஸா (அலை ) அவர்களும் யூஷஉ (அலை) அவர்கள் கடற்கரை ஓரமாக நடந்து வந்து இரு கடல்களும் சந்திக்கும் இடத்தை அடைந்தனர். அங்கு ஒரு பாறை இருந்தது. அப்பாறையில் நபி மூஸா (அலை) அவர்கள் தூங்கினார்கள்.
பின்னர் மூஸா (அலை) அவர்கள் எழுந்து,பாறையின் அடியில் உள்ள சுனையில் ஒலுச் செய்து தொழுவதற்காக தயாரானார்கள்.
அந்த ஒலுத் தண்ணீரில் ஒரு துளி உப்பிட்ட பொறித்த மீனின் மீது விழுந்தது . உடனே அது உயிர் பெற்று, துள்ளிக் குதித்து, கடலில் விழுந்து, தனக்குரிய வழியே சென்றது .
இந்த சுனையின் தண்ணீர்தான் ***"மாவுல் ஹயாத்"*** என்னும் ஜீவ தீர்த்தம் என்று அழைக்கப்படுகிறது.
யூஷஉ (அலை) அவர்கள் இதனை ஆச்சரியமாகப் பார்த்துக் கொண்டிருந்தார். என்றாலும் ,அந்த உடனேயே நபி மூஸா (அலை) இடம் சொல்ல மறந்து விட்டார்.

பின் நபி மூஸா (அலை) உணவு சாப்பிட கேட்க , அப்போதுதான் மீன் மீண்டும் உயிர் பெற்று கடலில் குதித்ததை யூஷஉ (அலை) தெரிவிக்கிறார்கள் .
قَالَ اَرَءَيْتَ اِذْ اَوَيْنَاۤ اِلَى الصَّخْرَةِ فَاِنِّىْ نَسِيْتُ الْحُوْتَ وَ مَاۤ اَنْسٰنِيْهُ اِلَّا الشَّيْطٰنُ اَنْ اَذْكُرَهٗ وَاتَّخَذَ سَبِيْلَهٗ فِى الْبَحْرِ عَجَبًا

அதற்கு “அக்கற்பாறையில் நாம் தங்கிய சமயத்தில் நீங்கள் பார்த்தீர்களா? நிச்சயமாக நான் மீனை மறந்து விட்டேன்.” மேலும், அதை (உங்களிடம்) சொல்வதை ஷைத்தானையன்றி (வேறு எவனும்) என்னை மறக்கடிக்கவில்லை; மேலும் அது கடலுக்குள் தன் வழியை ஆச்சரியமாக அமைத்துக் கொண்டது!” என்று பணியாள் கூறினார். (அல்குர்ஆன் : 18:63)

உடனே நபி மூஸா (அலை) அவர்கள் "அதுதான் நாம் தேடி வந்த இடம் " என்று கூறி வந்த வழியே திரும்பிச் சென்று அக்கற்பாறையை அடைகிறார்கள் .

***அங்கே ... ஒருவர் பச்சை துணியால் தன்னை மூடிக்கொண்டும், தலையில் பச்சை துணியைக் கட்டிக் கொண்டு தொழுது கொண்டிருந்தார் . அவர்கள்தான் கிள்று (அலை) ஆவார்கள் .***

கிள்று (அலை) என்கிற விலாயத்துள்ள இறை வலியுல்லாஹ் இறைவன் இவர்களை அறிமுகப்படுத்தும் போதே ,மீன் உயிர் பெற்றெழும் கராமத்தைக் கொண்டுதான் ஆரம்பம் செய்கிறான்.

மேலும் கிள்று (அலை) அவர்கள் கியாமத் நாள் வரை ***ஹயாத்துன் வலியுல்லாஹ்*** என்பதாக சொல்லப்படுகிறது. எனவே அவர்கள் நித்தியமாக இருப்பதற்கென்று ***" மாவுல் ஹயாத் "*** என்னும் ஜீவ நீரை அருந்தியதாக வரலாற்று குறிப்பு ஒன்று காணப்படுகிறது. எனவேதான் நபி மூஸா (அலை) அவர்கள் மாவுல் ஹயாத் நீரில் ஒலு செய்யும்போது , அந்நீர் தெறித்து மீன் மீது விழ , பொறித்த மீனும் உயிர் பெற்றெழுந்தது .

அவர்கள் தொழுது முடித்ததும் ஹஜ்ரத் மூஸா (அலை) அவர்கள் அவருக்கு சலாம் சொல்லவே, அவர் பதில் சலாம் சொல்லிவிட்டு, " நீர் யார் ? " என விசாரித்தார்.

அதற்கு மூஸா (அலை) அவர்கள் " நான் மூஸா " என்றார்கள்

அப்போது கிள்று (அலை) அவரை நோக்கி " பனூ இஸ்ராயில்களது மூஸாவா நீர் ? " என்று வினவினார்

அப்பொழுது அவர் "ஆம் " என்றார்.

உடனே அவர் " உமக்கு பனூ இஸ்ராயீல்களிடம் அதிக வேலை இருக்குமே " என்று வினவினார்

அதற்கு மூஸா (அலை ) அவர்கள் "கல்வி பயில்வதற்காக இறைவன் என்னை தங்களிடம் அனுப்பி இருக்கிறான் " என்று பதிலளித்தார்கள் .

பின்னர் ஹஜரத் யூஷஉ ( அலை ) அவர்கள் அவ்விடத்தை விட்டு திரும்ப வந்து விட்டார்கள். அதனால் மூஸா ( அலை) அவர்கள் மட்டும் ஹஜரத் கிள்று (அலை) அவர்களுடன் இருந்தார்கள் .

*இறை நேசர்களுக்கு "விலாயத் " என்னும் மெஞ்ஞான உயர் பதவியை இறைவன் கிள்று (அலை) இவர்கள் மூலமாகவே கொடுப்பதாகவும் சொல்லப்படுகிறது.*

## கராமத் 36

(எதிரும் புதிரும்)

எதிர் வருவது என்னவென்றே தெரியாத புதிர் நிலையில்தான் நமது வாழ்க்கை நாள்தோறும் நகர்ந்துகொண்டு போகிறது. நம்மையறியாமலேயே நம்முடை நிகழ்ச்சிகள் நம் முன்னே நடக்கின்றன. நமக்குப் பிடிக்காத நிகழ்ச்சிகள் நடந்தாலும், அதனை தவிர்க்கவோ தடுக்கவோ முடியாமல் தடுமாறுகின்றோம்.

கைக்கு எட்டியது வாய்க்கு எட்டாமல் போகும்பொழுது, படுகின்ற துன்ப வேதனைகள் தொடர்கதையாவதும் உண்டு. சில நேரங்களில், வாழ்க்கையே விடுகதை போல கேட்கப்படுகின்ற கேள்விக்கு பதிலைத் தேடி அலைய வைக்கிறது .

கடலோரக் கிராமத்திற்கு ஒரு ஜென் குரு தன் சீடர்களுடன் வருகை தந்தார்.கிராம மக்கள் குருவிடம் ,

"எங்களுக்கு கடலில் மீன்பாடு அதிகம் வேண்டும்.

"அது கடலில் இல்லை; கரையில் இருக்கிறது."

"கரையில் உள்ள எங்க குடிசையெல்லாம் கோபுரமாக வேண்டும்"

"அது கரையில் இல்லை; கடலில் இருக்கிறது"

"எங்கள் தென்னை மரத்தில் காய்கள் செழிக்க வேண்டும். "

"அது மரத்தில் இல்லை; வேரில் இருக்கிறது."

குருவின் எதிரும் புதிருமான எகத்தாளமான பதில்களால் கிராமத்தார்கள் குழம்பினர்கள்

தலைமைச் சீடன் "குரு சரியாகத் தானே சொன்னார் " .

"எப்படிய்யா சரியாகச் சொன்னார்?"

"கடலில் மீன்பாடு கேட்டீர்கள்; அது கரையிலுள்ள நீங்கள் உயர்ந்த இலட்சியத்தோடு கடலில் மீன் பிடிக்க வேண்டும்"

"கரையிலுள்ள உங்க குடிசை கோபுரமாகக் கேட்டீர்கள் அதற்கு நீங்கள் கடலில் நன்கு உழைக்க வேண்டும்"

"தென்னையில் காய் செழிக்க கேட்டீர்கள் அது வேரில் உரமிட்டு நன்கு பேண வேண்டும்"

மூஸா (அலை) அவர்கள் இறைஞானம் பெற கிழ்று (அலை) அவர்களை அடைகிறார்கள் .

உங்களுக்கு கற்பிக்கப்பட்ட ஞானத்தை நீங்கள் எனக்கு கற்பிக்க வேண்டி உங்களைப் பின்பற்றலாமா?
அதற்கவர் "உங்களுடைய அறிவுக்கு அப்பாற்பட்டவைகளை நான் செய்யும்போது எவ்வாறு சகித்துக் கொண்டு இருப்பீர்கள் ?"
அதற்கு, மூஸா "இறைவன் அருளால் சகித்திருப்பவனாக என்னைக் காண்பீர்கள் ." .
பயணம் தொடர்ந்தது .
கடலை கடக்க கப்பலில் ஏறி கிழ்று (அலை) ஒரு பலகையைப் பெயர்த்து ஓட்டையாக்கி விட்டார் .இதைக் கண்டு மூஸா (அலை) பதறினார்.
அடுத்து கப்பலை விட்டு இறங்கி நடந்தனர் ஒரு சிறுவனை கிழ்று கொலை செய்து விட்டார். மூஸா (அலை) ரொம்பவும் பதறினார்கள்
பின்னர் இருவரும் நடந்து ஓர் ஊராரிம் வரவே தங்களுக்கு உணவளிக்க வேண்டினர். அவ்வூரர் மறுத்தனர். அந்த ஊரில் சரிந்து விழக்கூடிய சுவற்றை செப்பனிட்டு சரி செய்ய கிள்று (அலை) ஆய்த்தமானார்கள்.
கிள்று (அலை) அவர்கள் எதிரும் புதிருமான செய்கைக்கு விளக்கம் அளித்தார்கள்
அந்த கப்பல் சில ஏழைகளுக்குரியது. நல்ல கப்பலை கொடுங்கோல் அரசன் அபகரிக்காமல் இருக்க கப்பலை சேதப்படுத்தினேன் .

நல்ல நம்பிக்கையாளர்களுக்கு பிறந்த சிறுவன் வாலிபத்தில் தன் பெற்றோர்களுக்கு அநியாயம் செய்யாமல் இருக்க சிறுவனை கொலை செய்தேன் .
நல்ல நம்பிக்கையாளர்கள் சேமித்த புதையல் தன் இரு அனாதை குழந்தைகள் வாலிபனாகி பெறும்பொருட்டு சுவரை செப்பனிடம் போது புதையல் மேலே வந்து அவ்விருவருக்கும் கிடைக்கும் .
குர்ஆன் ( 18 : 66 - 82 )

"ஒன்று உங்களுக்கு மிக நன்மையாக இருந்தும் அதனை நீங்கள் வெறுக்கக்கூடும். ஒன்று உங்களுக்குத் தீங்காக இருந்தும் அதனை நீங்கள் விரும்பக்கூடும். அவை உங்களுக்கு நன்மை அளிக்குமா தீமையளிக்குமா என்பதை அல்லாஹ்தான் அறிவான்; நீங்கள் அறியமாட்டீர்கள் ".
(அல்குர்ஆன்: 2:216)

ஞானம் என்பது எதிரும் புதிருமானது

## கராமத் 37

(இறை நேசர்களுக்கு அறியாத புறத்திலிருந்து உணவு)
சூரா ஆல இம்ரானில் வரக்கூடிய இம்ரான் அவர்கள் பைத்துல் முஹத்தஸ் பள்ளிவாசலின் பொறுப்பாளர்களின் தலைவராக இருந்தார்கள் .அவருடைய மனைவி ஹன்னா அவர்கள் மரியம் (அலை) அவர்களின் தாயார் ஆவார்கள்.
ஹன்னா தனக்குப் பிறக்கும் குழந்தையை பைத்துல் முஹத்தஸ் பள்ளிவாசலுக்கு பணிவிடை செய்ய இறைவனிடம் நேர்ந்து இருந்தார்கள். ஆனால் பிறந்ததோ பெண் குழந்தை இருந்தாலும், அப்பெண் குழந்தையை பள்ளி நிர்வாகத்திடம் ஹன்னா ஒப்படைத்தார்கள்.
இப்பொழுது பைத்துல் முகத்தஸின் நிர்வாக பொறுப்பின் தலைவராக இருந்த இம்ரான் அவர்கள் காலமாகி , நபி ஜக்கரிய்யா(அலை) அவர்கள் பொறுப்பேற்றிருந்தார்கள்.
பெண் குழந்தையாக இருப்பதால், பள்ளிவாசலினுள் வைத்து வளரக்க முடியாத காரணத்தால் வளர்ப்பு மகளாக தங்களது தலைவர் இம்ரானின் மகளை வளர்க்க பள்ளிவாசல் நிர்வாகத்தினர் 27 போட்டி போட்டனர் .

27 பேர்களில் தலைமை பொறுப்பாளராக ஹஜரத் ஜக்கரிய்யா (அலை) அவர்கள் , " குழந்தையின் தாயாராகிய ஹன்னா உடன் பிறந்த ஈஷாஉ என்பவளை தான் மணந்து இருப்பதால், அந்த குழந்தையை வளர்ப்பதற்கு தான்தான் அதிக உரிமை பெற்றிருக்கிறேன் " என்று உரிமை கொண்டாடினர்கள் .
இருந்தாலும், திருவுளச் சீட்டு போட்டு எடுக்க வேண்டும் என்று நிர்வாகத்தினர் முடிவு செய்தனர். அதன்படி அவர்களுடைய எழுதும் பேனாக்களை உர்துன் நதிக்குச் சென்று எழுதுகோலை தண்ணீரில் போட்டு பார்த்தனர்.

எவருடைய எழுதுகோல் தண்ணீரில் மூழ்காமல் எதிர்த்து மிதந்து வருகிறதோ, அவரே குழந்தையை வளர்ப்பதற்கு தகுதியானவர். அந்தப் போட்டியில் நபிஜக்கரிய்யா வெற்றி பெற்றார்கள். நபி ஜக்கரிய்யா (அலை) அவர்களுக்கு மரியம் (அலை) அவர்களை வளர்ப்பு மகளாக வளர்க்கும் பொறுப்பு கிடைத்தது.
குழந்தையை வளர்ப்பதற்காகவே பைத்துல் முகத்தஸ் பள்ளியிலேயே ஒரு மாளிகை கட்டி அதில் வைத்திருந்தார்கள். அந்த மாளிகைக்கு ஏழு தலைவாசல்கள் இருந்தன. அதற்குள் நபி ஜக்கரிய்யா (அலை) அவர்கள் மட்டும் செல்வார்கள். பின்னர் அங்கிருந்து வரும் போது அந்த ஏழு வாசல்களையும் பூட்டி விடுவார்கள்.

இவ்வித நிலையில் நபி ஜக்கரிய்யா (அலை) அவர்கள் மரியம் ஸித்தீக்காவை பார்க்க செல்லும்போதெல்லாம் அங்கு கனி வர்க்கங்கள் முதலிய உணவுகள் இருப்பதை காண்பார்கள். கோடை காலம், வசந்த காலம், மாரி காலம், பனி காலம் ஆகிய எல்லா காலங்களிலும் கிடைக்கக்கூடிய கனி வர்க்கங்கள் அங்கு இருப்பதை பார்த்து மரியம் ஸித்திக்கா (அலை) அவர்களிடம் நபி ஜக்கரிய்யா ( அலை ) அவர்கள்,
"உனக்கு இவைகள் எங்கிருந்து வந்தன ? என்று விசாரிப்பார்கள் அதற்கு எனது றப்பிடமிருந்து அடைந்தேன்" என்று மரியம் ஸித்திக்கா (அலை) பதில் கூறுவார்கள்.
மரியம் (அலை) அவர்கள் தாயிடமோ, வேறு பெண்களிடமோ தாய்ப்பால் அருந்த இல்லை. மரியம் (அலை ) அவர்கள் மிகவும் சிறிய குழந்தையாக இருந்ததால் பேசுவதற்கு சக்தி பெற்றிருக்கவில்லை. நபி ஜக்கரிய்யா (அலை) அவர்கள் கேட்ட கேள்வியை விளங்கிக் கொள்ளவும், அதற்கு பதில் சொல்லவும் சக்தி பெற்றிருக்கவில்லை. இந்நிலையில் மர்யம் (அலை) அவர்கள் பேசியது ஓர் அற்புதமே ஆகும்.
பூட்டப்பட்ட தனி அறையினுள் இருந்த மரியம் (அலை) அவர்களுக்கு கனி வர்க்கங்கள் முதலிய உணவுகள் இறைவனிடத்திலிருந்து வருவதும் மிகப்பெரிய கராமத்தான விஷயமாகும். இந்த கராமத் அல்லாஹ்வின் அருள் ஆகும்

எங்கு அல்லாஹ்வின் அருள் இலங்கிக் கொண்டிருக்கிறதோ அந்த இடத்தில், இறைவனிடம் கேட்கப்படும் துஆக்களும் இறைவன் நிறைவேற்றி வைப்பதாக என்பதாக சொல்லப்படுகிறது.
எனவே ஜக்கரியா (அலை) அவர்கள் தனக்கு குழந்தை இல்லாத குறையை கராமத் நிகழ்ந்த இடத்தில் இறைவனிடம் கேட்க, இறைவன் நபி யஹ்யா (அலை) அவர்களை கொடுத்ததாக கூறப்படுகிறது.
இதிலிருந்து வலிமார்கள் இருக்கும் இடத்திலும், அவர்கள் அடக்கமாகி இருக்கும் இடத்திலும் கராமத்தான அற்புதங்களும் நிகழ்ந்து கொண்டே இருக்கும்.அந்த இடத்தில் கேட்கப்படும் துஆக்கள் துரிதமாக இறைவன் நிறைவேற்றி தருகிறான் .

## தேடிக் கொண்டிருக்கிறேன். இன்னமும்

**' அஸ்ஹாபுல் கஹ்பு '** என்கிற குகைத் தோழர்களான வலிமார்களைப் பற்றிய பதிவு ஓரிரு பதிவுகளில் சொல்ல முடியாத நீண்ட நெடிய கராமத்தான வரலாறு .
அது பத்து பதிவுக்கும் மேலாக இருக்கலாம் , கராமத் 50 பதிவுகளின் தொடரில் கடைசி பத்து பதிவுகள் அஸ்ஹாபுல் கஹ்பு என்ற குகைத் தோழர்களின் வரலாறு பற்றி இன்ஷா அல்லாஹ் எழுத உள்ளேன்.
இந்த பழமையான கிதாபு " ஜனாப் காஜா முஹம்மது ஆலீம் சாஹிபு அவர்களால் - " அஸ்ஹாபுல் கஹ்பு ஓர் றகீம் " பழம்பெறும் தமிழ் நடையில் 1924 -ல் தொகுக்கப்பட்ட மிக **அருமையான**வரலாறு. ( அணா 4 )
நிறைய பேப்பர்களெல்லாம் நொறுங்கி இடம் மாறி உள்ளது . அவைகளை ஒன்று சேர்த்து மிகவும் கவனமாக xerox எடுத்துள்ளேன் . நண்பர் ( ABK காஜா ) அவருடைய பாட்டனர் சேர்த்து வைத்திருந்த நிறைய கிதாபுகள் இப்போது நொறுங்கிய நிலையில் ஆற்றில் விடுவதற்காக சேகரித்து வைத்திருந்த அந்த கிதாபு மூட்டையை எடுத்து பார்த்ததில் கிடைத்த பொக்கிஷம் இது.

அப்படியிருந்தும் பக்கம் 20 , 21 காணாமல் போயிருக்கிறது. இந்த இரு பக்கங்களில்தான் இவ்வரலாற்றின் உச்சம் அடங்கியிருக்க வேண்டும்.

" யா அஹது.... யா அஹது ... " என்று தொலைந்து போனது கிடைக்க வேண்டி ஓதக்கூடிய மேற்கண்ட இந்த இஸ்முவை ஓதிக்கொண்டே என் புத்தக பீரோக்களிலும் , அந்த பழைய கிதாபு மூடையிலும் தேடிக் கொண்டிருக்கிறேன். கிடைக்க நீங்களும் துஆ செய்யுங்கள் .

அஸ்ஹாபுல் கஹ்பு வரலாறு மற்ற கிதாபுகளில் சொல்லப்பட்ட வரலாறுகளை விடவும் மிகத் தெளிவான இதுவரை கேள்விப்படாத சேதிகளை உள்ளடக்கி, ஹக்கான வரலாறு இதுதான் இருக்கும் என நினைக்கிறேன். மேலும் குர்ஆன் வசனத்தோடும், அதன் வார்த்தைகளோடும் ஐக்கியப்பட்டு இவ்வரலாறு எழுதப்பட்டுள்ளது.
எனவே கராமத் தொடர் பதிவு 40 பதிவுக்குப் பின் நிறைவாக 10 பதிவுகள் அஸ்ஹாபுல் கஹ்பு என்ற 7 இறை நேசர்களின் புனித வரலாற்றோடு கராமத் தொடர் இன்ஷா அல்லாஹ் நிறைவு பெறும் .
ரஹ்மத் ராஜகுமாரன்
பக்கம் 20, 21ம் கிடைத்துவிட்டது கூடவே 5, 6 பக்கங்களின் பாதியும் கிடைத்துள்ளது ! முழு வரலாறும் தங்கு தடையின்றி கிடைத்துள்ளது அல்ஹம்துல்லாஹ்




## கராமத் 38

மரணத்தைக் கண்டு அஞ்சாத இறை நேசர்கள்
அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பத்துப் பேர்கள் கொண்ட ஒரு குழுவினரை உளவுப்படையாக அனுப்பி வைத்தார்கள். உமர் இப்னு கத்தாபுடைய மகன் ஆஸிமின் (தாய்வழிப்) பாட்டனார் ஆஸிம் இப்னு ஸாபித் அல் அன்சாரியை உளவுப் படைக்குத் தலைவராக்கினார்கள்.
அவர்கள் புறப்பட்டு, உஸ்ஃபானுக்கும் மக்காவுக்கும் இடையிலுள்ள 'ஹத்ஆ' என்னுமிடத்திற்கு வந்தபோது ஹுதைல் குலத்தைச் சேர்ந்த பனூலிஹ்யான் என்றழைக்கப்படும் ஒரு கிளையினருக்கு இந்த உளவுப் படையினர் வரும் விவரம் தெரிவிக்கப்பட்டது. உடனே அக்கிளையினர் (அவர்களைப் பிடிப்பதற்காக) அம்பெய்வதில் தேர்ச்சி பெற்ற கிட்டத் தட்ட இருநூறு வீரர்களை தங்களுக்காகத் திரட்டிக் கொண்டு இந்த உளவுப் படையினரின் சுவடுகளைப் பின்பற்றி (அவர்களைத் தேடியபடி) சென்றனர். (வழியில்) உளவுப்படையினர் மதீனாவிலிருந்து பயண உணவாகக் கொண்டு வந்திருந்த பேரீச்சம் பழங்களைத் தின்று (அவற்றின் கொட்டைகளைப் போட்டு)விட்டுச் சென்ற இடத்தைக் கண்டனர்.
உடனே, 'இது யத்ரிபுடைய (மதீனாவுடைய) பேரீச்சம் பழம்' என்று கூறினர். எனவே, அவர்களின் கால் சுவடுகளைப் பின்பற்றிச் சென்றனர். அவர்களை ஆஸிம்(ரலி) அவர்களும் அவர்களின் சகாக்களும் கண்டபோது, உயரமான (குன்று போன்ற) ஓரிடத்தில் (புகலிடம் தேடி) ஒதுங்கி நின்றனர். அவர்களை பனூ லிஹ்யான் குலத்தினர் சூழ்ந்தனர்.

அவர்கள் அந்த உளவுப் படையினரிடம், 'நீங்கள் இறங்கி வந்து எங்களிடம் சரணடைந்து விடுங்கள். உங்களுக்கு நாங்கள் உறுதிமொழியும் வாக்கும் அளிக்கிறோம். உங்களில் எவரையும் நாங்கள் கொல்லமாட்டோம்' என்று கூறினார்கள்.

உளவுப் படையின் தலைவரான ஆஸிம் இப்னு ஸாபித்(ரலி), 'அல்லாஹ்வின் மீதாணையாக! இன்று நான் ஒரு நிராகரிப்பாளனின் பொறுப்பில் (என்னை ஒப்படைத்தவனாக இந்தக் குன்றிலிருந்து) கீழே இறங்க மாட்டேன்' என்று கூறிவிட்டு, 'இறைவா! எங்கள் நிலை குறித்து உன் தூதருக்குத் தெரிவித்து விடு' என்று பிரார்த்தித்தார்கள்.

எதிரிகள் அவர்களின் மீது அம்பெய்து ஆஸிம் உட்பட ஏழு பேரைக் கொன்றனர். உளவுப் படையினரில் (எஞ்சியிருந்த) மூன்று பேர் எதிரிகளிடம் உறுதிமொழியும் வாக்கும் பெற்று இறங்கினார்கள்.
அவர்கள் அன்சாரித் தோழர் குபைப் அவர்களும், இப்னு தசினா அவர்களுக்கு மற்றுமொருவரும் ஆவர். இவர்கள் தங்கள் கையில் கிடைத்தவுடன் நிராகரிப்பாளர்கள் தம் விற்களின் நாண்களை அவிழ்த்து அவர்களைக் கட்டினார்கள்.
(உளவுப் படையில் எஞ்சிய மூவரில்) மூன்றாவது மனிதர், 'இது முதலாவது நம்பிக்கை துரோகம் அல்லாஹ்வின் மீதாணையாக! நான் உங்களுடன் வர மாட்டேன். (கொல்லப்பட்ட) இவர்கள் எனக்கு ஒரு (நல்ல பாடமாக அமைந்துள்ளனர்' என்று கூறினார்.
உடனே, அவர்கள் அவரை இழுத்துச் சென்று தம்மோடு வரும்படி நிர்ப்பந்தித்தார்கள். அதற்கு அவர் மறுத்து விடவே அவரைக் கொலை செய்துவிட்டார்கள்.
பிறகு குபைப் அவர்களையும் இப்னு தசினா அவர்களையும் பிடித்துச் சென்று மக்காவில் விற்றுவிட்டனர். இது பத்ருப் போருக்குப் பிறகு நடந்த சம்பவமாகும். குபைப் அவர்களை பனூ ஹாரிஸ் என்னும் குலத்தார் வாங்கினர்.

அந்தக் குலத்தின் தலைவர் ஹாரிஸ் இப்னு ஆமிர் என்பவரை குபைப் அவர்கள் பத்ருப் போரில் கொன்று விட்டிருந்தார்கள். எனவே, (அதற்குப் பழிவாங்குவதற்காக குபைப் அவர்களை பனூ ஹாரிஸ் குலத்தார் வாங்கிக் கைது செய்து வைத்திருந்தனர்.) அவர்களிடம் குபைப் அவர்கள் கைதியாக இருந்தார்கள்.
ஹாரிஸின் மகள் என்னிடம் கூறினார்:

குபைப் அவர்களைக் கொல்வதற்காக (எங்கள் குடும்பத்தார்) ஒன்று கூடியபோது, குபைப் தேவையற்ற முடிகளைக் களைவதற்காக ஒரு சவரக் கத்தியை என்னிடமிருந்து இரவல் வாங்கினார்.
அப்போது என்னுடைய குழந்தை ஒருவனை அவர் கையிலிலெடுத்தார். அவன் அவரிடம் சென்றபோது நான் (பார்க்காமல்) கவனக் குறைவாக இருந்து விட்டேன். அவர் கையில் சவரக் கத்தி இருக்க, தம் மடியின் மீது அவனை உட்கார வைத்திருப்பதை கண்டேன். அதைக் கண்டு நான் கடும் பீதியடைந்தேன். என் முகத்தில் தெரிந்த பீதியை குபைப் புரிந்து கொண்டார்.
உடனே, 'நான் இவனைக் கொன்று விடுவேன் என்று நீ பயப்படுகிறாயா? நான் அப்படிச் செய்யமாட்டேன்' என்று கூறினார். அல்லாஹ்வின் மீதாணையாக! குபைப் அவர்களை விடச் சிறந்த ஒரு கைதியை நான் ஒருபோதும் பார்த்ததில்லை. அல்லாஹ்வின் மீதாணையாக!

அவர் ஒரு நாள் தம் கையிலிருந்த திராட்சைக் குலை ஒன்றிலிருந்து (பழங்களை எடுத்து) உண்டு கொண்டிருக்கக் கண்டேன். அப்போது அவரின் கை இரும்புக் சங்கிலிகளால் கட்டப்பட்டு இருந்தது. மேலும், அப்போது மக்கா நகரில் பழம் (விளையும் பருவம்) எதுவும் இருக்கவில்லை.
...மேலும், ஹாரிஸின் மகள், 'அது அல்லாஹ்விடமிருந்து கிடைத்த இரணமாகும். அல்லாஹ் அதை குபைப் அவர்களுக்கு அளித்திருந்தான்' என்று கூறி வந்தார்.
அவர்கள் குபைப் அவர்களைக் கொல்வதற்காக ஹரம் (எனும் இரத்தம் சிந்துவது அனுமதிக்கப்படாத புனிதப்) பகுதியிலிருந்து 'ஹில்' (எனும் புனித எல்லைக்கு வெளியே இருக்கும் பகுதிக்குப் புறப்பட்டுச் சென்றபோது, அவர்களிடம் குபைப் அவர்கள், 'என்னை இரண்டு ரக்அத்துகள் தொழ விடுங்கள்' என்று கூறினார்கள்.
(தொழுது முடித்து) பிறகு, 'நான் மரணத்தைக் கண்டு அஞ்சுகிறேன் என்று நீங்கள் எண்ணுவீர்கள் என்ற அச்சம் எனக்கில்லாமல் இருந்திருந்தால் நான் நீண்ட நேரம் தொழுதிருப்பேன்' என்று கூறிவிட்டு,
" இறைவா! இவர்களை எண்ணி வைத்துக் கொண்டு (ஒருவர் விடாமல்) பழி வாங்குவாயாக!' என்று பிரார்த்தித்தார்கள். மேலும், 'நான் முஸ்லிமாகக் கொல்லப்படுவதால் நான் எதைப் பற்றியும் பொருட்படுத்தப் போவதில்லை. எந்த இடத்தில் நான் இறந்தாலும் நான் இறைவனுக்காகவே கொல்லப்படுகிறேன் (என்பதில் எனக்கு மகிழ்ச்சியே). நான் கொலையுறுவது அல்லாஹ்வின் திருப்தியைப் பெறுவதற்காகத் தான் எனும்போது, அவன் நாடினால் என்னுடைய துண்டிக்கப்பட்ட உறுப்புகளின் இணைப்புகளின் மீது கூட (தன்) அருள் வளத்தைப் பொழிவான்' என்று கவி பாடினார்கள்.
பின்னர், குபைப் அவர்களை ஹாரிஸின் மகன் (உக்பா) கொன்றுவிட்டார். அன்றிலிருந்து அடைத்து வைத்து அல்லது கட்டி வைத்துக் கொல்லப்பட்ட ஒவ்வொரு முஸ்லிமுக்கும் கொல்லப்படுவதற்கு முன் இரண்டு ரக்அத்துகள் தொழுவதை முன்மாதிரியாக்கியவர் குபைப் அவர்களே என்றாயிற்று.
ஆஸிம் இப்னு ஸாபித் அவர்கள் கொல்லப்பட்டபோது, அவர்கள் செய்த பிரார்த்தனையை அல்லாஹ் ஏற்றுக் கொண்டு (அவர்களின் நிலைகுறித்து தன் தூதருக்குத் தெரிவித்து)விட்டான்.

நபி(ஸல்) அவர்கள் தங்களின் தோழர்களுக்கு உளவுப் படையினரின் செய்தியையும், அவர்களுக்கு குறைஷிக்குல நிராகரிப்பாளர்களில் சிலருக்கு ஆஸிம் அவர்கள் கொல்லப்பட்டது குறித்துத் தெரிவிக்கப்பட்டவுடன் (கொல்லப்பட்டது அவர்தான் என்று) அவரை அடையாளம் தெரிந்து கொள்ள அவரின் அங்கம் எதையாவது தமக்குக் கொடுத்தனுப்பும் படி கேட்டு அவர்கள் ஆளனுப்பினார்கள்.
ஏனெனில், ஆஸிம் அவர்கள் பத்ருப் போரின்போது குறைஷிகளின் தலைவர்களில் ஒருவரைக் கொன்றிருந்தார்கள். அப்போது ஆஸிம் அவர்களுக்காக (அவர்களின் உடலுக்குப் பாதுகாப்பாக) ஆண் தேனீக்களின் கூட்டம் ஒன்று நிழல் தரும் மேகத்தைப் போன்று (அவரைச் சுற்றிலும் அரணாகப் படர்ந்திருக்கும் படி) அனுப்பப்பட்டது. அது அவர்களை குறைஷிகளின் தூதுவரிடமிருந்து காப்பாற்றியது. எனவே, அவர்களின் சதையிலிருந்து அவர்களால் எதையும் துண்டித்து எடுத்துச் செல்ல முடியவில்லை. ஸஹீஹ் புகாரி : 3045.

## கராமத் 39

( சிறைக் கைதி காணாமல் போகலாம் ; சிறைச்சாலையுமா காணாமல் போகும் ? )
ஆன்மிக உண்மைகளை மக்களுக்கு வெளிப்படையாக எடுத்துக் கூறிக் கொண்டும், அதன் பலனாக கொஞ்சம் ஆதரவையும், பலத்த எதிர்ப்பையும் சம்பாதித்துக் கொண்டிருந்தார்கள் மன்சூர் ஹல்லாஜ் (ரலி) அன்னவர்கள்.
இந்த காலகட்டத்தில் அவர்களிடம் காணப்பட்ட அதிசயத்தக்க விஷயம் அவர்களுடைய இறை வணக்கமும், தவமும் தான். ஒரு நாளைக்கு 400 ரக்அத்துக்கள் தொழுவார்கள். வெயிலில் கொழுப்பு உருகும்படி தவம் செய்வார்கள் .
கடைத் தெருவில் போகும்போது மக்களிடம், '' மக்களே... என்னை இறைவனின் கண்கள் படாவண்ணம் ஒளித்து வையுங்கள். அவன் என்னிலிருந்து என்னை எடுத்துக் கொண்டான் " என்று கூறினார்கள்.
அப்படி ஒரு சூழ்நிலையில்தான் மனநிலையின் உச்சகட்ட கொந்தளிப்பாக அவர் அந்த பிரபலமானவர் வாக்கியத்தைக் கூறினார் . " அன்தல் ஹக் "( நீயே உண்மை, அல்லது நீயே இறைவன்) என்று கூறுவதற்கு பதிலாக " அனல் ஹக் "( நானே உண்மை, நானே இறைவன்) என்று கூறினார்கள் .
அத்தோடு " என் தலைப்பாகைக்குள் இறைவனைத் தவிர வேறு எதுவும் சுற்றி இருக்கவில்லை" என்றும் சொன்னார்கள்.

அவர் தன்னையே இறைவனாகக் கூறியதாக அது எடுத்துக்கொள்ளப்பட்டது. ஏனெனில் " ஹக் " என்பது அல்லாஹ்வின் 99 அழகிய திருப்பெயர்கள் ஒன்றாக இருந்தது. போகும் ஊரில் எல்லாம் "அனல் ஹக்"
( நானே மெய்ப்பொருள்) என்று உரக்கச் சொல்ல ஆரம்பித்தார்கள் மன்சூர் ஹல்லாஜ் (ரலி) அன்னவர்கள்.
கிட்டத்தட்ட 50 ஊர்களில் இவ்வாறு சொல்லித் திரிந்தார்கள் . எதிர்ப்பு வலுக்க வலுக்க அவர் இன்னும் சொல்லிக்கொண்டே இருந்தார்கள். பைத்தியக்காரர் என்றும், இறைவனுக்கு இணை வைத்தவர் என்றும் குற்றம் சாட்டப்பட்டு, ஒவ்வொரு ஊரில் இருந்தும் விரட்டப்பட்டார்கள்.

கடைசியில் அவருக்கு எதிரான சாட்சியங்களை தேடி எடுத்து அவரை சிறை வைத்தார்கள். ஒரு நாள் அந்தச் சிறையில் இருந்து காணாமல் போனார்கள் . அதில் ஆச்சரியம் என்னவென்றால், அவரை சிறை வைத்திருந்த சிறைச்சாலையின் அறையும் காணவில்லை. இரண்டு நாள் கழித்து மன்சூர் ஹல்லாஜ் இருந்தார்கள். சிறைச்சாலையின் அறையும் இருந்தது !

" எங்கே போனீர்கள் என்று கேட்டதற்கு, இறைவனைப் பார்க்கப் போயிருந்தேன். அப்போது அவனுடைய விருப்பத்தின் பேரில் சட்டத்தை காப்பாற்ற திரும்பி வந்திருக்கிறேன் " என்றார்கள்
ஓராண்டு காலம் சிறையில் அடைக்கப்பட்டிருந்தார். பதினோறு ஆண்டுகள் சிறையில் அடைக்கப்பட்டிருந்தார் என்றும் சொல்லப்படுகிறது.

## கராமத் 40

குகைத் தோழர்களின் வரலாறு 1




குகை' என்றாலே நம் மனதில் பல மர்மங்களை உள்ளடக்கிய சிந்தனைகளை தூண்டிவிடும் ஒரு பயம் . உலகிலுள்ள எல்லா குகையின் வாயிலிலும் அதன் மர்மங்கள் பயமாக பேசப்பட்டுக் கொண்டே இருக்கிறது.
அதே மாதிரி ஒரு பயத்தை இந்த கஹ்பு என்கிற இந்த குகைத் தோழர்களின் குகையும் கொண்டுள்ளதாக இறைவனே திருக்குர்ஆனில்
"...அவர்களை நீர் கூர்ந்து பார்த்தீரானால் அவர்களை விட்டும் விரண்டோடிப் பின் வாங்குவீர் ! இன்னும் அவர்களிலிருந்து உண்டாகும் திடுக்கத்தால் நீர் நிரப்பப்பட்டு விடுவீர் " குர்ஆன் (18 : 18)

திருக்குர்ஆன் "அல்-கஹ்பு" _ குகை என்னும் ஒரு அத்தியாயத்திற்கு பெயரை சூட்டி இருப்பதால், மர்மங்களுக்கும் ஆச்சரிய வியப்பிற்கும் குறைவில்லாமல் ஒரு வரலாற்றின் மர்மத்தை அதன் வாசலிலே பதிக்கப்பட்டு, அதன் ரகசியமும் பாதுகாக்கப்பட்டிருக்கிறது.
குர்ஆனில் குகை என்ற இந்த சூரா மறைபொருள் மிக்கதாகும்.
மலையில் உள்ள குகை சிறியதாக, குறுகியதாக இருந்தால், 'ஃஙார்' என்றும் பெரியதாக விசாலமாக இருந்தால் 'கஹ்பு' என்றும் சொல்லப்படும்.

110 வசனங்கள் கொண்ட இந்த அத்தியாயம் முழுவதும் ஒரே நேரத்தில் இறங்கியதாக நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அனஸ் (ரலி) தெரிவித்திருக்கிறார்கள்.

அல் கஹ்ப் - குகை என்கிற வரலாறு இறக்கப்பட்டதற்குரிய காரணம் நம் பெருமானார் ﷺ அவர்களைச் சோதிப்பதற்காக வேதம் வழங்கப்பட்ட யூத, கிறிஸ்தவர்கள் மக்கா இறை மறுப்பாளர்களான நுலர், உக்பா இருவர் மூலம் நபி (ஸல் ) அவர்களிடம் 3 கேள்விகளை கேட்டனர்.
1 ) குகை வாசிகள் யார் ?
2 ) கிழ்று என்பவரின் அந்தரங்கம் என்ன ?
3 ) துல்கர்னைன் என்பவரின் வாழ்க்கை வரலாறு யாது ?
இம்மூன்று கேள்விகளும் யூத, கிறிஸ்தவர்களின் வேதங்களில் கூறப்பட்டவையாகும் மக்கா, மற்றும் ஹிஜாஸ் உள்ளவர்கள் எவருக்கும் இதைப் பற்றி தெரியாது.
ஆகவே இவற்றைப் பற்றி முஹம்மதும் தெரிந்திருக்க முடியாது' இந்த அடிப்படையில் 'முஹம்மது நபியே அல்ல' என்று நாம் நிரூபித்து விடலாம் என்பதே அவர்களின் குறிக்கோள்.
ஆனால் அல்லாஹ் இம்மூன்று கேள்விகளுக்கும் விவரமான பதிலை இந்த ஒரு அத்தியாயத்தில் மூலம் விளக்கி தனது நபியின் நாவால் கூறுமாறு செய்துவிட்டான் . பின்னர் வேதக்காரர்கள் எதுவும் பேச முடியாமல் அதிர்ச்சி அடைந்தனர்
(ஹக்கானி ,தன்தாயி )

ஒவ்வொரு ஜும்ஆ நாளிலும் இந்த சூராவை ஓதி வந்தால், அடுத்த ஜும்ஆ வரை சங்கடங்களும், சஞ்சலங்களும் ஏற்படாமல் இருக்கும் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறி இருக்கிறார்கள்

## கராமத் 41

குகைத்தோழர்களின் வரலாறு 2



குகைத்தோழர்களைப் பற்றி குர்ஆனில் இறைவன் :

نَحْنُ نَقُصُّ عَلَيْكَ نَبَاَهُمْ بِالْحَـقِّ اِنَّهُمْ فِتْيَةٌ اٰمَنُوْا بِرَبِّهِمْ وَزِدْنٰهُمْ هُدًى

" (நபியே!) நாம் உமக்கு அவர்களுடைய வரலாற்றை உண்மையைக் கொண்டு அறிவிக்கிறோம்; நிச்சயமாக அவர்கள் இளைஞர்கள் - தங்கள் இறைவன் மீது ஈமான் கொண்டார்கள்; இன்னும் நாம் அவர்களை நேர் வழியில் அதிகப்படுத்தினோம் " (அல்குர்ஆன் : 18:13)

யூனானி தேசத்தில் மதாயின் என்னும் பட்டணத்தைச் சார்ந்த அப்சூஸ் என்னும் ஊர். அல்லது இப்படியும் சொல்லலாம் : ஆசியாமைனரின் மேற்குக் கரையிலுள்ள இபிஸியஸ் (Ephesus) என்னும் ஊர்.
வலைதளத்தில் தேடியதில் *Ephesus is an ancient city in Turkey's Central Aegean region, near modern-day Selçuk. Its excavated remains reflect centuries of history, from classical Greece to the Roman Empire என்ற* தகவல் கிடைத்துள்ளது.
அப்சூஸ் மக்கள் செல்வ செழிப்பானவர்களாகவும் , மிகவும் நற்குணங் கொண்டவர்களாகவும் இருந்தனர்.இம்மக்கள் யூனானி மருத்துவத்தில் தலை சிறந்தவர்களாகவும் விளங்கினார்கள். இதனாலேயே யூனானி மருத்துவத்திற்கு இவர்களின் தேசத்தின் பெயரான **" யூனானி "** என்ற பெயர் வந்தது என்பதாக ஒரு வரலாற்று குறிப்பு காணக் கிடைக்கிறது

யூனானி ஹுகமாக்களில் (மருத்துவர்களில்) பேர் பெற்ற ஹகீம் ஜாலினூசின் என்பவர் யூனானி மருத்துவத்தின் தந்தை இருந்தார். இவருடைய காலக்கட்டத்தில்தான் நபி ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் ரசூலாக அனுப்பப்பட்டார்கள்.

நபி ஈஸா (அலை) அவர்கள் பலவிதமான வியாதிகளை குணப்படுத்துவதும் ,இறந்து போனவர்களின் மைய்யித்தை மீண்டும் உயிர்ப்பித்துக் கொடுப்பதும் போன்ற முஃஜிஸா என்னும் அற்புதத்தை ஹகீம் ஜாலினூஸ் கேள்விப்பட்டு ஆழ்ந்து சிந்தித்துச் சொன்னார்கள் :
"மனிதனால் பரிகாரம் செய்வதற்கு வருத்தமான எந்த வியாதினாலும் சரி அதை சௌக்கியப்படுத்தும் புத்திசாலியான ஹகீமால் (மருத்துவரால்) சொஸ்தப்படுத்தல் முடிந்த காரியமேயாகும். ஆயினும் இறந்து போன மைய்யித்தை உயிர்ப்பித்து வைப்பது மனிதருடைய தத்துவத்தை விட்டும் அகன்றதாக இருக்கும் . ஆகவே இந்த கருமம் அல்லாஹுத்தஆலாவின் உதவினால் நபிமார்களை தவிர மற்றவர்களுக்கும் இது முடியவே முடியாது. ஆனதால் இவர்கள் ஹக்கான நபியாக இருக்கவேண்டும்" என கூறினார்
அவர் தமது சீடர்களுடனும் , சிநேகிதர்களுடனும் ஒரு கூட்டமாய் கடற்பயணம் புறப்பட்டு, நபி ஈஸா அலைஹிஸ்ஸலாம் சமூகம் வந்து, அவரின் கரம் பற்றி இஸ்லாத்தை ஏற்க முடிவு செய்தனர் .
அக்கப்பல் சமுத்திரத்தில் போய்க்கொண்டு இருக்கும்போது, இடைவழியில் ஹகீம் ஜாலினூஸ்க்கு வயிற்றோட்டம் நஷ்ல் உண்டாகி மௌத்து வேலை வந்தது.

அவர் அங்கிருந்த சீடர்களுக்கும், சிநேகிதர்களுக்கும் வஸிய்யத் செய்தார்.
"நான் மௌத்தாகிவிட்டால், நீங்கள் வழியில் காணும் ஒரு தீவில் என்னை அடக்கம் செய்தபின், தொடர்ந்து கடற்பயணம் மேற்கொண்டு ஹஜ்ரத் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களுடைய சமூகத்தில் போய், என் நிலைமை எடுத்துக் கூறி, மானசீகமாக தங்களைக் கொண்டு ஈமான் கொண்டதாக நபியிடம் சொல்ல வேண்டும். அவர்களைக் கொண்டு நீங்கள் அனைவரும் ஈமான் கொள்ள வேண்டும் . அவர்களின் கட்டளையை சிரமேற்கொண்டு செய்து முடிக்க வேண்டும் " என்று கூறி மரணித்துவிட்டார்கள்.
அவர் சொன்ன மாதிரி கடற்பயண வழியில் ஒரு தீவில் ஹகீம் ஜாலினூஸ்ஸை நல்லடக்கம் செய்து விட்டு, மீண்டும் பயணம் தொடர்ந்து நபி ஈஸா (அலை) அவர்களை சந்தித்து ஈமான் கொண்டார்கள் .
ஹகீம் ஜாலினூஸின் சீடர்களாகத்தான் குர்ஆன் கூறும் குகைத் தோழர்களான
**1) மக்ஸல் மீனா**
**2) எம்லீகா**

**3) நைனூனஸ்**
**4) ஸாரபூனஸ்**
**5) தூநவானஸ்**
**6) பல்யஸ்தத யூனஸ்**
**ஆகிய 6 பேர்களும் இருந்தனர் .**
இவர்கள் நேரடியாக நபி ஈஸா (அலை) அவர்களிடம் நேரடியாக சந்தித்து ஈமான் கொண்டதாக ஒரு வரலாறு கூறுகிறது . ஏழாவதாக 7 ) மர்தூனஸ் (ஆடு மேய்ப்பாளர் ) குகைத் தேடிப் போகும் வழியில் குகைத் தோழர் ஆறு பேருடன் இணைந்து கொண்டவர் .

இன்னொரு வரலாறு : " குகைத் தோழர்கள் ஆறு பேரும் நபி ஈஸா (அலை) அவர்களின் ஹவாரியூன்களில் ஒருவரான ஷம்வூன் (அலை) அவர்கள் அப்சூஸ் பட்டணத்தில் உள்ளவர்களுக்கு ஈமான் கொடுக்க அழைத்த போது, அஸ்ஹாபுல் கஹ்புகளான ஆறு பேரும் ஈமான் கொண்டனர் என்கிறது .

## கராமத் 42

குகைத் தோழர்கள் வரலாறு 3



அப்சூஸ் குறுநிலத்தை ஆண்ட ஒரு மூமினான அரசன் இருந்த காலத்தில் இன்ஜில் வேத விற்பன்னர்களும் , ஞானிகளும் கண்ணியமாக மதிக்கப்பட்டனர். இதனால் இறைவனுடைய மார்க்கம் செழிப்புற்று சாதாரண ஆடு மேய்ப்பவர் கூட ஆன்மிக தேட்டமுடையவர்களாக இருந்தனர்.

மூமினான அப்சூஸ் மன்னனுக்கு வாரிசுகள் ஏதும் இல்லை இம்மூமினான மன்னன் நோய்வாய்ப்பட்டு இறந்திருந்த காலத்தைப் பயன்படுத்திக் கொண்டு,பாரிஸ் தேசத்தின் அரசனாகிய தக்யானூஸ் என்பவன் படையெடுத்து அதை வெற்றி கொண்டான். தக்யானூஸ் மிகவும் கொடுங்கோல் அரசனாக இருந்தான் .அவன் ஏற்கனவே ரூம், பாபில் முதலிய ஊர்களை கையகப்படுத்திக்கொண்டு, அஸ்ஹாபுல் கஹ்புகள் இருந்த அப்சூஸ் என்னும் இந்த பட்டணத்தையும் மிக எளிதாக வெற்றி அடைந்தான்.
அப்சூஸை கைப்பற்றி வெற்றியடைந்ததும் , தன்னுடைய சிலையை நிறுவி அதற்கு வழிபட வேண்டும். பலியிடல் ,

சாஸ்டாங்க வணக்கம் முதலிய அத்தனை அனுஷ்டாடங்களும் தன் சிலைக்கு மட்டுமே செய்யப்பட வேண்டும் என்று கட்டளையை பறையடித்து பிறப்பித்தான்.
அந்தவுடனேயே அதை அமலாக்கவும் செய்தான் .தன் சிலையை வணங்குபவர்களை ஆதரிக்கவும் , அதை மறுப்பவர்களின் கை விரல் , கால் விரல் போன்ற அவயங்களை துண்டித்து அங்கஹீனமாக்கினான்.இதனால் பொது ஜனங்கள் அநேகர் மரணமடைந்தனர்.

அஸ்ஹாபுல் கஹ்பு தோழர்கள் ஏக இறைவனுக்கு மட்டும் மறைவாக இபாதத் செய்து வருவதும், சிலை வழிபாடுகளை வெறுத்து ஒதுக்குவதும் உளவாளிகள் மூலம் அரசன் தக்யானூஸ்க்கு தெரிய வருகிறது.
உடனே அவர்களை தன் முன் நிறுத்தி, "நீங்கள் ஏன் எனக்கும் , என் சிலை உட்பட மற்ற தெய்வச் சிலைகளை வணக்காமல் என்னுடைய உத்தரவுக்கு ஏன் மாறு செய்தீர்கள் ?
அதற்கு மக்ஸல்மீனா என்ற கஹ்பு தோழரில் ஒருவர் :
" மன்னா...! இந்த சிலைகளுக்கு எங்களை ஸஜ்தா என்னும் வணக்க வழிபாடு செய்யச் சொல்கிறீர் . நீர் நன்றாக யோசனை செய்து பாரும் எவ்வித அறிவுமற்ற, தன்னைத் தானே இயக்கும் சக்தியற்ற, ஒரு கல்லை இறைவன் என்று வணங்குவது எவ்வாறு அது எமது அறிவிற்கு பொருந்தும் ? அதோ மனிதன் கையினால் செய்யப்பட்ட சிலை ஒரு காலத்தில் அது மனிதனுடைய காலின் கீழ் இருந்தது . அதைப்போய் இறைவன் என்று சொல்வது பெரும் மடத்தனமாக இருக்கிறதல்லவா .. அதன் முன் தலை சாய்க்க எப்படி எங்களது மனம் ஒப்பும் ? அஸ்தஃபிருல்லாஹ். இச்செயல் ஒருபோதும் எங்களுக்கு ஆகாது" என்று கூறினார் .

" நீங்கள் எந்த இறைவனை ஸஜ்தா செய்கிறீர் ? என்று மன்னன் கேட்டான் .
அதற்கு மக்ஸல்மீனா :
"எங்களுடைய இறைவன்தான் உனது இறைவனையும், எங்களையும் , உன்னையும் , இன்னும் உலகங்களையெல்லாம் ' குன் ' என்ற ஒரு சொல்லால் படைத்து , பூமியை நாம் இருப்பதற்காகவும், அதில் பகலை உணவை தேடுவதற்காகவும், இரவை நாம் ஓய்வு பெறும் நித்திரை செய்வதற்காகவும் படைத்தான் . தவிர பூமிக்கு மேல் வானம் , வானத்தில் சூரியன் ,சந்திரன் , நட்சத்திரங்கள் இவைகளை உண்டாக்கி பிரகாசமாக்கினான். இந்தப் பிரகாசத்தின் பேரில் அவனுடைய குத்ரத்தின் பிரகாசத்தைக் காணாவிடில் கண்கள் பயனற்று கழன்றுவிட வேண்டும்" என்று இன்ஜில் வேதத்திலுள்ளதைக் கூறினார் .
இப்படி பேசியதைக் கேட்ட தக்யானூஸ் மன்னன் எந்த பதிலும் சொல்ல முடியாமல், அவர்களை வெட்டி கொலை செய்யும்படி கட்டளையிட்டான்.

அப்போது மக்ஸல்மீனா புத்தி கூர்மை உடையவராக இருந்தபடியால், தத்யானூஸை நோக்கி, "மன்னா..! நீ எங்களுக்கு இன்று இரவு தவணை கொடும். அப்படிக் கொடுத்தீரானால் , நாங்கள் யோசனை செய்து நாளை தினம் உனது மார்க்கத்தை ஒப்புக் கொள்கிற விஷயம் பற்றி சொல்கிறோம்" என்றார்.
அது கேட்டு தக்யானூஸ் மன்னன் மனதில் , " இந்த மேலான தலைமை தனமுடையவர்கள் பயந்து, நாளைய தினம் நாம் கொண்டுவந்த மதத்தை அவர்கள் ஏற்றுக் கொண்டால், அப்சூஸ் பட்டணம் முழுவதும் உள்ள ஜனங்கள் நம் கைவசம் ஆகிவிடுவார்கள் என்றெண்ணி ஓர் இரவு தவணை ஒப்புக் கொண்டு அவர்களை சிறைச்சாலையில் அடைத்து வைத்தான்.

சிறைச்சாலையில் அஸ்ஹாபுல் கஹ்பு தோழர்கள் உறங்காமல் விடிய விடிய இறைவனிடம் மன்றாடிய வண்ணம் இருந்தனர்.
இவ்விதமாய் இருக்கையில் அல்லாஹ்வுடைய நாட்டம் அன்றிரவு விடிந்ததும் , பக்கத்து தேசத்தின் அரசன் அப்சூஸ் மீது படையெடுத்து வந்தான் .
இச்செய்தி தக்யானூஸ்க்கு எட்டவே, அவன் மதியற்றவனாகி பகைவர்களை எதிர்த்து சண்டை செய்ய முடியாமல். சோர்ந்து விட்டான்.

இதற்கிடையில் சிறைச்சாலையில் அடைக்கப்பட்டவர்கள் இதுதான் சமயம் என்று எண்ணி, ஒவ்வொருவர்களும் ஓட ஆயத்தமாகி, அப்படியே தங்கள் தங்கள் வீட்டிற்கு போய் வேண்டிய பொருட்கள் மற்றும் ரொக்கம் முதலிய சாமான்கள் எல்லாவற்றையும் எடுத்துக்கொண்டு இறைவன் பேரில் நம்பிக்கை வைத்து வேறுவேறு தேசங்களுக்கு போக துணிந்தார்கள்.
அதேபோல் அஸ்ஹாபுல் கஹ்பு தோழர்கள் ஆறு பேரும் அப்சூஸ் ஊரை விட்டு கிளம்பினார்கள் என்பதாக ஒரு வரலாறு கூறுகிறது.

## கராமத் 43

குகைத் தோழர்கள் வரலாறு 4




**குகைத் தோழர்களான**

**1) மக்ஸல் மீனா**

**2) எம்லீகா**

**3) நைனூனஸ்**

**4) ஸாரபூனஸ்**

**5) தூநவானஸ்**

**6) பல்யஸ்தத யூனஸ்**

**ஆகிய 6 பேர்களும் இருந்தனர் .**

இதில் எம்லீகா என்பவரும் இன்ஜில் வேதத்தை கற்ற ஆலிமாகவும் , புத்திசாலியாகவும் இருந்தார் .மன்னன் தக்யானூஸ் தன்னை இறைவன் என்று கூறிக்கொண்டு, பக்கத்து தேச மன்னன் படையெடுத்து வருகிற சேதியைக் கேட்டதும் ஏன் பயந்து நடுங்க வேண்டும் ? இறைவன் பயப்படக் கூடியவனாக இருப்பானா ?
தவிர இவனும் நம்மைப்போல் ஊண், உறக்கம், விழிப்பு முதலிய மனிதர்களின் குணங்களைச் சேர்ந்தவனாக இருக்கிறான்.இறைவனும் இவ்விதமான காரியங்கள் அனைத்தையும் விட்டும் தூய்மையானவனாக இருக்கிறான் என்று பலவாறாக யோசித்து,
சிறைச்சாலையை விட்டு வெளியே வந்தபின் நாம் இதற்கு பின் என்ன செய்வோம் ? என்று யோசனையில் ஆழ்ந்து , இந்த இறை நிராகரிப்பாளர்களை விட்டும் நாம் நீங்கிக் கொள்வோம் என்று முடிவு எடுக்கப்பட்டது.

எம்லீகா நம்முடைய பேரீத்தம்பழம் தோட்டத்தை மூவாயிரத்திற்கு விற்கிரையம் செய்து விட்டு, அந்தப் பணத்தை எடுத்துக்கொண்டு ஆறு பேர்களுடன் அல்லாஹ்வின் பெயரில் தவக்கல் வைத்தவராக குதிரையில் ஏறி பயணமானார்கள்.
பின்பு ஊரைவிட்டும் மூன்று காத வழிதூரம் போனதும் எல்லோரையும் நோக்கி, எம்லீகா சொன்னார் : "சகோதரர்களே..! நீங்கள் எல்லோரும் ஒரே மனதோடு உறுதி எடுத்துக் கொள்ளுங்கள். இக்கணம் முதல் நம்மை விட்டும் துனியாவுடைய ராஜாங்கம், சொத்து, சுகம் முதலிய தௌலத்துக்கள் யாவும் நீங்கி விட்டன.
இறைவனுக்கு ஸஜ்தா செய்து கொண்டே , கண்களைக் பூமியில் படிய வைத்து கண்டு கீழ்க்கண்ட நிய்யத்தை சொல்லுங்கள் :
" இறைவா...! நாங்கள் மிகவும் தாழ்மையான அடிமைகளாக இருக்கிறோம். எங்களது சொந்த ஊரை விட்டும் , சொந்தம் பந்தங்களை விட்டும் அந்நியமாய் உன்னுடைய திருப்தியை மட்டுமே மேலான எங்களது குறிக்கோளாக்கி , உன்னிடமே தஞ்சம் புகுந்துள்ளோம். எங்களை நீ காப்பாற்றி உன்னுடைய நேரான பாதையில் எங்களை தரிப்பாடாக்கி வை. இப்போது எங்களுக்கு முன் கடுமையான பாதைகள் முன்னிட்டிருக்கின்றன.உன்னுடைய உதவியினால் மட்டுமே எங்களுக்கு உண்டான எல்லா கஷ்டத்தை விட்டும் கடந்து, எங்களுக்கு கிருபை செய்வாயாக !
பின்பு அவர்கள் எல்லோரும் குதிரையை விட்டுக் கீழே இறங்கி அவைகளுடைய லகானை அறுத்து காட்டில் விட்டுவிட்டு கால்நடையாக நடந்தார்கள்.
அவர்கள் எல்லோருமே சிறுபிள்ளையிலிருந்து செல்வமாக வளர்ந்து ,சௌபாக்கியம் உடையவர்களாக இருந்தவர்கள். இப்போது நடக்கும்போது கால்களில் கொப்புளங்கள் உண்டாகி, ஆயிரம் வருத்தம் முசிபத்துகளை சுமந்து தட்டுத்தடுமாறி, இருபத்தியோரு காத வழி நடந்து ஒரு ஓடைக் கரையில் வந்து சேர்ந்தார்கள்.

அப்போது தாகத்தினாலும் , பசியினாலும் சக்தியற்று மதிமயங்கிவர்களாக இங்குமங்கும் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அப்படி இருக்கும்போதுதான் திடுமென தூரத்தில் ஒரு ஆடு மேய்ப்பவர் ஒருவர் காணப்பட்டார். அப்போது அவர்கள் தங்கள் மனதில் நாம் இந்த ஆடு மேய்ப்பவரிடம் போனால், அவர் நமது நிலையைப் பார்த்து, ஏதோ கொஞ்சம் தண்ணீர் அல்லது பால் கொடுப்பார் என்றெண்ணி அவர் அருகில் போனார்கள் .

அவரிடத்தில் வந்து, " களைப்பாக இருக்கிறோம் ஏதாவது கொடுங்கள்" என்று கேட்டார்கள்.
அப்போது ஆடு மேய்ப்பவர் ஆறு பேர்களுடைய அழகையும் வடிவையும், நற்குண பேச்சும் கண்டு , யாதொரு சந்தேகமின்றி இவர்கள் மேலான குடும்பத்தில் உள்ளவர்களாக இருக்கும். இவர்கள் நம்மிடத்தில் வந்து தண்ணீர் கேட்பதும் அல்லாஹுத்தஆலா உடைய நாட்டத்தில் உள்ளதாக இருக்கிறது என்று எண்ணி, கைகட்டி நின்று கொண்டு,
அவர்களை நோக்கி, " நீங்கள் இவ்விடத்திற்கு எதற்காக வந்தீர்கள் ? உங்களுக்கு என்னிடம் இருக்கும் உணவை நீங்கள் உண்பீர்களா ? இதோ என்னிடத்தில் தயாராக இருப்பதை தருகிறேன்.
நீங்கள் இருந்து சாப்பிட்டு விட்டு செல்லுங்கள். ஆயினும் உங்களுடைய ஊர், தலம், பேர் இவைகளை எனக்கு நன்றாக தெரியுங்கள்.உங்களைப் பார்த்தால் ஏதோ ஒரு பட்டணத்திலுள்ள ராஜகுமாரர்களைப் போல் தெரிகிறது. மேலும் தொலை தூரமான உங்களின் வீடுகளை விட்டும் பயந்து ஓடி வந்திருக்கிறீர்கள் போலவும் தெரிகிறது " என்று மிகவும் உருக்கத்துடன் சொன்னார்.
அதுகேட்டு எல்லோருக்கும் ஒரு தைரியம் உதயமாயிற்று.

பின்பு அவர்கள் தங்கள் நிலைமைகளைப் பற்றி சொன்னார்கள் ." எங்களுடைய மார்க்கம் உண்மையானதாக இருக்கிறது என்று ஆரம்பித்து கடைசியில் அவர்களின் தற்போதைய நிலைகள் வரை விவரித்தார்கள்.
ஆடு மேய்ப்பவர் அவற்றை கேட்டதும் அவர்களின் பாதங்களில் விழுந்து, " எனது வேண்டுகோளும் இதுவாக இருந்தது.
வெகுகாலமாக நான் இறைவனிடம் நேர்வழி காட்டுகிறவர் கிடைத்து விட்டால், அவர்களுக்கு பணிவிடை செய்து, அவர்களது சகவாசத்திலே என் வாழ்நாளை கழிக்க வேண்டும் என்று துஆ செய்து கொண்டிருந்தேன்.

இன்றைக்கு அந்த நேரம் வாய்த்தது.என் சகல கஷ்டங்களும் தீர்ந்துவிட்டது. இனி உங்களை போல் உள்ள கிருபையாளர்களை நான் எங்கு பெற்றுக் கொள்வேன் ? நானும் உங்களுடன் வர மனம் துணிந்து விட்டேன்.
ஆயினும் இந்த ஆடுகளை அதன் எஜமானனிடம் ஒப்படைத்து விட்டுவிட்டு, நான் வருகிற வரையில் சற்று எனக்காக தாமதியுங்கள் " என்று மிகவும் கெஞ்சி கேட்டு உத்தரவு பெற்று , ஆடுகளை ஒப்படைத்துவிட்டு , ஆடு மேய்த்தவர் இவர்கள் ஆறு பேருடன் சேர்ந்து ஏழு நண்பர்களாயினர்.

உங்கள் பெயர் என்ன ?

மர்தூனஸ்

## கராமத் 44

குகைத் தோழர்கள் வரலாறு 5




குகைத் தோழர்கள் 7 பேரில் ஒருவர் மர்தூனஸ். அவர் ஆடு மேய்ப்பாளராக இருந்ததால், ஆட்டு மந்தையை சுற்றி வந்து ஆடுகளை பாதுகாக்க நாய் தேவைப்பட்டது .
இந்த நாயின் உருவ அமைப்பை பற்றி நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளதாவது : " அஸ்ஹாபுல் கஹ்பு நாயின் நிறம் கருப்பு வெள்ளையாக இருந்தது .அதனுடைய தலை சிவப்பாகவும், முதுகு கருப்பாகவும் ,வயிறு வெண்மையாகவும். வால் கருப்பு வெள்ளை கலந்த நிறமாகவும் இருந்தது ".(ஆதார ஹதீஸ் நண்பர்களிடம் எதிர்ப்பார்க்கிறேன் )
ஆகவே அந்த நாயானது திடமாகவும், அழகிய கோலமாகவும் இருந்தது. அந்த தோழர்கள் ஏழு பேர்களும் பிரயாணமாகி நடந்து போகையில், விசுவாசம் உடைய அந்த நாயும் ஆடு மேய்ப்பவருக்குப் பின்னாலே தொடர்ந்தது வந்தது.
அதைப்பார்த்து அன்னவர்கள் தங்கள் மனதில் எண்ணிதாவது: " நாம் ராத்திரிகளில் ஓரிடத்தில் போய் தங்கினால், இந்த நாய் வழக்கம்போல் மாற்றானைக் கண்டால் குலைக்க தலைப்படும். அதனால் அவ்விடத்தில் யாராவது நம் தேசத்தவர்களில் நம்மை அறிந்தவன் பார்த்துவிட்டால், நம் ரகசியம் வெளியாகி, நாம் பிடிபட்டு பிரச்சனையில் சிக்கிக் கொள்வோம்" என்று எண்ணி அந்த நாயை கல்லினால் அடித்து விரட்டினர்கள்.

தோழர்கள் மனதில் எண்ணியதை நாய் அறிந்து கொண்டு, வாலை ஆட்டி ஆட்டி ஒவ்வொருவருடைய காலில் விழுந்து புரண்டது என்றாலும், அவர்கள் அதை விரட்டுவதையும் கல்லால் அடிப்பதையும் நிறுத்தவில்லை.
அப்போது அந்த நாய் மிகவும் தாழ்மையாக இறைவனிடம் கேட்டது : "இறைவா ! நான் தூய்மையற்ற ஒரு படைப்பாக நாயாக இருந்தபோதிலும் , உன்னுடைய நேசத்தினால் , பிரியத்தினால் நெஞ்சுருகி உன்னிடம் எத்தனையோ இரவுகளில் இறைஞ்சியிருக்கிறேன். ஆகவே எனக்கு உன் வல்லமையைக் கொண்டு நீ இச்சமயம் பேசும்படியான நாவைக் கொடு ; நான் உன் இறைநேசர்களிடம் என்னுடைய இறை பிரியத்தையும் எடுத்துச் சொல்றேன் "
அப்போது அல்லாஹுத்தஆலா அதற்கு பேசும் நாவைக் கொடுத்தான். அது , " என் சினேகமானவர்களே ! என் பெயர் கித்மீர். நீங்கள் ஏன் என்னை உங்களை விட்டும் நீக்க விரும்புகிறீர்கள். இதோ என்னுடன் இருந்த இந்த மர்தூனஸ் ஆடுமேய்ப்பாளர் என் தோழமையில்தான் இன்னும் இருக்கிறார். நீங்கள் என்னை கல்லால் அடித்து விரட்டி விட்டு நீங்கள் மட்டும் உங்கள் எஜமானாகிய இறைமாலிக்கின் சமூகத்திற்கு போகிறீர்கள்.
நானும் அவனின் படைபல்லவா ? அதுவும் இறைநம்பிக்கை கொண்ட நாய் அல்லவா ? நீங்கள் தூங்கும் காலமெல்லாம், நான் தூங்காமல் விழித்திருக்கும் இறைவனின் அற்புத படைப்பல்லவா நான் . (இந்த நாய் சொன்ன '' தூக்கம் " என்ற வார்த்தைக் கொண்டுதான் இறைவன் அவர்களுக்கு 309 வருடங்கள் தூங்க வைத்தானோ என்று ஆய்வாளர்கள் கருத்து தெரிவிக்கிறார்கள் )

நான் உங்களுக்கு ஊழியக்காரனாக இருந்து என்னால் என்ற மட்டிலும் காலை-மாலை உங்கள் வணக்க வழிபாடுகளிலும் ஷரத்தை பேணி நிறைவேற்றி வருவது மட்டுமின்றி என் சரீரத்தில் ரூஹாக ஆன்மா இருக்கும் காலமெல்லாம் இரவு பகலாக உங்களுக்கு காவல் கிடந்து, உங்கள் ரகசியங்களை பேணி மறைக்கிறவனாக இருப்பேன் தவிர உங்களை காட்டிக் கொடுக்க மாட்டேன்.
மேலும் உங்களுக்கு சிநேகமானவன் எனக்கும் சிநேகமானவன்தான். ஆகவே உங்களின் பகையாளிகள் எனக்கும் பகையாளிகள்.
அவர்களின் சதையும் தோலும் நான் பிய்த்து விடுவேன். அதனால் எதிரி என்னை கொன்று போட்டாலும் சரி, உங்கள் ரகசியத்தை நான் ஒருபோதும் வெளியாக்கமாட்டேன்.

தவிர எந்த ஈமான் என் மனதில் இருக்கிறதோ அதை உங்களுக்கு சாட்சியாக்குகிறேன்.ஹக்கு சுபஹானல்லாஹ்த்தாஆலாவிற்காக நீங்கள் என் பெயரில் கிருபை செய்யுங்கள். அப்படி கிருபை புரிவதில் உங்களுக்கு என்ன பாவ தோஷம் அல்லது என்ன கஷ்டம் இருக்கிறது சொல்லுங்கள் ? நானும் நாவின்றி எதுவும் பேசத் தன்மை இல்லாதவனாக இருப்பதை நீங்கள் அறிவீர்கள். இருப்பினும் என் துஆவை இறைவன் அங்கீகரித்து, என்னை உங்களிடம் பேச வைத்தானே இந்த ஓர் அங்கீகாரம் உங்களுக்குப் போதாதா ? " அதைக் கேட்டு தோழர்கள் அழத் தொடங்கினார்கள். தங்கள் கையிலுள்ள சுமைகளை தூக்கியெறிந்து விட்டு, அந்த ஈமான் உள்ள நாயை தூக்கி இடுப்பில் வைத்துக் கொண்டும், தோளில் சுமந்து கொண்டும் மெதுவாக அதன் தலையை தடவிக் கொடுத்துக் கொண்டும் அதன் அருமை பாராட்டி சொன்னார்கள் :

" நீயும் எங்களுக்கு ஒரு சினேகமானவனாய் இருக்கிறாய். இறைவனிடத்தில் எங்கள் பெயர் பொறிக்கப்படும் இடத்திலெல்லாம் உன் பெயரும் பொறிக்கப்பட்டிருக்கும் " என்று சொல்லி அதை ஒவ்வொருவரும் மாற்றி மாற்றி வாங்கி சுமந்து கொண்டே வந்தார்கள்.

سَيَقُوْلُوْنَ ثَلٰثَةٌ رَّابِعُهُمْ كَلْبُهُمْ وَيَقُوْلُوْنَ خَمْسَةٌ سَادِسُهُمْ كَلْبُهُمْ رَجْمًا بِالْغَيْبِ وَيَقُوْلُوْنَ سَبْعَةٌ وَّثَامِنُهُمْ كَلْبُهُمْ قُلْ رَّبِّىْۤ اَعْلَمُ بِعِدَّتِهِمْ مَّا يَعْلَمُهُمْ اِلَّا قَلِيْلٌ فَلَا تُمَارِ فِيْهِمْ اِلَّا مِرَآءً ظَاهِرًا وَّلَا تَسْتَفْتِ فِيْهِمْ مِّنْهُمْ اَحَدًا

(குகையிலிருந்த அவர்கள்) மூன்று பேர்தாம்; நான்காவது அவர்களுடைய நாய் என்று (சிலரு)ம்; (அவர்கள்) ஐந்து பேர், அவர்களுடைய நாய் ஆறாவதாகும் என்று (வேறு சிலரு)ம்; மறைவான விஷயங்களைத் தாங்கள் கண்டுபிடித்து விட்டவர்களைப் போல் (மிக்க உறுதியாகக்) கூறுகின்றனர். மற்றும் சிலரோ அவர்கள் ஏழு பேர், எட்டாவது அவர்களுடைய நாய் என்றும் கூறுகின்றனர்.
(அல்குர்ஆன் : 18:22)

1) மக்ஸல் மீனா
2) எம்லீகா
3) நைனூனஸ்
4) ஸாரபூனஸ்
5) தூநவானஸ்
6) பல்யஸ்தத யூனஸ்
7) மர்தூனஸ் (ஆடு மேய்ப்பாளர்)
😎கித்மீர் என்ற நாய்

அது சிலவேளை அவர்கள் கையில் இருக்கும். சிலவேளை அவர்களின் தோலில் இருக்கும். இவ்விதமாக ஒவ்வொரு மனதிலும் அந்த நாய் இடம் பிடித்து, சந்தோசத்துடன் அதை தூக்கி நடந்தார்கள்.

ஆடு மேய்ப்பவர் எல்லோருக்கும் முன் வழிகாட்டியாக நடந்தார். அவருக்கு அந்த காட்டைப் பற்றியும், மலைகளைப் பற்றியும், தங்கும் இடங்களைப் பற்றியும் அவருக்கு நன்றாக தெரியும். கடைசியாக அவர்கள் எல்லோரும் அழைத்துக்கொண்டு ஒரு மலையில் ஏறினார்.

இந்த குகைத் தோழர்கள் 7 பேரின் பெயரும் நடுவில் கித்மீர் என்ற நாயின் பெயரும் அச்சரமாக பொறிக்கப்பட்டிருக்கும் இடம் மிகவும் பாதுகாப்பாக இருக்கும் என்பதாக பெரியோர்கள் சொல்லி இருக்கிறார்கள்.

**கராமத் 45**

குகைத் தோழர்கள் வரலாறு 6



கஹ்பு தோழர்களில் ஒருவரான மர்தூனஸ் என்கிற ஆடுமேய்ப்பாளர் வழிகாட்ட ரக்கீம் என்ற மலைப் பொதும்பில் உள்ள குகையை தோழர்கள் வந்தடைந்தனர்.

அவர்கள் வந்து சேர்ந்த மலைபொதும்பில் உள்ள குகை வெகு காலத்துடையதாக இருந்தது. குகையினுள் மிகவும் இருட்டாகவும் இருந்தது . அதனுள் விசாலமான தங்குமிடமும் இருந்தது .அதில் எல்லோரும் தங்கினார்கள் .

குகைக்கு முன்னதாக மதுரமான ஒரு நீர் சுனை இருந்தது. அதில் தெளிவான ஜலம் ஓடிக்கொண்டிருந்தது . அதனருகில் வகை வகையான கனி வர்க்கங்கள் நிறைந்த மரங்களும் செடிகளும் இருந்தன.

இவர்கள் மிக்க விருப்பத்துடன் கனிகளை பறித்து தின்று சுனையில் ஓடும் மதுரமான ஜலத்தை அருந்தி தாகம் தீர்த்து சந்தோஷம் அடைந்தார்கள். இவர்கள் மிக தொலைவில் இருந்து வந்த அலுப்பினால் பசியை தணிக்கும் பொருட்டு கனிவர்க்கங்களைத் தின்று திருப்தி அடைந்த களைப்பினால் அப்பொதும்பிலுள்ள குகையிலுள்ள நித்திரை செய்தார்கள்.

விசுவாசமுள்ள அந்த நாயானது அந்த குகையின் வாசலில் இரண்டு கால்களையும் விரித்து உட்புறம் உட்கார்ந்து காவல் காத்துக் கொண்டிருந்தது . அல்லாஹுத்தஆலா தோழர்களுக்கு நித்திரையை மிகைப்பாக்கி விட்டான். அவர்கள் உறங்கினாலும் கண்கள் விழித்திருந்தன.

" மேலும், அவர்கள் தூங்கிக் கொண்டிருந்தபோதிலும், நீர் அவர்களை விழித்துக் கொண்டிருப்பவர்களாகவே எண்ணுவீர்;அவர்களை நீர் உற்றுப்பார்த்தால், அவர்களை விட்டும் வெருண்டு ஓடிப் பின்வாங்குவீர்; அவர்களில் நின்றும் உண்டாகும் பயத்தைக் கொண்டு நிரம்பிவிடுவீர்,

(அல்குர்ஆன் : 18:18)

"அவர்களுடைய நாய் தன் இரு முன்னங்கால்களையும் வாசற்படியில் விரித்திருக்கிறது; அவர்களை நீர் உற்றுப்பார்த்தால், அவர்களை விட்டும் வெருண்டு ஓடிப் பின்வாங்குவீர்; அவர்களில் நின்றும் உண்டாகும் பயத்தைக் கொண்டு நிரம்பிவிடுவீர்,

(அல்குர்ஆன் : 18:18)

பொதுவாக நாய் இரவில் உறங்காது .ஆனால் குகைத் தோழரின் கித்மீர் நாய் குகையினுள் உறங்கியதாக எந்த தகவலும் இல்லை.

அல்லாஹுத்தஆலா அவர்களுடைய சரீரத்தை பூமியின் சூடு சங்கடம் செய்யாமலிருப்பதற்காகவும், ஒரே மாதிரியாக படுத்திருந்தால் உடல் உணர்வுசெயல் இழந்துப் போகாமல் இருப்பதற்காகவும் வலம் இடமாக அவர்களைப் புரட்டிப் புரட்டி போடும்படி இரண்டு மலக்குகளை அந்த மலைப் பொதும்பு குகையினுள் நியமித்திருந்தான்.

அதிகாலையில் சூரியன் உதிக்கும்போது, அதன் கதிர்கள் குகையை விட்டு விலகி வலதுபுறமாகப் பாயும். மாலையில் மறையும்போது குகையைக் கடந்து இடதுபுறமாகத் தாழும். இத்தகைய அமைப்பில் மலைக்குகை அமைந்திருந்தது.

இந்த சூரிய ஒளி வலம் இடம் தகவல்களால் அந்த குகை இருக்கும் முகவரியை இறைவன் சொல்லியுள்ளான். சூரிய ஒளி உதிக்கும் போது வலது புறம் என்றும் மறையும் போது இடதுபுறம் என்றும் குறிப்பிடப்படும் குகை உலகில் வேறு எங்கும் இல்லை. இக்குகை ஜோர்டான் நாட்டு தலைநகரம் அம்மானுக்கு அருகில் ரக்கீம் என்ற இடத்தில் மட்டுமே இருக்கிறது.

وَتَرَى الشَّمْسَ اِذَا طَلَعَتْ تَّزٰوَرُ عَنْ كَهْفِهِمْ ذَاتَ الْيَمِيْنِ وَاِذَا غَرَبَتْ تَّقْرِضُهُمْ ذَاتَ الشِّمَالِ وَهُمْ فِىْ فَجْوَةٍ مِّنْهُ ذٰ لِكَ مِنْ اٰيٰتِ اللّٰهِ مَنْ يَّهْدِ اللّٰهُ فَهُوَ الْمُهْتَدِ وَمَنْ يُّضْلِلْ فَلَنْ تَجِدَ لَهٗ وَلِيًّا مُّرْشِدًا
சூரியன் உதயமாகும் போது (அவர்கள் மீது படாமல்) அது அவர்களுடைய குகையின் வலப்புறம் சாய்வதையும், அது அஸ்தமிக்கும் போது அது அவர்களுடைய இடப்புறம் செல்வதையும் நீர் பார்ப்பீர்; அவர்கள் அதில் ஒரு விசாலமான இடத்தில் இருக்கின்றனர் - இது அல்லாஹ்வின் அத்தாட்சிகளில் உள்ளதாகும், எவரை அல்லாஹ் நேர்வழியில் செலுத்துகிறானோ, அவரே நேர் வழிப்பட்டவராவார்; இன்னும், எவனை அவன் வழிகேட்டில் விடுகிறானோ, அவனுக்கு நேர் வழிகாட்டும் உதவியாளர் எவரையும் நீர் காணவே மாட்டீர்.
(அல்குர்ஆன் : 18:17)

**கராமத் 46**

குகைத் தோழர்கள் வரலாறு 7



பக்கத்து தேசத்தின் அரசன் அப்சூஸ் மீது படையெடுத்து வந்தான் .
இச்செய்தி தக்யானூஸ்க்கு எட்டவே, அவன் மதியற்றவனாகி பகைவர்களை எதிர்த்து சண்டை செய்ய முடியாமல். சோர்ந்து விட்டான்.
இதற்கிடையில் சிறைச்சாலையில் அடைக்கப்பட்டவர்கள் இதுதான் சமயம் என்று எண்ணி, ஒவ்வொருவர்களும் ஓட ஆயத்தமாகி, அப்படியே தங்கள் தங்கள் வீட்டிற்கு போய் வேண்டிய பொருட்கள் மற்றும் ரொக்கம் முதலிய சாமான்கள் எல்லாவற்றையும் எடுத்துக்கொண்டு இறைவன் பேரில் நம்பிக்கை வைத்து வேறுவேறு தேசங்களுக்கு போகத் துணிந்தார்கள்.
(என்பதாக கராமத் 42, குகைத்தோழர்கள் வரலாறு 3ம் பதிவில் பார்த்தோம்)

பக்கத்து தேசத்து அரசன் அப்சூஸ் மீது படையெடுத்து வரும் முடிவை மாற்றிக் கொண்டான்.தக்யானூஸ் அரசன் யுத்த களத்திலிருந்து நேராக அப்சூஸ் பட்டணத்திற்கு வந்திருந்தான். வந்ததும் சிறையிலிருந்து தப்பிய ஆறு பேர்களைப் பற்றி விசாரிக்க, அவர்கள் ஆறு பேரும் அவர்களின் வசிப்பிடத்தில் இல்லை.
பின்பு அவன் அவர்களின் பெற்றோர்களை அழைத்து விசாரிக்க, அவர்கள் : " எங்களுக்கு யாதொன்றும் தெரியாது ஆனால் ஆறு பேர்களும் வேண்டிய மட்டும் வீட்டிலிருந்த செல்வங்களை எடுத்துக் கொண்டு ஓடிப்போய் விட்டார்கள்"
அப்போது அஸ்ஹாப் தோழர்களுக்கு பகையானவர்கள் தக்யானூஸ் மன்னனிடம், " அவர்கள் 6 பேரும் உன்னை இறைவனாக வணங்காமல், அவர்கள் வேறு ஒரு மஹா இறைவனை வழிப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். ரக்கீம் என்னும் மலை பொதும்பில் அவர்கள் மறைந்து விட்டதாக தகவல் எங்களுக்கு கிடைத்துள்ளது " என்றார்கள்.

தக்யானூஸ் இதனைக் கேட்டு, " தன்னைத் தவிர வேறு ஒரு இறைவனை அவர்கள் ஏற்றுக் கொண்டால், நாளடைவில் அப்சூஸ் மக்கள் தன்னை இறைவனாக ஏற்காமல் புறந்தள்ளி விடுவார்கள். எனவே இந்த விஷயத்தை இப்போதே தீவிரமாக எடுத்து அந்த ஆறு பேர்களையும் கொன்றொழிக்க வேண்டும்.
அப்படி மரண தண்டனை கொடுக்கும்போது, அப்சூஸ் படை வீரர்களும் அந்த தண்டனையைப் பார்த்து மக்களிடம் கூறுவார்கள். இதனால் மக்கள் இழந்த பயத்தை நாம் மறுபடியும் நிலைநாட்டி, நாம் மக்களின் இறைவனாகவே தொடர்ந்து இருக்க முடியும் " என்று எண்ணி தக்யானூஸ் படை பலத்தோடு ரக்கீம் மலைப் பொதும்பை நோக்கி பயணமாக ஆய்த்தமானான்.
தக்யானூஸ் மன்னனின் கஜானா அதிகாரியாக (நிதி அமைச்சராக ) கஸான்ஜீ மார்னூஸ் என்பவர் அந்தரங்கத்தில் ஏக இறைவனுக்கு ஈமான் கொண்டவர். இவர் ஈமான் கொண்ட விஷயம் ஊரில் யாருக்குமே தெரியாது.

கஜானா அதிகாரி கஸான்ஜீ மார்னூஸ் , தக்யானூஸ் மன்னனிடம் , "அந்த ஆறு பேர்கள்களும் அப்சூஸ்ஸை விட்டு போய் விட்டார்களே... நாம் ஏன் அவர்களை தேடியலைய வேண்டும் ? ராஜங்கத்தில் பல பணிகள் முடங்கி கிடக்கின்றன.அதில் கவனம் செலுத்துங்கள். அவர்கள் அப்படியே அப்சூஸ் திரும்பி வரும்போது, பார்த்துக் கொள்ளலாம்" என்று தட்டிக் கழிக்கப் பார்த்தார்.

தக்யானூஸ்க்கு அந்த ஆறு பேர்களையும் கொல்ல வேண்டும் என்கிற கோபம் குறையவில்லை .ரக்கீம் மலைப் பொதும்பிற்கு போயே ஆகவேண்டும் என்றான். படை பயணம் புறப்பட்டது .
குகையில் இருந்த தோழர்களில் ஒருவரான எம்லீகா குகை வாசலில் உள்ள கனிகளைப் பறிக்க வரும் போது தூரத்தில் பெரிய படை பலம் வருவதற்கான தூசி படலம் வானில் மிதந்தது.

எம்லீகா திடுக்கமுற்று குகையில் உள்ள தோழர்களுக்கு இந்த செய்தியை அறிவித்தார். அவர்கள் பயமெதும் கொள்ளாமல் , "இறைவனிடம் நம்மை நாம் ஒப்படைத்தப் பிறகு உயிர் வாழ்வைப் பற்றி நமக்கென்ன கவலை ? எது நடந்தாலும் அது இறைவனிடம் நாட்டமே " என்று சொல்லி அவர் பறித்து கொண்டு வந்த பழங்களை சாப்பிட்டுவிட்டு,கவலை கொள்ளாமல் நித்திரையில் ஆழ்ந்து விட்டார்கள்.
தக்யானூஸ் படைகள் மலை பொதும்பை சுற்றி சூழ்ந்து கொண்டது . கஸானா அதிகாரியை கஸான்ஜீ மார்னூஸ்ஸை குகையினுள் அனுப்பி கஹ்பு தோழர்களின் நிலையை அறிந்து வரச் சொன்னான்.
அவர் போய் நித்திரையில் இருப்பவர்களின் பெயரைக் கூறி கூடிய மட்டிலும் எழுப்பி பார்த்தார். ஒருவரும் அசைந்து கொடுக்கவில்லை. அதனால் அவர் தக்யானூஸிடம் , "அவர்கள் இன்னும் உங்களின் பயத்தினாலும், பசியினாலும் செத்துக் கிடக்கிறார்கள். ஒருவரும் உயிரோடு இருக்கவில்லை"
இதைக் கேட்டதும், தக்யானூஸ் அரசன் ரொம்பவும் சந்தோஷமாகி, குகையின் வாசலை அடைக்க கல்லும், சுண்ணாம்பும் தரிவித்து கட்டிடம் கட்டும் பணி ஏவினான். அப்படியே கட்டடமும் கட்டப்பட்டது.
அப்போது தக்யானூஸ் மன்னன் "இவர்கள் தாங்கள் வணங்கும் கண்ணுக்குத் தெரியாத அந்த இறைவனைக் கூப்பிட்டு தப்பித்துக் கொள்ளட்டும் " என்று சொல்லி செருக்குடன் தன்னைத்தானே பெருமை பாராட்டிக் கொண்டு திரும்பிப் போய்விட்டான்.

கஸான்ஜீ மார்னூஸ்க்கு இறைவன் இல்ஹாம் என்னும் உதிப்பைக் கொடுத்து, ஈயத்தினாலான ஒரு பலகையில் அஸ்ஹாபுல் கஹ்பு என்ற ஏழு தோழர்களின் பெயர்களையும், அவர்களின் குடும்பத்தின் குறிப்புகளையும் அவர்கள் அப்சூஸ் பட்டணத்தை விட்டு வெளியேறிய வருஷம், தேதி இவைகளை விவரமாக எழுதி, பொதும்பின் வாசலில் உட்புறமாக தூக்கி வைக்கும்படி இறை உதிப்பு உண்டாயிற்று
.அப்படி அவர் செய்து முடித்தார்.
ஏனெனில் இறைவனுடைய நாட்டம் பிந்திய ஒரு காலத்தில் இதில் அடைப்பட்டவர்களின் வாழ்வும், அவர்களுக்கு நடத்தப்பட்ட கொடுமையுமான இந்த ரகசியம் வெளி உலகுக்கு தெரிய வேண்டியது இருக்கும் என்று எண்ணி, அவ்விதமாக பலகையை ஒழுங்குப்படுத்தி, தக்யானூஸ்க்கு தெரியாமல் மறைவாக பதித்து விட்டு, குகைத்தோழர்கள் அனைவரையும் இறைவனிடம் ஒப்பித்து விட்டு,
" இறைவா ! அஸ்ஹாபுல் கஹ்ப் தோழர்கள் உன்னையே ஈமான் கொண்டார்கள். உனக்காகவே வாழ்வையும் மரணத்தையும் துச்சமென ஏற்றுக் கொண்டார்கள். அவர்களுக்கு நீயே போதுமானவனாக என்றென்றும் இருக்க வேண்டும் " என்று மனமுறுகி வேண்டிக் கொண்டு .....
தக்யானூஸ்சுடன் அப்சூஸ் திரும்பினார் .

## கராமத் 47

குகைத் தோழர்கள் வரலாறு 8




தக்யானூஸ் மன்னன் அஸ்ஹாபுல் கஹ்பு தோழர்கள் தங்கியிருந்த குகையின் வாயிலை கல்லாலும், சுண்ணாம்பு காரையாலும் மூடினான்.

முன்பு கஹ்பு தோழர்கள் குகையின் வாசலில் விளையும் கனிவர்க்கங்களும் , சுனை நீர் குடிப்பும் இனிமேல் நிரந்தரமாக கிடைக்காமல் தடையேற்பட்டது.

கஸான்ஜீ மார்னூஸ் என்கிற தக்யானூஸ் மன்னனின் கஸானா அதிகாரி குகையினுள் வந்து இவர்களை தட்டி எழுப்பியதையோ , குகையின் வாசலை தக்யானூஸ் மூடியதையோ ஆக எதுவுமே தெரியாமல் அவர்கள் அனைவரும் நித்திரையில் ஆழ்ந்தனர் .

فَضَرَبْنَا عَلَٰٓى اٰذَانِهِمْ فِى الْـكَهْفِ سِنِيْنَ عَدَدًا ۙ

ஆகவே நாம் அவர்களை எண்ணப்பட்ட பல ஆண்டுகள் வரை அக்குகையில் (தூங்குமாறு) அவர்களுடைய காதுகளின் மீது (திரையிட்டுத்) தடையேற்படுத்தினோம். (அல்குர்ஆன் : 18:11)

(காதுகளுக்கும் தூக்கத்திற்கும் இடையேயுள்ள தொடர்பு பற்றி

**https://m.facebook.com/story.php?story_fbid=1932891413636871&id=100007480923921**)

وَلَبِثُوْا فِىْ كَهْفِهِمْ ثَلٰثَ مِائَةٍ سِنِيْنَ وَازْدَادُوْا تِسْعًا

அவர்கள் தங்கள் குகையில் முன்னூறு வருடங்களுடன் மேலும் ஒன்பது அதிகமாக்கி (முன்னூற்றி ஒன்பது வருடங்கள்) தங்கினார்கள். (அல்குர்ஆன் : 18:25)

தக்யானூஸ் மன்னன் குகைத் தோழர்களுக்கு அநியாயம் செய்துவிட்டு, அப்சூஸ் போய் சேர்வதற்குள் எதிரிகளால் கொலை செய்யப்பட்டான் .

பின் அப்சூஸை பல மன்னர்கள் ஆண்டு, 309 வருடங்களுக்கு பின் அப்சூஸை நாமூஸ்ஷாஹ் என்கிற நீதவான் ஆண்டார். அதே 309 வருடங்களுக்குப் பிறகு குகையினுள் உறங்கிய கஹ்பு தோழர்களில் மக்ஸல்மீனா என்பவர்தான் முதன்முதலில் நித்திரையிலிருந்து விழித்துத் தன்னுடன் நித்திரை செய்தவர்கள் 6 பேரையும் எழுப்பினார்.

இது பற்றி குர்ஆனில் இறைவன் தாம் தாம் அவர்களை எழுப்பியதாக...

" இன்னும் அவர்களிடையே ஒருவரையொருவர் கேட்டுக் கொள்வதற்காக நாம் அவர்களை இவ்வாறு எழுப்பினோம்;

அவர்களிலிருந்து சொல்பவர் (ஒருவர்) “நீங்கள் எவ்வளவு நேரம் (நித்திரையில்) இருந்தீர்கள்?” எனக் கேட்டார்;

"ஒரு நாள் அல்லது ஒரு நாளின் சிறிது பாகம் தங்கியிருந்தோம்” எனக் கூறினார்கள்;

(மற்றவர்கள்) “நீங்கள் (நித்திரையில்) இருந்த காலத்தை உங்கள் இறைவன்தான் நன்கு அறிந்தவன்"

(அல்குர்ஆன் : 18:19)

குகைத் தோழர்கள், " மறதியுற்று நித்திரை கொண்டோம். இதனால் இரவின் இபாதத்தும் காலவாதியாகிவிட்டது " என்று கை சேதம் கொண்டார்கள்.

பின்பு குகைத் தோழர்கள் தங்கள் பாதுகாப்பிற்காக கைவசம் வைத்திருந்த ஈட்டியை கையில் எடுத்துப் பார்க்க , அது துருப்பிடித்து மண்ணைப் போலாகித் துண்டு துண்டாகி விழுந்து விட்டது.

இதனால் அவர்களுக்கு பலத்த சந்தேகம் எழ ஆரம்பித்தது. ஓர் இரவு கொண்ட நேரத்தில் இரும்பினால் செய்யப்பட்ட ஈட்டி எப்படி துருவேறி அதுவும் உப்பு மாதிரி உதிர்ந்து போகும் ? ஓர் இரவுக்குள் குகையின் வாசலை யார் வந்து எப்படி மூடினார்கள் ?

குகையின் வாசலை தோழர்கள் உடைத்து வெளியில் வந்து மலை பொதும்பிற்கு வெளியே ஓடிக் கொண்டிருந்த சுனை ஊற்றினை தேடிய போது அது காணப்படவில்லை.

சுவை மிகுந்த கனி வர்க்கங்களை தந்த மரங்களும் காணப்படாமல், அவ்விடம் புதர் மண்டிக் கிடந்தது. அந்த ஓடைக்கரையில் உண்டான பள்ளம் மேடு முதலிய அடையாளங்கள் ஒன்றுமில்லாமல் வேறு விதமாக மாறி இருந்தது. தவிர மேடாக இருந்த இடத்தில் பள்ளமாகவும் , பள்ளமாக இருந்த இடத்தில் மேடாகவும் இருந்தது. தவிர அந்த மைதானம் பயங்கரமான தளமாய் காணப்பட்டது .

இதனால் அவர்கள் மதி மயங்கிவர்களாக எல்லோரும் ஒலுகு செய்து இறைவனுடைய நாட்டத்தை வேண்டி குகையினுள் சென்றனர். பசியால் இளைத்தவர்களாகவும் இருந்தார்கள்.

அப்போது எம்லீகா என்பவர் ஆடு மேய்ப்பாளர் மர்தூனஸின் உடுப்பை அணிந்துகொண்டு உணவு வாங்கிக் கொண்டு வருவதற்காக ஊருக்குள் செல்லலானார்.

அப்போது மற்ற சிநேகிதர்கள், " எமிலீகாவே...! நீர் போய் நல்ல , சுத்தமான உணவு வாங்கிக் கொண்டு வாரும் தவிர ஒவ்வொரு மனிதருடனும் மிருதுவாக பேச வேண்டும். ஏனெனில் ஒருக்கால் நமது ரகசியம் வெளியாகி விட்டால், மார்க்கம் இழந்த தக்யானூஸ் மன்னன் நம் எல்லோரையும் பிடித்து கொன்று போடலாம். அல்லது அவனது மார்க்கத்தில் சேரும்படி துன்புறுத்தலாம் என்று சொல்லி அப்சூஸ் பட்டணத்திற்கு போகும்படி அனுப்பி வைத்தார்கள்.

## கராமத் 48

குகைத் தோழர்கள் வரலாறு 9




எம்லீகா அப்சூஸ் பட்டணத்திற்கு போகிற பாதையில் எல்லாம் புதிது புதிதாக வித்தியாசமாக இருந்தது. எவ்விடத்தில் பாழ் பூமியாக இருந்ததோ அவைகளெல்லாம் உயர்ந்த கட்டிடங்களாகவும் , செழிப்பாக இருந்த இடங்களெல்லாம் பாழ் பூமியாகவும் மாறியிருந்தது .

தெரு வீதிகளும், சந்துக்களும், வீடுகளும் கூட பலவித மாற்றங்கள் இருப்பதைக் கண்டு மிரண்டு போனார் எம்லீகா .
அப்போது ஊரில் கடைகோடியில் ஒரு இடத்தில் "லா இலாஹ இல்லல்லாஹ் ஈஸா ரூஹுல்லாஹ் " என்ற கலிமா எழுதப்பட்டிருந்தது.
அந்த கலிமாவைப் பார்த்ததும் எம்லீகா ஓடிப்போய் அதில் தமது கண்களை வைத்து அழுத்தியவாறு எண்ணினார்:
" இந்த வெளிப்படையான செய்தி எப்படி மன்னன் தக்யானூஸ்க்கு தெரியாமல் இருக்கிறது ? என்று ஆச்சரியப்பட்டார்.
அவ்வாறு நினைத்து போய்க் கொண்டிருக்கையில் மஸீஹ் உடைய ஆலயங்களும் பரிபாலனம் செய்யப்பட்டிருப்பதை கண்டார்.
அவைகளுடைய வாசல்களிலும், சுவர்களிலும் நபி ஈஸா (அலை) அவர்களுடைய படங்கள் ஜோடிக்கப்பட்டு இருந்தது. அதை கண்டு ,
" இறைவனே! இது என்ன ஆச்சரியம் ..! ஓர் இரவுக்குள் எத்தனை பெரிய பெரிய புதுப்புது மாற்றங்கள் உண்டாகியிருக்கிறது.
ஜனங்களின் சொல், செயல்களில் நபி ஈஸா (அலை) அவர்களைக் கொண்டும் அல்லாஹுத்தஆலாவின் நாமத்தைக் கொண்டும் மக்கள் சத்தியம் செய்கிறார்கள்.
இன்னும் பல இடங்களில் ஜனங்கள் இன்ஜீல் வேதத்தை மிக தைரியமாக ஓதுகிறார்கள். இதற்கு முன் இன்ஜீலை யாரும் ஓத முடியாமல், தக்யானூஸ் மன்னனுக்கு பயந்து இருந்தார்களே. அட , இந்த தக்யானூஸ் மன்னன்தான் எங்கே ?

" இறைவனே அப்சூஸ் பட்டணத்தில்தான் வந்திருக்கிறேனா... அல்லது வேறு எந்த ஊரிலாவது வழி தப்பி வந்து விட்டேனா... எனக்கு ஒன்றும் தெரியவில்லையே. தவிர ஆயிரக்கணக்கான மனிதர்களை பார்க்கிறேன் ஒருவரும் எனக்கு அறிமுகமாகத் தெரியவில்லையே "
கடைசியாக ஒரு ரொட்டிக்கடைகாரனிடம் வந்து, " தம்பி இந்த ஊரின் பெயர் என்ன ? என்று கேட்டார். அவன் "அப்சூஸ்" என்று சொன்னான். இவ்விடத்தின் அரசன் யார் ? என்று கேட்க, அதற்கு அவன் " நாமூஸ் ஷாஹ்" என்று சொன்னான் .
இந்த பதில்கள் யாவும் அவரின் அனுபவத்திற்கு புதுமையாக இருந்தது. சரி இங்கு இருந்த மன்னன் தக்யானூஸ் எங்கே இருக்கிறான் ? யாருக்கும் ஒன்றும் தெரியவில்லையே.
எம்லீகா , தன்னிடம் இருந்த சில நாணய திர்ஹகத்தை அவனிடம் கொடுத்து, " இதற்கு ரொட்டி கொடு" என்றார்.

அப்போது அந்த கடைக்காரன் அந்த நாணயத்தை பார்த்ததும் "இந்த மனிதன் எங்கேயோ ஒரு காலத்தில் உள்ள ஒரு புதையலைப் பெற்றிருக்கிறான். இந்த நாணயம் இக்காலத்தில் உள்ள ரூபாய் இல்லை. இது எடையில் பத்து பங்கு அதிகமாக காணப்படுகின்றது " என சொல்லி,

எம்லீகாவைப் பார்த்து, " நீ முற்காலத்தில் உள்ள ஏதோ ஒரு புதையலை கண்டெடுத்து இருக்கிறாய்.ஆகவே நீ எனக்கு அதில் பங்கு கொடு. இல்லாவிடில் நான் உன் ரகசியத்தை வெளியாக்கி விடுவேன்" என்றான்.
அதற்கு எம்லீகா, " நான் எந்தப் புதையலையும் பெற்றுக் கொள்ளவும் இல்லை. எவருடைய உடைமையும் அபகரிக்கவும் இல்லை . நான் மூன்று நாளைக்கு முன் என்னுடைய ஈத்தம் பழத் தோட்டத்தை விற்று கிரயத்தை எடுத்துக் கொண்டு ஊரை விட்டு கிளம்பி வெளியூருக்கு வந்தேன். அப்போது ஊரில் உள்ள ஜனங்களெல்லாம் தக்யானூஸ் மன்னனை வணங்கினவர்களாக இருந்தார்கள்" என்று சொன்னார் .

இதை ரொட்டிக் கடைக்காரன் கேட்டு, " நீ என்ன பைத்தியக்காரனா ? அந்த கொடுங்கோலன் தக்யானூஸ் மன்னன் செத்து, 300 வருடங்களுக்கு மேல் ஆகிவிட்டது. நீ இப்போது வந்து மூன்று நாளைக்கு முன்னாள் நடந்த விஷயத்தைப் போல பேசிக் கொண்டிருக்கிறாய். என்னை பைத்தியக்காரன் என்று பரிகாசம் செய்கிறாயா ?" என்று சத்தம் போடவும் கடைவீதியில் ஜனங்களும் , சேவகர்களும் வந்து கூடிவிட்டார்கள் .
எம்லீகாவை நீதமான மன்னன் நாமூஸ் ஷாஹ் சமூகத்திற்கு அனுப்பப்பட்டது. அப்போது நாமூஸ் ஷாஹ் மன்னர் எம்லீகாவைப் பார்த்து," நீர் யாருக்கும் பயப்படாதீர். எங்கள் நபி ஈஸா (அலை) அவர்களின் மார்க்கம் எவருடைய முதலையும் பறித்துக் கொள்ளும்படி கட்டளை கொடுக்கவில்லை. ஆனால் நீர் பெற்றுக்கொண்ட புதையலில் ஐந்தில் ஒரு பங்கு மட்டும் எங்கள் ராஜ்ஜியத்திற்கு கொடுத்து விடும். இந்தமட்டும் தான் வாங்கிக் கொள்ள எங்கள் நபி எங்களுக்கு உத்தரவு கொடுத்திருக்கிறார்கள்" என்று சொன்னார்.

அப்போது எம்லீகா மன்னனைப் புகழ்ந்து துஆ செய்து, "மார்க்கப்பற்றுள்ள மன்னரே..! அல்லாஹுத்தஆலா உம்முடைய ராஜாங்கத்தை தரிபாடக்கி வைப்பானாக..! நான் இந்த படுமோசமான சந்தேகத்தை விட்டும் நீங்கியவனாக இருக்கிறேன். நான் எந்த புதையலும் பெற்றுக் கொள்ளவில்லை. தவிர நானும் இந்த ஊர்க்காரன்தான் " என்று சொன்னார்.
அதற்கு மன்னர் " அப்படியானால் ,இந்த ஊரில் உங்களுக்கு தெரிந்தவர்கள் பெயரை சொல்லுங்கள்" என்று கேட்க , சுமார் ஆயிரம் பெயர்களை சொல்லிக் காட்டினார்.
அப்போது மன்னர் தனது அதிகாரிகள் இடத்தில், "இந்த பெயர் உள்ளவர்கள் யாரேனும் இவ்வூரில் இருக்கிறார்களா ? " என்று கேட்க,

ராஜ தர்பாரில் இருந்த அதிகாரிகள் கைகட்டி நின்று,
"ஆச்சரியம் ஆச்சரியம் " இந்தப் பெயர் உள்ளவர்கள் ஒருவரும் இந்தப் பட்டணத்தில் கிடையாது. தவிர நம்முடைய காலத்திலும் இவ்விதமான பெயர்கள் எதுவும் இல்லை. ஆனால்... முந்தின காலத்தில்தான் இப்படிப்பட்ட பெயர்கள் இருப்பதை சில பழைய பத்திரங்களிலும், பழமையான காகிதங்களிலும் காண்கிறோம் " என்றார்கள்.

அப்போது மன்னர் எம்லீகாவிடம், " உம்முடைய வீடு வாசல் எங்கு எங்கு இருக்கிறது ? "என்று கேட்க , அவர் அந்த தெரு பெயரையும், வீட்டின் அடையாளத்தையும் சொன்னார்.
எம்லீகாவுடன்,மன்னரின் காரியதரிசிகளும் சேர்ந்து அந்த தெருக்குப் போயினர். எம்லீகா தம்முடைய வீட்டை தேடி கடந்து போகையில், ஒரு இடத்தை கூர்ந்து பார்த்து தேர்ந்தெடுத்தார். அதில் பழைய கட்டடத்தின் அடையாளம் காணப்பட்டு இருந்தது. ஆகவே அவர் நன்றாக ஆலோசித்து விட்டு, இதுதான் நம்முடைய வீடு என்று நிச்சயப்படுத்தி அதன் வாசலில் நின்று கை தட்டினார். அதிலிருந்து 100 வயதுக்கும் மேலான கிழவர் ஒருவர் வந்தார்.அவர் மிகவும் பலவீனமாக இருந்தார். சரீரத்தில் உதறுதல்களும். தலையில் ஆட்டமும் கொண்டு, கம்பு ஊன்றி கொண்டு வீட்டிற்கு வெளியில் வந்தார்.

அப்போது அவர் வாசலில் நிற்கும் ஜனக் கூட்டத்தையும் , அரசனுடைய ஆட்களையும், 25 வயது மதிக்கதக்க ஓர் அழகான இளைஞனையும் பார்த்து திகைத்து, இது என்ன விஷயமோ என்று பயந்து, அவரை நோக்கி, " நீங்கள் என் வீட்டைச் சூழ்ந்து கொண்டு ஏன் நிற்கிறீர்கள் ? "என்று கேட்டார்

அப்போது அரசனுடைய ஆட்கள் " இதோ உனக்கு முன்னால் நிற்கிறாரே இந்த இளைஞர் இந்த வீட்டை தன் வீடு என்று சொல்கிறார் " அதற்கு அந்த கிழவர் மிகவும் கோபித்து, எம்லீகாவை நோக்கி முகம் கடுகடுத்து, " உன் பெயர் என்ன சொல் "என்று கேட்க,
அதற்கு அவர் "எம்லீகா " என்றார். பின்பு அவர் உன் தகப்பனாரின் பெயர் என்ன என்று கேட்க "குஸ்தனீகீன்" என்றார்.
அப்போது அந்தக் கிழவர் மறுபடியும் எம்லீகாவின் முகத்தை கூர்ந்து பார்த்து, மறுபடியும் " உனது பெயர் என்ன ?" என்றார். அதற்கு அவர் " எம்லீகா, தன்னுடைய தகப்பனார்"குஸ்தனீகீன்" பெயரையும் சேர்த்து சொன்னார்.
அப்போது அந்த கிழவர் எம்லீகாவுடைய கால் பாதத்தில் விழுந்து, இரு கை கால்களை முத்தமிட்டும் கட்டியணைத்தும் கண்ணீர் சொறிந்தனர் .
கிழவர் : " நான் இறைவன் பெயரில் சத்தியமாக சொல்கிறேன் இவர்தான் என் மேலான பாட்டனார் எம்லீகா. கொடுங்கோலன் தக்யானூஸ் மன்னனின் கொடுமையால் அல்லாஹ்வின் பாதையில் ஓடிப்போய் றகீம் என்னும் பொதும்பில் மறைவாக இருந்த சாலிஹான ஏழு தோழர்களில் இவரும் ஒருவரே ஆவார்.
இவரைப் பற்றி எங்கள் குடும்பத்தில் கடக்கும் ஒவ்வொரு பரம்பரையினருக்கும் சொல்லி சொல்லி இவர் வரலாற்றை எங்கள் குடும்ப மனதில் பதிந்துள்ளோம் .
ஆகவே கஹ்பு தோழர்கள் இவர்களுடைய சரித்திரங்களை பற்றி நமது நபி ஈஸா இப்னு மரியம் அலைஹிவஸல்லம் அறிவிக்கிறார்கள்:
" அஸ்ஹாபுல் கஹ்புகள் வருகிற காலம் மிகவும் சமீபத்தில் இருக்கிறது. அவர்கள் கூடிய சீக்கிரம் நித்திரையை விட்டு எழுப்பப்படுவார்கள் " என்று திருவுளமாயிருக்கிறார்கள் என்று சொல்லி முடித்தார்.
இந்த நிகழ்வுகளை மன்னர் ரகசிய காரியதரசிகள் மூலம் கேட்டு எம்லீகாவுடைய பாதத்தில் மன்னரும் விழுந்தார்.
இந்த சங்கதி எங்கும் பிரசித்தமாகி, அப்சூஸ் பட்டணத்திலுள்ள ஜனங்கள் கூட்டம் கூட்டமாய் வந்து ஒவ்வொருவரும் கைகளையும், கால்களை முத்தமிட்டும் இறை வல்லமை மீது சந்தோஷம் கொண்டவர்களாகவும் இருந்தார்கள்.
25 வயதுடைய முப்பட்டனார் எம்லீகாவிற்குக்கு 100 வயதில் தன் பேரக்குழந்தையை நிதர்சனமாக சந்திக்கின்றார் .
ஆல்பர்ட் ஐன்ஸ்டினின் சிறப்பு சார்பியல் கோட்பாட்டின்படி , " சம்பவமே இல்லை என்றால் அவருக்கு காலமே இல்லை "
309 வருடங்கள் குகையில் நித்திரையில் கழித்த எம்லீகாவிற்கு உலகத்தின் எந்த சம்பவத்தின் தாக்கமும் இல்லை .எனவே 309 வருடமாகியும் , அவர் நித்திரை கொண்ட வயது 25-லேயே இருக்கிறார். இதுதான் காலத்தின் கோலம்.
இது போன்று அஸ்ஹாபுல் கஹ்பு வரலாற்றின் ஒவ்வொரு நிகழ்வுகளிலும் அற்புதங்கள் , ஆச்சரியங்கள், அதிசயங்கள் நிறைந்ததுதான் என்பதை இறைவன் திருக்குர்ஆனில்,

اَمْ حَسِبْتَ اَنَّ اَصْحٰبَ الْـكَهْفِ وَالرَّقِيْمِ ۙ كَانُوْا مِنْ اٰيٰتِنَا عَجَبًا

(அஸ்ஹாபுல் கஹ்ஃபு என்ற குகையிலிருந்தோரைப் பற்றி) அந்த குகையிலிருந்தோரும், சாஸனத்தையுடையோரும் நம்முடைய ஆச்சரியமான அத்தாட்சிகளில் நின்றும் உள்ளவர்கள் என எண்ணுகிறீரோ?
(அல்குர்ஆன் : 18:9)

## கராமத் 49

குகைத் தோழர்கள் வரலாறு 10



எம்லீகா 300 வருடத்திற்கு முந்தைய புனிதர் என்றதும் அப்சூஸ் பட்டணத்தின் மக்கள் அவரின் கை, கால்களை முத்தமிட்டனர்.

அப்சூஸ் பட்டணத்தை இரு அரசர்கள் ஆட்சி செய்தனர். ஒருவர் நாமூஸ் ஷாஹ் என்னும் மார்க்கப்பற்றுள்ளவர் , இன்னொருவர் யுஹீம் என்ற நஸ்ரானி. இவர்கள் இருவரும் எம்லீகாவை கட்டி அணைத்து முஸாபஹத்து செய்து விட்டு மற்ற தோழர்கள் ஆறு பேருடைய நிலையைப் பற்றி கேட்டறிந்தனர்.

அதற்கு எம்லீகா, " ரக்கீம் என்னும் மலைபொதும்பில் உள்ள குகையினுள் இருக்கின்றார்கள்" என்று சொன்னார். இரண்டு அரசர்களும் தங்கள் தங்கள் கூட்டத்துடன் மற்ற கஹ்பு தோழர்களை தரிசிப்பதற்காக எம்லீகாவுடன் மலை பொதும்புக்கு புறப்பட்டுப் போனார்கள்.
அவ்வாறு போகையில் நடு வழியிலேயே எம்லீகா தம்மோடு குகையில் இருந்த மற்ற சினேகிதர்களுக்கு இந்த செய்தியை முன்பே அறிவிப்பதற்காக இவ்விரு அரசர்களை விட்டு விட்டு குகையை அடைந்த போது ,
அதன் வாசலில் 309 வருடத்திற்கு முன் கஸான்ஜீ மார்னூஸ் என்ற தக்யானூஸ் கஸானா பொறுப்பாளர் தங்கள் ஏழு பேரின் வரலாறு பதித்திருந்த ஈயத் தகட்டை எம்லீகா பார்வையிட்டார். இது மேலும் 309 வருடங்கள் தாங்கள் தூங்கியதை உறுதிப்படுத்திற்று.
வந்திருந்த இரு அரசர்களும் மலைப் பொதும்பின் வாசலில் பதிக்கப்பட்ட தகட்டை பார்வையிட்டு, திரும்பி வரும் எம்லீகாவிற்காக காத்திருந்தனர். ஆனால் அவர் திரும்பி வரவே இல்லை.
குகையினுள்...

தம் ஊர் சென்ற எமிலீகாவின் நிலையைக் குறித்து குகைத் தோழர்கள் ஆறுபேரும் கவலைப்பட்ட வண்ணம் இருந்தனர்.
எம்லீகா குகையினுள் திரும்ப வந்தபோது, அவருடைய தோழர்கள் அனைவரும் எழுந்து நின்று அவரை கட்டி அணைத்து, " இறைவன் உம்மை தக்யானூஸ் மன்னனின் தீங்கை விட்டும் காப்பாற்றி சௌக்கியமாக கொண்டு வந்து சேர்த்தானே என்று என்று ஆறுதலாய் சொன்னபோது,
எம்லீகா , " அந்த கொடுங்கோலன் தக்யானூஸ் பேச்சை எடுக்காதீர்கள். நீங்கள் எந்தமட்டில் இங்கு நித்திரை கொண்டீர்கள் என்பதை சொல்லுங்கள் ? "என்றார்
அதற்கு அவர்கள் "ஒரு நாள் அல்லது அதைவிட குறைவாக இருக்கலாம் " என்று சொன்னார்கள்.
அப்போது எம்லீகா, " நண்பர்களே நாம் 309 வருஷம் வரை நித்திரை கொண்டிருந்தோம். அனேக நூற்றாண்டுகள் நம்மை விட்டு கடந்துவிட்டன. இதற்கிடையில் தக்யானூஸ் மன்னனும் மாண்டு விட்டான். இப்போது அப்சூஸ் பட்டணத்தை இரண்டு அரசர்கள் இருந்து ஆட்சி செய்து வருகிறார்கள். அவர்களில் ஒருவர் நீதமான மன்னர் நாமூஸ் ஷாஹ். மற்றொருவர் நஸ்ரானி. இப்போது இந்த இரண்டு அரசர்களும் உங்களைப் பார்க்க வேண்டும் என்று ஆசையால் இதோ வந்து கொண்டிருக்கிறார்கள். இது பற்றி நான் உங்களுக்கு முன்பே இந்த சமாச்சாரம் தெரியப்படுத்த வேண்டும் என்று எண்ணி குகைக்குள் முந்தி வந்துவிட்டேன் "
உடனே தோழர்கள் , எம்லீகாவே ..! நாம் இதுவரையிலும் இக்குகையினுள் இறைவனோடு மட்டும் இருந்து வந்துள்ளோம். நமது ரகசியம் இப்போது வெளியாகி உள்ளது. இனி ஜனங்களுக்கு இடையில் நாம் தொந்தரவு அடைவதை நீர் நாடுகிறீரோ ?" என்று கேட்டார்கள்

அதற்கு எம்லீகா, "அப்படி ஆனால் உங்களுடைய யோசனை என்ன?" கேட்டார்.
அதற்கு அவர்கள்: " நம் நிலைமைகளை இறைவனைத் தவிர ஒருவரும் அறியாதிருப்பதற்காகத்தான் நாம் இந்த குகையை நாடி இதனுள் தஞ்சமடைந்தோம். இறைவனும் நம்மை பொருந்திக் கொண்டு, அவனின் மாபெரும் வல்லமையால், 309 வருடங்களாக

நம்மை நித்திரை செய்ய வைத்து மக்களிடமிருந்து பாதுகாத்தான். இது இதுவரையிலும் யாருக்கும் கிடைக்காத பாக்கியம். இந்த ரகசியம் நமக்கும் நம்மைப் படைத்தரப்புக்கும் இடையே மட்டும் இருந்து வந்தது. இப்போது இது மக்களுக்குத் தெரிய வந்துள்ளது . இதனால் ஏற்படும் பஸாயித்திலிருந்து நம்மை பாதுகாக்க, நமது ரூஹ் - உயிர்களை கைப்பற்றிக் கொள்ளும்படி இறைவனிடம் துஆ கேட்க வேண்டும்" என்றார்கள்.
அதுவே சரியான முடிவாக தீர்மானிக்கப்பட்டது.

எல்லோரும் எம்லீகாவுடன் தங்கள் தங்கள் கைகளை உயர்த்தி இறைவனிடம் துஆ கேட்டார்கள்.
அந்த உடனே அல்லாஹ்தஆலா அவர்களின் துஆவை கபூல் செய்து, அவர்களுடைய ரூஹ்களைப் பெற்றுக் கொள்ளும்படி இஸ்ராயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு உத்தரவு கொடுத்தான். அப்படியே அன்னவர்களின் ரூஹும் கைப்பற்றப் பட்டது. குகையின் வாசல் முன் போலவே அடைபட்டு விட்டது.
அந்த இரண்டு அரசர்களும் குகையின் வாசலைத் தேடி ஏழு இரவும் எட்டு பகலும் சுற்றித்திரிந்தார்கள். ஆயினும் எந்த ஒரு அடையாளமும் தென்படவில்லை.
அப்போது இரு அரசர்களும் மதிமயங்கியவர்களாயும் பயம் கொண்டவர்களாயும் ஒன்றும் இயலாதவர்களாயும் ஆகி விட்டனர். பின் இந்த குகையை உள்ளடக்கி ஒரு மஸ்ஜிது கட்ட அவர்கள் முடிவு செய்தனர்.

وَكَذٰلِكَ اَعْثَرْنَا عَلَيْهِمْ لِيَـعْلَمُوْۤا اَنَّ وَعْدَ اللّٰهِ حَقٌّ وَّاَنَّ السَّاعَةَ لَا رَيْبَ فِيْهَا اِذْ يَتَـنَازَعُوْنَ بَيْنَهُمْ اَمْرَهُمْ فَقَالُوا ابْنُوْا عَلَيْهِمْ بُنْيَانًا رَبُّهُمْ اَعْلَمُ بِهِمْ قَالَ الَّذِيْنَ غَلَبُوْا عَلٰٓى اَمْرِهِمْ لَـنَـتَّخِذَنَّ عَلَيْهِمْ مَّسْجِدًا
இன்னும், நிச்சயமாக அல்லாஹ்வின் வாக்குறுதி உண்மையானது என்றும், நிச்சயமாக கியாம நாளிலும் சந்தேகமில்லை என்றும் அப்பட்டணவாசிகள் அறிந்து கொள்வதற்காகவே, இவ்வாறு அவர்களைப் பற்றிய (விஷயத்)தை வெளியாக்கினோம்; (அப்பட்டணவாசிகளோ) “இவர்கள் யார் என்பதை பற்றி தர்க்கித்துக் கொண்டதை (நபியே! நினைவு கூறும்) “இவர்கள் (இருந்த இடத்தின்) மீது ஒரு கட்டடத்தைக் கட்டுங்கள்; இவர்களை(ப் பற்றி) இறைவனே நன்கறிவான் என்றனர்;
இ(வ்விவாதத்)தில் எவர்களுடைய கருத்து மிகைத்ததோ அவர்கள்: “நிச்சயமாக அவர்கள் மீது ஒரு மஸ்ஜிதை அமைப்போம்” என்று கூறினார்கள். (அல்குர்ஆன் : 18:21)
ரஹ்மத் ராஜகுமாரன்.

## கராமத் 50

குகைத் தோழர்கள் வரலாறு 11

ஹஜரத் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் :
" ரோமர்களை எதிர்த்து முஆவியா (ரலி) அவர்களுடன் ஜிஹாது செய்ய நானும் சென்றிருந்தேன். இது "முலீக் போர்" என்று சொல்லப்படும். அப்போது இந்த குகையை கடந்து செல்லவேண்டி இருந்தது.
அதன் உள்ளே சென்று பார்க்க வேண்டும் என்றும் முஆவியா விரும்பினார் . நான் கூடாது என்றேன். நம்மை விட எவ்வளவோ சிறப்புடைய ரசூல் (ஸல் ) அவர்களிடமே , " நீர் கூர்ந்து பார்த்தீரானால் ...." என்று அல்லாஹ் கூறுகிறானே தவிர , போய் பார்க்கச் சொல்லவில்லை என்றேன் .முஆவியா என் வாதத்தை ஏற்றுக்கொள்ளவில்லை.
"திட்டவட்டமாக யாரும் உள்ளே போகலாகாது என்று தடை செய்யப்படவில்லையே" என்று காரணம் சொல்லி சிலரை முஆவியா (ரலி) உள்ளே அனுப்பினார்கள்.
குகையில் நுழைந்ததுமே, கடும் வெப்பத்துடன் அனல் காற்று வீசி உள்ளே போகவோ, எதையும் பார்க்கவோ முடியாதபடி அவர்களைத் தடுத்து விட்டது. ( காஸின் , குர்துபீ )

ஆங்கிலச் சரித்திர லார்டு வில்லியம் முய்ர், "கிறிஸ்துவ கோயில்களின் வரலாறு ,, என்ற நூலில் இந்த நிகழ்ச்சியை குறிப்பிட்டு, இது உண்மையே என்று உறுதிப்படுத்துகிறார்.
இந்த உண்மையை ஹிஜ்ரி 842 முதல் 846 வரை ஆட்சி புரிந்த கலீஃபா வாஹித் என்பவர் ஒரு படையுடன் சென்று வந்து தான் கண்டதை எழுதி வைத்துள்ளார் என்று வரலாற்று ஏடுகள் சுட்டிக் காட்டுகின்றன .
பண்டைய அயோனிய கிரேக்க நகரமான எஃபெஸ்ஸில்தான் அக்குகை இருந்தது என்பர் சிலர் .
மேற்கு துருக்கியில் உள்ள செல்சுக் என்னும் கிராமத்தின் அருகில் இந்நகரத்தின் சிதிலங்கள் காணப்படுகின்றன. கிறிஸ்தவ சமயத்தின் ஆரம்பகால நிலைக்களனாக விளங்கிய இந்நகருக்கு பால் (Paul) வந்தார். இங்குதான் இருந்தது என்பது கிறிஸ்தவர்களின் நம்பிக்கையாக இருக்கலாம்.
ஆப்பிரிக்க நாடான துனிசியாவின் தென்பகுதியில்

"குகை " (அல்கஹ்ஃப்) என்று அழைக்கப்படும் ஓர் இடம் இருப்பதாகவும் சொல்லப்படுகிறது.
ஸ்பெயின் நாட்டில் ஆண்டலூசியா மாகாணத்தில் கிரேனடா நகரின் தென்மேற்கில் உள்ள லோஷா (Loja ) என்ற ஊருக்கு அருகில் அக் குகை இருப்பதாக வேறு சிலர் கூறுவர்.
இதற்கெல்லாம் மேலாக குகைவாசிகள் கிறிஸ்தவர்கள் அல்லர்; யூதர்கள் என்றும் ஒரு தகவல் உண்டு.

அதனால் தான் மக்கா குறைஷிகளிடம் குகை வாசிகள் குறித்து முஹம்மதிடம் கேளுங்கள் என மதீனா யூதர்கள் சொல்லிக் கொடுத்தார்கள்.

குகை வாசிகள் கிறிஸ்தவர்களாக இருந்திருந்தால், கிறிஸ்தவர்களை அங்கீகரிக்காத யூதர்கள் குகைவாசிகள் குறித்து கேட்குமாறு குறைஷியருக்குச் சொல்லிக் கொடுத்திருக்க மாட்டார்கள் என்பது இவர்களின் வாதமாகும்.
இவ்வாறு யூதர்கள் தமக்கு நேர்ந்த கொடுமைகளிருந்து தம்மை தற்காத்துக்கொள்ள குகைகளில் தஞ்சமடையும் பழக்கம் இருந்து வந்துள்ளது.
இதற்கெல்லாம் மேலாக குகைவாசிகள் கிறிஸ்தவர்கள் அல்லர்; யூதர்கள் என்றும் ஒரு தகவல் உண்டு.



அதனால் தான் மக்கா குறைஷிகளிடம் குகை வாசிகள் குறித்து முஹம்மதிடம் கேளுங்கள் என மதீனா யூதர்கள் சொல்லிக் கொடுத்தார்கள்.
குகை வாசிகள் கிறிஸ்தவர்களாக இருந்திருந்தால், கிறிஸ்தவர்களை அங்கீகரிக்காத யூதர்கள் குகைவாசிகள் குறித்து கேட்குமாறு குறைஷியருக்குச் சொல்லிக் கொடுத்திருக்க மாட்டார்கள் என்பது இவர்களின் வாதமாகும்.
இவ்வாறு யூதர்கள் தமக்கு நேர்ந்த கொடுமைகளிருந்து தம்மை தற்காத்துக்கொள்ள குகைகளில் தஞ்சமடையும் பழக்கம் இருந்து வந்துள்ளது.
ஆனால் முஸ்லீம் ஆய்வாளர்கள் பலர் கண்டுபிடித்து அவர்கள் கிருஸ்துவர்கள் என்று சரி கொண்டுள்ள குகை முன்பு நாம் குறிப்பிட்ட ஜோர்தான் குகை என்பது குறிப்பிடதக்கது. அல்லாஹ்வே அறிவான்.
இன்று கிருஸ்துமஸ். கிருஸ்துமஸ்
**வாழ்த்துகள்**

ரஹ்மத் ராஜகுமாரன் .

(இத்துடன் கராமத் தொடர் பதிவுகள் நிறைவு பெறுகிறது )

**Vali Poakkan Parathesi** DEC23 2021
கிட்டத்தட்ட 100 ஆண்டுகளை கடந்த ஒரு கிதாபை அடிப்படையாக வைத்து அதை மீட்டெடுத்து அதை எங்களுக்கு உங்களது எழுத்து நடையில் புரிய வைத்தமைக்கு மிகப்பெரிய வாழ்த்துக்கள்….
இது ஒரு பிரமிப்பான சம்பவம் 100 ஆண்டுகளுக்கு முன்பு எந்தவித தொழில்நுட்பமும் அவ்வளவு இலகுவாக கிடைக்காத காலகட்டத்தில் ஒரு ஆத்ம திருப்தியுடன் (அந்த ஆலீம்) எழுதிய கிதாபு எத்தனையோ கைகளுக்கு சென்று கடைசியாக தங்களது கைகளுக்கு வந்து அதை இன்றைய காலகட்டத்தில் உள்ள தகவல் தொழில் நுட்ப உதவியுடன் எங்களுக்கு எழுதியுள்ளீர்கள் அவங்களுக்கு நீண்ட ஆயுளும் பரக்கத்தும் அளித்து எழுத்து பணிகளில் மேலும் மேலும் வளர உதவி புரிவானாக ஆமீன்

## ஸூஃபிப் பார்வை 1



ஓர் இரும்பை முழுமையாக அழித்தொழிக்கும் சக்தி இவ்வுலகில் எதுவுமே இல்லை; அதன் துருவைத் தவிர. அத் துரு அந்த இரும்பிலிருந்து உருவாகின்றது.
அதைப் பலப்படுத்தும் அந்த மூலக்கூறுகளைக் கொண்டே அது பலம் இழக்கின்றது. எவராலும் அசைத்து விட முடியாத அந்த இரும்பை துருவாக மாற்றி காற்றில் கரைகின்றது.
இது போலவே உங்கள் மனதினுள் எழும் எதிர்மறையான எண்ணங்களும் அதை உங்கள் மனதினுள் மிகச் சாதாரணமாகத் தோன்றும். பின்னர் கொஞ்சம் கொஞ்சமாக உங்கள் மனம் முழுவதையும் ஆக்கிரமித்துக் கொள்ளும்.
உங்களது பலத்தைப் பலவீனமாக்கும், தன்னம்பிக்கையைத் தாழ்வு மனப்பான்மை ஆகும். உங்களது மனம் எங்கும் பயத்தையும், சோம்பேறித்தனத்தையும் விதைக்கும்.
உங்களை ஒரு பொடுபோக்கான மனிதனாக மாற்றி ஏதோ ஒரு மூலையில் முடக்கிப் போட்டு விடும். அதன் பின் உங்களது வாழ்வையே இருளாக்கிவிடும்.
இதை ஸூஃபிகள் மனதையும் அது அறிவால் அறிந்து கொள்ளும் நிலையையும் ஐந்து பருவங்களாகப் பிரிக்கிறார்கள்
1) மனிதனாகப் பிறந்தும், தான் மனித இனம் என்று அறிந்து கொள்ள முடியாத பருவம் ஒன்று.
2) மனிதன் என்று அறிந்தும் மனிதனாக நடந்து கொள்ளத் தெரியாத பருவம் ஒன்று.
3) மனிதனாக வாழத் தெரிந்தும், அதுவரையில் அறியாமையால் கொண்ட பழக்கங்களிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ளத் தெரியாததால் உணர்ச்சி, ஆராய்ச்சி என்ற இருவகைப் போட்டிகளுக்கிடையே வாழும் பருவம் ஒன்று.
4) அறிவும் செயல்களும் ஒன்றுபட்டு மனிதன் மனிதனாகவே வாழும் பருவம் ஒன்று.
5) தான் நெறியோடு வாழ்ந்தும், தெளிவற்றவர்களால் தனக்கும் சமுதாயத்திற்கும் விளையும் கேடுகளை நீக்கித் தன்னைப் போல் உலக மக்கள் அனைவரும் நெறியறிந்து வாழும் சூழ்நிலைகளை உருவாக்க வேண்டும் என்று முனைந்து செயலாற்றும் பருவம் ஒன்று.
ஆக, ஐவகைப் பருவங்களில் மக்கள் உலகில் வாழ்ந்து
வருகிறார்கள். ஒவ்வொரு பருவத்திலும் பல நிலைகளில் உள்ளார்கள்.
இவ்வளவு பேதை நிலைகளில் வாழும் மக்கள் அனைவரின் கூட்டுறவின் இணைப்பாலே ஒவ்வொருவரும் தினசரி வாழ்வை நடத்தி வருகிறோம்.
فَاِذَا مَسَّ الْاِنْسَانَ ضُرٌّ دَعَانَا ثُمَّ اِذَا خَوَّلْنٰهُ نِعْمَةً مِّنَّا ۙ قَالَ اِنَّمَاۤ اُوْتِيْتُهٗ عَلٰى عِلْمٍ بَلْ هِىَ فِتْنَةٌ وَّلٰـكِنَّ اَكْثَرَهُمْ لَا يَعْلَمُوْنَ
மனிதனை யாதேனும் தீங்கு அணுகும் சமயத்தில், (அதனை நீக்கும்படி) நம்மிடமே அவன் பிரார்த்தனை செய்கின்றான்.
(அதனை நீக்கி) அவனுக்கு நாம் யாதொரு அருள் புரிந்தாலோ, "தான் அதனை அடைந்ததெல்லாம் தன்னுடைய அறிவின் சாமர்த்தியத்தால்தான்" என்று கூறுகின்றான்.
(அது சரி) அல்ல; அதுவும் (அவர்களுக்கு) ஒரு சோதனையாகும். ஆயினும், அவர்களில் அனேகர் இதனை அறிந்து கொள்வதில்லை.
(குர்ஆன் : 39:49)

**Vali Poakkan Parathesi**

தாங்கள் குறிப்பிட்ட எதிர்மறை எண்ணங்கள் பார்ப்பதற்கு சிறியதாக தோன்றினாலும் நமது உள்ளத்தையே அரித்துவிடும் அதேபோன்று எதிர்மறை negative vibration எண்ணம் உள்ளவர்களுடன் இருந்தால் நமக்கும் அது தொற்றிவிடும் இதனால் மேலை

நாடுகளில் இதற்காகவே தனியாக பயிற்சி கிளாஸ் நடத்துகிறார்கள் ஆனாலும் கடைசி காலகட்டத்தில் மன அழுத்தங்களுக்கு அதிகமாக பலியாவது அவர்கள் தான் ..
ஐந்து வகையான நிலை மற்றும் பருவங்களை மிக நுட்பமாக விளக்கியுள்ளீர்கள்.... நேற்றைக்கு இட்ட பதிவான ராமு தேவர் என்கின்ற யாக்கோபு சித்தர் குறிப்பிட்டது போல் ஒரு எறும்பை போல் பிறந்து செத்து மடிகிறான் மனிதன் என்ற நிலை தான் பெரும்பாலும் உள்ளது.தங்களது எழுத்துக்கள் உறங்கிக் சோர்ந்து கிடக்கின்ற எங்களது எண்ணங்களையும் சிந்தனைகளையும் புத்துணர்ச்சியாக வைக்க உதவுகிறது தங்களுக்கு பரக்கத் செய்வானாக.

## சூஃபிப் பார்வை 2

(உங்களுக்கு பிரபஞ்சம் சொந்தமா? பிரபஞ்சத்திற்கு நீங்கள் சொந்தமா ? )



நீங்கள் பிறந்த போது , உங்கள் உடலின் அளவு எவ்வளவு இருந்தது? இப்போது எவ்வளவு இருக்கிறது? இடையில் அது வளர்ந்து விரிவடைய என்ன செய்தீர்கள்?
உணவு கொடுத்தீர்கள்.
உங்கள் சாப்பாடு எங்கேயிருந்து கிடைத்தது? இந்த மண்ணிலிருந்து. நீங்கள் சாப்பிட்ட ஒவ்வொரு தாவரமும். தானியமும் இந்த மண்ணாலும், நீராலும்தானே தயாராயின?
நீங்கள் அசைவமென்றால், நீங்கள் சாப்பிட்ட ஆடும். கோழியும்கூட இந்த மண்ணில் இருந்தவற்றை உண்டுதான் வளர்ந்தன. பின்னர் உங்கள் பசியைத் தீர்த்தன.
ஆக அடிப்படையில் எப்படியும் இந்த மண்ணால்தான் உங்கள் உடல் உருவாகியிருக்கிறது. உங்கள் உடலில் மண் சேரச் சேர அதை 'நான்' என்று ஏற்றுக்கொண்டீர்கள்.
ஒரு குவளையில் தண்ணீர் இருக்கிறது. அதுவும் நீங்களும் ஒன்றா? இல்லை என்பீர்கள். அந்தத் தண்ணீரை எடுத்துக் குடித்துவிடுங்கள்.
அது உங்கள் உடலில் கலந்ததும், அதை என்னவென்று சொல்வீர்கள்? நீங்கள் என்றுதானே?
அதாவது உங்கள் உணர்ச்சி எல்லைக்கு வருவதைத்தான் நீங்கள் என்று உணர்வீர்கள். வெளியில் இருக்கும் வரை அது வேறு.நீங்கள் வேறு என்று நினைத்தீர்கள்.
வெளியே இருக்கும் தண்ணீரும். மண்ணும். காற்றும், வெப்பமும் கொண்டுதான் நீங்கள் உருவாக்கப்பட்டு இருக்கிறீர்கள் என்பதை உணர்கிறீர்களா?
அவை உங்களில் ஒரு பகுதியான பின் அவற்றை தனித்தனியே வித்தியாசப்படுத்திப் பார்க்க முடியவில்லை. மொத்தமாக 'நான்' என்று அடையாளமிட்டு உணர்கிறீர்கள்.
உங்களுடைய மூதாதையர்கள் எங்கே போனார்கள் ? புதைக்கப்பட்டாலும்,எரிக்கப்பட்டாலும் இந்த மண்ணுக்குள்தான். அவர்கள் மீதுதான் நீங்கள் தினமும் நடை போட்டுக்கொண்டிருக்கிறீர்கள் என்பதை மறக்காதீர்கள். நீங்கள் மட்டும் எங்கே போகப் போகிறீர்கள்? உங்கள் மூலப் பொருளான இதே மண்ணிற்குள்தான். மீண்டும் உங்களை உயிர்பிக்கப்படுவது இதே மண்ணிற்குள் இருந்துதான்.
وَضَرَبَ لَنَا مَثَلًا وَّ نَسِىَ خَلْقَهٗ قَالَ مَنْ يُّحْىِ الْعِظَامَ وَهِىَ رَمِيْمٌ
(மரணித்தவர்களை உயிர்ப்பிக்க நம்மால் முடியாதென எண்ணிக்கொண்டு அவர்களில் ஒருவன்) ஓர் உதாரணத்தை நம்மிடம் எடுத்துக் காட்டுகின்றான். அவன் தன்னை படைத்த(து யார் என்ப)தை மறந்துவிட்டு "உக்கி மண்ணாகிப் போன இந்த எலும்பை உயிர்ப்பிப்பவன் யார்?" என்று (ஓர் எலும்பை எடுத்து அதனை தூளாக்கி ஊதிவிட்டு) அவன் கேட்கின்றான்.
قُلْ يُحْيِيْهَا الَّذِىْۤ اَنْشَاَهَاۤ اَوَّلَ مَرَّةٍ وَهُوَ بِكُلِّ خَلْقٍ عَلِيْمُ ۙ
“முதல் முதலில் அவற்றை உண்டு பண்ணியவனே (பின்னும்) அவற்றுக்கு உயிர் கொடுப்பான். அவன் எல்லாவகைப் படைப்புகளையும் நன்கறிந்தவன்” என்று (நபியே!) நீர் கூறுவீராக! (குர்ஆன் : 36:78, 79)

கொஞ்சம் மண் உங்கள் வடிவத்தில் மூச்சுவிட்டுக் கொண்டிருக்கிறது. இன்னும் கொஞ்சம் மண் உங்கள் தோட்டத்தில் ஓங்கி வளர்ந்த மரமாகியிருக்கிறது. மேலும் கொஞ்சம் மண் நீங்கள் உட்கார்ந்திருக்கும் நாற்காலியாகி இருக்கிறது.
இதே மண்தான் சுழற்சியில் மாமரமாக, வேப்பமரமாக. புல்லாக, புல்லாங்குழலாக பூவாக மண்புழுவாக, மனிதனாக பலப் பல வித்தியாசமான அவதாரங்களை எடுத்துக்கொண்டிருக்கிறது ; எடுக்கப் போகிறது.
கடைசியில் மரணத்திற்கு பின் உங்கள் உடல் உங்களைப் படைக்க எடுத்த அதே மண் தளத்தில் மீண்டும் சமர்ப்பிக்கப்பட்டு சமன் செய்யப்படுகிறது !
குடத்தில் பிடித்து வைத்தாலும், சிறு குவளையில் பிடித்து வைத்தாலும் அதைத் தண்ணீர் என்றுதானே அழைப்பீர்கள்?
அதே நியாயம்தானே உங்களுக்கும்?
சேகரிக்கப்பட்ட பாத்திரங்கள் வெவ்வேறாயினும். எல்லாவற்றிலும் நிரம்பியிருக்கும் மூலப் பொருள் இதே மண்தானே? இதே தண்ணீர்தானே? இதே காற்றுதானே? இதே வெப்பம்தானே?
எனவே, ஒவ்வொன்றிலும் நீங்கள் இருக்கிறீர்கள். அல்லவா?
இதன் மறுபுறமும் உண்மை. நீங்கள் ஊதிய பலூனில் உங்கள் மூச்சுக் காற்று இருக்கிறது. பலூன் வெடித்து அது வெளியில் கலந்ததும், பூமிக் காற்றில் உங்களுடைய ஒரு பகுதியும் கலந்துவிட்டது அல்லவா?
சுருக்கமாகச் சொன்னால், இந்தப் பிரபஞ்சத்தில் நீங்கள் ஒரு பகுதி என்பது போல், இந்தப் பிரபஞ்சமும் உங்களில் ஒரு பகுதி என்பதைப் புரிந்துகொள்ள முடிகிறதா?
இதை மூளையை வைத்துப் புரிந்துகொண்டால் வியக்கலாம். அவ்வளவுதான்.

உங்கள் உள்ளுணர்வில் இது மலர்ந்துவிட்டால், உங்களுக்குள் பெரும் மாற்றம் வெடிக்கும். இதுதான் உண்மையான ஆன்மிகம். நீங்களும் அடுத்ததும் ஒன்றேதான் என்பதை உணர்ந்துவிட்டீர்களென்றால் அப்புறம் யாரைப் பார்த்து பொறாமை கொள்வீர்கள்? யாருடன் சண்டை போடுவீர்கள்? யாருடன் போட்டி போடுவீர்கள்? யாருடன் பகைமை பாராட்டுவீர்கள்?
உங்கள் உள்ளுணர்வின் அனுபவத்தில்தான் எதையும் சொர்க்கமாக்கலாம். அல்லது நரகமாக்கலாம். அது வெளி சூழ்நிலையின் விளைவு இல்லை.
இந்த அனுபவம் வந்தபின், வெளி சூழ்நிலைகள் எப்படி அமைந்திருந்தாலும். உள்ளுணர்வில் உங்களுக்கு எப்போதுமே சொர்க்கம்தான்......
சூஃபி முஹம்மத் தாஹிர் பாவா :
மண்ணால் படைக்கப்பட்ட மனிதனுள் "ருஹென் "னும் சூரியன் " கல்பென் "னும் சந்திரனும் முன் பிரகாசித்துக் கொண்டிருக்கிறது. "ஹக்கென் "னும் சமுத்திரத்தில் கல்க்கென்னும் மச்சங்கள் வளர்கின்றன.
சரீரத்தில் கல்பு, கல்பில் ரூஹ், ரூஹில் நாயனில்லை. நாயனில் ரூஹ். ரூஹில் கல்பு, கல்பில் ஜடமிருக்கிறது.
நாயன் என் நஃப்ஸ் ! நஃப்ஸை அறிந்தவன் நாயனையறிவான். என் வட்டம் அல்லது விகாசம் அல்லது "தாயிறா" முடிவில்லாதது.
ஆலயம் என் சரீரம். இலிங்கம் என் மனம். என் ஆத்மாவே சிவன். உங்கள் ஜடமே பள்ளி, உங்கள் கல்பே கஃபா. உங்கள் ரூஹே நாயன்,
நாயனை நினைத்தால் தன் நஃப்ஸை நினைத்தான். நாயனை மறந்தால் தன் நஃப்ஸை மறந்தான்
உங்கள் ஜடத்தை கல்பிலும், உங்கள் கல்பை ரூஹிவிலும், உங்கள் ரூஹை உங்கள் நஃப்ஸ் அல்லது நாயனிலும் அழித்துத் தானாய் நின்றவர்கள்தாம் " காமில் " "அக்மல் ", "முக்கம்மில்".
இந்த ரகசியத்தின் நுணுக்கத்தை அறிந்தவனுக்கு ஈமான் ஹாசிலாச்சுது, ஈமான் ஹாசிலானவனுக்கு அதுவே தொழகை!"
இப்போது நீங்கள் சொல்லுங்கள், " உங்களுக்கு பிரபஞ்சம் சொந்தமா ? பிரபஞ்சத்திற்கு நீங்கள் சொந்தமா ? "

## சூஃபிப் பார்வை 3

(பகுதி நேர (Part time) மனிதர்கள்)




உங்களுக்குள் உள்ள மனிதத்தன்மை ஒவ்வொரு சூழ்நிலையிலும் இயல்பாகவே பதில் தருகிறது. உங்கள் அனுமதி கேட்டுக்கொண்டு ஒன்றும் அது பதிலளிப்பது இல்லையே? அது இயல்பாக ஓடியாடும் குழந்தையைப் போல !

ஆனால் தடையின்றி வெளிப்படும் உங்கள் பொறுப்புணர்வுக்கு உங்கள் மனத்தளவில் தடை போட்ட வைத்திருப்பவர் நீங்கள்தான். சாகக் கிடந்த அந்த மனிதனைப் பார்த்து "யாரோ இறக்கட்டும். அவரை தெரியாது, அதுக்கு நான் பொறுப்பு கிடையாது" என்று அவரை கவனித்தும் கவனிக்காதது போல் கடந்து சென்றால், நீ இங்கு இருப்பது ஒரு மனிதராக கிடையாது. வெறும் பாறையாக... அப்படித்தானே ?

அநேகமானவர்கள் இந்தமாதிரி கற்களைப் போல்தான் உலகில் நடமாடுகிறார்கள். எதற்கும் பதிலளிக்க விருப்பமின்றி, பாறை மாதிரி இறுகியவர்களாய் தெருவில் வலம் வருவார்கள்.

ஆனால் தங்கள் வீட்டுக்குள் நுழைந்துவிட்டால் மட்டும் அந்த ஒன்றிரண்டு பேரிடம் திடீரென்று மனித உருவம் எடுத்துக் கொள்வார்கள். வெளியே வந்தால் மீண்டும் பழையபடி பாறைதான். இவர்கள் எல்லாம் பகுதிநேர (Part time) மனிதர்கள்

நான் உங்களை நேரடியாக கேட்கிறேன். நீங்கள் பார்ட் டைம் மனிதராக இருக்க வேண்டுமா? இல்லை முழுநேர மனிதராக வேண்டுமா?

ஆனால் சூஃபியாக்களின் நிலை இதற்கு நேர் மாற்றமானது.

ஜுனைத்துல் பாக்தாதி (ரஹ்) அவர்களின் மனைவி தம்முடைய வீட்டில் தலைவாரிக் கொண்டிருந்த போது, அபூபக்ர் ஷிப்லீ (ரஹ்) அங்கு வருகை தரவே அம்மையார் எழுந்து பர்தா திரைமறைவில் செல்ல நாடினார்.

ஜுனைத்துல் பாக்தாதி (ரஹ்) அவர்கள் தம்முடைய மனைவியிடம், " நீர் திரைமறைவில் செல்லவேண்டிய அவசியமில்லை. குஃபியாக்கள் (மஸ்தி) இறைப்போதை கொண்டவர்கள்; அவர்களுக்கு சுவனம் நாகம் ஆகியவைப் பற்றிய செய்தி கூட தெரியாது. இத்தகையோர் பெண்களை என் பார்க்கப் போகிறார்கள்?" என்று கூறினார்.

ஷிப்லீ (ரஹ்) சிறிது நேரம் பித்துப்பிடித்த நிலையில் இருந்தார், பிறகு தாமே அழ ஆரம்பித்தார். அப்போது ஜுனைத், தம் மனைவியை நோக்கி, ''இப்போது இவர் தம்முடைய அசல் நிலைக்குத் திரும்பிக்கொண்டிருக்கிறார்.ஆகவே நீர் திரைமறைவில் சென்றுவிடு," என்றார்.

ஷிப்லீ (ரஹ்) அவர்களின் மரணத்தின் போது, அவருடைய கண்களுக்கு முன்னிலையில் இருள் சூழ்ந்திருந்தது. அவர் மக்களிடம் சாம்பலைக் கேட்டுவாங்கி தலைமீது இறைத்துக் கொண்டார். அச்சமயம் அவர் சொல்லமுடியாத அளவு மன அமைதி இழந்து காணப்பட்டார். மக்கள் அவரிடம் மன அமைதியை இழந்துவிட்டதற்கான காரணத்தை வினவினர்.

"இப்போது எனக்கு இப்லீஸ் மீது ஏக்கம் ஏற்படுகிறது. அந்த ஏக்கம் உடல் ஆன்மா முழுவதையும் எரித்துக் கொண்டிருக்கிறது.

இப்லீஸ் மீது ஏக்கமா ? மக்கள் கேட்டனர்.

இப்லீஸ் மீது ஏக்கம் ஏற்படக் காரணம், அல்லாஹுத ஆலா

அவனை லஃனத்-சபித்தல் என்ற போர்வை மூலம் சிறப்பித்தான், சான்றாக சத்திய திருவேதம்,

"நிச்சயமாக ஷைத்தானே! உன்மீது எனது சாபம் தீர்ப்பு நாள் வரை உண்டு" என்கிறது. சபிக்கப்பட்டவன் ஷைத்தான்தான்; ஆனால் சபித்தவன் மிக உயர்ந்த அதிபதியான இறைவன் அல்லவா? ( குர்ஆன் 7 : 18 )

இறைவனின் அருள் ஒரு பக்கம் இருக்கட்டும், அவனுடைய சாபத்திற்கும் கூட நான் தகுதியற்றவன் ஆகிவிடுவேனோ என்று அஞ்சுகிறேன்!" என்றார் ஷிப்லீ.

இதுதான் சூஃபிப் பார்வை !

சூஃபியாக்கள் பகுதி நேர மனிதர்களாக இல்லை ; எந்நேரமும் அவர்கள் சூஃபியாக்களாக இறைநேசர்களாகவே இருக்கிறார்கள் .

## சூஃபிப் பார்வை 4

(இறந்தவரை உயிர்த்தெழுதல்)



''சரீருல் மஸாலிக்கின்" எனும் நூலில் எழுதப்பட்டுள்ளது, ஹஜ்ரத் கௌதுல் ஆலம் அவர்கள் ஒருநாள் தெருவில் சென்று கொண்டிருந்தார்கள். அங்கு இருவர் காரசாரமாக விவாதித்துக் கொண்டிருப்பதைப் பார்த்தார்கள்.
அவர்களில் ஒருவர் முஸ்லிம், மற்றவர் கிறிஸ்தவர். முஸ்லிம்
'' என்னுடைய நபி இறைவனால் சிறப்பாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட அடியார் ஆவார்கள். அவர்களுக்கு ' மிஃராஜ் ' என்னும் கால வெளியில் செல்லும் வாய்ப்பு ஏற்பட்டது. எனவே எல்லா நபிமார்களிலும் எங்கள் நபிதான் மிகச் சிறப்பானவர்கள்."
கிறிஸ்தவர் தன்னுடைய நபியின் உயர்வையும், சிறப்பையும் விளக்கிக் கொண்டிருந்தார். இவ்விருவரின் விவாதத்தையும் கேட்டுக் கொண்டிருந்த கௌதுல் ஆலம் அவர்கள்,
கிறிஸ்தவரிடம் கூறினார்கள். ''உம்முடைய நபியின் உயர்வும், சிறப்பும் எந்த ஆதாரத்தால் நிரூபணமாகின்றது?"
அதற்கு கிறிஸ்தவர் : "என்னுடைய நபி இறைவனின் சிறப்புக்குரிய நல்லடியார் ஆவார். அவர்கள் காட்டிய அற்புதங்கள் பிரபலமானவை. அவர்கள் விரும்பும் போதெல்லாம் அல்லாஹ்வின் உத்திரவு கொண்டு எழுவாயாக'' என்று கூறி இறந்தவர்களை உயிர்ப்பித்துக் கொண்டிருந்தார்கள்".
ஹஜ்ரத் குத்பு கௌது நாயகம் அந்தக் கிறிஸ்தவரிடம் : ''நான்
ஒரு நபியல்ல; மாறாக அந்த நபியின் உம்மத்தைச் சார்ந்த
சாதாரண அடியான் நீர் விரும்பினால், இப்போதும் கூட இறந்து போனவர்களில் பலரை என்னால் உயிர்த்தெழச் செய்யமுடியும். "எழுந்திரும்" என்ற வார்த்தையை நான் சொல்வேனாகில் மண்ணறையில் புதைந்து கிடப்பவர்கள் உயிர்பெற்று வெளியில் வருவார்கள். வேண்டுமென்றால், இப்போதே என்னை தூர்ந்துபோன ஒரு மண்ணறைக்கு அழைத்துச் செல்லுங்கள். நான் உமக்கு என்னுடைய நபியின் சிறப்பைக் காண்பிக்கின்றேன்' என்றார்கள்.
இதைக் கேட்ட கிறிஸ்தவர் கௌதுல் ஆலம் அவர்களை சோதிப்பதற்காக தூர்ந்துபோன ஒரு மண்ணறைக்கு அவர்களை அழைத்துச் சென்றார்.
மேலும் அவர் கூறினார்: "எங்களின் நபி ஹஜ்ரத் ஈஸா அல்லாஹ்வின் ஆன்மா ஆவார். அவர் அல்லாஹ்வின் கட்டளைக் கொண்டு எழுவீராக! என்று கூறி இறந்தவர்களை உயிர்ப்பித்துக் கொண்டிருந்தார்கள்.''
இதைக் கேட்ட ஹஜ்ரத் கௌது நாயகம் அவர்கள் "நீங்கள் காட்டிய மண்ணறை இது ஒரு பாடகனின் மண்ணறை ஆகும். இதோ பாருங்கள். இப்பொழுதே அவர் மண்ணறையிலிருந்து பாடல் இசைத்தவாறு நான் எழுப்புகின்றேன்"
இவ்வாறு மண்ணறையின் அருகில் தம்முடைய பொன்னான நாவிலிருந்து 'எழுவீராக' எனும் வார்த்தையை மட்டும் உச்சரித்தார்கள், அவ்வளவுதான், உடனே மண்ணறைப் பிளந்தது மிக வேகமாக அதிலிருந்து பாடகர் கைதட்டிக் கொண்டும் ராகம் இசைத்தவாறும் வெளியேறி வந்தார்.
முஹம்மத் (ஸல்) அவர்களின் உம்மத்தைச் சார்ந்த ஒருவர் நிகழ்த்திக் காட்டிய அற்புதத்தை கண்டு அந்தக் கிறிஸ்தவர் உளமார இஸ்லாத்தைத் தழுவினார். கௌது நாயகம் அவர்களின் சீடர்களில் ஒருவராகி விட்டார்.

## ஞூஃபிப் பார்வை 5



அயர்லாந்து நாட்டைச் சேர்ந்த இரு மனிதர்கள், லண்டன் மாநகரில் ஒரு விபச்சார விடுதியின் முன் சாலைப் பணியில் ஈடுபட்டிருந்தனர். அப்போது ஒரு ப்ரோடெஸ்டண்ட் (Protestant) பாதிரியார் அப்பக்கம் வருவதைப் பார்த்தனர்.
இந்த விடுதியின் முன் வந்ததும், தன் சட்டைக் காலரை விரித்து, தலையைக் குனிந்து தன்னை மறைத்துக் அவர் வேகமாக விடுதிக்குள் சென்றார்.
இந்த இருவரும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனர். பின், தோள்களைக் குலுக்கிவிட்டு, "ஒரு ப்ரோடெஸ்டண்ட் நபரிடம் வேறென்ன எதிர்பார்க்க முடியும்?" என்று வேலையைத் தொடர்ந்தனர்.
இன்னும் சிறிது நேரத்தில் அவ்வழியே ஒரு யூதகுரு வந்தார். அவர் கழுத்தைச் சுற்றி போட்டிருந்த கம்பளி மஃப்ளரால் (muffler) முடிந்தவரை முகத்தை மறைத்துக் கொண்டு, அவரும் அந்த விடுதியினுள் சென்றார்.
இதைப் பார்த்த அந்த இருவரும், நடப்பதை ஏற்கமுடியாமல் சோகமாக தலையை ஆட்டினர். "என்ன நடக்கிறது இங்கே? கலிகாலம் முற்றிவிட்டது போலும்! கடவுளுக்கென துறவு மேற்கொண்டவர் கூடவா இதுபோன்ற விடுதிக்கு வரவேண்டும்? என்ன சோதனை இது, ஆண்டவா!" என்று வருத்தத்தில் ஆழ்ந்தனர்.
இன்னும் சிறிது நேரம் கழித்து உள்ளூர் கத்தோலிக்க பாதிரியார் வந்தார். வந்தவர் சுற்றும் முற்றும் பார்த்துவிட்டு, தன் மேலங்கியை இறுக்கிக் கொண்டு அவரும் தன்னை மறைத்துக் கொண்டு அந்த விடுதிக்குள் நழுவினார்.
இப்போது அந்த இருவரில் ஒருவன் மற்றவனிடம் சொன்னான், "உள்ளே ஏதோவொரு பெண்ணிற்கு உடல்நலம் மிக மோசமாக இருக்க வேண்டும்" என்று. அதுதான் உண்மை என்று இருவருக்கும் பிறகு தெரிய வந்தது .
சூழ்நிலையை வைத்து எப்போது ஏதோவொன்றுடன் நீங்கள் ஆழமாக அடையாளம் கொள்கிறீர்களோ, அப்போது வாழ்க்கைக் கண்ணோட்டத்தை இழந்துவிடுவீர்கள்! நல்லது-கெட்டது, சரி-தவறு. என்பதெல்லாம் உங்கள் மனதின் உருவாக்கம், அவற்றிற்கும் வாழ்க்கைக்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை,

பல்கு தேசத்தைச் சேர்ந்த ஷகீக்{ரஹ்} அவர்கள் ஒரு முறை இப்ராஹீம் பின் அத்ஹம்{ரஹ்} அவர்களைச் சந்தித்து தாம் வியாபார விஷயமாக பயணம் மேற்கொள்வதாக கூறிச் சென்றார்கள்.
ஆனால் பயணம் சென்ற சில நாட்களிலேயே ஷகீக் {ரஹ்}திரும்பிவிட்டார்கள் எனும் செய்தி கேள்வி பட்டு இப்ராஹீம் பின் அத்ஹம் {ரஹ்} அவர்கள் ஷகீக்{ரஹ்} அவர்களைச் சந்திக்கச் சென்றார்கள்.
திரும்பி வந்த காரணம் என்ன? என்று வினவியபோது, ஷகீக் {ரஹ்} கூறினார்கள்: "நான் நெடுந்தூரம் பயணம் செய்த களைப்பில் ஓரிடத்தில் ஓய்வு பெற ஒரு மரத்தடியில் அமர்ந்தேன். அங்கே நான் கண்ட காட்சி தான் எனக்கு அல்லாஹ்வைப் பற்றியான ஓர் உண்மையை உணர்த்தியது. அப்படியா? என்ன அந்தக் காட்சி கொஞ்சம் விளக்கமாக கூறுங்களேன் என்றார்கள் மாமேதை இப்ராஹீம் {ரஹ்} அவர்கள்.
"நான் அமர்ந்திருந்த அந்த மரத்தின் ஒரு கிளையில் ஊனமான, குருடான ஒரு பறவை அதன் கூட்டில் இருந்தது. ஆள் நடமாட்டமே இல்லாத இந்த இடத்தில் யார் வந்து உணவளிக்கப்போகிறார்கள்? என்று நினைத்துக் கொண்டிருந்த அந்த நேரத்தில், எங்கிருந்தோ வந்த இன்னொரு பறவை ஊனமான அந்த பறவைக்கு தன் அலகுகளால் உணவளித்தது. இதனைக் கண்ணுற்ற நான் "ஏன் நமக்கும் அல்லாஹ் இவ்வாறு உணவளிக்க மாட்டான்? என்ற எண்ணம் தோன்றவே நான் ஊர் திரும்பிவிட்டேன்.
"அதற்கு இப்ராஹீம் {ரஹ்} அவர்கள், "தோழரே! நீங்கள் எந்தப் பறவையிலிருந்து படிப்பினை பெற்றிருக்கின்றீர்கள்? தனக்காகவும் - தன் சக உயிரினத்திற்காகவும் பாடுபட்ட அந்த நல்ல பறவையிடமிருந்தல்லவா பாடம் பெற்றிருக்கவேண்டும். காலொடிந்த பறவையிடமிருந்தா வல்லோனை விளங்கிக்கொண்டீர்கள்? என்று கேட்டார்கள்."
நூல்: அல் உஸூலில் அஃக்லாக்கியா, பக்கம்,80

## சூஃபிப் பார்வை 6

(ஞானத்தை அறிவு வெல்ல முடியாது! )

தன்னை மட்டுமே அறிவாளி உயர்குடி என்று கூறிக்கொண்டு உள்ள யூத சமுதாயம் கேவலப்பட்ட ஓர் நிகழ்வு
சுமார் 1400 ஆண்டுகளுக்கு முன்பு நடத்த சம்பவம் இரண்டு யூத இளைஞர்கள் தங்களுக்குள் பேசிக்கொண்டு வந்தனர்
இன்று இந்த முகம்மதுவிடம் ( ஸல்லல்லாஹூ அலைஹி வ ஸல்லம் ) கேட்கப்படும் கேள்வியினால் அவர்களை மிகவும் அவமானப்பட வைக்கிறேன் என்றான் அதில் ஒருவன்
எப்படி என்றான் மற்றொருவன் ?
"இந்த கேள்விக்கு பதில் தெரியாது என்று பதில் கூறினால், ஒரு இறை தூதருக்கு இந்த பதில் தெரியாதா என்று ஏளனம் செய்ய வேண்டும் .
தெரியும் என்றால் அவமானப்படுத்த வேண்டும் அந்த முஹம்மதை (ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்)
இப்படியாக பேசிக்கொண்டு வந்தனர் அந்த இருவரும்
எப்பொழுதுமே இறைவனை விட்டு பிரியாத உத்தமர் ஞானத்தின் பட்டணமான அருள் நபியின் சமூகத்தில் சென்று கேட்டான் கேள்வியை
" தாங்கள் இறைவனின் நபியென்றால் அனைத்து விஷயமும் அறிந்தவர் என்று தானே அர்த்தம் " என்று கேட்டான் அந்த யூதன் ஆணவத்துடன்
" என்னுடைய இந்த கேள்விக்கான விடையை கூறுங்கள்
பார்ப்போம்" என்று கேலியும் கிண்டலும் கலந்த குரலில் கேட்டான்
" கேள் " என்றார்கள் ஞானத்தின் வடிவம் நாயகம் நபிகளார் அவர்கள்
“மனித மலம் என்ன சுவை “???
கேட்டான் அந்த கேள்வியை அந்த கேடுகெட்டவன்
அமைதியாக ஆத்திரப்பாடாமல் பதில் கூறினார்கள்
சர்வ லோக குரு சர்தார் ரசூலுல்லாஹ் ஸல்லல்லாஹூ அலைஹி வ ஸல்லம் அவர்கள்
" மலம் இனிப்பு சுவை" - என்று நினைக்கிறேன். ஏனெனில்
இனிப்புகளில் தான் ஈ மொய்க்கும்.உனக்கு சந்தேகம் இருந்தால் எடுத்து தின்று பார்த்து உறுதி செய்து கொள் "என்றார்கள்
இறைவனையே சந்தித்த ஈடு இணையற்ற நபிபெருமான் ரசூலுல்லாஹ் ஸல்லல்லாஹூ அலைஹி வ ஸல்லம் அவர்கள்
வெக்கி தலைகுனிய கேவலமாக அந்த புனித இடத்தை விட்டு வெளியேறினர் அந்த யூதன் இருவரும்
ஒரு காலமும் ஞானத்தை அறிவு வெல்ல முடியாது .
அய்யம்பேட்டை ஜியாவூதீன் ஆலீம் அவர்களின் பயானில் இருந்து...
தகவல்:- இறை அருள் மாலிக் ஹக்கியுல் காதிரி 8220320197

## சூஃபிப் பார்வை 7

(பகரம்)



" ஒருவன் எப்படி நடக்கிறானோ, அவனும் அது போலவேயாகிறான் " -என்கிறது யஜுர் வேதத்தில் காணப்படும், பிரகதாரண்யக உபநிடதம் 4.4.5

' கர்மா' என்பது ஒருவருக்கு விதிக்கப்பட்ட தலைவிதி அல்ல. அது அவரவர் வினைப்பயன் அல்லது கர்மவினை ஆகும்.

அவரவர் கர்மம் அவரவர் செய்யும் செயலில்தான் இருக்கிறது. நல்ல செயல்களை செய்தால் அதன் பயன் நன்மை தரும். மாறாக தீவினையோ, துன்பம் தரும் என்பது வேதவாக்கு.

ஒருவரின் அனைத்து செயல்களின் பயன்கள், அவரவர் இம்மையின் செயல்பாடுகள் உட்பட அனைத்தும் மரணத்திற்கும் பின்னும் அவரது கர்மாவினை தீர்மானிக்கின்றது என்பதாக இஸ்லாமும் கூறுகிறது.

யூனியா என்ற ஊரில் ஷைகு இஸ்மாயில் என்கிற செல்வந்தர் இருந்தார். அவரிடம் அழகிய பூங்கா ஒன்று இருந்தது. அதை விலைக்கு வாங்க எண்ணி விலைக்கு கேட்டார் கத்தீபூ ஜமாலுத்தீன் என்கின்றவர்.

ஒரு தடவையல்ல பல தடவைகள் அவர் அந்த பூங்காவை ஷைகு இஸ்மாயில் அவர்களிடம் கேட்க, ஆனால் ஷைகு இஸ்மாயில் அவர்கள் அதை தான் விற்பதற்கு இல்லை என்று கூறி விட்டார்.

அந்த பூங்காவை நாம் எவ்வாறு வாங்கிவிட வேண்டுமென்று தன்னுடைய ஆன்மீக ஆசானான அந்த பெருந்தகையிடம் இடம் சென்று தன்னுடைய விருப்பத்தைக் கூறினார்கள் .

அந்தப் பெருந்தகை , "நானே உன்னுடன் வந்து இஸ்மாயிலிடம் பேசி, உமக்கு அந்தப் பூங்காவை வாங்கி தருகிறேன்" என்று சொன்னார்கள்

அந்த பெருந்தகையும் கத்தீபு ஜமாலுதீனும் ஷைகு இஸ்மாயில் அவர்கள் வீட்டிற்கு சென்றார்கள். இல்லம் வந்த பெருந்தகையை பார்த்தும் ஷைகு இஸ்மாயில் அவருக்கு அளவில்லா மகிழ்ச்சியை தந்தது. இருவரையும் மிக்க மகிழ்ச்சியுடன் வரவேற்று உபசரித்த இஸ்மாயில் அவர்கள்

"பெருந்தகையே என்னை தேடி வந்த அலுவல் என்ன ?" என்று கேட்டார்கள்

பெருந்தகை சொன்னார்கள் : " உங்களுடைய பூங்காவை விற்பதாக இருந்தால், அதனை எனக்குத் தாரும் அதற்கு தகுந்த வேலையை நான் தருகிறேன்" என்று கூறினார்கள்

அது கேட்டு முகம் வாடிய இஸ்மாயில் அவர்கள், " நான் அதனை பெரிதும் நேசிக்கிறேன். அதை நான் விற்க விரும்பவில்லை" என்று கூறினார்கள்

"அதற்கு என்ன விலை கேட்டாலும், நான் தருகிறேன் " என்று கூறினார்கள்.

" பெருந்தகையே என்னை மன்னியுங்கள் " என்று அழாக் குறையாக கூறினார்கள் ஷைகு இஸ்மாயில் அவர்கள்

இப்பொழுது பெருந்தகைக்கு என்ன செய்வதென்று விளங்கவில்லை,'' நாம் கத்திபு ஜமாலுதீனுக்கு அந்த பூங்காவை விலைக்கு வாங்கி தருவதாக ஏற்கனவே வாக்குறுதி செய்துவிட்டோமே, என்ன செய்வது ? "என்று கவலையுற்று சற்று தலையை கவிழ்ந்து அமர்ந்திருக்க,

அது கண்டு பெரிதும் திடுக்குற்ற ஷைகு இஸ்மாயில் அவர்கள் பெருந்தகை தம் மீதுதான் வருத்தமுற்று இருக்கிறார்களோ என்று எண்ணி மிகவும் வருந்தி, " பெருந்தகையே என்னுடைய பூங்காவை உங்களுக்கு நான் தருகிறேன் அதற்கு நான் கேட்கும் விலையை நீங்கள் தர வேண்டும் என்று கேட்டார்

" எது கேட்டாலும் தருகிறேன் " என்று சொன்னார்கள் பெருந்தகை திட்டமாக.

அப்பொழுது இஸ்மாயில் அவர்கள், "என்னுடைய பூங்காவிற்கு பிரதியாக சுவன பூங்காவின் நடுவில் அமைந்த ஓர் உயரமான மாளிகை எனக்கு தர வேண்டும் " என்று கூறினார்கள்.

" உலகப் பொருளுக்கு பிரதியாக வானத்து பொருளை கேட்காதீர்கள். அதற்குப் பிரதியாக இங்குள்ள எது வேண்டுமானாலும் கேளுங்கள் தருகிறேன் " என்று கூறினார்கள் பெருந்தகை .
ஆனால் ஷைகு இஸ்மாயில் அவர்கள் தாம் கேட்டதே வேண்டும் என்று அடம் பிடித்தார்கள்.
பெருந்தகை அவர்கள் சற்று நேரம் தலைகவிழ்ந்து வீற்றிருந்தார்கள். அதன்பின் தன் தலையை உயர்த்திய பெருந்தகை அப்போது அவர்களின் உடல் முழுவதும் மஞ்சள் நிறமாக தோற்றம் அளித்தது. அவர்கள் முகத்தில் ஒரு பிரகாசம் தெரிந்தது.
பெருந்தகை அவர்கள் ஷைகு இஸ்மாயில் நோக்கி, " நல்லது உன்னுடைய பூங்காவிற்கு பகரமாக சுவன பூங்காவில் நடுவே அமைந்த ஓர் மாளிகை உமக்கு தரப்படும் " என்று கூறினார்கள்
அது கேட்டு பெரிதும் மகிழ்ந்த இஸ்மாயில் அவர்கள் அதற்கான கிரைய பத்திரம் எழுதித் தாருங்கள் என்று வினயமாக வேண்டினார்.
உடனே பெருந்தகை மையும் தாளையும் கொண்டு வரச்செய்து பின்வருமாறு எழுதினார்கள்:
" அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருப்பெயரால். அல்லாஹ்வின் அடிமையும் அபுல் ஹசன் அலியின் மகனான அஹமது அப்துல் முனியின் மகன் இஸ்மாயிலுக்கு எழுதிக்கொடுத்த கிரையப்பத்திரம் மேலே குறிப்பிட்டுள்ள இஸ்மாயிலுக்கு சொந்தமாக யூனியாவில் இருக்கும் பூங்காவிற்கு பகரமாக அல்லாஹ்வின் பேரருளால் கீழே கண்ட சொர்க்கத்து தோட்டத்தை கல்யாணம் பண்ணி கொடுக்கப்பட்டது.

ஜன்னத்துல் அதன், ஜன்னத்துல் குல்த், ஜன்னத்துல் மஃவா, ஜன்னத்துல் பிர்தௌஸ் ஆகிய நான்கு சுவனத்து எல்லைகளுக்குட்பட்ட தோட்டமும், அதன் நடுவில் உள்ள மாளிகையும், அங்குள்ள மலைகள், ஆறுகள், ஹூருல் ஈன் என்னும கண்ணழகிகள், வில்தான் என்னும் ஊழிய சிறுவர்கள் முதலியவையாவும் இவற்றை இஸ்மாயில் என்றென்றும் ஆண்டு அனுபவித்துக் கொள்வாராக இதற்கு சாட்சி அல்லாஹுத்தஆலா... " என்று எழுதி அடியில் தம்முடைய கையெழுத்தை பதித்தார் அந்தப் பெருந்தகை !
ஷைகு இஸ்மாயில் அகமகிழ்ந்தார்,
யூனியாவில் உள்ள தோட்டத்தை பெற்று கத்திபு ஜமாலுதீன் மகிழ்ச்சி அடைந்தார்.
பெருந்தகை அவர்கள் மகிழ்ச்சியுற்று தம் தவசாலை திரும்பினார்கள் .
ஷேக் இஸ்மாயில் மரணப் படுக்கையில் இருக்கும்பொழுது தம் இல்லத்தார் இடம் கூறினார்கள்." நான் மௌத்தாகி அடக்கம் செய்யப்படும் போது அந்தக் கிரயப் பத்திரத்தைச் தம்முடன் வைத்து தம்மை நல்லடக்கம் செய்ய வேண்டும் " என்று சொன்னார்கள். அவ்வாறே அவர் இறந்ததும் அவருடைய மக்கள் அவ்வாறே செய்தார்கள் .
அடுத்த நாள் ஷைகு இஸ்மாயில் அடக்கஸ தலத்தின் மேல்...
"கத் வஜதனா மா வ அதனா ரப்பனா ஹக்கா" நமக்கு நம்முடைய இறைவன் வாக்களித்ததை நாம் உண்மையாகப் பெற்றுக் கொண்டோம் என்ற திருமறை வசனம் பொறிக்கப்பட்டிருந்ததை மக்கள் கண்டு அவர்கள் கண்களை அவனாலேயே நம்ப முடியவில்லை!

உலக பூங்காவிற்கு பகரமாக சுவனப் பூங்காவையும் தம் துவாவின் பரக்கத்தால் பெற்றுத் தந்த அந்த பெருந்தகை மாபெரும் இறைநேசர் ஹழ்ரத் மஹபூபே சுபஹானி முஹையத்தீன் அப்துல் காதர் ஜீலானி ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களின் மருமகர் சுல்தானுல் ஆரிபீன் செய்யது அஹமது கபீர் ரிபாயி ரஹ்மத்துல்லாஹி அலைஹி ஆவார்கள்
ஒருவரின் அனைத்து செயல்களின் பயன்கள், அவரவர் இம்மையின் செயல்பாடுகள் உட்பட அனைத்தும் மரணத்திற்கும் பின்னும் அவரது கர்மாவினை தீர்மானிக்கின்றது என்பதாக இஸ்லாமும் கூறுகிறது.

**சூஃபிப் பார்வை 8**

(சூஃபிகளின் பார்வையில் காலம்)




காலத்தை ஒரு பொருள் போல் நம் இஷ்டத்திற்கு நகர்த்தினால் காலம் கடந்து போவாது.கடக்காத காலத்தால் நமக்கு மரணமும் இருக்காது. என்றெல்லாம் விஞ்ஞானம் காலத்தைப் பற்றி கனவு காண்கிறது

நாம் ஏன் காலத்தை கடந்து செல்கிறோம்? விண்வெளி வழியாக இயக்கத்திற்கு ஆற்றல் தேவை என்று கேள்வி விவரங்களில் உள்ள தவறான கருத்தைக் கருத்தில் கொண்டு, "நேரத்தின் மூலம் நகரும்" என்ற கருத்து வரையறுக்கப் படவில்லை

நியூட்டனின் முதல் இயக்க விதி கூறுகிறது : "வெளிப்புற சக்தியால் செயல்படாத வரை, ஒரு பொருள் ஓய்வில் இருக்கும் அல்லது நிலையான வேகத்தில் தொடர்ந்து நகர்கிறது.

(அது விண்வெளியில் சுழலும் பூமியாக இருந்தாலும் கூட)

சார்பியல் தத்துவப்படி " சம்பவமே இல்லைபெற்றால் காலம் என்பதும் இல்லை"

இதுவரை விஞ்ஞானத்தின் பார்வையில் இப்படி காலத்தை ஆய்ந்தோம் .

சூஃபிகளின் பார்வையில் காலம் ஒரு பொருள் போல் பாவிக்கப்படுகிறது. இது விஞ்ஞான விதிகளுக்கு எதிராக உள்ளது. அதையும் கவனிப்போம்.

**முதலில், காலம் எத்தனை வகை :1) இறந்த காலம், 2) நிகழ்காலம் 3) எதிர்காலம்**

இறந்தகாலத்தில் உயிருடன் இருந்தவர் நிகழ்காலத்தில் உயிருடன் இல்லை இதற்கு உதாரணம் - 'நமது முன்னோர்கள்'

நிகழ்காலத்தில் உயிருடன் இருந்து எதிர்காலத்தில் மரணிக்கக்கூடியவர்கள் இதற்கு உதாரணம் - ' நாம் '

இறந்தகாலத்தில் உயிருடன் இருந்தவர்கள் நிகழ்காலத்திலும் உயிருடன் இருக்கின்றனர். ஆனால் எதிர்காலத்தில் மரணிக்கக்கூடியவர்கள் இதற்கு உதாரணம் - நபி (ஸல்) அவர்களின் உம்மத்தாக வரக்கூடிய " ஈஸா (அலை) " அவர்கள் மற்றும் கொடிய குணம் கொண்ட ஒற்றைக்கண் மாயாவி “தஜ்ஜால்”

இறந்த காலத்தில் உயிருடன் இருந்து, நிகழ்காலத்திலும் உயிருடன் இருந்து, எதிர்காலத்திலும் உயிருடன் இருப்பவன் யார் ?

அல்லாஹ் (அவன் மரணமற்றவன், என்றும் உயிருடனிருப்பவன்)

கீழ்கண்டவைகளை கூர்ந்து கவனிக்கவும்

- மனிதன் இந்த மண்ணுலகில் வாழ்வதும் ஒரு காலம் தான்
- மனிதன் மரணித்து மண்ணரைகளில் வாழ்வதும் ஒரு காலம்தான்
- மனிதன் மறுமையில் அல்லாஹ்வின் முன் நிற்பதும் ஒரு காலம்தான்
-மனிதன் சுவனம் மற்றும் நரகம் செல்வதும் ஒரு காலம்தான்
- அல்லாஹ் நாடினால் எல்லாவற்றையும் அழித்தாலும் ஒரு காலத்தில் அவன் மட்டும் உயிருடனிருப்பான். அதுவும் காலம்தான்.

இப்போது தெரிகிறதா... அல்லாஹ் காலமாக உள்ளான் என்பது!

இதை விளங்கிக் கொண்ட சூஃபிகள் காலத்தை பொருள் போல் நீட்டியிருக்கிறார்கள்.

பனீ இஸ்ரவேலர்கள் நானூறு பேரை அமாலிக்க கூட்டத்தினர் கைது செய்து கூட்டிக் கொண்டு போய் அடிமைப்படுத்தினர். அவர்களை மீட்டி வர நபி யூஷஃக்கு இறைவன் கட்டளையிட்டான் .

அது ஒரு வெள்ளிக்கிழமை. போர் தீவிரமடைந்தது. வாட்கள் மின்னின; தலைகள் உருண்டன. நாலாபுறமும் சுழற்றியபடியே நபி யூஷஃ அவர்களும் கூட்டத்தாரும் முன்னேறினர்.

பிறைக் கணக்குப்படி சூரியன் மறைந்து 'மகரிப்' தொழுகைக்கான நேரம் வந்துவிட்டால், அடுத்தநாள் ஆரம்பமாகிவிடும்.
வெள்ளிக்கிழமை அந்தி நேரம் நெருங்கிக் கொண்டிருந்தது. ஆனால் இன்னும் போர் முடியவில்லை.
அந்திநேரம் முடிந்துவிட்டால், சனிக்கிழமை தொடங்கிவிடும். தவ்ராத் வேதப்படி சனிக்கிழமை புனிதமான நாள்; அந்நாளில் இறைவழிபாடு புரிவதைத்தவிர, வேறு எந்தக் காரியமும் செய்யக் கூடாது. அதுவும் சண்டை கூடவே கூடாது.
இச்சமயத்தில் சண்டையை நிறுத்தி இறைவழிபாட்டில் ஈடுபட்டால், அமாலிக்கா அக்கிரமக்காரர்கள் சுலபமாக ஒரே தாக்குதலில் தம் கூட்டத்தாரை அழித்துவிடுவார்களே என்ற அச்சம் எழ, நபி யூஷஃ (அலை) அவர்கள் வான் நோக்கி முகம் உயர்த்தி, "இறைவா...! பகல் பொழுதை இன்னும் நீட்டிக்க சூரியனுக்கு உத்தரவிட்டு,இயங்கச் செய்வாயாக ! என்று மனமுருகிப் பிரார்த்தித்தார்கள்.
அல்லாஹ் இந்தப் பிரார்த்தனையை ஏற்று பகல்பொழுதை நீட்டிக்கச் செய்தான். சனிக்கிழமை தொடங்குவதற்கு முன்பாகவே பனீ இஸ்ராயில்கள் வெற்றி பெற்று இறைவனுக்கு சிரம் தாழ்த்தி நன்றி தெரிவித்தனர். நிராகரிப்பாளர்கள் அனைவரும் கொல்லப்பட்டனர்.
இது போல காலத்தை நீட்டிக்க செய்ய நபி (ஸல்) அவர்களுக்கு இறைவன் சாத்தியமாக்கி இருக்கிறான் .
ஒரு சமயம் அலீ (ரலி) அவர்கள், நபிகளார் கொடுத்த வேலையை செய்து முடிப்பதற்குள் அஸர் தொழுகை "களா" ஆகி விட்டது .
இதனால் அலீ (ரலி) அவர்கள் ரொம்பவும் விசனப்பட்டு பரிதவித்தார்கள். உடனே நபிகளார் மறையக்கூடிய சூரியனை பின்னோக்கி நகரச் செய்து,அஸர் நேரத்தை மீட்டுக் கொண்டு வந்தார்கள்.
அதாவது காலத்தைப் பின்னோக்கி நகர்த்தினார்கள் .அலீ (ரலி) அஸர் தொழுகையை வஃதோடு தொழு முடிகிறார்கள்

قيصر سيد

விஞ்ஞானம் காலத்தை ஒரு பொருள் போல் பாவிக்க கனவு காண்பதையும் அதே காலத்தை சூபியாக்கள் ஒரு பொருள் போல் பாவித்துக்கொண்டிருக்கிறார்கள் என்று ஒற்றுமை படுத்தியவிதம் மிக அருமை.
எவ்வளவுதான் முயன்றாலும் விஞ்ஞானத்தால், ஞானத்தை தொட்டு கூட பார்க்கமுடியாது.
ஞானத்தை அறிவு வெல்ல முடியாது..

## சூஃபிப் பார்வை 9

(சூஃபிகளின் பற்றற்ற வாழ்வு)




لِّكَيْلَا تَأْسَوْا عَلَىٰ مَا فَاتَكُمْ وَلَا تَفْرَحُوا بِمَا آتَاكُمْ ۗ وَاللَّهُ لَا يُحِبُّ كُلَّ مُخْتَالٍ فَخُورٍ 57:23
உங்களுக்குத் தவறி விட்டதற்காக நீங்கள் கவலைப்படாமல் இருப்பதற்காகவும், அவன் உங்களுக்கு வழங்கியதில் நீங்கள் பூரித்துப் போகாமல் இருப்பதற்காகவும் (விதியை ஏற்படுத்தியுள்ளான்).கர்வமும், பெருமையும் கொண்ட ஒவ்வொருவரையும் அல்லாஹ் நேசிக்க மாட்டான் (குர்ஆன்:57:23)
விதி மீது நம்பிக்கை கொண்ட முஸ்லிம் இவ்வாறே இருப்பார் என்று திருக்குர்ஆன் உறுதிபடத் தெரிவிக்கின்றது.
இதற்கு மிகச் சிறந்த உதாரணமாக நபிகள் (ஸல்) அவர்களைக் குறிப்பிடலாம்.
உணவு, உடை, இருப்பிடம் ஆகியவை ஒரு மனிதனின் அடிப்படைத் தேவைகள் என்போம். இதில் எந்த ஒன்றிலும் நபி (ஸல்) அவர்கள் முழுமை பெற்றவர்களாக இல்லை என்ற போதும் அவர்கள் துளியும் துவண்டு விடவில்லை.
நபியவர்கள் பல நாட்கள் பட்டினி கிடந்துள்ளார்கள். வெறும் தண்ணீரையும் பேரீச்சம் பழத்தையும் உண்டு காலம் கழித்துள்ளார்கள். ( முஸ்லிம்-5688 )
தொடர்ந்து 3 நாட்கள் வயிறார உண்டதில்லை. அவர்கள் மரணிக்கும் வரை இதே நிலைதான் இருந்தது. ( புகாரி-5416)

'சாப்பாடு உள்ளதா?' என்று வீட்டில் கேட்பார்கள். துணைவியார் 'இல்லை' எனும் போது 'அப்படியெனில் நான் நோன்பிருக்கிறேன்' என்பார்கள். ( முஸ்லிம்-2125 )
குழம்பாக வினிகரைப் பயன்படுத்தி வயிற்றுப் பசியைப் போக்கியுள்ளார்கள். ( முஸ்லிம்-4172 )
வண்ண வண்ண ஆடைகள் இல்லை. மெல்லிய ஆடைகள் உடுத்தியதில்லை. பெரும்பாலும் முரட்டு போர்வையே நபிகளாரின் உடை. அவற்றையும் விரல் விட்டு எண்ணிவிடலாம். ( புகாரி-2597 , 6636)
மிக குறுகலான வீடு. விசாலமான அறைகளில்லை. ஒருவர் படுத்திருந்தால் மற்றொருவரால் தொழ முடியாது எனுமளவு இட நெருக்கடி. விளக்குகள் இல்லை. ( புகாரி-382 , 513)
படுத்துறங்கும் பாயே வீட்டின் கதவாகவும் பயன்படும்.
( புகாரி-730 , 5862)

நபி (ஸல்) அவர்கள் ஒரு பாயின் மீது படுப்பது வழக்கம். அதனால் அவர்கள் மேனியில் பாயின் அழுத்தம் பதிந்து விடும்.
இதைக் கண்ட நாங்கள், “அல்லாஹ்வின் தூதரே! நீங்கள் அனுமதித்தால் இதன் மீது விரித்துக் கொள்ளும் விரிப்பை தயாரித்துத் தருகிறோம்; அது உங்கள் உடலைப் பாதுகாக்கும்” எனக் கேட்டோம்.
அதற்கு நபி (ஸல்) அவர்கள் எனக்கும், “இந்த உலகத்துக்கும் என்ன உறவு உள்ளது? மரத்தின் நிழலில் சற்று நேரம் இளைப்பாறி விட்டுச் செல்லக்கூடிய ஒரு பயணிக்கும், அந்த மரத்துக்கும் என்ன உறவு உள்ளதோ அது போன்ற உறவுதான் எனக்கும், இவ்வுலகத்துக்கும் உள்ளது” எனக் கூறி அதை நிராகரித்து விட்டார்கள். நூல்: திர்மிதீ-2377 (2299)
நபிகளார் தொடர்புடைய இந்த நிகழ்வுகள் சூஃபிகளின் வாழ்வில் மிகப் பெரிய மாற்றத்தை ஏற்படுத்தியது. இதுவே இவர்களுக்கு பால பாடத்தைப் போதித்தது.

ஹலரத் அபுல் ஹஸன் சிர்ரி சிகதீ (ரஹ்) அவர்கள் முழுமையான ஞானம் பெற்ற பெரியவர் ஆவார். தொடக்க காலத்தில் இவர், கீழே கிடக்கும் பழங்களைச் சேகரித்து விற்பனை செய்து வந்ததால் சிர்ரி சிகதீ என அழைக்கப்பட்டார்.
பாக்தாத் நகரில் ஆன்மீக அகமியங்களையும், ஏகத்துவத்தையும் முதன் முதலில் பிரச்சாரம் செய்தவர் சிர்ரி சிகதி அவர்கள்தாம்!
இவர் மஃரூப் கர்கீ (ரஹ்) அவர்களின் சிஷ்யர் காஜா ஜுனைத் பக்தாதியின் மாமாவும் ஆன்மீகக் குருவும் ஆவார். இவர் ஹபீப் ராஈ (ரஹ்) அவர்களிடத்தில் ஆன்மீகரீதியிலான தொடர்பு கொண்டிருந்தார்.
சிர்ரி சிகதீ ரஹ் : "மக்களைவிட்டு ஒதுங்கி படைத்தவனை வழிபடுவது உயிரற்ற பிணங்களின் வழிபாடாகும். மக்களிடையே இருந்து கொண்டே சதா இறை நினைவில் லயித்திருப்பவரே உயிரோடிருப்பவர் ஆவார்''
சிர்ரி சிகதீ (ரஹ்) கூறினார்கள்: "ஐந்து பொருட்கள் தவிர மற்றவை மிகவும் வீணானவையே.
உயிர்வாழ ...
**1. உணவு உண்ணுதல்**
**2. தாகம் தீருமளவு குடித்தல்**
**3. மறைக்க வேண்டிய உறுப்புகளை மறைக்கும்மளவு ஆடை அணிவது**
**4. குடியிருப்பதற்கு தகுதிபடைத்த வீடு**
**5.செயல்பட போதுமான ஞானம்.**
'மனோ இச்சை காரணமாக நிகழ்ந்த பாவங்கள் மன்னிக்கப்படும் என்று எதிர்பார்க்கலாம். அதனால் பெருமை. அகம்பாவம் முதலியவைகளால் ஏற்படும் பாவங்களும் மன்னிக்கப்படும் என எதிர்பார்க்கவேண்டாம்.
ஏன் தெரியுமா?
ஆதம் (அலை) அவர்களின் பாவம் மனோ இச்சையிலிருந்து பிறந்த தவறாகும். ஆனால் தூக்கி எறியப்பட்ட ஷைத்தானோ தன் ஆணவம் காரணமாக பாவம் செய்தான். நப்ஸ்-மனத்தை வெல்வதே ஈமானின் அடையாளமாகும். சொல்லும் செயலும் ஒன்றுபட்டோர் மிகவும் குறைவே.
'எவர் இறைவனின் அருட்கொடைகளுக்கு நன்றி செலுத்த மாட்டாரோ அவரிடமிருந்து அந்த அருட்கொடைகள் திடீரென பறிக்கப்பட்டுவிடும்!"
'எவர் இறைவனின் ஆணைகளுக்குப் பணிகின்றாரோ அவரது ஆணைகளுக்கு அகிலம் முழுவதும் பணியும்!"
"நாவு மற்றும் முகத்தினால் இதயத்தின் நிலைகளை அறியலாம்.

இதயம் மூவகைப்படும்.
**1. மலைபோல் அசைக்க முடியாதது**
**2. பலமான மரத்தைப் போன்றது. கடுங்காற்று மரத்தை அசைப்பது போல் இந்த மனமும் அசைந்துவிடும்**
**3. இறகு போன்றது. சதா காற்றினால் இது அலைக்கழிக்கப்பட்டுக் கொண்டேயிருக்கும்.**
ஹலரத் காஜா ஜுனைத் பாக்தாதி (ரஹ்) அவர்கள் உரைக்கின்றார்கள்: "சிர்ரி சிகதீ நோய்வாய்ப்பட்ட போது ஒருநாள் நலம் விசாரிக்கச் சென்றேன்.
அது கோடைக்காலம், நான் விசிறியால் சிர்ரிக்கு விசிறிவிட்டேன். அவர் அதைத் தடுத்து, "காற்றினால் தீ ரொம்பவும் தீவிரமடைகிறது" என்றார்,

“தங்கள் உடல்நிலை எவ்வாறு உள்ளது?" என்று கேட்டேன். அதற்கு அவர், 'அடியான் அல்லாஹ்வுக்கு உரியவன். அடியானுக்கு எந்தப் பொருள் மீதும் ஆற்றல் கிடையாது" என்றார்.
'ஏதேனும் நல்லுபதேசம் செய்யுங்கள்' எனக் கேட்டேன். 'படைப்பிணங்களுக்கிடையே இருந்து கொண்டே படைத்தவனை மறந்து விடாதீர்' எனக் கூறினார்.பிறகு அவர் மரணமடைந்தார்.
ஹலரத் அபுல் ஹஸன் சிர்ரி சிகதீ (ரஹ்) அவர்களின் புனித மண்ணறை பாக்தாதில் மக்களால் தரிசிக்கப்பட்டு வருகிறது.

**Vali Poakkan Parathesi**

எழுத்துக்களில் உணர முடியாத வரிகள் அருமையான பதிவு
சிர்ரி சிகதீ (ரஹ்) கூறினார்கள்: "ஐந்து பொருட்கள் தவிர மற்றவை மிகவும் வீணானவையே.
உயிர்வாழ ...
1. உணவு உண்ணுதல்
2. தாகம் தீருமளவு குடித்தல்
3. மறைக்க வேண்டிய உறுப்புகளை மறைக்கும்மளவு ஆடை அணிவது
4. குடியிருப்பதற்கு தகுதிபடைத்த வீடு
5.செயல்பட போதுமான ஞானம்.
'மனோ இச்சை காரணமாக நிகழ்ந்த பாவங்கள் மன்னிக்கப்படும் என்று எதிர்பார்க்கலாம்.
அதனால் பெருமை. அகம்பாவம் முதலியவைகளால் ஏற்படும் பாவங்களும் மன்னிக்கப்படும் என எதிர்பார்க்கவேண்டாம்.
ஏன் தெரியுமா?
ஆதம் (அலை) அவர்களின் பாவம் மனோ இச்சையிலிருந்து பிறந்த தவறாகும். ஆனால் தூக்கி எறியப்பட்ட ஷைத்தானோ தன் ஆணவம் காரணமாக பாவம் செய்தான்.
நப்ஸ்-மனத்தை வெல்வதே ஈமானின் அடையாளமாகும்.
சொல்லும் செயலும் ஒன்றுபட்டோர் மிகவும் குறைவே.

## சூஃபிப் பார்வை 10

பொறுப்பு என்றால் என்ன ?



பொறுப்பு மற்றும் கடமை ஆகிய இரண்டு தன்மைகளுக்கும் இடையேயுள்ள வேறுபாட்டினை பெரும்பாலானோர் அறிவதில்லை! உண்மையில் பொறுப்பேற்பது என்றால் என்ன என்பதையும், ‘நான் பொறுப்பு’ என்ற உணர்வுடன் இருக்கும்போது உள்நிலையில் நிகழக்கூடிய அற்புதம் என்ன !
பொதுவாகவே, பொறுப்பு என்றால், சுமைகளைச் சுமப்பது என்று அர்த்தமாக்கிக் கொள்பவர்கள்தான் அதிகம்.
பொறுப்பு என்பதைக் கடமை என்று தவறாக நினைப்பதால்தான் இப்படி சுமையாகத் தோன்றுகிறது. சின்ன வயதிலிருந்தே, உங்களுக்குள் ஒரு கடமை உணர்வை வளர்த்திருப்பார்கள்.
மகனைப் படிக்க வைப்பது தந்தையின் கடமை, வயதான தந்தையைக் கவனித்துக்கொள்வது மகனின் கடமை, மாணவனைத் தயார் செய்வது ஆசிரியரின் கடமை, சட்டத்தை மதித்து நடந்துகொள்வது குடிமகனின் கடமை, எல்லையில் நாட்டைக் காப்பது ராணுவத்தின் கடமை என்றெல்லாம் சொல்லிச் சொல்லி கடமை என்ற வார்த்தையை உங்களுக்குள் ஆழமாக விதைத்திருப்பார்கள்.
கடமையைச் செய்வதாக நினைத்து எதைச் செய்தாலும், உங்களுக்குக் களைப்புதான் மிச்சமாகும். ரத்த அழுத்தம் ஏறும்.
முழுமையாகப் பொறுப்பேற்காமல், கடமையைச் செய்வதாக மட்டுமே நினைத்து செயல்பட்டால், அது உங்கள் வளர்ச்சிக்கு எந்த விதத்திலும் உதவாது. விரைவிலேயே சலிப்பும், வெறுப்பும், விரக்தியும்கொண்ட இயந்திரமாக மாறிப் போவீர்கள்.
யார் சொல்லியோ செய்யாமல், அதை நீங்களாக பொறுப்புடன் விரும்பிச் செய்தால் மட்டுமே இந்த வேதனை இருக்காது.
முதலில் பொறுப்பு என்பதைச் செயலாக மட்டுமே நினைப்பதை விடுங்கள். பொறுப்பு என்பதை உணர்வாக கவனிக்கப் பழகுங்கள்.

எதுவாக இருந்தாலும் ஏதோ ஒன்றுக்கு நீங்கள் உணர்வுபூர்வமாக, முழுமையாக பொறுப்பேற்கும்போது, “இது என்னுடையது” என்ற உணர்வு ஏற்படுகிறது. எப்போது அதை உங்களுடையதாகவே உணர்ந்துவிடுகிறீர்களோ, அது எப்போதுமே சுமையாக இருப்பதில்லை.

இக் கருத்தை உமர் (ரலி) அவர்களின் வாழ்க்கையில் நடந்த ஒரு சம்பவத்தை சொல்றேன்.

கலீஃபா உமர் (ரலி) அவர்கள் ஆட்சிக்காலம். அபூ உபைதா (ரலி) அவர்களின் அழைப்பின் பேரில் ஷாமுக்குச் சென்று விட்டு மதீனா நோக்கி, தம் நண்பர்கள் இப்னு மஸ்வூத் (ரலி), அலீ (ரலி) மற்றும் சிலரோடு திரும்பிக் கொண்டிருந்தார்கள்.

அப்போது, அவர்களில் இருந்து பிரிந்து தங்களின் ஆட்சியின் நிலைகள் குறித்து மக்கள் என்ன கூறுகின்றார்கள் என அறிய ரகசியமாக ஆய்வு செய்வதற்காக புறப்பட்டார்கள்.

அப்போது வயதான மூதாட்டி ஒருவரை உமர் (ரலி) அவர்கள் கடந்து சென்றார்கள். அந்த மூதாட்டி உமர் (ரலி) அவர்கள் யார் என்று தெரியாமல் அவர்களிடம் பேச்சுக் கொடுத்தார்.

பேச்சின் ஊடாக உமர் (ரலி) அவர்களிடம் எங்கு சென்று கொண்டிருக்கின்றாய்? நீ யார்? என்று கேட்டார் அந்த மூதாட்டி.

அதற்கு, உமர் (ரலி) அவர்கள் தாம் மதீனாவைச் சார்ந்தவர் என்றும் மதீனாவிற்கு ஒரு வேளையாக வந்து விட்டு மீண்டும் மதீனா திரும்புவதாகக் கூறினார்கள்.

அம்மூதாட்டி, “உமர் எப்படி இருக்கின்றார்?” என்று கேட்டார். உமர் (ரலி) அவர்கள் அவர் சலாமத்தாக நலமோடு உள்ளார்” என்றார்கள்.

அதற்கு அம்மூதாட்டி அல்லாஹ் உமருக்கு நற்கூலி வழங்காமல் இருப்பானாக! என்றார்கள். அதைக்கேட்ட உமர் (ரலி )அவர்கள் ஏன்? இப்படித் துஆச் செய்கின்றீர்கள் என வினவினார்கள்.

அவர் ஆட்சிப் பொறுப்பேற்றது முதல் இது நாள் வரை எனக்கு எந்த உதவியும் கிடைக்கவில்லை என்றாள் அம்மூதாட்டி.

உன் நிலைகள் உமருக்கு எப்படி தெரியும்? என்று கலீஃபா உமர் (ரலி) கேட்ட போது,

அம்மூதாட்டி, “சுப்ஹானல்லாஹ்! மக்களின் ஆட்சியை பொறுப்பேற்றிருக்கிற ஒருவரின் ஆட்சிக்கு உட்பட்ட மேற்கு மற்றும் கிழக்கு பற்றி தனக்கு தெரியாது என்று சொல்வாரா என்ன உமர்?” என்று கேட்டார்.

இது கேட்ட உமர் (ரலி) அழுதார்கள். அழுது கொண்டே தங்களின் ஆன்மாவோடு “உமரே! உம்மை விடவும் மிகச்சிறந்த அறிவாளிகள் எல்லாம் உலகில் உண்டு! இதோ இந்த மூதாட்டி உட்பட” என்றார்கள்.

அல்லாஹ்வின் அடிமைப் பெண்ணே! உமர் உனக்கு செய்த அநீதிக்கு பகரமாக என்னிடம் விலை பெற்றுக்கொள்.அவரை நரகை விட்டும் நான் காப்பாற்ற பிரியப்படுகின்றேன் என்றார்கள் உமர் (ரலி) அவர்கள்.

அதைக் கேட்ட அம்மூதாட்டி, என்னைக் கேலி செய்யாதீர் ! யாரோ ஒரு உமருக்காக நீர் இரக்கப்படுகின்றீர்! அல்லாஹ் உமக்கு அருள் புரிவான்! என்றார்.

அதற்கு, உமர் (ரலி), " இல்லை அல்லாஹ்வின் அடிமைப் பெண்ணே! நான் கேலி செய்யவில்லை, உண்மையைத் தான் பேசுகிறேன் என்று கூறி - ஒரு வழியாக உமரின் அநீதிக்கு 25 தீனாரை பகரமாக அம்மூதாட்டியின் கையில் கொடுத்தார்கள்.

அப்போது, அப்பக்கம் வந்த அலி (ரலி), மற்றும் இப்னு மஸூத் (ரலி) ஆகிய இருவரும் அமீருல் முஃமினீன் அவர்களே! அஸ்ஸலாமு அலைக்கும் என்றார்கள்.

அதை செவியுற்ற அந்த மூதாட்டி,இவ்வளவு நேரம் அமீருல் முஃமினீன் அவர்களை, அவர்களின் முகத்திற்கு நேராகவே திட்டிவிட்டேனே! என்று பயந்து நடுங்கினார்.

இதைப் பார்த்த உமர் (ரலி) அவர்கள் நீங்கள் பயப்படவேண்டாம் என்று கூறி, ஒரு தோல் பேப்பரில் ஒரு ஒப்பந்தம் எழுதினார்கள்.

அதில் எழுதப்பட்ட விஷயம் “அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்.... உமர் ஆட்சிப்பொறுப்பு ஏற்றது முதல் இன்று வரை எனக்கு செய்த அநீதிக்கு பகரமாக 25 தீனார் பெற்றுக் கொண்டு நான் அவரை விடுதலை செய்கிறேன்.

மேலும் நாளை மறுமையில் அல்லாஹ்வுக்கு முன்னிலையில் அவரை விசாரனைக்கு நிறுத்தமாட்டேன் என்று உறுதி கூறுகிறேன் என்று எழுதி” அலி (ரலி) மற்றும் இப்னு மஸ்வூத் (ரலி) ஆகிய இருவரையும் சாட்சியாக்கி அந்த தோல் பேப்பரை தங்களோடு மதீனா கொண்டு வந்தார்கள்.

இந்தச் செய்தியை நினைவு படுத்தும் அபூதல்ஹா (ரலி) அவர்கள் கூறுகின்றார்கள்:

“பின்னர், ஒரு நாள் என்னை அழைத்த உமர் (ரலி) அவர்கள் அந்த தோல் பேப்பரை என்னிடம் கொடுத்து, அபூதல்ஹாவே! நான் மரணித்து என்னை கஃபன் செய்கிறபோது “இந்த தோல் பேப்பரையும் என்னோடு இணைத்து விடுங்கள்! இந்தக் கடிதத்தோடு என் ரப்பைச் சந்திக்க விரும்புகின்றேன்” என்றார்கள்.

## சூஃபிப் பார்வை 11

(சூஃபியாக்களின் இசை )



"எல்லா இசையும் கூடாது என்று யாரெல்லாம் கூறுகிறார்களோ அவர்களிடம் பறவைகளின் பாடல்களும் கூடாது என்று கூற சொல்லுங்கள்" என்று அறிஞர் இமாம் கஸ்ஸாலி (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் உள்ளார்கள்.
பிரபல அமெரிக்க இசையமைப்பாளரும், பாடகருமான ஃபிராங்க் ஜப்பா கூறியது போல், "இசையைப் பற்றி பேசுவது கட்டிடக்கலை பற்றி நடனமாடுவது போன்றது"
"வார்த்தைகள் முடிவடையும் இடத்தில், இசை தொடங்குகிறது."
ஹென்றிச் ஹெய்ன்
"இசை மனிதகுலத்தின் உலகளாவிய மொழி."
ஹென்றி வாட்ஸ்வொர்த் லாங்ஃபெலோ
"நான் இசையைக் கேட்பதில்லை, என் ஆன்மாவைக் கேட்கிறேன்." - மெரினா ஸ்வேடேவா
"இசை ஒரு நபருக்கு அவரது ஆத்மாவில் இருக்கும் மகத்துவத்தின் சாத்தியக்கூறுகளைக் காட்டுகிறது." -ரால்ப் வால்டோ எமர்சன்
"இசை ஒரு உற்சாகமான, கல்வி காரணி மட்டுமல்ல. இசை நோயைக் குணப்படுத்தும் - விளாடிமிர் மிகைலோவிச் பெக்டெரெவ
நாகூர் தர்கா வித்வான் உஸ்தாத் தாவூத் மியான்கான் கால்வலி நோயால் அவதியுற்ற போது ராக வல்லுனராகவும் இருந்த இறை நேசர் நாகூர் ஷாஹுல் ஹமீது ஆண்டகை (ரலி) அவர்களின் உத்தரவின் பேரில் மால்கோஸ் ராகத்தை நாற்பது நாட்கள் பாடி கால்வலி குணமான வரலாறு உண்டு

ராகங்கள் அநேக நோயை குணப்படுத்துவதாக நிரூபித்து இருக்கிறார்கள். மௌலாயப் பேரரசில் நடந்த ஒரு சம்பவத்தை உங்களுக்குச் சொல்றேன் .
அந்த பேரரசரின் அரண்மனை மிக பரபரப்பாக இயங்கிக் கொண்டு இருந்தது பல வைத்தியர்கள் வருவதும் போவதுமாக இருந்தார்கள்.
அனைவரின் முகங்களிலும் கவலை படர்ந்து இருந்தது ஒவ்வொரு வைத்தியர் வரும் போதும் அவரின் முகத்தில் ஏதேனும் சந்தோஷ மாற்றம் தெரியுமா என ஆவல் கொண்டு உற்று பார்ப்பார் பேரரசர்.
அவர்களின் முக வாட்டம் மாமன்னரையும் தாக்க ஆழ்ந்த சோகத்தில் அமர்ந்து விடுவார் பேரரசர்.
பேரரசர் சாமான்யமானவர் அல்ல தன் சிறு வயதில் ஆட்சிப் பொறுப்பை ஏற்று சிறு நிலப் பகுதியாக இருந்த ஆட்சிப் பரப்பை பெரும் நிலப்பரப்பாக மாற்றிய அந்த மகா வீரர் இன்று தன்னிலை மறந்து கலங்கி நின்றார்.
மன்னரின் ஆலோசகர்கள் மன்னரை எப்படி தேற்றுவது என்று கலங்கி நின்றார்கள்.
மன்னரின் சோகத்திற்கு காரணம் அவரின் மிகப் பிரிமான மகளுக்கு கடும் நோய்கண்டு அவரின் நோய்க்கான காரணத்தை எந்த மருத்துவராலும் கண்டு பிடிக்க முடியவில்லை. அந்த நோயின் தாக்கம் அதிகரித்து இன்னும் சில மணிநேரத்தில் அவர் இறந்துவிடுவார் என்று அரண்மனை இராஜ வைத்தியர் சொன்னதை கேட்டதுதான் மன்னரின் கலக்கத்திற்கு காரணம்.
அப்போது மன்னரின் முக்கிய ஆலோசகர் மன்னரின் அருகில் வந்து நின்றார் மன்னர் அவரை என்ன என்பது போல் பார்க்க "மன்னா தங்களின் பிரியத்திற்குறிய உங்களின் மகளை நோயில் இருந்து மீட்க ஒரு வழி இருக்கின்றது இறுதியாக அதை முயற்சிப்போமா ? " என்று கேட்க ,
" என்ன சொல்கின்றீர்கள் உலகின் மிகச்சிறந்த மருந்துவர்கள் கைவிரித்த பின்னுமா?"
" என்னை தேற்றுவதற்காக ஏதாவது சொல்லாதீர்கள்" என்று மன்னர் சொன்னபோது,
அந்த ஆலோசகர் சொன்னார் : "இல்லை மன்னா ஆறுதலுக்காக சொல்லவில்லையே வைத்தியர்கள் தங்களின் மருந்தை வைத்து வைத்தியம் பார்கின்றார்கள். ஆனால் நான் சொல்லும் வைத்தியர் அப்படி அல்ல; அவர் இறைவனின் மொழியைக் கொண்டு வைத்தியம் பார்ப்பவர் அவரிடம் அப்படி ஆற்றல் மிக்க மருந்து உள்ளது மன்னா"
" அவர் எங்கு உள்ளார் என்று ?"
" வேறு எங்கும் இல்லை மன்னா; அவர் நம் அரண்மனையில் தான் உள்ளார்.

"அப்படியா யார் அவர் ? "என்று கேட்க ஆலோசகர் சொன்னார் "நம் அரசவையின் தலைமை கவிஞர் இசைமேதைதான் " என்றார் அவர்.
" அப்படியா அவரிடம் அப்படி என்ன சிறப்பு இருக்கின்றது ? " என்று கேட்க,
அவர் சொன்னார் " மன்னா ' தீபக்' என்கின்ற இராகத்தில் அவரால் மட்டுமே மெய்ஞான கவி பாடமுடியும் மற்றும் தெய்வீக இராகமான ' த்ருபத ' என்கிற இராகத்தில் பாடுவதற்கு அவருக்கு நிகர் அவரே "
மன்னருக்கு நம்பிக்கை வரவில்லை என்றாலும் இறுதி முயற்சி ஆக இதை செய்வோம் என்று கூறி அந்த மெய்ஞ்ஞான கவியை வரவழைத்தனர்.

அந்த ஞானக்கவி சொன்னார் : " இளவரசியின் அறை சுற்றி உள்ள திரை சீலைகளை அகற்றுங்கள்.அவரை விட்டு அனைவரும் அகலுங்கள். அவரின் கட்டிலை சுற்றி 7 விளக்குகளை ஏற்றாமல் வைய்யுங்கள்" என்று சொன்னார்
அவ்வாறே நடந்தது வேகமாக காற்று வீச கண்ணை மூடி சிறிது தியானித்த அந்த ஞானக்கவி பின் தன் மெல்லிய கணீர் குரலில் தீபக் இராகத்தில் ஞானக்கவிதையை பாடத்துவங்கினார். அவர் பாடப் பாட காற்றின் வேகம் அதிகரித்தது இவரின் குரலின் தொனியும் அதிகரித்தது. அவர் அந்த தீபக் இராகத்தின் உச்சத்தை தொட என்ன ஆச்சரியம் அங்கு ஏற்றாமல் வைக்கப்பட்ட அனைத்து விளக்குகளிலும் தீபம் ஏற்றப்படுகிறது போல் எரிந்தது.
காற்றும் நின்றத. நோயின் கடுமையால் அசைவற்று கிடந்த இளவரசி நோயின் தாக்கம் நீங்கி தெளிவுற்று, " தந்தையே என்று எழுந்து ஓடிவந்தார்.
மன்னருக்கு ஆச்சரியம் இன்னும் சற்று நேரத்தில் இறந்து விடுவார் என வைத்தியர்கள் சொன்ன தன் மகளா என்று !
அந்த மன்னர் வேறு யாரும் அல்ல அவர் தான் முகலாய பேரரசர் ஜலாலுதீன் முஹம்மது அக்பர்.
அந்த இளவரசி அவரின் மகள் மெஹருன்னிஷா
இப்படி தன் ஆன்மீக சக்தியால் ஞானப் பாடல் பாடி நெருப்பின்றி விளக்குகளை பற்றவைத்து அந்த அற்புத சக்தியால் நோயை நீக்கிய அந்த மெய்ஞ்ஞான கவிஞர் இறைநேசச் செல்வர் ஹழ்ரத் மியான் தான்சேன் ரஹ்மதுல்லாஹி அலைஹி அன்னவர்கள் ஆவார்கள்.
பின் குறிப்பு :- இவர் ஒரு பிராமணக் குடும்பத்தில் பிறந்தார்; அவர் பெயர் ராம்தனு பாண்டே ஆகும். இவரின் இசை ஆசான் ஹரிதாஸர் ஆவார்கள்
இவரின் மெய்ஞ்ஞான திருப்தி இன்மையால் ஞானம் தேடி அலைந்தபோது, இவர் சந்தித்த இறைநேசப் பெருந்தகைதான் "ஷெய்கு மஹான் ஹழ்ரத் முஹம்மது கௌஃது குவாலியரி ரஹ்மதுல்லாஹி அலைஹி அன்னவர்களை சந்தித்த பின் தங்களின் ஆன்மீக தேட்டம் நிறைவுற இஸ்லாத்தை ஏற்று, ஷத்தாரியா தரீக்காவில் பைஅத் பெற்று அன்னவர்களின் மூலம் இஸ்லாத்தை ஏற்றதோடு மட்டும் இன்றி,
அன்னவர்களின் மிகப்பிரியமுள்ள சீடரும் ஆவார்கள். அதனால்தான் இவர்களின் அடக்கஸ்தலம் தன் ஷெய்கு நாயகத்தின் அருகிலேயே உள்ளது.
"இசை மட்டும்தான் உலக மொழி, அதை மொழிபெயர்க்க வேண்டிய அவசியமில்லை - ஆத்மா அதில் உள்ள ஆத்மாவுடன் பேசுகிறது "

## ஷூஃபிப் பார்வை 12

(எண்ணத்தின் விகாரமாக புலி )



"கட்டுப்படுத்தப்படாத உங்கள் எண்ணங்கள் உங்களுக்கு இழைக்கக்கூடிய தீங்கைவிட, அதிகமாக உங்களுடைய மிக மோசமான எதிரியால் கூட உங்களுக்குத் தீங்கிழைக்க முடியாது.

ஆனால், உங்கள் எண்ணங்களை எப்படிக் கட்டுப்படுத்துவது என்பதை நீங்கள் கற்றுக் கொண்டால், அதைவிட அதிகமாக யாராலும் உங்களுக்கு உதவ முடியாது."

புகழ் பெற்ற கடற்கரை நகரில் ஒரு இறை நேசப் பெருந்தகை வந்து தங்கினார்கள் அவர்கள் வருகை அறிந்த அக்கம்பக்க நகரவாசிகள் அவர்களை சந்தித்து துவா வேண்டி நிற்க அவர்களும் தங்களை சந்தித்த மக்களுக்காக இறைவனிடம் பிரார்த்தித்தார்கள்,

அப்படி அவர்களை சந்தித்து துவாவை பெற்ற ஊர்வாசிகள் பலரும் அவர்களுடைய கஷ்ட நஷ்டங்கள் நீங்கி மேன்மை பெற இந்த செய்திஅக்கம்பக்கத்தில் உள்ள கடற்கரை நகரம் எங்கும் பரவியது இந்த செய்தி காட்டுதீ போல பரவ,

மக்களெல்லாம் சாரை சாரையாக வந்து அந்த இறைநேச பெருந்தகையை சந்தித்து தங்களுக்காக இறைவனிடம் இறைஞ்சுமாறு வேண்டினார்கள்.

அன்னவர்களும் மக்களுடைய குறைகளைக் கேட்டு, அவர்களுடைய குறைகளை போக்க இறைவனிடம் துவாக்களை கேட்க மக்களுடைய குறை தீர்ந்த வன்னம் இருந்தது.

இந்த செய்தி வேறு ஒரு நகரத்து ஊரில் இருந்த இரண்டு ஆலிம்கள் கேட்டறிந்தார்கள். அந்த இறைநேசரை நாமும் சந்தித்து வரலாம் என்று முடிவு செய்து,

இறைநேசப் பெருந்தகையை சந்திக்க அவர்கள் இருக்கக்கூடிய கடற்கரை நகரம் நோக்கி பயணித்து,

அந்த இறை நேச பெருந்தகையை சந்தித்து சிறிது நேரம் உரையாடினார்கள் உரையாடிவிட்டு வந்த அந்த ஆலிம்கள் இருவரும், இறைநேசப் பெருந்தகையின் உடை தோற்றம் அவர்களுடைய பற்றற்ற தன்மை அவர்கள் குர்ஆனை ஓதும் போது வரும் உச்சரிப்பு போன்றவற்றை பார்த்து,

இந்த இறைநேசப் பெருந்தகை பற்றி அவர்கள் மனதில் ஓர் தவறான எண்ணம் உண்டாகியது அதானால் அவர்கள் தங்களுக்குள் பேசிச் கொண்டார்கள்." மக்கத்துக்கு போயி முடபக்கீர் காலில் விழுந்து போல என ஒரு கதை சொல்வார்களே அது போல் நம் நிலைமை ஆகிவிட்டது"

அந்த இறைநேசரை சந்திக்க பயணித்து வந்து அவர்களை சந்தித்து உரையாடிய நிகழ்வை கேலி கிண்டல் செய்து தங்களுக்குள் பேசிக் கொண்டார்கள்.

("கட்டுப்படுத்தப்படாத உங்கள் எண்ணங்கள் உங்களுக்கு இழைக்கக்கூடிய தீங்கைவிட, அதிகமாக உங்களுடைய மிக மோசமான எதிரியால் கூட உங்களுக்குத் தீங்கிழைக்க முடியாது")

நேரம் இருட்டி விட்டதால் அந்த ஊரில் தங்கிய அவர்கள் அடுத்த நாள் காலையில் அந்த கடற்கரை ஊரில் உள்ள குளத்தில் சென்று குளித்து விட்டு ஊருக்கு கிளம்புவோம் என்று குளக்கரையில் தங்களுடைய ஆடைகளை களைந்து வைத்துவிட்டு குளிக்க சென்றார்கள்.

குளித்துவிட்டு கரையேற திரும்பும் பொழுது கரையின் மீது ஒரு புலி ஒன்று நின்று கொண்டிருந்தது. இதைப் பார்த்தவர்கள் பயந்தவர்களாக மீண்டும் குளத்தின் நடுவே சென்று குளிப்பது போல மறைந்து கொண்டிருந்தார்கள்,

சிறிது நேரத்தில் கரையில் புலியை காணவில்லை புலி சென்று விட்டதாக எண்ணி மீண்டும் கரையை நோக்கி வந்தபோது, புலி அங்கு அவர்கள் நோக்கி பாய்வது போல் நின்று கொண்டு இருந்தது.

இதை பார்த்து மீண்டும் குளத்தின் நடுவே ஓடி நின்று கொண்டார்கள். இந்த நிலை லுஹர் தொழுகை வரை தொடர்ந்தது இந்த நிகழ்வை அப்பகுதியில் இருந்த கிராமவாசிகள்,

அந்த இரண்டு ஆலிம்களையும் அவர்களின் செயலையும் பார்த்து " என்ன விளையாடிக் கொண்டு இருக்கிறீர்கள் ஏன் கரைக்கும் நடு குலத்திற்கும் ஆக ஓடிச் சென்று கொண்டிருக்கிறீர்கள் ?" என்று கேட்க

அப்போது அந்த ஆலிம்களில் ஒருவர் சொன்னார் : " நாங்கள் குளித்துவிட்டு கரையேறதான் வருகிறோம் ஆனால், கரையோரத்தில் ஒரு புலி நிற்கிறது அதற்காகத்தான் நாங்கள் உள்ளே வந்து விட்டோம் "என்று சொன்னார்

அதற்கு அந்த மக்கள் சொன்னார்கள் : " இங்கே எங்கு புலி நிற்கிறது இங்கு நாங்கள் தான் இருக்கிறோம் " என்றார்கள்

அப்பொழுது அந்த ஆலீம்களில் ஒருவர் சொன்னார் "இல்லை உங்கள் பின் ஒரு புலி நிற்கிறது என்று சொன்னார் திரும்பி பார்த்த அவர்கள் இங்கு எந்த புலியும் இல்லை நீங்கள் தவறாகச் சொல்கிறீர்கள் "என்றார்கள்

அப்போதுதான் அவர்களுக்கு ஒரு உண்மை விளங்கியது. நாம் அந்த இறைநேசர் பெருந்தகையை சந்தித்து பின் வெளியே வந்து அவர்களை கேலி பேசியது நினைவுக்கு வந்தது .

அந்த இறைநேசப் பெருந்தகையின் மாண்பினை விளங்கிக் கொண்ட அவர்கள் அந்த ஊர் மக்களிடம் சொல்லி நாங்கள் இந்த ஊரில் உள்ள இறைநேசரை தவறாக எண்ணி விட்டோம்

எங்களை மன்னிக்குமாறு அவரிடம் சென்று சொல்லுங்கள் என்று கேட்டார்கள் ஊர் மக்கள் அனைவரும் அந்த இறை நேசர் பெருந்தகையை சந்தித்து அந்த இரண்டு ஆலிம்களுடைய நிலையை எடுத்துச் சொல்லி மன்னிக்க கோரினார்கள்

அந்த இறைநேசப் பெருந்தகை சொன்னார்கள் நம் உள்ளத்தில் எதுவும் இல்லை அவர்களை மன்னித்து விட்டோம் என்று சொல்லி குளக்கரை நோக்கி வந்தார்கள் அந்த இறைநேசப் பெருந்தகை

இறைநேசம் பெருந்தகையை பார்த்ததும் அங்கு நின்ற புலி அஞ்சி ஒடுங்கி இறைநேசர் பெருந்தகையின் காலை முத்தமிட்டு விட்டு சென்றது

அதன் பின் கரை ஏறிய அந்த ஆலிம்கள் தங்களை மன்னிக்குமாறு கோரினார்கள்

அந்த இறை நேச பெருந்தகை அந்த இரண்டு ஆலிம்ங்களையும் பார்த்து சொன்னார்கள் நீங்கள் குரானின் எழுத்துக்களை மட்டுமே பார்ப்பவர்கள் நாங்களோ அதன் கருத்தில் ஊறித் திளைப்பவர்கள் எனவே

நீங்கள் புலிகளுக்கு என்ன அற்ப பிராணிகளுக்கு கூட அஞ்சுவீர்கள் எங்களுக்கோ புலியும் அடிபணியும், புவியும் அடிபணியும் என்று கூறினார்கள்.

அந்த இறை நேசரின் மாண்பினை உணர்ந்த அந்த இரண்டு ஆலிம்களும் அந்த இறைநேசர் இடமே தீட்சை (பை அத்) பெற்றார்கள் .

(" உங்கள் எண்ணங்களை எப்படிக் கட்டுப்படுத்துவது என்பதை நீங்கள் கற்றுக் கொண்டால், அதைவிட அதிகமாக யாராலும் உங்களுக்கு உதவ முடியாது." )

அதுமட்டுமின்றி "அலல் ஹம்து லில் முன்ஸியில் கிதரி " என்ற துவங்கும் புகழ் பாவை அந்த இறைநேசர் பெருந்தகை மீது பாடி மகிழ்ந்தார்கள் அந்த இரண்டு ஆலிம்கள்

இந்த மாபெரும் இறைநேசர் வேறுயாருமல்ல கோட்டைப்பட்டினம் கடற்கரை நகரில் அடக்கமாகியுள்ள உலகப்புகழ் பெற்ற பிரதேச மக்களால் ராவுத்தர் அப்பா என்று அன்புடன் அழைக்கப்படும் ஹழ்ரத் ஷைகு முஹம்மதுஷா ரஹ்மத்துல்லாஹி அலைஹி அன்னவர்கள் ஆவார்கள்

## **சூஃபிப் பார்வை 13**



கிஜ்லி நதி அது இன்றைய காஷ்மீர் மாநிலத்தில் புகழ்பெற்ற அந்த நதிக் கரை ஓரமாக அந்த பக்கீர்கள் நடந்து கொண்டிருக்கும் பொழுது கரையோரம் ஏதோ ஒன்று கிடப்பதை பார்த்தார்.

அது ஏதோ பொருள் என்று நினைத்தவர்களுக்கு அது மெல்ல அசைவது பார்த்தவுடன் அது பொருள் இல்லை ஏதோ ஒரு உயிர் என்று கணித்து அதன் அருகில் சென்று பார்த்த பொழுது அது ஒரு சிறு குழந்தை தன்னுடைய இறுதி மூச்சு விடுவதற்கு தயாராக இருந்த அந்த குழந்தையை தூக்கி வந்தவர்கள் தங்களுடைய குருவானவரிடம் கொடுத்தார்கள்.

அதை தன் நெஞ்ஜோடு அணைத்து அந்த குரு அவர்கள் தன்னுடைய கலிமா விரலை அதனுடைய உதடுகளில் வைத்து சுவைக்க வைக்க அதில் சுரந்த அமுதின் காரணமாக மெல்ல மெல்ல மூச்சை இழுத்து விட்டு அந்த குழந்தை கை கால்களை நன்கு அசைத்து தன்னுடைய வாழ்நாளை நீட்டித்துக் கொண்டது.
நடந்த சம்பவத்தை கேட்டறிந்த அந்தப் பெருந்தகை உடனடியாக படகு வீட்டில் தன் சீடார்கள் சிலருடன் பயணப்பட்டு அரண்மனையை நோக்கிச் சென்றார்கள்.
அரண்மனையில் கட்டப்பட்டுள்ள ஆராய்ச்சி மணியை அந்தப் பெருந்தகையின் சீடர்களில் ஒருவர் அடிக்க அரண்மனையின் நுழைவாயில் திறக்கப்பட்டது.

அரண்மனை வாயிலில் இருந்து வெளிவந்த ஒருவர் செந்நிற ஆடை அணிந்து பலவண்ண தலைப்பாகையுடன் இருக்கக்கூடிய இந்த மனிதர்களை பார்த்தவுடன் சற்று பயந்த வராகவும் அவர்களுடைய அந்த தோற்றத்திலும், முகப்பொலிவும் கண்களிலும் தோன்றும் ஒரு ஒளி அவர்களை அழைத்து விஷயத்தைக் கேட்க தூண்டியது.
வந்த நோக்கத்தை கேட்டார் காவலாளி. அந்த பெருந்தகை சொன்னார்கள் : " தாங்கள் மன்னரை சந்திக்க வேண்டுமென்று " அதை ஏற்று அமைச்சர்கள் தளபதிகள் முன்னிலையில் மன்னரை சந்தித்தார் அந்த பெருந்தகை.
தேவதைகளின் சரணாலயம் என்று புகழப்படும் பாரி மஹால் அரண்மனை அது. இருபுறங்களும் படகு வீடுகள், பல வண்ண பறவைகள், உலகின் இயற்கை சொர்க்கம் போல் காட்சியளிக்கும் பகுதி அது.
மன்னர் சம்ஹரராஜ் அவர்கள் அந்த பெருந்தகையை சந்தித்து தாங்கள் வந்த விஷயம் என்ன என்று பணிவன்புடன் கேட்டார்கள்.
அதற்கு அந்தப் பெருந்தகை சொன்னார் : " நாம் உங்களிடம் நீதி கேட்டு வந்திருக்கிறோம் என்று சொல்லி தங்கள் கையில் இருந்த பிறந்து பத்து நாட்கள் ஆன குழந்தையை காட்டினார்கள். இது ஆற்றில் கரையில் மிதந்தது .
இதை தூக்கி எறிந்தவர்கள் யார் ? இந்த குழந்தையின் தாய் தந்தை யார் ? என்று தாங்கள் தான் கண்டுபிடிக்க வேண்டும்" என்று சொன்னார்கள்
அந்தப் பெருந்தகையின் இந்த பேச்சை உப்பரிகையில் இருந்து பார்த்துக்கொண்டிருந்த அரசி கண்ணீர் மல்க மிக வேகமாக கீழே இறங்கி ஓடி வந்து கதறி அழத் துவங்கி விட்டார்கள். மன்னருடைய கண்களிலும் நீர் வடிந்தது
" இது எங்களுடைய குழந்தைதான் இதை நேற்றிலிருந்து காணவில்லை. யாரோ அரண்மனையில் இருந்து திருடி சென்று விட்டார்கள் " என்று கூறிய அரசி தன் காணாமல் போன செல்வ மகனை அரசி அந்தப் பெருந்தகை இடமிருந்து தன் குழந்தையை வாங்க எத்தனிக்க,
அந்த குழந்தையும் அந்தப் பெருந்தகையினுடைய விரலில் சுரக்கும் அமுத சுவைத்த வண்ணம் பேரின்பக் கடலில் திளைத்திருந்தது .
இதை அதிசயமாக பார்த்த அந்த தாய் அந்தப் பெருந்தகை சாதாரண சாமானியப்பட்ட மனிதர் அல்ல, என்பதை உணர்ந்து அவர்களுக்கு எழுந்து நின்று அனைவரும் மரியாதை செலுத்தினார்கள்.
அப்போது மன்னருடைய அத்தையும் அவருடைய காதலலான துங்காவும் வந்து தாங்களே அந்த குழந்தையை ஆற்றின் தூக்கி வீசியதாகவும்,
இதன் பிறந்த நேரம் சரி இல்லை இந்த குழந்தை பிறந்து வளர்ந்தால் அது மன்னருடைய உயிருக்கு ஆபத்து அவர் இறந்து விடுவார் என்றும் ஜோதிடர்கள் சொன்னார்
அதனாலேயே இந்த பணியை தாங்கள் செய்ததாக ஒப்புக் கொண்டு கண்ணீர் விட்டார்கள் அப்பொழுது
அந்த பெருந்தகை சொன்னார்கள் "நட்சத்திரங்கள் கிரகங்கள் சுழற்சியின் அடிப்படையில் நீங்கள் ஒரு முடிவான முடிவை எட்ட முடியாது. அதனால் இந்த குழந்தை உயிரை முடித்துவிட நினைத்துள்ளீர்கள். இதன் உயிர் ஆன்மா அது இலாஹி என்ற ஏகத்துவம் ஆகிய தெய்வீக ஜீவிதத்தின் ஒரு பாகம் என்பதை உணர்ந்து இருந்தால், இந்த உயிரை நீங்கள் கொல்ல துணிந்து இருக்க மாட்டீர்கள் 'நான்' அல்லது ' நாம் ' என்கின்ற இந்த ஆன்மாவானது ஆரம்பம் முடிவு என்ற எல்லைகளுக்குள் கட்டுப்படாது. இது கோடான கோடி ஆண்டுகளாக இருந்து வருகிறது .
உலகெங்கும் இருக்கும் இந்த ' நான் ' என்ற உணர்வு உங்கள் உடலுக்கு சொந்தமானது அல்ல; உங்கள் உணர்வுக்குத்தான் இந்த உடல் சொந்தமானது .
இந்த உடல் அழிந்து விட்டாலும் உங்கள் உணர்வு (ஆன்மா) என்றும் அழியாது இந்த குழந்தையின் ஜீவனை கொன்று விட நீங்கள் செய்தது உங்கள் உணர்வுக்கு நீங்கள் செய்த துரோகம்" - என்று சில இறைவனின் ஞான தத்துவத்தில் சிலவற்றை சொன்னார்கள்
"உங்கள் அனைவரையும் ஒரே ஒளியிலிருந்து ஒரே உள்ளமையில் இருந்து படைத்தேன்" இறைவன் திருக்குர்ஆன் கூறுகிறான் என்பதை சொல்லிய அவர்கள்,
" தீயவற்றை பார்க்காதீர்கள், தீயவற்றை கேட்காதீர்கள். தீயவற்றை செய்யாதீர்கள் என்று உங்களுடைய வேதங்கள் போதிப்பதை நீங்கள் அறியவில்லையா ?
அந்தப் பெருந்தகையின் ஞானம் வாசகங்களை கேட்டவர்கள் அந்தப் பெருந்தகை தங்களுடைய அரண்மனையில் அந்த பெருந்தகையும், அவருடன் வந்தவர்களையும், தங்களுடைய அரண்மனையில் சில நாட்கள் தங்கி செல்லுமாறு வேண்டிக்கொண்டார்கள்.
அவர்களுடைய வேண்டுகோளை ஏற்று சில நாட்கள் அந்த அரண்மனையில் தங்கி ஏராளமான ஞான விளக்கங்களை அந்த அரண்மனை வாசிகளுக்கு விளக்கினார்கள் அந்த பெருந்தகை,

இவர்கள் வேறு யாருமல்ல தன்னுடைய அரசாட்சியைத் துறந்து, இஸ்லாமிய மார்க்கத்தை உலகமெங்கும் பரப்ப பல நாடுகள் பயணித்து, இறுதியில் ஆந்திர மாநிலம் பெனுகுண்டாவில் அடக்கமாகியுள்ள இறைநேசச் செல்வர் ஆன்மீக குரு ஹழ்ரத் பாபா பக்ருதீன் வலியுல்லாஹ் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அன்னவர்கள் ஆவார்கள்
வலிமார்கள் வாழ்வினிலே பதிவு தளத்திலிருந்து ...

## சூஃபிப் பார்வை 14

(துஹுமுல் உலமா -சன்மார்க்க நிபுணர்)



ஒருதடவை இமாம் அஃளம் (ரஹ்) அவர்கள் மாணவர்களுக்கு பாடம் நடத்திக் கொண்டிருந்தார். அப்போது ஒரு தேள் மேலே இருந்து கீழே தொப்பென விழுந்து இமாம் அவர்களை நோக்கி விரைந்தோடியது.
மாணவர்கள் ஒவ்வொருவரும் இரும்புத்தடி, கைத்தடி, கம்பு, கல் இவ்வாறாக பற்பல ஆயுதங்களை எடுத்துக்கொண்டு, தேளை அடித்து கொல்வதற்காகவும் இமாம் அவர்களை அது கடித்து விடாமல் பாதுகாப்பதற்காகவும் ஓடி வந்தனர்.
இமாமவர்கள் அதனை அடிக்க வேண்டாம். அது என்னைக் கடித்தாலும் கடிக்கட்டும். இன்று நான் ஒரு நபிமொழி எனக்குப் பொருந்துமா? என்று பார்க்கப் போகின்றேன். தேன்கடிப்பதன் மூலமே அதனை நான் அறியமுடியும். பிறகு நான் அந்நபிமொழியையும் அதில் நான் கட்டுப்பட்டவனா? என்பதையும் கூறுகிறேன் " என்றார்.
மாணவர்கள் அவர்கள் எடுத்து வந்த கல், தம்பு, இரும்பு கம்பிகளை வீசிவிடுகின்றனர். தேன் வேகமாக ஓடிச்சென்று இமாமவர்களைத் தீண்டி விடுகிறது.
என்ன ஆச்சரியம்! தீண்டிய தேள் கரகரவென சுற்றி விழுந்து மடிந்து விடுகிறது. இமாமவர்களுக்கு எவ்விதப் பாதிப்பும் உண்டாகவில்லை !
பிறகு இமாம் அவர்கள் கூறுகின்றனர்:
"துஹுமுல் உலமா இமஸ்மு மதுன்" சன்மார்க்க நிபுணர்களின் மாமிசங்கள் விஷம் தோய்க்கப்பட்டது" என எம்பெருமானார் (ஸல்) அவர்களின் ஹதீஸைக் கண்டேன். அத்தகைய சத்தியவான்களான அறிஞர்களில் நானும் இருக்கின்றேனா? என்று எனக்கு தெரியாதிருந்தது. இப்பொழுது அது எனக்குத் தேள் கடித்ததும் மூலம் தெரிந்துவிட்டது' என்றார்கள் .

## சூஃபிப் பார்வை 15

(இறைநேசர்களின் பண்பு)

صل من قطعك واعف عمن ظلمك واحسن من اساء اليك
உனது உறவை வெட்டியவனோடு நீ ஒட்டிக்கொள்.
உனக்கு அநீதமிழைத்தவனை மன்னித்து விடு.
உனக்கு தீங்கு செய்தவனுக்கும் நீ உபகாரம் செய்"
நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வாக்கு.
ஒரு நாள் ஒரு ராணுவ வீரன் ஊருக்கு வெளியே வந்து கொண்டிருந்தான்.அங்கே மஹான் இப்ராஹீம் பின் அத்ஹம் (ரஹ்) அவர்களை வழியில் கண்டு அவர்களிடம் "மக்கள் குடியிருப்பு எங்கே இருக்கிறது ? எனக் கேட்டான்.
அதற்கு மஹான் இப்ராஹீம் பின் அத்ஹம் (ரஹ்) அவர்கள் கப்ருஸ்தானை (கல்லறையை)க் காட்டி அதோ..! அது தான் என்று சொன்னார்கள்.
அவனுக்கு கோபம் வந்தது. நான் கப்ருஸ்தானைக் கேட்க வில்லை மக்கள் வசிக்கக்கூடிய பகுதியைக் கேட்கிறேன் என்று சொன்னான்.
அது தான் உண்மையில் மக்கள் குடியிருப்பு என திரும்பவும் சொன்னார்கள். கோபத்தில் அவர்களை கடுமையாக அடித்து விட்டான். அந்த வேகத்தோடு ராணுவ வீரன் நகருக்குள் வருகிறான். அப்போது நகரத்தில் உள்ள மக்கள் மஹான் இப்ராஹீம் பின் அத்ஹம் (ரஹ்) அவர்களை உற்சாகத்தோடு வரவேற்றார்கள்.

அதுகண்டு அதிர்ச்சியுற்ற இராணுவ வீரன் நாம் நையப்புடைத்த இந்த மனிதருக்கு இவ்வளவு வரவேற்பா?
அப்படியென்றால் இவர் யார்?
இவர் தான் பலக் நாட்டின் பேரரசராக இருந்து முடி துறந்த இறைஞானி இப்ராஹீம் பின் அத்ஹம் என்று சொல்லப்பட்டது.
அப்போது வேதனைப்பட்டு, நாணிக்குருகி மஹானிடத்தில் சென்று மன்னிப்பு கேட்டான்.
" நீங்கள் யார் என்று தெரியாமல் தவறு நடந்து விட்டது.என்னிடம் நீங்கள் உங்களைப் பற்றி அடிமை என்று தானே சொன்னீர்கள்?
அதனால் நடந்த விபரீதம் அல்லவா இது! ஏன் அப்படிச் சொன்னீர்கள்?
அதற்கு இறைஞானி அவர்கள்: " அடிமையா ?எனக்கேட்டீர். ஆம் என்றேன். யாருக்கு அடிமை ? என்று நீங்கள் கேட்கவில்லையே
கேட்டிருந்தால், அல்லாஹ்வுக்கு அடிமை என்று சொல்லியிருப்பேன்" என்றார்.
" என்னை மன்னித்து எனக்காக பிரார்த்தனை செய்ய வேண்டும்" என கண்ணீர் மல்க கரைந்துருகி கேட்ட போது,
" என்னை அடிக்கத் தொடங்கிய போதே உன்னை மன்னித்து உனக்கு சொர்க்கம் கிடைக்க பிரார்த்தனை செய்து விட்டேன்" என்று
சொன்னார்கள்
"அவன் உங்களுக்கு அநியாயம் செய்திருக்க அவனுக்காக இப்படியொரு பிரார்த்தனையா ? '' எனக் கேட்கப்பட்ட போது,
" அவன் மூலமாக எனக்குத் தீங்கு ஏற்பட்டது. நான் மன்னிக்கவில்லையெனில் என் காரணமாக அவனுக்குத் தீங்கு ஏற்படும்
அல்லவா ? அப்படியென்றால் இருவருக்கும் மத்தியில் என்ன வித்தியாசம்?
மேலும், நான் பொறுமையாக இருந்ததால்,, எனக்கு அவன் மூலம் சொர்க்கத்தில் பதவி உயர்வு கிடைக்கும் போது, என் காரணமாக
அவனுக்கு நரகம் கிடைக்கக் கூடாதல்லவா! எனவே நான் அவனுக்காக பிரார்த்தனை புரிந்தேன் என்றார்கள்...
இதுதான் இறைநேசர்களின் பண்பு.

## சூஃபிப் பார்வை 16

(சூஃபிகளின் உணவு)

அல்லாமா முஹம்மதுப்னு தாஹா ஷாஃபிஈ (ரஹ்) இமாம் மூஸாகாழிம் (ரலி) ஆகியோரின் திருக்கரத்திலிருந்து எண்ணற்ற
அற்புதங்கள் நிகழ்ந்தன.
ஹிஜ்ரி 149 ல் ஹலரத் ஷகீக் பல்கீ (ரஹ்) அவர்கள் ஹஜ்ஜுக்காகப் புறப்பட்டார். அவர் கூறுகின்றார். "நான் காதிசிய்யாவை
அடைந்தபோது ஒரு பேரெழில்மிக்க கோதுமை நிற மேனிகொண்ட இளைஞரை மாபெரும் கூட்டத்தினிடையே கண்டேன்.
அவரது உடல் மிகவும் மெலிந்திருந்தது. அவர் தன்னுடைய உடலின்மேல் ஒருகம்பளி ஆடை போர்த்தி இருந்தார். சிறிதுநேரம் கழித்து
தனியாகப்போய் அவர் கூட்டத்தை விட்டு வெளியேறி தனியாக அமர்ந்துகொண்டார். 'இவர் சூஃபி' என என்னுடைய
மனதிற்குள்ளாக நினைத்துக் கொண்டேன்.
மேலும் 'உணவு விஷயத்தில் இவர் மக்களுக்குச் சுமையாக இருப்பார்' என்றும் எண்ணியவனாக அவரருகில் சென்றேன். அவரைச்
சற்று எச்சரித்து வைக்கலாம் என்று கருதி அவரருகில் சென்றபோது அவர், ''எ ஷகீக்! கெட்ட எண்ணம் எண்ணாதீர்; இது
நற்பண்பல்ல என்று கூறிவிட்டு ஏதோ ஒருபக்கம் சென்றுவிட்டார்''.
ஷகீக்பல்கீ (ரஹ்) மேலும் கூறுகிறார். 'அவர் என்னுடைய உள்ளத்தில் உதித்த எண்ணத்தை அறிந்துகொண்டார். என்னுடைய
பெயரைச்சொல்லி அழைத்தார். இச்சம்பவம் எனது இதயத்தில் இவர் நல்லடியார் என்ற எண்ணத்தை உருவாக்கியது. அவரைத்
தேடினேன்; அவர் கிடைக்கவில்லை.
வாதிஎஃபிள்ளாவில் அவரைத் தொழக்கண்டேன். அவருடைய உடல் காற்றிலாடும் குச்சிபோல நடுநடுங்கிக் முழுவதும்
கொண்டிருந்தது. கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தோடிக்கொண்டிருந்தது. நான் மன்னிப்புக்கோர அவரருகில் சென்றேன். அவர்
தொழுகையிலிருந்து விடைபெற்று என்னை நோக்கிக் கூறினார்.
"ஏ ஷகீக்! (தவ்பா) பாபமீட்சி பெறுபவரை நான் மன்னித்து விடுகின்றேன்" என்றார். பின்னர் புறப்பட்டுப்போய் விட்டார். இப்பொழுது
அவர் எனது அங்கிருந்து இதயம் 'இவ்விளைஞர் நிச்சயமாக அப்தால்களில் ஒருவராக இருப்பார்'
என்று சாட்சியம் அளித்தது. ஏனெனில் மறுமுறையும் இவர் என்னுடைய மன நாட்டத்தை அறிந்து வெளிப்படுத்தி விட்டார். நான்
மீண்டும் எங்கெங்கோ தேடினேன்; அவர் கிடைக்கவில்லை.
பின்னர் ஜபாலா என்ற ஊரை அடைந்தபோது அதே இளைஞர் தம்முடைய கூஜாவைக் கிணற்றில் போட்டு தண்ணீர் இறைக்க
விரும்பினார். எதிர்பாராது கூஜா கை நழுவி கிணற்றுக்குள் விழுந்துவிட்டது.
அப்போது வானத்தை நோக்கி "எம்மை வளர்ப்பவனே! நான் தாகித்தால் நீதான் தண்ணீர் புகட்டுகின்றாய்; நான் பசித்தால் நீதான்
உணவூட்டுகின்றாய்! இறைவா! இக்கூஜா தவிர என்னிடம் வேறு பாத்திரம் இல்லை. என்னுடைய எஜமானனே! என்னுடைய கூஜாவை
திருப்பித் தந்து விடுவாயாக!''
அவ்விளைஞர் இவ்வளவுதான் கூறினார். அதற்குள்ளாக தண்ணீரின் மேற்பரப்பில் கூஜா நீந்திக் கொண்டிருந்தது. அவர்
அக்கூஜாவை கை நீட்டிப்பிடித்து தண்ணீர் எடுத்துக் கொண்டார். பிறகு ஒலூச்செய்து நான்கு ரக்அத்துகள் தொழுதார். அதன் பிறகு
அவர் ஒருபிடி மணல் எடுத்து அதனைத் தண்ணீரில் கரைத்துச் சாப்பிடத் துவங்கினார். இதைக் கண்ட நான், "நானும் பசியாக
இருக்கின்றேன். எனக்கும் ஏதாவது சாப்பிடத்தருவீர்" என்றேன். அப்போதவர் மணல் நிரப்பிய அதே கூஜாவை எனக்கு அளித்தார்.
நான் அதிலிருந்து எடுத்துச்சாப்பிட்டேன். இறை மீதாணை அதுபோன்ற உணவை நான் என் வாழ்நாளில் சாப்பிட்டதே இல்லை. அது
மிகவும் சுவை மிக்கதாக இருந்தது. இதில் ஒரு பிரத்தியேக விஷயம் யாதெனில், அதனைச் சாப்பிட்ட பின்னர் நான் பயணத்தில்

இருந்த வரை எனக்கு சாப்பாட்டின் பால் தேவையே ஏற்படவில்லை. பசியே தோன்ற வில்லை. அதற்குப் பிறகு அவர் என் கண்ணிலிருந்து மறைந்து விட்டார்.

நான் புனித மக்கா நகரம் வந்தபோது அதே இளைஞர் ஒரு மணல்மேட்டின்மேல் ஓரமாக தொழுது கொண்டிருந்தார். அவரது விழிகள் கண்ணீரைச் சொரிந்து கொண்டிருந்தன. உடல் நடுங்கிக்கொண்டிருந்தது. அவர் தொழுதுகொண்டே இருந்தார். சுப்ஹ் ஆகிவிட்டது. அவர் சுப்ஹ் தொழுத பிறகு தவாப் செய்தார்.

பிறகு ஓரிடத்தில் தங்கினார். அவரைச் சுற்றி மக்கள் திரண்டனர். அனைவரும் அவருக்கு மிகுந்த மரியாதை செய்தனர், நான் பயணத்தில் அவரிடம் ஏராளமான அற்புதங்களைக் கண்டிருந்தேன். ஆகையால் இவர் யார் என அறியும் ஆவலில் மக்களிடத்தில் ''இவர் ஏராளமான அற்புதங்களை நிகழ்த்தி இருக்கின்றாரே?" என வினவினேன்.

மக்கள் இவர்தாம் இறைத்தூதரின் பேரர் இமாம் மூஸாகாளிம் (ரலி)" என்று கூறினர்.

"ஆம்! சந்தேகமின்றி இவ்வற்புதங்களை எல்லாம் அக்குடும்பத்தைச் சார்ந்தவர்கள் தாம் நிகழ்த்த முடியும்" என்றேன் நான்,

## சூஃபிப் பார்வை 17

( "சற்குருவிற்கு பணி செய் " )



மனித வாழ்க்கையில் கனவுகள் மிக முக்கியமான இடத்தைப் பெற்றிருக்கிறது என்றால் அது மிகையல்ல. அந்த அடிப்படையில் அல்குர்ஆன் தலைமை விரிவுரையாளர் மற்றும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அன்பு தோழர் ஹள்ரத் இப்னு அப்பாஸ் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள்

اَللّٰهُ يَتَوَفَّى الْاَنْفُسَ حِيْنَ مَوْتِهَا وَالَّتِىْ لَمْ تَمُتْ فِىْ مَنَامِهَا فَيُمْسِكُ الَّتِىْ قَضٰى عَلَيْهَا الْمَوْتَ وَ يُرْسِلُ الْاُخْرٰٓى اِلٰٓى اَجَلٍ مُّسَمًّى اِنَّ فِىْ ذٰ لِكَ لَاٰيٰتٍ لِّقَوْمٍ يَّتَفَكَّرُوْنَ

"அல்லாஹ், உயிர்களை அவை மரணிக்கும் போதும், மரணிக்காதவற்றை அவற்றின் நித்திரையிலும் கைப்பற்றி, பின்பு எதன் மீது மரணத்தை விதித்துவிட்டானோ அதை(த் தன்னிடத்தில்) நிறுத்திக் கொள்கிறான்; மீதியுள்ளவற்றை ஒரு குறிப்பிட்ட தவணை வரை (வாழ்வதற்காக) அனுப்பி விடுகிறான் - சிந்தித்துப் பார்க்கும் மக்களுக்கு, நிச்சயமாக அதில் அத்தாட்சிகள் இருக்கின்றன" (குர்ஆன் : 39:42)

மேற்கண்ட குர்ஆனின் வசனத்திற்கு அவர்கள் விளக்கம் தருகிறார்கள்:

‘ஒவ்வொரு மனிதனுக்கும் நஃப்ஸ் (ஆத்மா)-வும், ரூஹ்

(உயிர்)-ம் உள்ளன. நஃப்ஸில் உணரும் தன்மையும் அறிவும் உள்ளன. ரூஹில் அசையும் தன்மையும் மூச்சு வாங்கும் தன்மையும் உள்ளன.

மனிதன் தூங்கும் போது அல்லாஹ் நஃப்ஸை மட்டுமே கைப்பற்றுகிறான். ரூஹை கைப்பற்றுவதில்லை. ரூஹ் தனது அசையும் தன்மையால் அந்நேரத்தில் சுற்றித் திரிகிறது. அப்பொழுது அந்த ரூஹிற்கு மற்ற ரூஹ்களுடன் நடைபெறும் சம்பாஷனைகள் மற்றும் நிகழ்ச்சிகளே கனவுகளாகும்.

(நூல் : குர்துபி)

சபீனத்துல் அவ்லியாவில் வந்துள்ளது :

ஒரு நாள் ஹஜ்ரத் கௌதுல் ஆலம் (ரஹ்) அவர்கள் மஸ்ஜித் மிம்பரில் ஏறி பிரசங்கம் செய்து கொண்டிருந்தார்கள்.

ஹஜ்ரத் ஷேக் அலி பின் ஹைத்தி (ரஹ்) அவர்கள் மிம்பர் மேடைக்கு அருகில் அமர்ந்திருந்தார்கள். திடீரென்று அவர்களுக்கு தூக்கம் வந்து விட்டது.

கௌதுல் ஆலம் (ரஹ்) அவர்கள் மக்களை அமைதியுடன் இருக்குமாறு வலியுறுத்தினார்கள்; தாமும் பிரசங்கத்தை நிறுத்தி விட்டார்கள். பிறகு மிம்பரிலிருந்து இறங்கி ஹஜ்ரத் ஷேக் அலி பின் ஹைத்தீ அவர்களின் அருகில் சென்று மரியாதையுடன் நின்று விட்டார்கள். அவர்களை கூர்ந்து நோக்கிக் கொண்டிருந்தார்கள்.

ஷேக் விழித்துக் அவர்கள் தூக்கத்தில் கொண்டதும், அவர்களிடம் கௌதுல் ஆலம் அவர்கள், "நீங்கள் கனவில் நாயகம் (ஸல்) அவர்களைப் பார்த்தீர்களா இல்லையா?" என்று கேட்டார்கள்.

அதற்கு அவர்கள் "ஆம்! நான் இப்போது தான் கனவில் ஈருலக ரட்சகர் முஹம்மத்(ஸல்) அவர்களின் புனிதத் தோற்றத்தை சந்திக்கும் வாய்ப்பைப் பெற்றேன்'' என்றார்.
ஹஜ்ரத் கௌதுல் ஆலம் அவர்கள் மக்களிடம் கூறினார்கள்: "நான் நாயகம் (ஸல்) அவர்களுக்கு மரியாதை கொடுப்பதற்காகத்தான் என்னுடைய பிரசங்கத்தை நிறுத்திவிட்டு மிக்க மரியாதையுடன் நின்று விட்டேன்."
ஹஜ்ரத் கௌதுல் ஆலம் அவர்கள் ஷேக்கிடம் "நாயகம் (ஸல்) அவர்கள் உங்களுக்கு எதைப் பற்றி போதித்தார்கள்?" என்று கேட்டார்கள்.
அதற்கு ஷேக் ஹைத்தீ அவர்கள், ''நாயகம் அவர்கள் நான் உங்களுக்கு பணிவிடை செய்ய வேண்டும் என்று கட்டளையிட்டார்கள்'
பிறகு அநேகர் ஹஜ்ரத் ஷேக் அலிபின் ஹைத்தியிடம் ஹஜ்ரத் கௌதுல் ஆலம் அவர்களுடைய விளக்கத்தைப் பற்றி உண்மையை அறிய விரும்பினார்கள்.
ஷேக் கூறினார்கள்: 'நான் கனவுலகில் கண்டதையெல்லாம் கௌஸே பாக் (ரஹ்) அவர்கள் நிஜவுலகில் பார்த்து விட்டார்கள்."
இறைத்தூதர் (ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம்) அவர்கள் கூறினார்கள்” நல்ல மனிதர் காணும் நல்ல (உண்மையான) கனவு, நபித்துவத்தின் நாற்பத்தாறு பாகங்களில் ஒன்றாகும். என அனஸ் இப்னு மாலிக் (ரலி) அறிவித்தார்கள்.
(நூல் புகாரி 6983)
மொத்த நபித்துவமே ஹஜ்ரத் ஷேக் அலி பின் ஹைத்தி (ரஹ்) அவர்கள் கனவில் வந்து"சற்குருவிற்கு பணி செய்" என்றுதானே சொன்னது
சிந்திக்க வேண்டிய சேதி.

## சூஃபிப் பார்வை 18

(ஒரு மொடக்கு நீருக்கு உண்டான சிறு நீருக்கும் ஈடாகாத அரசாங்கம்)

ஷகீக் பல்கி (ரஹ்) 'ஹுஜ்ஜுச் செய்துவிட்டு பகுதாது திரும்பிய பொழுது கலீபா ஹாரூன் அல்ரஷீது இவர்களை அரண்மனைக்கு அழைத்துவரச் செய்தார்.
கலீபா ஹாரூன் அல்ரஷீதுவின் முன் வந்த பொழுது இவர்களை நோக்கி, “தாங்கள் தாமா துறவி ஷகீக்?"
"ஆம்; நான் தான் ஷகீக். ஆனால் நான் துறவியல்ல"
அதன்பின் தமக்கு அறிவுரை வழங்குமாறு ஹாரூன் அல்ரஷீத் வேண்ட, "அப்படியா! அறிவுரை வழங்குகின்றேன். கேளுங்கள்.
இறைவன் தங்களை அபூபக்ர் ஸித்தீக் (ரலி) அவர்களின் இடத்தில் அமரச்
செய்து, தாங்கள் அவர்களே போன்று ஓர் உண்மையாளராக நடந்து கொள்ள வேண்டு மென்று விரும்புகின்றான்.
மேலும் அவன் தங்களை உமர் பாரூக் (ரலி) அவர்களின் இடத்தில் அமரச் செய்து, தாங்கள் அவர்களே போன்று பொய்மையையும், மெய்மையையும் பிரித்தறியக் கூடியவராக விளங்க வேண்டுமென்று விரும்புகின்றான்.
மேலும் அவன் தங்களை இரண்டு பிரகாசங்களையுடைய உதுமான் (ரலி) அவர்களின் இடத்தில் அமர்த்தி, அவர்களே போன்று தாங்களும் கண்ணியமும், தாழ்மையும் உடையவர்களாய் விளங்க வேண்டுமென்று விரும்புகின்றான்.

மேலும் அவன் தங்களை அலீ (ரலி) அவர்களின் இடத்தில் ஒருங்கே வாய்க்கப் பெற்றவர்களாக விளங்க வேண்டுமென்று விரும்புகின்றான்" என்று கூறினர்.
அதுகேட்ட கலீபா அவர்கள் மேற்கொண்டும் தமக்கு அறிவுரை வழங்குமாறு வேண்ட,
"இறைவன் நரகம் என்ற தங்குமிடம் ஒன்றை உண்டுபண்ணி அதன் வாயிற் காப்போனாகத் தங்களை நியமித்து, தங்களிடம் மூன்று பொருள்களை அதாவது செல்வம், வாள், சவுக்கு ஆகியவற்றை வழங்கியுள்ளான்.
இந்த மூன்றினாலும் மக்களை நரகத்தை விட்டும் அப்புறப்படுத்து.
வறுமையுற்றவன் எவனும் உன்னிடம் வரின் அவனுக்குப் பணம் உதவி வழங்கி அவனின் வறுமையை நீக்கு.
இறை கட்டளைக்கு எவனும் மாறு செய்யின் அவனை இந்தச் சவுக்கால் அடித்து அறிவு புகட்டு.
எவனேனும் ஒருவன் மற்றொருவனைக் கொலை செய்துவிடின் அவனை இவ்வாளினால் பழி வாங்கு" என்று தங்களுக்குக் கட்டளை பிறப்பித்து,
''நீ இவற்றைச் செய்யவில்லையாயின் நீயே நரகவாசிகளின் தலைவனாவாய்" என்று அருள் எச்சரிக்கையும் செய்துள்ளான்" என்று இயம்பினர்.
இன்னும் கூறுங்கள்" என்று கலீபா அவர்கள் வேண்ட ,
"தாங்கள் பாலையின் நடுவே தாகவிடாயால் துன்புற்று
இறக்கும் நிலையில் ஆகிவிட்டீர்கள் என்று வைத்துக் கொள்ளுங்கள். அப்பொழுது தங்களுக்கு ஒரு முடக்குத் தண்ணீர் கிடைப்பின் அதற்குத் தாங்கள் எவ்வளவு பணம் வழங்குவீர்கள்'' என்று வினவினர்.
''அம்முடக்குத் தண்ணீரை எனக்கு வழங்கும் மனிதன் என்னிடம் என்ன கேட்கிறானோ அதனை நான் அவனுக்கு வழங்குவேன்" என்று பதிலிறுத்தனர் கலீபா.
"அவன் அதற்குப் பகரமாகத் தங்களின் அரசாங்கத்தில் பாதியை வேண்டின் தாங்கள் என்ன செய்வீர்கள் ?"
'அதனை நான் அவனுக்கு வழங்குவேன்'' ..

''நல்லது; தாங்கள் அத்தண்ணீரை அருந்துகின்றீர்கள். அது தங்களுக்கு ஒத்துக் கொள்ளாததால், தங்களுக்குச் சிறுநீர் வருவது நின்றுவிடுகிறது. எனவே தாங்கள் இறக்கும் நிலையில் ஆகி விட்டீர்கள் என்று வைத்துக் கொள்ளுங்கள்.
அப்பொழுது ஒருவன் தங்களிடம் வந்து, "நான் தங்களுக்குச் சிகிச்சை அளிக்கின்றேன். அதற்குப் பகரமாகத் தாங்கள் எனக்குத் தங்களின் அரசாங்கத்தில் பாதியைத் தரவேண்டும்' என்று கூறின் தாங்கள் என்ன செய்வீர்கள் ?"
"அதனை நான் அவனுக்கு வழங்குவேன்"
"அவ்விதமாயின் தாங்கள் அருந்தும் ஒரு முடக்குத் தண்ணீருக்கு நிகராகவும், சிறுநீராக வெளிவராத ஒரு முடக்குத் தண்ணீருக்கு நிகராகவும் உள்ள தங்களின் மாபெரும் அரசாங்கத்தைப் பற்றித் தாங்கள் ஏன் பெருமையுறுகிறீர்கள் ?"
இவ்வாறு ஷகீக் பல்கி (ரஹ்) அவர்கள் கூறியதும் கலீபாவின் கண்களிலிருந்து நீர் தாரைதாரையாக வழிந்தோடியது.
அவ்வான்றோருக்கு அளவற்ற மரியாதை செய்து அவர்களை அன்போடு அனுப்பி வைத்தனர் கலீபா.
இத்தகைய சீரும் சிறப்பும் பெற்று வாழ்ந்த இம்மேதகை இறுதியாக ஹிஜ்ரி 194 ஆம் ஆண்டில் நடைபெற்ற மார்க்கப் போர் ஒன்றில் ஈடுபட்டு தங்களின் இன்னுயிரை இறைவனின பாதையில் அர்ப்பணித்தார்கள்.

## ஸூஃபிப் பார்வை 19

(நம்பிக்கை, கல்வியை விட மேலானதுதான்)
ஒரு நாள் ஹஸன் பஸரீ (ரஹ்) அவர்கள் ஹபீப் அஜமீ (ரஹ்) அவர்களின் இல்லத்திற்கு வந்த பொழுது, அவர்களின் முன் ஒரு ரொட்டியையும் சிறிது உப்பையும் கொண்டு வந்து வைத்து அதனை உண்ணுமாறு வேண்டிக் கொண்டார்கள்.
அப்பொழுது வாயிலில் ஓர் ஏழை வந்து உணவு கேட்க உடனே ஹபீப் அஜமீ (ரஹ்) அவர்கள், ஹஸன் பஸரீ (ரஹ்) அவர்களின் முன் தாம் சற்று முன்னர் கொண்டு வந்து வைத்த ரொட்டியையும் உப்பையும் எடுத்து அந்த ஏழைக்குக் கொடுத்து விட்டார்கள்.

இது கண்டு பெரிதும் ஏமாற்றமுற்ற ஹஸன் பஸரீ (ரஹ்) அவர்கள் ஹபீப் அஜமீ (ரஹ்) அவர்களை நோக்கி, "நீர் நல்லவர் தாம். எனினும் உம்மிடம் சிறிது கல்வியறிவு இருந்திருப்பின் மிகவும் மேலாக இருந்திருக்கும். விருந்தினர் முன் வைக்கப்பட்ட உணவு முழுவதையும் எடுத்து வேறொருவருக்குக் கொடுப்பது பண்பல்ல என்பதை நீர் அறியவில்லை. அதில் சிறிதளவு பிய்த்து அவ்வேழைக்குக் கொடுத்திருப்பின் எவ்வளவோ நன்றாயிருந்திருக்கும்" என்று கூறினர்.
அது கேட்டு ஹபீப் அஜமீ (ரஹ்) அவர்கள் யாதொன்றும் கூறவில்லை.
சற்று நேரம் கழிந்தது. ஒருவன் ரொட்டி, கறி, ஹல்வா, ஐந்நூறு திர்ஹம் ஆகியவற்றைக் கொண்டு வந்து ஹபீப் அஜமீ (ரஹ்) அவர்களின் திருமுன் வைத்து இவற்றைத் தன் எசமான் அவர்களுக்கு அன்பளிப்பாக அனுப்பி வைத்ததாகக் கூறினான் .
உடனே ஹபீப் அஜமீ (ரஹ்) அவர்கள் அப்பணத்தை எடுத்து ஏழை எளியவர்களுக்கு அறம் செய்துவிட்டு உணவுப் பொருள்களை எடுத்து ஹஸன் பஸரீ (ரஹ்) அவர்களின் திருமுன் வைத்து அவர்களுடன் சேர்ந்து தாங்களும் உண்டனர்.
உண்டு முடித்ததும், அவர்கள் தங்களின் ஞானாசிரியரான ஹஸன் பஸரீ (ரஹ்) அவர்களை நோக்கி,
"ஆசிரியர் அவர்களே! தாங்கள் மிகவும் நல்லவர்கள்தாம். எனினும் இறைவனின் போருளில் அசைக்க முடியாத நம்பிக்கை, இறைவழியில் செலவிடப்பட்ட பொருள் பல மடங்கு அதிகமாகப் பெருகித் தங்களை வந்தெய்தும் என்ற ஆழிய நம்பிக்கை தங்களின் உள்ளத்தில் இருந்திருப்பின், மிகவும் மேலாக இருந்திருக்கும்" என்று கூறினர். அதுகேட்டு ஹஸன் பஸரீ (ரஹ்) அவர்கள் மௌனமாயினர்.
சிறிது நேரம் கழித்து அவர்கள் மீண்டும் தம் ஞானாசிரியரை நோக்கி, "ஆசிரியர் அவர்களே! கல்வி நல்லது தான், ஆனால் அதைவிட நல்லது நம்பிக்கை.

நான் ரொட்டியையும் உப்பையும் தங்களின் முன் கொண்டு வந்து வைத்து 'உண்ணீர், உண்ணீர்` என்று வேண்டிய பொழுது தங்களின் தகுதிக்குத் தக்கவண்ணம் தங்களைக் கௌரவிக்க இயலவில்லையே என்று என் மனம் பெரிதும் வருந்தியது.
அப்பொழுது தான் ஓர் ஏழை வாயிலில் வந்து நின்று உண்ண உணவு வேண்டினார். தங்களின் முன் வைக்கப்பட்டிருந்ததைத் தவிர்த்து வீட்டில் யாதோர் உணவும் பொருளும் இல்லாததனால், அதனையே எடுத்து அவரிடம் கொடுத்து விட்டேன்.
அது பண்பாட்டுக் குறைவேயாயினும் அதற்குப் பகரமாக இறைவன் நல்ல உணவைத் திருப்பி அனுப்பி வைப்பான். அதனைத் தங்களுக்கு உண்ண அளிப்பின் நன்றாக இருக்கும் என்று எண்ணியே அவ்வாறு செய்தேன். என் எண்ணம் வீண் போகவில்லை. என் நம்பிக்கை பலன் அளித்தது" என்று கூறினர்.
அது கேட்ட ஹஸன் பஸரீ (ரஹ்) அவர்கள் "ஹபீபே! நிச்சயமாக நீர் பெருமகராவீர். உண்மையில் நம்பிக்கை, கல்வியை விட மேலானது தான் " என்று மொழிந்தார்கள்

## சூஃபிப் பார்வை 20

( நஃப்ஸிற்கு வழிப்படுகிறீர் " )



இப்ராஹீம் அல் கவ்வாஸ் (ரஹ்) இருபது ஆண்டுகளாக இனிப்பு மாதுளம் பழம் தின்ன வேண்டுமென்று ஆசையாக இருந்தது. எனினும், அந்த ஆசையை அவர்கள் ஒரு நாளேனும் நிறைவேற்றி வைக்கவில்லை.

ஒருநாள் அவர்களின் நஃப்ஸ் (மனஇச்சை) அவர்களை நோக்கி, "நீர் இருபதாண்டுகளாக என்னை ஏமாற்றி வருகின்றீர். இனியும் ஏமாற்றிக் கொண்டிருப்பீராயின், நான் இடக்குப் பண்ணுவேன். உம்முடைய வணக்கத்தில் உமக்கு அலுப்பேற்படுமாறு செய்வேன்" என்று கூறியது.

அப்பொழுது அவர்கள் தம் நஃப்ஸை நோக்கி, "சற்றுப் பொறு. நாம் பழமரங்கள் நிறைந்த காட்டிற்குச் செல்லும் பொழுது, உன் இச்சையை நிறைவேற்றி வைக்கிறேன்" என்று ஆறுதல் நிறைந்த உறுதிமொழி பகர்ந்தார்கள்.

ஒரு தடவை அவர்கள் கானகத்தினூடே சென்று கொண்டிருக்கும்பொழுது அங்கு ஒரு மாதுளம் மரம் பழுத்துக் குலுங்குவதைக் கண்டு,அதிலிருந்து ஒரு பழத்தைப் பறித்து உண்டார்கள்.

அதுவோ ஒரே புளிப்பு மயமாக இருந்தது. அதனைத் தூக்கி எரித்துவிட்டு, மற்றொரு பழத்தை உண்ட பொழுது, அதுவும் அவ்வாறே இருந்தது. இவ்வாறு அவர்கள் பறித்து உண்ட நாலைந்து பழங்களும் புளிப்பு மயமாகவே இருந்தன.

அப்பொழுது அவர்களின் நஃப்ஸ் அவர்களை நோக்கி, "நான் இனிப்பு மாதுளம்பழத்தை விரும்புகின்றேன். எனக்குப் புளித்த மாதுளம் பழம் வேண்டாம்" என்று கூறியது.

அவ்விடத்தை விட்டும் அவர்கள் சற்றுத் தொலைவு சென்றார்கள். அங்கு ஒரு தோட்டம் இருந்தது. ஆங்கு ஒரு மனிதன் வீற்றிருந்தான். அவனை அவர்கள் அணுகித் தமக்கு ஒரு மாதுளம் பழம் தருமாறு கேட்டார்கள்.

அவன் மறுவார்த்தையின்றி ஒரு மாதுளம் பழத்தை பறித்துக் கொண்டு வந்து அவர்களிடம் கொடுத்தான். அதனை உடைத்து அவர்கள் உண்டார்கள். அதுவும் புளிப்பாகவே இருந்தது.

அவர்கள் அந்த மனிதனிடம் தாம் வரும் வழியில் மாதுளம் பழங்களைப் பறித்து உண்டதையும், இப்பொழுது உண்டதையும் கூறி, அனைத்துப் பழங்களும் புளிப்பாக இருக்கும் அதிசயத்தை எடுத்துரைத்தார்கள்.

அதற்கு அவன் "நீர் உம்முடைய நஃப்ஸிற்கு வழிப்படுகிறீர். நான் இத்தோட்டத்தின் நாற்பது ஆண்டுகளாகக் காவற்காரனாக உள்ளேன். அல்லாஹ்வின் மீது ஆணையாகக் கூறுகிறேன். இங்குள்ள மரங்களில் எது இனிப்பு மாதுளை, எது புளிப்பு மாதுளை என்பதை அறியேன் " என்று கூறினான்

அது கேட்டு வியப்பு மிக்கவர்களாய் அவ்விடத்தைவிட்டும் நீங்கிய அவர்களுக்கு மற்றொரு வியப்புக் காத்திருந்தது.

திடீரென ஒரு பள்ளத்தாக்கில் நுழைந்த அவர்கள், ஆங்கு ஒரு மனிதர் தரையிலே களைத்து வீழ்ந்து கிடப்பதையும், அவருடைய உடலில் புழுக்கள் நெளிவதையும், குளவிகள் மொய்த்துக் கொண்டிருப்பதையும், கண்டு, அவர் மீது இரக்கமுற்று "தங்களுக்கு இத்துன்பங்களிலிருந்து நிவாரணம் நல்குமாறு இறைவனிடம் இறைஞ்சவா?" என்று வினவினர்.

"வேண்டாம்" என்று அவர் பதில் கூறினார்.

"ஏன் அவ்விதம் கூறுகிறீர்கள்?'' என்று அவர்கள் வினவ,

“ஏன் என்றா வினவுகின்றீர்? கூறுகிறேன் கேளும். நிவாரணம் என்பது நான் விரும்புவது. துன்புறுத்துவது என்பது அவன் விரும்பியது. எனவே, அவனுடைய விருப்பத்திற்கு மேலாக என்னுடைய விருப்பம் இருப்பதை நான் விரும்பவில்லை".

"நல்லது; அந்தக் குளவிகளையாவது விரட்ட எனக்கு அனுமதி நல்குங்கள்" என்று அவர்கள் வேண்டிய பொழுது

“கவ்வாஸே! உம்முடைய உள்ளத்திலிருந்து இனிப்பு மாதுளம் பழம் தின்ன வேண்டுமென்ற ஆசையை விரட்டியடியும். என்னை ஏன் வீணே தொந்தரவு படுத்துகிறீர்? உம் மனப்புண்ணை ஆற்ற நீர் இறைஞ்சிக் கொள்வீராக! நீர் ஏன் என் உடற்புண்ணை ஆற்றுமாறு இறைவனிடம் இறைஞ்ச வேண்டும்?" என்று கூறினர்.

அது கேட்டு வியப்புற்ற கவ்வாஸ் (ரஹ்) அவர்கள், "என் பெயர் தங்களுக்கு எவ்வாறு தெரியும்?" என்று வினவிய பொழுது,

''இறைவனை அறிந்தவனுக்கு யாதும் மறை பொருளாக இருக்காது" என்று அவர் மறுமொழி பகர்ந்தார்.

"நல்லது; குளவிகள், கொத்துவதை எவ்வாறு பொறுத்துக் கொண்டுள்ளீர்கள்? அது தங்களுக்கு வேதனை தரவில்லையா?” என்று கவ்வாஸ் (ரஹ்) அவர்கள் வினவிய பொழுது,

"குளவிகள் என் உடலில் கொத்தும் பொழுதும், புழுக்கள் என் உடலை உண்ணும் பொழுதும், நான் மகிழ்ச்சியுறுகிறேன். காரணம், எல்லாம் இறைவன் செயல்' என்று அவர் மறுமொழி பகர்ந்தார்.
அது கேட்டு இப்ராஹீம் அல்கவ்வாஸ் (ரஹ்) அவர்களுக்கு ஏற்பட்ட திடுக்கத்திற்கு அளவில்லை.

## **சூஃபிப் பார்வை 21**

(இறைவனின் பேரருளின் மீது ஆதரவு - ரஸா )

உலகிலேயே யஹ்யா என்னும் பெயர் பெற்ற இருவர் சிறப்புற்று விளங்கினர். அவர்களில் ஒருவர் நபி, மற்றவர் வலி.
முன்னவரோ ( நபி யஹ்யா அலை) இறைவன் மீதுள்ள அச்சம் (கௌஃப்) காரணமாக எப்பொழுதும் அழுத வண்ணம் இருந்தார்கள்.
ஆனால் பின்னவரோ ( யஹ்யா இப்னு மஆத் (ரஹ்) , இறைவனின் பேரருளின் மீது தமக்குள்ள அசைக்க முடியாத ஆதரவின் (ரஸா) காரணமாக, ஈஸா (அலை) அவர்கள் போன்று எப்பொழுதும் புன்முறுவலுடன் காணப் பட்டார்கள்.
யஹ்யா இப்னு மஆத்(ரஹ்) அவர்களுக்கு ஓர் உடன் பிறந்தார் இருந்தார். அவர் மக்கா சென்று கஃபாவின் அண்மையில் ஒரு வீட்டை வாடகைக்கு அமர்த்தி, ஆங்கு வாழ்ந்து வந்தார். அங்கிருந்து அவர் தம் அண்ணனுக்குப் பின்வருமாறு மடல் எழுதினார்:
அன்புள்ள அண்ணன் அவர்களுக்கு,

அஸ்ஸலாமு அலைக்கும்.
நான் நலமாக உள்ளேன். நான் இவ்வுலகில் மூன்று வேணவாக் களைப் பெற்றிருந்தேன். அவற்றில் இரண்டை எய்தப் பெற்றேன். இன்னும் ஒன்றே ஒன்று தான் எஞ்சியுள்ளது. அதனையும் நான் எய்தப் பெற வேண்டுமென்று தாங்கள் இறைவனிடம் இறைஞ்சுங்கள்.
முதலாவதாக, நான் இறைவனிடம் மண்ணகத்திலே மிகவும் புனிதமான இடத்தில் என்னுடைய இறுதி நாட்களைக் கழிக்கப் பேரருள் பாலிக்க வேண்டும் என்று இறைஞ்சினேன், அவனும் பேரருள் பாலித்தான். அதன் காரணமாக மக்கா வந்தடைந்து, இறை இல்லத்தின் அண்மையில் என்னுடைய எஞ்சிய நாட்களைக் கழிக்கும் நற்பேறு பெற்றுள்ளேன்.
இரண்டாவதாக, நான் இட்ட பணிகளைச் செய்யவும், எனக்கு 'உளூ'ச் செய்யத் தண்ணீர் கொண்டு வந்து வைக்கவும் எனக்கு ஓர் ஊழியனைத் தந்தருள் என்று இறைஞ்சினேன். அவ்வாறே எனக்கு இப்பொழுது ஊழியம் புரிய ஓர் அடிமைப் பெண் கிடைத்துள்ளாள்.
மூன்றாவதாக, நான் இறப்பதற்கு முன் தங்களைப் பார்த்துவிட்டு இறக்க வேண்டுமென்று விரும்பினேன்; விரும்புகிறேன். அவ்விருப்பத்தையும் இறைவன் என் வாணாளிற்குள் வழங்கிவிட வேண்டுமென்று அவனிடம் இறைஞ்ச வேண்டுகிறேன்.
தம்பியின் இம்மடல் கண்டதும் அவர்கள் பின்வருமாறு மறு மடல் தீட்டினர்கள் :
"தம்பி! வ அலைக்கு முஸ்ஸலாம். உன்மடல் கிடைத்தது. நீ புனிதமான இடத்தில், உன் இறுதி நாட்களைக் கழிக்க விரும்பியதாகவும், அவ்விதமே மக்கமா நகர் சென்றடைந்து இறை இல்லத்தின் அண்மையில் வாழ்ந்து வருவதாகவும் எழுதி இருந்தாய். நீ உண்மையில் மேலான மனிதனாகி விட்டால், நீ எங்கு வேண்டுமானாலும் வாழ்ந்து வரலாம். ஓர் இடம் மாண்புறுவது, அதில் வாழ்ந்து வரும் மனிதர்களாலேயன்றி வேறில்லை.
''உனக்கு ஊழியம் புரிய ஒருவர் வேண்டுமென்று நீ நெடுநாட்களாக இறைவனை வேண்டி வந்ததாகவும், இறைவன் உனக்கு ஊழியம் புரிய ஓர் அடிமைப் பெண்ணைத் தந்தருளியதாகவும் கூறியுள்ளாய்.
உண்மையில், நீ ஓர் உண்மையாளனாகவும், பரோபகாரியாயும் இருந்திருப்பின், இறைவனுடைய அடிமையை இறைவனுக்கு ஊழியம் செய்வதை விட்டும் தடுத்து உனக்கு ஊழியம் புரியுமாறு செய்திருக்க மாட்டாய். உனக்கே நீ ஊழியனாக இருப்பதற்கு மாறாக, மற்றொருவனுக்கு எசமானனாக இருக்க விரும்புகின்றாய்.
எசமானத்துவம் இறைவனின் தனிப்பெரும் பண்பாகும். அடிமைத் தனமே மனிதத்துவமாகும். இறைவனின் அடிமை ஒருவன், இறைவனுக்குரிய இடத்தை ஆக்கிரமித்துக் கொள்ள விரும்பின், அவன் தன்னை ஒரு ஃபிர்அவ்னாக ஆக்கிக் கொள்வானேயன்றி வேறில்லை.
இறுதியாக, நீ என்னைக் காண ஆவலாயிருப்பதாக எழுதியுள்ளாய். உண்மையில் நீ இறைவனை நன்கு அறிந்திருப்பின், நீ என்னை நினைவு கொண்டே இருந்திருக்க மாட்டாய். எனவே நீ உன்னுடைய அண்ணனின் நினைவே உனக்கு வரா வண்ணம் இறைவனுடன் தொடர்பு கொள் வாயாக!
அவ்வித நிலையை ஒருவன் எய்தப் பெறின், அவன் தான் பெற்ற அருமை மகனையே இறைவனுக்குப் பலி கொடுக்க வேண்டி இருக்கும். அவ்விதமாயின் அண்ணன் எம்மாத்திரம் ?
நீ இறைவனைக் கண்டு கொள்வாயாயின், நான் தான் உனக்கு எம்மாத்திரம்? நீ இறைவனைக் கண்டு கொள்ளவில்லையாயின் என்னால் தான் உனக்கு என்ன பயன் ஏற்படப் போகிறது? ஒன்றுமில்லை.''
இவ்வாறு மடல் தீட்டிய யஹ்யா இப்னு மஆத் (ரஹ்) அவர்கள், அல்லும் பகலும் இறைவனையே நினைத்து இறைவனுக்காகவே வாழ்ந்து வந்தார்கள்.

அவர்கள் மக்களை நோக்கி மணிமணியான கருத்துக்களை யெல்லாம் உதிர்த்தனர். அவற்றைப் பயன் கருதி நாமும் பொறுக்குவோம்.
1. கடைத்தெருவில் இறப்பு விற்கப்படுமானால், இறை காதலர்கள் அதைத் தவிர வேறொன்றையும் வாங்க மாட்டார்கள்.

2. இவ்வுலகம் வணக்கத்திற்குரிய இடமாகும்.

3. இறையடியார்களின் இதயம் நான்கு இடங்களிலே அன்றி வேறு எங்கும் அமைதியுற்றிராது.

1) தனிமை 2) பள்ளிவாயில், 3) அடக்கவிடம், 4) காடு ,

4. மூன்று துறவு நிலைகளால் மாபெரும் ஆன்ம நலன்கள் ஏற்படுத் துகின்றன. அவையாவன:-

1) மதிப்பையும், கௌரவத்தையும் விரும்புவதைத் துறத்தல். 2) ஆசைகளைத் துறத்தல் . 3)உலகைத் துறத்தல்.

5. இறைவனைப் பொருந்திக் கொள்வீர்களாக! இறைவனும் உங்களைப் பொருந்திக் கொள்வான்.

6. மூவரின் தொடர்பை விட்டொழிங்கள் .

1 நற்செயல் இல்லாத மார்க்க அறிஞர்கள்

2 இறைவன் மீது அன்பு செலுத்தாது திருக்குர்ஆனை ஓதுபவர்

3) கல்வி அறிவு இல்லாத ஞானி... ஆகியோராவர்

7. "என்னை உம்முடைய இறைஞ்சுதலில் நினைவு கொள்வீராக! என்று நீ ஒருவரிடம் கூற வேண்டி இருப்பின், அவர் நல்ல நண்பரல்ல: தீய நண்பர்' என்று அவர்கள் கூறினர். அவர்கள் இவ்வாறு கூறியதற்குக் காரணம், ஒருவர், பிறர் ஒருவருடன் ஒரு கணம் தொடர்பு கொண்டிருந்த போதினும், அவர் அவருக்காக இறைஞ்ச வேண்டும் என்று அவர்கள் கருத்துக் கொண்டிருந்ததேயாகும்.

8. இறக்கும் தருவாயில் செல்வர்களுக்கு இரண்டு துன்பங்கள் ஏற்படுகின்றன.

1 ) அவன் திரட்டிய அனைத்துச் செல்வங்களும் அவனை விட்டும் பறிக்கப்படுவதனாலான துன்பம். 2. அவை பற்றி அவனிடம் கணக்குக் கேட்கப்படுவதாலான துன்பம்.

## சூஃபிப் பார்வை 22

(அனல் ஹக் - நானே உண்மை; நானே மெய்ப்பொருள்)




காஷியா கடைத்தெருவில் மன்சூர் ஹல்லாஜ் அவர்கள் கண்ணீர்விட்டு அழுத வண்ணம், 'மக்களே! என்னை இறைவனின் கண்களில் படாவண்ணம் ஒளித்து வையுங்கள்!
அவன் என்னிலிருந்து, என்னை எடுத்துக் கொண்டான். மீண்டும் அவன் என்னைத் தனியாகவிட்டு விடுவானோ என்ற அச்சத்தின் காரணமாக, அவனின் திருமுன் நின்று அவனை வணங்கக்கூட என்னால் இயலாது போய் விட்டது. அவன் என்னைப் புறக்கணித்துச் சென்றுவிடுவானோ என்னவோ தெரியவில்லை. அவனால் புறக்கணிக்கப்பட்டவனுக்குக்
கைசேதமே, கைசேதம்!'' என்று சப்தமிட்டுப் புலம்பினார். அதுகேட்டு ஆங்கு நின்று கொண்டிருந்த மக்கள் எல்லாம் அழுதார்கள்.
"இதன்பின் அத்தாப் பள்ளிவாயிலுக்குச் செல்லும் வழியில் நின்று கொண்டு, தம் வாயில் வந்தவண்ணம், ஏதேதோ புலம்பினார். அவற்றில் சில விளங்கின. மற்றும் சில விளங்கவில்லை.

''அவர் கூறினர்: இறைவன் படைப்புகளைப் படைத்தான் என்றால், அவற்றின் மீதுள்ள நல்லெண்ணத்தின் காரணமாக அவற்றைப் படைத்தானேயன்றி வேறில்லை. சிலபொழுது அவன் அவற்றிற்குத் தென்படவும், மற்றும் சிலபொழுது தன்னை ஒரு திரையால் மறைத்துக் கொள்ளவும் அவன் செய்வானாயின், அவை அந்தப் படைப்புகளின் முன்னேற்றத்தின் அடையாளமேயாகும். அவனிடமிருந்து ஒளிக்கதிர் வரவில்லையாயின், மனிதன் இறைவனின் உள்ளமையையே மறுத்து விடுவான். அந்த ஒளிக்கதிர்கள் திரையிட்டு மறைக்கப்படாவிடின்; அனைத்தும் திக்பிரமை பிடித்தது போன்று ஆகிவிடும். எனவே தான், அவன் இந்த இரு நிலைகளில் யாதொன்றையும் நீடித்து இருக்கச் செய்வதில்லை.

என்னைப் பற்றிய வரையில், இப்பொழுது எனக்கும் அவனுக்கும் இடையில் யாதொரு திரையும் இல்லை. என்னுடைய மனிதத்தன்மை அவனுடைய தெய்வீகத் தன்மையில் செத்து மடிந்து விட்டது.என்னுடைய உடல் அவனுடைய நெருப்பால் எரிந்து கொண்டி ருக்கிறது.''
இவ்வாறு ஏதேதோ கூறிக்கொண்டு, அலைந்த ஹல்லாஜ் (ரஹ்) அவர்களை, இதன்பின் பக்தாதைவிட்டு நீங்கி பஸரா வழியாக மக்கமா நகர் வந்து சேர்ந்து, அங்கு இரண்டாண்டுகள் தங்கி இருந்தனர்.
இப்பொழுது அவர்களின் வாழ்க்கையிலே மாபெரும் புரட்சி ஏற்பட்டது. அவர்களின் எண்ணத்திலே மாபெரும் போராட்டம் நிகழ்ந்தது. அவர்களின் உள்ளமெல்லாம் கொந்தளித்துக் குமுறத் துவங்கியது. இப்பொழுது அவர்களின் வாயிலிருந்து 'அனல் ஹக்' (நானே உண்மை; நானே மெய்ப்பொருள்) என்ற சொற்கள் முதன் முதலாக வெளி வந்தன.
இதன்பின் என்ன? 'அனல் ஹக், அனல் ஹக்' என்று எங்கணும் கத்திக் கொண்டு திரிந்தார்கள். அவர்களின் ஒவ்வொரு மூச்சம் 'அனல் ஹக், அனல் ஹக்' என்றே வெளிவந்தன.
அதுகேட்டு மக்கள் திடுக்குற்றார்கள். “சாதாரண ஒரு மனிதன், தன்னை மெய்ப்பொருளாகிய இறைவன் என்று பிதற்றிக் கொண்டு திரிகின்றானே. இவனுக்கும் பைத்தியம் பிடித்துவிட்டதோ, என்னவோ தெரியவில்லையே.
ஆனால் இவனைப் பார்த்தால் சாதாரணப் பைத்தியக்காரன் போல் தோன்றவில்லையே. விஷமக்காரப் பைத்தியம் போல் தோன்றுகிறதே. இவனை இவ்வூரில் வசிக்கவிட்டால், எல்லாரையும் பைத்தியக்காரனாக்கி விடுவானே. ஊரையே நாசப்படுத்தி விடுவானே" என்று கூறி அவர்களை மக்கமா நகரை விட்டும் விரட்டியடித்தார்கள்.

அப்பொழுது ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் மக்கமா நகர மக்களை நோக்கி, ''நீங்கள் இறைவனை அறியாவிட்டாலும், இறைவனுடைய அடையாளங்களையாவது அறிந்து கொள்ளுங்கள்! நான் தான் இறைவனின் அடையாளம். நான் தான் மெய்ப்பொருள் (அனல் ஹக்) உண்மையின் மூலமாகிய நானே நிரந்தரமான உண்மையாவேன்,

இப்லீசும், ஃபிர்அவ்னும் என்னுடைய நண்பர்கள்; ஆசிரியர்கள். 'நான் உன்னை நரக நெருப்பில் தூக்கிப் போடுவேன்' என்று இறைவன் இப்லீசைப் பயமுறுத்தியும், உண்மையான இறை பக்தனாகிய அவன் ஆதத்திற்கு சுஜூது செய்ய முன் வரவில்லை. ஃபிர்அவ்ன் கடலில் மூழ்கடிக்கப்பட்ட பொழுதும், அவன் தான் கூறியதை மாற்றிக் கொள்ள வில்லை. ஏனெனில், தனக்கும் இறைவனுக்கும் இடையே யாதொன்றும் இருப்பதை (மூஸா இருப்பதை) அவன் ஏற்றுக் கொள்ளவில்லை.
அதுபோன்று நீங்கள், என்னைக் கொன்றாலும், என் கால்களையும் கைகளையும் ஒவ்வொன்றாக வெட்டிச் சித்திரவதை செய்தாலும், நான் 'அனல் ஹக்' என்று கூறுவதை விட மாட்டேன்" என்று கூறிவிட்டு, மக்கமா நகரைவிட்டும் வெளியேறினர் ஹல்லாஜ்.
அப்பொழுது அவர்களின் வாய் பின்வரும் கவிதையை முணுமுணுத்தது.
"இறைவன் என் கை இரண்டினையும்
என்றன் முதுகின் பின் கட்டி
நிறைவாம் கடலில் எனைத்தூக்கி
நீசா நீசா என எறிந்தான்.
எறிந்த பின்னர் என் இறைவன்
என்பால் இரக்க முற்றாற்போல்
சிறியோய்! உன்உடை நனையாது
காவாய், காவாய் எனச்சிரித்தான்.
இவ்வாறு தன் நிலையை ஒரு சிறு கவிதையில் உள்ளடக்கி 'தம்மை 'அனல் ஹக்' என்று கூறுமாறு செய்தவனும் அவனே, அதன் காரணமாக மக்கள் தம்மை மக்கமா நகரை விட்டு விரட்டுமாறுசெய்து, வேடிக்கை பார்ப்பவனும் அவனே' என்று பாடியவண்ணம் அவர்கள் வேற்றூர் நோக்கிப் பயணமாயினர்.

வழிநெடுக அவர்களின் உள்ளிலிருந்து கவிதைகள் வெள்ளப் பிரவாகமாக வெளிவந்து கொண்டிருந்தன.
தாகம் மீக்குற்று மதுவருந்த எண்ணி, என் வாயை மதுக் கிண்ணத்தின் அருகில் கொண்டு சென்றேன். என்ன வியப்பு!
மதுக்கிண்ணத்தின் உள்ளே ஒரு நிழல் தென்பட்டது. அதனை நான் உற்றுப் பார்த்த பொழுது, அது நீயாவே இருந்தது.
என் இதயம் கண்ணாக மாறிவிட்டது.
அக்கண்ணின் முன் இறைவன் தோற்றம் வழங்கினான். உடனே நான் அவனை நோக்கி, "நீ யார்?" என்று வினவினேன்.
"நீதான்" என்ற பதில் எதிரொலி செய்தது. ஆ! இஃதென்ன புதுமை!!
அதுநானா ? அல்லது நீயா ?

கடவுளர்களா ?
அஸ்தஃபிருல்லாஹ்! அஊது பில்லாஹ்!!
அவ்விதம் கூறுவதை விட்டும் அப்பாற்பட்டவன் நான், எனினும் எனக்கும் உனக்கும் இடையில்,
'அது நான்' என்பது கிடந்து துன்புறுத்துகிறதே. நம்மிடையே இருந்து 'அது நான்' என்பதை எடுத்துவிடு.
'அது நீ தான்; அது நீ தான்' என்பது உறுதியாகிவிடும்.

## சூஃபிப் பார்வை 23

(இறைக் காதலாய் மாறிப்போன மனிதக் காதல்)

கொல்லர் ஒருவர் தம் கீழ்ப் பணியாற்றி வந்த ஒரு பணிப்பெண் மீது அடங்காக் காதல் கொண்டார். அக்காதல் நெருப்போ அவருடைய உள்ளத்தில் ஒரு கணமும் நீங்காது தகித்துக் கொண்டிருந்தது. அதன் கொடுமை தாங்க இயலாது அவர் தவித்துக் கொண்டிருந்தார்.
மறுநாள் பொழுது புலர்ந்ததும் அவர் அந்து யூத மந்திரவாதியிடம் சென்று, தம் நிலையை எடுத்துரைத்தார். அது கேட்ட அந்த மந்திரவாதி, "முதலில் நாற்பது நாட்களுக்கு நாம் சொல்வது போல் செய்ய வேண்டும். அதன் பின் நாம் அதற்கு ஆவன செய்வோம் என்றார்.
''நல்லது; அவ்விதமே செய்கிறேன்" என்று அக்கொல்லர் கூறினார்.
" நீர் நாற்பது நாட்களுக்குத் தொழக் கூடாது. இறை கட்டளைக்கு எக்காரணத்தைக் கொண்டும் அடிபணியக் கூடாது. இறைவனின் திருப் பெயரைக் கூட உம் நாவால் உச்சரிக்கக் கூடாது. எந்த நல்லெண்ணத்தையும் எண்ணவும் கூடாது. அவ்விதம் செய்வீராயின் நாம் அதன்பின் மந்திரம் செய்து உம் மனநோயை மாற்றுவோம்" என்று கூறி தாயத்தை ஒன்றை கொடுத்தார்.
அதன்படியே நடந்து பின் நாற்பது நாட்களுக்குப் பிறகும் பணிப் பெண்ணின் மீது ஏற்பட்ட காதல் தீ தணியவில்லை.
இதனை அவர் மந்திரவாதியிடம் கூறியபொழுது, "நீர் ஏதோ நன்மையான செயல் ஆற்றி இருக்க வேண்டும். எனவே தான் என்னுடைய தாயத்தால் உமக்கு யாதொரு நற்பலனும் ஏற்படாது போய் விட்டது. இல்லையெனில் உமக்கு நிச்சயமாக நற்பலன் ஏற்பட்டிருக்கும்" என்று கூறினார்.
"நான் நாற்பது நாட்களாக யாதொரு நற்செயலும் ஆற்றவில்லையே. இன்று இங்கு வந்து கொண்டிருக்கும் பொழுது, வழியில் ஒரு கல் கிடப்பதைக் கண்டேன். அதில் எவரேனும் தடுக்கி விழுந்து விடக்கூடாது என்பதற்காக அதனை அப்புறப்படுத்திவிட்டு வந்தேன், அவ்வளவுதான்" என்று கூறினார் அக்கொல்லர்.
அதுகேட்ட அம்மந்திரவாதி, அவரை ஒரு முறைக்கு இருமுறை ஏறிட்டுப் பார்த்து விட்டு, "இறைவனை நீர் மிகவும் சோதிக்கிறீர். நாற்பது நாட்களாக நீர் அவனுக்கு மாறு செய்த போதினும், அவன் நீர் செய்த ஒரு சிறு நன்மையைக் கூட வீணாக்க விரும்பவில்லை" என்று கூறினார்.
அந்த யூதரின் இச்சொற்கள் அக்கொல்லரின் உள்ளத்தில் ஒரு மாபெரும் மாறுதலை உண்டுபண்ணியது. அக்கணமே அவர் ஒருபுது மனிதராக, மனிதப் புனிதராக மாறினார். காதல் நோய் இருந்த இடத்தை, இறையச்சம் கௌவிப் பிடித்து, அவரைச் சுவனப் பெருவாழ்வை நோக்கி இழுத்துச் சென்றது. அவர்தான் அபூ ஹஃப்ஸ் ஹத்தாத் (ரஹ்) அவர்கள்.
ஒருநாள் அவர்கள் தம் கொல்லப் பட்டறையில் வீற்றிருந்த பொழுது, ஒரு குருடர்,
"எடுத்தெறியப்பட்ட ஷைத்தானை விட்டும் நான் காவல் தேடுகிறேன். அருளாளனும் அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் பெயரால் துவங்குகின்றேன். அன்றி, அவர்கள் எதிர்பார்க்காததெல்லாம் அல்லாஹ்விடமிருந்து அவர்களுக்கு வெளியாகும், " (39:47) என்ற இறை வசனத்தை ஓதிச் செல்வதைக் கேட்டதும் அவர்கள் மயக்க முற்றுக் கீழே
சாய்ந்தார்கள்.

சற்று நேரம் கழித்து அவர்கள் மூர்ச்சை தெளிந்ததும். அவர்கள் உலையில் காய்ந்து கொண்டு இருந்த இரும்புக் கம்பியைக் கிடுக்கியைக் கொண்டு எடுக்காது, தம் கையை உள்ளே விட்டு எடுத்தார்கள். அதன்பின் அதனை வைத்துச் சம்மட்டியால் அடித்துச் செப்பனிடுமாறு தம் ஊழியர்களுக்கு ஆணையிட்டார்கள்.
அப்பொழுது அவர்களின் கை, பழுக்கக் காய்ந்த அந்த இரும்பைச் செப்பனிட்டுக் கொண்டிருந்தது.இதைக் கண்ட அவர்களின் ஊழியர்களுக்கு, அவர்களின் கண்களையே நம்ப இயலவில்லை. ஆனால் அவர்களோ, அடி யுங்கள்; அடியுங்கள்' என்று கத்தினார்கள்.
"எசமானே! எதை அடிப்பது? எங்கே அடிப்பது? இரும்போ தங்களின் கையில் உள்ளதே. செப்பனிடப்பட்டு அதுவும் ஒழுங்காக உள்ளதே" என்று கூறினார்கள்.

இப்பொழுது தான் அபூ ஹஃப்ஸ் ஹத்தாத் (ரஹ்) அவர்களுக்குத் தன்னுணர்வு ஏற்பட்டது. பழுக்கக் காய்ந்த இரும்பு அவர்களின் கையில் இருப்பதைக் கண்டார்கள். அது அவர்களின் கையைச் சுட்டெரிக்காததையும் கண்டார்கள்.
"அன்றி, அவர்கள் எதிர்பார்க்காததெல்லாம் அல்லாஹ்விடமிருந்து அவர்களுக்கு வெளியாகும்," (39:47) என்ற இறை ஞாபகத்திற்கு வந்தது. அவர்கள் எதிர்பார்க்காதது அல்லாஹ்விடமிருந்து அவர்களுக்கு வெளியானதையும் இப்போது கண்டார்கள்.

உடனே அவர்களுக்கு மெய்யொளி தென்பட்டது. கையிலிருந்த இரும்பைத் தூக்கி எறிந்து கடை எப்படியோ போகட்டும் என்று இறைவனின் நெருக்கத்தை மேலும் பெற தவம் செய்வதற்கு கானகம் நோக்கி பயணம் செய்தார்கள்.
இப்படி பெண்ணின் மீது வந்த இச்சையின் காரணமாக யூத மந்திரவாதி தேடிச் சென்ற அந்தப் பெருந்தகை அபூ ஹஃப்ஸ் ஹத்தாத் (ரஹ்) அவர்கள் இறைவனின் கருணையாலும் அவர்களுடைய மிகப்பெரிய தியாக செயலாலும் உள்ளத்தாலும் இறைவனின் மிகப்பெரும் நேசத்திற்கு நேசராக மாறினார்கள்.

## சூஃபிப் பார்வை 24

(நேர்வழியை அடைவது / நேர்வழியை புறக்கணிப்பது )
மனிதர்களின் வாழ்க்கையை அல்லாஹ் இரண்டு வசனங்களில் சுருக்கி விடுகிறான்;
ஒன்று: நேர்வழி அடைவது:
என்னிடமிருந்து உங்களுக்கு நேர்வழி வரும். அப்போது எனது நேர்வழியைப் பின்பற்றுபவர் வழி தவற மாட்டார்.
துர்பாக்கியசாலியாகவும் மாட்டார், என்று கூறினான். (20:123)
இரண்டு: நேர்வழியை புறக்கணிப்பது:
"எனது போதனையைப் புறக்கணிப்பவனுக்கு நெருக்கடியான வாழ்க்கை உண்டு அவனை மறுமை நாளில் குருடனாக எழுப்புவோம்". (20:124)
அனைத்து மனிதர்களின் வாழ்க்கையையும் அல்லாஹ் இவ்விரண்டு வழிகளில்தான் சமன்படுத்தி இருக்கிறான்; இதைத் தவிர மூன்றாவதாக எந்த வழியும் கிடையாது.
இதையே சற்று விளக்கமாக இப்ராஹீம் இப்னு அத்ஹம் (ரஹ்)
அவர்கள் :
ஒரு நாள் ஒருவன் இப்ராஹீம் இப்னு அத்ஹம் (ரஹ்) அவர்களிடம் வந்து தனக்கு அறிவுரை வழங்குமாறு வேண்டினான்.
அதற்கு அவர்கள், "இறைவனுக்கு எதிராக நீ பாவம் செய்யின் நீ அவனுடைய உணவை உண்ணாதே' என்று கூறினர்.
அதற்கு அவன், "உணவளிப்பவன் அவனாயிருக்கும் பொழுது நான் எங்கிருந்து உண்பேன்" என்றான். '
'அவ்வாறாயின் அவனின் உணவை உண்டு கொண்டு அவனுக்கு மாறு செய்வது நல்லதல்ல" என்று கூறினார்கள் அவர்கள்.
மேலும் அவர்கள் அவனை நோக்கி, "நீ பாவம் செய்ய விரும்பின் இறைவனுடைய அரசை விட்டும் அகன்றுவிட்டு அதைச் செய்'' என்று கூறினர்.

"கிழக்கிலிருந்து மேற்கு வரை அவனுடைய, அரசாக இருக்கும் பொழுது நான் பாவம் செய்ய எங்கே போவேன்' என்று அவன் வியப்புடன் வினவியபொழுது,
''அவ்விதமாயின் அவனுடைய அரசிலிருந்து கொண்டு அவனுக்கு மாறு செய்வது நல்லதல்ல" என்று அவர்கள் எடுத்தியம்பினார்கள்.
"நீ பாவம் செய்ய விரும்பினால் அவன் காணாத இடத்திற்குப் போய்ச் செய்" என்று அவர்கள் கூறியதும்,
'மறைவாயுள்ள இரகசியங்களையெல்லாம் அறிந்தவனாகவும், மனத்திலுள்ள மர்மங்களையெல்லாம் தெரிந்தவனாகவும் இறைவன் இருக்கும் பொழுது நான் மறைவான இடத்திற்கு எங்குப் போவேன்?" என்று அவன் வினவினான்.
அவ்வாறாயின் அவனின் உணவை அவனுடைய அரசாங்கத்தில் இருந்து உண்டு கொண்டு, அவனுடைய முன்னிலையில் நின்று பாவம் செய்வது நல்லதல்ல" என்று அவர்கள் பதிலுரைத்தார்கள்.
உயிரைக் கவர்ந்து செல்லும் அமரர் உன் உயிரைக் கவர்ந்து செல்ல உன்னிடம் வரும்பொழுது நீ அவரிடம் "நான் பாவ மன்னிப்புக் கேட்டுக் கொள்கிறேன். அதுவரை சற்றுப் பொறுங்கள் என்று சொல்லும்" என்று இப்ராஹீம் இப்னு அத்ஹம் (ரஹ்) அவர்கள் கூற,
அதற்கு அவன், "நான் அவ்விதம் கூறினால் அவர் ஒருபோதும் என் சொல்லை ஏற்கமாட்டாரே'' என்றான்.
'அவ்வாறாயின் இப்பொழுதே இறைவனிடம் பாவ மன்னிப்புக் கோரிப் பரிசுத்தமாவது நல்லதல்லவா?" என்று அவர்கள் இயம்பினார்கள்.
"நீ இறந்து புதைகுழியில் வைத்துப் புதைக்கப்பட்ட பின் உன்னிடம் கேள்வி கணக்குக் கேட்க முன்கர், நக்கீர் என்ற அமரர்கள் வரின் அவர்களை நோக்கி, "நீங்கள் என்னிடம் வராதீர்கள் என் அவர்களுக்கு ஆணையிடும்" என்றார்கள் அவர்கள்.
'என் ஆணை ஒன்றும் அவர்களிடம் சொல்லாதே' என்று அவன் பதிலிறுத்தான்.
அதுகேட்ட அவர்கள், 'அவ்விதமாயின் அவர்களுக்கு அளிக்கத்தக்க பதிலை இப்பொழுதே தயார் செய்து கொள்வது நல்லதல்லவா?” என்று அவனிடம் வினவினார்கள்.
"மறுமையில் பாவிகளை நரகிற்குக் கொண்டு செல்லுங்கள் என்னும் ஆணை பிறப்பிக்கப்படும் பொழுது நீ மட்டும் 'போக மாட்டேன்' என்று சொல்' என அவர்கள் கூறினார்கள்.
அதுகேட்ட அவன் அது எவ்வாறு சாலும்' என்று வினவினான். "அவ்விதமாயின் பாவம் செய்யாதிருப்பது நல்லதல்லவா?'' என்று அவர்கள் பதிலிறுத்தார்கள்.

## சூஃபிப் பார்வை 25

( "உரத்துப் பேசுங்கள், எனக்கு காது சரியாக கேட்காது )
ஹாத்திம் அஸம் (ரஹ்) அவர்களோ ஒரு மகான். இறைவனின் நல்லடியார். தம் காலத்தின் ஸித்தீக் (உண்மையாளர்) என்று ஜுனைத் (ரஹ்) அவர்களால் புகழப்பட்டவர்கள். அவர்களைக் காண்பதற்காக, கண்டு தங்களின் பிரச்சினைகளை எடுத்துரைத்து மன ஆறுதல் பெறுவதற்காக மக்கள் அவர்களிடம் சாரி, சாரியாக வந்து கொண்டிருந்தார்கள்.
மாண்பாரும் மார்க்க விற்பன்னராக விளங்கிய இமாம் அஹ்மது இப்னு ஹன்பல் (ரஹ்) அவர்கள் கூட அவர்களை அடிக்கடி சந்தித்துப் பல்வேறு ஐயங்களைப் பற்றியும் அவர்களி டம் வினவி, தெளிவு பெற்றுச் செல்வார்கள்.
ஒருநாள் அவர்கள் தங்களின் இல்லத்தில் அமர்ந்திருத்தக் கால் ஒரு பெண்மணி அவர்களைக் காண்பதற்காக வந்தார். அவர்களிடம் ஏதோ ஒன்றைப் பற்றி அவர் வினவிய பொழுது அவருக்கு அவரை யறியாமல் காற்றுப் பிறிந்துவிட்டது.
அப்பொழுது அப்பெண்மணியின் முகம் நாணத்தால் வெளுத்தது. உடலெல்லாம் 'குப்'பென்று வியர்த்தது.
இதைக் கவனித்த அம்மகான் தாம் ஒரு செவிடர் போன்றும் தம் காதில் யாதும் இலகுவில் விழாதது போன்றும் பாவனை செய்து கொண்டு, ''உரத்துப் பேசுங்கள், அம்மா. எனக்குக் காது சரியாகக் கேட்காது" என்று கூறினார்.
இப்பொழுதுதான் அப்பெண்மணிக்கு உயிர் வந்தது போன்றிருந்தது. 'நல்ல வேளையாக, அது அவரின் காதில் விழுந்திருக்காது. பெரும் அவமானத்திலிருந்து இறைவன் நம்மைக் காத்தருள் புரிந்தான்" என்று தம் மனத்தில் கூறிக்கொண்டு தாம் கேட்க வந்த செய்தியை உரத்துக் கேட்டார் அவர். அதற்குத் தக்க பதில் கூறி அவரைத் திருப்தியுடன் அனுப்பி வைத்தனர்.
இதன் பின் பதினைந்து ஆண்டுகள் வரை அப்பெண்மணி உயிரோடிருந்தார். இந்தப் பதினைந்து ஆண்டுகளும், எவரும் தாம் ஒரு செவிடரல்ல என்று அப்பெண்மணியிடம் கூறி அவருக்கு அவமானத்தையும் மனத்துயரையும் வழங்கி விடக்கூடாது என்பதற்காக, அவர்கள் ஒரு செவிடர் போன்றே பாவனை செய்து வந்தார்கள்.
எவரும் அவர்களிடம் வந்து யாதேனும் கூறின், "உரத்துப் பேசுங்கள்" என்று கூறுவர். இதன் காரணமாக அவர்களின் இயற்பெயர் ஹாத்திம் என்பதோடு செவிடர் என்று பொருள்படும் அஸம் என்பதும் இணையலாயிற்று. எனவே மக்கள் செவிட்டு ஹாத்திம் (ஹாத்திம் அஸம்) என்று அவர்களை அழைக்கலாயினர்.
ஆனால் இவர்களின் இயற்பெயர் "அபூ அப்துர் ரஹ்மான் ஹாத்திம் இப்னு உன்வானுல் அஸம் " இப்பெரியார் பல்க் நாட்டைச் சேர்ந்தவர்கள். அப்பட்டப் பெயரான ஹாத்திம் அஸம் பெயர் அவர்களுக்கு மனத்துயரை வழங்கவில்லை. மாறாக, மனநிறைவை, மனமகிழ்வை வழங்கி வந்தது.
அப்பெண்மணி இறந்ததன் பின்னரே அவர்கள் தங்களின் பாவனையை விட்டொழித்துத் தம்மிடம் கேட்கப்படும் கேள்விகளுக்கு உடனுக்குடன் பதில்கூறி வந்தார்கள். எனினும் அப்பட்டப் பெயர் இல்லை, இல்லை அவர்களின் பண்பாட்டின் மாண்பினை எடுத்துரைக்கும் அச்சிறப்புப் பெயர் அவர்களின் பெயரை விட்டும் அகலவில்லை.

## சூஃபிப் பார்வை 26

(பிரம்மச்சாரியம்)

மர்வ் நகரத்திலே பிறந்த ஒருவர் பக்தாது மாநகரம் வந்து குடிப்பதிலும் கும்மாளமடிப்பதிலும் தம் நேரத்தைக் கழித்து வந்தார். அவர் பெயர் பிஷ்ர் இப்னுல் ஹாரித் (ரஹ்) அவர்கள்
ஒருநாள் அவர் குடித்துக் கும்மாளமடித்து விட்டுத் தெரு வழியே தள்ளாடித் தள்ளாடி நடந்து கொண்டிருந்தார். "அருளாளனும், அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருப்பெயரால்" என்று பொறிக்கப்பட்ட தாள் ஒன்று ஆங்குக் கீழே கிடப்பதைக் கண்டதும் அதை எடுத்துக் கண்களில் ஒற்றிக் கொண்டு, தம் இல்லம் கொணர்ந்து அதன் மீது நறுமணம் பூசித் தம் பெட்டியிலே பத்திரமாகப் பேணுதலுடன் வைத்தார்.
அவர்களின் வாழ்வில் திருப்பம் ஏற்பட்டதற்கு காரணம் ஒருநாள் அவர்கள் தம் இல்லத்தில் தம் நண்பர்களுடன் குடித்துக் கும்மாளமடித்துக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது அவ்வழியே சென்ற ஒரு பெரியார் அவ்வீட்டின்
கதவைத் தட்டினார். அடிமைப்பெண் வந்து கதவைத் திறந்தாள்.
அப்பொழுது அவர் அவளை நோக்கி "இந்த வீட்டில் குடியிருப்பவர் அடிமையா? சுதந்திர புருடரா?" என்று வினவினார். 'சுதந்திர புருடர்' என்று அவள் பதிலுரைத்தாள்.
அதுகேட்ட அவர் "அதனால் தான் இத்துணைக் கேளிக்கைகளில் ஈடுபட்டுள்ளார். அடிமையாய் இருந்தால் அடிமை போன்று நடந்து கொள்வார். வீண் விளையாட்டுகளில் ஈடுபடாது தம் கடமையான வணக்கங்களில் ஈடுபட்டிருப்பார். இன்னுமா அதற்குரிய காலம் வரவில்லை ? என்று கூறிவிட்டுச் சென்றுவிட்டார்.
இதனை உள்ளே இருந்து கேட்டுக் கொண்டிருந்த பிஷ்ர் உணர்ச்சி மீக்குற்று காலில் செருப்பைக்கூட அணிந்து கொள்ளாது வெளியே ஓடோடி வந்தார். அதற்குள் அப்பெரியார் போய்விட்டார்.

அடிமைப் பெண்ணிடம் அவரைப் பற்றியும் அவர் கூறியதைப் பற்றியும் விசாரித்தார். அவள் அனைத்தையும் கூறினாள். அவரைத் தேடி அவர் சென்ற திசை நோக்கி ஓடிய அவர் அவரைக் கண்டு "தாங்கள் தாமே என் அடிமைப் பெண்ணிடம் யாதோ கூறியவர்?" என்றார்.

"ஆம்" என்றார் அவர். 'அதனைத் தாங்கள் மீண்டும் ஒரு தடவை என்னிடம் கூறுங்கள்" என்று அவர் வேண்ட அவ்வாறே அப்பெரியாரும் கூறினார்.

அதுகேட்ட பிஷ்ர் கீழே விழுந்து தரையிலே உருண்டு புரண்டு "நான் அடிமை! நான் அடிமை!! நான் அடிமை!!!" என்று கூறியவண்ணம் தலைவிரிகோலமாக அல்லாஹ்வின் பாதையில் அடியெடுத்து நடக்கத் துவங்கிவிட்டார்.

பிஷ்ர் இப்னுல் ஹாரித் (ரஹ்) அவர்களின் அபார வணக்கமும், அயரா இறைஞ்சுதலும் வியக்கத்தக்கனவாய் அமைந்திருந்தன. அவர்கள் நாற்பது ஹஜ்ஜுச் செய்யவும் நாற்பது முறை மார்க்கப் போர்களில் ஈடுபடவும் செய்தார்கள்.

பிஷ்ர் இப்னுல் ஹாரித் (ரஹ்) அவர்கள் இறுதிவரை மணமுடித்துக் கொள்ளவில்லை. இதைப் பற்றி அவர்களிடம் ஒருவர், "தாங்கள் திருமணம் முடித்துக் கொள்ளாததால் நபியின் வழிமுறையை விட்டொழித்து விட்டீர்கள் என்று மக்கள் பேசிக் கொள்கிறார்களே" என்று கூறியபொழுது,

"ஆம்; நான் மணமுடிக்காததன் காரணமாக அவ்விஷயத்தில் நபியின் ஒரு வழிமுறையைக் கைவிட்டபோதினும் அதைவிட மேலான செயல்களில் ஈடு பட்டுள்ளேன். இதனை அம்மக்களிடம் கூறிவிடும்" என்று மொழிந்தனர்.

எனினும் மக்கள் அவர்களின் இப்பதிலால் திருப்தியுறவில்லை எனவே மீண்டும் அவ்வினா எழுப்பப்பட்டது.

அப்பொழுது பிஷ்ர் (ரஹ்) அவர்கள், "நான் திருமணத்தை வெறுக்கவில்லை.கணவர்களுக்கு மனைவியர் மீதுள்ள உரிமையைப் போன்று, மனைவியர்க்கும் கணவர்கள் மீது உரிமையுண்டு

(திருக்குர்ஆன், 2:228)

கணவனின் தேவைக்காக மனைவியை அழைப்பது போல், மனைவியும் தன் தேவைக்காக கணவனை அழைக்கும் உரிமை பெற்றிருக்கிறார்.

கணவனின் தேவையை சரியானக் காரணமின்றி மனைவிப் புறக்கணிக்கக் கூடாது – மனைவியின் தேவையையும் தக்கக் காரணமின்றி கணவன் மறுக்கக்கூடாது. இதை ஆதிக்கம் என்று சொல்வதைவிட கணவன், மனைவி உரிமைகள் என்றே சொல்ல வேண்டும். இதன் காரணமாக நான் மணமுடிக்க அஞ்சிக் கொண்டுள்ளேன்" என்று மறுமொழி பகர்ந்தார்கள்.

இதே கேள்வியைக் கேட்ட மற்றொருவரிடம்,”நான் ஷரீஅத்தைத் தவிர்த்துள்ள சில அலுவல்களை நிறைவேற்றுவதில் ஈடுபட்டுள்ளேன். படைப்பின் தீமைகளிலிருந்து என் உள்ளத்தைத் தூய்மையாக வைத்துக் கொள்ள விரும்புகின்றேன்" என்று அவர்கள் பதில் அளித்தார்கள்.

(இத்துடன் சூஃபிப் பார்வை தொடர் பதிவு நிறைவு பெறுகிறது)

